உ

கடவுள் துணை

தெய்வப்புலமைத்

# திருவள்ளுவநாயனார்

அருளிச்செய்த

தமிழ் வேதமாகிய

# திருக்குறள்மூலமும்,

## பரிமேலழகருரையும்,

இவ்வுரைக்கியையுமாறு


சென்னை இந்துதியலாஜிகல் ஹைஸ்கூல் தமிழ்ப்பண்டிதர்

**கோ. வடிவேலுசெட்டியாரவர்கள்**


இயற்றிய

தெளிபொருள்விளக்கமும், கருத்துரையும்,

குறிப்புரையும்.

இவை


**ஷை செட்டியாரவர்களாலும்**

சென்னைச் சிந்தாதிரிப்பேட்டை ஆங்கிலோவர்னகுலர்ஸ்கூல்

தமிழ்ப்பண்டிதர்

**வல்லி. ப. தெய்வநாயகமுதலியார்**

**அவர்களாலும்**



கம்மர்ஷியல் அச்சியந்திரசாலையில்

பதிப்பிக்கப்பட்டன.

இரண்டாம் பாகம்.

1904.




விலை ரூபாய் 6.

உ

கடவுள் துணை.

# திருவள்ளுவர்குறள்.

## மூலமும் உரையும்.

---

## பொருட்பால்.

### அங்கவியல்.

பரி.—இனி முறையானே அரசியல நடாத்துதற்கண் ஒன்றற்கொன்று துணையாய அங்கங்கள் ஆறனதியல்பு முப்பத்திரண்டதிகாரத்தாற் கூறுவா னெடுத்துக்கொண்டு, அவையாறனுள்ளும 1 காவற்சாகா டுகைத்தற்கண் அவ் வரசற் கிணையாய அமைச்சன தியல்பு பத்ததிகாரத்தாற் கூறுவான்றொடங்கி, முதற்கண் அமைச்சுக் கூறுகின்றார்

தெளி—இனி முறையானே அரசியலை நடத்துதலிலே ஒன்றற்கொன்று துணையாகிய அங்கங்கள் ஆறனது இயல்பை முப்பத்திரண்டு அதிகாரத்தாலே சொல்லத்தொடங்கி, அவ்வங்கங்கள் ஆறனுள்ளும் ஆஞ்ஞாசக்கரத்தைச் செலுத்துதலிலே அவ்வரசனுக்குச் சமானமாகிய அமைச்சனது இயல்பு பத்ததிகாரத்தினாலே சொல்லத்தொடங்கி, முதலிலே அமைச்சுச் சொல்லுகின்றார்

### கூ௪-ம அதி—அமைச்சு

பரி.—அஃதாவது 2 அமைச்சனது தன்மை. என்றது 3 அவனறன் குணங்களையுஞ் செயல்களையும

'—அஃதாவது அமைச்சனது தன்மை அத்தன்மை அவன்குணங்களும் செய்கைகளும ஆம

---

1 "காலபார் கோத்து ஞாலத் தியக்கும, காவற் சாகா டுகைப்போன் மாணி, னூறின் றுகி யாறினிது படுமே, யுய்த்த றேற்றா னாயின் வைகலும, பகைக் கூ ழளளற் பட்டு, மிகப்பஃ றீநோய தலைத்தலைத் தருமே"

[இதன்பொருள். உருளையையும் பாரையுங்கோத்து உலகினகண்ணே செலுத்தும் காப்புடைய சகடந்தான் அதனைச்செலுத்துவோன மாட்சிமைப் படின் ஊறுபாடிலலையாய் வழியை இனிதாகச்செலலும் அவன் அதனை இனிதாகச்செலுத்துதலைத் தெளியமாட்டானாயின அது நாடோறும பகையாகிய செறிந்த சேற்றிலே யழுந்தி மிகப்பலதீய துன்பத்தை மேன மேலு முண்டாக்கும என்பது]என்று புறநானூறு கூறுவது மிங்குக்கவ

2 அமைச்சனது தன்மை - மந்திரியினது இயல்பு

3 அவனறன - அம்மந்திரியினது.

௧ கருவியுங் காலமுஞ் செய்கையுஞ் செய்யு
மருவினையு மாண்ட தமைச்சு

**பரி**—(இ - ள்) வினைசெய்யுங்கால் [1] அதற்கு வேண்டுங் கருவிகளும், [2] அதற்கேற்ற காலமும், [3] அது செய்யுமாறும், அவ்வாற்றிற் செய்யப்படும் அவ்வரியவினைதானும் வாய்ப்ப எண்ணவல்லவனே அமைச்சனாவான், எ-று

கருவிகள்—தானையும் பொருளும் காலம் - [4] அது தொடங்குங்காலம் செய்கையெனவே, [5] அது தொடங்கு முபாயமும், [6] இடையூறு நீக்கி முடிவுபோகுமாறும் அடங்கின சிறிய முயற்சியாற் பெரியபயன் றருவதென்பார் 'அருவினை' என்றார் இவை [7] யைந்தனையும் வடநூலார் [8] மந்திரத்திற் கங்கமென்ப

**தெளி**—(இ - ள்) (தொழில்செய்யும்போது) கருவியும் - (அதற்குவேண்டுஞ்) சாதனங்களும், காலமும் - (அதற்கு ஏற்ற) காலமும், செய்கையும் (அது) செய்யும்விதமும், செய்யு மருவினையும் - (அவ்விதத்திலே) செய்யப்படும் அவ்வரியதொழில்களும், மாண்டது - பொருந்த வெண்ணவல்லவனே, அமைச்சு - மந்திரியாவான், எ-று

சாதனங்கள் - சேனையும் பொருளும் காலம் - அத்தொழிலைத்தொடங்குங்காலம் செய்கையெனவே, அதைதொடங்குமுபாயமும், இடையூறுநீக்கி முடிக்கும் விதமும் அடங்கின சிறியமுயற்சியினாலே பெரியபயன் தருவது என்பார் 'அருவினை' என்றார் இவ்வைந்தையும் வடநூலார் மந்திரத்துக்கு அங்கமென்பார்.

(க - து) கருவி முதலானவைகளைப் பொருந்த எண்ண வல்லவனே மந்திரியாவான் என்பது. (க)

௨. வன்கண் குடிகாத்தல் கற்றறித லாள்வினையோ
டைந்துடன் மாண்ட தமைச்சு.

**பரி**—(இ - ள்) வினை செய்தற்கண் [9] அசைவின்மையும், குடிகளைக்காத்தலும், நீதி நூல்களைக் கற்றுச் [10] செய்வன தவிர்வன வறிதலும், முயற்சியும

---

1 அதற்கு - வினைசெய்வதற்கு

2 அதற்கு - வினை செய்வதற்கு  3 அது - வினை  4 அது - வினை.

5 அது - வினை  6 இடையூறு - தடை

7 ஐந்தனையும் என்றது கருவி, காலம், செய்கை, செய்யுமருவினைகளை கருவி சேனையும் பொருளுமாயிருத்தலால் ஐந்தாமாறு காண்க.

8 மந்திரத்திற் கங்கமென்ப - ஆலோசனைக்கு உறுப்பு என்பார்

9 அசைவின்மை - சோம்புதலில்லாமை

10 செய்வன - செய்யத்தக்கவை தவிர்வன - செய்யத்தகாதவை.

பெறசொல்லிய அவ் [1] வங்கங்களோடுதுடனே திருந்தவுடையானே அமைச்சு வான், எ - று.

என் [2] ஒடு நீண்டது அவைவந்தெனச் சுட்டு வருவிக்க இந்நான்க னையும் மேற்கூறியவற்றோடு தொகுத்துக் கூறியது, அவையு மிவற்றோடு கூடியே மாட்சிமைப்படவேண்டுதலானும், அவற்றிற்கு ஐந்தெனுந்தொகை பெறுதற்கும் இனி இதனை எண்ணியவற்றிற்கே தொகையாக்கிக் குடிகாத்தலெண்டதனைக் குடிபிறப்பும் அதனை யொழுக்கந்தாற காத்தலுமெனப் பகுப்பாரும், கற்றறிதலெனபதனைக் கற்றலும் அறிதலுமெனப் பகுப்பாருமுளர் அவ் உடனெனபதனை முற்றும்மைப் பொருட்டாக்கியும், குடியெனபதனை ஆகுபெயராக்கியும் [3] இடர்ப்படுப

தெளி — இ - ள ) வனகண -(தொழிற்செய்தலிலே) அசைவில்லாமையும், குடிகாத்தல் குடிகளைக்காத்தலும், கற்றறிதல் - (நீதி நூலகளைக் கற்று (விதி விலக்குகளை) அறிதலும், ஆள்வினை - முயற்சியும், ஐந்துடன் - (முன்சொல்லப்பட்ட) அவ்வங்கங்களோடுடனே, மாண்டது - திருந்தவுடையவனே, அமைச்சு - மந்திரியாவான், எ - று.

என்னும்பொருளில்வந்த ஒடு எனபது ஒடு என நீண்டுநின்றது. அகரச்சுட்டு வருவித்து அவைவந்து எனக்கொள்க வனகண முதலிய இந்நான்கினையும் மேலே கருவியும் காலமும் என்று சொல்லியவற்றுடன் தொகுத்துச்சொல்லியது, கருவி முதலிய அவையும் வன்கண் முதலிய இவைகளுடன் கூடியே பெருமைப்படவேண்டுதலாலும், கருவியும் காலமும் செய்கையும் செய்யுமருவினையும் என்றவற்றிற்கு ஐந்து என்னும் தொகை பெறுதற்குமா மெனக இனி

---

1 அங்கங்களாவது-சேனை, பொருள், காலம், செய்கை, செய்யும் வினை யென்பனவாம

2 ஒடு என்பதனை மற்றவற்றோடுங்கூட்டி வன்கணொடு குடிகாத்தலொடு கற்றறிதலொடு என்று கொள்க "என்று மெனவு மொடுவுந் தோன்றி, யொன்றுவழி யுடைய வெண்ணினுட் பிரிந்தே" என்னும் தொல்காப்பியச் சூத்திரம்

3 உடனிகழ்ச்சிப் பொருளதாகிய மூன்றனுருபை முற்றுமைப்பொருளாக்கியும் குடியென்பதனை இயற்பெயராகக்கொள்ளாது ஆகுபெயராகக் கொண்டும் வருந்திப்பொருள்கொண்டதுபற்றி 'இடர்ப்படுப' என்று கூறப்பட்டது. பரிமேலழகர் மறுத்த இரண்டுரைகாரரில் முதலுரைகாரர் குடிகாத்தலென்பதனை உம்மைத்தொகையாக்கிக்குடியை யாகுபெயராக்கியும் இரண்டாமுரைகாரர் கற்றறிதலென்பதனை யும்மைத் தொகையாக்கியும் இருவரும் உடன் என்பதை முற்றும்மைப்பொருளாக்கியும் கொண்டார் எனக. "பிறப்பே குடிமை" என்னும் தொல்காப்பியம் மெய்ப்பாட்டியல் சூத்திரத்தின் விசேடவுரையில் "வன்கண் குடிகாத்தல் கற்றறிதலாள்வினையோ, டைந்துடன் மாண்ட தமைச்சு' எனபுழிக் கற்றறிதலென்பதனை இரண்டாக்கிஐந்தென்பவாகலின்" என்று நச்சினார்க்கினியார் கூறியிருத்தலினால் அவர்க்குக் கற்றறிதல் என்பதனை யும்மைத்தொகை யாக்க கொள்ளுதல் உடன்பாடெனக

போக்கி 'வல்லது' என்றார் வடநூலார் இவைகளுள் பொருத்தலைச் சந்தி யென்றும், பிரித்தலை விக்கிரகமென்றும் கூறுவர்.

(க - து) பிரித்தல், காத்தல், பிரிந்தாரைப் பொருந்தச் செய்தல்களில் வல்லவனே மந்திரியாவான் என்பது. (௩)

௪ தெரிதலுந் தேர்ந்து செயலு மொருதலையாச்
சொல்லலும் வல்ல தமைச்சு.

**பரி.**—(இ - ள்) ஒருகாரியஞ் செய்கை பலவாற்றாற் றோன்றின் அவற்றுள் 1 ஆவ தாராய்ந்தறிதலும், 2 அது செய்யுங்கால் வாய்க்குந் திறனாடிச் செய்தலும், சிலரைப் பிரித்தல் 3 பொருத்தல் செய்வுழி 4 அவர்க்கு இதுவே செயற்பாலதென்று 5 துணிவு பிறக்குமவகை சொல்லுதலும் வல்லவனே அமைச்சனாவான், எ - று.

தெரிதல் 6 செயன்மேலதாயிற்று, 7 வருகின்றது அதுவாகலின்.

**தெளி.**—(இ - ள்) (ஒருகாரியத்தைச் செய்தல் பலவிதமாகத் தோன்றினால்) தெரிதலும் - (அவற்றுள் ஆவதை) ஆராய்ந்தறிதலும், தேர்ந்து செயலும் - (அது செய்யும்போது பலிக்கும் விதம்) ஆராய்ந்துசெய்தலும், (சிலரைப்பிரித்தல் பொருத்தல் செய்தலிலே) ஒருதலையாச் சொல்லலும் - (அவருக்கு இதுவே செய்யத்தக்கதென்று) துணிவுபிறக்குமவகைச் சொல்லுதலும், வல்லது - வல்லவனே, அமைச்சு - மந்திரியாவான், எ - று.

தெரிதல் செயலின் மேலாயிற்று, வருகின்றது அதுவாகலின்.

(க - து) ஆராய்தலும் ஆராய்ந்துசெய்தலும் சந்தி விக்கிரகங்களில் துணிவுண்டாம்படி சொல்லுதலும் வல்லவனே மந்திரியாவான் என்பது. (௪)

௫. அறனறிந் தான்றமைந்த சொல்லானெஞ் ஞான்றுந்
திறனறிந்தான் றேர்ச்சித் துணை

**பரி.**—(இ - ள்) அரசனாற் செய்யப்படும் அறங்களையறிந்து தனக்கேற்ற கலவியா னிறைந்தமைந்த சொல்லை யுடையனாய் எக்காலத்தும் வினை செய்யுந் திறங்களை யறிந்தான் அவற்குச் சூழ்ச்சித் துணையாம், எ - று.

---

1 ஆவது - செய்யத்தக்கது
2 அது - காரியம். 3 பொருத்தல் - கூட்டல்
4 அவர்க்கு - அச்சிலர்க்கு 5 துணிவு - நம்பிக்கை.
6 செயன்மேலதாயிற்று - காரியத்தைச் செய்தலின் மேலாயிற்று
7 வருகின்றது அதுவாகலின் - அமைச்சனுக்கு ஆராய்ந்தறிய நேர்வது காரியத்தைச் செய்தலாதலால்

பெயர், [1] அதி யென்பது வடசொல்லுள் மிகுதிப்பொருளதோ ரிடைச்சொல், [2] அது திரிந்து நுட்பமென்பதனோடு தொக்கது. முன்னிற்றல் - மாற்றார் சூழ்ச்சியாயின் தஞ்சூழ்ச்சியால் அழியாது நிற்றல். இனி அதினுட்பமென்று பாடமோதி, அதனினுட்பம் யாவென்றுரைப்பாருமுளர்; அவர் சூழ்ச்சிக்கினமாய முன்சுட்டப்படுவதொன்றில்லாமையும், சுட்டுப்பெயர் ஐந்தாமுருபேற்ற வழி அவ்வாறு நில்லாமையு மறிந்திலர். பகைவர் சூழ்வனவற்றைத் தாமறிந்து அழித்து அவரறிந்தழியாதன தாஞ்சூழ்வரென்பது கருத்து. இதனால் அவரது சிறப்புக் கூறப்பட்டது.

தெளி.—(இ-ள்) மதிநுட்பம் - (இயற்கையாகிய) நுண்ணறிவை, நூலோடு - (செயற்கையாகிய) நூலறிவோடு, உடையார்க்கு - உடையராயமந்திரிகளுக்கு, அதிநுட்பம் - அதிகநுட்பத்தையுடைய ஆலோசனைகளாய், முன்னிற்பவை - முன்னிற்பன, யாவுள - எவையுள, எ-று.

நுட்பமதி என்பது மதிநுட்பமென்று வந்து பின்மொழியாற் பொருள் சிறந்து நின்றது. அம்மதிநுட்பம் ஊழ்தரவேண்டியதாதலால் மதிநுட்பம் என்று முன்னே கூறப்பட்டது. நூல் என்பது நூலினாலுண்டாகும் அறிவையும், அதிநுட்பம் என்பது அதிகநுட்பத்தையுடைய ஆலோசனையையும் உணர்த்துதலால் முறையே கருவியாகுபெயரும் பண்பாகுபெயருமாய் நின்றன. அதிநுட்பமென்பதிலுள்ள அதியென்பது வடமொழியில் மிகுதிப்பொருளையுணர்த்து

---

லே பொருள்சிறந்து இருத்தலாலே மதிநுட்பமென்பது பின்மொழி நிலையல். பின்மொழி நிலையல் - பின்மொழிக்கண்ணே பொருள் சிறந்து நிற்றல். "அவைதாம் முன்மொழி நிலையலும்" என்னுந் (தொல்காப்பியச்) சூத்திரவுரையில் நச்சினார்க்கினியர் "பெண்ணணங்கு என்பது அணங்கு போலும் பெண்ணென்பதாகலிற் பின்மொழி நிலைப்பலாய்" என்று கூறுவதும், சேனாவரையர் "அடைகடல் என்புழி அடை என்னும் பின்மொழிக்கட் பொருணின்றது இடைவகையாற் பின்மொழியாயிற்று. முன் பின்னென்பன காலவகையாற்றோற்றி நிற்கும்" என்று கூறுவதும் இங்கறியத்தக்கனவாம்.

1 பிரயோகவிவேகநூலார் "வினைப்பெயரோடவ்" என்னுஞ் செய்யுளினுரையில் "அதிநுட்பமென்பது வினைப்பெயரோடும் வினைச்சொல்லோடும் வாராமையின் அவ்வியயீபாவமெனக்" என்றனர்.

2 "வடசொற் கிளவி வடவெழுத் தொரீஇ, யெழுத்தொடு புணர்ந்த சொல்லா கும்மே" என்று தொல்காப்பியம் கூறுதலினால் 'அது (அதி) திரிந்து நுட்பமென்பதனோடு தொக்கது' என்று கூறியது நன்கு விளங்குமெனக. [ஸம்ஸ்கிருதபாஷையிலிருந்து பகுதி விசேஷ விகாரப்படாமல் விகுதிமுதலிய விகாரங்களைப் பெற்று வழங்கப்படும் பதம் தற்சமமென்றும், பகுதியிலும் எழுத்துக்கள் தோன்றல் திரிதல் முதலிய விகாரங்களைப் பெற்று வழங்கப்படும் பதம் தற்பவமென்றும் அறிக.]

வஞ்சரிடைச்சொல, அது நுட்பமாய நுட்பமெனபதனோடு தொடர்ந்து நின்ற
து முனைநிறல் - பகைவரது ஆலோசனைகள தமது ஆலோசனையால் அழியா
து நிற்றல் இனி-அதிநுட்பமெனபதனை அதினுட்பமென்று பாடங்கூறி, அத
ற்கு அதனினுட்பம எனவுமென்று பொருள்கூறுவாருமுண்டு, அவ்வாறு கூ
றுபவர் ஆலோசனைக்கு இனமாய முன்னே சுட்டப்படுவதொன்றில்லாமை
யையும், அது இது முதலிய சுட்டுப்பெயர்கள இன எனனும ஐந்தாமவேற்று
மை யுருபு ஏற்றவிடத்து இன்சாரியைபெற்று அதனின இதனின என்று நிறப
தன்றி அதின இதின என்று நில்லாமையையும் அறிந்திலர் பகைவர் ஆலோசி
ப்பனவற்றைத் தாம் அறிந்து அழித்து அப்பகைவரறிந்து அழிக்காதனவற
றைத் தாம் ஆலோசிப்பரென்று கருதது இதனால அமைச்சரது சிறப்புச
சொல்லப்பட்டது.

(க - து) இயற்கையறிவும செயற்கையறிவு முடைய மந்திரிகளு
க்குப் பகைவரது சூழ்ச்சிகள யாதொருபயனையுஞ் செய்யமாட்டா என
பது. (௬)

எ செயற்கை யறிந்தக் கடைத்து முலகத்
தியற்கை யறிந்து செயல

பரி.—(இ - ள) நூனெறியான் வினைசெய்யுந் திறங்களை யறிந்தவிடத்
தும், அப்பொழுது நடக்கின்ற உலகவியற்கையையறிந்து அதனோடு பொருந்
தச் செய்க, எ-று.

* கடைத்துமென்புழித் து பகுதிப்பொருள்விகுதி நூனெறியேயாயினும்
உலகநெறியோடு பொருந்தாதன செய்யற்க, செய்யின அதுபழிக்குமென இய
ற்கையறிவாற் பயன் கூறியவாறு.

தெளி.—(இ - ள்) செயற்கை-(நூலவழியினாலே தொழில) செய்யுமவகை
களை, அறிந்தக்கடைத்தும் - அறிந்தவிடத்தும், உலகத்து - உலகத்திலே,
இயற்கை -(அப்போது நடக்கின்ற) இயற்கையை, அறிந்து - தெரிந்து, செய
ல - (அதனோடுபொருந்தச்) செய்யக்கடவன, எ - று.

நூல்வழியே யாயினும் உலகவழியோடு பொருந்தாதவைகளைச் செய்யா
திருக்கக்கடவர், செய்தால அவ்வுலகம பழிக்குமென்று உலகியற்கையினறிவி
னற பயன்சொல்லியபடி.

(க - து) மந்திரிகள் நூலவழியினாலே தொழில் செய்யும வகையை
நன்குணர்ந்து அதனை யுலக வியற்கையோடு பொருந்தச்செய்தல வே
ண்டும எனபது. (எ.)

---

* அறிந்தக்கடையென்னும் (செயின எனனும வாய்பாட்டு) வினையெச்சத்தினி
ற்றினின்ற துவ்விகுதி தனக்கெனப் பொருளில்லாது பகுதிப்பொருளை
யேயுணர்த்தலினாலே அது (து) பகுதிப்பொருள்விகுதியாயிற்றெனக.

அறிகொன் றறியா னெனினு முறுதி
புழையிருந்தான் கூறல் கடன்

—(இ - ள) அறிந்து சொல்லியாரது அறிவையு மழித்து, அரசன் தானு மறியானே யாயினும், அக்குற்றம் நோக்கி யொழியாது அவனுக்கு உறுதியாயின கூறுதல் அமைச்சனுக்கு முறைமை, எ - று

அறியென்பது முதனிலைத்தொழிற் பெயர். கோறல் - தான்கொள்ளாமை மேலும் இகழ்ந்து கூறுதல் 2 உழையிருந்தானென்ப பெயர்கொடுத்தார், 3 அமாத்தியரென்னும் வடமொழிப்பெயர்க்கும் பொருண்மை அதுவாகலின் 4 உறுதி கூறுக்கால் அவனிறுதியெய்தற் குற்றத்தை உலகந் தன் மேலேற்றுமென்பார் 'கூறல் கடன்' என்றார் இவை யிரண்டுபாட்டானும் 5 அவர் செயல் கூறப்பட்டது

தெளி—(இ - ள்) அறிகொன்று -(அறிந்து சொல்லினவரது) அறிவையும் அழித்து, அறியானெனினும் -(அரசன் தானும்)அறியானேயாயினும்,(அக்குற்றம் நோக்கிக் கைவிடாமல)உறுதி-(அவ்வரசனுக்கு) உறுதியானவைகளை, கூறல் - சொல்லுதல், உழையிருந்தான் - மந்திரியினது, கடன் - முறையாகும், எ - று

அறியெனனும் பகுதி அறிவு என்னுந் தொழிற்பெயர்ப்பொருளில் வந்தது. கோறல் (அழித்தல்) - தான் (அறிந்து சொன்னவராகிய மந்திரிகளது உறுதி மொழிகளைமனத்திற்) கொள்ளாமலமேலும் (அவரை) இழிவுபடுத்திப் பேசுதல மந்திரிக்கு உழையிருந்தான் என்று பெயர் கொடுத்தார், அமாத்தியர் என்னும் வடமொழிப்பெயர்க்கும் பொருள் உழையிருந்தாரென்பதாகலினென்க உறுதிசொல்லாதபோது அவன் முடிவெய்துங்குற்றத்தை உலகந்தன்மேல் ஏற்றுமென்பார் 'கூறல்கடன்' என்றார் இவை இரண்டு பாட்டாலும் அவர் செயல் சொல்லப்பட்டது

(க - து) அவமானப்படுத்தியவிடத்தும் அரசருக்கு உறுதியானவைகளைச் சொல்லுதல் மந்திரியினது கடமையாம் என்பது, (அ)

கூ பழுதெண்ணு மந்திரியிற் பக்கத்துட் 6 டெவ்வோ
ரெழுபது கோடி யுறும்

---

1 "செவிச்சுடச் சென்றுங் கிடித்தறிவு மூட்டி, வெகுளினுமஞ்ச வாய்வெரீஇப் போர - கவுணமத்தத், கைம்மா வயத்ததே பாகுமற் றெத்திறத்து, மம்மா ண பினவே யமைச்சு" என்று நீதிநெறிவிளக்கம் கூறுவது மிகஅறியத்தக்கதாம்.

2 உழையிருந்தான் - பக்கத்திலிருப்பவன்

3 அமா - சமீபத்தில், தியா - இருப்பவர்

4 உறுதி - உறுதியைத்தரத்தக்க சொற்கள், 5 அவா - மந்திரிகள்

6 'தெவ்வுப்பகையாகும்' என்று தொல்காப்பியம் கூறுகின்றது

பரி.—(இ - ள்) பக்கத்திருந்து பிழைப்ப வெண்ணும் அமைச்ச னொருவனில் அரசனுக்கு எதிர் நிற்பார் ஓரெழுபது [1] கோடி பகைவருறுவர், எ-று.

எழுபதுகோடி யென்றது மிகப்பலவாய வெண்ணிற் கொன்று காட்டியவாறு வெளிப்படநிற்றலான் அவர் காக்கப்படுவர், இவன் உட்பகையாய் நிற்றலாற் காக்கப்படானென்பதுபற்றி, இவ்வாறு கூறினார் எழுபதுகோடியுமடங்கு நல்லரென்றுரைப்பாரும், எழுபதுகூற்று நலியென்று பாடமோதுவாருமுளர்.

தெளி.—(இ - ள்) பக்கத்துள் - பக்கத்திலிருந்து, பழுதெண்ணும் - தீங்கு செய்யவெண்ணும், மந்திரியின் - மந்திரியொருவனில், - (அரசனுக்கு எதிர்நிற்பவர்) ஓரெழுபதுகோடி தெவ்வ - ஓரெழுபதுகோடி பகைவர் உறும் - உறுவர், எ - று.

எழுபதுகோடி யென்றது மிகவும் பலவாகிய எண்ணிக்கைக்கு ஒன்று காட்டியபடி. எதிர்நிற்கும் பகைவர் வெளிப்பட்டு நிற்றலால் அப்பகைவர் அரசனாலே தடுக்கப்படுவர். இம்மந்திரி உட்பகையாய் நிற்கையால் அரசனாற் காக்கப்படமாட்டானென்பதுபற்றி, இப்படி சொல்லினார் எழுபது கோடியும் என்பதற்கு எழுபது கோடி மடங்கு நல்லவரென்றுரைசொல்லுவாரும், எழுபது கூற்று நலியென்று மூலபாடஞ்சொல்லுவாருமுண்டு.

(க - து) அரசனுக்குத் தீங்கு செய்ய நினைக்கும் மந்திரி அவனுக்கு எழுபது கோடி பகைவரிலும் கொடியவனாவன் என்பது. (கூ.)

௬௪0 முறைப்படச் சூழ்ந்து முடிவிலவே செய்வர்
திறப்பா டிலாஅ தவர்

பரி.—(இ - ள்) செய்யப்படும் வினைகளை முன் அடைவுபட வெண்ணி வைத்தும், செய்யுங்கால் அவை முடிவிலவாகவே செய்யா நிற்பர், முடித்தற்கேற்ற கூறுபாடில்லாதார், எ - று.

அக்கூறுபாடாவன [2] வந்த வந்த விடையூறுகட்கு [3] ஏற்ற வேற்ற பரிகாரமறிந்து செய்தலும், தாம் திண்ணியராதலுமாம். பிழையாமல் எண்ண வல்லராய் வைத்தும் செய்து முடிக்கமாட்டாருமுளரென்பதாம். இவையிரண்டு பாட்டானும் அமைச்சருள் விடப்படுவாரது குற்றங் கூறப்பட்டது.

தெளி.—(இ-ள்) (செய்யப்படுந்தொழில்களை) திறப்பாடு - (முடித்தற்கு ஏற்ற) கூறுபாடு, இலாதவர் - இல்லாதவர், முறைப்படச் சூழ்ந்தும் - (அவைகளை முன்னே) அடைவுபட ஆலோசித்திருந்தும், முடிவிலவே செய்வர் - செய்யும்போது அவைகள் முடிவில்லாதனவாகவே செய்யாநிற்பர், எ - று.

---

1 கோடி - நூறுலட்சம்.

2 வந்த வந்த - நேரிட்ட நேரிட்ட.

3 ஏற்ற வேற்ற - தகுதியான தகுதியான.

அக்கூறுபாடாவன உந்த வந்த இடையூறுகளுக்கு ஏற்ற ஏற்ற பரிகாரம் (மாற்று) அறிந்துசெய்தலும், தாமதிடமுடையவராதலுமாம் தப்பாமல ஆலோசிக்க வல்லவராயிருந்தும் செய்து முடிக்கமாட்டாதவரும் உணடெனபதாம். இவை இரண்டொடாலும் மந்திரிகளுள் விடப்படுவாரது குற்றம் சொல்லப்பட்டது

(க - து) மேற்கொண்ட தொழிலை முடித்தற்கேற்ற திறமில்லாத மந்திரிகள் அடைவுபெற ஆலோசித்துத் தொழிலைச் செய்தாலும் அதனை முடிக்க மாட்டார்கள் எனபது (ய)

---

## சுடு - ம். அதி.—சொல்வன்மை.

பரி —அஃதாவது தான கருதிய வினை முடியுமாற்றால அமைச்சியனடத் தற்கேதுவாய சொற்களைச் சொல்ல வல்லனாதல 1 மேல 2 'ஒருதலையாச் சொல்லலும வல்லது' என்றதனையே சிறப்புப்பற்றி விரித்துரைக்கின்றமையின, இஃதமைச்சின பின வைக்கப்பட்டது

தெளி —அஃதாவது தான் நினைந்த தொழில முடியும் வழியால் மந்திரியினது தன்மை நடத்தற்குக காரணமான சொற்களைச சொல்ல வல்லவனாகுதல் முன்னதிகாரத்திலே 'ஒருதலையாச சொல்லலும வல்லது' என்றதையே சிறப்புப்பற்றி விரித்துச சொல்லுதலால், இஃது அதன்பின வைக்கப்பட்டது

க. நாநல மென்னு நலனுடைமை யந்நலம்
யாநலத் துள்ளதூஉ மன்று

பரி —(இ - ள்) அமைச்சர்க்கு இன்றி யமையாத குணமாவது சான்றோரான் நாநலமென்று சிறப்பித்துச் சொல்லப்படும நலத்தினையுடையராதல, அந்நலம 3 பிறர்க்கும் 4 பிறநல மெல்லாவற்றுள்ளும அடங்குவதன்றி மிக்க தாகலான், எ று

---

1 மேல் என்றது "தெரிதலுந் தேர்ந்து செயலு மொருதலையாச, சொல்லலும் வல்ல தமைச்சு" என்னுங் (அமைச்சதிகாரத்திலுள்ள) குறளை.

2 இதனபொருள் சிலரைப் பிரித்தல கூட்டலைச் செய்தலினிடத்து அவர்க்கு இதுவே செய்யத்தக்கது என்று நிச்சயமுணடாம்படி சொல்லுதலும் வல்லவனே எனபது

3 பிறர்க்கும் என்றது அமைச்சரல்லாதவர்களை.

4 பிறநலமெல்லாமென்றது நாநலமல்லாத வேறு நலங்களை (நலம்-நன்மை.) அவை கலவியுடைமை, பொருளுடைமை, ஆண்மையுடைமை, அழகுடைமை முதலாயின

நாநலம் - நாவினால் பேசி மேற்கொண்ட காரியத்தை முடிக்கும் வல்லமை.

நாவானுளதாய நலனென விரியும். இந்நலம் உலகத்தைத் தம் வயத்ததாக்கும் அமைச்சர்க்கு வேண்டுமென்னும் நீதிநூல் வழக்குப்பற்றி 'நாநலமென்னும் நலன்' என்றும், பிறர்க்கும் [1] இதுபோற் சிறந்தது பிறிதின்மையான் 'அந்நலம் யாநலத்துள்ளதூஉ மன்று' என்றுங் கூறினார். பிரித்தல் பொருத்தல் முதலிய தொழி லில்லாதார்க்கும் 2 இஃதின்றியமையாததாயின் அத்தொழிலார்க்குக் கூறவேண்டுமோ வென்பது கருத்து.

**தெளி.**—(இ-ள்.) (மந்திரிகளுக்கு அவசியம் வேண்டிய குணமாவது) நாநலமென்னும் - (சான்றோர்களால்) நாநலமென்று சிறப்பித்துச் சொல்லப்படும், நலனுடைமை - நலத்தினையுடையராதல், அந்நலம் அந்த நாநலமாவது, (பிறர்க்கும்) யாநலத்து - பிறநலங்களெல்லாவற்றிலுள்ளும், உள்ளதூஉமன்று - அடங்குவதன்று, மிகுந்தது (ஆதலால்) எ-று.

நாநல மென்பது நாவானுளதாகிய நலமென விரியும். இது மூன்றும் வேற்றுமையுருபும் பொருளும் உடன்தொக்கதொகை. இந்நலம் உலகத்தைத் தம் வசமாக்கும் மந்திரிகளுக்கு வேண்டியிருக்கவேண்டுமென்னும் நீதிநூல்வழக்குப் பற்றி 'நாநலமென்னும் நலன்' என்றும், பிறருக்கும் இதுபோற் சிறந்தது வேறில்லாமையால் 'அந்நலம் யாநலத்துள்ளதூஉமன்று' என்றும் சொல்லினார். பிரித்தல் பொருத்தல் முதலாகிய தொழிலில்லார்க்கும் இஃது அவசியம் வேண்டுமாயின் அத்தொழிலுடைய மந்திரிகளுக்குச் சொல்லவேண்டுமோ வென்பது கருத்து.

(க-து) மந்திரிகளுக்கு நாநலம்போல வேறு நலமில்லை என்பது. (க)

௨ ஆக்கமுங் கேடு மதனால் வருதலாற்
காத்தோம்பல் சொல்லின்கட் சோர்வு.

**பரி.**—(இ-ள்.) தம் அரசர்க்கும் 3 அங்கங்கட்கும் 4 ஆக்க 5 மழிவுகள் தஞ்சொல்லான் வருமாகலான், 6 அப்பெற்றித்தாய சொல்லின்கண் 7 சோர்தலை அமைச்சர் தங்கணிகழாமற் 8 போற்றிக் 9 காக்க, எ-று.

---

1 இதுபோற்சிறந்தது - இந்நாநலத்தைப் போற்சிறப்புடையது. நாநலம் சிறப்புடையதென்பது "எத்துணைய வாயினுங் கல்வி யிடமறிந், துய்த்துணர் வில்லெனி னில்லாகும் - உய்த்துணர்ந்து, சொல்வன்மை யின்றெனி னென்னாம் அஃதுண்டேற், பொன்மலர் நாற்ற முடைத்து" என்று நீதிநெறிவிளக்கம் கூறுவதாலும் அறியப்படும்.

2 இஃது - நாநலம்.

3 அங்கம் என்றது நாடு, அரண், பொருள், படை முதலியவற்றை.

4 ஆக்கம் - மேன்மேலுயர்தல். 5 அழிவு - கீழ்கீழ்த்தாழ்தல்.

6 அப்பெற்றித்தாய - ஆக்கவழிவுகளைத் தருந் தன்மையதான.

7 சோர்தலை - தளர்தலை. 8 போற்றி - நன்கு சிந்தித்து.

9 காக்க - தடுக்கக்கடவர்.

ஆக்கத்திற் கேதுவாய நற்சொல்லையும் கேட்டிற் கேதுவாய தீச்சொல் லையும் சொல்லென்னு மொப்புமைபற்றி 'அதனால்' என்றார் 1 செய்யுளாகலின் சுட்டுப்பெயர் முன்வந்தது பிறர் சோர்வு போலாது உயிர்க்கெல்லாம் ஒருங் குவருதலால் 'காத்தோம்பல்' என்றார் இவை இரண்டு பாட்டானும் இஃது இ வாக்கின்றியமையாதென்பது கூறப்பட்டது

தெளி.—(இ - ள்) (தம்மரசனுக்கும் அங்கங்களுக்கும்) ஆக்கமும்-பெரு க்கமும், கேடும் - அழிவும், அதனால் - (தமது) சொல்லினாலே, வருதலால்-வரு மாகலால், சொல்லின்கண் - (அப்படிப்பட்டதாய) சொல்லினிடத்து, சோர்வு- சோர்தலை, காத்தோம்பல் - (மந்திரிகள்) தம்மிடத்தே உண்டாகாமல் காக்கக் கடவர், எ-று

ஆக்கத்துக்கு ஏதுவாகிய நல்ல சொல்லையும் கேட்டிற்கு ஏதுவாகிய தீய சொல்லையும் சொல்லென்கிற ஒப்புமைபற்றி 'அதனால்' என்று ஒருமையாகக் கூறினார் செய்யுளாதலால் அதனால் என்னும் சுட்டுப்பெயர் சொல் என்னும் இயற்பெயருக்கு முன்னே வந்தது இம்மந்திரிகளது சோர்வு மற்றவர்களது சோர்வுபோலாகாமல் உயிர்களுக்கெல்லாம் தீங்கு ஒருமிக்க வருதலால் 'காத் தோம்பல்' என்றார் இவை இரண்டுபாட்டானும் சொல்வல்லமை மந்திரிகளு க்கு அவசியம் வேண்டுவதென்பது சொல்லப்பட்டது.

(க - து) செல்வமும் கேடும் சொல்லால் வருதலால் மந்திரிகள் சொற்சோர்வு வாராமற் காக்கக் கடவர் என்பது (உ)

௩ கேட்டார்ப் பிணிக்குந் தகையவாய்க் கேளாரும்
வேட்ப மொழிவதாஞ் சொல்

பரி.—(இ - ள்) கேட்டாரையேற்றுக்கொண்டாரைப் பின் வேறுபடாமற் பி ணிக்குங் குணங்களை 2 அவாவி மற்றைப் பகையாய் 3 ஏற்றுக்கொள்ளாதா ரும் பின் அப்பகைமை யொழிந்து 4 நட்பினை விரும்பும் வண்ணஞ் சொல்ல ப்படுவதே அமைச்சர்க்குச் சொல்லாவது, எ-று.

---

1 உலகவழக்கில் இயற்பெயருக்குப்பின்னே சுட்டுப்பெயரைக்கூறல் வழாநிலை என்றும் இயற்பெயருக்குமுன்னே சுட்டுப்பெயரைக் கூறல் வழுவாமென் றும் செய்யுள் வழக்கில் இயற்பெயருக்குமுன்னே சுட்டுப்பெயரைக் கூ றுதல் வழுவமைதியாமென்றும் இலக்கணநூல் கூறுதலபற்றி 'செய்யு ளாகலின் சுட்டுப்பெயர்முன் வந்தது' என்று கூறப்பட்டது (சுட்டுப்பெ யரை) "முற்படக் கிளத்தல் செய்யுளு ளுரித்தே" என்று தொல்காப் பியங் கூறுவது இங்கறியத்தக்கதாம்

2 அவாவி - மேலும்மேலும் கொள்ள விரும்பி,

3 ஏற்றுக்கொள்ளாதாரும் - தமது சொல்லை யங்கீகரியாதவர்களும்.

4 நட்பினை - சிநேகத்தை

அக்குணங்களாவன வழுவின்மை, சுருங்குதல், விளங்குதல், இனிதாதல், விழுப்பயன்றருத லென்றிவை 1 முதலாயின 2 அவற்றை யவாவுதலா வது சொல்லுவான் 3 குறித்தனவேயன்றி வேறு நுண்ணுணர்வுடையோர் 4 கொள்பவற்றின் மேலும் நோக்குடைத்தாதல் அவாயென்னுஞ் செய்தெ னெச்சம் 5 மொழிவதென்னுஞ் செயப்பாட்டுவினை கொண்டது இனிக் கேட் டார் கேளாதாரென்பதற்கு நூல் கேட்டார் கேளாதாரெனவும், 6 வினவி யார் வினவாதாரெனவு முரைப்பாருமுளர் தகையவா யென்பதற்கு 7 எல் லாரும் 8 தகுதியை யுடையவா யென்றுரைத்தார், அவர் 9 அப்பன்மை மொழிவதென்னும் ஒருமையோடு 10 இயையாமை நோக்கி சொல்லின் இலக்கணங் கூறப்பட்டது

**தெளி** —(இ-ள்) கேட்டார்-கேட்டா யேற்றுக்கொண்டவரை, பிணிக்கும் பின்வேறுபடாமற் கட்டும், தகை - குணங்களை, அவாய் - அவாவி, கேளாரும் - மறைப்பட்டகையா யேற்றுக்கொள்ளாதவரும், வேட்ப - (பின் அப்பகைமை யொழிந்து நட்பினை) விரும்பும் வண்ணம், மொழிவது - சொல்லப்படுவதே, சொல்லாம் - (மந்திரிகளுக்குச்) சொல்லாவது, எ-று.

அக்குணங்களாவன வழுவில்லாமை, சொற்சுருங்குதல், பொருள் விளங் குதல், இனிதாதல், மேலான பயனைத்தருதல் என்ற இவைமுதலானவை அவை களை அவாவுதலாவது அச்சொல் சொல்லுவான் குறித்த பொருளையேயன்றி

---

1 முதலாயின என்றதனால் முறையின்வைப்பு, உலகமலையாமை, உதாரணமு டையதாதல் முதலியவைகளையுங் கொள்க [‘சுருங்கச் சொல்லல் விளங்க வைத்தல், நவின்றோர்க் கினிமை நன்மொழி புணர்த்தல், ஓசை யுடைமை யாழமுடைத் தாதல், முறையின் வைப்பே யுலகமலை யாமை, விழுமியது பயத்தல் விளங்குதா ரணத்த, தாகுத னூலிற் கழகெனும் பத்தே’ என்று நன்னூல் கூறுவது மிங்கறியத்தக்கதாம் ]

2 அவற்றை - வழுவின்மை முதலிய குணங்களை

3 குறித்தனவேயன்றி - உத்தேசித்த பொருள்களையேயல்லாமல்.

4 கொள்பவற்றின்மேலும் - கொள்ளும் பொருள்மேலும், நோக்குடைத்தா தல் - கருத்தினையுடையதாதல்

5 மொழிவது என்பது செயப்பாட்டுவினைப் பொருளில் வந்த செய்வினை. இவ்வாறு வருதலை இலக்கணக்கொத்துநூலார் “படுசொல் லற்றே படு பொருளாயும்” என்பர்

6 வினவியார் வினவாதார் - கேள்விகேட்டவர் கேள்விகேளாதவர்.

7 எல்லாரும் என்றது பரிமேலழகர் உரை யெழுதுவதற்குமுன் உரை யெழுதியுள்ள தருமர், மணக்குடையார், தாமத்தர், நச்சினார்க்கினியார் முதலானவர்களை

8 தகுதியையுடையவாய - குணங்களையுடையனவாய

9 அப்பன்மை - தகைய (குணங்களுடையன) வென்னும் பலவின்பால்.

10 இயையாமை நோக்கிறிலர் - பொருந்தாமையைக் கவனித்தாரல்லர்

வேறுபுத்தி நுட்பமுடையவராலே கொள்ளப்பட்டவைகளின்மேலும் நோக்குடைத்தாதல்—இதனாலே சொல்லினது இலக்கணம் சொல்லப்பட்டது.

(க - து) பகைவரும் நட்பினரும் ஏற்றுக்கொள்ளுமாறு சொல்லுவதே சொல்லாம் என்பது. (௩)

௪. திறனறிந்து சொல்லுக சொல்லை யறனும்
பொருளு மதனினூஉங் கில.

பரி —(இ - ள்) 1 அப்பெற்றித்தாய சொல்லை அமைச்சர் தம்முடையவுங் கேட்பாருடையவுமாய திறங்களையறிந்து சொல்லுக, அங்ஙனஞ் சொல்லுதற்கு மேற்பட்ட அறனும் பொருளுமில்லை யாகலான், எ - று.

அத்திறங்களாவன குடிப்பிறப்பு, கல்வி, ஒழுக்கம், செல்வம், உருவம், 2 பருவ மென்பனவற்றான் வருந்தகுதிவேறுபாடுகள். 3 அவற்றையறிந்து சொல்லுதலாவது 4 அவற்றான் தமக்கும் 5 அவர்க்கு முளவாய ஏற்றத்தாழ்வுகளையறிந்து அவ்வவ 6 மரபாற் சொல்லுதல். 7 அஃது 8 உலகத்தோ டொட்டவொழுகலையும் இனிமையையும் பயத்தலின் அறனாயிற்று, தங்காரியமுடித்தலிற் பொருளாயிற்று. அறனும் பொருளுமெனக் 9 காரணத்தைக் காரியமாகக் கூறினார்.

தெளி —(இ - ள்) (மந்திரிகள்) சொல்லை - (அப்படிப்பட்டதாகிய) சொல்லை, திறன் - (தமமுடையவும் கேட்பாருடையவுமான) திறங்களை, அறிந்து - தெரிந்து, சொல்லுக - சொல்லக்கடவர், அதனினூங்கு - அப்படிசொல்லுதற்கு மேற்பட்ட, அறனும் பொருளும்—இல - இல்லை, (ஆதலால்) எ - று.

அத்திறங்களாவன குடிப்பிறப்பு, கல்வி ஒழுக்கம், செல்வம், உருவம், பருவம் என்பவைகளாலவரும் தகுதிவேறுபாடுகள். அவைகளை அறிந்துசொல்லுதலாவதுஅவைகளாலே தமக்கும் அவர்க்கும் உண்டாகிய உயர்வுதாழ்வுகளை அறிந்து அவரவர்க்குத்தகுந்த மரபினாலே சொல்லுதல். அஃது உயர்ந்தோர் நடையோடுபொருந்த நடத்தலையும் இனிமையையும் தருதலால் அறனாயிற்று,

1 அப்பெற்றித்தாய - (முந்தின குறளிற்கூறியபடி) கேட்டாரைப் பிணிப்பதாயும் கேளாரையும் வேட்பச்செய்வதாயுமுள்ள.

2 பருவம் - வயது

3 அவற்றை - தகுதி வேறுபாடுகளை

4 அவற்றால் - தகுதி வேறுபாடுகளால்

5 அவர்க்கும் - கேட்பார்க்கும். 6 மரபால் - முறையால்

7 அஃது - அவ்வம்மரபாற் சொல்லுதல் 8 ஒழுக்கமுடைமை ம

9 திறமறிந்து சொல்லுதலாகிய காரணத்தை அறனும் பொருளும் எனக் காரியமாக்கிக் கூறினதினால் இது காரணம் காரியமாய உபசாரவழக்கு. திறனறிந்து சொல்லுதலால் அறனும் பொருளு முண்டாகுமென்று கூறாது அதனையே அறனும் பொருளும் என்று கூறியவாற்றைக்காண்க.

[illegible] பொருளாயுடன் அறனும்பொருளும் என்று இ[illegible] செய[illegible] காரணத்தைக் காரியமாக்கிச் சொல்லினார்.

(க-து) மந்திரிகள் சொற்றிறங்களை யடைவுபட வறிந்து அறமும் பொருளும் பயக்குமாறு சொல்லக்கடவர் என்பது. (௪)

௫ சொல்லுக சொல்லைப் பிறிதோர்சொ லச்சொல்லை
வெல்லுஞ்சொ லின்மை யறிந்து.

பரி—(இ-ள்.) தான்சொல்லாகக் கருதிய சொல்லைப் பிறிதோர்சொல் [illegible] வெல்லுஞ்சொல் இல்லாமையறிந்து பின் அச்சொல்லைச் சொல்லுக, எ-று.

பிறிதோர்சொல் [illegible] 1 மறுதலைச்சொல். வெல்லுதல்-குணங்களான் மிகுதல். 2 அது வெல்லாமைச் சொல்லுக வென்பதாம். இனிப் பிறிதோர்சொல் வெல்லுஞ்சொல்லெனச் 3 செவ்வெண்ணாக்கி, 4 ஒத்த சொல்லும் மிக்கசொல்லும் உளவாகாமற் சொல்லுகவென் றுரைப்பாருமுளர். இது 5 சொற்பொருட்பின் வருநிலை.

தெளி—(இ-ள்) சொல்லை - (தாம்சொல்லக்கருதிய) சொல்லை, பிறிதோர்சொல் - பிறிதொரு சொல்லாயினும், வெல்லுஞ்சொல்-வெல்லவல்லதொரு சொல், இன்மை - இல்லாமையை, அறிந்து, (பின்) அச்சொல்லை—சொல்லுக - சொல்லக்கடவர், எ-று.

பிறிதோர்சொல்லாவது பகைவரது எதிரானசொல். வெல்லுதல் - குணங்களால் மிகுதல். அது வெல்லாமைச் சொல்லுக வென்பதாம்.

(க-து) மந்திரிகள் தமது சொல் மற்றவரது சொல்லால் மறுக்கப்படாதபடி யாலோசித்துச் சொல்லக்கடவர் என்பது. (௫)

௬ வேட்பத்தாஞ் சொல்லிப் பிறர்சொற் பயன்கோடன்
மாட்சியின் மாசற்றார் கோள்.

பரி—(இ-ள்) பிறர்க்குத் தாஞ்சொல்லுங்கால் அவர் பின்னுங் கேட்டலை விரும்புமாறு சொல்லி, அவர் தமக்குச் சொல்லுங்கால் அச்சொல்லின் பயனைக் கொண்டொழிதல் அமைச்சியலுட் குற்றமற்றாரது துணிபு, எ-று.

---

1 மறுதலைச்சொல் - தான் சொல்லுஞ்சொல்லை மறுத்துச்சொல்லுஞ்சொல்

2 அதுவே - நமது சொல்லே

3 செவ்வெண்ணாக்கி - எண்ணிடைச்சொற்றொக்கு நிற்பதாக்கி இங்கே எண்ணிடைச்சொல் உம் என்னும் இடைச்சொல்

4 பிறிதோர்சொல் என்பதற்கு ஒத்தசொல்லும் என்றும் வெல்லுஞ்சொல் என்பதற்கு மிக்கசொல்லும் என்றும் பொருள்கூறி இவையுண்டாகாமல் (சொல்லைச்) சொல்லுக என்று பொருள் கூறுவாருமுண்டென்பது

5 வந்தசொல்லே மீண்டும்வந்து பொருளில் மாறுபடாதிருப்பது சொற்பொருட்பின் வருநிலையணி. இக்குறளில் சொல் என்பது மீண்டுமீண்டும் வந்து பொருளில் மாறுபடாதிருத்தலைக் காண்க,

பிறர்சொற்களுட் குற்றமுள்ளவாயினும் 1 அவை நோக்கி இகழாரென்பதாம் 2 வல்லாரையிகழ்தல் 3 வல்லுநர்க்குத் தகுதியன்மையின், 4 இதுவு முடன்கூறினார் இவை மூன்றுபாட்டானும் 5 அதனைச் சொல்லுமாறு கூறப்பட்டது

தெளி —(இ - ள்) தாம்-(பிறர்க்குத்)தாம், (சொல்லுமிடத்து அவர் பின்னும் கேட்டலை) வேட்ப - விரும்பும்படி, சொல்லி - கூறி, பிறர் - அவர், சொற்பயன்கோடல் - (தமக்குச் சொல்லுமிடத்து அச்) சொல்லின்பயனைக் கொண்டு விடுதல், மாட்சியின் (மந்திரியின்) இலக்கணத்திலே, மாசற்றார் - குற்றமற்றவரது, கோள் - துணிபு, எ - று

பிறர்சொற்களிலே குற்றமுள்ளவாயினும் அவைநோக்கி இகழாரென்பதாம் வல்லமையில்லாதவரை யிகழ்தல் வல்லவர்க்குத்தகுதி யல்லாமையால், இதுவும் உடன்சொல்லினார் இவை மூன்றுபாட்டாலும் அந்நிலைச்சொல்லும் விதஞ்சொல்லப்பட்டது

(க - து) பிறர் தமது சொல்லை விரும்புமாறு சொல்லியவர் சொல்வது விளங்காவாயினும் அதனது பயனைக் கொண்டொழிதல் மந்திரிகளது கடமையாம் என்பது. (சு)

எ சொலல்வல்லன் சோர்வில னஞ்சா னவனை
யிகல்வெல்லல் யார்க்கு மரிது

பரி —(இ - ள்) தானெண்ணிய காரியங்களைப் பிறர்க்கேற்பச் சொல்லுதல் வல்லனாய் 6 அவை மிகப் பலவாயவழி ஒன்றினுஞ் சோர்விலனாய் 7 அவைக்கஞ்சானுமாயினான் யாவன் 8 அவனை 9 மாறுபாட்டின்கண் வெல்லுதல் யாவர்க்கு மரிது, எ - று

---

1 அவை - குற்றங்களை 2 வல்லாரை - சொல்லும் வல்லமை யில்லாதவரை.

3 வல்லுநர்க்கு - சொல்லும் வல்லமை யுடையவர்க்கு

4 இதுவும் - சொல்லும் வல்லமையில்லாத பிறரது சொல்லின் பொருளைக் கவனித்துவிட்டொழிதலையும்

5 அதனை - சொல்லை 6 அவை - காரியங்கள்.

7 அவைக்கு - (அரசன் அமைச்சர் புரோகிதர் முதலியோர் கூடியுள்ள) சபைக்கு

8 சுட்டுக்கு முன்னே வினா வரவேண்டும் என்னும் வடமொழி நியமப்படி அவனையென்னும் சுட்டிற்கு முன்னே யாவன் என்னும் வினா வருவிக்கப்பட்டது இதனை "எப்பொருள் எத்தன்மைத் தாயினு மப்பொருள், மெய்ப்பொருள் காண்ப தறிவு" என்னுங் குறளானும், "உயர்வற வுயர்நல முடையவ னெவனவன்" என்று பெரியார் கூறுதலானும் அறிக. [சுட்டாகிய தச்சத்தத்திற்குமுன்னே வினாவாகிய யச்சத்தம் வரவேண்டும் என்பது வடநூல் வழக்கு]

9 மாறுபாட்டின்கண் - சொற்போரிடத்து

* ஏற்கச்சொல்லுதல் - 1 அவர்க்கு அவை காரியமல்லவாயினும் 2 ஆமென்று துணியும்வகை சொல்லுதல் சோர்வு - சொல்லவேண்டுவதனை மறப்பால் நேர்ந்திடல் 3 இம்மூன்றுகுணமு முடையானை மாற்றாராயப் பிரித்தில் பொருந்தல் செய்து வெல்வாரில்லை யென்பதாம்

தெளி —(இ - ள்) (தான் எண்ணியகாரியங்களை) சொல்லவல்லன - (பிறர்க்கு ஏற்கச் சொல்லுதல்வல்லவனாகி, (அவைமிகவும் பலவானவிடத்தே) சோர்விலன் - ஒன்றினுஞ் சோர்விலாதவனாகி, அஞ்சான் - (சபைக்கு) அஞ்சாதவனுமாயினன், யாவன், அவனை — இகல் - மாறுபாட்டிலே, வெல்லல் - வெல்லுதல், யார்க்கும் - யாவர்க்கும், அரிது - முடியாது, எ - று.

ஏற்கச் சொல்லுதல் - அவருக்கு அவைகாரியமல்லாதவையாயிருந்தாலும் ஆமென்று ஒப்புமபடி சொல்லுதல் சோர்வு - சொல்லவேண்டுவதனை மறதியால்விடுதல் இம்மூன்றுகுணமுமுடையவனைப் பகைவராயப் பிரித்தல் பொருந்தல்செய்து வெல்வார் இல்லையென்பதாம்

(க - து) சொல்வன்மையும் சொல்லுதலிற் சோர்வின்மையும் சபைக்கஞ்சாமையுமுடையவனைச் சொற்போரிற் பிறர் வெல்லுதல் முடியாது என்பது (எ)

அ. விரைந்து தொழில்கேட்கு ஞாலம் நிரந்தினிது
சொல்லுதல் வல்லார்ப் பெறின்

பரி —(இ - ள்) சொல்லப்படுங் காரியங்களை நிரல்பட்க் கோத்து இனிதாகச் சொல்லுதல் வல்லாரைப்பெறின், உலகம் 4 அவற்றை விரைந்தேற்றுக் கொள்ளும், எ-று

தொழில் - சாதியொருமை. நிரல்படக்கோத்தல் - முன்சொல்வனவு பின்சொல்வனவு மறிந்து 5 அம்முறையே வைத்தல் இனிதாதல் - 6 ...

* ஏற்ப - அங்கீகரிக்கும்வகை

1 அவர்க்கு அவை காரியமல்லவாயினும் - பிறர்க்குத் தாம் எண்ணிய காரியங்களைக் கேட்டல் காரியமல்லவாயிருந்தாலும்.

2 ஆமெனத்துணியும்வகை - தாங்கள் சொல்லுதல் ஒக்கும் என்று நிச்சயிக்கும்படி

3 இம்மூன்றுகுணமுமென்றது சொல்வன்மை, சோர்வின்மை, அஞ்சாமைகளை

4 அவற்றை - அச்சொற்களை

5 அம்முறையே வைத்தல் - முன்னே சொல்லவேண்டியவைகளை முன்னும் பின்னே சொல்லவேண்டியவைகளைப் பின்னும் வைத்தல்.

6 "சொல்லியக்கால் சொல்லின் பயன்காணுந் தான்பிறர், சொல்லிய சொல்லை வெலச்சொல்லும் டல்லாா, பழித்தசொற் றீண்டாமற் சொல்லும் விழுத்தக்க, கேட்டார் இனியவாயச் சொல்வானேற் பூங்குழலாய், நல்வைய னூரன் தஞ்சா தணிபகலம், புல்லலி ஞாட லரிது." என்னுஞ் செய்யுளிங்கே பதியத்தக்கதாம் (தகடூர் யாத்திரை)

• பார்க்கின்பய ...ய்த்தல 1 சொல்லுதலவலலான் நூறுயிரவரு ளொருவன் எ ன்ற வடமொழி பற்றிப 2'பெறின்' என்றார் 3 ஈண்டுங் கேட்டல - 4 ஏற்றுக் கோடல் இவை யிரண்டுபாட்டானும 5 அவவாற்றாற சொல்லுதல வலலார து சிறப்புக் கூறப்பட்டது

தெளி —(இ-ள்.) தொழில - (சொலலப்படுங) காரியங்களை, நிரந்து - ஒழுங்குபடக்கோத்து, இனிது- இனிதாக, சொலலுதல வலலார - சொல்லுத லில வலலவரை, பெறின - பெறறால, ஞாலம் - உலகமானது, விரைந்து—கே ட்கும - (அவைகளை) ஏற்றுக்கொள்ளும, எ-று

தொழில ஈறுதோனறாத சாதியொருமைபபெயர ஒழுஙகுபடக்கோத்த ல் - முன்னே சொல்லவேண்டியவையும பின்னேசொல்லவேண்டியவையும் அறிந்து அம்முறையே வைத்தல் இனிதாதல - கேடபார்க்கு இன்பந்தருதல. சொலலுதல் வல்லவன் நூறுயிரமபேரு ளொருவன் என்னும வடமொழி வழக்குப்பற்றி 'வலலார்ப பெறின்' என்றார் இவை இரண்டுபாட்டாலும் அ வவிதங்களாலே சொலலுதல வலலாரது சிறபபுச் சொலலப்பட்டது

(க - து) உலகத்தார் சொல்லபபடுங காரியங்களை யொழுங்குப டக் கோத்து இனிமையுண்டாகச் சொலலுவாரது வார்த்தையை விரை ந்தேற்றுக்கொளளுவார்கள் எனபது• (அ)

௬. பலசொலலக காமுறுவர் 6 மன்றமா சறற
சிலசொல்ல றேறறா தவர்

---

1 "ஆர்த்தசபை நூற்றொருவ ராயிரத்தொன றாமபுலவர், வாரத்தை பதினா யி ரத்தொருவா - பூத்தமலர்த், தண்டா மரைத்திருவே தாதாகோ டிக்கொரு வர், உண்டாயி னுண்டென றறு." என்னும செய்யுளும, "நூறறுவரிற் றொன்றுந் தறுகணணா ராயிரவ, ராறறுளித தொக்க வவையகத்து-மாற் றத்தான், ஒன்று கொடுக்கு மகன்" எனனும செய்யுளும் இங்கே யறியத் தககனவாம

2 பெறின் என்னும எதிர்காலவினையெச்சம நிரந்தினிது சொல்லுதல் வலலா ரைப பெறுதலினருமையைக குறிப்பித்து நின்றது.

3 ஈண்டும் என்றதிலுள்ள எச்சவும்மை "கேட்டாரப பிணிக்குந் தகையவாயக் கேளாரும, வேட்ப மொழிவதாஞ் சொல" என்னுங குறளைத் தழுவிநி ன்றது. இககுறளில கேட்டார என்பதறகு நட்பா யேற்றுக்கொண் டாரை என்று பொருள் கூறியிருத்தலு மிஙகறியத்தககது

4 ஏற்றுக்கோடல் - அங்கீகரித்தல்

5 அவ்வாற்றால - சொல்வனமை, சோர்வின்மை, அஞ்சாமை, நிரந்தினிது சொலலுதல என்னும வாயிலாக

6 "மன்றவென கிளவி தேற்றஞ் செய்யும்" என்று தொல்காபபியம கூறுகி ன்றது

பரி:—(இ-ள்) குற்றமற்றனவாயச சிலவாய வார்ததைகளை 1 அவவாற றுற சொலலுதலை யறியாதார பலவாய வார்ததைகளைத தொடுததுச்சொலல விருப்புவா, எ-று

குற்றம் - 2 மேற்சொல்லிய குணங்கட்கு 3 மறுதலையாயின இடைவிடாது பலசொலலுதலையுஞ் சொலவனமையெனறு விருமபுவாருளா, அவர் 4 இவ்வாறு சொலலமாட்டாதாரோ, 5 வலலாா 6 அது செயயாரெனா யாப்புறுப்பாா 'மனற' என்றாா

தெளி —(இ-ள்) மாசறற - குற்றமற்றவையாய், சில - சிலவாகியவார்த்தைகளை, சொலலல - (அவவழியாற) சொலலுதலை, தேற்றாதவாா அறியாதவா, பல - பலவாகிய வார்த்தைகளை, சொலல- (தொடுததுக)கூற, காமுறுவர் - விருப்புவார், எ-று.

குற்றம் - முனசொலலிய குணஙகளுககு எதிரானவை இடைவிடாமற் பலசொலலுதலையும் சொலவனமையென்று விருமபுவாரும உணடு,அவா இப்படி சொலலமாட்டாதவரோ, வலலவா அதுசெயயாரெனா உறுதிபபடுததுவார் 'மன்ற' எனறாா.

(க - து.) குற்றமறறனவாயச சிலவாய வார்ததைகளைச சொல்லவறியாதவர் பலவாய வார்ததைகளைச சொலலவிருமபுவா எனபது. (௯)

௧0. இணருழத்து நாறா மலரனையர் கற்ற
துணர விரித்துரையா தார்.

பரி.—(இ - ள்.) கற்றுவைத்த நூலைப் பிறரறியும வணணம விரிததுரைககமாட்டாதவர் கொததின்கணணே மலாநது வைத்தும் நாறாத பூவை யொபபா, எ று

1 அவ்வாற்றால எனறது இவவதிகாரத்தின எடடாவது குறளின விசேடவுரையில் கூறியுள்ளதை

2 மேற்சொல்லிய குணங்கட்கு என்றது இவவதிகாரததின் மூனறாங்குறளின் விசேடவுரையில கூறியுள்ள குணஙகளை.

3 மறுதலையான குணஙகள்-வழுவுடைத்தாதல, மிகைபடககூறுதல், விளங்கக் கூறாமை, கேட்டற்கினிதாகாமை, விழுபபயன தாராமை, மாறுகொளக் கூறல, வெறறெனத் தொடுததல முதலானவை.

4 இவ்வாறு - வழுவினமை முதலியனவிலலாமலிஙஙனம.

5 வல்லார் - சொலவன்மையுடையாா.

6 அது - பலவாய வார்த்தைகளைச சொல்லுதல,

1 செவ்விபெற மலர்ந்துவைத்தும் நாற்றமில்லாத பூச் சூட்டப்படாதவாறு போல நூலைக்கற்றுவைத்தும் சொல்லமாட்டாதார் நன்கு மதிக்கப்படா ரென்றமையின், இது 2 தொழிலுவமையாயிற்று இவை யிரண்டொட்டானும் 3 அது மாட்டாதார திழிபு கூறப்பட்டது

தெளி —(இ-ள) கற்றது-கற்றுவைத்த நூல்களை, உணர -(பிறர்) அறியும் வண்ணம், விரித்துரையாதார - விரித்து உரைக்கமாட்டாதவர், இணா - கொத்தினிடத்தே, ஊழ்த்தும - மலர்ந்திருந்தும, நாறு - மணக்காத, மலரனையர் - பூப்போலவர், எ-று.

அழகுபெற மலர்ந்திருந்தும வாசனைசெய்யாதமலா சூடப்படாத விதம் போல நூலைக்கற்றிருந்தும சொல்லமாட்டாதவா நன்கு மதிக்கப்படா ரென்று கூறினமையின் இது தொழிலுவமையணி இவை இரண்டொட்டானும் அது மாட்டாரது இழிவு சொல்லப்பட்டது

(க - து.) தாங்கற்றுள்ள நூற்பொருளை விரித்துரைக்கும வலியிலலாதவர் மணமில்லாத மலருக்கொப்பாவர் என்பது. (௰)

## ௬௬ - ம் அதி —4 வினைத்தூய்மை.

பரி.—அஃதாவது செய்யப்படும வினைகள் பொருளேயன்றி அறமும் புகழும் பயந்து நல்லவாதல் சொல்லேயன்றிச் செயலும நன்றாகவேண்டு மென்கின்றமையின், இது சொல்வன்மையின்பின வைக்கப்பட்டது

தெளி.—அஃதாவது செய்யப்படுந்தொழில்கள் பொருண்மாத்திர மல்லாமல் அறமும புகழும தந்து நல்லவையாதல்- சொல்லேயல்லாமல செயலும் நன்றாகவேண்டுமென்கின்றமையால், இது சொல்வன்மையின பினவைக்கப்பட்டது

க. துணைநல மாக்கந் தரூஉம் வினைநலம்
வேண்டிய வெல்லாந் தரும்

பரி —(இ - ள) ஒருவனுக்குத் துணையது நன்மை செல்வமொன்றனையுங் கொடுக்கும், 5 அவ்வளவன்றி வினையது நன்மை அவன் வேண்டியன யாவற்றையுங் கொடுக்கும், எ-று

---

1 "அள்ளிக்கொள்வன்ன குறுமுகிழ வாயினும, கள்ளிமேல கைநீட்டார சூடும்பூ வன்மையால" என்று நாலடியார் கூறுகின்றது

2 சூடப்படாமை யென்னுந்தொழிலை யுவமானமாகக் கொண்டமையினால தொழிலுவமையாயிற்று

3 அதுமாட்டாதாரது - முறைபடச்சொல்லும் திறமற்றவர்களது

4 வினைத்தூய்மை - செய்காரியம தூயதாதல

5 அவ்வளவன்றி - துணைநலம செல்வமொன்றனையும தரும் அளவாதலபோலாகாமல

வேண்டியவெல்லா மென்றது இம்மைக்கண் அறம்பொருளின்ப 1 முதலாயவற்றையும், மறுமைக்கட் டான்விரும்பிய பதங்களையும் இதனாற் காணப்படும் 2 துணை நன்மையினும் 3 கருதப்படும் வினைநன்மை சிறந்ததென்று வினைத்தூய்மையது சிறப்புக் கூறப்பட்டது.

**தெளி.**—(இ - ள்) (ஒருவனுக்கு) துணைநலம் - துணையினது நன்மையானது, ஆக்கம் - செல்வமொன்றனையும், தரூஉம் - கொடுக்கும், (அவ்வளவல்லாமல்) வினைநலம் - தொழிலினது நன்மையானது, வேண்டியவெல்லாம் (அவன்) வேண்டியவைகளை யெல்லாம், தரும் - கொடுக்கும், எ-று.

வேண்டியவெல்லாமென்றது இம்மையில் அறம் பொருளின்ப முதலானவைகளையும், மறுமையில் தான்விரும்பிய பதவிகளையும் இதனால் காணப்படும் துணை நன்மையினும் கருதப்படும் தொழிலின் நன்மை சிறந்ததென வினைத்தூய்மையது சிறப்புச் சொல்லப்பட்டது.

(க - து.) துணை நலத்தினும் வினை நலஞ் சிறந்ததென்பது. (க)

உ. என்று மொருவுதல் வேண்டும் புகழொடு
நன்றி பயவா வினை.

**பரி**—(இ - ள்) தம்மரசனுக்கு இம்மைக்கட் புகழும் மறுமைக்கண் அறமும் பயவாத வினைகளை அமைச்சர்க்கு எக்காலத்து மொழிதல் வேண்டும் எ-று.

4 பெருகல், சுருங்கல், இடைநிற்றலென்னும் நிலைவேறுபாடு காலத்தான் வருதலின் 'என்றும்' என்றார் வேண்டுமென்பது ஈண்டு இன்றியமையாதென்னும் 5 பொருட்டு.

**தெளி.**—(இ-ள்) (தம்மரசனுக்கு) புகழொடு - (இம்மையில்) புகழையும், நன்றி - (மறுமையில்) அறத்தையும், பயவா - தாராத, வினை - தொழில்களை, என்றும் - எக்காலத்திலும், ஒருவுதல் வேண்டும் - (மந்திரிகளுக்கு) ஒழிதல் வேண்டும், எ-று

---

1 முதலாயவற்றை யென்றது பேர், புகழ், சொற்செலவு, ஒளி முதலியவை

2 துணை - துணையாயுள்ளவர் துணையாவார் - தொழிற்செய்தற்கண் உடனிருந்து உதவிசெய்பவர்

3 கருதப்படும் - ஆராய்ந்தெண்ணப்படும்.

4 'அறனறிந்தான்றமைந்த' என்னும் குறளின் விசேடவுரையில் "தன்னரசன் சுருங்கிய காலத்தும் பெருகிய காலத்தும் இடை நிகராய காலத்தும் எனபார் எஞ்ஞான்றும் என்றார்" என்று கூறியிருத்தலும் நோக்கற்பாலதாம்.

5 பொருட்டு - பொருளது.

பெருகல், சுருஙகல, நடுநிற்றல் எனகிற நிலைவேறுபாடுகளை காலத்தினால வருதலால 'என்றும்' என்றார் வேண்டு மென்பது இஙகே அவசியம் எனனும பொருளில் வந்தது.

(க - து) புகழும் அறமும் தராத தொழிலகளை யெப்பொழுது ம மநதிரிகள விடடுவிடல் வேண்டும எனபது. (உ)

ங ஓஒதல் வேணடு மொளிமாழகுரு செய்வினை
யாஅது மென்னு மவர்

பரி —(இ-ள) மேலாகக கடவே மென்று கருதுவார தம்மொளி கெடுத றகுக் காரணமாய வினையைச செய்தலைத தவிர்க, எ-று

ஓதல் வேணடுமென்பது ஒருசொன்னீர்மைத்து ஓவுதலென்பது குறை நது நினறது 1 ஒளி தாமுள காலத்து எலலாரானும நன்கு மதிககபபடுதல். செய்யெனனும முதனிலைத தொழிறபெயா மாறறபபடடது அனறிச 2 செய வினையென வினைத்தொகை யாககியவழிப் பொருளினமையறிக ஒளிகெடவரு வது ஆக்கமனறெனபதாம

தெளி —(இ - ள்) ஆதும் - மேலாககடவோம, எனனு மவா - என்று நினைப்பவர், ஒளி-(தம) மொளி, மாழகும - கெடுதறகுக காரணமாகிய, வினை- தொழிலை, செய - செயதலை, ஓதல் வேணடும - ஒழியககடவா, எ-று

ஓதல் வேணடும எனபது இருசொலலாகாமல ஒருசொலலின் தனமை யதாய் நினறது ஓவுதல என்டது வுக குறைநது ஓதல் என நினறது. ஒளியாவ து தாமிருககிற காலத்திலே யாவராலும் மதிககபபடுதல செயவினை யென் பது வினை செய என மாற்றபபட்டது செய் என்பது முதனிலைதொழிறபெ யர் இவவாறு மாறறுவதலலாமல் செயவினை யெனறு வினைதொகையாக்கிய விடததுப் பொருளிலலாமையை யறிக ஒளிகெடவரும் செல்வம செலவம அ லலவெனபதாம.

(க - து.) மேன்மையை யடையவிருமபுவோர் மதிபபுக கெடுதற் கேதுவாய தொழிலகளை விடக்கடவர் எனபது. (ங)

---

1 "ஒளி யொருவற்குளள வெறுககை" எனனுங குறளின விசேடவுரையில "ஒ ளி தானுளளுயகாலதது மிகுதிதோனறுத லுடைமை 'ஒளிநிறு ஞெருகு புகழ் செயயான்' எனறார் பிறரும்" எனறு கூறியிருத்தலு மிங்கறியத்தக்

2 செய்வினை யெனபதை வினைசெய யெனமாறறாது நேரே வினைதொகை யாககொணடால் அது செயயும வினை யென விரிந்து பொருள் பொரு ததமிலலாது போவதை யறிக

௪ இடுக்கட் படினு மிளிவந்த செய்யார்
நடுக்கற்ற காட்சி யவர்

**பரி**—(இ-ள்) தாமிடுக்கணிலே 1 படவரினும் 2 அதுதீர்தற் பொருட்டு 3 முன் செய்தார்க்கு இளிவந்த வினைகளைச் செய்யார் துளக்கமற்ற தெளிவினையுடையார், எ-று

சிறிதுபொழுதிற் கழிவதாய இடுக்கணோக்கி எஞ்ஞான்றுங் கழியாத விழிவு எய்தற்பாலதன்றென்பதூஉம், அஃதெய்தினும் வருவது வருமென்பதூஉம் தெளிவாராகலான் 'செய்யார்' என்றார்.

**தெளி**—(இ-ள்) நடுக்கற்ற - அசைவற்ற, காட்சியவர் - தெளிவையுடையவர், இடுக்கட்படினும் - (தாம்) துன்பத்திலேபடவரினும், (அது தீர்தற்பொருட்டு) இளிவந்த - (முன் செய்தவர்க்கு) இழிவுவந்த தொழில்களை, செய்யார் - செய்யமாட்டார், எ-று

சிறிதுபோதிலே நீங்குவதாகிய துன்பத்தை நோக்கி எப்போதும் நீங்காத இழிவை அடையுந்தன்மையதன்றென்பதும், அவ்விழிவை அடைந்தாலும் வருவதாயுள்ள அத்துன்பமானது வருமென்பதும் தெளிவாராதலால் 'செய்யார்' என்றார்.

(க-து.) கலக்கமில்லா அறிவினையுடையவர் துன்பம் நேர்ந்தவிடத்தும் இழிதொழிலைச் செய்யார் என்பது. (௪)

௫ எற்றென் றிரங்குவ செய்யற்க செய்வானேல்
மற்றன்ன செய்யாமை நன்று

**பரி**—(இ-ள்) யான் செய்தது எத்தன்மைத்தென்று பின் றானே 4 யிரங்கும் வினைகளை ஒருகாலுஞ் செய்யாதொழிக, அன்றி ஒருகால் மயங்கி 5அவற்றைச் செய்யுந் தன்மையனாயினானாயின் பின்னிருந்து அவ்விரங்கல்களைச் செய்யா தொழிதல் நன்று, எ-று.

'இரங்குவ' என முன் வந்தமையிற் பின் 6 'அன்ன' எனச் 7 சுட்டியொழிந்தார், அவ்வினைகளது பன்மையான், இரக்கமும் பலவாயின, அச்செய்தற்குப் பின்னிருந்திரங்குவனாயின், அது திருமவாயி லறிந்திலனெனவும், திடமிலனெனவும், பயனில்லன செய்கின்றானெனவும், தன பழியைத் தானே 8 தூற்றுத

1 பட - அகப்பட 2 அது - இடுக்கண்
3 முன் செய்தார்க்கு - முன்னே இடுக்கண் செய்தவர்களுக்கு.
4 இரங்கும் - வருந்தும் 5 அவற்றை - தானே யிரங்கும் வினைகளை
6 அன்ன என்பது சுட்டடியாகப் பிறந்த பலவின் பாற்கை வினையாலணையும் பெயர்.
7 சுட்டி யொழிதல்-ஒன்றனைப்பெயராற்றெரிவியாது சுட்டாற்றெரிவித்தல
8 தூற்றுதல் - பலரறியத் தெரிவித்தல.

ன்றுனெனவும் எல்லாரு மிகழ்தலிற 1 பின்னிரங்காமை நன்று என்றா 2 இதுவும வினைத்தூயார் செயலாகலின், உடன் கூறப்பட்டது பிற்றொடாதற்குச் செய்வினையின அவை போலவனவுஞ் செய்யாமை நன்றெனப் 3 பிறரெல்லாம் இயைபற வுரைத்தார்.

தெளி —(இ - ள்) எற்றென்று - (நான் செய்தது) எப்படிப்பட்டதென்று, இரங்குவ -(பின் தானே) இரங்கும் தொழில்களை, செய்யற்க - (ஒருகாலும்) செய்யாதிருக்கக்கடவன், செய்வானேல - (அல்லாமல ஒருகால மயங்கி அவைகளைச) செய்யுந்தன்மையனாயினானாயின், மற்று - பின்னிருந்து, அன்ன - அவ்விரங்கல்களை, செய்யாமை - செய்யாதொழிதல நன்று - நல்லது, எ-று

'இரங்குவ' என முன்னே வந்ததையினாலே பின்னே இரங்குவ எனக் கூறாது அதனை 'அன்ன' எனச சுட்டி யொழிந்தார். அவ்விரங்கும் தொழில்களது பன்மையால, தொழில்கள்பற்றியுண்டாம இரக்கமும் பலவாயின இரங்கும் தொழில்களைச செய்துவிட்டு அச்செயலுக்காகப பின்னிருந்து இரங்குவானாயின, அது நிருமவழி அறிந்திலனென்றும, தைரியமில்லாதவனென்றும, பயனில்லாதவைகளைச செய்கின்றானென்றும, தன பழியைத தானே தூற்றுகின்றானென்றும எல்லாரும் இகழுவாராதலால பின்பு இரங்காமை நன்று என்றார இரங்காமையும நல்லதொழில செய்வோர செயலாதலால, உடன் சொல்லப்பட்டது செய்வானேன் மற்றன்ன 'செய்யாமை நன்று' என்பதற்கு (எற்றென்றிரங்கும தொழில்களை) பின்னே தொடருதற்குச செய்வானானால எற்றென்றிரங்கும தொழில்கள்போலவனவும் செய்யாதிருத்தல நல்லது எனப்பிறரெல்லாம சம்பந்தம சிறிது மில்லாமற பொருள கூறினார்கள்.

(க - து.) பின்பு வருந்துதற் கேதுவாய தொழில்களைச் செய்யாதிருத்தல வேண்டும என்பது. (௫)

௬. 4 ஈன்றாள பசிகாணபா னாயினுஞ் செய்யற்க
சான்றோர் பழிக்கும வினை

பரி —(இ - ள்) தன்னைப்பயந்தாளது பசியை வறுமையாற் கண்டிரங்குந் தன்மையனாயினானெனினும 5 அது சுட்டி அறிவுடையார பழிக்கும வினைகளை ஒருவன செய்யாதொழிக, எ-று.

---

1 பின்னிரங்காமை - பச்சாதாபப்படாமை
2 இதுவும - எற்றென்றிரங்குவ செய்யாமையும
3 பிறரெல்லாம் என்றது தருமா முதலிய உரைகாரர்களை,
4 யாவரினும் தன்னைப்பெற்றவளே மேம்பட்டிருத்தல பற்றி ஈன்றாளையே விதந்து கூறினர். இஃது "அன்னையும பிதாவும முன்னறி தெய்வம" என்றதனாலும நன்கு விளங்கும்
5 அதுசுட்டி - தன்னைப்பெற்றாளது பசியைக்குறித்து

1 இறந்த மூப்பினராய 2 இருமுதுகுரவரும் கற்புடைமனைவியுங் குழவியும் பசியால் வருந்த மெலிந்தக்கண் தீயன பலவுஞ் செய்தாயினும் புறந்தருகவென்னும் 3 அறநூற்பொதுவிதி 4 பொருணூல்வழி யொழுகுதலும் அரசர் தொழிற்குரியராதலும் நன்குமதிக்கப்பாடுமுடைய அமைச்சர்க் காகாமைபற்றி இவ்வாறு கூறினார் இவை யைந்துபாட்டானும் பாவமும் பழியு பயக்கும் வினை செய்யற்கவென்பது கூறப்பட்டது

தெளி —(இ-ள்) ஈன்றாள் - (தன்னைப்)பெற்ற தாயினது, பசி - பசியை காண்பானாயினும் -(வறுமையாலே) கண்டிருக்குந் தன்மையனாயினானெனினும் (அதனைக்குறித்து) சான்றோர் -(அறிவினாலே) நிறைந்தோர், பழிக்கும் வினை பழிக்குந் தொழில்களை, செய்யற்க - (ஒருவன்) செய்யாதிருக்கக் கடவன் எ - று

வயது முதிர்ந்த தாய்தந்தையரும், கற்புடைய மனைவியரும், குழந்தையும் பசியால் வருந்துமளவிலே தீயவைபலவும் செய்தாயினும் காப்பாற்றுக வென்று அறநூல் கூறிய பொதுவிதி . பொருணூலின் வழிநடத்தலும் அரசர் தொழிற்கு உரியராகலும் நன்கு மதிக்கப்படுதலும் உடையமந்திரிகளுக்கு ஆகாமைபற்றி இப்படி சொல்லினார் இவை ஐந்துபாட்டாலும் பாவமும் பழியும் தரும் தொழிலைச் செய்யலாகாதென்பது சொல்லப்பட்டது

(க - து.) ஒருவன் தனது தாயினது பசியை வறுமையாற் கண்டானாயினும் அறிவுடையோர் பழிக்குந்தொழில்களைச் செய்யாதிருத்தல் வேண்டும் என்பது.

(௬)

௭. பழிமலைந் தெய்திய வாக்கத்திற் சான்றோர்
கழிநல் குரவே தலை.

பரி —(இ - ள்) சாலாதார் தீயவினைகளைச் செய்து அதனாற் பழியைத் தம்மேற்கொண்டு பெற்ற செல்வத்தின் 5 அது மேற்கொள்ளாத சான்றோர் அனுபவிக்கும் மிக்க நல்குரவே உயர்ந்தது, எ-று

நிலையாத செல்வத்தின் பொருட்டு நிலையின பழியை மேற்கோடல் சால்போடியையாமையின் ‘ சான்றோர் கழி நல்குரவே தலை ’ என்றார்

தெளி —(இ - ள்) (சான்றோரல்லாதவர் தீய தொழில்களைச் செய்து பழிமலைந்து (அதனால்) பழியைத் தம்மேற்கொண்டு, எய்திய - பெற்ற, ஆக்கத்தின் - செல்வத்தைக்காட்டிலும், சான்றோர் -(அது மேற்கொள்ளாத) சான்றோர், (அனுபவிக்கும்) கழிநல்குரவே - மிகுந்த வறுமையே, தலை - உயர்ந்தது, எ - று

1 இறந்தமூப்பினராய - மிக்ககிழத்தன முடையவரான.
2 இருமுதுகுரவர் - இரண்டு பழையகுருமார் இவர்கள் தாய் தந்தையர்
3 அறநூல் - தருமசாஸ்திரம்
4 பொருணூல் - அர்த்தசாஸ்திரம்
5 அது - பழி

நிலையில்லாத செல்வத்தின் பொருட்டு நிலையுள்ள பழியை மேற்கொள்ளா ல சான்றோர் தன்மையோடு பொருந்தாமையால 'சான்றோர் கழிநல் குரவே தலை' என்றார்

(க - க) பழியா லடைந்த செல்வத்திலும் பெரியோரனுபவிக்கு ம வறுமையே மேலாம் எனபது. (எ)

அ கடிந்த கடிந்தொரார் செய்தார்க் கவைதா
முடிந்தாலும் பீழை தரும்.

பரி —(இ-ள) 1 நூலோர் 2 கடிந்த வினைகளைத் தாமும் கடிந்தொழி யாது பொருளைக்கிச் செய்த அமைச்சர்க்கு 3 அவை தூயவனமையின் முடி யா, ஒருவாற்றான் முடியினும் பின துன்பத்தையே கொடுக்கும், எ-று

முடிதல் -கருதியபொருள் தருதல் 4 பீழை தருதலாகிய பொருளினதொ ழில அதற்குக் காரணமாய வினைகளமேலேற்றப்பட்டது.

தெளி —(இ-ள) கடிந்த - (நூலோர்) தள்ளிய தொழில்களை, கடிந்தொ ரார் - (தாமும்)தள்ளிவிடாராகி, செய்தார்க்கு - (பொருளைக்குறித்துச்)செய்த மந்திரிகளுக்கு, அவைதாம் - அத்தொழில்கள், (தூயவையல்லாமையால முடி யாவாம்) முடிந்தாலும் - (ஒருவழியால) முடிவுபெற்றாலும், (பின) பீழை - துன்பத்தையே, தரும் கொடுக்கும், எ-று

முடிதல - வினைதந்த பொருளைத் தருதல துன்பத்தைத் தருவதாகிய பொ ருளினது தொழிலை அப்பொருளுக்குக் காரணமான தொழில்களினமேலேற் றிச் சொல்லப்பட்டது.

(க - து) பெரியோர் விலக்கிய தொழிலைச்செய்த மந்திரிகளுக் குப பின தீமையுண்டாம எனபது, (அ)

கூ. அழக்கொண்ட வெல்லா மழப்போ மிழப்பினும்
பிற்பயக்கு நற்பா லவை.

பரி —(இ - ள.) ஒருவன் தீய வினைகளைச்செய்து பிறர் இரங்கக்கொண் ட பொருளெல்லாம இமையிலே அவன்றான இரஙகப்போகா நிற்கும், மற

---

1 நூலோர் - தருமசாஸ்திரமறிந்தவர்.

2 கடிந்த - செய்யக்கூடாதென்று விலக்கிய.

3 அவை - நூலோர் கடிந்த வினைகள்

4 துன்பத்தைத் தருவதான பொருளினது தொழிலை அப்பொருளுக்குக் கார ணமான (நூலோர்கடிந்த) தொழில்களின்மேல ஏற்றிச் சொன்னமையா ல் இது காரியத்தினதொழிலைக் காரணத்தினமேலேற்றிக் கூறிய வுபசா ரவழக்கு.

றைத்துபவினையான் வந்த பொருள்கள் முன்னிழந்தான ஆயினும் அவனுக்கு பின்னர் வந்து பயன் கொடுக்கும், எ-று

பின்னென்வே மறுமையு மடங்கிற்று பொருள்களான் * அவற்றிற்குக் காரணமாய வினைகள தியல்பு கூறியவாறு.

**தெளி.**—(இ - ள்) (ஒருவன்) அழக்கொண்ட வெல்லாம் -(தீயதொழிலைச் செய்து பிறர்) இழக்கக் கொண்டபொருளெல்லாம், அழப்போம் - (இம்மையிலே அவனமுன்) இரங்கப்போகா நிற்கும், நற்பாலவை - மற்ற நல்ல தொழில்களாலவந்த பொருள்கள், இழப்பினும் - (முன்) இழந்தானாயினும், பிற்பயக்கும் - பின்வந்து பயன் கொடுக்கும், எ-று

பின் எனவே மறுமையும் அடங்கிற்று. பொருள்களால் அவைகளுக்குக் காரணமாகிய தொழில்களது இயல்பு சொல்லியபடி

(க - து) பிறரழுமாறு தானகொண்ட பொருள் தானழுமாறு பின போவதாயிருத்தலால் ஒருவன் நல்வழியில் பொருளைத் தேடவேண்டும் எனபது (௯)

௰ சலத்தாற் பொருள்செய்தே மார்த்தல் பசுமட்
கலத்துணீர் பெய்திரீஇ யற்று

**பரி.**—(இ - ள்) அமைச்சன் தீயவினைகளாற் பொருள் படைத்து 1 அதனால் அரசனுக்கு ஏமஞ் செய்தல் 2 பசிய மட்கலத்துள்ளே நீரைப்பெய்து 3 அதற்கு ஏமஞ் செய்ததனோ டொக்கும், எ-று

முன் ஆக்கம் பயப்பனபோற்றோன்றிப் பின்னழிவே பயத்தலால், 4 அவை 5 சலம் எனப்பட்டன. ஏமாராத்தலென்பது ஏமாத்தலென்றாயிற்று ஏமத்தையடைப்பண்ணுதலென்றவாறு இருத்துதல்-நெடுங்காலமிருப்பச்செய்தல். 6 அரசனும் பொருளும் சேரப்போமெனபதாம் பிறரெல்லாம் ஏமாத்தலென்று பாடமோதி அதற்கு மகிழ்தலென்றும், இரீஇயற்றெனபதற்கு வை

* அவற்றிற்கு - பொருள்களுக்கு

1 அதனால் - தீத்தொழில்களால் பொருளைச் சம்பாதித்ததினால்

2 பசிய மட்கலம் - பசை மண் பாத்திரம்

3 அதற்கு - பசை மண்பாத்திரத்திற்கு

4 அவை - தீவினைகள்

5 புறத்தே ஒருவாறாகப் புலப்பட்டு அகத்தே ஒருவாறாக இருப்பதெனபது சலம் எனபதின் பொருள், வஞ்சனை யென்றபடி

6 பசிய (சுடாத) மட்கலத்துள்ளே நீரைவார்த்துக் காவல் செய்தால் அம்மட்கலம் அந்நீரோடு விரைவிலழிவதுபோலத் தீய தொழில்களால சம்பாதித்த பொருள்களால் அரசனைக் காவல் செய்தால் அவ்வரசன் அப்பொருளோடு விரைவி லழிவா னெனபதாம்.

நாறபோலு மென்று முரைத்தார் அவர் அவை 1 தனவினையும் பிறிதின வினையுமாய உவமை யிலக்கணத்தோடு மாறுகோடல நோக்கிறறிலர் இவை நானகு பாடடாலும் 2 அதறகுக காரணங கூறபபடடது

தெளி —(இ-ள) (மந்திரியானவன்) சலத்தால் - தீய தொழிலகளால, பொருள் செய்து - பொருளைச சமபாதித்து, ஏமாததல - (அதனால அரசனுக்கு) காப்புச செயதல, பசுமட்கலத்துள் - பசிய மண்ணின பாத்திரத்திறுள்ளே, நீர்பெய்து - நீரைவாரத்து, இரீஇயறறு - (அதறகுக) காபபுசசெயத தனனொடொககும், எ-று

முனனே செலவம தருவனபோல தோனறிப பினனே அழிவையே தருவதால, தீயதொழிலகள சலம எனறு கூறபபடடன ஏமம ஆததல என்பது செயயுள் விகாரத்தால ஏமாததலெனறாயிறறு காவலை யடையசசெயதலென்பது அதன பொருள கலத்துள நீரை இருத்துதல-அககலத்தினகண அநநீரை நெடுங்காலம இருககச செயதல 'பசுமட், கலததுணீர பெய்திரீஇ யற்று' என்னும் உவமானத்தால அரசனும பொருளும ஒருமிககக கெடுமை எனபது பெறபபடடது மறற உரைகாரரெலலாம ஏமாததலெனபதனை ஏமாததல எனறு பாடங்கூறி அதறகு மகிழதல எனறும, இரீஇயறறு எனபதறகு வைத்தாற போலும எனறும பொருளகூறினாகள அவர்கள ஏமாததல (மகிழதல்) எனபது தனவினையும இரீஇயறறு எனபது மறறொனறின வினையுமாய உவமை யிலககணத்தோடு விரோதபபடுதலைக கவனித்தாரிலலை இவை நான்கு பாடடாலும அதறகுக் காரணம் சொலலபபடடது

(க - து) மந்திரி தீயதொழிலால பொருளதேடி அரசனைககாததல பச்சை மணபாததிரததில நீரைவார்த்துக காததலபோலாம எனபது. (ய)

## சுஎ - ம் அதி.— வினைத்திட்பம்.

பரி —அஃதாவது அந்நாய வினை முடிபபானுககு வேணடுவதாய 3 மனத்திணமை அதிகார முறைமையும இதனானே விளங்கும

தெளி.—அஃதாவது அபபரிசுத்தமாகிய தொழிலைமுடிப்பவனுககு வேணடுவதாகிய மனவலிமையாம அதிகார முறைமையும இதனாலேயே விளங்கும்

---

1 மகிழதல எனனும வினை மந்திரியின மேலும வைத்தாறபோலும எனனும் வினை மற்றொருவர் மேலுமாய நினறு மகிழ்தல எனனும உவமேயத்திறகு வைத்தாறபோலும் என்பது உவமான மாகாது விரோதபபடுதலின் அவவுரை பொருந்தாதெனறு பரிமேலழகர் மறுத்தனர்

2 அதறகு - பாவமும பழியும பயககும் வினை செயயறக எனபதறகு

3 மனத்திணமை - மனவுறுதி

க. வினைத்திட்ப மென்ப தொருவன் மனத்திட்ப
மற்றைய வெல்லாம் பிற

பரி.—(இ-ள்) வினைசெய்தற்கட் டிண்மை யென்று சொல்லப்படுவது [1] அதனை முடித்தற்கு உரியானொருவன் மனத்தினது திண்மை; [2] அஃ தொழிந்தன வெல்லாம் [3] அதற்குத் திண்மையென்று சொல்லப்படா, எ-று.

ஒழிந்தனவாவன—படை, அரண், நட்பு முதலியவற்றின் றிண்மைகள் அவையும் [4] அதற்குவேண்டுவனவாய இனமாகலின் 'மற்றைய' என்றும், வேண்டினும் அஃதில்வழிப் பயனிலவாகலிற் 'பிற' என்றுங் கூறினார். இதனால் வினைத்திட்பமாவது இன்னதென்பது கூறப்பட்டது.

தெளி.—(இ-ள்) வினைத்திட்பமென்பது - தொழில்செய்யுமிடத்து வலிமை யென்று சொல்லப்படுவது, ஒருவன்-(அதனை முடித்தற்கு உரியா) னொருவனது, மனத்திட்பம் - மனத்தினது வலிமையாம், மற்றையவெல்லாம் - அது நீங்கலான வல்லமைகளெல்லாம், பிற - (அதற்கு) வலிமையென்று சொல்லப்படுவன அல்ல, எ-று.

அது நீங்கலானவை - படை, அரண், நட்பு முதலானவைகளின் வலிமைகள் அவையும் அதற்கு வேண்டுமவையாய இனமாகலால் 'மற்றைய' என்றும், அவை வேண்டியவையாயிருந்தாலும் அம்மனவலியில்லாத விடத்தே பயனில வாகலால் 'பிற' என்றும் சொல்லினார் இதனால் வினைத்திட்பமாவது இன்ன தென்பது சொல்லப்பட்டது

(க - து) ஒருவனுக்கு வினைசெய்யுமிடத்து அது முடிதற்கான வலிமையாவது அவனது மனவலிமையேயாம் என்பது (க)

உ. ஊ [5] றொரா லுற்றபி னொல்காமை யிவ்விரண்டி
னாறென்ப ராய்ந்தவர் கோள்.

பரி.—(இ-ள்) முன் [6] நீதியாராய்ந்த அமைச்சரது துணிபு [7] பழுதுபடும் வினைகளைச் செய்யாமையும், செய்யும் வினை தெய்வத்தாற் பழுதுபட்ட வழி [8] அதற்குத் தளராமையும் ஆகிய இவ்விரண்டன் வழியென்பர் நூலோர். எ-று

---

[1] அதனை - வினையை
[2] அஃது - மனத்திண்மை
[3] அதற்கு - வினைசெய்தற்கு.
[4] அதற்கு - மனத்திண்மைக்கு
[5] தழுவுதல் என்பது தழால் என்றாற்போல ஒருவுதல் என்பது ஓரால் என்றாயிற்று
[6] நீதியென்றது - நீதிநூல்களை
[7] பழுது - கேடு
[8] அதற்கு - பழுதுபட்டதற்கு

தேவர்க்கும் அசுரர்க்கும் அமைச்சுப் பூண்ட வியாழ வெள்ளிகளது துணிபு தொகுத்துப் 1 பின் நீதிநூலுடையார் கூறியவாறு கூறுகின்றமையின், ஈண்டு 2 வினைத்தூய்மையும் உடன் கூறினார். 3 உறுதலுடையதனை முன் 'ஊறு' என்றமையின் 'உற்றபின்' என்றும், இவ்விரண்டின்கண்ணே பட்டதென்பார் 'இரண்டினாறு' என்றும் கூறினார், 4 ஊறொரார் என்று பாடமோதுவாருமுளர், அஃது ஒல்காமையென்னும் எண்ணோடும் இரண்டென்னுந் தொகையோடும் இயையாமை அவரறிந்திலர்.

**தெளி** —(இ-ள்) ஆய்ந்தவர் - (முன்பு நீதிநூல்) ஆராய்ந்த மந்திரிகளது, கோள் - துணிபு, ஊறு - பழுதுபடுந்தொழில்களை, ஒரால் - செய்யாமையும், உற்றபின் - (செய்யுந்தொழில் ஊழினாலே) பழுதுபட்டவிடத்து, ஒல்காமை - (அதற்குத்) தளராமையும், (ஆகிய) இவ்விரண்டின் - இவ்விரண்டினது, ஆறு - வழியாகும், என்பர் - என்று (நூலோர்) சொல்லுவர், எ-று.

தேவர்க்கும் அசுரர்க்கும் மந்திரியாயிருக்குந் தன்மையை மேற்கொண்ட பிரகஸ்பதி சுக்கிரன் இவர்களது துணிவைத் தொகுத்துப் பின்னே நீதிநூலுடையோர் சொல்லியபடி சொல்லுகின்றமையால், இங்கே வினைத்தூய்மையும் உடன் சொல்லினார். பழுதுறுதலுடையதனை முன்னே 'ஊறு' என்று கூறினதினால் 'உற்றபின்' என்றும், வினைத்தூய்மையும் வினைத்திட்பமுமாகிய இவ்விரண்டினிடத்தே பொருந்தியதென்பார் 'இரண்டினாறு' என்றும் சொல்லினார். ஊறொரால் என்பதனை ஊறொரார் என்று பாடங்கூறுவாருமுளர், அவ்வாறு கூறுதல் ஒல்காமை யென்னும் செவ்வெண்ணுடனும் இரண்டென்னும் தொகையுடனும் பொருந்தாமையை அவர் அறியவில்லை.

(க-து) பழுதுபடும் தொழிலைச் செய்யாமையும் செய்தொழில் பழுதுபட்டவிடத்துத் தளராமையுமே மந்திரிகளது துணிபாம் என்பது. (உ)

௩. **கடைக்கொட்கச் செய்தக்க தாண்மை யிடைக்கொட்கி**
**னெற்றா விழுமந் தரும்**

---

1 பின் - பின்னுள்ள

2 வினைத்தூய்மை என்றது- ஊறொரால் (பழுதுபடும் வினைகளைச்செய்யாமை)

3 உறுதலுடையதனை - பழுதுபடும் வினைகளை

4 ஊறொரார் என்று பாடங்கொள்ளுமிடத்து அதற்குப்பழுதுபடும் வினைகளைச் செய்யாதவர் அல்லது செய்யாதவராகி யென்று பொருள்படுதலினாலும் அது [ஊறு ஒராலும் ஒல்காமையும் ஆகிய இவ்விரண்டின் ஆறு என்று பெயர்ச்செவ்வெண் (உம்மையெண்) இரண்டென்னும் தொகைபெற்று இனிதாக வமைதல்போலாகாமல்] ஒல்காமையும் என்னும் எண்ணுடனும் இரண்டென்னும் தொகையுடனும் பொருந்தாதுபோதலாலும் அது பாடமாகாதென்று பரிமேலழகர் மறுத்தாரெனக

**பரி** —(இ - ள்) செய்யப்படும் வினையை முடிவின்கட் புலப்படுமவகை முன்னெல்லாம் மறைத்துச் செய்வதே திட்பமாவது, அங்ஙனமன்றி இடையே புலப்படுமாயின் அப்புலப்பாடு செய்வானுக்கு நீங்காத இடும்பையைக் கொடுக்கும், எ-று.

மறைத்துச் செய்வதாவது 1 அங்கம் ஐந்து மெண்ணியவாறு பிறரறியாமலும், தானறிந்ததூஉம், தன் 2 இங்கிதம், வடிவு, செயல், சொற்களான் அவர் உய்த்துணராமலும் அடக்கிச் செய்தல். அது 3 திட்பம் ஆண்டன்மையான் வருதலின் 'ஆண்மை' எனப்பட்டது. எற்றா விழுமமாவன - பகைவர் முன்னறிந்து அவ்வினையை விலக்குதல், செய்வானை விலக்குதல் செய்வாராகலின், அவற்றான் வருவன. விழுமம் - சாதியொருமைப்பெயர். இவையிரண்டுபாட்டானும் 4 அதனது பகுதி கூறப்பட்டது.

**தெளி** —(இ-ள்) (செய்யப்படுந்தொழிலை) கடை - முடிவிலே, கொட்க - வெளிப்படும்படி, செய்தக்கது - (அதற்கு முன்னெல்லாம் மறைத்துச்) செய்வதே, ஆண்மை - வலிமையாகும் (அவ்விதமல்லாமல்) இடை - நடுவிலே, கொட்கின் - வெளிப்படுமாயின், (அவ்வெளிப்படுதல்) எற்றா - நீங்காத, விழுமம் - துன்பத்தை, தரும் - (செய்தவனுக்குக்) கொடுக்கும், எ - று.

மறைத்துச் செய்தலாவது நாடு முதலாகிய அங்கம் ஐந்தும் எண்ணிய விதத்தைப் பிறர் அறியாமலும், தான் அறிந்ததும், தன்னிங்கிதம், வடிவு, செயல், சொற்களால் அவர் ஆலோசித்து அறியாதிருக்கவும் அடக்கிச் செய்தல். அவ்வலிமை ஆண்தன்மையினால் வருதலினாலே 'ஆண்மை' என்று கூறப்பட்டது. நீங்காத துன்பங்களாவன - பகைவர் முன்னறிந்து அத்தொழிலை விலக்குதலும், செய்வானை விலக்குதலும் செய்வாராதலால், அவ்விலக்குதல்களால் வருவன. விழுமம் என்றது சாதியொருமைப்பெயர். இவை இரண்டு பாட்டாலும் அதனுட்பகுதி சொல்லப்பட்டது.

(க - து) செய்யவேண்டிய தொழிலை முடிவில் வெளிப்படும்படி செய்துமுடிப்பதே ஒருவனுக்கு ஆண்மையாம் என்பது. (௩)

**௪. சொல்லுதல் யார்க்கு மெளிய வரியவாம்**
**சொல்லிய வண்ணஞ் செயல்.**

**பரி** —(இ-ள்) யாம் இவ்வினையை இவ்வாற்றாற் செய்துமென நிரல்படச் சொல்லுதல் யார்க்கும் எளிய, அதனை அவ்வாற்றானே செய்தல் யாவர்க்கும் அரியவாம், எ-று.

1 அங்கம் ஐந்துமெண்ணியவாறு - நாடு, அரண், பொருள், படை, நட்பென்னும் அங்கங்களைந்தையும் பற்றித்தான் யோசிக்கும் வகையை.
2 இங்கிதம் - குறிப்பால் நிகழும் உறுப்பின்றொழில்.
3 ஆண்தன்மையால்வரும் திட்பத்தை யாண்மையென்றது கருவியாகுபெயர்.
4 அதனது பகுதி - வினைத்திட்பத்தினது தன்மை.

சொல்லுதல், செயலென்பன சாதியொருமைப்பெயர். அரியவற்றை யெண்ணிச் சொல்லுதல் திட்பமில்லாதார்க்கும் இயல்லின் 'எளிய' என்றார். இதனால்[1] அதனருமை கூறப்பட்டது.

தெளி —(இ - ள்) சொல்லுதல் - (யாம் இத்தொழிலை இவ்விதத்தாலே செய்வோமென்று ஒழுங்குபடுத்திச்) சொல்லுதல், யார்க்கும், எளிய- எளியவையாகும், (அதனை) சொல்லியவண்ணம் - அச்சொல்லியவிதத்தால், செயல் - செய்தல், அரியவாம் - (யாவர்க்கும்) அரியவையாம், எ - று.

சொல்லுதல், செயல் என்பன ஒருதோன்றாத சாதியொருமைப்பெயர். அரியவைகளை எண்ணிச்சொல்லுதல் மனவலிமையில்லாதவர்க்கும் கூடுமாத லால் 'எளிய' என்றார். இதனால் அதனது அருமை சொல்லப்பட்டது.

(க - து) தொழிலைச் சொல்லியபடி செய்தல் யார்க்கும் அரிதாம் என்பது. (௪)

௫ வீறெய்தி மாண்டார் வினைத்திட்பம் வேந்தன்க
ணூறெய்தி யுள்ளப் படும்.

பரி —(இ - ள்) எண்ணத்தாற் சிறப்பெய்திப் பிறவிலக்கணங்களானும் மாட்சிமைப்பட்ட அமைச்சரது வினைத்திட்பம், வேந்தன்கண்ணே உறுதலை யெய்துதலான், எல்லாரானும் நன்குமதிக்கப்படும், எ-று.

வேந்தன்கணூறெய்தல் - எடுத்தவினை[2] அதனான் முற்றுப்பெற்றுச் செ லவமும் புகழும்[3] அவன்கண்ணவாதல். எய்தலானென்பது திரிந்துநின்றது [4] உள்ளல் - மதிப்பான் மறவாமை இதனால்[5] அதன்சிறப்புக் கூறப்பட்டது.

தெளி —(இ-ள்) வீறெய்தி - (எண்ணத்தினாலே) சிறப்பை அடைந்து, மாண்டார் - (மற்றை யிலக்கணங்களாலும்) மாட்சிமைப்பட்ட மந்திரிகளது, வினைத்திட்பம் - தொழில் வலிமையானது, வேந்தன்கண் - அரசனிடத்தே, ஊறெய்தி - உறுதலை அடைதலால், உள்ளப்படும் - (எல்லாராலும்) நன்கு மதிக்கப்படும், எ-று.

வேந்தன்கணூறெய்தல் - எடுத்ததொழில் அதனால் முடிவுபெற்றுச் செல வமும் புகழும் அவனிடத்தே உண்டாதல். எய்தலான் என்பது எய்தி எனத்திரி ந்து நின்றது. உள்ளல் - மதிப்பினால் மறவாதிருத்தல். இதனால் அதன் சிறப் புச்சொல்லப்பட்டது.

(க - து) மந்திரிகளது தொழில் வலிமையானது அரசர்க்குண் டாம் சிறப்பினால் மதிக்கப்படும் என்பது. (௫)

---

1 அதனது - சொல்லியவண்ணம் செய்தலினது.

2 அதனான் - மனவுறுதியால்.

3 அவன்கண்ணவாதல் - அரசனிடத்தேயுண்டாகுதல்.

4 உள்ளல் - நினைத்தல். 5 அதன் சிறப்பு - வினைத்திட்பத்தின் சிறப்பு.

௬. எண்ணிய வெண்ணியாங் கெய்துப வெண்ணியார்
திண்ணிய ராகப் பெறின்.

பரி.—(இ - ள்.) தாமெய்த எண்ணிய பொருள்களெல்லாவற்றையும் அவ்வெண்ணியவாறே எய்துவர், எண்ணியவர் அவற்றிற்கு 1வாயிலாகிய வினைக்கட் டிண்மை யுடையராகப் பெறின், எ-று.

எளிதினெய்துப வென்னாது 'எண்ணியாங் கெய்துப' என்றார் 2அவர் அவ்வாறல்ல தெண்ணாமையின். திண்ணியராகவே வினைமுடியும், அது முடிய 3அவையெல்லாங் கைகூடுமென்பது கருத்து. இதனால் 4அஃதுடையாரெய்தும் பயன் கூறப்பட்டது.

தெளி.—(இ - ள்.) எண்ணிய - (தாமடைய) எண்ணிய பொருள்களெல்லாவற்றையும், எண்ணியாங்கு - அவ்வெண்ணியபடியே, எய்துப - அடைவார், எண்ணியார் - எண்ணியவர், (அவ்வெண்ணிய பொருள்களுக்கு வழியாகிய தொழிலினிடத்து) திண்ணியராகப் பெறின் - வலிமையுடையவராகப் பெறுவாரானால், எ-று.

எளிதில் அடைவாரென்னாது 'எண்ணியாங் கெய்துப' என்றார் அவர் அப்படியல்லாமல் எண்ணாமையால். வலிமையை யுடையவராகவே தொழில் முடியும், அத்தொழில் முடியவே அவையெல்லாம் கைகூடுமென்பது கருத்து. இதனால் அத்திண்மையுடையவர் அடையும் பயன் சொல்லப்பட்டது.

(க - து) தொழில் வலிமையுடையார் நினைத்தவையாவும் பெறுவர் என்பது. (௬)

௭. * உருவுகண் டெள்ளாமை வேண்டு முருள்பெருந்தேர்க்
கச்சாணி யன்னா ருடைத்து.

---

1 வாயிலாகிய - காரணமான

2 அவர் - எண்ணியவர், அவ்வாறல்லது - தொடக்கத்தில் நினைத்தபடியல்லாமல், எண்ணாமையான் - இடையில் பிறிதொன்றாக நினையாமையால்.

3 அவையெல்லாம் - தாமடைய எண்ணிய பொருள்களெல்லாவற்றையும்

4 அஃதுடையார் - வினைத்திட்பமுடையவர்

* "சிலகற்றார் கண்ணு முளவாம் பலகற்றார்க், கச்சாணி யன்னதோர் சொல்" என்று பழமொழியும், "உடலின் சிறுமைகண் டொண்புலவர் கல்விக், கடலின் பெருமை கடவார்" என்று நன்னெறியும், "மடல்பெரிது தாழை மகிழினிது கந்தம், உடல்சிறிய ரென்றிருக்க வேண்டாம்" என்று நல்வழியும் கூறுதலும் இங்கறியத்தக்கது.

**பரி** — (இ - ள்) உருளாநின்ற பெரிய தேர்க்கு அச்சினகண்ணே போல வினைக்கண் திண்ணியாரை யுடைத்து உலகம், அதனால் அவரை ன சிறுமை நோக்கி இகழ்தலை யொழிக, எ-று.

1 சிறுமை 'எள்ளாமைவேண்டும்' என்பதனானும் உவமையானும் பெற்றாம். அச்சு - 2 உருள் கோத்தமரம். ஆணி உருள் கழலாது 3 அதன் கடைக்கட் செருகுவது 4 அது வடிவாற் சிறிதாயிருந்தே பெரியபாரத்தைக் கொண்டியக்குந் திட்பமுடைத்து அதுபோல, வடிவாற் சிறியராயிருந்தே பெரியவினைகளைக் கொண்டியக்குந் திட்பமுடைய அமைச்சருமுளர், 5 அவரை அத்திட்பம் நோக்கி அறிந்து கொள்க வென்பதாம் இதனால் 6 அவரை யறியுமாறு கூறப்பட்டது

**தெளி** — (இ - ள்) (உலகமானது) உருள் - உருளாநின்ற, பெருந்தேர்க்கு - பெரியதேர்க்கு, அச்சாணியன்னார் - அச்சினிடத்தே ஆணிபோல தொடுத்தே வலிமையையுடையவரை, உடைத்து - உடையது, (அதனால்) - (அவரை) வடிவினது சிறுமைநோக்கி, எள்ளாமை வேண்டும் - இகழ்தலையொழிக, எ-று

'எள்ளாமைவேண்டும்' என்பதனாலும் 'உருள்பெருந்தேர்க்கச்சாணி' என்னும் உவமானத்தாலும் சிறுமைபெறப்பட்டது அச்சு - உருள்கோத்தமரம். ஆணி - உருள்கழலாமல் அதன்கடையிலே செருகுவது அது வடிவினாலே சிறிதாயிருந்தே பெரியபாரத்தைக்கொண்டு செலுத்துகிற வலிமையையுடையது அதுபோல, வடிவினாலே சிறியராயிருந்தே பெரிய தொழில்களைக்கொண்டு செலுத்துகிற வலிமையுடைய மந்திரிகளும் உண்டு, அவரை அவ்வலிமைநோக்கி அறிந்துகொள்கவென்பதாம் இதனால் அவரை அறியும்விதம் சொல்லப்பட்டது

(க - து) தேர்க் கச்சாணிபோலத் தொழில்வலிமை யுடையாரை உலகம் உடைத்தாயிருப்பதினால் வடிவுகண்டொருவரை யிகழலாகா தென்பது. (எ)

அ· கலங்காது கண்ட வினைக்கட் டுளங்காது
தூக்கங் கடிந்து செயல்.

**பரி** — (இ - ள்.) மனந் தெளிந்து செய்வதாகத் துணிந்த வினையின்கண் பின்னசைதலின்றி நீட்டித்தலையொழிந்து செய்க, எ-று.

1 சிறுமை - உருவத்தின் சிறுமை 2 உருள் - சக்கரம்
3 அதன்கடைக்கண் - உருள்கோத்த மரத்தின் கடைசியில (அச்சின்கடையில்)
4 அது - ஆணி 5 அவரை - அவ்வமைச்சரை.
6 அவரை - வினைத்திட்பமுடைய மந்திரிகளை.

கலங்கியவழி ஒழிவதும் செய்வதுபோறல் தோன்றுமாகலின், தெளிந்து பலகாலாராய்ந்து தானே செய்வதாக ஓர்ந்த வினையைக் 'கலங்காது கண்டவினை' என்றார். துளங்காமை - திட்பமுடைமை.

தெளி.—(இ-ள்) கலங்காது - (மனம்) தெளிந்து, கண்ட - (செய்வதாகத்) துணிந்த, வினைக்கண் - தொழிலினிடத்து, துளங்காது - (பின்) அசைதலில்லாமல், தூக்கங்கடிந்து - ஆலசியத்தை ஒழித்து, செயல் - செய்யக்கடவர், எ-று.

கலங்கியவிடத்து ஒழியும் வினையும் செய்வதுபோலத் தோன்றுமாதலால் தெளிந்து பலமுறை யாராய்ந்து தாம் செய்வதாக நிச்சயித்த வினையைக் 'கலங்காது கண்டவினை' என்றார். துளங்காமை - வலியுடைமை

(க-து) மனந்தெளிந்து செய்யத்துணிந்த தொழிலைத் தாமதஞ்செய்யாது செய்யக்கடவர் என்பது (அ)

௯. துன்பம் உறவரினுஞ் செய்க துணிவாற்றி
யின்பம் பயக்கும் வினை

பரி.—(இ-ள்.) முதற்கண் மெய்ம்முயற்சியால் தமக்குத் துன்பம் மிக வருமாயினும், * அதனை நோக்கித் தளராது முடிவின்கண் இன்பம்பயக்கும் வினையைத் திட்பமுடையராய்ச் செய்க, எ-று.

துணிவு - கலங்காமை அஃதுடையாராகலல்லது 1 கணிகமாய 2 முயற்சித்துன்ப நோக்காது நிலையுதலுடைய 3 பரிணாமவின்பத்தை நோக்கிச்செய்தல் கூடாமையின், 'துணிவாற்றிச் செய்க' என்றார். இவையிரண்டுபாட்டானும் 4 அவர் வினை செய்யுமாறு கூறப்பட்டது.

தெளி.—(இ-ள்) (முதலிலே மெய்ம்முயற்சியினாலே தமக்கு) துன்பம் - உறவரினும் - மிகவருமானாலும், (அது கண்டு தளராமல் முடிவிலே) இன்பம் - சுகத்தை, பயக்கும் - தருகின்ற, வினை - தொழிலை, துணிவாற்றி - வலிமையுடையராய், செய்க - செய்யக்கடவர், எ-று.

துணிவு - கலங்காமை அக்கலங்காமை யுடையவாகலல்லது சிறிதுகாலத்திலே நீங்குவதாகிய முயற்சித்துன்பம் நோக்காமல் அம்முயற்சியினாலே உண்டா

* அது - துன்பம்

1 கணிகமாய - கணப்போது இருப்பதான

2 முயற்சித்துன்பம் - பிரயத்தனத்தினாலே வரும் துயர்.

3 பரிணாம இன்பத்தை - தொழில் வேறுபாட்டாலுண்டாகும் இன்பத்தை. [பரிணாமம் - திரிவு]

4 அவர் - வினைத்திட்பமுடைய மந்திரிகள்.

தி கிலைபெறுதலுடைய இனபததை நோக்கிசசெய்தல கூடாமையாலே, துணி வாறறிச செய்க வெனறார். இவை இரணடுபொட்டாலும அவர தொழில செயயு மவிதம சொலலபபட்டது

(க - து) துனபம வரினும் இனபநதரூந தொழிலைசசோர்வின்றிச செயயக்கடவர் எனபது. (௬)

௬௭0. எனைததிட்ப மெயதியக கணணும வினைததிட்பம்
வேணடாரை வேணடா துலகு.

பரி — (இ - ள) வினைததிட்பததை இது நமககுச சிறநததெனறு கொள்ளாத அமைசசரை, ஒழிநததிட்பஙகளெல்லா முடையராயவிடத்தும நனகு மதியார உயாநதோர, எ-று.

மனததினகண திடபமிலலாதாாககுப படை, அரண, நட்பு முதலியவற் றின திடபஙகளெலலாம உளவாயினும வினை முடியாதாம, ஆகவே, அவை யெலலாங கெடும எனபது பறறி, உலகு வேணடாது எனறார். இதனால் வினை ததிடப மிலலாதாரது இழிபு கூறபபட்டது

தெளி —(இ - ள) உலகு - உயாநதோர, வினைததிடபம - தொழில்வலி மையை, வேணடாரை - (இது நமககுச்சிறநததெனறு) கொளளாத மநதிரிக ளை, எனைததிடபம - அது நீஙகலாகிய வலிமைகளெலலாம, எயதியககணணும்- உடையவராகியவிடததும, வேணடாது- நனகுமதியார, எ-று

மனததினிடததிலே வலிமை யிலலாதவாககுப படை, அரண, நட்பு முத லானவைகளின வலிமைகளெலலாம உணடாயினும தொழில் முடியாதாம; முடியாதாகவே, அவவலிமைகளெலலாம கெடுமென்பதுபறறி, உலகுவேணடா து எனறார். இதனால தொழிலவலிமை யிலலாதவரது இழிவுசொல்லபபட் டது.

(க - து) தொழில் வலிமையை விரும்பாத மந்திரிகளை உயர்ந் தோர் மதியா ரென்பது. (௰)

## ௬அ - ம் அதி — வினை 1 செயல்வகை.

பரி — அஃதாவது 2 அததிடபமுடைய வமைசசன 3 அவவினையைச் செயயுநதிறம் அதிகார முறைமையும இதனனே விளஙகும.

---

1 செயல எனனும தொழிறபெயா இஙகே பெயரெசசபபொருளில பொருள செயலவகை யெனபதிலுளள செயல என்பதறகு பொருள்

2 அததிடபம - வினைசெயதறகண மனவுறுதி

3 அவவினையை - தருமததையும கீரததியையுங கொடுததுச சிறநததாகுந தொ[illegible]

தேளி—அஃதாவது அவலியைமயுடைய மந்திரியானவன அத்தொழிலைச் செயபுந்திறமாம. அதிகார முறைமையும இதனுலே விளஙகும்

க சூழ்ச்சி முடிவு துணிவெயத லததுணிவு
தாழ்ச்சியுட் டங்குத தீது.

பரி—(இ-ள்) விசாரததிற கெலலையாவது விசாரிக்கின்றன் இனி 1 இது தபபாதென்னும் *2 துணிவினைப பெறுதல், அஙஙனம துணிவுபெற்ற வினை பின 3 நீட்டிப்பினகட டஙகுமாயின, 4 அது குறறமுடைத்து, எ-று

'சூழ்ச்சிமுடிவு துணிவெய்தல்' எனவே, துணிவெய்து மளவுஞ் சூழவேணடுமெனபது பெற்றாம். பின்னைத துணிவு ஆகுபெயா. நீட்டிப்பு செயயும் காலத்துச செய்யாமை. அஃதுள்வழிக காலககழிவாகலானும, பகைவா அறிநதழிக்தலானும ¶ முடியாமையின 5 அதனைத 'தீது' என்றார்.

தேளி—(இ-ள்) சூழ்ச்சி - ஆலோசனைக்கு, முடிவு - எல்லையாவது, துணிவெய்தல் - (ஆலோசிபபவன் இனி இது தபபாதென்னும) துணிவைப பெறுதல, அத்துணிவு - அபபடி துணிவுபெறறதொழில, தாழ்ச்சியுள் - (பின) ஆலசியத்தில், தஙகுதல் - தஙகுமானுல, தீது - (அது) குறறமுடையதாம, எ-று.

'சூழ்ச்சிமுடிவு துணிவெய்தல்' என்றதனுல், துணிவுபெறும வரைக்கும் ஆலோசிககவேணடுமென்பது பெறபபட்டது. பின வநத துணிவு - அதுபெற்ற தொழிலுககு ஆகலால் தொழிலாகுபெயர் ஆலசியம - செய்யலாமென்று நிசசயிககபபட்ட தொழிலைச்செய்யவேண்டுங் காலததில செய்யாது சோாநதிருத்தல. அவ்வாலசிய முணடானவிடத்தே காலககழிவாகலானும், பகைவர் அறிநதழிக்தலானும் முடியாமையால் அதனைத 'தீது' என்றா

(க-து) ஆலோசிததது இனியிது தப்பாதெனறு நிசசயிததசொழிலை விரைநது செயயாதிருததல தீமையைத தரும எனபது. (க)

உ. தூங்குக தூங்கிச செயறபால தூங்கற்க
தூஙகாது செய்யும் வினை.

1 இது தபபாது - இககாரியம தவருது
2 துணிவினை - நிசசயத்தை. துணிவு - புடைபெயாசசியாகிய வுவவிகுதி பெற்ற தொழிற்பெயா.
3 நீட்டிப்பின்கண் - காலதாமதததில
4 அது - துணிவுபெறறவினை நீட்டிப்பினகண்தஙகுதல
¶ முடியாமையின் - துணிவுபெறறவினை முடியாததினுல.
5 அதனை - தாழ்ச்சியுட்டஙகுதலை

பரி —(இ-ள்) நீட்டித்துச்செய்யும் § பகுதியவாய வினைகளுள் நீட்டிக்க, நீட்டியாது செய்யும் வினைகளுள் நீட்டியாதொழிக, எ-று

1 இருவழியும் இறுதிக்கட்டொக்க ஏழாவது விரிக்கப்பட்டது. 2 இருவகைவினைகளும் வலியானும் காலத்தானும் அறியப்படும், 3 மாறிச்செய்யின், அவை வாயாவென்பது கருத்து 4 மேல் 'தூங்காமை' என்றார், ஈண்டதனைப் பகுத்துக் கூறினார் இவை இரண்டுபாட்டானும் பொதுவகையால் வினைசெய்யுந் திறங் கூறப்பட்டது

தேள் —(இ-ள்) தூங்கி - ஆலசியித்து, செயற்பால - செய்யும்பகுதியையுடைய தொழில்களுள், தூங்குக - ஆலசியம்பண்ணக்கடவன, தூங்காது - ஆலசியம் பண்ணாமல், செய்யும்வினை - செய்யுந்தொழில்களுள், தூங்கற்க - ஆலசியம் பண்ணாதிருக்கக்கடவன, எ-று.

செயற்பால என்பதனீற்றிலும் வினையென்பதனீற்றிலும் தொக்குநின்ற ஏழனுருபு விரித்துரைக்கப்பட்டது இருவகைத்தொழில்களும் வலியாலும் காலத்தாலும் அறியப்படும், மாறிச்செய்தால், அவ்விருவகைத்தொழிலும் பலியாமற் போமென்பது கருத்து முன்னே 'தூங்காமை' என்றார், இங்கே அத்தூங்காமையைப் பகுத்துச்சொன்னார். இவை இரண்டுபாட்டாலும் பொதுவகையால் தொழில்செய்யுந்திறம் சொல்லப்பட்டது

(க-து) விரைந்து செய்யவேண்டிய தொழிலை விரைந்தும் தாமதித்துச் செய்யவேண்டியதொழிலைத் தாமதித்தும் செய்தல் வேண்டும் என்பது (உ)

௩. ஒல்லும்வா யெல்லாம் வினைநன்றே யொல்லாக்கால்
செல்லும்வாய் நோக்கிச் செயல்.

---

§ பகுதியவாய - பகுப்பினை யுடையதான

1 இருவழியும் - இரண்டிடத்திலும்

2 இருவகை வினைகளும் - தாமதித்துச்செய்யும் பகுப்பினையுடையதான தொழில்களும், தாமதம் செய்யாது செய்யும் தொழில்களும்.

3 மாறிச்செய்யின் - இருவகை வினைகளையும் மாறிச்செய்தால் அஃதாவது ஆலசியத்திற் செய்யுந்தொழிலை விரைந்தும் விரைந்துசெய்யவேண்டிய தொழிலை ஆலசியத்தும் செய்தால் அத்தொழில்கள் நிறைவேறா என்பது

4 இறைமாட்சி யதிகாரம் மூன்றாவது குறளில் "தூங்காமை கல்வி துணிவுடைமை யிம்மூன்றும், நீங்கா நிலனாள் பவற்கு" என்று கூறப்பட்டிருக்கிறது தூங்காமை யென்பதற்குக் காரியங்களில் விரைவுடைமையும் என்பது பொருள்

**பரி** —(இ - ள்) வினைசெய்யுங்கால் இயலுமிடத்தெல்லாம் போராற் செய்தல் நன்று, 1 அஃதியலாவிடத்து 2 ஏனைமூன்றுபாயத்துள்ளும் அது முடிவதோருபாயநோக்கிச் செய்க, எ-று.

இயலுமிடம் - பகையிற் றான்வலியனாயகாலம். அக்காலத்துத்தண்டமே நன்று என்றார்; அஞ்சுவது அதற்கேயாகலின். இயலாவிடம் - ஒத்தகாலமும் மெலியகாலமும். அவ்விரண்டுகாலத்தும் சாம பேத தானங்களுள் அது முடியு முபாயத்தாற் செய்கவென்றார், அவை ஒன்றற்கொன்று வேறுபாடுடைய வேனும் உட்படுத்தற் பயத்தான் ஒருமைப்பாலாகுமாகலின். இதனான் வலியா ன், ஒப்பான், மெலியானென்ன நிலை மூவகைத் தென்பதூஉம், அவற்றுள் வலி யதுசிறப்பும் கூறப்பட்டன.

**தெளி** —(இ - ள்.) (தொழில்செய்யும்போது) ஒல்லும்வாயெல்லாம் - கூடியவிடத்தெல்லாம், வினை - தண்டஞ்செய்தல், நன்று - நல்லதாகும், ஒல்லா க்கால் - (அது) கூடாதவிடத்து, (மற்றை மூன்று உபாயங்களிலே) செல்லும் வாய் நோக்கி - (அது) முடிவதோருபாயம் நோக்கி, செயல் - செய்யக்கடவ ன், எ-று.

கூடுமிடம் - பகைவனிலும் தான் வலியவனாகிய காலம். பகைவனிலும் தான் வலியவனாகிய காலத்தில் தண்டமே நன்று என்று கூறினர், பகைவா ட்பட்டுவது அத்தண்டத்திற்கேயாதலால். கூடாதவிடம் - பகைவன்வலிமைக் குத் தான் ஒத்துள்ள காலமும் இளைத்துள்ளகாலமுமாம், அவ்வொத்தகால த்தும் இளைத்தகாலத்தும் சாம பேத தானமென்னும் உபாயங்களிலே அத் தொழில் முடியும் உபாயத்தாற் செய்க என்று கூறினார், அச்சாம முத லியவை ஒன்றற்கொன்று வேற்றுமை யுடையனவா யிருப்பினும் சமாதிக்கச் செய்யும் பிரயோசனத்தால் தம்முள்ளே ஒத்திருத்தலால். இதனால் வலிமை யான், ஒப்பான், மெலியானென்று நிலை மூவகைப்படுமென்பதும், அவைகளுள் வலிமையினது சிறப்பும் சொல்லப்பட்டன.

(க - து) இயலுமிடத்தெல்லாம் தண்டத்தினாலும் அது முடி யாவிடத்து மற்றைய வுபாயங்களுள் யாதொன்றாலாகிலும் மேற்கொ ண்ட காரியத்தை முடித்தல்வேண்டுமென்பது. (௩)

௪. வினைபகை யென்றிரண்டி னெச்ச நினையுங்காற்
தீயெச்சம் போலத் தெறும்

---

1 அஃதியலாவிடத்து - போரால் (தண்டத்தால்) செய்தல் முடியாதகாலத்தில்

2 ஏனைமூன்றுபாயம் - தண்டம் ஒழிந்த சாமபேததானம் ‘ எண்ணித்துணிக'' என்னுங்குறளின் விசேடவுரையில் "அது (உபாயம்) கொடுத்தல் (தானம்) சாற்சொல்லல் (சாமம்), வேறுபடுத்தல் (பேதம்), ஒறுத்தல் (தண்டம்) என நால்வகைப்படும்'' என்று கூறியிருத்தல் விங்கறியத்தக்க தாம்.

**பரி**—(இ - ள்) செய்யத்தொடங்கிய வினையும் களையத்தொடங்கிய பகையுமென்று சொல்லப்பட்ட இரண்டனதொழிவும் ஆராயுங்கால் தீயினதொழிவுபோல் பின் வளர்ந்து கெடுக்கும், எ-று

இனி [1] இக்குறை என்செய்வ தென்று இகழ்ந்தொழியற்க, முடியச்செய்க வென்பதாம் பின் வளர்த லொப்புமைபற்றிப் [2] பகையெச்சமும் உடன் கூ, இதனான் வலியான் செய்யுந்திறங் கூறப்பட்டது

**தெளி**—(இ - ள்) வினை - (செய்யத்தொடங்கிய) தொழிலும், பகை - (அழிக்கத்தொடங்கிய) பகையும், என்றிரண்டின - என்று சொல்லப்பட்ட இரண்டினது, எச்சம் - குறையும், நினையுங்கால் - ஆராயுமிடத்து, தீயெச்சம்போல - தீயினது குறைபோல, தெறும் - (பின்வளர்ந்து) கெடுக்கும், எ - று

இனி இக்குறை என்ன செய்யுமென்று இகழ்ந்துவிடவேண்டாம், அதனை முடிவுபெறச் செய்கவென்பதாம் பின்வளர்தல் ஒப்புமைபற்றிப் பகையெச்சமும் வினையெச்சத்துடன் சொல்லினார் இதனால் வலியவன் செய்யுந்திறம் சொல்லப்பட்டது

(க - து.) வினைக்குறையும் பகைக்குறையும் தீயினது குறைபின் கெடுப்பதுபோல் தம்மையுடையவரைக் கெடுக்கும் என்பது (௪)

௫. பொருள்கருவி காலம் வினையிடனொ டைந்து
மிருடீர வெண்ணிச் செயல்

**பரி**—(இ - ள்) வினை செய்யு மிடத்துப் பொருளுங் கருவியுங் காலமும் வினையும் இடனுமாகிய இவ்வைந்தனையும் மயக்கமற வெண்ணிச் செய்க, எ - று

[3] எண்ணொடு பிறவழியுங் கூட்டப்பட்டது பொருள் - அழியும் பொருளும் ஆகும் பொருளும் கருவி - தன்றானையும் மாற்றாதானையும் காலம் - தனக்கா ங்காலமும் அவர்க்காங்காலமும் வினை - தான் [4] வல்லவினையும் அவர் வல்ல

[1] பகை, கடன், தீ, நோய் முதலியவைகளைப் பற்றறவொழிக்காமல் விட்டுவிட்டால் அவை பின்பு இராவணன் தலைபோல வளர்ந்து தம்மையுடையவனை யழித்தலபற்றி "இனி இக்குறை என்செய்வதென்று இகழ்ந்தொழியற்க, முடியச் செய்கவென்பதாம்" என்று கூறப்பட்டது.

[2] பகையெச்சமும் - பகையினது குறையும்

[3] "என்று மெனவு மொடுவுந் தோன்றி, யொன்றும் வழியுடைய வெண்ணி னுட்பிரிந்தே" என்னுந் தொல்காப்பியச் சூத்திர மிங்கறியத்தக்கது.

[4] வல்ல - வெல்லுதலில் வல்ல,

வினையும் இடமும் - தான் வெல்லுமிடமும் அவர் வெல்லுமிடமும் 1 இவற்றைத் தான் வெற்றி யெய்துந் திறத்திற் பிழையாமலெண்ணிச் செய்கவென்பதாம்.

**தெளி.**—(இ-ள்) (தொழில் செய்யுமிடத்து) பொருள் - பொருளும், கருவி - சாதனமும், காலம் - காலமும், வினை - தொழிலும், இடன் - இடமும், (ஆகிய) ஐந்தும் - இவ்வைந்தினையும், இருள்தீர - மயக்கமற, எண்ணி - ஆலோசித்து, செயல் - செய்யக்கடவன், எ-று.

எண்ணும் பொருளில் வந்த ஒடு என்னும் இடைச்சொல்லைப் பொருள் முதலியவைகளோடுங் கூட்டிப் பொருளொடு கருவியொடு காலமொடு வினையொடு இடனொடு என்று கொள்க. பொருள் - அழியும் பொருளும் ஆகும்பொருளும், கருவி - தன் சேனையும் பகைவர் சேனையும், காலம் - தனக்கு ஆங்காலமும் பகைவர்க்கு ஆங்காலமும், வினை - தான் வல்ல தொழிலும் பகைவர் வல்ல தொழிலும், இடன் - தான் வெல்லும் இடமும் பகைவர் வெல்லும் இடமும் இவைகளைத் தான் வெற்றிபெறுந் திறத்தில் தப்பாமல் எண்ணிச்செய்கவென்பதாம்.

(க-து) மேற்கொண்ட தொழிலைப் பொருள் கருவி முதலானவைகளை மயக்கமற ஆலோசித்துச் செய்தல்வேண்டுமென்பது. (ரு)

௬. முடிவு மிடையூறு முற்றியாங் கெய்தும்
படுபயனும் பார்த்துச் செயல்

**பரி.**—(இ-ள்) வினைசெய்யுங்கால் 2 அது முடிதற்குள்ளதாம் முயற்சியும் 3 அதற்குவரும் இடையூறும் 4 அது நீங்கி 5 முடிந்தால் தான் எய்தும் பெரும்பயனும் 6 சீர்தூக்கிச் செய்க, எ-று.

முடிவு - ஆகுபெயர். முயற்சி இடையூறுகளதளவிற் 7 பயன்தளவு பெரிதாயிற் செய்க வென்றதாம்.

**தெளி.**—(இ-ள்) (தொழில் செய்யுமிடத்து) முடிவும் - (அது) முடிதற்கு உள்ளதாகிய முயற்சியையும், இடையூறும் - (அதற்குவரும்) இடையூற்றையும், முற்றியாங்கு - (அவ்விடையூறு நீங்கி) முடிந்தால், எய்தும் - (தான்) அடையும், படுபயனும் - பெரும்பயனையும், பார்த்து - சீர்தூக்கி, செயல் - செய்யக்கடவன், எ-று

---

1 இவற்றை - பொருள் முதலியவைகளை

2 அது - வினை, 3 அதற்கு - அவ்வினைக்கு 4 அது - (தடை)

5 முடிந்தால் - வினை முடிந்தால். 6 சீர்தூக்கி - பலவழியாலும் ஆராய்ந்து.

7 பயன்தளவு - வினைசெய்தலாலுண்டாகும் பிரயோசனத்தின் அளவு.

முடிவு என்னும் காரியப்பெயர் அதனது காரணமான முயற்சிக்கு ஆகுதலால் காரியவாகுபெயர் முயற்சியளவிற்கும் இடையூறளவிற்கும் பயனளவு பெரிதாயிருந்தால் அத்தொழிலைச் செய்கவென்பதாம்

(க - து.) முயற்சி இடையூறு பயன் என்னு மூன்றனையு மாலோசித்துத் தொழிலைச் செய்தல்வேண்டும் எனபது. (௬)

௭. செய்வினை செய்வான் செயன்முறை யவ்வினை
யுள்ளறிவா னுள்ளங் கொளல்,

பரி —(இ - ள) அவ்வாற்றாற் செய்யப்படும் வினையைத் தொடங்கினன் செய்யு முறைமையாவது [1] அதன துள்பபாட்டினை யறிவான் கருத்தினைத்தானறிதல், எ - று.

அவ்வாறென்றது [2] பொருள் முதலிய வெண்ணலையும் முடிவுமுதலிய தூக்கலையும் உள்ளறிவான - முன்செய்து போந்தவன் அவன் கருத்து - அவன் செய்து போந்த உபாயம். [3] அதனை யறியவே, தானும் அதனாற்செய்து பயனெய்துமெனபதாம் இவை மூன்று பாட்டானும் ஒப்பான செய்யுந் திறங் கூறப்பட்டது

தெளி —(இ - ள) செய்வினை - (அவ்வழியினாலே) செய்யப்படுந்தொழிலை, செய்வான் - செய்யத்தொடங்கினவன், செயன்முறை - செய்யுமுறைமையாவது, அவ்வினை - அத்தொழிலினது, உள - உள்பபாட்டை, அறிவான - அறிபவனது, உள்ளம் - கருத்தினை, கொளல் - (தான) அறிதல், எ - று

அவ்வாறென்றது பொருள் முதலானவைகளை எண்ணலையும் முடிவு முதலானவைகளை ஆராய்தலையும், உள்ளறிவான் - முன் செய்துகைவந்தவன் அவன்கருத்து - அவன் செய்துவந்த உபாயம் அதனை அறியவே, தானும் அவ்வுபாயத்தினாலே செய்து பயனை அடைவானெனபதாம், இவை மூன்று பாட்டாலும் ஒப்பவன செய்யுந்திறம் சொல்லப்பட்டது.

(க - து ) தொழிலைச் செய்யுமிடத்து முன்செய்துவந்தவரது கருத்தினையொட்டிச் செய்தல்வேண்டும் எனபது. (௭)

அ· வினையான் வினையாக்கிக் கோட லனைகவுள்
யானையால் யானையாத் தற்று.

---

[1] அதனது உள்பபாட்டினை - அவ்வாற்றாற் செய்யப்படும் வினையினது யதார

[2] பொருள் முதலியவற்றை யாலோசித்தறிதலை யிவ்வதிகாரத்தின் ௫ - வது குறளினும், முடிவுமுதலியவற்றை யாராய்தலை ௬ - வது குறளினும் காணக

[3] அதனை - அவ்வுபாயத்தை.

[illegible]து செய்யப்படுமென்றவாறு. வினைசெய்யுந்திறமாகலிற் பகைவரோ டொட்டாராயிற்று தன்னொடொட்டார் பிறரொடு கூடாமல் 1 மாற்றி வைத்தலென்று வகைப்பும்.

தெளி—(இ-ள்) (தொழில்செய்பவன்) நட்டார்க்கு - (தனது) நட்பினருக்கு, நல்லசெயலின் - நல்லவைகளைச் செய்தலினும், ஒட்டாரை (தனது பகைவருடன் பகைத்துள்ள) பொருந்தாதிருப்பவரை, ஒட்டிக்கொளல் - (தனக்கு) நட்பாக்கிக்கொள்ளுதல், விரைந்ததே - விரைந்துசெய்யத்தக்கதாம், எ-று.

அத்தொழில் பலித்தலைப் பிரயோஜனமாக வுடையவான இவ்விரண்டு காரியங்களும் பகைவர்களுக்குத் தன்னுடைய சோர்வு வெளிப்படுவதற்குமுன்பே செய்க என்பார் 'விரைந்தது' என்று கூறினார். விரைந்தது - விரைந்துசெய்யப்படுவது என்றபடி. இவ்வதிகாரம் பகைவருடன் போர் முதலியவற்றைச் செய்யும் வகையைக் கூறுவதாகலால் பகைவருடன் கூடாராயிற்று 'ஒட்டாரை யொட்டிக்கொளல்' என்பதற்குத் தன்னுடைய பகைவரை மற்றொருபகைவருடன் கூடாதபடி வேறுபடுத்திவைத்தல் என்று பொருள் கூறினும் ஒக்கும்.

(க-து) தொழில் செய்பவன் தன் பகைவரது பகைவரைச் சிநேகித்துக்கொள்ளுதல் தன் சிநேகருக்கு நல்லவை செய்தலினும் நன்றும் என்பது. (௯)

௧0 உறைசிறியா ருண்ணடுங்க லஞ்சிக் குறைபெறிற்
கொள்வர் பெரியார்ப் பணிந்து.

பரி—(இ-ள்) ஆளும் இடமும் சிறியராய அமைச்சர் தம்மின் வலியார் எதிர்ந்தவழித் தம்பகுதி நடுங்கலையஞ்சி, அந்நிலைக்கு வேண்டுவதாய சந்து கூடுமாயின், அவரைத் தாழ்ந்து அதனை யேற்றுக்கொள்வர், எ-று.

இடம்-நாடும் அரணும். 2 அவற்றது சிறுமை ஆள்வார்மேலேற்றப்பட்டது. மெலியாரோடு 3 சந்திக்கு வலியார் 4 இயைதலரிதாகலின் 'பெறின்' என்றார். 5 அடியிலே மெலியராயினார் 6 தம்பகுதியுமஞ்சி நீங்கின் 7 முதலொடுங் கெடுவாராகலின், 8 அது வாராமல் 9 சிறிது கொடுத்துஞ் சந்தினை யேற்றுக

1 மாற்றிவைத்தல் - வேறுபடுத்தல் (பேதம்) என்னும் உபாயம்.

2 நாடு அரண்களின் சிறுமையை அவற்றை யாளுகின்றவர்களின்மேலேற்றி 'உறை சிறியார்' என்று கூறப்பட்டது. இஃது இடத்தினது சிறுமை இடத்தை யுடையவர் மேலான வுபசாரவழக்கு.

3 சந்திக்கு - சமாதானத்திற்கு. 4 இயைதல் - பொருந்துதல்.

5 அடியிலே - போர் ஆரம்பித்த காலத்திலேயே.

6 தம்பகுதியும் - தமது சேனை முதலிய அங்கங்களும்.

7 முதலொடும் - அடியோடும். 8 அது - முதலொடுங் கெடுதல்.

9 சிறிதுகொடுத்தல் - தானமென்னும் உபாயம்.

கொள்க வேண்டாம் பணிதல் மானமுடையார்க்குக் கருத்தன்மையின் 'கொள்வர்' என உலகியலாற் கூறினார். இவை மூன்றுபாட்டானும் மெலியான் செய்யுந்திறங் கூறப்பட்டது

தெளி—(இ-ள்) உறைசிறியார் - ஆளுமிடஞ்சிறியராகிய மந்திரிகள், (தம்மினமிகுந்த வலியவர் எதிர்ந்துவிட்டதே) உள்-(தமது) அங்கங்கள், நடுங்கல்- நடுங்குதலுக்கு, அஞ்சி-பயந்து, குறைபெறின்-(அந்நிலைக்கு வேண்டுவதாகிய) சந்திகூடுமாயின், பெரியார்-தம்பெரியவரை, பணிந்து - தாழ்ந்து, கொள்வர்-(அதனை ஏற்றுக்) கொள்ளுவர், எ-று.

இப்பாட்டால் அரண் அவைகளின் சிறுமை அவைகளையாளுகின்றவர் மேல் ஏற்றப்பட்டது மெலியோரோடு சந்திகள் வலியாரிசைதல் அரிதாகலால 'பெறின்' என்றார். அந்நிலை மெலியராயினார் தம்மங்கங்களும் அருகி நீங்கினால் முற்கேடும் கெடுமாகலின், அது வாராமற் சிறிது கொடுத்தும் சந்தியை ஏற்றுக்கொள்கவென்பதாம். பணிதல் மானிகளுக்குக்கருத்தல்லாமையால் 'கொள்வர்' என உலகியலாற் சொல்லினர் இவை மூன்றுபாட்டாலும் மெலியவன் செய்யுந்திறஞ் சொல்லப்பட்டது

(க-து) ஆளுமிடஞ் சிறியாராகிய மந்திரிகள் தம்மினும் வலியார் தம்மை யெதிர்த்துவிட்டது அவரைப் பணிந்துகொள்வர் என்பது.

## ௬௯-ம் அதி.—தூது.

பரி—அஃதாவது 1 சந்தி விக்கிரகங்கட்கு 2 வேற்றுவேந்தரிடைச் செல்வாரது தன்மை. 3 அவ்விரண்டனையும் மேல் வினைசெயல்வகை என்றமையின், 4 இஃததன்பின் வைக்கப்பட்டது 5 தான்வகுத்துக் கூறுவான் 6 கூறிய

1 அமைச்சு அதிகாரம் மூன்றாவது குறளின் விசேடவுரையில் "வடநூலார் இவற்றுட் பொருந்துவிக்க சந்தி யென்றும் பிரித்தலை விக்கிரகமென்றும் கூறுப" என்று கூறப்பட்டிருத்தல் இங்கறியத்தக்கது
2 வேற்று வேந்தர் - தம்மரசனோடு வேறுபட்ட அரசர்
3 அவ்விரண்டனையும் - சந்திவிக்கிரகங்களையும்
4 இஃததன்பின்வைக்கப்பட்டது-தூது என்னும் இவ்வதிகாரம் வினைசெயல் வகையென்னும் அதிகாரத்தின்பின்னே வைக்கப்பட்டது
[illegible] தூதன்.
"ஆதிரா மைச்சர்க் கோது மாண்டெலா மமைந்து நின்றான், தூதனுச் சொல்லிற் சொல்லாச் சூழ் பொருளில்லை" என்று சூளாமணி கூறுவது மிங்கறியத்தக்கதாம்
6 கூறியது கூறுவான் - கிளிப்பிள்ளையைப்போன்று அரசன் தன்னிடத்துக் கூறியவற்றை மாத்திரம் வேற்றுவேந்தரிடத்துக் கூறும் தூதன்

று கூறுவானெனத் தூது இருவகைபபடும அவருள் 1 முன்னோன அமைசச ரோ டொபபானாகலானும 2 பினனோன 3 அவனிற காறகூறு குணம குறைந தோ னாகலானும 4 இஃதமைசசிய லாயிறறு

தெளி.—அஃதாவது பொருததல பிரிததலகளுககு வேறறரசரிடததே செலவாரது தனமை அவவிரணடினையும முன வினைசெயலவகை எனறமை யால, இஃது அதனபின வைககபபடடது தானகுததுசசொலலுவோன சொ லலியது சொலலுவோன எனததூது இருவகைபபடும, அவருள முனனோன மநதிரியோடு சமானனுவானுகலாலும பினனோன அவனிலுங காறபஙகுகுண ங குறைநதோனாகலாலும இஃது அமைசசியலாயிறறு.

௧. அனபுடைமை யானற குடிபபிறததல வேநதவாம
பணபுடைமை தூதுரைபபான பணபு

பரி.—(இ - ள) தனசுறறததாரமாடடு அனபுடையனுதலும அமைசசுப் பூணறகமைநத குடியினகட பிறததலும அரசாசாதி விருமபும பண்புடைய னுதலும தூதுவாாததை சொலலுவானுக கிலககணம, எ - று.

5 முனனையவிரணடனுலும, முறையே சுறறததாாககுத் தீஙகுவாராமற் றுன பேணியொழுகலும, 6 தனமுனனோா தூதியல கேடடறிதலும பெறறு ம * வேநதவாம 7 பண புடைமை முனனா மனனரைச சேரநதொழுகற

1 முனனோன - தானவகுததுககூறுவோன
2 பினனோன - கூறியது கூறுவோன,
3 அவனில - தானவகுததுக கூறுவானிலும 4 இஃது - தூது.
5 முனனைய விரணடினுலும - அனபுடைமை ஆனற குடிபபிறததல எனறு முனனுள்ள இரணடினுலும
6 தன முனனோா தூதியல கேடடறிதலும - தனது தகப்பன பாடடன முதலோா தூதராயொழுகிய தனமையைக கேடடுளளததமைததலும.
* மனுதாமசாஸதிரமஏழாமததியாயத்தில "சகலசாஸதிரமறிநதவனுயும, சொறகுறி கணசிமிடடுதல முதலிய சாடை சிடடிகைபோடுதல முதலிய செயகை இவைகளைககணடுபிடிககிறவனுயும், பொருளாசையிலலாதவனுயும, சமாததனுயும, நலலகுலததிற பிறநதவனுயும இருககிற ஒருதூதனை அரசன தனனிடததில வைததுககொளளவேணடியது"
"அநததூதன சகலரிடததுமஅன்புளளவனுயும, சமாததனுயும, பொருளாசையிலலாதவனுயும், ஞியாபக முளளவனுயும, தேசகாலஙகளையறிநதவனுயும, தேகபுஷடியுளளவனுயும, பயமிலலாதவனுயும, சமஸகிருத முதலிய பாஷை பேசுகிறவனுயும இருநதால அரசனுககுப பெருமையையுணடு பணணுவான" எனறு கூறுவது மிஙகறியததககது
7 பணபுடைமையாவது பெருமை சான்றாணமைகளில தாம வழுவாமல நினறே எலலாரியலபுகளுமறிநது அதறகொதது நடததலாம "பணபெனப் படுவது பாடறிநதொழுகல" எனறு கலிததொகை கூறுகின்றது.

சொல்லுதல் வன்மையும், (என) தூதுரைப்பாற்கு - தூதுசொல்ல உரியவர்க்கு, இன்றியமையாத - அவசியமாக வேண்டிய குணங்கள், மூன்று - மூன்றும், எ-று

ஆராய்தல் - அவைகளுக்குச் சம்பந்திக்கும் சொற்களைத் தெரிதல் அவசியமாக வேண்டியகுணங்களை மூன்றென்றவே, மந்திரிகளுக்குச் சொல்லியமற்றைக் குணங்களும் வேண்டுமென்பது பெறப்பட்டது இவை இரண்டுபாட்டாலும் இருவகைத் தூதர்க்கும் பொதுவிலக்கணம் சொல்லப்பட்டது

(க-து) அன்பு, அறிவு, சொல்வன்மை யென்னு மிம்மூன்றும் தூது சொல்லுவோரது முக்கிய குணங்களாம் என்பது (௨)

௩. நூலாருள் நூல்வல்ல னாகுதல் வேலாருள்
வென்றி வினையுரைப்பான் பண்பு

பரி —(இ-ள்) வேலையுடைய வேற்றரசரிடைச்சென்று தன்னரசனுக்கு வென்றிதரும் வினையைச் சொல்லுவானுக்கு இலக்கணமாவது நீதிநூலையுணர்ந்த அமைச்சரிடைத் தான் அந்நூலை வல்லனாதல், எ-று

கோறன் மாலையரென்பது தோன்ற 1 'வேலார்' என்றும், தூதுவினை யிரண்டடங்க 'வென்றிவினை' என்றுங் கூறினார் வல்லனாதல் - உணர்வு மாத்திர முடையராய 2 அவர் முன் வகுக்குமாற்ற லுடையனாதல்

தெளி —(இ-ள்) வேலாருள் - வேலினையுடைய வேற்றரசரிடத்து, (சென்று) வென்றி - (தன்னரசனுக்கு) வெற்றியைத்தருகின்ற, வினையுரைப்பான் - தொழிலைச் சொல்வோனுக்கு, பண்பு - இலக்கணமாவது, நூலாருள் - நீதிநூலை அறிந்த மந்திரிகளிடத்து, நூல்வல்லனாதல் - (தான்) அந்நூலில் வல்லவனாகுதல், எ-று

கொல்லுந்தன்மைய ரென்பது தோன்ற 'வேலார்' என்றும், தூதுதொழிலென்று மிரண்டடங்க 'வென்றிவினை' என்றுஞ் சொல்லினார். வல்லவனாகுதல் - அறிதல் மாத்திர முடையாராகிய அவர்முன் வகுக்கும் வல்லமை யுடையவனாகுதல்

(க-து) நீதிநூலுணர்ந்த மந்திரிகளிடத்துந் தான் நீதிநூலில் வல்லவனாயிருத்தல் தூதனுக்கு இலக்கணமாம் என்பது (௩)

௪. அறிவுரு வாராய்ந்த கல்வியிம் மூன்றன்
செறிவுடையான் செல்க வினைக்கு

---

1 தலைமைபற்றி வேற்படையுடையார் என்று கூறப்பட்டது இது (வேல்) மற்றைப்படைகளுக்கு உபலட்சணம்

2 அவர்முன் - நீதிநூலையுணர்ந்த மந்திரிகளுக்கு முன்பு

**பரி.**—(இ - ள்.) இயற்கையாகிய வறிவும் கண்டார் விரும்புந் [1] தோற்றப்பொலிவும் பலரோடும் பலகாலு மாராயப்பட்ட கலவியுமென [2] நன்கு மதித்தற்கேதுவாய இம்மூன்றனது கூட்டத்தை யுடையான் வேற்று வேந்தரிடைத் தூதுவினைக்குச் செல்க, எ-று.

[3] இம்மூன்றும் ஒருவன்பாற் கூடுதலரிதாகலின் 'செறிவுடையான்' என்றார். [4] இவற்றான் நன்கு மதிப்புடையனாகவே, வினை இனிது முடியுமென்பது கருத்து.

**தெளி.**—(இ - ள்) அறிவு - (இயற்கையாகிய) அறிவும், உருவு - (கண்டோரிச்சிக்கும்) தோற்றப்பொலிவும், ஆராய்ந்த கலவி - (பலரோடும் பலகாலும்) ஆராயப்பட்ட கலவியும், (என) இம்மூன்றின் - (நன்கு மதித்தற்கு ஏதுவாகிய) இம்மூன்றினது, செறிவுடையான் - கூட்டத்தையுடையவன், வினைக்கு - (வேற்றரசரிடத்துத் தூதாந்) தொழிலுக்கு, செல்க - செல்லக்கடவன், எ-று.

இம்மூன்றும் ஒருவனிடத்துக் கூடுதல் அரிதாகலால் 'செறிவுடையான்' என்றார். இவைகளாலே நன்கு மதிப்புடையவனாகவே, மேற்கொண்ட தொழில் இனிது முடியுமென்பது கருத்து.

(க - து) அறிவும் உருவும் ஆராய்ந்த கலவியுமுடையவன் தூது போதற்றொழிலுக் குரியவனாவன் என்பது. (௪)

௫. தொகச்சொல்லித் தூவாத நீக்கி நகச்சொல்லி
நன்றி பயப்பதாந் தூது.

**பரி.**—(இ - ள்.) வேற்றரசர்க்குப் பலகாரியங்களைச் சொல்லும்வழிக் காரணவகையாற் சுருக்கிச் சொல்லியும் இன்னாதகாரியங்களைச் சொல்லும் வழி [5] வெய்யசொற்களை நீக்கி இனிய சொற்களான் மனமகிழச் சொல்லியும் தன்னரசனுக்கு நன்மையைப் பயப்பவனே தூதனாவான், எ-று.

பலகாரியங்கட்கு மடங்காதார் [6] பரம்பரையான் [7] அவற்றிற்குக் காரணமாய தொன்றைச்சொல்ல அதனால் [8] அவை வினையுமாறுயத்துணர வருமையான் [9] சுருக்கத்தானு முடம்படுவா, இன்னாதவற்றிற் குடம்படாகா [illegible]

---

[1] [illegible] - வடிவத்தின் விளக்கம்
[2] நன்குமதித்தற் கேதுவாய - மிகவும் கௌரவித்தற்குக் காரணமான.
[3] இம்மூன்றும் - அறிவு, உருவு, ஆராய்ந்த கலவியெனனும் இந்த மூன்றும்
[4] இவற்றான் - அறிவுமுதலியவற்றால்
[5] வெய்யசொற்கள் - கேட்பதற்குப் பிரியமாகாத சொற்கள்.
[6] பரம்பரை - பின்னாதொடர்ந்திருப்பது
[7] அவற்றிற்கு - பலகாரியங்களுக்கு  [8] அவை - பலகாரியங்கள்
[9] சுருக்கத்தானுமுடம்படுவா - சொல்லுதல் சுருக்கமாயிருத்தலாலும் சம்மதிப்பார்.

மகிழச்சொல்லல் அவ்வினன்மை காணாது உடம்படுவாராதலின், 1 அவ்விருவாற்றானும் தன்காரியந் தவறாமல் முடிக்கவல்லானென்பதாம். எண்ணும்மைகள் விகாரத்தாற் றொக்கன.

தெளி — (இ-ள்) (வேற்றரசர்க்குப் பலகாரியங்களைச்சொல்லுமிடத்து) தொகச்சொல்லி - (காரணவகையால்) தொகுத்துச் சொல்லியும், (இனிமையில்லாத காரியங்களைச் சொல்லுமிடத்து) தூவாதநீக்கி - வெய்யசொற்களை நீக்கி, நகச்சொல்லி - (இனிமையான சொற்களால் மன) மகிழச்சொல்லியும், நன்றி பயப்பது - (தன்னரசனுக்கு) நன்மையைச் செய்பவனே, தூது - தூதனாவான், எ-று.

பலகாரியங்களுக்கு உடம்படாதவர் பரம்பரையால் அப்பலவும் முடிதற்குக் காரணமான ஒருகாரியத்தைச் சொல்லல் அதனால் அவை பயன்படும் விதத்தை ஆலோசித்தறிதல் அருமையாலும் சுருக்கத்தாலும் உடன்படுவர், இனிமையில்லாத காரியங்களுக்கு உடன்படாதவர் தமதுமனமகிழச்சொல்ல அவ்வினிமையில்லாமை தோன்றாமையால் உடன்படுவாராதலால், அவ்விருவழியாலும் தன் காரியம் தவறாமல் முடிக்கவல்லவனென்பதாம். சொல்லியென்னும் இரண்டிடத்திலும் எண்ணுப்பொருளில் வந்த உம் என்னும் இடைச்சொற்கள் செய்யுள் விகாரத்தால் தொக்கு நின்றன.

(க - து.) வேற்றரசரிடத்துத் தான் சென்ற காரியத்தைத் தொகுத்து விரும்புமாறு சொல்பவனே தன்னரசனுக்கு நன்மையுண்டாக்குந் தூதனாவன் என்பது. (௫)

௬. கற்றுக்கண் ணஞ்சான் செலச்சொல்லிக் காலத்தாற்
றக்க தறிவதாந் தூது.

பரி — (இ - ள்.) நீதிநூல்களைக் கற்றுத் தான்சென்ற கருமத்தைப் பகைவேந்தர் மனங்கொள்ளச்சொல்லி அவர் செயிர்த்து நோக்கின் அந்நோக்கிற் கஞ்சாது காலத்தோடு பொருந்த 2 அது முடிக்கத்தக்க வுபாயமறிவானே தூதனாவான், எ-று.

அவ்வுபாய மறிதற்பொருட்டு நீதிநூற்கல்வியும், 3 அதனானன்றிப் பிறிதொன்றான் முடியுங்காலம் வரின் அவ்வாறு முடிக்கவேண்டுதலிற் காலத்தாற் றக்கதறிதலும் இலக்கணமாயின.

தெளி — (இ - ள்) கற்று - (நீதிநூல்களைக்) கற்று, செல - (பகைவேந்தர்) மனங்கொள்ள, சொல்லி - (தான்சென்ற கருமத்தைச்) சொல்லி, கண்ணஞ்

1 அவ்விருவாற்றானும் - தொகச்சொல்லுதலாலும் தூவாதநீக்கி நகச்சொல்லுதலாலும்

2 அது - தான்வந்தகாரியத்தை

3 அதனானன்றி - நீதிநூற் கல்வியாலல்லாமல்

ந்தது நிற்பாரையுங் கூட்டித் தூதரைத் 1 தலை, இடை, கடையென்று வகுத்துக் கூறினாராகலின், அவர்மதமுந் தோன்றத் 'தலை' என்றார். தூதென்பது 2 அதிகாரத்தான் வந்தது. இவை ஐந்துபாட்டானும் தான்வகுத்துக் கூறுவானிலக்கணங் கூறப்பட்டது.

தெளி —(இ-ள்) கடன் -(வேற்றரசரிடத்துத் தான்செய்ய) முறைமையை, அறிந்து - தெரிந்து, காலங்கருதி - (அவர்) சமயம்பார்த்து, இடனறிந்து - (சென்றகருமஞ் சொல்லுதற்கு ஏற்ற) விடத்தைத்தெரிந்து, எண்ணி - (சொல்லும்வழியை முன்னே) விசாரித்து, உரைப்பான் (அவ்விதம்) சொல்லுவோன், தலை - (தூதரில்) மிக்கவன், எ - று.

செய்யுமுறைமையாவது அவர் நிலையும், தன்னரசனிலையும், தன்னிலையும் சீர்தூக்கி அவைகளுக்குப் பொருந்தக்காணு முறைமையும் சொல்லுமுறைமையும் முதலாயின. செவ்வி - தன்சொல்லை யேற்றுக்கொள்ளு மனநிகழ்ச்சி. அது காலத்தின் வசத்ததாகலால் 'காலம்' என்றார். இடன் - தனக்குத்துணையாவார் உடனாகியவிடம். எண்ணுதல் - தான் அது சொல்லும் விதமும், அதற்கு அவர்சொல்லும் உத்தரமும், அதற்குப்பின் தான்சொல்லு மவைகளுமாக இவ்வழியால் மேலுமேலும் தானேயெண்ணுதல். வடநூலார் இவ்விருவகையாருடனே ஓலைகொடுத்து நிற்பாரையும் கூட்டித்தூதரைத் தலை, இடை, கடை எனவகுத்துச்சொல்லினாராகலால், அவர்மதமுந்தோன்ற 'தலை' என்றார். தூதென்பது அதிகாரத்தால் வந்தது. இவை ஐந்து பாட்டாலும் தான்வகுத்துச்சொல்லுவானது இலக்கணஞ்சொல்லப்பட்டது.

(க - து) முறை, காலம், இடம் என்னு மிவற்றை யறிந்து சொல்பவனே தூதரில் முதலாவான் என்பது. (எ)

---

1 "தானறிந்து கூறுந் தலைமற் றிடையது, கோனுரைத்த தீதென்று கூறுமாற் - றானறியார், தோலையே காட்டுங் கடையென் றுரைமூன்று, மேலையோர் தூதுரைத்த வாறு" என்று பாரதவெண்பா கூறுகின்றது. இங்கே தூது போதற்கு உரியவர் வேதியரும், வேந்தரும், அரசனாற் சிறப்புப்பெற்ற வணிகரும் சூத்திரரும் என்று அறியத்தக்கது. இஃது அகப்பொருள் விளக்கம் "வேத மாந்தர் வேந்தரென் றிருவர்க்குந், தூது போதற் றொழிலுரித் தாகும்" "சிறப்புப் பெயர்பெற்ற செப்பிய விரண்டு, முதற்குரி மரபின் வொழிந்தோ ரிருவர்க்கும்" என்று கூறுதலால் விளங்கும். பாரதத்தில் உள்ள உலூகன்தூது சஞ்சயன் தூது கிருஷ்ணன் தூதுகளால் வேதியர் வேந்தர்களின் தூதின் விஷயம் நன்குவெளியாமெனக. இவ்வாறன்றித் தேவர் முதலியோரும் தூது சென்றதுண்டு. அதனைச் சூரபதுமனிடத்து வீரவாகுதேவரும் இராவணனிடத்து அனுமாரும் அங்கதனும் தூது சென்றிருத்தலாலறிக.

2 அதிகாரத்தான் - தூது என்னும் அதிகாரத்தினால்.

௮. தூய்மை துணைமை துணிவுடைமை யிம்மூன்றின்
வாய்மை வழியுரைப்பான் பண்பு.

பரி.—(இ-ள்) தன்னரசன் வார்த்தையை அவன் சொல்லியவாறே வேற்றரசருக்குச் சென்று சொல்லுவான் இலக்கணமாவது 1 பொருள் காமங்களாற் றூய்மையுந் தனக்கு அமைச்சர் துணையாந்தன்மையுந் துணிதலுடைமையும் இம்மூன்றோடு கூடிய மெய்ம்மையுமென இவை, எ-று.

பொருள் காமங்கள்பற்றி வேறுபடக்கூறாமைப்பொருட்டுத் தூய்மையும் தன்னரசனுக்கு உயர்ச்சி கூறியவழி எம்மன்னரோக 2 அஃதியல்பென்றுகூறி 3 அவர் வெகுளி நீக்குதற்பொருட்டுத் 4 துணைமையும், இதுசொல்லின் இவர் தீங்கு செய்வரென் றொழியாமைப்பொருட்டுத் துணிவுடைமையும், யாவராலுந் தேறப்படுதற்பொருட்டு மெய்ம்மையும் வேண்டப்பட்டன. இன் ஒடுவின் பொருட்கண் வந்தது.

தெளி.—(இ-ள்) வழி-(தன்னரசன் வார்த்தையை அவன் சொல்லிய) வழியே, உரைப்பான்-(வேற்றரசருக்குச் சென்று சொல்லுவானது), பண்பு-இலக்கணமாவது, தூய்மை-(பொருளாலுங் காமத்தாலும்) பரிசுத்தனாதலும், துணைமை-(தனக்கு அமாத்திரிகள்) துணையாந்தன்மையும், துணிவுடைமை-துணிவுடைமையும், இம்மூன்றின்-இம்மூன்றோடு (கூடிய), வாய்மை-மெய்ம்மையும் (என இவைகளாம்), எ-று.

பொருள் காமங்கள் பற்றி வேறுபடச்சொல்லாமைப் பொருட்டுத் தூய்மையும், தன்னரசனுக்கு உயர்ச்சி சொல்லிய விடத்தே எம்போலவாருக்கு அஃது இயல்பென்றுசொல்லி அவர்கோபத்தை நீக்கற்பொருட்டுத் துணைமையும் இதுசொன்னால் இவர் துன்பஞ்செய்வாரென்று ஒழியாமைப்பொருட்டுத் துணிவுடைமையும், யாவராலும் நம்பப்படுதற்பொருட்டு மெய்ம்மையும் வேண்டப்பட்டன. மூன்றின் என்பதிலுள்ள இன் என்னும் ஐந்தனுருபு தனக்குரிய பொருளைவிட்டு மூன்றாம்வேற்றுமையின் உருபாய ஒடுவுருபின் உடனிகழ்ச்சிப்பொருளில

(க-து) தூதனுக் கிலக்கணமாவது சுத்தமும் துணையும், துணிவும், சத்தியமும் உடைத்தாயிருத்தலாம் என்பது. (௮)

---

1 பொருள் காமங்களால் தூயனாதலாவது - பொருளிலும் சிற்றின்பத்திலும் பற்றில்லாதவனா யிருத்தல் "உறுபொருள் காமம் விரும்புறுத் தூய்மை" என்று விநாயக புராணங் கூறுகின்றது.

2 அஃதியல்பெனக்கூறி - உயர்த்திக் கூறுதல் சுபாவமெனச் சொல்லி.

3 அவர் - வேற்றரசர்.

4 துணைமையும் - வேற்றரசரது மந்திரிகள் தமக்குத் துணையா யிருத்தலும். அநுமானுக்கு விபீஷணனும், கண்ணனுக்கு விதுரனும் துணையாயிருந்தமை யிதற்குக் கவனிக்கத்தக்கது.

௯. * விடுமாற்றம் வேந்தர்க் குரைப்பான் வடுமாற்றம்
வாய்சோரா வன்க ணவன்.

பரி.—(இ-ள்.) தன்னரசன் சொல்லிவிட்ட வார்த்தையை வேற்றரசர்க்குச் சென்று சொல்லவுரியான், தனக்கு வருமேதத்திற்கஞ்சி [1] அவனுக்குத் தாழ்வான வார்த்தையை வாய்சோர்ந்துஞ் சொல்லாத திண்மையையுடையவன், எ-று.

தாழ்வு சாதி தருமமன்மையின் [2] 'வடு' என்றார். [3] வாய்சோராவெனக் காரியங் காரணத்துள் அடக்கப்பட்டது.

தெளி.—(இ-ள்.) விடுமாற்றம் - (தன்னரசன் சொல்லி) விட்ட வார்த்தையை, வேந்தர்க்கு - வேற்றரசர்க்கு, (சென்று) உரைப்பான் - சொல்லுதற்கு உரியவன், (தனக்கு வருந் துன்பத்திற்கு அஞ்சி), வடுமாற்றம் (அவனுக்குத்) தாழ்வான வார்த்தையை, வாய்சோரா - வாய்சோர்ந்தும் சொல்லாத, வன்கணவன் - வலிமையையுடையவன், எ-று.

தாழ்வு அரசசாதிக்குத் தருமமல்லாமையால், அத்தாழ்வை 'வடு' என்றார். காரியமாகிய தாழ்வான வார்த்தைசொல்லுதலை யதன் காரணமாகிய வாய்சோருதலிலடக்கி 'வாய்சோரா' என்று கூறப்பட்டது.

(க-து.) வேற்றரசர்க்குத் தான்சென்ற கருமத்தைத் துன்பத்திற் கஞ்சி சோர்வடையாது சொல்பவனே தூதரில் வலியவனாவான் என்பது. (௯)

௧0 இறுதி பயப்பினு மெஞ்சா திறைவற்
குறுதி பயப்பதாந் தூது.

---

* "தடுமாற்ற மின்றித் தகைசான்ற சொல்லான், வடுமாற்றம் வாய்சோரா னாகி - விடுமாற்றம், எஞ்சாது கூறி யிகல்வேந்தன் சீறுங்கால், அஞ்சா தமைவது தூது" என்று பாரதவெண்பா கூறுகின்றது.

1 அவனுக்கு - வேற்றரசனுக்கு. அவருக்கு என்றும் பாடமுண்டு.

2 ஆயுத முதலியவற்றால் உடம்பிலுண்டான குறி வடு எனப்படும். அரசசாதிக்குத் தாழ்தற் குரித்தாகாத (அஃதாவது அந்தணர் சான்றோர் அருந்தவத்தோர் முதலியோரல்லாத) விடத்துத் தாழ்வான வார்த்தையைச் சொல்லுதல் வடுப்போன்று மாறாது பழிப்பை யுண்டாக்குதல் பற்றித் தாழ்வான வார்த்தையை வடு என்று கூறினார்.

3 வாய்சோராமை காரணமெனவும் தாழ்வானவார்த்தை சொல்லாமை காரியமெனவும் (யாண்டுத் தீயில்லை யாண்டுப் புகையில்லை யென்பதுபோல) வெதிரேக வியாத்தியாற் கூறப்பட்டன. வெதிரேகம் - எதிர்மறை. வியாத்தி - நியதமான உடனிகழ்ச்சி.

க. 1 அகலா தணுகாது தீக்காய்வார் போலக
　　இகல்வேந்தர்ச் சேர்ந்தொழுகு வார்

பரி — (இ - ள்) 2 மாறுபடுதலையுடைய அரசரைச் சேர்ந்தொழுகும் அமைச்சர் அவரை மிகநீங்குவதும் மிகச்செறிவதுஞ் செய்யாது தீக்காய்வார் போல இடைநிலத்திலே நிற்க, எ-று.

3 கடிதின் வெகுளுந் தன்மையரென்பது தோன்ற 'இகல் வேந்தர்' என்றார். மிகவகலிற் பயன் கொடாது மிகவணுகின் 4 அவமதிப்புற்றுத் தெறும் வேந்தர்க்கு, மிகவகலிற் குளிர் நீக்காது மிகவணுகிற் சுடுவதாய 5 தீயொடொத்த தொழிலுவமம் பெறப்பட்டது.

தெளி — (இ - ள்) இகல் - மாறுபடுதலையுடைய, வேந்தர் - அரசரை, சேர்ந்து - அடுத்து, ஒழுகுவார் - நடக்கும் மந்திரிகள், (அவரை) அகலாது - மிக நீங்காமலும், அணுகாது - மிக நெருங்காமலும், தீக்காய்வார்போலக் - நெருப்பிற் குளிர்காய்வார்போல நடுவிடத்து நிற்கக் கடவர் எ-று.

விரைவில் கோபிக்குந் தன்மையர் என்பது தோன்ற 'இகல்வேந்தர்' என்றார். மிகநீங்கினால் பயனைக்கொடுக்காமல் மிகநெருங்கினால் மதியாமைப்பற்றி வருத்தும் வேந்தர்க்கு, மிக நீங்கினால் குளிர் நீங்காமல் மிக நெருங்கினால் சுடுவதான நெருப்போடொத்தான தொழிலுவமானம் பெறப்பட்டது.

(க - து) மந்திரிகள் மாறுபாடுடைய அரசரிடம் தீக்காய்வார் போன்று நீங்காமலும் நெருங்காமலும் இருக்கக்கடவர் என்பது. (க)

உ. மன்னர் விழைப விழையாமை மன்னரான்
　　மன்னிய வாக்கந் தரும்.

---

1 "அக்கினியானது அஜாக்கிரதையாய்த் தன்கிட்ட வந்தவனை மாத்திரந் தகிக்கும். அரசனென்கிற அக்கினி கோபித்துக்கொண்டால் தன தானியம் புத்திர மித்திர களத்திராதிகளோடே அழிந்துபோவோம்" என்று மனுதரும சாஸ்திரங் கூறுவதும் "தீண்டினாரைத் தீச்சுடு மன்னர்தீ, ஈண்டு தேங்கிளை யோடு மெரித்திடுமே" என்று சீவகசிந்தாமணி கூறுவதும் இங் கறியத் தக்கனவாம்.

2 மாறுபடுதல் - விரோதப்படுதல்

3 கடிதின்வெகுளுந் தன்மையர் - முன்கோபக்காரர்.

4 அவமதிப்புற்று - தம்மை மதியாமையைக் குறித்து

5 மிக நீங்கினால் குளிரைப் போக்காதும் மிக நெருங்கினால் சுடுவதுமாய நெருப்பினது தொழிலை யுவமானமாகக் கூறினமையால் தொழிலுவமமாயிற்றென்க

பரி.—(இ - ள்) அமைச்சர் தம்மைக் காக்கக் கருதின அரியபிழைகளை தங்கண் வாராமற் காக்க, 1 அவற்றை வந்தனவாகக் கேட்டு அவ்வரசர் ஐயுற்றால் அவரைப் பின் தெளிவித்தல் யாவர்க்கு மரிதாகலான், எ-று

அரியபிழைகளாவன அவரால் பொறுத்தற்கரிய 2 அறைபோதல், 3 உரிமையோடு மருவல், அரும்பொருள் வெளவல் என்றிவை முதலாயின 4 அவற்றைக் காத்தலாவது 5 ஒருவன் சொல்லியக்கால் தகுமோவென ஐயுறுதற்குத் தகாதென்றே 6 அவர் துணிய வொழுகல் ஒருவாற்றாற் றெளிவித்தாலும் கடன் கொண்டான் றேன்றப் பொருட்டோன்று மாறுபோலக் கண்டுழியெல்லாம் அவை நினைக்கப்படுதலின் 'யார்க்குமரிது' என்றார் இவை மூன்றுபாட்டானும் 7 அது பொதுவகையாற் கூறப்பட்டது.

தெளி — இ - ள்,) (மந்திரிகள்) போற்றின் - (தம்மைக் காத்துக்கொள்ள வெண்ணினால், அரியவை - அரியபிழைகளை, போற்றல் - (தம்மிடத்திலே வாராமற்) காக்கக்கடவர், கடுத்தபின் - (அவைகளை வந்தவைகளாகக்கேட்டு அவ்வரசர்) சந்தேகித்தால், தேற்றுதல் - (அவரைப்பின்) தெளிவித்தல், யார்க்கும் எத்தன்மையார்க்கும், அரிது - கூடாது, (ஆதலால்) எ-று

---

1 அவற்றை - அரியபிழைகளை.

2 அறைபோதல் - கீழறுத்துச்செல்லுதல் அஃதாவது எலி புலப்படாவாறு கீழே யறுத்துச்சென்று தானிருக்கு மிடத்தைக் கெடுத்தல்போன்று அமைச்சன் புலப்படாவகை யொழுகித் தன்னரசனைக் கெடுதற்குரிய காரியங்களைப் பகை மன்னருடன் கூடிச்செய்தல்

3 அரசனுக்கு உரிமையான (சொந்தமான) மகளிரைப் பண்பாகுபெயரால் உரிமையென்று கூறப்பட்டது "அறம் பொரு ளின்பம்" எனனும் குறளின் விசேடவுரையில் "இனபவுபதையாவது தொன்றுதொட்டு உரிமையோடு பயின்றுளோர் தவமுதுமகளைவிட்டு அவளால உரிமையுள் இன்னாள் நின்னைக்கண்டு வருத்தமுற்றுக் கூடுவிக்கவேண்டுமென்று என்னை விடுத்தாள் அவளைக்கூடுவையாயின நினக்குப்பேரின்பமேயன்றிப் பெரும்பொருளும் கைகூடுமெனச் சூளுறவோடுசொல்லுவித்தல்" என்றுகூறியிருத்தலால் இது நனகுவிளங்குமெனக

4 அவற்றைக்காத்தல் - அரிய பிழைகளைத்(தன்னிடத்துப் பொருந்தாதபடி)தடுத்தல்

5 ஒருவன் அரசரிடஞ்சென்று இவ்வமைச்சன் அரியபிழைகளைச் செய்கின்றான் என்று சொல்லியவிடத்து இப்பிழைகளை அவ்வமைச்சன் செய்தல் தகுதியுடையதாகுமோவென்று சந்தேகப்படாது சொன்னவனை நீ கூறியது தகுதியுடையதன்றென்று, அவ்வரசர் சொல்லும்படி மந்திரி நடந்து கொள்ளுதலாம்.

6 அவர் - அரசர்.

7 அது - மன்னரைச் சேர்ந்தொழுகல.

அரியபிழைகளாவன அவராலே பொறுத்தற்கரிய கிழற்றதல, அரசருக்கு உரிமைபூண்டுள்ள மகளிரோடு புணருதல், இடைத்தற்கரிய பொருள்களையபகரித்தல் என்ப இவை முதலாயின அவைகளைக் காத்தலாவது ஒருவன் சொல்லிய விடத்தும் ஐயுறுவோமென்று சந்தேகப்படாமல் தகாதென்றே அவர்நம்புப்படி நடத்தல். பின் ஒருவழியால் நம்பிவிட்டாலும் கடன் கொண்டவரைக் கண்டவிடத்து ஏலவாம கடன்கொடுத்த பொருள் தோன்றும் விதம்போல தம்மைக்கண்டவிடத்தெல்லாம் அவ்வரியபிழைகள் நினைக்கப்படுதலால் ‘யார்க்கு மரிது’ என்றார். இவை மூன்றுபாடாலும் அது பொதுவகையாற் சொல்லப்பட்டது

(க - து.) அரசர் சந்தேகித்தபின் அவரைத் தெளிவிப்பது அரிதாகலின், மந்திரிகள் தங்களிடம் குற்றம் வாராமல் தம்மைக் காத்துக்கொள்ளக்கடவர் என்பது. (௩)

௪. செவிச்சொல்லுஞ் சேர்ந்த நகையு மவித்தொழுக
லான்ற பெரியா ரகத்து

பரி — (இ - ள்) அமைந்தவரசரருகிருந்தால் அவர்கண் ஒருவன் செவிக்கண் சொல்லுதலையும் ஒருவன் முகநோக்கி நகுதலையும் தவிர்ந்தொழுக, எ - று

சேர்தல் - பிறரோடு சேர்தல். 1 செயதொழுகின், தங்குற்றங் கண்டு செய்தனவாகக் கொள்வரென்பது கருத்து

தெளி —(இ-ள்) ஆன்ற - அமைந்த, பெரியாரகத்து - அரசர் சமீபத்து, (இருந்தால் அவர்கண்) செவிச்சொல்லும் - (ஒருவன்) காதிலேசொல்லுதலையும், சேர்ந்தநகையும் - (ஒருவன்முக) நோக்கி நகைத்தலையும், அவித்து-நீக்கி, ஒழுகல் - நடக்கக்கடவன, எ - று.

சோதல் - பிறரோடுசோதல் அவைசெய்து நடந்தால், தங்குற்றங்கண்டு செய்தவையாகக் கொள்வரெனபது கருத்து

(க - து) மந்திரி அரசரிடமிருக்கும்போது ஒருவன் காதிற் சொல்லுதலையும் ஒருவனைக் கண்டு நகைத்தலையும் ஒழிக்கக்கடவர் என்பது. (௪)

---

1 செயதொழுகின் - ஒருவன் இரகசியமாக மற்றொருவன் காதிலொன்றைச் சொல்லுதலையும் பிறிதொருவனது முகத்தைப் பார்த்துச் சிரித்தலையும் செய்து நடந்தால் இங்கே ஆசாரக்கோவை “பிறரொடு மந்திரங் கொள்ளார் இறைவனைச், சாரார் செவிச்சோரார் சாரிற பிறிதொன்று, தேரார் பேர் விற்க திரிந்து” என்று கூறுவது மறியத்தக்கதாம.

௫ 1 எப்பொருளு மோரார் தொடரார்மற் றப்பொருளை
விட்டக்கால் கேட்க மறை

பரி.—(இ - ள்) அரசனுக்குப் பிறரோடு மறைநிகழ்வுழி யாதொரு பொருளையுஞ் செவிகொடுத்துக் கேளாது அவனை 2 முடுகி வினவுவதுஞ் செய்யாது அம்மறைப்பொருளை அவன்றானே அடக்காது சொல்லியக்கால் கேட்க, எ - று.

3 ஓர்தற்கேற்கும் பொருளாயினு மென்பார் 'எப்பொருளும்' என்றார். 4 மற்றுவினைமாற்றின்கண் வந்தது.

தெளி.—(இ ள்.) மறை - (அரசனுக்குப்பிறரோடு) இரகசியம் (நிகழுமிடத்து), எப்பொருளும் - யாதொருபொருளையும், ஓரார் - (செவிகொடுத்துக்) கேளாமலும், தொடரார் - (அவனை) முடுகிவினவுவதுஞ்செய்யாமலும், அப்பொருளை - அந்தஇரகசியப்பொருளை, விட்டக்கால்-(அவன்தானே) அடக்காமற்சொலலினால், கேட்க - கேட்கக்கடவர், எ - று.

ஆராய்தற்கு உரியபொருளாயிருந்தாலுமெனபார 'எப்பொருளும்' என்றார், மற்று வினைமாற்றுப்பொருளில் வந்தது

(க - து.) அரசன் பிறரிடம் இரகசியம் பேசும்போது மந்திரிகள் அதனைக் கவனியாதிருந்து அவனே சொல்லிற் கேட்கக் கடவர் என்பது (௫)

௬. குறிப்பறிந்து காலங் கருதி வெறுப்பில
வேண்டுப வேட்பச் சொலல்.

பரி.—(இ - ள்) அரசனுக்குக் காரியஞ் சொலலுங்கால் அப்பொழுது நிகழ்கின்ற அவன் குறிப்பினையறிந்து சொலலுதற்கேற்ற காலத்தையும் நோக்கி வெறுப்பிலவுமாய வேண்டுவனவுமாய காரியங்களை அவன் மனம் விரும்பும்வகை சொல்லுக, எ - று

---

1 ஆசாரக்கோவை "நின்றக்கால்" என்னுஞ்செய்யுளில் "பெருந்தக்கார், சொலலிற் செவிகொடுத்துக் கேட்டிடுக மீட்டும், வினவற்க சொலலொழிந்தக் கால்" என்று கூறுகின்றது.

2 முடுகிவினவுவதும - விரைந்துகேட்பதும

3 ஓர்தற்கேற்கும் - தாம்கேட்டறிந்து ஆலோசிப்பதற்குத்தக்க

4 மற்றுஎன்பது தொடரா ரென்னும் எதிர்மறைவினையைத் தொடருவார் என்னும் உடம்பாட்டு வினையாகமாற்றியதினால் வினைமாற்றின்கண் வந்ததாயிற்றெனக; தொடருவார் என்பதை விட்டக்காற்கேட்க எனபதனாலறிக

குறிப்புக் காரியத்தின்கண் அன்றிக் காமவெகுளி 1 யுள்ளிட்டவற்றின் நிகழ்வுழியும், 2 அதற்கேலாக்காலத்துஞ் சொல்லுதல் பயனின்றாகலின் 'குறிப்பறிந்து காலங்கருதி' என்றும், அவனுடம்படாதன முடிவுபோகாமையின் 'வெறுப்பில' என்றும், பயனில்லவும் பயன்சுருங்கியவுஞ் செய்தல்வேண்டாமையின் 'வேண்டுப' என்றும், 3 அவற்றை இனியவாய்ச் 4 சுருங்கி விளங்கிய பொருளவாய சொற்களாற் சொல்லுகவென்பார் 'வேட்பச்சொலல்' என்றுங் கூறினார்.

தெளி —(இ - ள்) (அரசனுக்குக் காரியஞ்சொல்லும்போது) குறிப்பறிந்து -(அப்பொழுது நிகழ்கின்ற அவனது) குறிப்பினை அறிந்து, காலங்கருதி - (சொல்லுதற்குத் தகுந்த) காலத்தைப் பார்த்து, வெறுப்பில - வெறுப்பில்லாதனவும், (ஆய) வேண்டுப - வேண்டுவனவும் (ஆகியகாரியங்களை), வேட்ப - (அவன்மனம்) விரும்பும்படி, சொலல் - சொல்லக்கடவர், எ-று.

அரசனது மனக்குறிப்புக் காரியத்திலன்றிக் காமவெகுளி யுள்ளிட்டவைகளிலே நிகழுமிடத்தும், அதற்கு ஏற்காதகாலத்தும் சொல்லுதல் பயன்படாமற் போதலால் 'குறிப்பறிந்து காலங்கருதி' என்றும், அவனுடம்படாத காரியங்கள் முடிவுபெறாமையால் 'வெறுப்பில' என்றும், பயனில்லாதவையும் பயன்சுருங்கியவையுமாகிய காரியங்கள் செய்தலைவிரும்பாமையால் 'வேண்டுப' என்றும், அவைகளை இனியவையாய்ச் சுருங்கிவிளங்கிய பொருளுடையவையாகிய சொற்களாலே சொல்லுக வென்பார் 'வேட்பச்சொலல்' என்றும் சொன்னார்.

(க - து) அரசனது குறிப்பையும் சமயத்தையும் பார்த்து அவன் வெறுக்காதனவும் விரும்புவனவுமாகிய விஷயங்களை மந்திரிகள் சொல்லக் கடவர் என்பது. (௬)

எ. வேட்பன சொல்லி வினையில வெஞ்ஞான்றுங்
கேட்பினுஞ் சொல்லா விடல்

பரி —(இ-ள்) பயன்பெரியனவுமாய் அரசன் விரும்புவனவுமாய காரியங்களை அவன் கேட்டிலனாயினுஞ் சொல்லி எஞ்ஞான்றும் பயனிலவாயவற்றைத் தானே கேட்டாலுஞ் சொல்லாது விடுக, எ - று

---

1 உள்ளிட்டவற்றில் - உட்கொண்டுள்ளவைகளில்
2 அதற்கேலாக்காலத்தும் - காரியஞ்செய்தற்குத் தகுதியில்லாத காலத்திலும்.
3 அவற்றை - வெறுப்பில்லாதனவும் விரும்புவனவு மாய காரியங்களை
4 "விரைந்துரையார் மென்மே லுரையார்பொய் யாய, பரந்துரையார் பாரித் துரையார் - ஒருங்கெனைத்தும், சில்லெழுத்தி னாலே பொருளடங்கக் காலத்தாற், சொல்லுக செவ்வி யறிந்து" என்று ஆசாரக்கோவை கூறுவது இங்கறியத்தக்கதாம்.

1 வினையில எனவுங் கேட்பினும் எனவும வநதசொறகளான, அவறறி ன மறுதலைச்சொறகள் வருவிககபபட்டன. 2 வினையானவருதலின 'வினை' எ னறும், 3 வறுமைககாலமு மடஙக'எஞ்ஞான்றும்'என றுஙகூறினா 4 சொலலு வனவுஞ சொலலாதனவும் வகுததுக கூறியவாறு இவைநானகுபாட்டானுஞ சிறபபுவகையாற கூறபபட்டது.

தேளி —(இ-ள) (பெருமபயனுளளவையுமாய) வேட்பன - (அரசன) விரு மபுவனவும (ஆகியகாரியஙகளை), சொலலி - (அவன கேட்டிலனுயினும) சொ லலி, எஞ்ஞான்றும - எககாலும், வினையில - பயனிலலாதவைகளை, கேட்பினும- (தானே) கேட்டாலும, சொல்லாவிடல - சொலலாது விடககடவன, எ - று,

ில என்றும கேட்பினும் எனறும வந்த சொறகளால, அவைகளுககு எதிரான சொறகள வருவிககபபட்டன. வினையால வருதலின 'வினை' எ னறும, வறுமைககாலமும அடஙக 'எஞ்ஞான்றும்' எனறும சொலலினா சொ லலததககவையும சொலலத்தகாதவையும வகுததுசசொலலியபடி இவை நானகுபாட்டாலும மனனரைசசோநதொழுகல சிறபபுவகையால சொலலப பட்டது

(க - து) மநதிரிகள எபபொழுதும பயனிலலாதவைகளை யொ ழிததுப பயனுளள விஷயஙகளையே அரசனிடம சொலலக கடவர் என் பது. (எ)

அ இளைய ரினமுறைய ரென்றிகழார் நின்ற
ஒளியோ டொழுகப படும

பரி.—(இ - ள்) 5 இவர் எம்மினையரெனறும் எமககின்ன முறையினை யுடையரென்றும அரசரை யவமதியாது அவர்மாட்டு நினறவொளியோடு பொ ருநத ஒழுகுதல் செயயபபடும, எ - று

1 வினையில என்பதற்கு எதிரானது பயன் பெரியன என்றும, கேட்பினும எ னபதற்கு எதிரானது கேட்டிலனுயினும எனறும அறிக

2 வினையால் வரும பிரயோசனததை வினையெனக் கருவியாகுபெயரால கூ றினா

3 வறுமைக்காலம் - அனுபவித்தற்குரிய பொருளிலலாத காலம

4 சொலலத்தககவை பெருமபயனுள்ள காரியமென்றும், சொலலத்தகாதவை பயனிலலாத காரியமென்றும் பிரித்துசசொலலப்பட்டன

5 மனுதருமசாஸ்திரம் ஏழாமத்தியாயததில் "அவ்வரசன சிறுவனுக இருந தபோதிலும் அவனை மனிதனென்று அவமானஞ செயயககூடாது. ஏனெ னில் மேலான தேவர்களின் கூட்டமே அந்த அரசனுருவமாக விருககின்ற தலலவா" என்று கூறுவது மிககறியததககது.

1 ஒளி - உறங்காநிற்கவுந் தாமுலகைக் காக்கின்ற அவர் கடவுட்டன்மை. 2 அதனொடு பொருந்த வொழுகலாவது 3 அவர் கடவுளருந் தாம் மக்களுமாக ஒழுகுதல். அவ்வொளியாற் போக்கப்பட்ட இளமையும் முறையும்பற்றி இகழ்வாராயின், தாமும் 4 போக்கப்படுவ ரென்பது கருத்து.

தெளி —(இ - ள்) இளையரென்று - (இவர் எமக்கு) இளையவர் என்றும், இனமுறையரென்று - (எமக்கு) இன்ன முறைமையினையுடையவர் என்றும், இகழார் - (அரசரை) அவமதியாமல், நின்ற - (அவரிடத்து) நிலைபெற்ற, ஒளியோடு - ஒளியோடு (பொருந்த), ஒழுகப்படும் - நடக்கத்தகும், எ - று.

ஒளி - நித்திரை செய்யாநிற்கவுந் தாம் உலகங்காக்கின்ற அவரது தெய்வத்தன்மை. அதனொடு பொருந்த வொழுகுதலாவது அவர் தேவருந் தாம் மனிதருமாக ஒழுகுதல். அவ்வொளியினாலே நீக்கப்பட்ட இளமையும் முறைமையும் பற்றி இகழ்வாராயின், தாமும் நீக்கப்படுவரென்பது கருத்து.

(க - து) இளமையும் முறையும் நோக்கி மந்திரிகள் அரசனை யிகழாது மதிக்கக் கடவர் என்பது. (அ)

௯. கொளப்பட்டே மென்றெண்ணிக் கொள்ளாத செய்யார்
துளக்கற்ற காட்சி யவர்.

(பரி —(இ - ள்) அரசனால் யாம் நன்குமதிக்கப்பட்டோமென்று கருதி அவன் விரும்பாதவற்றைச் செய்யார் நிலைபெற்ற வறிவினையுடையார், எ - று.

கொள்ளாதன செய்தழிவெய்துவார், 5 கொளப்பாட்டிற்குப்பின் 6 தம்மை வேறொருவராகக் கருதுவாராகலின், 7 முன்னையராகவே கருதி யஞ்சி யொழுகுவாரைத் 'துளக்கற்ற காட்சியவர்' என்றார்.

---

1 "உறங்கு மாயினு மன்னவன் றன்னொளி, கறங்கு தெண்டிரை வையகங் காக்குமால்" என்று சீவகசிந்தாமணி கூறுவதும் அதற்கு நச்சினார்க்கினியர் "மன்னவன் உறங்குமாயினும் அவனொளியுலகைக் காவாநிற்கும்" என்றுரை கூறியிருத்தலும் இங்கறியத்தக்கனவாம்.

2 அதனொடு - ஒளியுடன்.

3 அவர் - அரசர்.

4 போக்கப்படுவர் - அமைச்சுத் தொழிலினின்றும் நீக்கப்படுவர்.

5 கொளப்பாட்டிற்குப்பின் - அரசனால் நன்குமதித்துக் கொள்ளப்பட்ட பிறகு.

6 தம்மை வேறொருவராகக் கருதுவாராகலின் - தம்மை முன்னுள்ள நிலைமையராக வெண்ணாது வேறொரு சிறந்த நிலைமையுடையராக எண்ணுவாராதலால்; அஃதாவது தம்மை மனிதப் பிறப்பினராக நினையாது தேவப் பிறப்பினராக நினைப்பாரென்றபடி.

7 முன்னையராகவே - முன்னுள்ள நிலைமையராகவே; அங்ஙனம் கருதாது முன்னையராகவே என்றும் பாடமுண்டு.

தெளி —(இ - ள) துளககறற - அசைவறற, காடசியவா - அறிவுடை டவா, கொளபபடடோமெனறு - (அரசனால யாம) நன்குமதிககபபடடோ மெனறு, எணணி-நினைத்து, கொளளாத -(அவன)விருமபாதவைகளை, செயயாா - எ - று

விருமபாதவைகளைசசெயது அறிவுடையோாகொள்ளபபட்டபின்பு த மமைவேறொருவராக நினைபபவராகலால, முனனையவராகவே நினைதது அ ஞசி நடபபவரைத 'துளக்கறற காட்சியவா' எனறாா

(க - து) அரசனால நனகுமதிககபபட்டோமெனறு நினைதது அ வன விருமபாத காரியங்களை மநதிரிகள செயயார் எனபது. (௬)

௯0 1 பழைய மெனக்கருதிப பணபல்ல செயயுங்
கெழுதகைமை கேடு தரும.

பரி —(இ - ள்) அரசனுககு யாம பழையமெனக பலலாதவறறைச செயயுமுரிமை அமைசசாககுக கேடினைப பயக்குமு, எ - று

2 அவன பொறுது செறுபொழுதின அபபழைமை நோககிக் கணணோ டாது உயிரை வெளவுதலான, அவனவேணடாதன செயதற கேதுவாய கெ ழுதகைமை கேடுதருமு எனறாா இவை மூனறுபாடடானும பொறுபபரெனறு அரசா வெறுபபன செயயறக வெனபது கூறபபடடது.

தெளி —(இ - ள) பழையமென (அரசனுககு யாம) பழைமையேமமெ னறு, கருதி - நினைத்து, பணபலல - (தமககு) இயலபலலாதவைகளை, செயயு ம—கெழுதகைமை - உரிமையானது, கேடுதரும-(மநதிரிகளுககுக) கேடடைத் தரும், எ - று

அவனபொறுககாது வருததுபொழுதிலஅபபழைமைநோககி முகஙகொ டாமல உ[illegible] புதலால, அவன [illegible] காரண மாகிய உரிமை கேடுதரும என்றாா இவை மூனறுபாட்டாலும பொறுபபரெ னறு அரசா வெறுககததககவைகளைச செயயலாகாதெனபது சொலலப்படடது.

(க - து) யாம பழையோ மெனறெணணித தமககியலபலலாத காரியஙகளைசசெயயும மநதிரிகள கேடடைவா எனபது. (௰)

---

1 "மாமனு னெனனு மததநதா லூனையிகழநது, தோமுறறாா தககனாா சோமே சா-வாமே, பழைய மெனககருதி பணடலல செயயும, கெழுதகைமைகேடு தரும" எனறு சோமேசா முதுமொழிவெணபா கூறுவதும, "பழைமை கடைபபிடியாா கேணமையும பாராா, கிழமைபிறிதெனாறுங கொள ளாா வெகுளின்மற், காதனமை புணடே யிறைமாணடாாக கேதிலரும, ஆாவலரு மிலலை யவாககு" எனறு நீதிநெறிவிளககங கூறுவது மிஙகறிய தககனவாம

2 அவன் - அரசன்

## எக-ம் அதி — குறிப்பறிதல்.

பரி —அமைச்சராவது அரசர் கருதியவற்றை அவர் கூறாமலறிதல். இது, மன்னரைச் சேர்ந்தொழுகற்கு இன்றியமையா தாகலின், 1 அதன்பின் வைக்கப்பட்டது.

தெளி.—அமைச்சராவது அரசர் நினைத்ததை அவர் சொல்லாமலறிதல் இது, மன்னரைச் சேர்ந்து நடப்பவர்க்கு அவசியமானதாகலால், அதன்பின் வைக்கப்பட்டது

க. கூறாமை நோக்கிக் குறிப்பறிவா னெஞ்ஞான்று
மாறாநீர் வையக் கணி

பரி —(இ - ள) அரசனாற் குறித்த கருமத்தை அவன்கூறவேண்டாவகை அவன் முகமானும் கண்ணானும் நோக்கி அறியுமமைச்சன் எஞ்ஞான்றும் வற்றுதநீராற் சூழப்பட்ட வையத்துள்ளார்க்கு ஓராபரணமாம், எ-று

ஒட்டமுடையனாய் எல்லார்க்கும் அழகுசெய்தலான 'வையக்கணி' என்றார் 2 குறிப்பும் 3 வையமும் ஆகுபெயர். வையத்திற்கென்பது விகாரப்பட்டு நின்றது

தெளி —(இ - ள.) குறிப்பு - (அரசனால்) குறிக்கப்பட்டகாரியத்தை, கூறாமை - (அவன்) சொல்லவேண்டாவகை, நோக்கி - (அவன் முகத்தினாலும் கண்ணினாலும்) பார்த்து, அறிவான் - அறிகிறமந்திரியானவன், எஞ்ஞான்றும் - எந்த நாளும், மாறாநீர - வற்றாத நீரால் சூழப்பட்ட, வையக்கு - உலகத்துள்ளார்க்கு, அணி - ஓராபரணமாம், எ - று

அறிவுடையனாகி எல்லார்க்கும் அழகுசெய்தலால 'வையக்கணி' என்றார் குறிப்பும் வையமும் ஆகுபெயர்கள் வையத்திற்கென்பது வையக்கு என்று விகாரப்பட்டு நின்றது

(க - து) அரசன் குறிப்பறிந்தொழுகும் மந்திரி உலகினர்க்கோரணியாய விளங்குவன் என்பது (க)

உ. ஐயப் படாஅ தகத்த துணர்வானைத்
தெய்வத்தோ டொப்பக் கொளல.

---

1 அதன்பின - மன்னரைச்சேர்ந்தொழுகலின்பின்.

2 குறிப்பு யென்னும தொழிற்பெயர் அதனை யுடைய கருமத்திற காதலால் தொழிலாகுபெயர.

3 வையம என்னும் இடப்பெயர அங்கிருக்கும் மனிதருக காதலால இடவாகுபெயர

பரி —(இ-ள்) ஒருவன் மனத்தின்கண் நிகழ்வதனை ஐயப்படாது ஒருதலையாக வுணரவல்லானை மகனேயாயினும் தெய்வத்தோ டொப்ப நன்குமதிக்க, எ - று

உடம்பு முதலியவற்றான் ஒவ்வாருயினும் பிறர் நினைத்த துணருந் தெய்வத்தன்மை யுடைமையின் 'தெய்வத்தோ டொப்ப' என்றார்

தெளி —(இ - ள்) அகத்தது - (ஒருவனது) மனத்தினிடத்திலே (நிகழ்வதனை), ஐயப்படாது - சந்தேகப் படாமல், உணர்வானை-(துணிவாக) அறியவல்லவனை, (மனிதனேயாயினும்) தெய்வத்தோடொப்ப - தெய்வத்தோடு சமானமாக, கொளல் - நன்கு மதிக்கக்கடவன, எ - று.

உடம்பு முதலானவைகளால ஒப்பாகாருயினும் பிறர் நினைத்ததை அறியுந் தெய்வத்தன்மையுடைமையால 'தெய்வத்தோடொப்ப' என்றார்

(க - து) பிறரது எண்ணத்தைச் சந்தேகியாது அறிபவனை தெய்வத்தோடொப்பன என்பது. (உ)

ங. [1]குறிப்பிற் குறிப்புணர் வாரை யுறுப்பினுள்
யாது கொடுத்துங் கொளல்.

பரி —(இ - ள்) தங்குறிப்பு நிகழுமா றறிந்து அதனாற் பிறர் குறிப்பறியுந் தன்மையாரை அரசர் தம்முறுப்புக்களுள் அவர் வேண்டுவதொன்றனைக் கொடுத்தாயினும் தமக்குத் துணையாகக் கொள்க, எ-று

[2] உணணிகழு நெறி யாவர்க்கு மொத்தலின், பிறர் குறிப்பறிதற்குத் தங் குறிப்புக் கருவியாயிற்று உறுப்புக்களாவன பொருளும்,நாடும்,யானை குதிரைகளும் [3] முதலிய புறத்துறுப்புகள் இதற்குப் பிறர் முகக்குறிப்பானே அவர் மனக்குறிப் புணர்வாரை யென்றுரைப்பாரு முளர். இவை மூன்று பாட்டானுங் குறிப்பறிவாரது சிறப்புக் கூறப்பட்டது.

-(இ-ள்) குறிப்பின்-(தங் குறிப்புநிகழும் விதத்தை யறிந்து)அக் குறிப்பினால், குறிப்புணர்வாரை - (பிறர்குறிப்பு) அறியுந்தன்மையவரை, உறுப்பினுள்-(அரசர்தம்முறுப்புக்களுள், யாதுகொடுத்தும் - (அவர்வேண்டுவது) யாதொன்றனைக்கொடுத்தாயினும், கொளல்-(தமக்குத்) துணையாகக்கொள்ளக் கடவர், எ - று

1 " அகத்திடை தனக்கு நிகழ்ந்திடுங் குறிப்பா லவரவ ரகக்குறிப் பறிந்தி, மிகத்தெளி பவனைக் கரிமுத லுறுப்புள் விழைவன கொடுத்துங்கொள் மைந்த" என்று விநாயக புராணங் கூறுகின்றது

2 உணணிகழும் நெறி - குறிப்பானது மனத்தில் உண்டாகும் முறைமை

3 முதலிய என்றதனால ஏவலாள், காவலாளர், உடை, படை முதலியவைகளுங் கொள்க

உள்ளே நிகழ்வது யாவர்க்கும் ஒத்தலால், பிறர் குறிப்பை யறிதற்குத் தங்குறிப்புச் சாதனமாயிற்று. உறுப்புக்களாவன தோலும், நாவும், யானை குதிரைகளும் முதலாகிய புறத்துறுப்புகள். குறிப்பிற் குறிப்புணர்வாரை என்பதற்கு பிறரது முகக்குறிப்பினாலே அவரது மனக்குறிப்பை யறிவாரை யென்று பொருள் கூறுவாருமுண்டு. இதனான் ஒட்டாதும் குறிப்பறிவாரது சிறப்புச் சொல்லப்பட்டது.

(க-து) தமது குறிப்பால் பிறரது குறிப்பை யறிய வல்லாரை அரசர் அவர் வேண்டுவன கொடுத்தாயினும் கொள்ளக்கடவர் என்பது. (௩)

௪ குறித்தது கூறாமைக் கொள்வாரோ டேனை
யுறுப்போ ரனையரால் வேறு.

**பரி** —(இ-ள்) ஒருவன் மனத்துக் கருதியதனை அவன் கூறவேண்டாமல் அறியவல்லாரோடு மற்றை [1] மாட்டாதார் உறுப்பா லொருதன்மை யராக வொத்தாராயினும் அறிவான் வேறு, எ-று.

[2] கொள்ளாதா ரென்பதூஉம், ஆயினுமென்பதூஉம் [3] அவாய்நிலையான் வந்தன. சிறந்த அறிவின்மையின், [4] விலங்கென்னுங் கருத்தான் 'வேறு' என்றார்.

**தெளி** —(இ-ள்) குறித்தது - (ஒருவன் மனத்தில்) நினைத்ததை, கூறாமை - (அவன்) சொல்லவேண்டாமல், கொள்வாரோடு - அறியவல்லவரோடு, ஏனை - மற்றை (அறியமாட்டாதவர்), உறுப்பு - அவயவத்தால், ஓரனையர் - ஒரு தன்மையராக வொப்பாயினராயினும், வேறு - (அறிவால்) வேறு, எ-று.

அறியமாட்டாதவரென்பதும், ஆயினு மென்பதும் அவாய்நிலையால் வந்தன. சிறந்த அறிவில்லாமையால், மிருகமென்னுங் கருத்தால் 'வேறு' என்றார்.

(க-து) பிறர் குறிப்பை யவர் சொல்லாமலே யறிய வல்லவரை அவ்வாறறியும் ஆற்றலில்லாதார் அறிவால் ஒவ்வார் என்பது. (௪)

௫. குறிப்பிற் குறிப்புணரா வாயி னுறுப்பினு
ளென்ன பயத்தவோ கண்.

---

1 மாட்டாதார் - ஒருவன் மனத்தில் எண்ணிய விஷயத்தை அவன் சொல்ல வேண்டாமலே அறியுந் தன்மையில்லாதவர்

2 மாட்டாதார் என்றும் பாடமுண்டு

3 கொள்ளாதார் என்பதனைக் கொள்வாரோடு என்பதும் ஆயினும் என்பதனை வேறு என்பதும் வேண்டி நின்றன. அவாய்நிலையாவது ஒருபதந் தன்னை முடிப்பதொருபதம் இல்லாவிடத்துத்தான் முடிவு பெறாது நிற்றலாம்.

4 "விலங்கொடு மக்க ளனைய ரிலங்குநூல், கற்றாரோ டேனை யவர்" என்னுங் குறளும் இதற்குக் கவனிக்கத் தக்கதாம்.

பரி — (இ - ள்) குறித்தது காணவல்ல தங்காட்சியாற பிறர்குறிப்பினை புணரமாட்டாவாயின் ஒருவனுறுப்புக்களுட் 1 சிறந்த கணகள் வேறென்னபய னைச செயவன், எ - று

முதறகட குறிப்பு ஆகுபெயா, 2 குறிப்பறிதறகட டுணையாதற் சிறப்புப டறறி உயிரதுணர்வு கணமே லேறறபபட்டது அககணகளாற பயனிலலை யெனபதாம. இவைஇரண்டுபாட்டானுங் குறிப்பறியாரதிழிபு கூறப்பட்டது.

தேவி — (இ-ள) குறிப்பினை-(குறித்ததைக காணவலல தமது)காட்சியால, குறிப்பு-(பிறா)குறிப்பினை, உணராவாயின் - அறியமாட்டாவாயின, (ஒருவனுக கு) உறுப்பினுள - அவயவங்களுள, கண - (சிறந்த) கணகள், என்னபயத் தவோ - (வேறு) எனனபயனைச செய்வனவோ, எ-று

ிப்புஎன்னுந் தொழிறபெயர் குறித்தவிஷயத்தைக் கா ணவலலகாட்சிககு (அறிவிறகு) ஆகுதலால தொழிலாகுபெயா குறிப்பறியு மி டத்தே துணையாகுஞ்சிறப்புப்பறறி உயிரினறிவு கணமேல ஏறறப்பட்டது பிற ர குறிப்பினையறியாத கணகளாலே பயனிலலை யெனபதாம இவை இரண்டு பாட்டாலும குறிப்பறியாரது இழிவு சொலலப்பட்டது

(க - து) குறிப்பாற பிறர் குறிப்பறியாத கணகள பயனற்றவை யாம எனபது.                (ரு)

சா 3 அடுத்தது காட்டும பளிங்குபோ னெஞ்சங்
     கடுத்தது காட்டு முகம

---

1 "மினனுமணிப பூணும பிறவுறுப்புப பொனனே யதுபுனையாக், காணுங்கண ேமா காண" எனறு நனனெறி கூறுவதும, "கணணிற சிறந்த வுறு ' என்று நானமணிககடிகை கூறுவது மிஙகறியததககனவாம்.

2 ஒருவனது மனககுறிப்பை யவனது முகம வாயிலாகத தெரிநதுகொள்ளு ம் விஷயததில (கண) உயிருககுத துணையாயிருககும சிறப்புப்பறறி உயி ரினது உணர்வை (அறிவை) ககணணின மேலேறறி (வைத்து)க கன் கு றிப்பிற குறிப்புணராவாயின எனறு கூறப்பட்டது

இஃது ஒருபொருளின் குணததை (உயிரினது அறிவாகியகுணததை) மற்றொரு பொருளின (கண்ணின)மேல ஏறறிக் கூறிய உபசார வழககா மெனக.

இதனால கணணுககு அறிவு இனறெனறும கணணறிந்தது என்னுமிடத்தில் உயிரினது அறிவு கண்ணினமே லேறறிச சொலலப்படுகிறதெனறும் பெறறுமெனக "ஆனமாமனததோடும, மனம இந்திரியத்தோடும, இந்தி ரியம பொருளோடும கூடும; அதனால காட்சி புணாவு நிகழுமென வுண ர்க" என்று தர்ககசஙகிரகம் கூறுகின்றது.

3 நான் மணிககடிகை "தூககின, அகம பொதிந்த தீமை முகனுரைககு மெல் லாம், முகடபோல முன்னுரைபட தில" என்று கூறுகினறது.

**பரி.**—(இ - ள்) தன்னையடுத்த பொருளது நிறத்தைத் தானே கொண்டு காட்டும் பளிங்குபோல ஒருவனெஞ்சத்து [1] மிக்கதனை அவன்முகம் தானே கொண்டுகாட்டும், எ - று.

அடுத்ததென்பது ஆகுபெயர் கடுத்ததென்பது கடியென்னு முரிச்சொல்லடியாய்வந்த தொழிற்பெயர் உவமை [2] ஒருபொருள் பிறிதொரு பொருளின் பண்பைக் கொண்டு தோற்றுதலாகிய தொழில்பற்றி வந்தது

**தெளி.**—(இ - ள்) அடுத்தது - (தன்னை) அடுத்தபொருளினது நிறத்தை, காட்டும் - (தானே கொண்டு) காட்டுகிற, பளிங்குபோல - பளிங்குபோல, நெஞ்சம் - (ஒருவனது) நெஞ்சத்தில், கடுத்தது - மிகுந்த குணத்தை, முகம் - (அவன்) முகந்தானே, காட்டும் - (கொண்டு) காட்டும், எ - று

அடுத்ததனிறத்தை அடுத்ததெனலால் பொருளாகுபெயர் கடுத்தது என்பது கடியென்னும் உரிச்சொலடியாகப் பிறந்த தொழிற்பெயர் இறந்தகால த்தொழிற்பெயர் 'அடுத்ததுகாட்டும்பளிங்கு போல' என்னும் உவமானம் ஒரு பொருள் வேறொருபொருளின் குணத்தைத் தன்னுட்கொண்டு தோற்றுதலாகிய தொழில்பற்றிவந்தது.

(க - து) ஒருவன் மனத்தின் தன்மையை அவனது முகம் பளிங்குபோல் காட்டும் என்பது. (௬)

௭ முகத்தின் முதுக்குறைந்த துண்டோ வுவப்பினுங்
காயினுந் தான்முந் துறும்

**பரி.**—(இ - ள்.) உயிர் ஒருவனை யுவத்தலானுங் காய்தலானு [3] முறின், தானறிந்து அவற்றினைக்கண் அதனின் முற்பட்டு நிற்குமாகலான் முகம்போல அறிவுமிக்கது பிறிதுண்டோ இல்லை, எ - று

உயிர்க்கே அறிவுள்ளது ஐம்பூதங்களா லியன்ற முகத்திற்கில்லை யென்பாரை நோக்கி, உயிரது கருத்தறிந்த அஃ [4] துவகை குறின் மலர்ந்துங் காயவு

1

2 பளிங்கெனும் பொருள் தன்னை யடுத்தசெம்மைகருமை முதலியனவற்றை யுடைய பொருள்களின் செம்மை முதலிய குணங்களைத் தன்னுள்ளே கொண்டு (தன்னுள்ளே கொள்ளல் - பிரதிபலித்தல்) காட்டுதல் போன்று முகமும் தன்னை யடுத்த மனத்தினது குணத்தைத் தன்னுட் கொண்டு காட்டுமென்பதாம். இங்கே தொழிலை யுவமானமாகக் கொண்டமையால் இது தொழிலுவமையணி. மனம் களிப்பாயிருந்தால் முகம் விலாசமாயிருத்தலையும் அது களிப்பின்றி யிருந்தால் விலாசமின்றி யிருத்தலையும் சற்றுக்கண்ணோர்வாகக் கூர்ந்து தெள்ளிதின் விளங்குமெனக் 'அகத்திலழகு முகத்திற் றெரியும்' என்னும் பழமொழியும் இங்கே அறியத்தக்கதாம்

3 உறின் - அடைந்தால். 4 உவப்பு - சந்தோஷம்.

## எக - ம் அதிகாரம் — குறிப்பறிதல்

றிற 1 கருகிபும வரலான், உணடென மறுபபார் போனறு 2 குறிபபறிதறகு க 3 கருதது கூறியவாறு

தெளி —(இ - ள (உயிரானது ஒருவனை) உவபபினும விருமபுதலானும், காயினும - வெறுததலானும், (உறறால) தான - (அறிநது) முநதுறும - (அவ் விரணடிலும அவவுயிருககு) முறபடமிகுதும, (ஆதலால) முகததின - முகம் போல, முதுக்குறைநதது - அறிவுமிகுநதது, உணடோ - மறறொனறுணடோ, இலலை, எ - று

உயிருககே அறிவு உணடு ஐமபூதங்களாலாகியமுகததினுக்கு இலலை யெ னபாரை நோககி, உயிரினுடைய கருததினையறிந்து அவவுயிர் உவபபினையடை நதால மலாசசியடைநதும வெறுபபினையடைநதால கருகியும் வருதலால், மு கததிறகு அறிவு உணடெனறு கூறிமறுபபவர் போலக, குறிபபறிதலுககுச சாதனம சொலலியபடி

(க - து ) உயிரினது விருபபு வெறுபபைக காட்டவலல முகத்தி னும அறிவுமிகுநத உறுபபு வேறிலலை எனபது (எ)

அ முகநோககி நிற்க வமையு மகநோககி
யுறற துணர்வார்ப பெறின

பரி —(இ - ள ) 4 குறையுறுவானும தனமனததைக குறிபபானறிந் தா 5னுறறவதனைத தீரபபாரைப பெறின் அவாதனமுகம நோககுமவகை தா னும அவாமுகநோககி அவவெலலைககணிறக வமையும, எ - று

6 உணாவாரெனக காரியததைக காரணமாககிக கூறினா 7 அவவெல லையைக கடநது சொல்லுமாயின 8 இருவாககுஞ சிறுமையாமாகலின, அது

1 கருகியும - மலாசசி யடையாது சுருஙகியும

2 சேனாவரையர் (தொலகாப்பியம உரியியலில) ‘குறிபபு மனத்தாற் குறிததுண ரபபடுவது’ எனறு கூறியிருககினறனா

3 உயிரினது கருத்தாகிய சாததியத்தை யறிதறகு முகமானது கருவியா (ஏது வா) யிருககினறதெனபதாம

4 குறையுறுவானும - குறையுளளவனும அஃதாவது தனககு நேரிடடுளள கு றைவினைப் பிறர்மாடடுத தெரிவிககுமபடி வநதவனும எனறபடி.

5 உறறவதனை - அடைநத துனபத்தை

6 தீர்பபாரை யெனனும காரியததை யதறகுககாரணமாகிய உணாவாா என் னும பெயராற கூறினதினால இது காரணககாரியமாயவுபசாரவழககு அ னறிக் கருவியாகு பெயரெனினு மொககும. பிறாது குறையுணாதல கா ரணமெனவும், பினனாதனைத் தீாததல்காரியமெனவும அறிநதுகொள்க.

7 அவவெல்லையைககடநது-முகநோககி நிறகும அளவைத்தாணடி

8 இருவர்ககும - குறையுறுவானுககும உணாநது தீாபபானுககும

வேண்டாவென்றாய குறையுறுவோனியல்பு கூறுவாரோடொன்று கருவி கூறிய வாறு இவை மூன்றுபாட்டானுங் குறிப்பறிதற் கருவி முகமென்பது கூறப்பட்டது

தெளி —(இ - ள்) (குறையுறுவோனும்) அகநோக்கி - (தன்) மனத்தைக் குறிப்பால் அறிந்து, உற்றது - (தான்) உற்றதனை, உணர்வார் - அறிந்து தீர்ப்பாரை, பெறின் - பெற்றால், (அவர் தன் முகத்தைப் பார்க்கும்படியாகத் தான்) முகநோக்கி - (அவர்) முகத்தைப்பார்த்து, நிற்க - (அவ்வளவிலே) நிற்க, அமையும் - போதும், எ - று

தீர்ப்பாரென்னுங் காரியத்தை உணர்வாரென்று காரணமாக்கிச்சொல்லினார் அவ்வளவில் நில்லாமல் அவ்வளவைக்கடந்து சொல்லுவானாகில் இருவருக்கும் சிறுமையாமாகலால், அதுவேண்டாமென்பதாம் குறையுறுவோனது இயல்பு சொல்லுவார்போல சாதனம் சொல்லியபடி இவை மூன்றுபாட்டாலும் குறிப்பறிதற்குச் சாதனம் முகமென்பது சொல்லப்பட்டது

(க - து) ஒருவன் தன் குறையினைக் குறிப்பினாலறிந்து தீர்ப்பாரைப் பெற்றால் அவன் அவர் முகநோக்கி நிற்றலே போதுமானதாம் என்பது. (அ)

௯ பகைமையுங் கேண்மையுங் கண்ணுரைக்குங் கண்ணின்
வகைமை யுணர்வார்ப் பெறின்

பரி.—(இ - ள்,) வேந்தர் தந்நோக்கு வேறுபாட்டின் றன்மையை அறியவல்ல அமைச்சரைப்பெறின் 1 அவர்க்கு மனத்துக்கிடந்த பகைமையையும் ஏனைக்கேண்மையையும் வேற்றுவேந்தர் சொல்லிற்றிலராயினும் 2 அவர் கண்களே சொல்லும், எ - று

இறுதிக்கட்கண் ஆகுபெயர் நோக்கு வேறுபாடாவன வெறுத்த நோக்கமும், உவந்த நோக்கமும் உணர்தல் - 3 அவற்றை அவ்வக் குறிகளா னறிதல்

தெளி —(இ - ள) கண்ணினவகைமை-(அரசர் தமது) பார்வை வேறுபாட்டினதன்மையை, உணர்வார் - அறியவல்ல மந்திரிகளை, பெறின் - பெற்றால், (அவர்க்கு) பகைமையுங் கேண்மையும்-(மனத்திலுள்ள) பகைத்தன்மையையும் மற்ற நட்புத்தன்மையையும், (வேற்றரசர் சொல்லாமற்போயினும்) கண் - (அவர்) கண்களே, உரைக்கும் - சொல்லும், எ - று

இறுதியிலுள்ளகண்ணென்னும் முதற்பொருளின்பெயர் அதன்பண்பாகிய வேறுபாட்டிற்காதலால் பொருளாகுபெயர் பார்வை வேறுபாடாவன

1 அவர்க்கு - மந்திரிகளுக்கு 2 அவர் - வேற்றுவேந்தரது
3 அவற்றை - பகைநட்புக்களை.

வெறுத்தபார்வையும், விரும்பியபார்வையும், உணர்தல் - அவைகளை அந்தந்தக் குறிகளால் அறிதல்.

(க - து) கண்ணின் வேறுபாட்டை யறியும் மந்திரிகள் வேற்றரசரது சிநேகத்தன்மையையும் பகைத்தன்மையையும் அவர் கண்களாலேயே யறிவர் என்பது. (கூ)

எ0. நுண்ணிய மென்பா ரளக்குங்கோல் காணுங்காற்
கண்ணல்ல தில்லை பிற.

**பரி.**—(இ - ள்.) யாம் நுண்ணறிவுடையே மென்றிருக்கும் அமைச்சர் அரசர் கருத்தினை யளக்குங் கோலாவது ஆராயுமிடத்து 1 அவர்கண்ணல்லது பிறவில்லை, எ - று.

அறிவினுண்மை அஃதுடையார் மேலேற்றப்பட்டது. 2 இங்கிதம், 3 வடிவு, தொழில் சொல்லென்பன 4 முதலாகப் பிறர்கருத்தளக்கு 5 மளவைகள் பல, 6 அவை யெல்லாம் முன்னறிந்தவழி 7 அவரான் மறைக்கப்படும், நோக்கம் மனத்தொடு கலத்தலான் 8 ஆண்டு மறைக்கப்படா தென்பது பற்றி, 9 அதனையே பிரித்துக் கூறினார். இனி 10 அளக்குங்கோல் என்று பாடமோதி, நுண்ணியமென்றிருக்கும் அமைச்சரை அரசரளக்குங்கோலாவது கண்ணென வுரைத்து, 11 தனவெகுளி நோக்கால் அவர் வெகுட்டற்குறிப் பறிகவென்பது கருத்தாக்குவாரு முளர். இவையிரண்டுபாட்டானும் நுண்கருவி நோ
கூறப்பட்டது.

**தெளி** —(இ-ள்) நுண்ணியமென்பார் - (யாம்) நுட்பவறிவுடையேமென்றிருக்கு மந்திரிகள், அளக்குங்கோல் - (அரசரது கருத்தை) அளக்குங்கோலாவது, காணுங்கால் - ஆராயுமிடத்து, கண்ணல்லது - (அவரது) கண்களல்லாமல், பிற - வேறு, இல்லை - எ - று.

அறிவினது நுட்பத்தை அவ்வறிவுடையார் மேலேற்றி 'நுண்ணிய மென்பார்' என்று கூறினதினால் இஃது இடத்து நிகழ்பொருளின் பண்பு இடத்தி

---

1 அவர் - அரசர் 2 இங்கிதம் - குறிப்பால் நிகழும் உறுப்பின் தொழில்.

3 வடிவு - குறிப்பின்றி நிகழும் வேறுபாடு

4 முதலாக என்றதனால் - குணத்தையுங் கொள்க

5 அளவைகள் - பிரமாணங்கள் அவை பிரத்தியட்சம், அனுமானம், உவமானம், உரை, அருத்தாபத்தி, அனுபலத்தியென்ப பலவாம்

6 அவையெல்லாம் - இங்கிதமுதலானவைகளை யெல்லாம்

7 அவரான் - பிறரால் 8 ஆண்டு - நோக்கம் மனத்தோடு கலக்குமிடத்து

9 அதனையே - நோக்கத்தையே

10 நுண்ணியமென்பாரளக்கும் கோல்கண் காணுங்கால் (கண்) அல்லது பிற இல்லை என்றன்வயப்படுத்திக் கண்ணினை யெழுவாயாகக் கூறினர் பிறவுரைகாரர்

11 தனவெகுளிநோக்கால் - கண்ணினது கோபத்தோடு கூடிய பார்வையால்

1 சொலலின்குழுவெனவே, 2 செஞ்சொல, 3 இலககணைசசொல, 4 குறிப்புசசொலலென்னும் மூவகைசசொலலுமடஙகின தூய்மை - அவற்றுள தமக்காகாதன வொழித்து ஆவனகோடல அவையென்றது ஈணடு அதனளவை 5 அது மிகுதி, ஒபபு, தாழவென மூவகைத்து அறிதல-தமமொடு 6 தூக்கியறிதல ஆராயதல - இவவவைக்கட சொலலுஙகாரியம இது, சொல்லுமாறிது, சொனனால அதன் முடிவிது வென்று இவையுளளிட்டன வாராயதல

தெளி.—(இ - ள.) சொல்லினறொகை - சொலலின கூட்டததை, அறிநத - தெரிநத, தூயமையவா - டரிசுத்தகுணமுடையவா, (தாம ஒன்று சொலலுமிடத்து) அவை - (அபபொழுதுள்ள) சபையை, அறிநது - தெரிநது, ஆராயந்து - சொலலுக-சொல்லக்கடவா, எ-று.

சொலலின்தொகையெனவே, செஞ்சொல, இலககணைசசொல, குறிப்புசசொலஎன்னும் மூவகைசசொலலும் அடஙகின தூய்மை-அசசொறகளில் தமக்

---

1 "ஆகசும பிரதிபடாததுடன" என்னுஞ் செயயுளி னுரையில பிரயோக விவேக நூலா 'அலஙகார நூலா அபிதை, இலககணை, வியஞ்சனாவிருததி யென மூன்று வகையாககூவா, அவா மதம பறறிய பரிமேலழகரும் 'சொலலின தொகையறிந்த தூயமையவா' என்னுந் திருவளளுவா குறளுள் 'செஞ்சொல, இலககணைசசொல, குறிப்புசசொல எனபா" என்று கூறியிருககிறா

2 செஞ்சொல - நேராறறலால பொருளைததருவது. [நேராற்றலாவது இச்சொலலா லிபபொருளையறிக எனனும சஙகேதம்(இசசை) அது கடம படம் என்னும பதஙகள கலசம வஸதிரம என்னும பொருளை யறிவிப்பன போலவாம

3 இலககணைசசொல - பெயராக வினையாக நிறகும சொறகள் தத்தம பொருளையுணாததாது, பொருளின் சமபநதப பொருளையும தாறபரியப பொருளையும அறிவித்தல அதுகடலில கரைகினறது, கஙகையினிடைசசேரி என்றாறபொலவனவாம இலககணைசசொல எனினும ஆககசசொல எனினும ஒககும தருககசஙகிரகம "இலக்கணையும சததத்தினுடைய ஆறறலுடைத்தாகற பாலதன சமபநதம இலககணை அது கஙகையினிடைசசேரி எனபது" என்று கூறுகினறது

4 குறிப்புசசொல-குறிப்பாற பொருளுணர்த்துவது (குறிப்பாவது செமபொருளும ஆக்கப்பொருளும அலலாத வேறுபொருளை யுணர்த்தும்தனமையாம) வெஙகியமெனினும குறிப்பெனினும ஒககும, இது "செலலாமை யுணடே லெனககுரை மறறுநின், வலவரவு வாழவாாககுரை" என்றாற்போலவது இதிலவலவரவு எனபதும வாழவாா என்பதும தலைவியுயிரோடிராளென்பதனையும அவளபபடியாக யானும் உயிரோடிரேன் என்பதனையும குறிப்பித்து நினறன தாாககீகா குறிப்புசசொல செஞ்சொல ஆக்கச்சொல் என்னும மிவறறுளடஙகும எனபா

5 அது - சபையின அளவு. 6 தூககி - நிறுத்தி

கு ஆகாதவை ஒழித்து ஆவனவைகொள்ளல் சபையெனறது இருக்குஞ்சபையி ளளவினை அவ்வளவு மிகுதி, ஒப்பு, தாழ்வு என மூவகைப்படும். அறிதல்-தம வோசி துக்கி அறிதல். ஆராய்தல்-இச்சபையிலே சொல்லப்படுமெகாரியமிது, சொல்லும் விதம் இது, சொன்னால் அதன் முடிவு இதுஎன்று இவ்வுள்ளிட்டவைகளை ஆராய்தல்

(க-து) சொல்லின் தொகையை யறிந்தவர் சபையறிந்து சொல்லக்கடவர் என்பது. (க)

உ. இடைதெரிந்து நன்குணர்ந்து சொல்லுக சொல்லின்
நடைதெரிந்த நன்மை யவர்,

**பரி.**—(இ-ள்) சொற்களின் நடையினை ஆராய்ந்தறிந்த நன்மையினை யுடையார் அவைக்கண் ஒன்று சொல்லுங்கால் 1 அதன் செவ்வியை யாராய்ந்தறிந்து வழுப்படாமல் மிகவுந் தெளிந்து சொல்லுக, எ-று.

சொற்களினடையாவது 2 அம்மூவகைச் சொல்லும் செம்பொருள், இலக்கணைப்பொருள், குறிப்புப்பொருளென்னும் பொருள்களைப் பயக்குமாறு செவ்வி-கேட்பாரது விருப்புடைமை வழு- 3 சொல்வழுவும் பொருள்வழுவும் இவையிரண்டுபாட்டாலும் ஒன்று சொல்லுங்கால் அவையறிந்தே சொல்லவேண்டுமென்பது கூறப்பட்டது.

**தெளி**—(இ-ள்) சொல்லினடை-சொற்களதுநடையை, தெரிந்த-ஆராய்ந்து அறிந்த, நன்மையவர் - நன்மையையுடையவர், (சபையினிடத்து ஒன்று சொல்லுமிடத்து) இடைதெரிந்து - (அதன்) சமயத்தை ஆராய்ந்தறிந்து, நன் குணர்ந்து - (வழுப்படாமல்) மிகவுந் தெளிந்து, சொல்லுக - சொல்லக்கடவர், எ-று.

சொற்களினடையாவது அம்மூவகைச்சொல்லும் செம்பொருள், ஆக்கப்பொருள், குறிப்புப்பொருளென்னும் அருத்தத்தை உணர்த்தும் விதம் சமயம் - கேட்குதலில் ஆசையுடைமை, வழு - சொல்வழுவும்பொருள்வழுவும் இவை இரண்டுபாட்டாலும் ஒன்றுசொல்லும்போது சபையறிந்தே சொல்ல வேண்டுமென்பது சொல்லப்பட்டது,

(க-து) சொல்லினடை யறிந்தவர் சபையின்கண் சமய மறிந்து சொல்லக்கடவர் என்பது (உ)

௩. அவையறியார் சொல்லன்மேற் கொள்பவர் சொல்லின்
வகையறியார் வல்லதூஉ மில

1 அதன் - சபையின.

2 அம்மூவகைச்சொல் - செஞ்சொல், இலக்கணைச்சொல், குறிப்புச்சொல்.

3 சொற்குற்றமும் பொருட்குற்றமும்.

**பரி**—(இ-ள்) அவையின தளவை யறியாது ஒன்று சொல்லுதலைத் தமமேற் கொளவார் அச்சொல்லுதலின் கூறுபாடுமே அறியார், கற்று வல்ல 1 கலையும் அவர்க்கில்லை, எ-று.

அம்மூவகைச்சொற்களால் வருஞ் சொல்லுதல் வகைமை கேட்பாரது உணர்வு வகைமைபற்றி வருதலாற் 'சொல்லின் வகையறியார்' என்றும், 2 இஃதறியார் யாதுமறியாரென்று எல்லாராலு மிகழப்படுதலின் 'வல்லதூஉமில்' என்றுங் கூறினார். இதனால் அவையறியாக்கால் வருங்குற்றம் கூறப்பட்டது.

**தெளி**—(இ-ள்) அவை - சபையினதளவை, அறியா - அறியாதவராகி, சொல்லல் - ஒன்று சொல்லுதலை, மேற்கொள்பவர் - தமமேற்கொள்வார், சொல்லின்வகை - அச்சொல்லின் கூறுபாடும், அறியார் - அறியாதவராவர், வல்லதூஉம் - (கற்று) வல்லகலையும், இல் - (அவர்க்கு) இல்லை, எ-று.

செறிசொல் முதலாய மூவகைச்சொற்களாலுண்டாகும் சொல்லுதல் வகைமை கேட்பாருணர்வு வகைமை பற்றிவருதலால் 'சொல்லின்வகையறியார்' என்றும், இஃதறியார் யாதுமறியாரென்று எல்லாராலும் இகழப்படுதலால் 'வல்லதூஉமில்' என்றும் சொல்லினார். இதனால் சபையை அறியாதவிடத்து வரும் குற்றம் சொல்லப்பட்டது.

(க-து) சபையின் அளவறியாது பேசத்தொடங்குபவர் சொல்லின் வகையறியார் என்பது. (௩)

௪. ஒளியார்முன் ஒள்ளிய ராதல் வெளியார்முன்
வான்சுதை வண்ணங் கொளல்.

**பரி**—(இ-ள்) அறிவானொளியார் அவைக்கண்ணுமொள்ளியராக; 3 ஏனைவெள்ளைக ளவைக்கண் ணாமும் 4 வாலிய சுதையி னிறத்தைக் கொள்க, எ-று.

ஒள்ளியாரென்றது 5 மிக்காரையும் ஒத்தாரையும் அதிகாரத்தால் ஒளியாரென நின்றது ஒள்ளியராதல் தந்நூலறிவுஞ் 6 சொல்வன்மையுந் தோன்ற விரித்தல் 7 அவையறியாத புல்லரை வெளியாரென்றது, வயிரமின் மரத்தை

1 கலையும் - சாஸ்திரவுணர்ச்சியும்.
2 இஃதறியார் - சொல்லின்வகையறியாதவர்
3 ஏனைவெள்ளைகள் - மற்றைப்பேதைகளது.
4 வாலிய - வெண்ணிறமுள்ள.
5 மிக்காரையும் ஒத்தாரையும் - தம்மினும் மேம்பட்டவரையும் தமக்குச் சமானமானவர்களையும்
6 சொல்வன்மை - தாமமேற்கொண்டுள்ள காரியத்தைமுடித்தற்கியன்ற சொற்களைச் சொல்லுந் திறம்.
7 அவையறியாதபுல்லரை - கற்பன இன்றாகிக் கல்விக்கழகத்துஓறகமின் றவாயங் காக்கும் அற்பரை.

[1] வெளிறென்னும் வழக்குப்பற்றி அவர் மதிக்கும் வகை அவரினும் வெண்மையுடையராக வென்பார் 'வான்சுதைவண்ணங்கொளல்' என்றார் அவையள வறிந்தார் செய்யுந்திறம் இதனால் தொகுத்துக் கூறப்பட்டது முன்னர் விரித்துக் கூறுப.

தெளி.—(இ - ள்) ஒளியார்முன் - (அறிவால்) ஒள்ளியாரது சபையினிடத்து, ஒள்ளியராதல் -(தாமும்) ஒள்ளியராகக்கடவர், வெளியார்முன் -(மற்றை) வெள்ளைகளது சபையினிடத்து, வான்சுதைவண்ணம் -(தாமும்) வெண்சுண்ணச் சாந்து நிறத்தை, கொளல் - கொள்ளக்கடவர், எ - று.

ஒள்ளியாரென்றது செய்யுள் விகாரத்தால் ஒளியாரென நின்றது ஒளியாரென்றது மிக்காரையும், ஒத்தாரையும். ஒள்ளியராதல் - தமது நூலறிவுஞ் சொல்வன்மையுந் தோன்ற விரித்துரைத்தல் வயிரமில்லாதமரத்தை வெளிறு என்னும் வழக்குப்பற்றிச் சபையறியாத புல்லரை வெளியார் என்றார் அவர் மதிக்கும்படி அவரினும் வெண்மையுடையராக வென்பார் 'வான் சுதைவண்ணங்கொளல்' என்றார் சபையளவறிந்தார் செய்யுந்திறம் இதனால் தொகுத்துச் சொல்லப்பட்டது மேல் விரித்துக் கூறுவார்

(க - து) அறிவாளரது சபைமுன் அறிவாளராயிருந்து அஃதில்லாரது சபைமுன் தாமும் அறிவில்லார்போ லிருக்கக்கடவர் என்பது. (௪)

௫ நன்றென்ற வற்றுள்ளு நன்றே முதுவருண்
முந்து கிளவாச் செறிவு

பரி.—(இ - ள்) ஒருவற்கு இது நன்றென்று சிறப்பித்துச் சொல்லப்பட்ட குணங்களெல்லாவற்றுள்ளும் நன்றே தம்மின் மிக்காரவைக்கண் அவரின் முற்பட்டு ஒன்றனைச் சொல்லாத அடக்கம், எ - று.

தங்குறைவும், அவர்மிகுதியும், முந்துகிளந்தாற்படும் இழுக்கும், கிளவாக்கால் எய்து நன்மையும் அறிந்தே யடங்கினமையின், அவ்வடக்கத்தினை 'நன்றென்

1 அரியகற்றாசற்றார் கண்ணும் என்னுங் குறளிலுள்ள "இன்மையரிதே வெளிறு" என்பதற்கு வெண்மையில்லாமையரிது என்று கூறியிருத்தலு மிங்கறியத் தக்கதாம். இங்கே வெண்மை அறிவின்மையை யுணர்த்துகின்றது. இது பெருந்தேவனார் பாரதம் உத்தியோகபர்வத்தில் பலராமனை நோக்கிச் சாத்தகி "மேனியைக்காட்டின் வெளுத்ததே" என்று கூறுவதனாலும் பிறவாற்றானு மறியப்படும் வெண்மைப்பண்பு பலபொருளுணர்த்துதலை இலக்கணக்கொத்தின் "பண்புத்தொகை விதி" என்னுஞ் சூத்திரவுரையிற் கண்டு கொள்க

றவற்றுள்ளு நன்று' என்றார். முன்கிளத்தலையே விலக்கினமையின், உடன்கிளத்தலும் பின்கிளத்தலுமா மென்பது பெற்றாம். இதனான் மிக்காரவைக்கட் செய்யுந்திறங் கூறப்பட்டது.

தெளி.—(இ-ள்) முதுவருள் - (தம்மின்) மிகுந்தவரது சபையினிடத்து. முந்து -(அவருக்கு) முற்பட்டு, கிளவா -(ஒன்றைச்) சொல்லாத, செறிவு - அடக்கம், நன்றென்பவற்றுள்ளும் -(ஒருவனுக்கு இது) நல்லதென்று சிறப்பித்துச் சொல்லப்பட்ட குணங்களெல்லாவற்றுள்ளும், நன்றே சிறந்ததே, எ - று.

தன்னுக்குயர்ந்தவர், அவர் மிகுதியும், அவர் சொல்லுந்தரத்து முன்னே சொன்னால் உண்டாகிற குற்றமும், சொல்லாவிட்டால் வருகிற நன்மையும் அறிந்தே அடக்கினதால் அவ்வடக்கத்தை 'நன்றென்பவற்றுள்ளு நன்றே' என்றார். முன் சொல்லுதலையே விலக்கினமையால், உடன்சொல்லுதலும், பின்சொல்லுதலும் ஆமென்பது பெறப்பட்டது. இதனால் மிகுந்தவரது சபையினிடத்துச் செய்யுமவை சொல்லப்பட்டது.

(க-து) அறிவாளரது சபையிற் கொள்ளும் அடக்கமானது எல்லா நன்மைகளுள்ளும் சிறந்த நலமாம் என்பது. (௫)

௬ ஆற்றி னிலைதளர்ந் தற்றே வியன்புலம்
ஏற்றுணர்வார் முன்ன ரிழுக்கு

பரி.—(இ-ள்) விடையத்தைப் பொருட்டு 1 நன்னெறிக்க ணின்றொருவன் 2 அந்நெறியினின்றும் நிலைதளர்ந்து வீழ்ந்தாலொக்கும் அகன்ற நூற்பொருள்களை யுட்கொண்டு 3 அவற்றின் மெய்ம்மை யுணரவல்லா ரவைக்கண் வல்லானொருவன் 4 சொல்லிழுக்குப்படுதல், எ - று.

நிலைதளர்ந்து வீழ்தல் 5 உரனென்னுந் தோட்டியா னோரைந்துங் காத்

---

1 நன்னெறிக்கண் - விரதஞானங்களில்.

2 அந்நெறியினின்றும் - நன்னெறியிலிருந்து.

3 அவற்றின் மெய்ம்மையுணரவல்லார் - (அகன்ற நூற்பொருளினது) நுண்மையையறியவல்லவர் "புராண மிதிகாச மெவையும் பொருளினைத்தின் பிராண னறியாதுள விடத்திவை பிதற்றே" என்றுமுன்றோர் கூறியிருத்தலு மிங்கறியத்தக்கதாம்

4 சொல்லிழுக்குப்படுதல் - சொற்சோர்வடைதல் அஃதாவது சொல்லுஞ் சொல்லில் குற்றமுண்டாகும்படி சொல்லுதல்.

5 நீத்தார் பெருமை ௪ இதன்பொருள் அறிவென்னும் அங்குசத்தினால் (மெய் வாய் கண் மூக்குச் செவி யென்னும்) ஐம்பொறிகளாகிய யானைகளைத் தம்தம் (பரிசாதி) விஷயங்களில் செல்லாதபடி தடுத்துநடப்பவன

தொழுகியான் பின்னிழுக்கிக் 1கூடாவொழுக்கத்தனாதல் 2பயனிழத்தலே யன்றி இழிக்கப்படுதலு முண்டாம். இதனான் அத்தகை யிழுக்கியவழிப் படுங் குற்றங் கூறப்பட்டது.

தெளி.—(இ-ள்) வியன்புலம் - விரிந்த நூற்பொருள்களை, ஏற்று - உட்கொண்டு, உணர்வார் முன்னர் - (அவைகளின் மெய்ம்மையை) அறியவல்லவர் சபையில், இழுக்கு - (கல்லாதொருவன்) சொல்லிழுக்குப் படுதல், (முற்றியவனைத் தொடர்ந்து நல்வழியினின்றவனொருவன்) ஆற்றின் - அவ்வழியினின்று, நிலைதளர்ந்தற்றே - நிலைதளர்ந்து வீழ்ந்தாலொக்கும், எ-று.

நிலைதளர்ந்துவீழ்தல் - அறிவோடு கூடி யொழுகியவன் பின் தவற்றிக் கூடாவொழுக்கத்தானாகுதல் பயனிழத்தலேயன்றி இகழவும் படுவானென்றவாம். இதனால் அச்சபையில் தவறியவிடத்துண்டாம் குற்றம் சொல்லப்பட்டது.

(க - து.) கற்றவர் சபையில் கல்லாதவனொருவன் இழுக்குப் படுதல் நல்வழியில் நின்றொருவன் தீயவழியில் வீழ்ந்தாற் போலும் என்பது. (௬)

எ. கற்றறிந்தார் கல்வி விளங்குங் கசடறச்
சொற்றெரிதல் வல்லா ரகத்து.

பரி.—(இ-ள்) 3வழுப்படாமற் சொற்களை யாராய்தல் வல்லா ரவைக் கட்சொல்லின், பல நூல்களையுங் கற்று 4அவற்றின் பயனை யறிந்தாரது கல்வி யாவார்க்கும் விளங்கித் தோன்றும், எ-று.

5சொல்லினென்பது அவாய்நிலையான் வந்தது. 6ஆண்டே சொல்க வென்றவாம்.

தெளி.—(இ-ள்) கசடற - வழுப்படாமல், சொற்றெரிதல் - சொற்களை ஆராய்தலில், வல்லாரகத்து - வல்லவர் சபையினிடத்தே, (சொல்லினால்) கற

---

1 கூடாவொழுக்கத்தனாதல் - தாம் விட்டகாமத்தை உறுதியில்லாமையினால் பின்னும் விரும்பித் தவத்தோடு பொருந்தாத கொடிய நடக்கையை யுடையனாதல்.

2 பயனிழத்தலேயன்றி - கல்வியில் வல்லான் தான் கற்ற கல்வியின் பிரயோசனத்தைப் போக்கடித்துக் கொள்ளுதலே யல்லாமல்.

3 வழுப்படாமல் - குற்றம் உண்டாகாமல். 4 அவற்றின்- பல நூல்களினுடைய.

5 வல்லாரகத்து என்பது சொல்லின் என்பதை வேண்டிநின்றது.

6 ஆண்டே-வழுப்படாமல் சொற்களை யாராயவல்லவருள்ள சபையினிடத்தே.

று - (பலநூலகளையும்) கற்று, அறிந்தார் - (அவைகளாலாகிய பயனை) அறிந்தவரது, கல்வி - கல்வியானது, விளங்கும் - (யாவர்க்கும்) விளங்கித்தோன்றும், எ-று

சொல்லின் என்பது ஆவாயகியால்வந்தது அப்படிப்பட்ட சபையிலே பேசொல்லக்கடவரென்பதாம்

(க - து) குற்றமறக் கற்றவரது சபையில் கற்றவரது கல்வி விளங்கித்தோன்றும் என்பது. (எ)

அ உணர்வ துடையார்முற் சொல்லல் வளர்வதன்
பாத்தியு ணீர்சொரிந் தற்று

பரி — (இ - ள்.) பிறருணர்த்தவேண்டிய பொருள்களைத் தாமே புணரவல்ல அறிவினையுடையார் அவைக்கட் கற்றார் ஒன்றனைச் சொல்லுதல் தானே வளர்வதொரு பயிர் நின்ற பாத்திக்கண் நீரினைச் சொரிந்தாற்போலும், எ-று

தானேயும் வளர்தற்குரிய கல்வி மிக வளருமென்பதாம் இவையிரண்டு பாட்டானும் ஒத்தாரவைக்கண் வெல்லுமாறு சொல்லுமென்பது கூறப்பட்டது

தெளி.—(இ - ள் ) உணர்வது-(பிறருணர்த்துதலில்லாமல் பொருள்களைத்தாமே) அறியவல்ல அறிவினை, உடையார்முன்-உடையவர் சபையினிடத்து, சொல்லல் - (கற்றவர் ஒன்றைச்) சொல்லுதல், வளர்வதன் - (தானே)வளர்வதொருபயிர்நின்ற, பாத்தியுள் - பாத்தியினிடத்து, நீர்சொரிந்தற்று-நீரைச் சொரிந்தாற்போலும், எ - று

தானேயும் வளர்தற்குரிய கல்வி மிக வளருமென்பதாம் இவை இரண்டு பாட்டாலும் ஒத்தாரது சபையினிடத்து எவ்வழியும் சொல்லக்கடவரென்பது சொல்லப்பட்டது

(க - து) கற்றவர் சபையில் கற்றவர் ஒன்றைச் சொல்லுதல் தானேவளரும் பயிர் நிறைந்த பாத்தியுள் நீர் பெய்தாற்போல ஓங்கும் என்பது (அ)

௯. [1] புல்லவையுட் பொச்சாந்துஞ் சொல்லற்க [2] நல்லவையு
ணன்கு செலச்சொல்லு வார்.

---

1 "அவையின் திறமப்பியா ராயந்தமைந்து சொல்லார், நவையின்றித் தாமுரையார் நான்றா - சுவைபுணரார், ஆய்கலைதெரியா ருசா ரவரன்றே, தீய வவையோர் செருக்கு' என்று வச்சணந்திமாலை புல்லவையைப் பற்றிக் கூறுகின்றது

2 "புகழுந் தருமநெறி நின்றோர்பொய் காமம், இகழுநர்சினஞ் செற்றமில்லோர் - நிகழுங்கலைகள், எல்லா முணர்ந்தோ ரிருந்த விடமன்றோ, நல்லா யவைக்கு நலம்" என்று ஷெ மாலை நல்லவையைப்பற்றிக் கூறுகின்றது.

பரி.—(இ-ள்) கற்றுவல்லவை அல்லாதவை என்னும் அவைவகையினை அறிந்து வல்லவைக்கண் ஒன்று சொல்லுங்கால் அச்சத்தான் வழுப்படச் சொல்லார் சொல்லின் றொகையெல்லாமறிந்த தூய்மையினை யுடையார், எ-று.

1 இருந்தாரது வன்மை அவைமேல் ஏற்றப்பட்டது. 'வல்லவை' யென்பதற்குத் தாங்கற்றுவல்ல நூற்பொருள்களை யென்றுரைப்பாருமுளர். அச்சத்தானென்பது அதிகாரத்தான் வந்தது. சொல்லின்றொகை, தூய்மை யென்பனவற்றிற்கு மேலுரைத்தாங் குரைக்க.

தெளி.—(இ-ள்) சொல்லின்றொகை யறிந்த - சொற்களது தொகையெல்லாம் அறிந்த, தூய்மையவர் - பரிசுத்த குணமுடையவர், வகையறிந்து - (கற்றுவல்லார்சபை கல்லாதார்சபை என்கிற சபையின்) வகையினை யறிந்து, வல்லவை - கற்றுவல்லசபையில், (ஒன்று சொல்லும்போது) வாய்சோரார் - (அச்சத்தால்) பிழைபடச் சொல்லார், எ-று.

இருந்தாரது வல்லமை சபைமேல் ஏற்றப்பட்டது. வல்லவை யென்பதனை அகரந்தொக்குநின்ற குறிப்புப்பெயரெச்சத் தொடராகக் கொள்ளாது அஃறிணைப்படன்மை வினையாலணையும் பெயராக்கி அதற்குத் தாங்கற்றுவல்ல நூற்பொருள்களையென்றுரை கூறுவாருமுண்டு. அச்சத்தால் என்பது அதிகாரத்தால் வந்தது. சொல்லின் றொகை, தூய்மை யென்பனவற்றிற்கு அவையறிதலின் முதற்குறளிற் கூறியபடி கூறிக்கொள்க.

(க-து.) சொல்லினது தொகையை யறிந்தவர் சபையினது வகையை யறிந்து பிழைபடச் சொல்லார் என்பது. (க)

உ கற்றாருட் கற்றா ரெனப்படுவர் கற்றார்முற்
கற்ற செலச்சொல்லு வார்

பரி.—(இ-ள்) கற்றாரெல்லாரினும் இவர் நன்கு கற்றாரென்று உலகத்தாராற் சொல்லப்படுவார், கற்றாரவைக்கண் அஞ்சாதே தாங்கற்றவற்றை அவர் மனங்கொள்ளும்வகை சொல்லவல்லார், எ-று.

உலகமறிவது 2 அவரையே யாகலின், அதனாற் புகழப்படுவாரும் அவரென்றாம்.

தெளி.—(இ-ள்) கற்றார்முன் - கற்றோர் சபையினிடத்தே, (அஞ்சாமலே) கற்ற - (தாம்) கற்றவைகளை, செல - (அவர்) மனங்கொள்ளும்வகை,

---

1 அவையில் இருந்தவரது வன்மையை அவையின்மேல் ஏற்றி வல்லவை என்று கூறினமையால் இஃது இடத்துநிகழ் பொருளின் குணம் இடத்தின்மே லாய உபசார வழக்கு.

2 அவரையே - கற்றவரது சபையில் அஞ்சாமலே தாங்கற்றவற்றை அக்கற்றார் மனங்கொள்ளுமாறு சொல்லவல்லவரையே.

சொல்லுவார் - சொல்லவல்லவர், கற்றாருள் - கற்றவரெல்லாரினும், கற்றார் - (இவர்) நன்றாகக் கற்றவர், எனப்படுவர் - என்று (உலகத்தோராலே) சொல்லப்படுவார், எ-று.

உலகமறிவது அவரையே யாகலின், அவருலகத்தினாலேபுகழப்படுவாரும் அவரென்பதாம்.

(க - து) கற்றவரது சபையில் கற்றவைகளை அங்கீகரிக்கச் சொல்ல வல்லவரே கற்றோராவர் எனபது. (உ)

௩ பகையகத்துச் சாவா ரெளிய ரரிய
ரவையகத் தஞ்சா தவர்

பரி — (இ - ள்) பகையிடை யஞ்சாது புக்குச் சாவவல்லார் உலகத்துப் பலர், அவையிடை யஞ்சாதுபுக்குச் சொல்லவல்லார் சிலர், எ-று.

1 அஞ்சாமை சாவாரெனபதனோடுங் கூட்டி, 2 அதனாற் சொல்லவல்லா ரெனபது வருவித் துரைக்கப்பட்டது. இவை மூன்று பாட்டானும் அவையஞ்சாது சிறப்புக் கூறப்பட்டது.

தெளி — (இ - ள்) பகையகத்து - பகையினிடத்து, சாவார் - (அஞ்சாமலேபோய்) இறக்கவல்லவர், எளியர் - (உலகத்துப்) பலர், அவையகத்து - சபையினிடத்து, அஞ்சாதவர் - அஞ்சாமற் (போய்ச்) சொல்ல வல்லவர், அரியர் - சிலர், எ-று.

அஞ்சாமை சாவாரெனபதனோடும் கூட்டி, அதனாலே சொல்லவல்லவரெனபது வருவித்துச்சொல்லப்பட்டது. இவை மூன்றுபாட்டாலும் சபைக்கு அஞ்சாதவரது சிறப்புச் சொல்லப்பட்டது.

(க - து) சபையில் அஞ்சாது பேசவல்லவர் சிலரே யாவர் எனபது. (௩)

௪ கற்றார்முற் கற்ற செலச்சொல்லித் தாங்கற்ற
மிக்காருண் மிக்க கொளல்

பரி — (இ - ள்) பலநூல்களையுங் கற்றாரவைக்கட் டாங்கற்றவற்றை அவர் மனங்கொள்ளு மாற்றாற் சொல்லி அவற்றின் மிக்கபொருள்களை அம்மிகக் கற்றாரிடத் தறிந்துகொள்க, எ-று.

எல்லாம் ஒருவர்க்குக் கற்றல் கூடாமையின் வேறுவேறாய கல்வியுடையார் பலரிருந்த அவைக்கட் டாங்கற்றவற்றை அவர்க்கேறபச் சொல்லுக,

1 அஞ்சாதவரது தொழிலான அஞ்சாமையைச் சாவார் என்பதனோடுங் கூட்டப்பட்டது.
2 அதனால் - அஞ்சாமையினால்

சொல்லுதலே, 1 அவரும் 2 அவையெல்லாஞ்சொல்லுவராகலின், ஏனைக்கற்கப் பெற்றன கேட்டறியலாமென்பதாயிற்று இதனால் அதன் 3 ஒருசார்பயன் கூறப்பட்டது.

தெளி —(இ-ள்.) கற்றார்முன் - (பலநூல்களையுங்) கற்றோர் சபையினிடத்து, கற்ற - (தாம்) கற்றவைகளை, செல - (அவர்) மனங்கொள்ளும்படியால், சொல்லி - கூறி, தாங்கற்ற - தாங்கற்றவைகளினும், மிக்க - அதிகமான பொருள்களை, மிக்காருள் - அவ்வதிகமாகக் கற்றவரிடத்து, கொளல் - (அறிந்து) கொள்ளக்கடவர், எ-று.

எல்லோரொருவருக்குங் கற்றல் கூடாமையால் வேறுவேறாகிய கல்வியுடையவர் பலரிருந்த சபையில் தாங்கற்றவைகளை அவர் மனங்கொள்ளும்படி சொல்லக்கடவர், சொல்லவே, அவரும் அவைகளையெல்லாம் சொல்லுவாராதலால், மற்றைக் கற்கப்பெற்றவையெல்லாம் கேட்டறியலாமென்பதாயிற்று. இதனால் அவைக்கஞ்சாமையினது ஒருசார் பயன் சொல்லப்பட்டது.

(க - து.) கற்றவரிடத்தில் தாங்கற்றவற்றைச் சொல்லித் தாங் கல்லாதவற்றை யவரிடத்து அறிந்து கொள்ளல்வேண்டுமென்பது (ச)

௫. ஆற்றி னளவறிந்து கற்க வவையஞ்சா
மாற்றங் கொடுத்தற் பொருட்டு.

பரி —(இ-ள்) சொல்லிலக்கண நெறியானே அளவைநூலை அவைச்சா உட்படக் கற்க, வேற்று வேந்தரவையிடை யஞ்சாது 4 அவர் சொல்லிய சொற்கு உத்தரஞ் சொல்லுதற்பொருட்டு, எ - று.

5 அளவைநூல் 6 சொன்னூல் கற்றே கற்க வேண்டுதலின், 7 அதற் 8கஃதாறெனப்பட்டது. 9 அளக்குங் கருவியை அளவென்றார், ஆகுபெயரான்

---

1 அவரும் - வேறு வேறாய கல்வியுடையாரும்

2 அவையெல்லாம் - வேறுவேறாய கல்விகளையெல்லாம்

3 ஒருசார்பயன் - ஒருவகைப் பிரயோஜனம்.

4 அவர் - வேற்றுவேந்தர்.

5 அளவைநூல் - தருக்கநூல்.

6 சொன்னூல் - சொல்லிலக்கணநூல் (சப்தசாஸ்திரம்).

7 அதற்கு - தருக்கநூலுக்கு.

8 அஃதாறெனப்பட்டது - சொல்லிலக்கணநூல் வழி யென்று கூறப்பட்டது

9 அளவென்னும் கருவியின் பெயர் அதன்காரியமாய (அதனாலுணர்தற்பாலதாய) அளக்குங்கருவிக்காதலால் கருவியாகுபெயர். அளவின்வகையைப்பற்றி அருளுடைமையின் இரண்டாவது குறளின் விசேடவுரையிலும் கூறியிருப்பதைக் கண்டுகொள்க.

1 அவர் சொல்லை வெல்லவொருசொற் சொல்லலாவது நியாயத்தது 2 வாத ஜெற்ப விதண்டைகளும் சல சாதிகளும் 3 முதலியவற்றாலாகவே யாகலின், 4 அவற்றைப் பிழையாமற் கற்கவென்பதாம். இதனால் 5 அதன் காரணங் கூறப்பட்டது.

**தெளி** —(இ - ள்.) அவை -(வேற்று வேந்தர்) சபையில், அஞ்சா - அஞ்சாமல், (அவ்வேற்று வேந்தர் சொல்லிய சொற்கு) மாற்றங்கொடுத்தற் பொருட்டு - உத்தரஞ் சொல்லுதல் நிமித்தம், ஆற்றின் - (சொல்லிலக்கண) வழியாலே, அளவு - அளவை நூலை, அறிந்து - உட்பட்டு, கற்க (மந்திரிகள்) கற்கக்கடவர் எ - று.

அளவை நூல் சொல்லிலக்கணங் கற்றே கற்கவேண்டுதலால் அதற்கு அஃது ஆறு எனப்பட்டது. அளக்குங் கருவிடைக்கருவி யாகுபெயரால் அளவு என்று கூறப்பட்டது. அவர் சொல்லை வெல்வதாகிய வொருசொல் சொல்லலாவது நியாய நூலில் வாதஜெற்ப விதண்டைகளும், சலசாதிகளு முதலியனவற்றைக் கற்றவர்க்கே யாதலால், அவைக்கட் பிழைபடாமல் கற்கக்கடவரென்பதாம். இதனால் அதன் காரணஞ் சொல்லப்பட்டது.

(க - து) சபைக்குப் பயப்படாது எதிருத்தரஞ் சொல்லுதற் பொருட்டுத் தருக்கநூல் கற்றல் வேண்டும் என்பது. (ரு)

---

1 அவர் - வேற்றுவேந்தர்

2 வாதம் - தத்துவ (உண்மை)ப் பொருளைப்பறியும் வேட்கை (விருப்பம்) யுடைய புருடர்களிருவரில் ஒருவருக்கொருவர் உண்டாகும் வினாவிடையாகிய [illegible]

ஜல்பம் -(ஜெற்பம்) ஒருவரையொருவர் வெல்லவேண்டுமெனனும் விருப்புடைய புருஷர்களது இரண்டு பக்ஷங்களையும் ஸ்தாபித்தலாகிய கதை.

விதண்டை - வெல்லும் வேட்கையுடைய புருஷர்கள் தமது பக்ஷத்தை ஸ்தா

சலம் - ஒருபொருள் கருதிச்சொல்லியதற்கு வேறுபொருள் கற்பித்துக்கொண்டு பழித்தல்

சாதி - போலி, உத்தரம் என்று தருக்க நூல் கூறுகின்றது

3 முதலிய என்றதனால் வாதம் பேசுவார் தோல்வி யுறுதற் கேதுவாய தோல்வித்தானம், ஏதுப்போலி, ஆன்மாசிரயம், அந்நியோன்யாசிரயம், சக்கிரிகை, அநவஸ்தை பிரமாணபாதிதார்த்தப் பிரசங்கம், வினிகமந விரகம் முதலியவைகளையும் கொள்க

4 அவற்றை - வாதஜெற்பமுதலானவைகளை.

5 அதன்காரணம் - அவையஞ்சாமையின் காரணம் (சொல்லிலக்கண நெறியானே அளவை நூல் கற்றல்)

௬ வாளொடென் வன்கண்ண ரல்லார்க்கு நூலொடென்
நுண்ணவை யஞ்சு பவர்க்கு[1]

பரி—(இ-ள்) வன்கண்மை யுடையரல்லாதார்க்கு வாளோ டென்ன வியைபுண்டாம், அதுபோல நுண்ணியாருடைய வவையை யஞ்சுவார்க்கு நூலோடெ ன்ன வியைபுண்டாம், எ-று.

இருந்தாரது நுண்மை அவைமே லேற்றப்பட்டது. [2] நூற்குரியரல்ல ரென்பதாம்.

தெளி—(இ-ள்) வன்கண்ண ரல்லார்க்கு - சௌரியமுடையரல்லாதார்க்கு, வாளொடு - வாளாயுதத் தொடு, என - என்ன (சம்பந்தமுண்டு), (அதுபோல்) நுண்ணவை - புத்திநுட்ப முடையவரது சபையை, அஞ்சுபவர்க்கு - அஞ்சுவோர்க்கு நூலொடு - நூலோடே, என - என்ன (சம்பந்த முண்டு), எ-று.

இருந்தாரது நுட்பஞ் சபையின்மேல் ஏற்றப்பட்டது. நூலுக்கு உரியவரல்ல ரென்பதாம்.

(க-து) சபையைக் கண்டஞ்சுவோர் கற்ற கல்வி பயனற்றதா மென்பது (௬)

௭. பகையகத்துப் பேடிகை யொள்வா ளவையகத்
தஞ்சு மவன்கற்ற நூல்.

பரி—(இ-ள்) எதிர்ப்பட்டுழிப் பகைக்கு [3] அதனை யஞ்சும் பேடி பிடித்த கூர்வாளையொக்கும், சொல்லப்பட்டுழி அவைக்கு [4] அதனை யஞ்சு மவன் கற்ற நூல், எ-று.

பேடி - பெண்ணியல்பு மிக்கு ஆணியல்பு முடையவள். [5] களமும் வாய்த்து [6] தானும் நன்றாயிருந்ததே யாயினும் பிடித்தவள் குற்றத்தால் வாள் சிறப்பின்றாயினாற்போல, அவையும் வாய்த்து [7] தானும் நன்றாயிருந்ததே யாயினும் கற்றவன் குற்றத்தால் நூல் சிறப்பின்றாயிற்று.

தெளி—(இ-ள்) அவையகத்து - (சொல்லப்படும்) சபைநடுவில், அஞ்சுமவன் -(அதனை) அஞ்சுமவன், கற்றநூல்-கற்றநூலானது, பகையகத்து-(எதி

---

1 சபையிலிருந்தவரது அறிவின் நுட்பத்தைச் சபையின்மேல் ஏற்றி 'நுண்ணவை' என்று கூறப்பட்டது

2 புத்திநுட்பமுடையவரது சபையைக்கண்டு அஞ்சுவோர் நூல்களை வாசித்தற்கு உரிமையுடைய ரல்ல ரென்பதாம்

3 அதனை - பகையை. 4 அதனை - சபையை

5 களமும் வாய்த்து - போர்செய்யுமிடமும் கிடைக்கப்பெற்று

6 தானும் - வாளும் 7 தானும் - நூலும்.

பட்ட) பகைநடுவில், பேடி - (அதனையஞ்சும்) பேடி, கை - கையிற்பிடித்த, ஒள்வாள் - கூரியவாளை (ஒக்கும்) எ - று

பேடி - பெண்ணியல்புமிகுந்து ஆணியல்பு முடையவள் இடமும் வாய்த்துத் தானும் நன்றாயிருந்ததே யாயினும் பிடித்தவளது குற்றத்தால் வாள் சிறப்பிலதாயினாற் போன்று, சபையும் வாய்த்துத் தானும் நன்றாயிருந்ததே யாயினும் கற்றவனது குற்றத்தால் நூல் சிறப்பிலதாயிற்று.

(க - து) சபைக்கஞ்சுவோன் கற்ற கல்வி பேடி கை வாளை யொக்கும் என்பது (எ)

அ பல்லவை கற்றும் பயமிலரே நல்லவையு
ணன்கு செலச்சொல்லா தார்.

பரி—(இ - ள்) நல்லோ ரிருந்த அவைக்கண் நல்ல சொற்பொருள்களைத் தமச்சத்தான் அவர்க்கேற்பச் சொல்லமாட்டாதார் பலநூல்களைக் கற்றாராயினும் உலகிற்குப் பயன்படுதலிலர், எ - று.

அறிவார்முன் சொல்லாமையிற் கல்வியி 1 னுண்மை யறிவாரில்லை யென்பதாம் இனிப் பயமிலரென்றதற்குக் கல்விப்பயனுடைய ரல்லரென் றுரைப்பாருமுளர்.

தெளி—(இ - ள்.) நல்லவையுள் - நல்லவரிருந்தசபையுள், நன்கு - நல்ல சொற்பொருள்களை, செல - (அவர்க்கு) ஏறக, சொல்லாதார் - (தமது அச்சத்தால்) சொல்லமாட்டாதவர், பல்லவைகற்றும் - பலநூல்களைக் கற்றாராயினும், பயமிலர் - (உலகத்துக்குப்) பிரயோசனப்படுதலிலர், எ - று

அறிவார்முன் சொல்லாமையால் கல்வியினுண்மை அறிவார் இல்லை யென்பதாம் இனிப்பயமிலர் என்றதற்கு கல்வியின் பிரயோஜனமுடையரல்ல ரென்று பொருள் கூறுவாருமுண்டு

(க - து) நல்லவர் சபையில் குற்றமறச் சொல்லாதவர் பலநூல்களைப் படித்திருந்தாலும் அவற்றாற் பயனில்லை யென்பது (அ)

௯ கல்லா தவரிற் கடையென்ப கற்றறிந்து
நல்லா ரவையஞ்சு வார்.

பரி—(இ - ள்) நூல்களைக் கற்றுவைத்தும் அவற்றாற் பயனறிந்து வைத்தும் நல்லாரிருந்த அவையின்கண் அஞ்சி ஆண்டுச் சொல்லாதாரை உலகத்தார் கல்லாதவரினும் கடையரென்று சொல்லுவர், எ - று

அக்கல்வியறிவுகளாற் பயன் முழுமெய்தாது பிறரையெய்துவிப்பதுஞ் செய்யாது 2 கல்வித்துன்பமே யெய்துதலின் 'கல்லாதவரிற் கடை' என உலகம் பழிக்குமென்பதாம்.

---

1 நுண்மை - நு— 2 கல்வித்துன்பம் - கல்வியைக் கற்றதின் துன்பம்

## ௭௪-ம் அதி.—நாடு.

**பரி**—இனி அவ்வரசனாலும் அமைச்சனாலும் கொண்டு செய்யப்படுவதாய வினை அரண் 1 முதலிய அங்கங்கட்கு இன்றியமையாச் சிறப்பிற்றாய நாடு ஓதிகாரத்தாற் கூறுகின்றார்

**தெளி**—இனி அவ்வரசனாலும் மந்திரியாலும் கொண்டு செலுத்தப்படுவதாய மற்றை அரண்முதலிய அங்கங்களுக்கு அவசியம் வேண்டும் சிறப்பினையுடையதாகிய நாடு ஓரதிகாரத்தினாலே சொல்லுகின்றார் (அஃதாவது இப்படிப் பட்டதென்பதும் அதிகாரமுறைமையும் இதனுள் விளங்கும்)

> ௪ தள்ளா விளையுளுந் தக்காருந் தாழ்விலாச்
> செல்வருஞ் சேர்வது நாடு.

**பரி**—(இ-ள்) குறைவுறாத விளையுளைச் செய்வோரும் அறவோரும் கேடில்லாத செல்வமுடையோரும் ஒருங்கு வாழ்வதே நாடாவது, எ-று

2 மற்றை யாதினைப் பொருள்களோடுஞ் சேர்தற்றொழிலோடும் இயையாமையின், விளையுளென்பது உழவர்மேனின்றது குன்றாமை- எல்லாவுணவுகளும் நிறைய விளைதல். 3 இதனான் வாழ்வார்க்கு வறுமையின்மை பெறப்பட்டது அறவோர் - துறந்தோர் அந்தணர் 4 முதலாயினோர். 5 "நற்றவஞ் செய்வார்க்கிடந் தவஞ்செய்வார்க்கு மஃதிடம்" என்றார் பிறரும் 6 இதனால் அழிவின்மை பெறப்பட்டது கேடிலாமை - வழங்கத் தொலையாமை 7 செ

---

1 முதலிய அங்கங்கள் என்றது பொருள், படை, நட்புகளை

2 விளையுள் என்னுந் தொழில் மற்றையுயர்திணைப் பொருள்களாகிய தக்காரும் தாழ்விலாச்செல்வரும் என்பவற்றினோடுஞ்சேர்வது என்னுஞ் சேர்தற்றொழிலோடும் கூடிப் பொருந்தாமையினால் இங்கே அஃது அத்தொழில் செய்யும் உழவர்மேனின்றது விளையுள் என்னுந்தொழில் அதனைச்செய்பவருக்காதலால் காரியவாகு பெயர்

3 இதனான் - குன்றாமையினால்.

4 முதலாயினோர் என்றதனால் சான்றோரையுங் கொள்க

5 சீவகசிந்தாமணி நாமகளிலம்பகம் ௪௮ இதன்பொருள் அவ்வேமாங்கத நாடு(வீடடையுமாறு)சிறந்த தவத்தைச் செய்பவர்க்கும் இடம்,(மறுமையின்பங்கருதி) இல்லறம் நடத்துவோர்க்கும் இடம் என்பது

6 இதனால் அழிவின்மை பெறப்பட்டது - வறுமையில்லாமையினால் குடிவளங் குறையாமை பெறப்பட்டது

7 சிலப்பதிகாரம் மனையறம் படுத்த காதையில் "உரைசால் சிறப்பி னரசுவிழை திருவிற், பரதர் மலிந்த பயங்கெழு மாநகர், முழங்குகடன் ஞால முழுவதும் வரினும், வழங்கத் தவாஅ வளத்த தாகி, யரும்பொரு டருஉம் விருந்திற் றேஎ, மொருங்கு தொக்கன்ன வுடைப்பெரும் பண்டம்,கலத்தினுங் காலினுந், தருவன ரீட்டக், குலத்திற் குன்றாக் கொழுங்குடிச் செல்வர், அத்தகு திருவி னருந்தவ முடித்தோர், உத்தர குருவி னொப்பத் தோன்றிய" என்று கூறியிருத்தலு மீங்கறியத் தக்கதாம்.

வோர் - கடைதிறுக்கக் காசிறுக்கக் குடிகொடுக்கும் வணிகர் 1 இதனால் அரசனுக்கும் வாழ்வார்க்கும் பொருள் வரப்பெறுதல் பெறப்பட்டது

தெளி —(இ - ள்) நாடு - நாடாவது, தள்ளாவிளையுளும் - குன்றுத விளைவினைச் செய்வோரும், தக்காரும் - அறவோரும், தாழ்விலாச்செல்வரும் - கேடில்லாத செல்வமுடையோரும், சேர்வது - கூடிவாழ்வதே, எ - று

தக்கார் முதலானவரோடும் சேர்தற்குரிமையோடும் பொருந்தாமையால் விளையுள் என்பது உழவரை உணர்த்தி நின்றது குன்றாமை - எல்லாவகைக்குங் குறைபடவுண்டாதல் இதனால் வாழ்வோர்க்கு வறுமையில்லாமை பெறப்பட்டது அறவோர் - துறந்தோர் அந்தணர் முதலானோர் இதனால் அழிவில்லாமை பெறப்பட்டது, கேடிலாமை - கொடுக்கக் குறையாமை. செல்வர் - கடனிறுப்ப தனியிறும் பொருள் தரும் வணிகர், இதனால் அரசனுக்கும் வாழ்வோர்க்கும் பொருள் கிடைத்தல் பெறப்பட்டது

(க - து) உழவரும் அறவோரும் செல்வரும் கூடி வாழ்வதே நாடாம் என்பது. (௧)

௨. பெரும்பொருளாற் பெட்டக்க தாகி யருங்கேட்டா
லாற்ற விளைவது நாடு.

பரி —(இ - ள்) அளவிறந்த பொருளுடைமையாற் பிறதேயத்தாரானும் விரும்பத்தக்கதாய்க் கேடின்மையோடு கூடி மிகவிளைவதே நாடாவது, எ-று.

அளவிறப்பு 2 பொருள்களது 3 பன்மைமேலும் தனித்தனி அவற்றின் மிகுதி மேலும் நின்றது 4 கேடாவது மிகப்பெயல், பெயலின்மை, எலி, 5 விட்டில், கிளி, 6 அரசண்மை யென்றிவற்றான் வருவது "மிகப்பெயலோடு பெயலின்மை யெலி விட்டில்கிளி, 7 யக்கண் அரசண்மையோ 8 டாறு" 9இவ

1 இதனால் - இக்குறளால்
2 ஒவ்வொருபொருளும் அளவிறந்திருக்கின்றதென்பது கருத்து.
3 பன்மை - பல
4 பிங்கலந்தை ஐயாவகையில் "விட்டில் கிளியே நால்வாய் ஏனம், தொட்டியா னைசோனைப் பெரும்புயல், நட்ட நாட்டேழ் குற்ற மாகும்" என்று கூறுகின்றது 'கிளிவனாப்பூ" எனனும் சீவகசிந்தாமணிச் செய்யுளின் உரையில் நச்சினார்க்கினியார் "விட்டில்கிளி நால்வாய வேற்றரசு தன்னரசு, நட்ட பெரும்பெயல் காலேழு" என்னும் சூத்திரம் காட்டியிருக்கின்றனர்
5 விட்டில் என்பது ஒருவகைப் பறவை விசேடம்
6 அரசண்மை - வேற்றரசர் கிட்டுதல் அஃதாவது பகைமன்னர் நெருங்கிவந்து பயிர்களை யழித்துக் குடிகளை வருத்துதல்
7 அக்கண் - அவ்விடத்து 8 ஆறு - ஆறுற்பாதங்களாம்.
9 இவற்றை - நாட்டின்குற்றமாயினவும்.

றை வடநூலார் 1 ஈதிகளெனப. 2 இவற்றுள் முன்னையவற்றின்மை அரசனறத்தானும், பின்னையதின்மை அவன் மறத்தானும் வரும் 3 இவ்வி னைகளின் மிகவிளைவதாயிற்று

தெளி —(இ - ள்) நாடு நாடாவது, பெரும்பொருளால்-அளவிறந்த பொருளுடைமையால், பெட்டக்கதாகி - (பிறதேசத்தாராலும்) விரும்பத்தக்கதாகி, அருங்கேட்டால் - அழிவில்லாமையோடுகூடி, ஆற்றவிளைவது - மிகவிளைவதே, எ - று

அளவிறந்திருத்தலாவது பொருள்களது தன்மையின் மேலும் தனித்தனியாக அப்பொருள்களது மிகுதியின் மேலும் நின்றது. கேடாவது அதிக மழை, மழையில்லாமை, எலி, விட்டில், கிளி, அரசண்மை எனப்படுகிற இவைகளால்வருவது இவைகளை வடநூலார் ஈதிகளென்று சொல்வர் இவைகளுள் முன்னையவற்றி னில்லாமை அரசனறத்தாலும், பின்னையதில்லாமை அவன் மறத்தாலும் உண்டாகும். இவையில்லாமற் போகவே மிகவிளையு மெனபதாயிற்று.

(க - து) பெரும்பொருளையும் கேடில்லாமையையும் மிக்கவிளைவையும் உடையதே நாடா மெனபது. (உ)

௩. பொறையொருங்கு மேல்வருங்காற் றாங்கி யிறைவற்
கிறையொருங்கு நேர்வது நாடு.

புரி —(இ - ள்) பிறநாடுகள் பொறுத்த பாரமெல்லாம் ஒருங்கே தன்கண் வருங்கால் அவற்றைத் தாங்கி அதன்மேற் றன்னரசனுக்கு இறைப்பொருள் முழுதையும் உடம்பட்டுக் கொடுப்பதே நாடாவது, எ-று

பாரங்கள் - மக்கட்டொகுதியும், ஆனெருமை முதலிய விலங்குத்தொகுதியும். தாங்குதல் - அவை தத்தந்தேயத்துப் பகை வந்திறுத்ததாக, அரசு கோல் கோடியதாக, உணவின்மையானாகத் தன்கண் வந்தால் அவ்வத்தேயங்களைப்போல இனிதிருப்பச் செய்தல் அச்செயலால் இறையைக் குறைபடுத்தாது தானே கொடுப்பதெனபார 'இறையொருங்கு நேர்வது' என்றார்

தெளி.—(இ – ள்) நாடு - நாடாவது, பொறை-(பிறநாடுகள் சுமந்த) பாரமெல்லாம், ஒருங்கு-ஒருசேர, மேல் வருங்கால்-(தன்) மேல்வரும்போது, தாங்கி-(அவைகளைத்) தாங்கி, (அதனமேலும்) இறைவற்கு - (தன) அரசனுக்கு, இ

1 ஈதி - உபத்திரவம் (நாட்டுக்குற்றம்).

2 இந்நாட்டுக்குற்றமாறனுள் முன்னுள்ள மிக்கபெயல் முதலிய வைந்துமில்லாமை அரசனது அறத்தினாலும் பின்னுள்ள அரசண்மையில்லாமை அவனது மறத் (வீரத்)தாலும் வரும் எனபதாம்

3 இவ்வினைகளான - நாட்டின் குற்றம் ஆறுமில்லாமையினால்.

இறைவற்கு - இறைப்பொருள் முழுதையும், நேர்வது - உடன்படுக்கொடு ப்பதே, எ-று.

பாரங்கள் - பிறர் கூட்டமும் பசு எருமை முதலாகிய விலங்கின் கூட்டமும். தாங்குதலாவது அவைகள் தத்தந்தேசங்களிலே பகைவா வந்து தங்கினிரு ப்பது அரசன் முறைதப்பாமலாவது உணவில்லாமையினாலாவது தனனிடத் துவந்தால் அவ்வத்தேசங்கள்போல இனிதிருப்பச்செய்தல், அச்செயலால் த ன்னரசனுக்குவரிப்பணத்தைக் குறைப்படுத்தாமல் தானே கொடுப்பதென பார் 'இறைபொருக்கு நேர்வது' என்றார்.

(க - து) பிறநாட்டுப் பாரங்கள் தன்மேல் வரும்போது அவற றைத் தாங்கித் தன்அரசனுக்கு வரிப்பொருள் முழுவதுந் தருவதே நா டாம் என்பது. (௩)

ச. உறுபசியு மோவாப் பிணியுஞ் செறுபகையுஞ்
சேரா தியல்வது நாடு

பரி —(இ - ள்.) மிக்க பசியும் நீங்காத நோயும் புறத்துநின்றுவந்தழி வுசெய்யும் பகையுமின்றி இனிது நடப்பதே நாடாவது, எ-று

உறுபசி- 1 உழவருடைமையானும் ஆற்றவிளைதலானும் சேராதாயிற்று. ஓவாப்பிணி-திக்காற்று மிக்க குளிர்வெப்பங்களும் நுகரப்படுமவற்றது தீமை யுமின்மையிற் சேராதாயிற்று செறுபகை- அரசனாற்றலும் 2 நிலைப்படையும் 3 அடவியும் 4 அரணு முடைமையிற் சேராதாயிற்று.

தெளி.—(இ - ள்.) நாடு - நாடாவது, உறுபசியும் - அதிகபசியும், ஓவா ப்பிணியும் - நீங்காத நோயும், செறுபகையும் - (புறத்திலிருந்துவந்து) அழி வுசெய்யும்பகையும், சேராது - அடையப்பெறாமல், இயல்வது - இனிது நடப் பதே, எ-று

அதிக பசி-உழவருடைமையாலும் மிகவிளைதலாலும் சேராதாயிற்று நீங் காத நோய் - திக்காற்று மிக்க குளிர்வெப்பங்களும் உண்ணப்படுமவைகளது தீமையும் இல்லாமையால் சேராதாயிற்று செறுபகை - அரசன் வலிமையும் நிலைப்படையும் அடவியும் அரணும் உடைமையால் சேராதாயிற்று

(க - து) பசியும் நோயும் பகையுமின்றி இனிது நடப்பதே நா டாம் என்பது (ச)

---

1 உழவர் - உழுதுப்பிரிமே மனிதர்

2 நிலைப்படை - எப்போதும் மாறுபடாமல் நிலைத்திருக்கும் சேனை

3 அடவி -

நாலவகை யரணில் முன்னே அடவியைக் கூறினதினால் இங்கே யரணென் றது நீரரண மதிலரண மலையரண்களை.

௫ பல்குழுவும் பாழ்செய்யு முட்பகையும் வேந்தலைக்குங்
கொல்குறும்பு மில்லது நாடு

**பரி.**—(இ-ள்) சங்கேத வசத்தான மாறுபட்டுக் கூடும் பலகூட்டமும், உடனுறையாரிலொன்றே பாழாகச் செய்யு முட்பகையும், அளவுவந்தால் வேந்தனை 1 யலைக்குங் கொலைவினைக் குறும்பரும் இல்லாதது நாடாவது, எ-று

2 சங்கேதம்-சாதி பற்றியும் கடவுள்பற்றியும் பலருக்குள்ள தோ 3 ரொருமை உட்பகை-ஆறலைப்பார் கள்வர் குறளைக்கூறுவார் 4 முதலிய மக்களும்,பன்றி புலி கரடி முதலிய விலங்குகளும் உட்பகை 5 குறும்பென்பன 6 ஆகுபெயர். 7 இம்மூன்றும் அரசனாலும் வாழ்வாராலும் 8 கடியப்பட்டு நடப்பதே நாடென்பதாம்.

**தெளி**—(இ-ள்) நாடு - நாடாவது, பல்குழுவும் - (சங்கேதவசத்தான மாறுபட்டுக் கூடும்) பல கூட்டமும், பாழ்செய்யும் - (உடனிருந்துகொண்டே) பாழாகச் செய்யும், உட்பகையும்- வேந்தலைக்கும் - (சமயம்வந்தால்) அரசனை அலைக்கின்ற, கொல் குறும்பும் - கொலைத்தொழிற் குறும்பரும் இல்லது - இல்லாததே, எ-று

சங்கேதம் - சாதிபற்றியும் சமயம்பற்றியும் பலர்க்கு உள்ளதாமொருமை,உட்பகை - வழியலைத்துப் பறிப்போர் கள்வர் கோள்சொல்வோர் முதலாகிய மக்களும், பன்றி புலி கரடி முதலிய மிருகங்களும் உட்பகை குறும்பு என்பன

---

1 அலைக்கும் - வருத்தும்

2 சங்கேதம் - கட்டுப்பாடு ஏமமாக்கத்தார் மத்தியத்திற் (கள்ளுக்) குத்திராத்தமென்றும், மாமிசத்திற்குச் சுத்தமென்றும், மத்தியபான (கள் குடிக்கும்)பாத்திரத்திற்குப் பத்மம் என்றும், வெங்காயத்திற்கு வியாஸரென்றும், வெள்ளைப் பூண்டிற்குச் சுகதேவரென்றும்,மத்தியம் செய்கின்றவனுக்குத் தீட்சிதரென்றும் பெயர்கொடுத்திருப்பதாலும் பிறவாற்றாலும் இதனையுணர்ந்துகொள்க.

3 ஒருமை - ஒற்றுமைப்பட்ட அபிப்பிராயம்.

4 முதலிய என்றதினால் இச்சகம் பேசிப் பொருள் பறிப்பார், முன்னே யொன்றுகூறிப் பின்னே யொன்று கூறுவார், பொய்சாட்சி கூறுவார் மித்திரபேதஞ்செய்வோர் முதலியவர்களையும் கொள்க.

5 குறும்பு - சிறுமைக்குணம்

6 உட்பகை குறும்பு என்னும் பண்புப் பெயர்கள் அவற்றை யுடையவர்களுக்காதலாற் பண்பாகு பெயர்கள்

7 இம்மூன்றும் - பல்குழுவும் பாழ்செய்யு முட்பகையும் வேந்தலைக்கும் கொல்குறும்பும்

8 கடியப்பட்டு - ஒழிக்கப்பட்டு.

டன்றாகு பேடாள இம்மூன்றும் அரசனும் வாழ்வோராலும் கடியப்பட்டன வென்பதாம்.

(க-து) மாறுபட்ட கூட்டமும் உட்பகையும் கொலைத்தொழிற் குறும்பருமில்லாததே நாடாம் என்பது. (ரு)

௬ கேடறியாக் கெட்ட விடத்தும் வளங்குன்றா
நாடென்ப நாட்டின் றலை.

**பரி**—(இ-ள்) பகைவரால் கெடுத லறியாததாய் அரிதிற் கெட்டதாயினும் அப்பொழுதுந் தன்வளங்குன்றாத நாட்டினை எல்லாநாட்டினுந் தலையென்று சொல்லுவர் நூலோர், எ-று.

அறியாத குன்றாத வென்னும் பெயரெச்சங்களின் 1 இறுதி நிலைகள் விகாரத்தாற் றொக்கன. கேடறியாமை-அரசனாற்றலானுங் கடவுட்பூசையறங்களை யறிந்து செயலானும் வரும். வளம் - 2 ஆகரங்களிற் படுவனவும் வயலினுந் தண்டலையினும் விளைவனவுமாம். குன்றாமை-3 அவை செய்யவேண்டாமல் இயல்பாகவே யுளவாய் முன்னீட்டப்பட்டு குறைவுறாதல் இவை யாறுபாட்டானும் நாட்டிலக்கணங் கூறப்பட்டது.

**தெளி**—(இ-ள்) கேடறியா - (பகைவராலே) கெடுதலறியாததாய், கெட்டவிடத்தும் - (அரிதிற்) கெட்டதானாலும், வளங்குன்றா - (அப்போதுந்தன்) வளங்குறையாத, நாடு - நாட்டை, நாட்டின் - (எல்லா) நாடுகளிலும், தலை - முதன்மையதாகும், என்ப - என்று (நூலோர்) சொல்வார், எ-று.

அறியாத குன்றாத என்பன ஈறுகெட்டு வந்தன. கேடறியாமை - அரசன் வலிமையாலும் கடவுட் பூசை அறங்கள் என்றிவைகளைச் செய்தலாலும் வரும். வளம்-சுரங்கங்களிற்படுமவையும் வயலிலும் தண்டலையிலும் விளையுமவையுமாம். குன்றாமை-அவை சம்பாதிக்கவேண்டாமல் இயல்பாகவே உளவாயும் முன்சம்பாதிக்கப்பட்டுங் குறைவுறாதிருத்தல், இவை ஆறுபாட்டாலும் நாட்டது இலக்கணம் சொல்லப்பட்டது.

---

1 இறுதி நிலைகள் விகாரத்தாற்றொக்கன - தகரஎழுத்துப்பேற்றோடு கூடிய அகரவிகுதிகள் செய்யுள் விகாரத்தினால் தொக்குகின்றன, அறியா குன்றா என்பன ஈறுகெட்ட எதிர்மறைப் பெயரெச்சங்கள்.

2 சுரங்கங்களில் உண்டாகும் பொன் வெள்ளி முதலிய பொருள்களும் வயலிலும் சோலையிலும் விளையும் நெல் கனி காய் முதலிய பொருள்களுமாம். "கதிர் படுவயலி னுள்ள கடிகமழ் பொழிலி னுள்ள, முதிர்பல மரத்தி னுள்ள முதிரைகள் புறவி னுள்ள, பதிபடு கொடியி னுள்ள படிவளர் குழியி னுள்ள, மதுவன மலரிற் கொள்ளும் வண்டென மள்ளர் கொள்வார்" என்று இராமாயணங் கூறுவது இங்கறியத்தக்கதாம்.

3 அவை - ஆகரங்களிற் படுவன முதலானவை.

(அதினின்று) வருவதாகிய நீரும், வல்லரணும் - அழியாத நகரியும், நாட்டிற்கு - உறுப்பு - அவ்வைந்தும், எ-று.

இவ்விடத்துப் புனலென்றது தரவு கேணிகளும் ஏரிகளும் ஆறுகளும் ஆகிய ஜலாதாரங்களை; அவ்வயலாதற்கு உரியன அவையே யாகலால் அவைகளால் மழைவறப்பினும் வளமுடைமை பெறப்பட்டது. நிலைதலல்லாமல் ஒருபக்கத்ததாகலும் தன் வளஞ்சுருங்கலும் மாரியினுண்ட நீர் கோடையினும் மிகுந்து முறைமைபற்றி 'வாய்ந்த மலை' என்றார் இதனால் அதனது அவயவம் சொல்லப்பட்டது.

(க - து.) கீழ்நீர் மேல்நீரும் மலையும் அதினின்றும் வரும் நீரும் அழியாத நகரியும் நாட்டிற்கு அவயவமாகும் என்பது. (எ)

௮ பிணியின்மை செல்வம் விளைவின்பம் ஏமம்
அணியென்ப நாட்டிற்கிவ் வைந்து

**பரி.**—(இ-ள்) நோயின்மையுஞ் செல்வமும் § விளைதலும் இன்பமும் காவலுமென்றிவையுடைமையுமாகிய இவ்வைந்தினையும் நாட்டிற்கு அழகென்று சொல்லுவார் நூலோர், எ-று.

பிணியின்மை - நிலநலத்தால் வருவது. செல்வம் - 1 மேற்சொல்லியன. இன்பம் - 2 விழவும் 3 வேள்வியும் சான்றோருமுடைமையானும், நுகர்வனவுடைமையானும், நிலநீர்களது நன்மையானும், வாழ்வார்க்கு 4 உணர்கிழவது. காவலென்பதே அரசன் காவலும் வாழ்வோர் காவலும் அரண்காவலுமடங்கின. 5 பிறதேயங்களினுள்ளாரும் விழைந்து பின் அவையுள்ளாமைக்கேதுவாய அதனழகு இதனாற் கூறப்பட்டது.

---

§ விளைதல் - நெல் முதலியன விளைதல்.
"செல்வம் விளையுள் மல்வளஞ் செங்கோல், கொல்குறும்பின்மை கொடும்பிணி யின்மைபெற, நீடூழி யாறு நனாடமைதி" என்று பிங்கலந்தை கூறுவ திங்கறியற்பாலது.

1 மேற்சொல்லியன - கடலினும் மலையினும் வணிகரால் வரும் பொருள்களும், குறைவின்றித் தரும் வரிப்பணமும், சுரங்கத்திற் கிடைக்கும் பொருள்களும், வயல் முதலியவற்றில் கிடைக்கும் தானிய முதலியவைகளும், மற்றும் பொருள்களும் பிறவுமாம்.

2 விழவு - திருவிழா; அது மதுரை ஆவணியவிட்டமே உறையூர்ப் பங்குனியுத்திரமே கருவூர் உள்ளிவிழாவே யென்றிவைபோல்வனவாம்.

3 வேள்வி - தேவயாகம், பூதயாகம் முதலியவை.

4 உணர்கிழவது - மனத்திலுண்டாவது.

5 மற்றதேசங்களிலுள்ளவரும் எல்லா வளப்பங்களுமுடைய நாட்டின் பொருள்களை விரும்பிப் பின்பு அத்தேசங்களை நினையாமைக்குக் காரணமாகிய அந்நாட்டினது பிணியின்மை முதலிய வழகு இக்குறளாற் சொல்லப்பட்டது. நோயில்லாமை, செல்வம், விளைவு, இன்பம், காவலென்னும் ஐந்தினையுமுடையதாகிய பிறர் வெறுத்தானும் விரும்பப்படும் என்பது இதனாற் பெறப்பட்டதென்க.

தெளி —(இ - ள்) பிணியின்மை-நோயில்லாமையும், செல்வம்-பொருள், விளைவு - நெல் முதலியவற்றின் விளைவு, இன்பம் - சுகம், ஏமம் - காவல், (என்றிவை யுடைமையுமாகிய) இவ்வைந்து - இவ்வைந்தினையும், நாட்டிற்கு - நாட்டினுக்கு. அணி - அழகாகும், என்ப-என்று (நூலோர்) சொல்லுவர், எ-று

பிணியில்லாமை - நிலநலத்தால்வருவது செல்வம் முன் - சொல்லியன இன்பம் - திருவிழாவும் கேள்வியும் சான்றோரு முடைமையாலும், அனுபவிப்பவையுடைமையாலும், நில நீர்களது நன்மையாலும் வாழ்வார்க்கு உள்ளே நிகழ்வது காவலெனவே அரசன் காவலும், வாழ்வோர்காவலும், அரண் காவலும் அடங்கின பிறதேசங்களிலுள்ளாரும் இச்சித்துப் பின்னே அவைகளை நினையாமைக்கு ஏதுவாகிய அதனழகு இதனாலேசொல்லப்பட்டது

(க - து) நாட்டிற் கழகாவது நோயில்லாமையும் செல்வமும் விளைவும் இன்பமும் காவலுமாம் என்பது (அ)

கூ **நா**டென்ப நாடா வளத்தன நாடல்ல
நாட வளந்தரு நாடு

**பரி** —(இ - ள்) தங்கண்வாழ்வார் தேடி வருந்தாமல் 1 அவர்பாற் றானேயடையுஞ் செல்வத்தை யுடையவற்றை நூலோர் நாடென்று சொல்லுவர், ஆதலால் தேடிவருந்தச் செல்வமடைவிக்கும் நாடுகள் நாடாகா, எ - று

நாடுதல் இருவழியும் வருத்தத்தின்மே னின்றது 2 "பொருள் செய்வார்க்கு மஃதிடம்" என்றார் பிறரும் நூலோர் விதிபற்றி எதிர்மறை முகத்தாற் குற்றங் கூறியவாறு இவ்வாறன்றி என்பவென்பதனைப் பின்னுங்கூட்டி 3 இருபொருள் படவுரைப்பின், 4 அனுவாதமாம்

**தெளி** —(இ - ள்) நாடா - (தம்மிடத்து வாழ்வோர்) தேடிவருந்தாமல், வளத்தன - (அவரிடத்துத்தானேயடையும்) செல்வத்தை யுடையனவற்றை, நாடென்ப - (நூலோர்) நாடென்று சொல்லுவர், (ஆதலால்) நாட - தேடிவருந்த, வளந்தரும் - செல்வத்தை யடைவிக்கும், நாடு - நாடுகள், நாடல்ல - நாடுகளாகா, எ-று

---

1 அவர்பால் - தங்கண்வாழ்வாரிடத்து

2 சீவக சிந்தாமணி நாமகளிலம்பகம் சஅ இதன்பொருள் (நிலையாத) பொருளைத் தேடுபவர்க்கும் அவ்வேமாங்கதநாடு இடமாம் என்பது

3 இருபொருள் படவுரைத்தலாவது நாடாவளத்தன நாடென்ப நாடவளந்தரு நாடு நாடல்ல என்ப எனக்கூறுதல்.

4 நாடாவளத்தன நாடு என்று கூறிய நூலோர் அந்நாட்டினையே மீண்டுமோர் நிமித்தம் பற்றி நாடவளந்தரு நாடு நாடல்ல என்று கூறினமையினால் அனுவாதமாயிற்று இங்கு நிமித்தம் நாடவளந்தருதல். அனுவாதமாவது முன்னாகக் கூறியதொன்றனைப் பின்னருமோர் நிமித்தம் பற்றிக் கூறுதல்.

* [illegible] வருத்தத்தின் [illegible] பெறிடையை வாயிலாகக் குறைக்கூறிய [illegible] எனப்பிறரும் கூட்டி இ[illegible], அது [illegible]

(க-து) குடிகள் வருந்தாமலே அவர்களுக்குச் சகலவளங்களையுங் கொடுக்கவல்லதே நாடாகும் என்பது (கூ)

௪0 ஆங்கமை வெய்தியக் கண்ணும் பயமின்றே
வேந்தமை வில்லாத நாடு.

பரி—(இ-ள்) வேந்தனோடே மேவுதலில்லாத நாடு 1 மேற்சொல்லிய குணங்களெல்லாவற்றானும் நிறைந்திருந்ததாயினும் 2 அவற்றாற் பயனுடைத்தன்று, எ-று.

வேந்தமைவெனவே, குடிகள் அவன்மாட்டு அன்புடையராதலும், அவன் றான் இவர்மாட்டு அருளுடையனாதலும் அடங்கின 3 அவையில்வழி வாழ்வோரின்மையின், 4 அவற்றாற் பயனின்றாயிற்று இவையிரண்டுபட்டானும் 5 அதனை குற்றங்கூறப்பட்டது

தெளி—(இ-ள்) வேந்து - அரசனோடு, அமைவில்லாத - பொருந்துதலில்லாத, நாடு-நாடானது, ஆங்கு-மேற்சொல்லிய குணங்களெல்லாவற்றானும், அமைவெய்தியக்கண்ணும் - நிறைந்துள்ளதாயினும், பயமின்றே - (அவைகளாலே) பயனுடைத்தன்று, எ-று.

வேந்தமைவு எனவே, குடிகள் அவனிடத்தே அன்புடையராதலும, அவனும் இக்குடிகளிடத்தே அருளுடையனாதலும் அடங்கின அவையில்லா விடத்து அந்நாட்டில் வாழ்வோரில்லாமையால், அவைகளாலே பயன் இல்லையாயிற்று இவை இரண்டுபட்டாலும் அதனது குற்றம் சொல்லப்பட்டது

(க-து) நாடானது எல்லாவளங்களையுங் கொண்டுள்ளதாயினும், தன்னரசனுடன் பொருந்தாவிடின் பயனற்றதாம் என்பது. (ய)

1 மேற்சொல்லியகுணங்கள் - இவ்வதிகாரத்தின் தள்ளா விளையுளும் என்பது முதல் நாடென்ப நாடாவளத்தன என்பதுவரை கூறியுள்ள நாட்டின் குணங்கள்

2 அவற்றால் - மேற்சொல்லிய குணங்களால்.

3 அவையில்வழி - குடிகள் அரசனிடத்து அன்புடையராதலும் அரசன் குடிகளிடத்து அருளுடையனாதலும் இல்லாதவிடத்து

4 அவற்றால் - மேற்சொல்லியகுணங்களால்,

5 அதனது குற்றம் - நாட்டினது குற்றம்

## எரு - ம் அதி.—அரண்

**பரி** —இனி அந்நாட்டிடத் துண்டாய் அடங்குமாயினும் பகைவரால் 1 தொலைவெய்துதலின், 2 அதற்கும் அரசனுக்கும் ஏமமாதற் சிறப்புப்பற்றிப் பிரித்தோதப்பட்ட அரண் இவ்வதிகாரத்தாற் கூறுகின்றார்.

**தெளி** —இனி அந்நாட்டிற்கு உறுப்பாய் அடங்குமாயினும் பகைவரால் தொலைவு உற்றவிடத்து, அதற்கும் அரசனுக்கும் காப்பாதற் சிறப்புப்பற்றி வேறாகச் சொல்லப்பட்ட அரண் இவ்வதிகாரத்தால் சொல்லுகின்றார். [அஃதாவது இன்னதென்பதும், அதிகார முறைமையும் இதனுள் விளங்கும்]

க. ஆற்று பவர்க்கு மரண்பொரு ளஞ்சித்தற்
போற்று பவர்க்கும் பொருள்.

**பரி** —(இ-ள்) 3 மூவகையாற்றலு முடையராய்ப் 4 பிறர்மேற் செல்வார்க்கும் அரண் சிறந்தது 5 அவையின்றித் தம்மேல் 6 வருவார்க்கஞ்சித் தன்னையடைவார்க்கும் அரண் சிறந்தது எ-று.

பிறர்மேற் செல்லுங்கால் 7 உரிமை பொருள் முதலியவற்றைப் பிறரொருவன் 8 கௌவாமல் வைத்துச் செல்லவேண்டுமாகலானும், 9 அப்பெருமை தொலைந்து இறுதிவந்துழிக் கடனடுவண் உடைகலத்தார் போன்று ஏமங்காணா திறுவராகலானும், 10 ஆற்றுபவர்க்கும் 11 போற்றுபவர்க்கும் அரண்பொருளாயிற்று. அரணில்வழி அழியும்பாலராகலின், 12 அவரை முற்கூறினார். இதனால் அரணினது சிறப்புக் கூறப்பட்டது.

---

1 தொலைவு - அழிவு 2 அதற்கும் - நாட்டிற்கும்.

3 அறிவு, ஆண்மை, பெருமை என்பன மூவகையாற்றல்களாம். இவற்றுள் பெருமை பொருள் படை (சேனை) என இருவகையாம். இது பற்றித் தெரிந்து செயல்வகை கூ - வது குறளின் விசேடவுரையிற் காண்க.

4 பிறர்மேற்செல்வார்க்கும் - பகைவர்மேற் போருக்குச் செல்பவர்க்கும்.

5 அவையின்றி - மூவகை யாற்றலு மில்லாமல்

6 வருவார்க்கஞ்சி - போருக்குவரும் பகைவர்க்குப் பயந்து

7 உரிமையென்றது - உரிமை (சுதந்தரம்) உடைய மகளிரை.

8 கௌவாமல் - அபகரித்துக் கொள்ளாமல்.

9 அப்பெருமை தொலைந்து - பொருள்படை யென்பன அழிந்து

10 ஆற்றுபவர் - மூவகையாற்றலு முடையராய்ப் பகைவர்மேற் செல்பவர்

11 போற்றுபவர் - மூவகை யாற்றலு மில்லாது பகைவர்க்குப் பயந்து வந்து அடைபவர்

12 அவரை - ஆற்றுபவரை.

தெளி—(இ-ள்) அரண் - கோட்டையானது, ஆற்றுபவர்க்கும் - (மூவகைவலிமையுமுடையவராய்) பிறர்மேலே செல்வோர்க்கும், பொருள் - சிறந்ததாகும், அஞ்சி - (அவையில்லாமல் தம்மேல் வருவோர்க்கு) அஞ்சி, தற்போற்றுபவர்க்கும் - தன்னையே அடைவோர்க்கும், பொருள் - (அரண்) சிறந்ததாகும், எ-று.

பிறர்மேற்செல்லும்போது உரிமை பொருள் முதலானவைகளைப் பிறரொருவர் வௌவாமல் வைத்துச் செல்லவேண்டுமாதலாலும், அப்பெருமை தொலைந்து முடிவுவந்தவிடத்துக் கடலின்கீழ் உடைந்தகப்பற்காரர்போன்று காப்புக்காணாது முடிவாராகலாலும், ஆற்றுபவர் போற்றுபவர் என்னுமிவ்விருவகையோர்க்கும் அரண்பொருளாயிற்று. வலிமையுடையராயினும் அரணில்லாதவிடத்து அழியுந்தன்மையராகலான், அவரை முன்சொல்லினார். இதனால் அரணினது சிறப்புச் சொல்லப்பட்டது.

(க-து) போர் செய்வோர்க்கும் அஞ்சித்தன்னை யடைந்தோர்க்கும் அரணானது சிறந்த பொருளாகும் என்பது. (க)

௨. மணிநீரு மண்ணு மலையு மணிநிழற்
காடு முடைய தரண்.

பரி—(இ-ள்) மணிபோலும் நிறத்தினையுடைய நீரும் வெளிநிலமும் மலையும் குளிர்ந்த நிழலையுடைய காடுமுடையதே அரணாவது, எ-று.

எஞ்ஞான்றும் வற்றாத நீரென்பார் 'மணிநீர்' என்றும், நீருநிழலுமில்லா 1 மருநிலமென்பார் 'மண்' என்றும், செறிந்த காடென்பார் 'அணிநிழற்காடு' என்றுங் கூறினார். மதிற்புறத்து மருநிலம் பகைவர் 2 அரண்பற்றாமைப் பொருட்டு. நீரரண், நிலவரண், மலையரண், காட்டரணென 3 இயற்கையும் 4 செயற்கையுமாய இந்நான்கரணுஞ் சூழப்படுவது அரணென்பதாம்.

தெளி.—(இ-ள்,) அரண் - அரணாவது, ம
தையுடைய நீரும், மண்ணும் - வெளிநிலமும், மலையும்—அணிநிழற்காடும் - குளிர்ந்தநிழலையுடைய காடும், உடையது - உடையதே, எ-று.

எக்காலும் வற்றாத நீரென்பார் 'மணிநீர்' என்றும், நீரும் நிழலுமில்லா க மருநிலமென்பார் 'மண்' என்றும், நெருங்கிய காடென்பார் 'அணிநிழற்காடு'

---

1 மருநிலம் - பாலைவனம்.

2 அரண்பற்றாமைப்பொருட்டு-கோட்டையைக் கைப்பற்றாமை நிமித்தம்.

3 இயற்கையரண் - நீரும், நிலமும், மலையும், காடும் படைப்பிலேயே ஒன்றற்கு அரணாக (காவலாய்) அமைந்திருத்தல்

4 செயற்கையரண் - அகழியும், வெளிநிலமும், செய்குன்றும், காடுவளர்த்தலும் அவ்வத்தேசத்தரசர் ஒன்றற்கு அரணாகச் செய்துகொள்ளுதல்

என்றுடசொல்லின்றா மதிப்புறத்து மருங்கிலும் பகைவர் அரண் பற்றுமைப் பொருட்டு நீரரண் நிலவரண், மலையரண், காட்டரண் என்று இயற்கையும் செயற்கையுமான இந்நான்கரணும் சூழப்படுவது அரணெனப்படும்

(ச - து) நீர், வெளிநிலம், மலை, காடு, என்னும் இவற்றையுடையதே அரணும் என்பது. (உ)

௩ உயர்வகலந் திண்மை யருமையிந் நான்கின்
அமைவர ணென்றுரைக்கு நூல்

பரி—(இ - ள்) உயர்ச்சியும் அகலமும் திண்மையும் அருமையுமென்று சொல்லப்பட்ட இந்நான்கின் மிகுதியையுடைய மதிலை அரணென்று சொல்லுவர் நூலோர், எ-று.

1 அமைவு 2 நூல் என்பன ஆகுபெயர் உயர்வு - ஏணியெய்தாதது அகலம் - புறத்தோர்க்கு அகழலாகா அடிப்பரப்பும், அகத்தோர்க்கு நின்று 3 வினை செய்யலாம் 4 தலைப்பரப்பும், திண்மை - கல்லிட்டிகைகளாற் செய்தலிற் குத்தப்படாமை அருமை - பொறிகளான் அணுகற்கருமை பொறிகளாவன 5 "வளைவிற் பொறியு மயிற்செறி நிலையுங், கருவிர லூகமுங் கல்லுமிழ் கவ

---

1 அமைவு என்னும் பண்புப்பெயர் அதனையுடைய மதிலுக்காதலால் பண்பாகு பெயர்

2 நூல் என்னும் காரியப்பெயர் அதனைச் செய்தவருக்காதலால் காரியவாகு பெயர்

3 வினைசெய்தல் - போர்புரிதல் 4 தலை - மதிலின் மேற்புறம்.

5 சிலப்பதிகாரம் அடைக்கலக்காதை உ0எ - வது வரிமுதல் உகங - வது வரி வரை. (இதன்பொருள்) வளைவிற்பொறியும் - வளைந்து தானே எய்யும் எந்திரவில்லும், கருவிர லூகமும் -கரிய விரலையுடைய குரங்குபோலிருந்து சேர்ந்தாரைக் கடிக்கும் பொறியும், கல்லுமிழ் கவணும் - கல்லையுமிழுங் கவணும், பரிவுறு வெந்நெய்யும்-காய்ந்திறைத்தலால் சேர்ந்தாரை வருத்துவதாய நெய்யும், பாகடு குழிசியும் - செம்புருக்கும், அன்றி அங்ஙனமிறைத்தற்குப் பாகுகாயுங் குழிசிகளுமாம் காய் பொன்னுலையும் - உருக்காய்ச்சியெறிதற்கு எஃகுபட்டிருக்கும் உலைகளும், கல்லிடு கூடையும்- இடங்கணிப் பொறிக்குக் கல்லிட்டுவைக்குங் கூடையும், தூண்டிலும் - தூண்டில் வடிவாகப் பண்ணிப் போகட்டு வைத்துக் கிடங்கு நீங்கி மதில் பற்றுவாரைக் கோத்துவலிக்குங் கருவியும், தொடக்கும் - கழிகோல்போலக் கழுத்திற் பூட்டி முறுக்குஞ் சங்கிலியும், கயிறுறுத்தொடக்குமாம் ஆண்டலையடுப்பும் - ஆண்டலைப்புள் (கோழி) வடிவாகப் பண்ணிப் பறக்கவிட உச்சியைக்கொத்தி மூளையைக்கடிக்கும் பொறிவிரைகளும், கவையும் - கிடங்கிலேறின் மறியத்தள்ளும் இருப்புக் கவையும், கழுவும் - கழுக்கோலும், கழுகுட்டாம் புதையும் - அம்புக்கட்டும், "அம்பப்புதையு மணி

ளும், பரிவுறு வெந்நெய்யும் பாகடு குழிசியுங், காய்பொன் னுலையுங் கல்லிடு கூ
டையுந், தூண்டிலுந் தொடக்கு மாண்டலை யடுப்புங், கவையுங் கழுவும் புதை
யும் புழையும், ஐயவித் துலாமுங் கைபெயரூசியுஞ், சென்றெறி சிரலும் பன்
றியும் பணையும், எழுவுஞ் சீப்பும் முழுவிறற் கணையமுங், கோலுங் குந்தமும்
வேலும் பிறவும்" என்றிவைமுதலாயின

தெளி—(இ-ள்) உயர்வு - உயர்ச்சியும், அகலம்-அகலமும், திண்மை - வலிமையும், அருமை - அருமையும், (என்று சொல்லப்பட்ட) இந்நான்கின- இந்நான்கினது, அமைவு - மிகுதியையுடைய மதிலை, அரணென்று—நூல் - நூலோர், உரைக்கும் - சொல்லுவர், எ-று.

அமைவு நூல் என்றுமிரண்டும் ஆகுபெயர்கள் உயர்வு - ஏணிக்கெட்டா ததது அகலம் - புறத்தோர்க்குத் தோண்டக்கூடாத அடியகலமும், உள்ளிடத் தோர்க்கு நின்று தொழில் செய்தற்காந் தலையகலமும் திண்மை - கருங்கல் செங்கல்களாலே செய்தலால் குத்தப்படாமை. அருமை-பொறிகளாலே சேர தற்கருமை பொறி - எந்திரங்களாவைகள்.

(க-து) உயர்வு முதலிய நான்கினையும் மிகுதியாக உடையதே அரணம் என்பது. (௩)

௪. சிறுகாப்பிற் பேரிடத்த தாகி யுறுபகை
யூக்க மழிப்ப தரண்.

---

வரிச்சிலையும்" என்றார் (உதயணன்) கதையினும் புழையும் - ஏவறைகளு
ம், ஐயவித்துலாமும் - பற்றுக்கைதூக்கிப் போகட்டவிட்டமும், அன்றி
கத்தவை யணுகாதபடி கற்கவி தொடங்கி நாற்றும் துலாமுமாம் சாணம்
புக்கூ டென்பாரும், சிற்றம்புகள் வைத்தெய்யும் இயந்திர மென்பாரு மு
ளர் கைபெயரூசியும் - மதிற்றலையைப் பற்றுவாரைக் கையைப்பொதிக்
கும் ஊசிப்பொறிகளும், இன்னும் கதவோடு சேராதபடி வைத்த நிரைக்கழு
வெனினுமமையும். சென்றெறிசிரலும் - மாற்றார்மேற்சென்று கண்ணைக்
கொத்தும் சிச்சிலிப் பொறியும், பன்றியும்-மதிற்றலையி னேறினா ருடலை
க்கோட்டாற் கிழிக்க இரும்பாற் செய்துவைத்த பன்றிப்பொறியும், பணை
யும் - வேய்வடிவாகப் பண்ணி அடித்தற்கமைத்த பொறியும், எழுவுஞ்
சீப்பும் - கதவுக்கு வலியாக உள்வாயிற் படியிலே நிலத்திலே வீழ விடு
மரங்களும், திறக்குங்காலத்து மேலே யெழுப்புகையால் எழுவுஞ் சீப்பு
மென்றார், 'சீப்புப் படியுறின்" என்றார் (உதயணன்) கதையினும், இனிச்
சீப்பு அகப்பட்டக் குறுக்கேபோட்டக் கட்டவமரமுமாம் முழுவிறற் கணையமு
ம் - கணையமரமும், கோலும் - விட்டேறும், குந்தமும் - சிறுசவளமும்,
வேலும் - வல்லயமும், ஈட்டி முதலியனவுமாய பிறவும் - சதக்கினி,
தள்ளிவெட்டி, களிற்றுப்பொறி, விழுங்கும் பாம்பு, கழுகுப்பொறி, புலிப்
பொறி, குடப்பாம்பு, சகடப்பொறி, தகர்ப்பொறி, அரிநூற்பொறி என்ப
னவும் என்பது. [இஃது அடியார்க்கு நல்லார் உரை]

பரி—(இ-ள்) காக்கவேண்டுமிடஞ் சிறிதாய் அகன்றவிடத்தையுடைத்தாய்த் தன்னோடு வந்து முற்றிய பகைவரது மனவெழுச்சியைக் கெடுப்பதே அரணாவது, எ-று.

1 வாயிலும் 2 வழியும் ஒழிந்த இடங்கள் மலை, காடு, நீர்நிலையென்றிவற்றான் அரண்புடைத்தாதல்பற்றிச் 'சிறுகாப்பின்' என்றும், அகத்தோர் நலிவின்றி யிருத்தல்பற்றிப் 'பேரிடத்ததாகி' என்றும், தம்வலி நோக்கி இதுபொழுதே யழிந்ததென்று வரும் பகைவர் வந்து கண்டால் அவ்வூக்கமொழிதல் பற்றி 'ஊக்கமழிப்பது' என்றுங் கூறினார்.

தேவ—(இ-ள்) அரண் - அரணாவது, சிறுகாப்பின் - காக்கவேண்டுமிடஞ் சிறிதாய், பேரிடத்ததாகி - பரந்தவிடத்தையுடையதாய், உறுபகை - (தன்னைவந்து) சூழ்ந்தபகைவரது, ஊக்கம் - மனவெழுச்சியை, கெடுப்பது - கெடுப்பதேயாம், எ-று.

வாயிலும் வழியும் ஒழிந்த இடங்கள் மலை, காடு, நீர்நிலை என்ற இவைகளால் தகுதியான அரணையுடைத்தாயிருத்தல்பற்றிச் 'சிறுகாப்பின்' என்றும், உள்ளேயிருப்பவர் வருத்தமில்லாதிருத்தல் பற்றிப் 'பேரிடத்ததாகி' என்றும், தமது வலிமையை நோக்கி இப்பொழுதே அழித்து விடுவோம் என்றெண்ணி வரும் பகைவர் வந்து கண்டதனால் அம்மனவெழுச்சி நீங்குதல்பற்றி 'ஊக்கமழிப்பது' என்றுஞ் சொல்லினர்.

(க-து) காக்குமிடஞ் சிறிதாய்ப் பரந்தவிடத்தை யுடையதாய்ப் பகைவரது ஊக்கமழிப்பதாயுள்ளது அரணும் என்பது. (ச)

ரு கொளற்கரிதாய்க் கொண்டகூழ்த் தாகி யகத்தார்
நிலைக்கெளிதா நீர தரண்.

பரி—(இ-ள்) 3 புறத்தாரால் கோடற்கரிதாய் உட்கொண்ட பலவகை யுணவிற்றாய் அகத்தாரது 4 போர்நிலைக்கெளிதாய நீர்மையையுடையதே அரணாவது, எ-று.

கோடற்கருமை - 5 இளை 6 கிடங்குகளானும் 7 பொறிகளானும் இடங்கொள்ளுதற்கருமை. உணவு தலைமைபற்றிக் கூறினமையின், மற்றுள்ள நுக

1 வாயிலும் என்றது - கோட்டைமதிலின்கண் கதவினையுடைய நான்கு வாயில்களையும்.

2 வழி - கோட்டைக்குள்ளே செல்லும்வழி.

3 புறத்தவரால் - கோட்டைக்கு வெளியிலுள்ளபகைவரால்.

4 போர் நிலைக்கு - நிலைத்துப் பகைவரோடு யுத்தம் புரிவதற்கு.

5 இளை - பிரதானமானகாவல்.

6 கிடங்கு - மதிற்புறத்துள்ள அகழி.

7 பொறிகள் - மதிலின்கணுள்ள வேல், வாள், வில், மழு, தண்டு, தடி, சக்கரம் முதலிய யந்திரங்கள்.

நடப்பனவும் பகைவர் நிலைக்கெளிதா நீர்மையாவது அகத்தார் விட்ட முதலிய புறத்தார்மேல் வெளிதிற் சேறலும், அவரிட்டன அகத்தார்மேற் செல்லாமையும், பதணப்படுப்பு 1 முதலாயின

தெளி —(இ - ள்) அரண் - அரணாவது, கொளற்கரிதாய் - (புறத்தோ ராலே) கொள்ளுதற்கரிதாய், கொண்ட - உட்கொண்ட, கூழ்த்தாகி - (பலவ கை) புணவை யுடையதாய், அகத்தார் - உள்ளிருந்தோரது, நிலைக்கு - (போர்) நிலைக்கு, எளிதாம் - எளிதாம், நீரது - குணத்தையுடையதே, எ-று

கொளற்கருமை-காவற்காடு கிடங்குகளாலும் பொறிகளாலும் இடம் கொள்ளுதற்கருமை. உணவு தம்மைப்பற்றிச் சேறலின்மையால், பற்றுமுள்ள அனுபவிக்கப்படுவதும் அடங்கின. நிலைக்கெளிதாம் நீர்மையாவது உள்ளிருந்தோரால் விடப்பட்ட ஆயுதமுதலானவை புறத்தோர்மேல் எளிதிலே செல்லுதலும், அவரால் விடப்பட்டவை உள்ளிருந்தோர்மேலே செல்லாமையும், பதணப்படுப்பு முதலானவை. பதணம் - மதிலுள்மேடை.

(க - து) பகைவர் கொள்ளுதற்கரிதாய்ப் பலவகை யுணவுகளை யுடைகொண்டுள்ளதாய்த் தன்னுள்ளிருப்பவர் போர்செய்வதற் கெளிதாயி ருப்பது அரணாம் என்பது (ரு)

சு எல்லாப் பொருளு முடைத்தா யிடத்துதவு
நல்லா ளுடைய தரண்

பரி —(இ - ள்) அகத்தோர்க்கு வேண்டிய பொருள்கள் எல்லாவற்றையும் உள்ளேயுடைத்தாய புறத்தோரால் அழிவெய்து மெல்லைக்கண் 2 அஃதெய்தாவகை புரவிகளாகும் நல்லவீரரையுமுடையதே அரணாவது, எ-று

அரசன்மாட்டன்பும் மானமும் மறமும் 3 சோர்வின்மையும் 4 முதலிய நற்குணங்களுடைமைபற்றி 'நல்லாள்' என்றார்.

தெளி —(இ - ள்) அரண் - அரணாவது, எல்லாப்பொருளும் - (உள்ளி டத்தோர்க்குவேண்டும்) பொருள்களெல்லாவற்றையும், உடைத்தாய் - உள்ளே யுடையதாய், இடத்து - (புறத்தோரால்) அழிவடையுமளவில், உதவும் - (அது வாராதபடி) உதவிசெய்யவல்ல, நல்லாள் - நல்லவீரரையும், உடையது - உடை யதே, எ-று.

1 முதலாயின என்றதனால் மதிலைக் குத்த முடியாமை, அம்மதில் தோண்டக் கூடாத அடிக்கல்லுடைமை முதலியவைகளையுங் கொள்க.

2 அஃதெய்தாவகை - அழிவுஅடையாதபடி

3 சோர்வு - தளர்ச்சி

4 முதலிய என்றதனால் நல்லோரிணக்கமுடைமை, தெய்வசிந்தையுடைமை, கல்வியறிவொழுக்கமுடைமை முதலியவைகளையுங் கொள்க.

அரசனிடத்து அன்பும் மானமும் மறமும் சோர்விலாமையும் முதலாகிய குணங்களை உடைமைபற்றி 'நல்லாள்' என்றார்.

(க-து) தன்னுளிருப்போர்க்கு வேண்டும் பொருள்களெல்லா முடையதாயுட் காக்கும் நல்வீரரை யுடையதாயுமிருப்பது அரணாம் என்பது. (௬)

௭ முற்றியு முற்றா தெறிந்து மறைப்படுத்தும்
பற்றற் கரிய தரண்

பரி—(இ-ள்) புகலொடு போக்கொழியும்வகை நெருங்கிச் சூழ்ந்தும் அங்ஙனஞ் சூழாது 1 நெகிழ்ந்தவிடநோக்கி ஒருமுகமாகப் பொருதும் அகத்தோரை 2 அவர் தெளிந்தோரைவிடுகை 3 கீழறுத்துத் திறப்பித்தும் புறத்தோரால் கொள்ளுதற்கரியதே அரணாவது, எ-று.

4 இம்மூன்றுபாயத்துள் முதலது எல்லாப் பொருளுமுடைமையானும், ஏனைய நல்லாருடைமையானும் வாயாவாயின.

தெளி—(இ-ள்) அரண் - அரணாவது, முற்றியும் - (வரவுபோக்கு ஒழியும்வகை) நெருங்கிச் சூழ்ந்தும், முற்றாது - அப்படி சூழாமல், எறிந்தும் - (நெகிழ்ந்தவிடநோக்கி) ஒருமுகமாகப் போர்செய்தும், அறைப்படுத்தும் - (உள்ளிட்டோரை அவருக்கு நம்பிக்கையானவரைவிடுகை) கீழறுத்துத் திறப்பித்தும், பற்றற்கரிது - (புறத்தோரால் பிடித்துக்) கொள்ளுதற்கரியதே, எ-று.

இம்மூன்று உபாயங்களுள் முதலாவது எல்லாப்பொருளு முடைமையாலும், மற்றவைகள் நல்லாருடைமையாலும் பலிப்பன வல்லவாயின.

(க-து) எவ்வகை யுபாயத்தாலும் பகைவர் பற்றுவதற் கரிதாயுள்ளதே அரணாம் என்பது. (௭)

அ. முற்றாற்றி முற்றி யவரையும் பற்றாற்றிப்
பற்றியார் வெல்வ தரண்

---

1 நெகிழ்ந்தவிடநோக்கி - காவல்செய்வோர் சோர்ந்துள்ள சமயம் பார்த்து.

2 அவர் - உள்ளிட்டோர்

3 கீழறுத்துத்திறப்பித்தும் - வஞ்சித்து மாறுபடுத்தியும். [வஞ்சித்தல் - அரசனிடத்து அன்பொழியும்படி போதித்தல்]

4 முற்றியும், முற்றாதெறிந்தும், அறைப்படுத்தும் என்னு மூன்று உபாயங்களிலும் முதலாவதான முற்றியும் என்பது உள்ளேயிருப்போர்க்கு வேண்டும் பொருள்களெல்லாவற்றையும் உடைத்தாயிருத்தலாலும், மற்றைய முற்றாதெறிந்தும் அறைப்படுத்தும் என்பன நல்ல வீரர்களை யுடைத்தாயிருத்தலாலும் பலிக்காதொழிந்தன என்பது.

தொடக்கத்திலே கெட்டார் பின்னுங் கூடிப் பொருதல் கூடாமையின், முனை முகத்துச் சாய என்றார். வினை வேறுபாடுகளாவன பகைவர் தொடங்கிய போரின்கண் அந்த 1 எய்தல், எறிதல், குத்துதல், வெட்டுத லென்றிவை முதலாயின வினைகளுள் அதனைச் சாடப்படுவன செய்தல் மற்றும்வேண்டுமாட்சி யென்றது புறத்தோரறியாமற் புகுதல் போதல் செய்தற்குக் கண்ட 2 சுருங்கை வழி முதலாயினவுடைமை.

தெளி —(இ-ள்) அரண்-அரணாவது, முனைமுகத்து - போர் தொடங்கின அளவிலே மாற்றலர் - பகைவர், சாய-கெடும்படி, வினை முகத்து-(உள்ளிட்டுத் தொழில்செய்யும்) தொழில் வேறுபாடுகளால், வீறெய்தி- வீறுபெற்று, மாண்டது (மாட்சிமை வேண்டிய) பெருமையை யுடையதே, எ-று

ஆரம்பத்திலே கெட்டவர் பின்னுங் கூடிப் போர்செய்தல் கூடாமையால் முனைமுகத்துச்சாய என்றார். தொழில் வேறுபாடுகளாவன பகைவர் தொடங்கிய போரினை அறிந்து எய்தல், எறிதல், குத்துதல், வெட்டுதல் என்றிவை முதலாகிய தொழில்களுள் அப்போரினை அழிப்பவைகளைச் செய்தல், மற்றும் வேண்டியபெருமை யென்றது புறத்தோர் அறியாமல் புகுதல் போகுதல் செய்தற்கு உண்டாக்கப்பட்ட சுருங்கைவழி முதலானவை யுடைமை,

(க - து) போர்தொடங்கியபோதே பகைவர் கெடும்படி தன்னிடத்துள்ளார் தொழில் செய்ய வல்ல பெருமையை யுடையதே அரணாம் என்பது (௯)

௧0 எனைமாட்சித் தாகியக் கண்ணும் வினைமாட்சி
இல்லார்க ணில்ல தரண்

பரி —(இ-ள்) அரண் மேற்சொல்லப்பட்ட மாட்சியெல்லா முடைத்தாய விடத்தும் வினைசெய்தற்கண் மாட்சியில்லாதாரமாட்டு 3 அவையிலதாம், எ-று

வாளாவிருத்தலும், அளவறியாது செய்தலும், ஏலாதது செய்தலு மெல்லாம் அடங்க 'வினைமாட்சி யில்லார்' என்றும், ஏற்றவினையை யளவறிந்துசெய்து காவாக்கால அம்மாட்சிகளாற் பயனின்றி யழியுமென்பார் 4 அவையுடைத்தன்றென்றுங் கூறினார் இவை யிரண்டு பாட்டானுங் காப்பாரை யின்றியமையாதென்பது கூறப்பட்டது.

---

1 எய்தல் - அம்பினையெய்தல் எறிதல் - சக்கரம் வேல் முதலியவைகளை வீசியெறிதல். குத்தல் - ஈட்டியாற் குத்துதல் வெட்டுதல் - கத்தியால் வெட்டுதல்

2 சுருங்கைவழி - கோட்டையினுள்ளே ஏற்படுத்தியுள்ள கள்ளவழி

3 அவை - (மேலே கூறப்பட்ட அரணிற்கு இருக்கவேண்டிய) மாட்சி யெல்லாம்.

4 அவையிலதாம் என்றும், இல்லதரண் என்றும் பாடமுண்டு.

தெளி.—(இ-ள்) அரண் - அரணானது, எனைமாட்சித்தாகியக் கண்ணும் - (முன் சொல்லப்பட்ட) பெருமை யெல்லாம் உடைத்தாகிய விடத்தும், வினை - தொழில்செய்யுமிடத்து, மாட்சி - பெருமையை, இல்லார்கண் - இல்லாதவரி டத்து, இலது - (அவை) இல்லதாம், எ-று.

சுற்றாவிருக்கையும், அளவறியாது செய்தலும், ஏற்காதது செய்தலும் எல்லாம் அடங்க 'வினைமாட்சியில்லார்' என்றும், ஏற்றதொழிலை அளவறிந்து செய்து காட்டாராகுமற்போருள் அவ்வரணது அப்பெருமைகளாலே பயனில்லாமல் அழியுமென்பார் அவைபுடைத்தென்று என்றும் சொன்னார். இவை இரண்டோட்டாலும் காட்டவர் அவசியம் வேண்டுமென்பது சொல்லப்பட்டது.

(க-து) போர்செய்யும் வீரரை யில்லாதவிடத்து அரண் எவ்வளவு பெருமையை யுடைத்தாயிருந்தாலும் அதனால் பயனின்று என்பது. (௰)

## ௭௬-ம் அதி.—பொருள்செயல்வகை.

**பரி.**—இனிப்பெருமானையும் நாட்டானும் அரணும் 1 ஆக்கவுங் காக்கவும் படுவதாய பொருளைச் செய்தலின் திறம் இவ்வதிகாரத்தால் கூறுகின்றார்.

**தெளி.**—இனிப் பெருமானும் நாட்டாலும் அரணாலும் வளாக்கவும் காக்கவும் படுவதாகிய பொருளைச் சம்பாதித்தலின் விதம் இவ்வதிகாரத்தாலே சொல்லுகிறார். (அஃதாவது இன்ன தென்பதும் அதிகாரமுறைமையும் இதனுள் விளங்கும்.)

க. 2 பொருளல் லவரைப் பொருளாகச் செய்யும்
பொருளல்ல தில்லை பொருள்.

**பரி.**—(இ-ள்) ஒரு பொருளாக மதிக்கப்படாதாரையும் படுவோராகச் செய்யவல்ல பொருளையொழிய ஒருவனுக்குப் பொருளாவதில்லை, எ-று.

மதிக்கப்படாதார் - அறிவிலாதார், இழிகுலத்தார். இழிவு சிறப்பும்மை விகாரத்தாற் றொக்கது. மதிக்கப்படுவோராகச் செய்தல் 3 அறிவுடையாரு

1 ஆக்கவும் - மேன்மேற் பெருகச்செய்யவும்.

2 "பூரியா ரனைவோ ராகும் புவிபுரப் பிக்குந் துய்க்கும், சீரிய வுண்டி சோ கும் தேவாத மூலகம் போகமும், காரிய மனைத்துங் கூட்டுங் கருதலர் தமமை வாட்டும், கூரிய திறன்மே லில்லை கொழும்பொனீ கொணமி னென்றார்" என்று இராமாயணங் கூறுகின்றது.

3 'என்சொலினும், கைத்துடையான் (பொருளுடையவன்) காற்கி ழொதுங்கு மகன்ஞாலம்" என்று நீதிநெறி விளக்கம் கூறுகின்றது.

டவுயா குலத்தாரும் அவரிடத்துச்சென்று நிற்கப் பண்ணுதல் 1 அதனால் அப் ——வைத்து 2 அதுவே பிறிதில்லையென்பதாம்

தேளி.—(இ - ள்) பொருளல்லவரை - ஒருபொருளாகமதிக்கப் படா தவரையும், பொருளாகச்செய்யும் - பொருளாக மதிக்கப்படுவோராகச் செய்ய வல்ல, பொருளல்லது - பொருளையொழிய, பொருள் (ஒருவனுக்கு) பொருளா வது இல்லை - எ - று

மதிக்கப்படாதவா - அறிவில்லாதவா, இழிகுலத்தோா பொருளல்லவரை யென்றதில் இரண்டாவது செய்யுள் விகாரத்தால் தொக்கு நின்றது மதிக்கப்படுவோராகச்செய்தல் அறிவுடையவரும் உயா குலத்தவரும் அவரிடத்திலேபோய் நிற்கப்பண்ணுதல் அதனால் சம்பாதிக்கவேண்டுவது அதுவே யாதொன்றுமில்லை யெனபதாம்

(க - து) ஒரு பொருளாக மதிக்கப்படாதவரையும் பொருளாக மதிக்கச்செய்தலால் பொருள் போன்ற பொருள் பிறிதில்லை யென பது (க)

உ இல்லாரை யெல்லாரு மெள்ளுவர் செல்வரை
யெல்லாருஞ் செய்வர் சிறப்பு.

பரி.—(இ - ள்.) எல்லா நன்மையு முடையராயினும் பொருளில்லாரை யாவரு மிகழ்வா, எல்லாத்தீமையு முடையராயினும் அஃதுடையாரை யாவரு முயரச்செய்வா, எ - று

உயரச்செய்தல் - தாந்தாழ்ந்து நிற்றல் 3 இகழ்தற்கண்ணும் தாழ்தற்கண்ணும் பகைவா, நட்டா, நொதுமல ரென்னும் மூவகையாரு மொத்தலின், 4 யாவரும் என்றாா. 5 பின்னுங் கூறியது அதனை வலியுறுத்தற் பொருட்டு

தேளி.—(இ - ள்) (எல்லா நன்மையு முடையவராயிருந்தாலும்) இல்லாரை - (பொரு)ளில்லாதவரை, எல்லாரும் - யாவரும், எள்ளுவா - இகழுவர்,

* அவாபால - அறிவில்லாதார் இழிகுலத்தா ரெனபவரிடத்து

1 அதனால் - அறிவுடையாரும் உயா குலத்தாரும் அவரிடத்துச் சென்று நிற்கப் பண்ணுதலால்

2 அதுவே - பொருளே.

3 பொருளில்லாதவரைப் பகைவா சிநேகா அயலோரென்னும் மூவரும் இகழ்ந்து (பழித்து) பேசுவாரென்றும் பொருளுடையவருக்கு அம்மூவரும் தாழ்ந்து நிற்பாரென்றும் கொள்க

4 எல்லாரும் என்றாா என்றும் பாடமுண்டு.

5 "பொருளல்லவரைப் பொருளாகச்செய்யும், பொருள்" என்று கூறியதனோடமையாது பின்னும் "செல்வரை, யெல்லாருஞ்செய்வா சிறப்பு" என்று கூறியது அப்பொருளின் தன்மை யித்தன்மைத்தென்று உறுதிப்படுத்திக் காட்டற்கெனக. இவ்வாறு கூறுவது அநுவாதத்தி லடங்கும்.

(எல்லாந் திரைப்பு முடையவராயிருந்தாலும்) செல்வரை - அப்பொருளுடைய வரை, எல்லாரும்-யாவரும், சிறப்புச்செய்வர் - உயரச்செய்வர், எ - று.

உயரச்செய்தல - தாம் தாழ்ந்து நிற்றல, இகழ்விலும் தாழ்விலும் பகைவர், நட்பினர் அயலவர் என்னு மூவகையோரும ஒத்தலால 'எல்லாரும்' என்றார் பின்னுஞ் சொல்லியது அதனை உறுதி செய்தற்கு

(க - து) பொருளுடையார மதிப்பும அஃதில்லாதார் அவமதிப்பும்அடைவார் என்பது. (உ)

ந. பொருளென்னும பொய்யா விளக்க மிருளறுக்கு
மெண்ணிய தேயத்துச் சென்று

பரி.—(இ - ள்) பொருளென்று எல்லாராலுஞ் சிறப்பிக்கப்படும் 1 நந்தாவிளக்குத 2 தன்னைச் செய்தவர்க்கு அவர் நினைதத தேயத்துச சென்று பகையெனனுமிருளைக் கெடுக்கும், எ - று

எல்லார்க்கும் எஞ்ஞான்றும் இன்றியமையாததாய் வருதல்பற்றிப் 'பொய்யா விளக்கம்' என்றும, ஏனைவிளக்கோடு 3 இதனிடை வேற்றுமைதோன்ற 'எண்ணியதேயத்துச் சென்று' என்றும கூறினார் 4 ஏகதேசவுருவகம இவை மூன்றுபாட்டானும் பொருளது சிறப்புக் கூறப்பட்டது

தேளி —(இ-ள) பொருளென்னும் - பொருளென்று (எல்லாராலுஞ்) சிறப்பிக்கப்படும, பொய்யாவிளக்கம - நந்தாவிளக்கானது, (தன்னைச் சம்பாதித்தவர்க்கு) எண்ணிய (அவர்) நினைத்த, தேயததுச சென்று - தேசத்திற்குப் போய, ர - (பகையென்னு) மிருளை. அறுக்கும் - கெடுக்கும, எ - று,

பொருள் எல்லார்க்கும் எந்நாளும் அவசியம் வேண்டுவதாய வருதலபற்றிப 'பொய்யாவிளக்கம்' என்றும, மற்றைவிளக்கோடு இதனிடத்து வேற்றுமை தோன்ற 'எண்ணியதேயத்துச்சென்று' என்றும சொல்லினார் ஏகதேசவுருவகம இவை மூன்று பாட்டாலும் பொருளது சிறப்புச சொல்லப்பட்டது.

(க - து.) பகை யெவ்விடத்திருப்பினும் அதனைக் கெடுப்பது பொருளேயாம் என்பது. (ந)

1 நந்தா - கெடாத. 2 தன்னை - பொருளாகியதன்னை.

3 இதனிடை - பொருளென்றும் பொய்யா விளக்கத்தினிடத்து

4 பொருளென்னும பொய்யா விளக்கம் என்றுருவகஞ் செய்ததற் கிணங்கப் பகையெனனும இருள் என்றுருவகஞ் செய்யாமையினால ஏகதேசவுருவகமாயிற்று.

5 "வடுவிலாவையத்து மன்னிய மூன்றில் (அறம்பொருளின்பங்களில்) நடுவண (பொருள்) தெய்த விருதலையும (அறமும இன்பமும) எய்தும்" என்று நாலடியார் கூறுகின்றது

**பரி** — (இ - ள) செயபுந்திறத்தினையறிந்து அரசன் கொடுங்கோன்மை யிலனாக உண்டாயபொருள் அவனுக்கு அறத்தையுங் கொடுக்கும், இன்பத்தையு ங் கொடுக்கும், எ - று

செயபுந்திறம்-தான பொருள செயதற்குரிய நெறி இலனாகவெனபது இனறியெனத் திரிந்து நினறது செஙகோலனெனறு புகழப்படுதலானும கட வுட் பூசை தானஙகளாற 1 பயனெயதலானும் 'அறனீனும்' எனறும, நெடுங் காலநினறு துய்க்கபபடுதலான 'இனபமு மீனும்' எனறும கூறினார் அதனை 2 அத்திறத்தானீட்டுகவெனபதாம்.

**தெளி.**—(இ - ள) திறனறிந்து - (சம்பாதிக்கும்) வகையினையறிந்து, தீதின்றி - (அரசன்) கொடுங்கோன்மையிலனாக, வந்தபொருள் - உண்டாகிய பொருள், (அவனுக்கு) அறன் - அறத்தையும், ஈனும்-கொடுக்கும், இன்பமும்- இன்பத்தையும், ஈனும் - கொடுக்கும், எ - று,

பொருள்செயபுந்திறம்-தான பொருள் சம்பாதித்தற்கு உரியவழி இலனாகவென்பது செயபுள்விகாரத்தால் இன்றி எனத் திரிந்துநின்றது செங்கோலனென்று புகழப்படுதலாலும கடவுட் பூசை தானங்களாலே பயன அடைதலாலும் 'அறனீனும்' என்றும், நெடுங்காலமிருந்து அனுபவிக்கப்படுதலால 'இன்பமுமீனும்' என்றும் சொல்லினார் அதனால் அத்திறத்தாற் சம்பாதிக்கவெனபதாம்

(க - து) நன்மார்க்கத்தாற சம்பாதித்த பொருள் மறுமைக்குரிய அறத்தையும் இம்மைக்குரிய இன்பத்தையும தரும் என்பது (ச)

௫ அருளொடு மன்பொடும் வாராப் பொருளாக்கம்
புல்லார் புரள விடல்.

**பரி.**—(இ - ள) தாங்குடிகளைமாட்டுச் செய்யு 3 மருளோடும் அவர்தம் மாட்டுச் செய்யு 4 மன்போடுங் கூடிவாராத பொருளீட்டத்தை அரசர் பொருந்தாது கழியவிடுக, எ - று

5 அவற்றோடு கூடிவருதலாவது 6 ஆறிலொன்றாய வருதல் 7 அவ்வா

---

1 பயன் - அறத்தின்பயன

2 அத்திறத்தான் - பொருள சம்பாதித்தற்கு உரியவழியால

3 அருள்-சம்பந்தங்கருதாமல் சுபாவமாக யாவரிடத்தும செய்வதாகிய கருணை. இது உயர்ந்தோர்செய்யும நேயமாம்

4 அன்பு - சம்பந்த முடையவரிடத்துக் காரணம பற்றிய பிரியங்கொள்ளுதல. இது - தாழ்ந்தோர் செய்யும நேயமாம்

5 அவற்றோடு - அருளோடும அன்போடும

6 ஆறிலொன்றாய்வருதல - குடிகள் சம்பாதிக்கும் பொருள்களில ஆறில ஒரு பாகமாகப்பெறுதல் ஆறில ஒருபாகமெனனும் விஷயத்தைத் "தென்புலத்தார் தெய்வம்" என்னும குறளின் விசேடவுரையிற காண்க.

7 அவ்வாறு - அருளோடும அன்போடும கூடி ஆறிலொன்றாய்.

று வாராப் பொருளாக்கம் 1 பசுமட்கலத்துணீர் போலச் செய்தானையுங் கொண்டிறத்தலின், 2 அதனைப் புல்லார் என்றொழியாது புறள விடல் என்றுங் கூறினார்.

தெளி —(இ-ள்) அருளொடும் - (தாம் குடிகளிடத்துச் செய்யும்) கருணையோடும், அன்போடும் - (அவர் தம்மிடத்துச் செய்யும்) அன்போடும், வாரா - (கூடி) வாராத, பொருளாக்கம் - பொருட்சம்பாத்தியத்தை, புல்லார் - (அரசர்) பொருந்தாராகி, புறளவிடல் - நீங்க விடக்கடவர், எ-று.

அவைகளோடு கூடிவருதலாவது ஆறிலொன்றாய் வருதல். அப்படிவாராத பொருட்சம்பாத்தியம் பசுமட்பாண்டத்தில் வார்த்துவைத்த நீர்போல் சம்பாதித்தவனையுங் கொண்டு இறத்தலால், அதனைப் புல்லார் என்றளவிலே நிறுத்தாமற் புறளவிடல் என்றுஞ் சொல்லினார்.

(க-து) அரசர் அருளோடும் அன்போடும் வாராத பொருளை விடக்கடவர் என்பது.

(௫)

௬. உறுபொருளு முல்கு பொருளுந்தன் னொன்னார்த்
தெறுபொருளும் வேந்தன் பொருள்

பரி —(இ-ள்) உடையாரின்மையின் றானேவந்துற்ற பொருளும் 3 சுங்கமாகிய பொருளும் தன்பகைவரைத் 4 திறையாகக் கொள்ளும் பொருளும் அரசனுக்குரிய பொருள்கள், எ-று.

உறுபொருள் - வைத்தாரிறந்துபோக நெடுங்காலம் நிலத்தின்கட்கிடந்து பின்கண்டெடுத்ததூஉம், தாயத்தார் பெறாததூஉமாம். சுங்கம் கலத்தினுங் காலினும் வரும் பண்டங்கட்கிறையாயது. 5 தெறுபொருள் - 6 தெறுதலான் வரும் பொருளென விரியும். 7 ஆறிலொன்றொழியவும் உரியன கூறியவாறு. இவை மூன்று பாட்டானும் அஃதீட்டுநெறி கூறப்பட்டது.

---

1 வினைத்தூய்மை - ௰ பசுமண்பாத்திரத்து வார்த்து வைத்த நீர் அப்பாத்திரத்தோடு ஒருசேரக்கெட்டொழிதல் போன்று அருளோடும் அன்போடுங்கூடி வாராத பொருள் தன்னைச் சம்பாதித்தவனோடு ஒருசேர விரைந்து கெடுமென்பதாம்.

2 அதனை - அருளோடும் அன்போடுங் கூடி வாராதபொருளை.

3 சுங்கமாகிய பொருள் - ஆயச்சாவடியில் வெளியிலிருந்து வரும் பொருள்களுக்குத் தீர்வை விதித்து வாங்குவதாகிய பொருள்.

4 திறையாக - (வென்று) கப்பமாக.

5 தெறுபொருள் என்பது மூன்றாம் வேற்றுமையுருபும் பொருளு முடன்றொக்க தொகை.

6 தெறுதலான் - போர்செய்து வெல்லுதலால்.

7 குடிகளிடத்து வாங்கும் ஆறில் ஒருபொருள் தவிரவும் உரியவையாயுள்ள பொருள்கள் சொல்லிய விதமாம்.

தெளி —(இ - ள்) உறுபொருளும - (உடையவர் இல்லாமையால் தானேவந்து) கிடைத்தபொருளும, உலகு பொருளும - சுங்கமாகிய பொருளும, தன்னொன்னார் - தன் பகைவரை, தெறுபொருளும - வென்று (இறையாகக் கொள்ளும்) பொருளும, வேந்தன்பொருள் - அரசனுக்குரியபொருள்கள், எ-று.

உறுபொருள் - வைத்தவரிறந்துபோக நெடுங்காலம் நிலத்தின் கீழ்க்கிடந்து பின்கண்டெடுத்ததும, பங்காளிகள் அடையாததுமாம சுங்கம - மரக்கலத்திலும பண்டியிலும வரும் பண்டங்களுக்கு வாங்கும வரி தெறுபொருள் - தெறுதலால் வரும் பொருளென விரியும. ஆறிலொன்றல்லாமலும உரியவை சொல்லியபடி இவை மூன்று பாட்டாலும் அது சம்பாதிக்கும்வழி சொல்லப்பட்டது

(க - து.) உடையவரில்லாப பொருளும சுங்கப்பொருளும பகைவரை வென்று கொண்ட பொருளும் அரசனுக்குரியபொருளா மென்பது. (சு)

எ. அருளென்னு மன்பீன் குழவி பொருளென்னுஞ்
செல்வச் செவிலியா லுண்டு.

பரி —(இ-ள்) அன்பினு லீனபபட்ட அருளென்னுங்குழவி பொருளென்றுயர்த்துச் சொல்லப்படுஞ் செல்வத்தை யுடைய 1 செவிலியான் வளரும, எ-று

தொடர்புபற்றுதே வருத்தமுற்றார்மேற செல்வதாய அருள் தொடர்பு பற்றிச் செல்லு மன்பு முதிர்ந்துழி உளதாவதாகலின், 2 அதனை 'அன்பீன்குழவி' என்றும், 3அது வறியார் மேற்செல்வது அவ்வறுமைகளைய வல்லார்க்காதலிற் பொருளை 4 அதற்குச் 'செவிலி' என்றும், 5 அஃதுலகிற்செவிலியாபோலாது தானே யெல்லாப்பொருளுமுதவி வளர்த்தலிற் 'செல்வச்செவிலி' என்றுங் கூறினர்.

தெளி —(இ - ள்) அன்பீன - அன்பினால் ஈன்றிடப்பட்ட, அருளென்னும் - அருளென்கின்ற, குழவி - குழந்தையானது, பொருளென்னும - பொருளென்று உயர்த்திச் சொல்லப்படும, செல்வம - செல்வத்தையுடைய, செவிலியால் - செவிலித்தாயால், உண்டு - வளரும, எ-று

சம்பந்தம் பற்றாமலே வருத்தமடைந்தவரிடத்துச் செல்வதாகிய அருள் சம்பந்தம்பற்றிச்செல்லும் அன்பு மிகுந்த விடத்து உண்டாவதாகலால அதனை 'அன்பீன் குழவி' என்றும, அது வறியவர்மேற்செல்வது அவ்வறுமைகளைய வல்ல பொருளுடையவர்க்கு ஆதலால் பொருளை அதற்குச் 'செவிலி' என்றும,

---

1 செவிலி - வளர்த்ததாய் 2 அதனை - அருளை 3 அது - அருள்
4 அதற்கு - அருளுக்கு 5 அஃது - அச்செவிலி

அஃது உலகிற் செவிலித்தாய்போலாகாமல் தானே பெலலாப்பொருளுட உத வி வளர்த்தலால 'செல்வச் செவிலி' என்றும சொல்லினர்.

(க-தி) அனபுகாரணமாக வுணடாய அருள பொருளால் விருத் தியடையும் என்பது. (எ)

அ. குனறேறி யானைப்போர் கண்டற்றாற றனைகைத்தொன் றுண்டாக்ச் செய்வான் வினை.

பரி —(இ-ள்) தன் கையதாகிய பொருளுண்டாக ஒரு வினையையெ டுத்துககொணடான் அதனைச செயதல ஒருவன மலைமேலேறி நின்று யானைப் போரைக கணடாலொககும், எ-று.

ஒன்றென்பது வினையாதல செய்வா னென்றதனாற பெற்றும். குன்றே றியான அச்சமும வருத்தமுமின்றி நிலததிடை யானையும யானையும பொரு போரைத் தானினிதிருந்து காணுமதுபோலக் கைத்துணடாக வினையை மேற கொணடானும் அச்சமும வருத்தமுமின்றி வலலாரையேவித் தானினிதிருந்து முடிக்குமென்பதாம்.

தேளி —(இ-ள்) தன் கைதது - தன் கையதாகிய பொருள், உண்டாக- உளதாக, ஒனறு - ஒருதொழிலை, செயவான் - எடுத்துககொண்டவன், வினை- அத்தொழிலைச செயதலானது, குனறேறி - (ஒருவன்) மலையின்மேல ஏறிநின் று, யானைபபோர் - யானைகளதுபோரை, கண்டற்று - கண்டதனோடொக்கும், எ-று

ஒனறு என்பது தொழிலாதல் செய்வான என்பதனால் பெறப்பட்டது மலையின்மேலேறினவன் அச்சமும் வருத்தமும் இலலாமல் பூமியில யானையும யானையும் செய்கினற சண்டையைத் தான் இனி திருந்து காணபதுபோலக் கைபபொருளுளதாக ஒரு தொழிலை மேறகொணடவனும் அச்சமும் வருத்த மும் இல்லாமல வலலவரை யேவித் தான் இனிதிருந்து முடிபபானென்ப தாம்.

(க-து.) பொருளுள்ளவன்மேற்கொண்ட தொழில் வருததமின றி யினிது முடியும் என்பது. (அ)

கூ. [1] செய்க பொருளைச் செறுநர் செருக்கறுக்கு மெஃகதனிற் கூரிய தில்.

---

1 "செய்கபொருள் யாருஞ் செறுவாரைச செறுகிறகு, மெஃகுபிறி தில்லையி ருக் தேடியிரை புணணு, மையமிலை யினபமற ஞேடவையுமாககும், பொ ய்யில்பொருளேபொருளமற் றலலபிற பொருளே" என்று சீவக சிந்தா மணி கூறுகின்றது.

பரி —(இ - ள்.) தமக்கொன்றுண்டாகக் கருதுவார் பொருளை யுண்டாக்குக, தப்பகைவர 1 தருக்கினையறுக்கும் படைக்கலம் 2 அதுவாம; 3 அதற் கதுபோலககூரிய படைக்கலம் பிறிதில்லை, எ று.

அதுவாம் அதறகெனபன அவாய்நிலையான வந்தன. பொருளைச்செய்யவே பெரும்படையும நட்புமுடையராவர்; ஆகவே, பகைவர் தருக்கொழிந்து தாமே யடஙகுவரெனபார் 'செறுநா செருக்கறுககுமெஃகா' மெனறும, ஏனையெஃகுகள் 4அதுபோல 5அருவப் பொருளை யறுக்கமாட்டாமையின் 'அதனிற் கூரியதில்' என்றுங் கூறினர்

தெளி —(இ - ள்) (தமக்கு ஒன்று உணடாக நினைபபவர்) பொருளை - பொருளினை, செய்க - சம்பாதிக்ககடவர், (அபபொருள்) செறுநர் - (தம்) பகைவரது, செருக்கு - தருக்கினை, அறுக்கும் - கெடுக்கும், எஃகு - ஆயுதமாம், (அதற்கு) அதனின் - அதுபோல, கூரியது - கூரிய ஆயுதம், இல் - (வேறு) ), எ-று.

அதுவாம் என்பதும் அதறகு என்பதும் அவாய்நிலையால்வந்தன. பொருளைச் சமபாதிக்கவே பெரியபடையும நட்பு முடையவராவா; ஆகவே, பகைவர் செருக்கு நீஙகித்தாமே அடஙகுவாரென்பார் 'செறுநர் செருக்கறுக்குமெஃகு' என்றும, மற்றை யாயுதங்கள் அதுபோலஅருவப்பொருளை அறுக்கமாட்டாமையால 'அதனிற கூரியதில' என்றுஞ் சொலலினர்.

(க - து.) பகைவரது செருககழிக்கும் படை பொருளாயிருத்தலால் தமக்கு மேனமை யுணடாக வெணணுபவர் பொருளைச் சம்பாதிகக கடவர் எனபது (கூ)

கo. ஒண்பொருள் காழ்பப வியற்றியார்க் கெண்பொரு
ளேனை யிரண்டு மொருங்கு

பரி.—(இ - ள்.) நெறியான் வரும் பொருளை இறபப மிகப்படைத்தார்க்கு மறறை யறனு மின்பமும் ஒருங்கே யெளிய பொருள்களாம, எ-று.

காழ்த்தல்-முதிர்தல் பயன கொடுததல்லது போகாமையின 'ஒணபொருள்' என்றும், ஏனையிரணடும 6 அதன விளைவாகலிற றுமே யொருகாலததிலே

---

1 தருக்கினை - செருககினை (கர்வத்தை) 2 அதுவாம் பொருளாம்.

3 அதற்கு அதுபோல - பகைவர் தருககிற்கு அப்பொருள்போல

4 அதுபோல - பொருள்போல. 5 அருவப்பொருளை - பகைவரது தருக்காகிய அருவப்பொருளை (அருவம்-உருவமில்லாதது) வைசேடிகரது மதம் பறறித்தருக்காகிய குணமபொருளாகக கூறபபட்டது தாக்கிகா உருவம் இரதம கந்த முதலிய இருபதது நானகு குணஙகளில உருவந் (வெணமை கருமை முதலியன) தவிர மற்றைய குணஙகளெலலாம அருவமென்பர்.

6 அதன் விளைவாகலின - பொருளினது விளைவாயிருததலால.

யுளவா மெனடாா 'எணமொருள்' என்றுக கூறினர் இவை நான்கு பாட்டா லும் 1 அதனுனவரும் பயன கூறபடடடது

தேளி.—(இ - ள்) ஒண்பொருள - நல்வழியால வருப பொருளை, காழ்ப் ப - பெருக, இயறறியாககு - மிகஉணடாககினவாககு, ஏனையிரண்டும - மற் றை அறமும இனடமும், ஒருங்கு - ஒருசேர, எண்பொருள் - எளியபொருள்க ளாம், எ-று.

காழத்தல்-முதிர்நல அப்பொருள பயனகொடுத்தலலது போகாமையா ல் 'ஒணபொருள்' என்றும, மறறையறமும் பொருளுமாகிய விரணடும அதன வினைவாகலால தாமே ஒருகாலத்திலே உணடாகு மென்பார 'எணபொருள' எனறும் சொல்லினா. இவை நானகு பாட்டாலும அதனால் வருமபயன சொ ல்லப்பட்டது

(க - து) நலவழியாற் பொருளைச் சமபாதித்தவர்க்கு அறமும் இன்பமும் எளிதிற் சித்திக்கும் எனபது (ய)

## எஎ-ம். அதி.—படைமாட்சி.

பரி —இனி அபபொருளினு ளவதாய் வெல்வதாய படை இரணடதிகார த்தாற கூறுவான றொடஙகி, முதற்கட் படைமாடசிகூறுகினறா அஃதாவது படையினது நன்மை

தேளி —இனி அபபொருளினுல ஆவதாய் வெல்வதாகிய படையை இர ண்டதிகாரத்தாலே சொல்லத்தொடஙகி, முதலிலேபடைமாடசி சொல்லுகிறா ர் அஃதாவது சேனையினது நன்மையாம (அதிகாரமுறைமையும் இதனுலே விளஙகும)

க. உறுபபமைந் தூறஞ்சா வெல்படை வேநதன்
வெறுககையு ளெலலாந தலை.

பரி —(இ - ள்.) 2 யானை முதலிய நான் குறுப்பானும் நிறைநது போ ரின்க ணூறுபடுதற கஞ்சாது நினறு பகையை வெலவதாய படை அரசன செல்வஙக ளெல்லாவற்றுள்ளும் தலையாய செல்வம, எ-று.

1 அதனுன-பொருளால.

2 சதுரங்கமென்பது ரத(தேர்) கஜ(யானை) துரக(குதிரை)பதாதி (காலாள்) என்று கூறப்படுமாயினும் தலைமைபறறி 'யானை முதலிய நான்குறுப்பா னும் (சதுரங்கத்தாலும)' என்று கூறபபடடது. இது "யானையுடைய படைகாண்டல முன்னினிதே" "படை தனக்கு யானை வனப்பாகும்" எ ன்று வரும பிரயோகத்தாலு மறியபபடும.

—ஊறுபடையென்றது 1 அங்கானகன்மெகுதியை. 2 ஊறஞ்சியவழி வெறல கூடாமையின 'ஊறஞ்சா' என்றும, 3 ஒழிந்தவங்கங்கட்கும அரசனுக்குக் காவலாகலின 'வெறுக்கையுளெல்லாந் தலை' என்றுங் கூறினர்

தெளி —(இ - ள்) உறுப்பு-(யானை முதலாகிய) நான்குறுப்புக்களாலும், அமைந்து - நிறைந்து, ஊறு - (போரிலே) காயம் படுதற்கு, அஞ்சா - அஞ்சாது நின்று, வெல - (பகையை) வெல்வதாகிய, படை - சேனையானது, வேந்தன - அரசனது, வெறுக்கையுளெல்லாம செல்வங்களெல்லாவற்றுள்ளும, தலை - முதன்மையாகியசெல்வமாம, எ-று

இங்குப் படையென்றது அங்கானகின கூட்டத்தை சேனை ஊறஞ்சிய விடத்து வெலலுதல கூடாமையால 'ஊறஞ்சா' என்றும, அச்சேனை ஒழிந்த அங்கங்களுக்கும அரசனுக்கும காவலாகலால 'வெறுக்கையுளெல்லாந் தலை' என்றும சொல்லினா.

(க - து.) அரசன செல்வத்துட சிறந்த செல்வம போரிலஞ்சாது நின்று பகைவரை வெலலும் படையாமெனபது (க)

உ. உலைவிடத் தூறஞ்சா வன்கண் டொலைவிடத்துத
தொலபடைக் கலலா லரிது.

பரி —(இ - ள்) தான் சிறிதாய வழியும அரசற்குப் போரினக ணுலைவு வந்தால தன்மே லுறுவதற் கஞ்சாது நின்று தாஙகும வனகண்மை அவன முன்னோரைத தொடஙகிவரும படைககலலது உளதாகாது, எ-று

இழிவு சிறப்புமமை விகாரத்தாறறொக்கது 4 மூலப்படை, கூலிப்படை, நாட்டுப்படை, காட்டுப்படை, துணைப்படை, பகைப்படை யெனனும அறுவகைப்படையுளளுஞ் சிறப்புடைடது மூலப்படையாகலான, 5 அதனை அரசன

1 அங்கானகின் - யானை, தோ, குதிரை, காலாள்க ளெனனும நான்கினது
2 ஊறஞ்சியவழி - காயத்திறகுப பயந்தவிடத்து
3 ஒழிந்த அங்கம - சேனை நீஙகிய அமைசசு, நாடு, அரண, பொருள், நட்பு என்னும உறுப்புக்கள
4 "

மெய்ப்படை புறுதியிற் பொருதமதகப்படை யென விராய், அறுவகைப்

தாம

5 அதனை - மூலப்படையை மூலப்படை அரசனது முனனோரைத் தொடங்கிவரும் சேனை. இது மூலபலம் எனப்படும இராமாயணத்தில இராவணன் இந்திரசித்து மாணட பிறகு இராமா முதலியவரை யழித்தொழிக்கும்படி மூலபலச சேனையை யனுப்பினதாலு மிஃதறியப்படும. அம்மூல படைக்குச்சிறப்பாவது அரசனிடத்து அவன் முன்னோரைத தொடஙகிவரும அனபும தனக்குக்கெடுதி நேரிடுமிடத்தும பயந்து நீஙகாத சௌரியமுடைமையாம.

*"வெல்பொறியு நாடும் விழுப்பொருளுந் தன்னடையுங், கொல்களிறு மாவுங் கொடுத்தளிக்க" என்பது § குறிப்பெச்சம் இப்படையை வடநூலார் மௌல மென்ப.

தெளி —(இ - ள) தொலைவிடத்து - (தான்) சிறிதாகிய விடத்தும், உலைவிடத்து -(அரசனுக்குப் போரினிடத்து)அழிவு வந்தால, ஊறு-(தன்மேலே) காயம் படுதற்கு, அஞ்சா - அஞ்சாது நின்று தாங்கும், வன்கண் - சௌரியமானது, தொல்படைக்கல்லால் - அவன் முன்னோரைத் தொடங்கி வருஞ் சேனைக்கல்லாமல், அரிது - உண்டாகாது, எ-று.

தொலைவிடத்து என்பதனீற்றில இழிவுசிறப்பும்மை செய்யுள்விகாரத்தால் தொக்கு நின்றது. மூலப்படை, கூலிப்படை, நாட்டுப்படை, காட்டுப்படை, துணைப்படை, பகைப்படை எனப்படுகிற அறுவகைப்படைகளுள்ளும் சிறப்புடையது மூலப்படையாதலால், அரசன் அதற்கு வேண்டுமவைகளைக் கொடுத்து அதைக்காப்பாற்றுகவென்பது குறிப்பெச்சம வடநூலார் இம்மூலப்படையை மௌலம் என்பர்.

(க - து.) தான சுருங்கி வருந்தியவிடத்தும் பகைவர்க்கஞ்சாது காக்கும் வீரம் மூலப்படைக்கல்லது வேறுபடைக்கில்லை என்பது. (உ)

ஙு- ஒலித்தக்கா லென்னா முவரி யெலிப்பகை
நாக முயிர்ப்பக் கெடும்.

பரி.—(இ - ள்) எலியாயபகை திரண்டு கடலபோல வொலித்தால நாகத்திற்கு என்ன ஏதம் வரும்; அந்நாக 1 முயிர்த்த துணையானே 2 அதுதானே கெடும், எ-று.

உவமைச்சொற் றொக்கு நின்றது. 3 இத்தொழிலுவமத்தாற் றிரட்சிபெறும வீரரல்லாதார் பலர் திரண் 4 டார்த்தால 5 அதற்கு வீரனஞ்சான் அவனிளர்த்த துணையானே 6 அவர் தாமகெடுவரென்பது தோன்றநின்றமையின்,

* புறப்பொருள் வெண்பாமாலை தும்பைப்படலம், 2. இதன்பொருள் போர் வெல்லும் அடையாளமும் (விருதும்) பலவூர்களையுடைய சிறுநாடும் சிறந்த பொருளும் மருதநிலமும்(நெல்விளைதற்குரிய நிலமும்)பகைவரைக்கொல்லும் யானையும் குதிரையும் கொடுத்துக் காப்பாற்றுக என்பது

§ அருத்தம் குறிப்பாக அறியுமாறு குறைந்து நிறபது குறிபபெசசமாம்

1 உயிர்த்ததுணையானே - மூச்செறிந்த வளவிலே.

2 அது - எலியாகிய பகை.

3 ஒலித்தக்கால் என்னும் தொழி லுவமானத்தால் பகையின்றிரட்சி (கூட்டம்) பெறப்பட்டது.

4 ஆர்த்தால் - ஆரவாரஞ் செய்தால்.

5 அதற்கு - அவ்வாரவாரத்திற்கு

6 அவர் - வீரரல்லாதார் பலர்

§ இது பிறிது மொழிதலென்னு மலங்காரம். வீரரல்லாதார பலரினும் வீர னொருவனே யாடல் ஙனறென்பதாம் இவை மூன்று பாட்டானும் முறையே அ ரசனுககுப்படை ஏனையவகங்களுட சிறநத தெனபதூஉம, 1 அதுதன்னுள் ளும மூலபபடை சிறநததெனபதூஉம், 2 அதுதனனுள்ளும் வீரன சிறந்தா னென்பதூஉங் கூறபபட்டன

தெளி —(இ - ள்.) எலிபடகை - எலிகளாகிய பகைதிரண்டு, உவரி - கட ல்போல், ஒலித்தக்கால - இரைந்தால, என்னும -(பாமபுககு) என்ன துன்பம் வரும், நாகம - அபபாமபு, உயிர்பப - மூச்செறிதத வளவிலே, கெடும்- (அது தானே) கெடும, எ-று

போல எனனும் உவம வுருபிடைச்சொல் தொக்கு நின்றது இத்தொ ழிலுவமத்தால் திரட்சிபெற்றும வீரரல்லாதார் பலர் திரணடு ஆர்த்தால் அ தற்கு வீரன் அஞ்சான் அவன் எழுமபின் வளவிலே அவர் தாம கெடுவரெனப து தோனற நின்றமையால, இது பிறிது மொழிதலெனனு மலஙகாரம் வீரா லலாதார பலரினும் வீரனொருவனே ஆளுதல நல்லதென்பதாம் இவை மூன்று பாட்டாலும முறையே அரசனுக்குப படையானது மறறை யங்கஙகளுட சிற நததென்பதும், அதனினும மூலபபடை சிறந்ததெனபதும, அதனிலும வீரன சிறந்தவனென்பதும் சொல்லபபட்டன

(க - து ) எலிகள் பலகூடி யெதிர்த்தாலும அவை பாமபு மூச் செறிநத வளவிலே கேடடைதலபோன்று வீரரல்லாதார் பலர்கூடி யெதிர்ததாலும அவர் வீரனொருவ னெழுமபின வளவிலேயே கெடுவ ரெனபதாம (ந)

ச. அழிவின் றறைபோகா தாகி வழிவந்த
வன்க ணதுவே படை

பரி —(இ - ள்.) போரின்கட் கெடுதலின்றிப பகைவராற கீழறுக்கப்ப டாததாய்த தொன்று தொட்டுவந்த தறுகணமையை யுடையதே அரசனுக்குப படையாவது, எ-று.

அழிவினமையான் 3மற 4மானஙகளுடைமையும, 5அறைபோகாமையான

---

§ இகுறள் ஒட்டென்னும் அலஙகாரம. "கருதிய பொருள்தொகுத தததுபுலப படுத்தற், கொத்ததொன் றுரைபபினஃ தொட்டென மொழிப" என்பது சூத்திரம்

1 அது தன்னுள்ளும் - அபபடையிலும

2 அது தனனுள்ளும - மூலபபடையிலும.

3 மறம் - வீரம,

4 மானம் - எபபொழுதும் தமது நிலைமையிற் றாழாமையும ஊழினால் கு றைவு வநதவிடதது உயிர் வாழாமையுமாம

5 அறைபோகாமை - பகைவரால வசுசிககபபடாமை

அரசனபாட டனபுடைமையும் பெறபபட்டன வழிவநத வன்கணமை - 1 'க ன்னின்று னெடநை கணவன் களபபட்டான, முனனின்று மொயவிநதாரென னையா—பினனின்று, கைபோயக் கணையுதைப்பக் காவலன்மே லோடி, யெய போற கிடநதானென னேறு" எனபதனுனறிக 2குறறிய லுகரத்தினமுனனா உடமபடுமெயவிகாரததான வநதது இது வருகின்றபாடடுள்ளுமொககும

தெளி —(இ - ள) படை - (அரசனுக்குப) படையாவது, அழிவின்று - (போரினிடததுக்) கெடுதலிலலாமல, அறைபோகாதாகி - (பகைவராலே) கீழ றுக்கப் படாததாகி, வழிவநத - பழைமையாகவந்த, வனகணதுவே - சௌரி யததை யுடையதே, எ-று

அழிவிலலாமையால மறமானநகளுடைமையும, அறைபோகாமையால அ ரசனிடத்து அனபுடைமையும பெறபபட்டன வழிவநத வனகணமை - போரிலபினனிடாது தாகசிற தளாசிவநதவிடதது இறநதுபடுதல. வன்க ணது எனனும உயிர்தொடாக குறறிய லுகரததிறகு முன் உடமபடுமெய யாகிய வகரம 'வன்கணதுவே' என விகாரததால வநதது இது வருகினற பாட்டிறகும ஒககும

(க - து.) போரிறகேறறலும பகைவரால வஞசிககப்படுதலும இனறித் தொன்றுதொட்டு வநத வீரமுடையதே அரசனுககுப்படையா மென்பது. (௪)

௫. கூற்றுடனறு மேலவரினுங் கூடி யெதிர்நிறகு
மாறற லதுவே படை.

---

1 புறபபொருள் வெண்பாமாலை வாகைபபடலம் உஉ இதன்பொருள் கல்வி லே பொருநதி நின்றுன் எனதுதகப்பன, எனது கணவன் போர்ககளத் திலே யிறந்தான, பகைவர்முன்னே நினறுஎதிர்ததுப போரிலே வீழ்ந திறந்தார எனது தமையன்மார், தனது சேனை கெடவும் கெடாதே பின னே நினறு தனது கையானதுபோய அம்பைச் செலுததப் பகைஅரச ன் மேலேசென்று முள்ளம்பன்றிபோல பகைவர்விடட அமபு தைக்கப பெற்று இறந்துகிடநதான் என்னுடைய புததிரன் என்பது [துறை - ஏறாண்முல்லை. ஏறாண் முல்லையாவது - எதிரில்லாமலொழியக் கோபம் மிகுகின்ற மேல் மேல் அதிகரியாநின்ற ஆணமைத் தன்மையினையுடை ய குடிபொழுக்கததைச் சிறபபித்துக் கூறுதல ] கலலிலே பொருநதி நி ற்றல் - இறந்துபோன வீரனது வடிவம்போற கல்லாற்செயது நாட்டு தல்

"உயிர்வரி னுக்குறள் மெய்விட் டோடும்" எனனும் நன்னூறசூததிரத்தின் விருத்தி யுரையில் "கெடும் என்றது ஓடு மெனறமையாற் குறறியலு கரமொரோ வழி 'இ ஈ ஐ வழி' என்னும்பொது விதிபெறுதலுங் கொ ள்க. (வ - று.) 'தன்முகமாகத் தானழைப்பதுவே' 'ஆறறொருமைக் கதவுமாதுவும்' எனவரும்" என்று கூறப்பட்டிருககிறது

பரி—(இ-ள்) கூற்றுவனே றுனே வெகுண்டு [1] மேல வநதாலும் நெஞ் சொத்து எதிர் நின்று தாககுமாற்றலை யுடையதே படையாவது எ-று

[2] மருந்தில கூற்றுகலின், உமமை சிறப்பும்மை மிகபபலம் நெஞ்சொத்த ற்குக காரணம் அரசனமேலனபு ஆற்றல் - மனவலி

தெளி—(இ-ள்) படை - சேனையானது, கூறறு-கூற்றுவனே, உடன் று - கோபித்து, மேலவரினும்-தன்மேல்வந்தாலும, கூடி -மனமொத்து, எதிர நிற்கும் - எதிர்நின்று தாங்கும, ஆற்றலதுவே - வலிமையை யுடையதே,எ-று

மருந்திலலாத யமனுதலால் வரினும் என்ற வுமமை உயாவுசிறபபும்மை மிகபபலம மனமொத்தறகுக காரணம் அரசன்மேலனபு ஆறறல் - மனவு றுதி. ஆற்றலது என்னும் உயிர்த்தொடர்க் குற்றியலுகரம் வகரவுடமபடு மெ யபெற்று ஆற்றலதுவே என விகாரத்தால் வநதது

(க-து.) யமனுககுமஞசா தெதிர்த்துப் போரிடும் வலிமையுடை யதே படையா மெனபது. (௫)

௬. மறமான மாண்ட வழிச்செலவு தேற்ற
மெனநானகே யேமம் படைக்கு.

பரி.—(இ-ள்) தறுகணமையும் மானமும் முன்வீரராயினா சென்ற நன்னெறிக்கட் சேறலும அரசனுற றேறபபடுதலு மென இந்நானகு குண மு மே படைக்கு அரணுவது, எ-று.

இவறறுள் முறையே பகைவரைக் கடிதிற்கொன்று நிறறலும், அரச னுக்குத் தாழ்வுவாராமற காததலும், [3] அழியுநாபுறககொடையயில வாளோச் சாமை [4] முதலியவும, அறைபோகாமையுமாகிய செயகைகள் பெறபபட்டன. இச்செய்கைபாராகுப் பகைவா நணுகாராகலின, வேறரண் வேண்டாவென் பதாம்

---

1 மேல வந்தாலும - தனமேல் எதிாத்துப போரிட வநதாலும்.

2 மருந்தில் கூற்று - எவவகையாலும் தடுத்தல முடியாத யமன்

3 புறபபொருள் வஞ்சிப்படலம உம தழிஞசிததுறையினகொளு (கருத்து). இதன்பொருள் தோறறோடுவோா முதுகினகண் கூரியவாளை வீசாமை எனபது

4 முதலிய எனறதனுல தேரைவிட்டுப பூமியிலிறங்கினவன், பேடி, அஞ்சலி செய்தவன், தலைமயிரை யவிழ்த்துககொணடிருப்பவன், குநதிககொண டிருபபவன், அடைக்கலமென்று சொன்னவன, வஸ்திரமிலலாதவன், கவிபபில்லாதவன, ஆயுதமில்லாதவன, போரிலெதிாக்காதவன், சணடை யைப பார்ப்பவன், தூங்குகிறவன், மறறொருவனுடன போாபுரிபவன், ஆயுதமொடிந்தவன, பிள்ளை முதலானவாகளிறநது விசனபபடுகிறவன, நன்றாக அடிபட்டவன, பயநதவன முதலியவர்களைக கொலலாமையுங கொள்க

தெளி — (இ - ள்) மறம் - சௌரியமும், மானம் - மானமும், மாண்ட வழிச்செலவு - (முன்வீரராயினோர்சென்ற) நல்லவழியிலே செல்லுதலும், தேற்றம் - (அரசனால்) நம்பப்படுதலும், எனநான்கே - என் இந்நான்குகுணமுமே, படைக்கு - சேனைக்கு, ஏமம் - அரணாம், எ-று.

இவைகளால் முறையே (மறத்தினால்) பகைவரைச் சீக்கிரத்திலே கொன்று நிற்கையும், (மானத்தினால்) அரசனுக்குத் தாழ்வுவாராமற் காத்தலும், (மாண்டவழிச்செலவுதலால்) தோற்டவர்மேற் படையெறியாமை முதலியவும், (தேற்றத்தினால்) அறைபோகாமையும் ஆகியசெய்கைகள் பெறப்பட்டன இச்செய்கையோர்க்குப் பகைவர் நெருங்கமாட்டாராகலின், வேறரண் வேண்டாமென்பதாம்.

(க - து) படைக்கு அரண் வீரமும் மானமும் நன்மார்க்கத்திற் செல்லுதலும் நம்பப்படுதலுமாம் என்பது. (சு)

எ தார்தாங்கிச் செல்வது தானை தலைவந்த
போர்தாங்குந் தன்மை யறிந்து.

பரி —(இ - ள்) மாற்றாரால் வகுக்கப்பட்டுத் தன்மேல்வந்த படையின் போரை விலக்கும் வகுப்பறிந்து வகுத்துக்கொண்டு அவர் 1 தூசியைத் தன்மேல் வாராமற் றடுத்துத் தான் 2 அதன்மேற் செல்வதே படையாவது, எ-று.

படைவகுப்பாவது வியூகம், அஃது எழுவகை யுறுப்பிற்றாய், வகையானான்காய், விரியான் முப்பத்தாம் 3 உறுப்பேழாவன உரமுதற் ரோட்டியீறாயின. வகை நான்காவன - 4 தண்டம், 5 மண்டலம், 6 அசங்கதம், 7 போகமென விவை. விரி முப்பத்தாவன - 8 தண்டவிரி பதினேழும், 9 மண்டல

1 தூசி - கொடிப்படை (முன்னணிச்சேனை).

2 அதன்மேல் - (முன்னேவந்து போரிடுவதான) தூசிப்படையின்மேல்

3 உறுப்பேழாவன - உரம், இறக்கையிரண்டு, மத்தியம், பிரதிக்கிரகம், பிரிஷ்டம், கோடி என்னும் ஏழாம்.

4 தண்டம் - சேனையைக் குறுக்காக நிறுத்துதல்.

5 மண்டலம் - சேனையைப் பாம்புமண்டல மிடுவதுபோல நிறுத்துதல்.

6 அசங்கதம் - சேனையை வேறுவேறாக நிறுத்துதல்

7 போகம் - சதுரங்க (யானை தேர் குதிரை காலாள் என்னும்) சேனையை ஒன்றுக்குப்பின் ஒன்றாக நிறுத்துதல்.

8 தண்டவிரி பதினேழாவன - பிரதரம், திருடகம், சியாவஸதம், குக்ஷி, பிரதிட்டம், சுப்பிரதிட்டம், சியேநம், விஜயம், சஞ்சயம், விசாலம், நிஜயம், சூசி, ஸ்தூணை, கர்ணம், சமூமுகம், ரதாசியம், வலயம் என்பனவாம்.

9 மண்டலவிரி இரண்டாவன - சர்வதோபத்திரம், துர்ஜயம் என்பனவாம்

டும் இரண்டும், 1 அசங்கதவிரியாறும், 2 போகவிரி யைந்துமென விவை. இவற்றின் பெயர்களும் இலக்கணமும் ஈண்டுரைப்பிற் பெருகும் ; அவையெல்லாம் 3 வடநூல்களுட் கண்டுகொள்க இவை நான்குபாட்டானும் படையின திலக்கணங் கூறப்பட்டது

தேனி —(இ - ள) தானை - சேனையாவது, தலைவந்த - (பகைவராலே வகுக்கப்பட்டுத்) தன்மேல்வந்த, போர - (படையின) போரை, தாங்குதன் மை - விலக்கும் வகுப்பை, அறிந்து - தெரிந்து (வகுத்துக்கொண்டு), தார - (அவரது) தூசிப்படையை, தாங்கி-(தன்மேல வாராமல்) தடுத்து, செலவது - (தான அதனமேலே) செலவதே, எ-று.

படைவகுப்பாவது வியூகம்; அது எழுவகை உறுப்புகளையுடையதாய், வகையால் நான்காய், விரியால் முப்பத்தாம அவயவமேழாவன - உரமுதல் கோட்டியீறாயுள்ளவை வகை நான்காவன - தண்டம், மண்டலம், அசங்கதம், போகமென்பவை விரி முப்பத்தாவன - தண்டவிரி பதினேழும், மண்டலவிரி யிரண்டும், அசங்கதவிரியாறும், போகவிரி யைந்தும் என்பவை. இவைகளின் பெயரும் இலக்கணங்களும் இங்கே சொன்னால் விரியும், அவையெல்லாம் வடநூல்களுட் கண்டுகொள்க இவை நான்கு பாட்டாலும் படையது இலக்கணம் சொலலப்பட்டது

(க - து) பகைவரது படைவகுப்பிற கேற்றாற்போல் அணிவகுத்துக் கொண்டு அவரது தூசிப்படை தனமேல வாராதவண்ணம தடுத்துச் செலவதே படையாம என்பது. (எ)

அ அடற்றகையு மாற்றலு மில்லெனினுந் தானை
படைத்தகையாற் பாடு பெறும்

பரி.—(இ -ள்)தானை பகைமேற் றான் சென்றடுந் தறுகண்மையும் 4 அது தன்மேல் வந்தாற பொறுக்குமாற்றலும் இலலையாயினும, தன்றோற்றப்பொலிவானே பெருமை யெய்தும், எ-று.

5 இல்லெனினும் எனவே, அவற்ற தின்றியமையாமை பெறப்பட்டது படைத்தகையென்றது ஒருபெயர்மாத்திரமாய் நின்றது தோற்றப் பொலிவாவது அலங்கரிக்கப்பட்ட தேர், யானை, குதிரைகளுடனும் 6 பதாகை, கொடி,

1 அசங்கதவிரியாறுவன - அர்த்தசந்திரம், உத்தானம, சிருங்காடம், காக்கடக சிருங்காரி, காகபாரி, கோதிகா எனபனவாம்.

2 போகவிரி ஐந்தாவன - கோமூத்திரிகை, மசகம, சஞ்சாரி, சகடம், பந்தம என்பனவாம,

3 காமாந்தகமுதலிய வடநூலகளில். 4 அது - அந்தப்பகைவா

5 அடற்றகையும் ஆற்றலும இலலெனினும என்று கூறவே (அடற்றகை ஆற்றல் என்னும) அவைகளினது அவசியம பெறப்பட்டதென்பதாம.

6 பதாகை - பெருங்கொடி

குடை, பலலியம, 1 காகள முதலியவறறுடனும அணிந்து தோன்றுமழகு. பாடு - கண்டவளவிலே பகைவரஞ்சும் பெருமை

தெளி.—(இ - ள) தானை - சேனை, அடறறகையும - (பகைமேலே தான சென்று) போர செயயுஞ் சௌரியமும, ஆற்றலும - (அது தனமேல வநதால) பொறுககும் வலிமையும், இலலெனினும - இல்லையாயினும, படைததகையால தனது தோறறப பொலிவாலே, பாடு-பெருமையை, பெறும்-அடையும, எ-று.

இல்லெனினும் எனவே, அவைகளது அவசியம் பெறப்பட்டது படைத்த கை யென்றது தோறறபபொலிவு என்னும் ஒருபெயரளவாய நின்றது. தோற்றபபொலிவாவது அலங்கரிக்கபபடட தேர், யானை, குதிரைகளுடனும பதாகை, கொடி, குடை, சஙகீதம், காகள முதலானவைகளுடனும் அணிநது தோன்றும அழகு. பாடு - கண்டவளவிலே பகைவரஞ்சும பெருமை

(க - து.) படையானது வீரமும் பொறுககும வலிமையுமில்லாவிட்டாலும் தோற்றப்பொலிவினலே பெருமையடையும எனபது (அ)

கூ. சிறுமையுஞ் செல்லாத துனியும வறுமையு
மிலலாயின வெல்லும் படை.

பரி.—(இ - ள) தான றேயந்து சிறிதாகலும் மனத்தினின்று நீஙகாத வெறுபபும நலகுரவும் தனக்கிலலையாயின் படை பகையை வெலலும, எ-று.

2 விடடுபபோதலும 3 நினறது நலகூர்தலும அரசன் பொருள்கொடாமையான வருவன செல்லாத் துனியாவது மகளிரை வெளவல, இளிவரவாயின செய்தல் 4 முதலியவற்றுன் வருவது 5 இவையுள்வழி அவன்மாட்டன்பினறி 6 உற்றுபபொருமையின் 'இல்லாயின வெல்லும' எனமுர்.

தெளி —(இ - ள்.) சிறுமையும - (தான்தேய்ந்து) சிறிதாகலும, செல்லாத்துனியும - (மனததிலிருந்து) நீங்காதவெறுபபும், வறுமையும - தரிததிரமும், இலலாயின் - (தனக்கு) இல்லையாயின், படை - சேனையானது, வெலலும் - (பகையை) வெல்லும, எ-று.

---

1 காகளம் - எக்காள மென்னும் ஊதுகுழல்

2 விட்டுப்போதல் - நாளுக்கு நாள் சேனை சமபளம கொடுககாமையினல நீஙகிப்போகுதல்

3 நினறது - நீஙகிப்போகாமல நின்ற சேனை.

4 முதலிய என்றதனுல ஆறிலொன்றுக்குமேல் கப்பம் வாஙகுதல, சுங்கத்தீர்வையை யதிக மாககுதல தண்டிக்கவேண்டியவாகளைத் தண்டிக்காமை, சம்பள ஏற்பாடடைக் குறைத்தல் முதலியவைகளும் கொள்க

5 இவையுள்ளவழி - சிறுமையும் (விடடுபபோதலும்) செலலாத்துனியும் வறுமையு முள்ளவிடத்து.

6 உற்று - மனம் பொருந்தி.

விட்டுப்போதலும் நின்றது வறுமைப்படுதலும் அரசன் பொருள் கொடாமையால் வருவன. நீங்காவெறுப்பாவது மகளிரைவெளவல் இழிவாயின செய்தல் முதலானவைகளால் வருவது. இவையுள்ளவிடத்து அவனிடத்து அன்பிலாமல் உற்றுப்போர் செய்யாமையின் 'இல்லாயின் வெல்லும்' என்றார்.

(க-து) சுருங்குதலும் வெறுப்பும் தரித்திரமு மில்லையானால் படை பகைவரை வெல்லும் என்பது. (௯)

௰. நிலைமக்கள் சால வுடைத்தெனினுந் தானை
தலைமக்க ளில்வழி யில

பரி.—(இ-ள்.) போரின்க ணிலையுடைய வீரரை மிகவுடைத்தேயாயினும், தனக்குத் தலைவராகிய வீரரில்லாதவழித் தானை நில்லாது, எ-று.

படைத்தலைவர் நிலையுடையரன்றிப் போவாராயிற் காணபோரில்லெனப் பொராது தானும் போமென்பார் 'தலைமக்களில்வழி யில' என்றார். இவைமூன்று பாட்டானும் முறையே படைத்தகைமையின்மையானும், அரசன் கொடைத்தாழ்வானும், தலைவரின்மையானும் தாழ்வு கூறப்பட்டது.

தெளி.—(இ-ள்.) நிலைமக்கள்-(போரினிடத்து) நிலையையுடைய வீரரை, சாலவுடைத்தெனினும் - மிகவுடையதேயாயினும், தலைமக்கள் - தனக்குத் தலைவராகிய வீரர், இல்வழி - இல்லாவிடத்து, தானை - சேனை, இல் - நில்லாது, எ-று.

சேனாதிபதிகள் நிலையுடையவ ரல்லாமல் போவாராயின் காணபோரில்லெனப் போர்செய்யாமல் தானும் போமென்பார் 'தலைமக்களில வழியில' என்றார். இவை மூன்றுபாட்டாலும் முறையே படைத்தகைமை யில்லாமையாலும், அரசன் கொடைத்தாழ்வுகளாலும், தலைவரில்லாமையாலும் தாழ்வு சொல்லப்பட்டது.

(க-து.) படைத்தலைவ ரில்லாத படை எவ்வளவு மிகுதியாயிருந்தாலும் அதனால் பயனில்லை என்பதாம். (௰)

## எஅ-ம். அதி.—படைச்செருக்கு.

பரி.—அஃதாவது அப்படையது மறமிகுதி அதிகாரமுறைமையும் ன விளங்கும்.

தெளி.—அஃதாவது - அச்சேனையினது வீரமிகுதியாம் அதிகாரமுறைமையும் இதனாலே விளங்கும்.

க. என்னைமுன் னில்லன்மின் றெவ்விர் பலரென்னை
முன்னின்று கன்னின் றவர்.

பரி —(இ - ள்) பகைவீர் இன்றிங் கென்றலைவனெதிர் போரேற்று நின்று அவன் வேல்வாய் வீழ்ந்து பின்கலாயினகணேனை நின்றவீரர் பலர், நீவிர் அதன்கணின்றி நும்முடற்கணின்றல வேண்டின் எனறலைவனெதிர் போரேற்று நிற்றலை யொழிமின், எ-று

'என்னை' எனத் தனனொடு தொடர்புபடுத்துக் கூறினமையிர், அவன்வேலவாய் வீழ்தல பெற்றுர கல்-நடுகல 1 "நடடன் சிலைவாய நடக்குங கணை மிசசிலல்லா, லம்பொன் முடிட்டு ணரசுயமிலை" எனப 2 பதுமுகன் கூறினறு போல ஒரு வீரன் தனமறம அரசனமேல்வைத்துக் கூறியவாறு இப்பாட்டு 3 நெடுமொழி வஞ்சி

தெளி —(இ-ள) தெவ்வீர் - பகைவரே, (இனறிஙகு) என - எனனுடைய, ஐமுன் - தலைவனெதிர், நினறு - (போரேற்று)நினறு, கனினறவர்- (அவன் வேலபட்டு வீழநது) கலலினிடத்தே நின்ற வீரர் பலா - பலராவர், (நீர அககலலினிடத்து நில்லாமல் உம்முடலிலே நிறகையை வேண்டில) என்- என்னுடைய, ஐமுன் - தலைவனெதிா, நிலலன்மின் - (போரேற்று) நிறறலை யொழியுஙகள், எ று

போர்செய்யும் வீரன் 'எனனை' எனததலைவனைத் தனனுடன் சமபந்தபபடுத்திககூறினதினுல, அவ்வீரனதுவேல் படடுப பகைவர் வீழநதிறத்தல பெறபபட்டது கல - போரில் வீரா இறந்தவிடத்து அவருருவஞ்செய்து நடப்படுங்கல ஒருவீரன தன் வீரத்தை அரசனமேலவைத்துச சொலலியபடி இபபாட்டு நெடுமொழிவஞ்சி

(க - து) பகைவரே! எனதலைவனெதிர் சென்று நின்று வெலலாது இறந்து கலலுருவமாக நாட்டபபட்டவா பலராதலால் நீஙகள பிழைக்கவேணடினுல் போர்செயதலை யொழியுஙகள் எனபது. (க)

உ. கான முயலெயத வமபினில் யானை
பிழைததவே லேநத லினிது.

பரி —(க - து.) கானததின்கணேடும்முயலைப பிழையாம லெய்த அம்பை யேந்தலினும வெள்ளிடைநின்ற யானையை யெறிநது பிழைத்த வேலை யேநதுதல் நன்று, எ-று.

---

1 சீவகசிநதாமணி காந்தருவதத்தை யாரிலமபகம் நகள. இதனபொருள் நம்பனது (ஜீவகனது) வில்லினினறும வெளிப்பட்ட பாணஙகளின மிச்சிலல்லாமல் சிறந்த பொன்னாற் செய்த கிரீடத்தைத தரித்த அரசனும் இல்லை யென்பது (மிச்சல் - எசசில்).

2 பதுமுகன் - சீவகனது நேசன்.

3 நெடுமொழி வஞ்சியாவது ஒரு வீரன் தனது பகைவாக்கு முனனே சென்று தனது சௌரியததைச் சிறபபித்துசசொலலுதல, "இனனரென வேண்டா வென்னெடெதிாசீறி, முன்னா வருக முரணகலு - மன்னர், பருந தார் படையமருட் பலலா புகழ, விருநதா யடைகுறுவார் விண" என்று புறப்பொருள் வெண்பாமாலையிலுளளது மிஙகறியததககதாம.

கான முயல் என்றதனால் வெள்ளிடை நின்ற என்பதும், பிழைத்தவென்ற தனால் பிழையாமல் என்பதும், முயற்கு எய்த என்றதனான் யானைக்கு எறிதலும் வருவிக்கப்பட்டன. இது வேற்றரசன் படையொடு பொருதானொரு வீரன் [1] அது புறங்கொடுத்ததாக நாணிப் பின் அவன் றன்மேற் செல்லலுற்றானது கூற்று.

தெளி —(இ-ள்) கானம் - காட்டில், (ஓடுகிற) முயல் - முசலை, எய்த - (தப்பாமல்) எய்த, அம்பினின் - அம்பை ஏந்துதலைப்பார்க்கிலும், யானை - (வெளிநிலத்திலே நின்ற) யானையை, (எறிந்து) பிழைத்தவேல்-தப்பியவேலை, ஏந்தல் - ஏந்துதல், இனிது - நன்று, எ-று.

கான முயல் என்றதனால் வெளிநிலத்தில் நின்ற என்பதும், பிழைத்த என்றதனால் தப்பாமலென்பதும், முயற்குத்தக எய்த என்றதனால் யானைக்குத் தக எறிதலும் வருவிக்கப்பட்டன. இது பகையரசனது சேனையோடு சண்டை செய்தானொர் வீரன் அதுதோற்றுப் பின்னிட்டமைக்கு நாணிப்பின் அவ்வரசன்மேற் செல்லலுற்றானது வார்த்தை.

(க - து) முயலை யெய்த அம்பை யேந்துதலைப் பார்க்கிலும் யானையை யெய்து தப்பிய அம்பை யேந்துதல் சிறந்தது என்பது. (௨)

௩. பேராண்மை யென்ப தறுகணொன் றுற்றக்கா
லூராண்மை மற்றத னெஃகு.

பரி.—(இ - ள்.) பகைவர்மேற் [2] கண்ணோடாது செய்யும் மறத்தை நூலோர் மிக்க வாண்மை யென்று சொல்லுவர், [3] அவர்க்கு ஒருதாழ்வு வந்தாயிற் கண்ணோடி [4] அது தீர்த்துக்கோடற்பொருட்டு ஊராண்மை செய்தலை நூலோர் [5] அதற்குக் கூர்மையென்று சொல்லுவர், எ-று.

என்ப வென்பது பின்னு மியைந்தது. ஊராண்மை - உபகாரியாந்தன்மை. அஃதாவது இலங்கையர் வேந்தன் போரிடைத் தனியனை முழுதுமட்டத் தமியனாயகப்பட்டானது [6] நிலைமை நோக்கி, [7] அயோத்தியரிறை மேற்செல

---

1 அது புறங்கொடுத்ததாக நாணி-அவ்வேற்றரசனது சேனை முதுகு கொடுத்தோடியதாக (அதுகண்டு) வெட்கமுற்று.

2 கண்ணோடாது-தாட்சண்ணியங் கொள்ளாமல். 3 அவர்க்கு-பகைவர்க்கு.

4 அது தீர்த்துக்கோடற் பொருட்டு - (பகைவர்) அத்தாழ்வைத் தீர்த்துக்கொள்ளும் நிமித்தம்.

5 அதற்கு - தறுகண்மைக்கு (வீரமெனனும் ஆயுதத்திற்கு)

6 தன்னொடு வந்த படையாவு மடியப்படைக்கலம் ஒழிய மணிமுடி யழியநின்ற இராவணனது நிலைமையைப்பற்றி "அறங்கடந்தவர் செயலிதென் றுலகெலா மார்ப்ப, நிறங்கரிந்திடக் கரிதுகா நிலமவிரல கீளத்திட நின்றானை, இறங்கு கண்ணினெலலழி முகத்தினன்றலையன், வெறுங்கை நாற்றினன விழுதுடை யாவனன மெய்யன்" என்று இராமாயணங்கூறுவதாலுமறிக.

7 ஆள யாவுனக்கமைந்தன மாருத மறைந்த, பூளை யாயின கண்டனை யின்று போய் போர்க்கு, நாளை வாவென நல்கினனுகிளங் கமுகின், வாளை தாவுறு கோசலை நாடுடை வள்ளல்" என்றிராமாயணங் கூறுகின்றது.

யாது இன்றுபோய நாளை நின்றுணையோடு வாவென விட்டாற்போல்வது இவை யிரண்டும்பாட்டுக்கு 1 தழிஞ்சி.

தேவி—(இ - ள) தறுகண் - (பகைவரிடத்தே முகங்கொடாமற்செய்கி ற)வீரத்தை, பேராண்மை - (நூலோர்)மிகுந்தவாண்மையாகும், என்ப-என்று சொல்லுவர், ஒன்றுற்றக்கால் - (அவர்க்கு) ஒருதாழ்வு வந்ததாயின், (முகங் கொடுத்து அது தீர்த்துக்கொள்ளுதற்பொருட்டு) ஊராண்மை - உபகாரஞ் செய்தலை, அதன - அதற்கு, எஃகு -கூர்மையாகும், என்ப - என்று (நூலோ ர்) சொல்லுவர், எ-று.

என்ப என்டது எஃகு என்பதனோடும் பொருந்திநின்றது. ஊராண மை - உபகாரஞ் செய்யுந்தன்மை. அஃதாவது இலங்கைக்கரசனான இராவ ணன் தனது சேனைமுழுதும் போரிலிறக்கத் தனியனாயகப்பட்டானது நிலை மையைப்பார்த்து, அயோத்திக் கரசனான இராமபிரான போர்செய்யாது இன் று போய் நாளை புனது சேனையோடு போருக்கு வரக்கடவாயென்று விட்டால் போல்வது. மற்று - அசை இவை இரண்டுபாட்டும் தழிஞ்சி.

(க - து) பகைவர்க்குத் தாழ்வுவந்த விடத்து உதவுதல வீரமெ னனும் பேராண்மைக்குக் கூர்மையாகும் என்பது. (௬)

ச கைவேல களிற்றொடு போக்கி வருபவன
மெய்வேல பறியா நகும

பரி—(இ - ள) தனகைப்படையாய வேலைத் தன்மேலவந்த களிற்றோ டு போக்கி வருகின்ற களிற்றுக்கு வேறுடித் திரிவான் தனமார்பினகணின்ற வேலைக்கண்டு பறித்து மகிழும்

களிற்றொடு போக்கல் - களிற்றினதுயிரைக் கொடுபோமாறு விடுதல் மகிழ்ச்சி தேடியதெய்தலான் இதனுட களிற்றையலல தெறியானெனப தூஉம், சினமிகுதியான் வேலின்டைபோழ்ந்த தறிந்திலனென்பதூஉம், பின்னும் போர்மேல் விருப்பின னெனபதூஉம பெறப்பட்டன 2 நூழிலாட்டு.

தேவி—(இ - ள) கைவேல - (தன்) கைப்படையாகிய வேலை, களிற ரொடு - (தனமேல்வந்த) யானையோடு, போக்கி - எறிந்துவிட்டு, வருபவன் -

---

1 தழிஞ்சி (தழுவல்) - தோற்றவர்மேல போர்க்குச் செல்லாமை. புறப்பொ ருள் வெண்பாமாலை 'அழிகுநர் புறக்கொடை யயில்வாளோச்சாக், கழி தறு கண்மை காதலித்துரைத்தன்று” என்று கூறுகின்றது நச்சினார்க் கினியார் "தழிசுதல தழிஞ்சியாயிற்று” எனபர்

2 நூழிலாட்டாவது - உடம்பிற புதைந்துள்ள படையைப பறித்துப் பகைவர் மேலெறிதல். "களங்கெழுமிய படையிரிய, வுளங்கழிந்த வேல்பறித் தோச்சின்று” என்றுபுறப்பொருள் வெண்பாமாலை கூறுகின்றது

(வருகின்ற யானைக்குவேலதேடித்) திரிபவன், மெய்வேல் - தன்மார்பிலிருந்த வேலை, (கண்டு) பறியா - பிடுங்கி, நகும் - மகிழ்வான, எ-று

களிற்றொடுபோக்கல்-களிற்றினதுயிரைக் கொண்டுபோமபடி விடுதல் ம கிழ்ச்சி - தேடிய படை அடைதலால் இதனுள் களிற்றையல்லது எறியா னென்பதூஉம், கோபமிகுதியால வேல் மார்பிலே பிளந்து புதைந்ததை அறிந் திலனென்பதூஉம், பின்னும் போர்மேல் விரும்பினனென்பதூஉம் பெறப்பட்டன. இது நூழிலாட்டு

(க-து) தனது கையிலுள்ள வேலைத்தன்னை யெதிர்த்தயானையின் மேலெறிந்து விட்டு வருகின்ற யானைக்கு வேல தேடித்திரிபவன் தனது மார்பில் தைத்துள்ள வேலைக்கண்டு மகிழ்வான் என்பது (௪)

௫ விழித்தகண் வேல்கொண் டெறிய வழித்திமைப்பி
னொட்டன்றோ வன்க ணவர்க்கு.

பரி —(இ - ள்) பகைவரை வெகுண்டு நோக்கிய கண் 1 அவர் வேலைக் கொண்டெறிய 2 அஃதாற்றாது 3 அந்நோக்கை யழித்து இமைக்குமாயின், அது வீரர்க்கு 4 புறங்கொடுத்தலாம், எ-று

அவ்வெகுளி நோக்க 5 மீட்டலும் போரின்கண் மீட்சியெனக்கருதி 6 அதுவுஞ் செய்யாரென்பதாம

தெளி —(இ - ள்) விழித்தகண் - (பகைவரைக்) கோபித்துப்பார்த்தக ண், வேல்கொண்டு (அவர்) வேலைக்கொண்டு, எறிய-வீச, அழித்து - (அதற்குப் பொறாமல் அப்பார்வையை) அழித்து, இமைப்பின - இமைக்குமாயின,(அவ்வி மைத்தல்) வன்கணவர்க்கு - வீரர்க்கு, ஒட்டன்றோ - தோற்பல்லவா, எ-று

அக்கோபப்பார்வை மீட்டலும் போரினிடத்துப் புறங்கொடுத்த லென்று நினைத்து அதுவும செய்யாரென்பதாம.

(க - து) போரில் பகைவர் படைக்காற்றாது கண்ணிமைத்தலும் வீரர்க்குத் தோல்வி யாகும் என்பது. (௫)

௬. விழுப்புண் படாதநா ளெல்லாம வழுக்கினுள்
வைக்குந்தன் னாளை யெடுத்து.

பரி —(இ - ள்.) தனக்குச் சென்ற நாள்களை யெடுத்தெண்ணி, அவற்று ள் விழுப்புண்படாத நாள்களையெல்லாம பயன்படாது கழிந்த நாளுள்ளே வைக்கும் வீரன், எ-று

1 அவர் - பகைவர் 2 அஃது - வேல்கொண்டெறிதலுக்கு
3 அந்நோக்கை யழித்து - கோபித்துப்பார்த்த பார்வையை யொழித்து
4 புறங்கொடுத்தலாம் - தோற்றோடுதலாம்.
5 மீட்டலும - மாற்றலும 6 அதுவும் - இமைத்தலும.

விழுபபுண-முகத்தினும் மாாபினும் பட்ட புண, போர்பெற்றிருக்கவும் [1] அது பெறுத நாளகளோடும் கூட்டுமெனபதாம். இவை மூன்று பாட்டாலும [2] ஊறஞ்சாமை கூறபபட்டது

தேளி —(இ - ள்) (வீரனுனவன) தன்னுளை - தனககுககழிநத தினஙக ளை, எடுதது-எடுத்தெண்ணி, (அததினஙகளுள) விழுப்புன் - பெருஙகாயஙகள், படாத நாளெலலாம் - படாத தினஙகளையெல்லாம, வழுககினுள - பயனப டாது கழிநத தினஙகளுள்ளே, வைக்கும் - வைபபான், எ-று

விழுபபுண-முகத்திலும மார்பிலும பட்ட புண் போா பெறறிருககவும். அது பெறுதநாளகளோடுங் கூட்டுமெனபதாம இவை மூன்று பாட்டாலும ஊறஞ்சாமை சொலலபபட்டது

(க - து) போரில் காயம வாங்காத நாட்களை வீரன வீணுளாக எணணுவன் எனபது. (சு)

எ. சுழலு மிசைவேண்டி வேண்டா வுயிரார
கழல்யாப்புக காரிகை நீர்தது

பரி —(இ - ள்.) துறக்கத்துத தம்மொடு செல்லாது வையததைச் சூழ ந்து நிறகும் புகழை வேணடி உயிர்வாழதலை வேண்டாத வீரா [3]கழல கட்டுத ல் அலங்கார நீர்மையையுடைத்து, எ-று.

வையத்தைச சூழுமெனவே, அதன் பெருமை பெறறும செயபபடுபொ ருள் வருவிககபபட்டது. சூழ்தல் - அகத்திடல துறக்கமும புகழும எளிதி னெய்துவராகலின், ஆபரணமாவது அதுவே யென்பதாம.

தேளி —(இ-ள்) சுழலும் - (துறக்கததிற்குத தமமுடன் வாராமல பூமி யைச்) சூழ்நதுநிற்கும், இசை - புகழை, வேணடி - விருமபி, வேணடாவுயி ரார - உயிர்வாழதலை வேண்டாத வீரர், கழல்-வீரககழலை, யாபபு - (காலில்) கட்டுதல், காரிகை நீாதது - அலங்கார குணததை யுடையதாம, எ-று.

பூமியைச் சூழுமெனவே அப்புகழின் பெருமை பெறபபட்டது பூமியை என்னும் செயபடுபொருள வருவிக்கபபட்டது சூழ்தல - பூமியினுள இ ருக்கசசெய்தல் அப்படிபபட்ட வீரர் வானுலகமும புகழும எளிதிலே அடை வராகலால, அவர்கு ஆபரணமாவது அககழலே யென்பதாம

(க - து) கீர்ததியை விரும்பிய வீரர் உயிரை விருமபாரென பது. (எ)

---

1 அது - விழுப்புண்

2 ஊறு - உடம்பில் வாள் முதலிய படைகளாலுணடாகும் காயம்

3 "ஆடவர் கொடையால் வீரத் தாலணி, பாதத் தணியே கழலணி யென்ப" என்று பிங்கலந்தை கூறுகின்றது

அ உறினுயி ரஞ்சா மறவ ரிறைவன்
செறினுஞ்சீர் குன்ற லிலர்.

**பரி.**—(இ - ள்) போர்பெறிற் றமதுயிரபபொருட டஞ்சாது 1 அதன் மேற்செல்லும வீரர் தமமிறைவன் 2 அதுவேணடாவெனறு முனியினும் அவ் வீரமிகுதி குன்றா, எ று.

போர்பெற் றறியாமையின், 3 அதுபெற்றால அரசன் றடுபபினும நில்லா ரென்பதாம். பிறரும 4 "போரெனிற புகலும் புனைகழன் மறவர்" எனறும், 5 "புடபகத்; தேவ ஞகலிற் சாவேம் யாமென, நீஙகா மறவர் வீங்குதோள் புடைப்ப" என்றுங் கூறினர்

**தெளி**—(இ - ள்.) உறின் - (போரைப்) பெறறால், உயிர் - (தம) முயிர் பபொருட்டு, அஞ்சா - அஞ்சாமல், (அதன்மேற்செல்லும்) மறவர் - வீரர், இறைவன் - (தம்) அரசன, செறினும - (அது வேண்டாமென்று) கோபிககி னும, சீர்குன்றல் - அவ்வீரமிகுதி குறைதல, இலா-இலராவா, எ - று

வீரர் போர்பெறறு அறியாமையால், அதுபெற்றால அரசன தடுப்பினும நில்லாரென்பதாம

(க - து) தம்முயிர்க்கஞ்சாது போர் புரியும்வீரர் தம் அரசன் வேண்டாமென்று தடுககினும வீரங்குறையார் எனபது. (அ)

கூ இழைத்த திகவாமைச சாவாரை யாரே
பிழைத்த தொறுக்கிற் பவர்.

---

1 அதன்மேல - போரினமேல 2 அது - போர். 3 அது - போர்.

4 புறநானூறு ருக இதன்பொருள் - சணடையென்று கேடடால விரும்பும் (காலில்) அணிந்த வீரக்கழலை யுடைய வீரர் என்பது

5 புறநானூறு கூஅ இதன்பொருள் - புட்பக விமானத்திற் செல்லும தேவ ஞக ஆதலால் யாம் (போரிற்சென்று பகைவரோடெதிாதது) மடிவோ மென்று தமமுள் நீங்குதலிலலாத வீரர் (தமமுடைய) பூரிதத தோள் களை (கைகளால) தடட எனபது. " புடபகைக், கேவா ஞகலிற சாவே ம் யாமென, நீஙகா மறவா வீஙகு தோள்புடைபப " எனறும் பாடமுண் டு. இதற்கு (எம்மை) " புட்செயயும பகையிடத்து ஏவாஞகலான் யாம் எம்மிற பொருதுமடியக் கடவேமென்று நீங்காதமறத்தை யுடையோர் தம்முடைய பூரித்த தோள்களைத தட்ட" என்றுரை கூறபபட்டிருப்பது டன் விசேட வுரையில "புடபகையேவாஞகலின்" எனறோதி, "உளளப கை தமமிற்கூடிறறுக, புள் நிமித்தத்திற்குப பகைவன் ஏவாஞகலிற் சா வேம யாமென மறவா தோள்புடைப்ப வென்றுரைபபாருமுளா. புட்ப கை யென்று இவனுக்கு ஓர்பெயா " எனறும கூறபபடடிருக்கிறது.

பரி —(இ - ள்) தாஙகூறின வஞ்சினந தப்பாமற பொருட்டுச் சென்று சாவவல்ல வீரரை 1 அது தப்பியவாறு சொல்லி யெள்ளுதற்குரியார் யாவர், எ-று

இழைத்தல - 2 இன்னது செய்யேனாயின இன்னனாகுகவெனத் தான் வகுத்தல் சொலலியென்பது 3 அவாய்நிலையான் வந்தது வஞ்சின முடிபபா னபுகுகு 4 முன்னே சாவினுந் 5 தொலைவன்மையின், 6 அது முடித்தாராவ ரெனச் சாதற்சிறப்புக் கூறியவாறு

தேனி —(இ - ள்) இழைத்தது - (தாம்) சொல்லியசபதம், இகவாமை - தப்பாமறபொருட்டு, சாவாரை - (போய்ச்) சாகவல்ல வீரரை, பிழைத்தது - (அது) தப்பியவிதம, (சொலலி) ஒறுக்கிறபவா - இகழ்தற்குரியவர், யார் - யா வா, எ-று.

இழைத்தல - இன்னது செயயேனாகில் இன்னனாகுகவெனத்தான் வகுத்துக்கூறுதல சொல்லியென்பது அவாய நிலையாலவந்தது சபதமுடிக்கப புகுமுன்னே இறந்தாலும் தொலைவில்லாமையால், அது முடித்தவராவரெனச சாதற்சிறப்புச் சொல்லியபடி.

(க - து.) செய்த சபதம தப்பாதபடிச் சென்று போரில் மடியும் வீரரைக் குற்றங் கூறுவாரில்லை என்பது. (கூ)

க0. புரந்தார்கண ணீர்மலகச் சாகற்பிற சாககா
டிரநதுகோட் டகக துடைத்து.

பரி —(இ - ள்) தமககுச்செயத நன்றிகளை நினைந்து ஆணடவரசர் கணகள் நீர் மலகும்வகை போரிடைச் சாவப்பெறின், அச்சாககாடு இரந்தாயினுங் கொள்ளுந் தகுதியையுடைத்து, எ-று.

7 மல்குதலாகிய இடத்து நிகழ்பொருளின் தொழில இடத்தின்மேனின் றது கிளையழ இலவிடைநோயால் விளிவார் 8 பழவினைபபயனே யெய்தலின்,

1 அது - சபதம்.

2 "வினையிலென் மகன்றனுடல் வேறுசெய்வித் தோனைக், குனிசிலையி னுளையுயிர் கோறல்புரி யேனேல், மனைவியுயிர் வீயநன் மகன்மனைவி கையால,தினையளவு மோர்பொழுது சீவித்தவ னாவேன்" என்று பதினமூன்றாநாள் யுத்தத்தில் அருச்சுனன் சபதஞ்செய்தாற் போல்வது இஙகுக் கவனிக்கத் தககது.

3 ஒறுககிற்பவர் என்பது சொல்லி யென்பதை அவாவி (வேண்டி) நின்றது.

4 முன்னே - தான் கூறிய சபதம் முடிப்பதற்கு முன்னரே.

5 தொலைவு - தோல்வி 6 அது - வஞ்சினம் (சபதம).

7 கண்ணீர்மல்க என்பது "இந்தப்பானை நாறுழியரிசிபொஙகும்" என்றாற் போல் வந்த (இடதது நிகழ்பொருளின் தொழில இடத்தின்மேலாய) வுபசார வழக்கு

8 பழவினை - சனமாநதரங்களில் செய்தகருமம

அமைந்த வினையால் 1 துறக்கமெய்துஞ் சாதலை 'இரந்துகோட்டக்கதுடைத்து' என்றார். இவை நான்குபாட்டானும் 2 உயிரோம்பாமை கூறப்பட்டது.

**தெளி.**—(இ - ள்) (தமக்குச்செய்த உபகாரங்களை நினைந்து) புரந்தார்- ஆண்டவரசரது, கண் - கண்கள், நீர்மல்க - நீர்பெருகும்படி, சாகற்பின் - (போரிலே) சாவப்பெற்றால், சாக்காடு - அச்சாவு, இரந்து - இரந்தாயினும், கோட்டக்கது - கொள்ளுந்தகுதியை, உடைத்து - உடையது, எ-று.

மல்குதலாகிய இடத்து (கண்களில்) நிகழ்பொருளின (நீரின) தொழில் இடத்தின்(கண்களின்)மேல நின்றது. சுற்றத்தார் அழ இல்லி(வீட்டி)னிடத்து நோயினாற்சாவார் பழவினைப்பயனையேஅடைதலால், அப்போது அடுத்த வினையால் வானுலகத்தை அடையும் சாவை 'இரந்துகோட்டக்க துடைத்து' என்றார். இவைநான்குபாட்டாலும் உயிர்க்காவாமை சொல்லப்பட்டது.

(க - து) தம் அரசன் தாமசெய்த உபகாரங்களை எண்ணி உருகுமாறு போரில் இறத்தல் சிறப்புடையதாகும் என்பது. (ய)

—— (o):——

எகூ - ம. அதி.—நட்பு

**பரி.**—இனி அப்படைபோல அரசனுக்கு வினையிடத்துதவுவதாயநட்பினை ஐந்ததிகாரம் 3 விதிமுகத்தானும் பன்னிரண்டதிகாரம் எதிர்மறைமுகத்தானுங் கூறுவானறொடங்கி, விதிமுகவதிகாரமைந்தனுள்ளும் முதற்கண் நட்புக் கூறுகின்றார். 4 அஃதாவது இன்னதென்பதூஉம் அதிகார முறைமையும் இதனுள் விளங்கும்.

**தெளி.**—இனி அப்படைபோல் அரசனுக்குத் தொழிலிடத்து உதவுவதாகிய நட்பினை ஐந்ததிகாரம் விதிமுகத்தாலும் பன்னிரண்டதிகாரம் எதிர்மறை முகத்தாலும் சொல்லத்தொடங்கி, விதிமுக வதிகார மைந்தினுள்ளும் முதலிலே நட்புச் சொல்லுகின்றார். அஃதாவது இன்னதென்பதும் அதிகார முறைமையும் இதனுள் விளங்கும்.

க. செயற்கரிய யாவுள நட்பி னதுபோல
வினைக்கரிய யாவுள காப்பு.

**பரி.**—(இ - ள்) நட்புப்போலச் செய்து கோடற்கரிய பொருள்கள் யாவையுள, செய்துகொண்டால் அதுபோலப் பகைவர் செய்யும் வினைக்குப் புகற்கரிய காவலாவன யாவையுள, எ-று.

---

1 துறக்கம் - வீரசுவர்க்கம்
2 உயிரோம்பாமை - உயிரை விரும்பிக்காக்க எண்ணாமை
3 விதிமுகத்தானும் - உடன்பாட்டு வாயிலாகவும்
4 அஃதாவது - நட்பாவது (சிநேகமாவது)

நட்புச் செய்தற்காவாரைப் பெறுதலும் பெற்றால் செய்யு முபாயமும் செய்தாற்றிரிபின்றி நிற்றலு முதலிய அரியவாகலின் நட்பிற்செயற்கரியன வில்லை என்றும், செய்தாற் பகைவரஞ்சி வினைதொடங்காராகலின் அதுபோல வினைவாராமைக்கு அரியகாவ லில்லை என்றுங் கூறினார் நட்புத்தான் இயற்கை செயற்கை யென இருவகைப்படும். அவற்றுள் இயற்கை பிறப்புமுறையானுயதூஉம் தேயமுறையானுயதூஉமென விருவகைப்படுமெ அவற்றுண் 1 முன்னையது சுற்றமாகலின் அது 2 சுற்றந்தழாலினடங்கிற்று, 3 ஏனையது 4 பகையிடையிட்ட தேயத்ததாகலின் அது 5 துணைவலியென 6 வலியறிதலு ளடங்கிற்று இனி ஈண்டுச் சொல்லப்படுவது முன்செய்த வுதவிபற்றிவருஞ் செயற்கையேயாகலின், அதன் சிறப்பு இதனாற் கூறப்பட்டது.

தெளி —(இ - ள்) நட்பின் - நட்பைப்போல, செயற்கரிய - சம்பாதித்துக்கொள்ளுதற்கு அரியபொருள்கள், யா - எவைகள், உள-இருக்கின்றன, (சம்பாதித்துக்கொண்டால்) அதுபோல் - அதுபோல, வினைக்கரிய - (பகைவர் செய்யுந்) தொழிலுக்குப் (புகுதற்கு) அரிய, காப்பு - காவலானவை, யா - எவைக எ-று

நட்புச் செய்தற்கு ஆவாரைப் பெறுதலும் பெற்றால் செய்யும் உபாயமும் செய்தால் வேறுபடாமல் நிற்றலும் முதலானவை அருமையாகலால் நட்புப்போல் செயற்கரியன வில்லை என்றும், செய்தால் பகைவர் அஞ்சிப் போர் தொடங்காராதலால் அதுபோல போர் வாராமற் காத்தற்கு அரிய காவலில்லை என்றும் சொல்லினார் நட்பு இயற்கை செயற்கை யென இருவகைப்படும். அவைகளில் இயற்கை நட்பு பிறப்பு முறையாலாகியதும் தேய முறையாலாகியதும் என இருவகைப்படும் அவைகளுள் முன்னையது சுற்றமாகலால் அது சுற்றந்தழாலில் அடங்கிற்று, மற்றது பகையிடையிட்டதேயத்ததாகலால் அது துணைவலியென வலியறிதலுள் அடங்கிற்று. இனியிங்கே சொல்லப்படுவது முன்செய்த உதவி பெற்று வருவதாகிய செயற்கை நட்பேயாகலால், அதன் சிறப்பு இதனால் சொல்லப்பட்டது.

(க - து.) பகைவர் வினையைக் கெடுக்கும் நட்புப்போலச் சம்பாதித்துக்கொள்ளுதற்கு அரியபொருள் வேறில்லை என்பது. (க)

---

1 முன்னையது - பிறப்பு முறையாலாகிய இயற்கைநட்பு.

2 சுற்றந்தழாலின் - சுற்றந்தழால் என்னும் அதிகாரத்தில். [தழால - தழுவுதல] அஃதாவது தனது உறவினரைத்தன்னை விட்டு நீங்காதிருக்கும்படி

3 ஏனையது - தேசமுறையாலாகிய இயற்கை நட்பு.

4 பகையிடையிட்ட - பகைவருடு சம்பவித்த

5 துணைவலி - துணை (சகாயம்) யாயுள்ளவரது வலிமை

௨. [1] நிறைநீர நீரவர் கேண்மை பிறைமதிப்
பின்னீர பேதையார் நட்பு

பரி—(இ-ள்) அறிவுடையார் நட்புகள் [2] பிறை நிறையுந்தன்மைபோல நாடோறு நிறையுந் தன்மையவாம், மற்றைப் பேதைமையுடையார் நட்புகள் நிறைந்த [3] மதி பின் குறையுந் தன்மைபோல நாடோறுங் குறையுந் தன்மையவாம், எ-று.

'நீரவர்' என்றார் இனிமைபற்றி கேண்மை நட்பென் ஒருபொருட்கிளவி செய்தாரது பன்மையான் நட்பும் பலவாயின அறிவுடையாரும் அறிவுடையாருஞ் செய்தன முன்சுருங்கிப் பின்பெருகற்கும், பேதையாரும் பேதையாருஞ் செய்தன முன் பெருகிப் பின் சுருங்கற்கும் காரணம் தம்முண் [4] முன்னறியாமையும் பின்னறிதலுமாம்.

தெளி.—(இ-ள்) நீரவர் - அறிவுடையவரது, கேண்மை - நட்புகள், பிறை-பிறைநிறையுந் தன்மைபோல, நிறைநீர - நாடோறும் நிறையுந் தன்மையனவாம், பேதையார் - மற்றை அறிவில்லாதவரது, நட்பு - நட்புக்கள், மதி-நிறைந்த சந்திரன், பின்னீர-பின்னே குறையுந் தன்மைபோல நாடோறும் குறையுந்தன்மையனவாம், எ-று

இனிமைக்குணமுடையராயிருத்தல்பற்றி'நீரவர்'என்றார் கேண்மை நட்பு என்பன ஒருபொருட்சொற்கள் அறிவுடையவரும் அறிவுடையவரும் செய்த நட்புகள் முன்னேசுருங்கிப் பின்னே விருத்தியாதற்கும், அறிவில்லாதவரும் அறிவில்லாதவரும் செய்த நட்புகள் முன்னே விருத்தியடைந்து பின்னே சுருங்குதற்குங் காரணம் தம்முள்ளே முன்னே அறியாமையும் பின்னே அறிதலுமாம்

(க-து) அறிவுடையாரது நட்புப் பெருகியும் மூடரது நட்புச் சுருங்கியும் வரும் என்பது. (௨)

௩. நவிறொறு நூனயம் போலும் பயிறொறும்
பண்புடை யாளர் தொடர்பு.

பரி—(இ-ள்) நற்குணமுடையமக்கள் தம்முட்செய்த நட்பு பயிலுந்தோறும் அவர்க்கின்பஞ்செய்தல் நூற்பொருள் கற்குந்தோறுங் கற்றார்க்கின்பஞ் செய்தலை யொக்கும், எ-று

1 "பெரியவர் கேண்மை பிறைபோல நாளும், வரிசை வரிசையா நந்தும்-வரிசையால், வானூர் மதியம்போல வைகலுந் தேயுமே, தானே சிறியார் தொடர்பு" என்று நாலடியார் கூறுவதிங்கறியத்தக்கதாம

2 பிறை - இளஞ் சந்திரன். 3 மதி - பூரண சந்திரன்

4 முன்னறியாமை அறிவுடையாரிடத்தும் பின்னறிதல் அறிவில்லாரிடத்தும் கொள்க.

"நயத்தினைச் செய்தலான் 'நயம்' எனப்பட்டது 1 இருமையினும் ஒருகாலைக்கொருகால் மிகுமென்பதாம் இவையிரண்டுபாட்டானும் 2 அச்சிறப்பிற்கேது கூறப்பட்டது

**தெளி** —(இ - ள) பண்புடையாளர் - நற்குணமுடைய மக்கள், தொடர்பு - (தங்களிலே செய்த) நட்பு, பயிலுந்தோறும் - பழகுந்தோறும், (அவருக்கு இன்பஞ் செய்தல்) நூல் - நூற்பொருள், நவிலுந்தோறும் - கற்குந்தோறும், நயம்போலும் - (கற்பவர்க்கு) இன்பஞ்செய்தலையொக்கும் எ-று.

நய (இன்ப) த்தினைச் செய்தலால் 'நயம்' என்று கூறப்பட்டது இரண்டிலும் ஒருபோதுக்கு ஒருபோது மிகுமென்பதாம். இவை இரண்டு பாட்டாலும் அச்சிறப்புக்குக்காரணம் சொல்லப்பட்டது

(க - து) நற்குணமுடையாரது நட்புப் பழகப் பழக ஒருகாலைக்கொருகாலை இன்பமிகுந்துவரும் என்பது. (௩)

௪ நகுதற் பொருட்டன்று நட்டன் மிகுதிக்கண்
மேற்சென் றிடித்தற் பொருட்டு.

**பரி** —(இ - ள) ஒருவனோடொருவன் நட்புச்செய்தல் தம்முள் நகுதற்கியைந்தன சொல்லி நகையாடற் பொருட்டன்று, அவர்க்கு வேண்டாதசெய்கை யுளதாயவழி முற்படச் கழறுதற்பொருட்டு

பழியும் பாவமுந் தருஞ்செய்கை துன்பமே பயத்தலான் வேண்டப்படுவ தன்மையின் அதனை 'மிகுதி' என்றும், 3 அதுசெய்தற்கு முன்னே மீட்டல் வேண்டுதலின் 'மேற்சென்று' என்றும், இன்சொற்கு மீளாமையின் 'இடித்தற் பொருட்டு' என்றுங் கூறினார் இதனான் நட்பின்பயன் கூறப்பட்டது.

**தெளி** —(இ - ள்) நட்டல் - (ஒருவரோடு ஒருவர்) நட்புச்செய்தல், (தங்களுக்குள் நகைசெய்தற்கு ஏற்றவைசொல்லி) நகுதற்பொருட்டு-நகைசெய்தற்பொருட்டு, அன்று-அல்ல, மிகுதிக்கண் (அவருக்கு) வேண்டாதசெய்கை உண்டானவிடத்து, மேற்சென்று-முற்பட்டு, இடித்தற்பொருட்டு கண்டித்துப் புத்திசொல்லுதற் பொருட்டு, எ - று.

பழியும்பாவமும் தருஞ்செய்கை துன்பமேதருதலன்றி வேண்டப்படுவதல்லாமையால் - அச்செய்கையை 'மிகுதி' என்றும், அதுசெய்தற்குமுன்னே திருப்பவேண்டுதலால் 'மேற்சென்று' என்றும், இனியசொல்லுக்குத் திரும்பாமையால் 'இடித்தற்பொருட்டு' என்றும் சொல்லினர், இதனால் நட்பின்பயன் சொல்லப்பட்டது.

---

1 இருமையினும் (உவமானமாகிய நூற்பொருளிலும், உவமேயமாகிய நற்குணமுடைய மக்கள் தங்களிலே செய்த நட்பிலும்) ஒருகாலைக்கொருகால (நாளேறநாளேற) (இன்பம்)மிகுமென்பதாம்.

2 அச்சிறப்பிற்கேது - நட்பின்சிறப்புக்குக் காரணம்.

3 அது - பழியும் பாவமுந் தருஞ் செய்கை

(௧ - து) சினேகஞ் செய்தல் தவறு கண்டபோது கண்டித்துப் புத்தி சொல்வதற்கேயன்றிச் சிரித்தற் பொருட்டன்று என்பது. (௪)

௫. புணர்ச்சி பழகுதல் வேண்டா வுணர்ச்சிதா
னட்பாங் கிழமை தரும்.

ப.—(இ - ள்) ஒருவனோடொருவன் நட்பாதற்குப் புணர்ச்சியும் பழகுதலுமாகிய காரணங்கள் வேண்டுவதில்லை, இருவர்க்கு மொத்த வுணர்ச்சி தானே நட்பா முரிமையைக் கொடுக்கும், எ-று.

புணர்ச்சி - ஒருதேயத்தாராதல், 1 "இன்றே போல்கநும் புணர்ச்சி தானே." என்றதும் 2அதனை பழகுதல் - பலகாற்கண்டுஞ் சொல்லாடியும் மருவுதல். இவ்விரண்டு மின்றிக 3 கோப்பெருஞ் சோழனுக்கும் பிசிராந்தையாருக் கும்போல உணர்ச்சி யொப்பின், 4 அதுவே உடனுயிர் நீங்கு முரிமைத்தாய நட்பினைப் பயக்குமென்பதாம், நட்பிற்குப் புணர்ச்சி, பழகுதல், உணர்ச்சி யொத்தலென்னுங் காரண மூன்றனுள்ளும் பின்னது சிறப்புடைத்தென்பது இதனாற் கூறப்பட்டது

தெளி.—(இ - ள்,) (ஒருவனோடு ஒருவன் நட்பாகுதற்கு) புணர்ச்சி - புணர்ச்சியும், பழகுதல் - பழகுதலும், (ஆகியகாரணங்கள்) வேண்டா - வேண்டுவதில்லை, உணர்ச்சிதான் - (இருவர்க்கும் ஒத்த) அறிவுதானே, நட்பாம் - சினேகமாகும், கிழமை - உரிமையை, தரும் - கொடுக்கும், எ-று

புணர்ச்சி - ஒருதேசத்தாராயிருக்கை பழகுதல் - பலதரங் கண்டும் பேசியுங் கூடுதல் பலதரங் காணலும் பேசுதலுமாகிய இவ்விரண்டு மில்லாமலே கோப்பெருஞ்சோழனுக்குப் பிசிராந்தையாருக்கும் போன்று அறிவு ஒத்திருக்குமானால், அதுவே உடனே உயிர் நீங்குவதற்கு உரிமையினை யுடையதாய நட்பினை யுண்டாக்கு மென்பதாம் நட்பினுக்குப் புணர்ச்சி, பழகுதல், உணர்ச்சி யொத்தல் என்னும் காரணங்கள் மூன்றிலும் பின்னதாகிய உணர்ச்சியொத்தல் சிறப்புடையதென்பது இதனாற் சொல்லப்பட்டது

(௧ - து) அறிவொத்தலே சிறந்த சினேகமாகும் என்பது (௫)

௬. முகநக நட்பது நட்பன்று நெஞ்சத்
தகநக நட்பது நட்பு.

---

1 புறநானூறு ௫அ இதன்பொருள் இன்றுபோல்க நுமது கூட்டம் என்பது இன்றே போல்கநும் புணர்ச்சி வென்று என்றும் பாடமுண்டு.

2 அதனை - புணர்ச்சியை

3 பாண்டிநாட்டிலுள்ள பிசிரென்னும் ஊரில் இருந்த பிசிராந்தையார் என்னும் புலவர் தமது நேசனை (உறையூரை இராஜதானியாகக் கொண்டிருந்த) கோப்பெருஞ்சோழன் யாவற்றையுந் துறந்து உயிர்விட்டதைக் கேட்டுத் தாமும் உடனே இறந்தாரென்பது கதை

4 அதுவே - உணர்ச்சி யொத்திருந்தலே.

**பரி** —(இ - ள்) கண்டவழி அகமொழிய முகமாத்திரமே மலரும்வகை நகுமது நட்பாகாது, அன்பால் அகமும் மலர நகுமதே நட்பாவது, எ - று.

நெஞ்சின்கணிகழ்வதனை நெஞ்சு என்றார் 1 இறந்தது தழீஇய வெச்ச வும்மை விகாரத்தாற்றொக்கது 2 இதனால் இரண்டும் ஒருங்கே மலரவேண்டு மென்பது பெற்றாம்.

**தெளி** —(இ - ள்) முகநக - (கண்ட விடத்து உள்ளமொழிய) முகமாத்திரமே மலரும் வகை, நட்பது - சிநேகிப்பது, நட்பன்று - சிநேகமன்று, நெஞ்சத்தகநக - அன்பால் உள்ளமும் மலர, நட்பது - சிநேகிப்பதே, நட்பு - சிநேகமாம், எ-று

நெஞ்சினிடத்து உண்டாவதாகிய அன்பினை நெஞ்சென்று கருவியாகுபெ யரால் கூறினார். நெஞ்சத்தகமும் என்னும் இறந்தது தழுவிய எச்சவும்மை செய்யுள் விகாரத்தினால் தொக்கு நின்றது. இதனால் முகமும் அகமுமாகிய இரண்டும் ஒருமித்து மலரவேண்டுமென்பது பெற்றாம்.

(க - து) அகமும் முகமும் மலர சிநேகிப்பதே சிநேகமாகும் என்பது. (சு)

எ அழிவி னவைநீக்கி யாறுய்த் தழிவின்க
ணல்ல லுழப்பதா நட்பு.

**பரி** —(இ - ள்) கேடினைத்தருந் தீநெறிகளைச் செல்லுங்கால் விலக்கி ஏனை நன்னெறிகளைச் செல்லாக்கால் செலுத்தி தெய்வத்தால் கேடுவந்துழி அது விலக்கப்படாமையின் அத்துன்பத்தை உடனனுபவிப்பதே ஒருவனுக்கு நட்பாவது, எ - று.

3 ஆறென வருகின்றமையின், 4 அழிவினைத் தருமவையென றொழிந் தார் 5 "தெருண்டவறிவினர்" என்புழிப்போல இன்சாரியை நிற்க இரண் டனுருபு தொக்கது இளிவவையென்று பாடமோதி, அதற்குப் பொருளழிவினு ஞ் செல்வ வழிவினும் வந்த துன்பங்களென்றும், அழிவின்கணென்பதற்கு யாக்கை யழிவின்கணென்றும் உரைப்பாருமுளர்.

---

1 அகமும் என்ற உம்மை முகம் என்றதைத்தழுவி நின்றது

2 இதனால் - முகநகநட்பது நட்பன்று என்றதனால்

3 ஆறு என்பதின் வருகின்றதினாலே அழிவினவை யென்பதிலுள்ள அவை என்பதற்குத் தீநெறிகள் என்று பொருள் கூறப்பட்டது இங்கே ஆறு என்னும் இயற்பெயருக்குப் பின்னே அவையென்னும் சுட்டுப்பெயர் வாராமல் செய்யுள் வழக்கால் முன்னே வந்தது.

4 அழிவினவை என்றும் பாடம்.

5 நாலடியார் இரவச்சம், க இதன்பொருள் தெளிந்த அறிவினையுடையவர் என்பது. அறிவினவர் என்பதில் இன்னுருபு நிற்க ஐயென்னும் இரண்ட னுருபு தொக்கு நின்றது.

தெளி.—(இ - ள்.) நட்பு - (ஒருவனுக்கு) நட்பாவது, அழிவின் - கேட்டிற்குக் காரணமாக நிற்கின்ற, அவை - தீயவழிகளை, நீக்கி - (அவற்றில் செல்லுமிடத்து) விலக்கி, ஆறு - (மற்ற நல்) வழிகளை, உய்த்து - (அவற்றில் செல்லாவிடத்து) நடத்தி, அழிவின்கண் - (ஊழினாலே) கேடுவந்தவிடத்து, (அக்கேடு விலக்க முடியாமையால்) அல்லல் - அத்துன்பத்தை, உழப்பதாம் - (உடனிருந்து) அனுபவிப்பதே, எ-று

ஆறு என்பபின் வருகின்றமையினாலே 'அழிவினவை' என்று சுட்டியொழிந்தார் அழிவின என்பது இன்சாரியை நிற்க ஐ யென்னும் இரண்டனுருபு தொக்குநின்றது இனி அழிவினவையென்பதை அழிவின் அவை யென்று பிரிக்காது, அழிவின் நவை யென்று பிரித்துப் பாடங்கூறி அழிவினநவை யென்பதற்குப் போரழிவிலும் செல்வ அழிவிலும் வந்த துன்பங்கள் என்றும், அழிவின்கண் என்பதற்கு உடம்பு அழிதலில் என்றும் பொருள் கூறுவாருமுண்டு

(க - து) தீயவழியை விலக்கி நல்லவழியிற் செலுத்தி ஊழினால் வந்த துன்பத்தை உடனிருந் தனுபவிப்பதே சிநேகமாகும்என்பது(எ)

அ. உடுக்கை யிழந்தவன் கைபோல வாங்கே
யிடுக்கண் களைவதா நட்பு

பரி —(இ - ள்) அவையிடை யாடைகுலைந்தவனுக்கு அப்பொழுதே கை சென்றுதவி அவ்விளிவரல் களையுமாறுபோல, நட்டவனுக்கு இடுக்கண் வந்துழி அப்பொழுதே சென்றுதவி அதனைக் களைவதே நட்பாவது, எ-று.

1 அறறங்காத்தற்கட் கை தன்மனத்தினு முற்படுதலின், 2 அவ்விரைவு இடுக்கண் களைவழியும் 3 அதற்கொத்த தொழிலுவமையினும் வருவிக்க 4 உடையவன் றொழில் நட்பின்மே லேற்றப்பட்டது

தெளி.—(இ - ள்) நட்பு - நட்பாவது, உடுக்கையிழந்தவன் - (சபையினிடத்து) ஆடை குலைந்தவனுக்கு, கைபோல - (அப்பொழுதே) கைசென்றுதவி யவ்வவமானத்தை நீக்கும்விதம்போல, (சிநேகிக்கப்பட்டவனுக்குத் துன்பம்வந்தவிடத்து) ஆங்கே - அப்பொழுதே, (சென்றுதவி) இடுக்கண் - அத்துன்பத்தை, களைவதாம் - ஒழிப்பதேயாம், எ - று.

---

1 அற்றம் - சோர்வு

2 எப்படி சபையினிடத்து ஆடை குலைந்தவனுக்கு ஆடை குலைந்த அப்பொழுதே கையானது மனத்திலும் முற்பட்டு விரைந்துசென்றுகுலைந்த ஆடையைக் கட்டுகின்றதோ அப்படியே சிநேகிதனுக்குத் துன்பம்நேரிட்டவிடத்து நேரிட்ட வப்பொழுதே மனத்திலும் விரைந்து சென்று உதவிசெய்து அத்துன்பத்தை யொழிக்கவேண்டு மென்பதாம்

3 அதற்கொத்த - இடுக்கண் களைதற்குத்தக்க

4 பொருளின் தொழிலை அப்பொருளின் குணத்தின்மேல் ஏற்றிக் கூறினமைபால இது குணிவினை குணவினையாய வுபசார வழக்கு

சோர்வுவந்தவிடத்து வாராமல் காத்தலில் கையானது தன் மனத்திலும் முற்பட்டுச் செல்லுதலால், அவ்விரைவு துன்பத்தை நீக்குமிடத்தும் அதற்கு ஒத்த தொழிலுவமானத்திலும் வருவித்துக்கொள்க. நட்பினையுடையவனது தொழிலான இடுக்கணை களைதலை நட்பின்மேலேற்றி 'இடுக்கண் களைவதா நட்பு' என்று கூறப்பட்டது.

(க - து) சிநேகிக்கப்பட்டவனுக்கு வந்த துன்பத்தை விரைந்து நீக்குவதே சிநேகமாகும் என்பது. (அ)

கூ நட்பிற்கு வீற்றிருக்கை யாதெனிற் கொட்பின்றி
ஒல்லும்வா யூன்று நிலை.

பரி.—(இ - ள) நட்பினுக்கு அரசிருக்கை யாதெனின், 1 அஃது எஞ்ஞான்றுந் திரிபின்றி இயலுமெல்லாமெல்லாம் அறம் பொருள்களிற் றளரா மைத் தாங்குந் 2 திண்மை, எ-று

ஒருஞான்றும் வேறுபடாது மறுமை யிம்மைகட்கு உறுதியாய அறம் பொருள்களிற் றளாந்துழி அத்தளர்ச்சி நீக்கி 3 அவற்றின்க ணிறுத்துதற்கு மேல் ஒரு செயலுமின்மையின், 4 அதனை நட்பிற்கு முடிந்தவெல்லை என்றார்.

தெளி —(இ - ள்) நட்பிற்கு - நட்பினுக்கு, வீற்றிருக்கை - அரசிருக்கை, யாதெனின்-யாதென்றுகேட்டால், (அது) கொட்பின்றி - (எந்நாளும்) வேறுபடாமல், ஒல்லும்வாய - கூடுமிடத்தெல்லாம், ஊன்றுநிலை - (அறம்பொருள் களிலே தளராமல்) தாங்குந்திண்மை, எ-று

ஒருநாளும் வேறுபடாமல் கூடுமிடத்தெல்லாம் மறுமை யிம்மைகளுக்கு உறுதியாகிய அறம்பொருள்களிலே தளர்ந்தவிடத்து அத்தளர்ச்சி நீக்கி அவைகளில் நிறுத்துதற்குமேல் ஒருசெயலும் இல்லாமையால், அதனைநட்பிற்கு முடிந்த எல்லை என்றார்

(க - து.) சிநேகிதனை அறம் பொருள்களில் தவறாமற் செலுத்தும் வன்மையே சிநேகமாகும் என்பது. (கூ)

க0. இனைய ரிவரெமக் கின்னம்யா மென்று
புனையினும் புல்லென்னு நட்பு.

பரி —(இ - ன்) இவர் நமக் கித்துணை யன்பினர் யாமிவர்க் கித்தன் மையமென்று ஒருவனை யொருவர் புனைந்து சொலலினும், நட்புப் புல்லி தாய்த் தோன்றும், எ-று.

---

1 அஃது - அரசு இருக்கையானது. 2 திண்மை - உறுதி
3 அவற்றின்கண் - மறுமைக்கும் இம்மைக்கும் நன்மையைத் தருவதான அறம் பொருள்களில.
4 அதனை - அச்செயலை

இவர்க்கென்பது வருவிக்கப்பட்டது தாம் அவரெனனும் வேற்றுமை யின்றி 1 வைத்துப் புனைந்துரைப்பினும் வேற்றுமையுண்டாமாகலின், நட்புப் புல்லென்னும் என்றார் இவை மைந்துபாட்டானும் நட்பின திலக்கணங் கூறப்பட்டது.

தெளி —(இ - ள்) இவர் எமக்கு - இவர் நமக்கு, இனையர் - இவ்வளவினர், யாம்—இன்னம் - (இவர்க்கு) இவ்வளவினேம், என்று—புனையினும்- (ஒருவரை ஒருவர்) சிறப்பித்துச்சொல்லினாலும், நட்பு—புல்லெனனும்- சிறிதாய்த் தோன்றும், எ-று

இவர்க்கு என்பது வருவித்துரைக்கப்பட்டது தாம் அவர் என்கிற பேதமில்லாதிருந்தும் சிறப்பித்துச சொல்லினால் பேதம் உண்டாமாகலால், நட்புப்புல்லென்னும் என்றார். இவை ஐந்துபாட்டானும் நட்பினது இலக்கணம் சொல்லப்பட்டது

(க - து) ஒருவரையொருவர் சிறப்பித்துச்சொல்லும் சிநேகம் சிறந்த சிநேகம் ஆகாது என்பது. (ய)

——:(o).——

## அ௦ - ம அதி —நட்பாராய்தல.

பரி —அஃதாவது 2 மேற்சொல்லிய இலக்கணத்தாரை யாராய்ந்ததின்றே நட்கவேண்டுதலின், 3 அவரை யாராயுந்திறம் அதிகாரமுறைமையும் இதனானே விளங்கும்

தெளி —அஃதாவது முன் சொல்லப்பட்ட இலக்கண முடையவரை ஆராய்ந்ததின்றே சிநேகிக்கவேண்டுதலால், அவரை ஆராயுந்திறம். அதிகார முறையும் இதனாலே விளங்கும்,

க நாடாது நட்டலிற் கேடில்லை நட்டபின
  வீடில்லை நட்பாள பவர்க்கு.

பரி —(இ - ள்.) நட்பினை விரும்பி அதன்கண்ணே நிற்பார்க்கு ஒருவனோடு நட்புச்செய்தபின் அவனை விடுதலுண்டாகாது, ஆகலான், ஆராயாது நட்புச்செய்தல்போலக் கேடு தருவது பிறிதில்லை, எ-று.

ஆராய்தல் - குணச்செய்கைகளது நன்மையை யாராய்தல் கேடு - ஆகுபெயர் நட்கிற்றுமவரென்னும் வேற்றுமையின்மையின் 'வீடில்லை' என்றும், அவ்வேற்றுமை யின்மையான் 4 அவன்கட் பழிபாவங்கள் தமவா மாகலின், 5 இருமையுங் கெடுவரென்பது நோக்கி 'நாடாது நட்டலிற் கேடில்லை' என்றுங் கூறினார்.

---

1 வைத்தும் புனைந்துரைப்பின என்றும் பாடமுண்டு.

2 மேற்சொல்லிய - நட்பதிகாரத்திற் கூறிய.    3 அவரை - நட்பினரை.

4 அவனகட் பழிபாவங்கள் - சிநேகித்தவனிடத் துண்டாகும் இம்மைக்குரிய பழியும் மறுமைக்குரிய பாவமும்.

5 இருமையும் - இம்மையிலும் மறுமையிலும்

தெளி.—(இ - ள்) நட்பாள்பவர்க்கு-நட்பினைவிரும்பி அந்நட்பினிடத்தே நிற்பவர்க்கு, நட்பின-(ஒருவனோடு) நட்புச்செய்தபின், வீடு- (அவனை)விடுதல், இல்லை - உண்டாகாது, (ஆதலால்) நாடாது-ஆராயாமல், நட்டலின்-சிநேகித்தல்போல, கேடு - கேடுதருவது, இல்லை-(வேறே) இல்லை, எ - று

ஆராய்தல் - குணநன்மை செய்கைநன்மைகளை ஆராய்தல், கேடுதருவதைக் கேடென்றான் காரிய ஆகுபெயர். சிநேகித்தால் தாம் அவரென்னும் வேற்றுமை இல்லாமையால் 'வீடில்லை' என்றும், அவ்வேற்றுமையில்லாமையால் அவனிடத்துப் பழிபாவங்கள் தம்மவையாகலால் இருமையும் கெடுவரென்பது நோக்கி 'நாடாது நட்டலிற் கேடில்லை' என்றும் சொல்லினர்.

(க - து) ஆராயாது செய்த நட்பும் ஆராய்ந்துகொண்ட நட்பை விடுதலும் துன்பந்தரும் என்பது (க)

௨. ஆய்ந்தாய்ந்து கொள்ளாதான் கேண்மை கடைமுறை
தான்சாந் துயரந் தரும்.

பரி.—(இ - ள்.) குணமுஞ்செய்கையு நல்லனென்பதும் அல்லனென்பதும் பலகா லாராய்ந்தும் பலவாற்றா னாராய்ந்தும் ஒருவனோடு நட்புக்கொள்ளாதவன் முடிவிற் றான் சாதற்கேதுவாய துன்பத்தினைத் தன் மாற்றார் வினைக்கவேண்டாமற் றானே விளைக்கும், எ - று,

1 கடைமுறைக்கண்ணென இறுதிக்கட்டொக்க ஏழாவது விரிக்க குணமுஞ் செயலுந் தீயானொடு கொள்ளின், 2 அவற்கு வரும் பகைமையெல்லாந் தன்மேலவாய்ப் பின் 3 அவற்றா னிறந்துவிடு மென்பதாம் இவை யிரண்டுபாட்டானும் ஆராயாவழிப் படுமிழுக்குக் கூறப்பட்டது

தெளி.—(இ - ள்.) (குணமுஞ் செய்கையும் நல்லனென்பதும் அல்லனென்பதும்) ஆய்ந்து - (பலகால்) ஆராய்ந்தும், ஆய்ந்து - (பலவழியால்) ஆராய்ந்தும், கேண்மை - (ஒருவனோடு) நட்பை, கொள்ளாதான் - கொள்ளாதவன், கடைமுறை - முடிவில், தான் சாம் - தான் சாவதற்கு ஏதுவாகிய, துயரம் - துன்பத்தை, தரும் - (தனது பகைவர் விளைக்கவேண்டாமல் தானே) விளைத்துக்கொள்ளுவான், எ-று.

கடைமுறை யென்பதனீற்றில் ஏழனுருபு தொக்குநின்றது தீயகுணமுந் தீயசெயலுமுடையவனோடு நட்புக்கொள்ளின், அவனுக்குவரும் பகைமையெல்லாம் தன்மேல வருவனவாகிப் பின் அவைகளால் இறந்துவிடுவனென்பதாம் இவையிரண்டுபாட்டாலும் ஆராயாதவிடத்துண்டாகும் குற்றம் சொல்லப்பட்டது.

---

1 கடைமுறை என்பதனிறுதியில் தொக்குநின்ற கண் என்னும் ஏழனுருபை விரித்துக் கடைமுறைக்கண் என்றுகொள்க

2 அவற்கு - தீயவனுக்கு.

3 அவற்றான் - பகைகளால்

(க - து.) ஆராய்ந்துகொள்ளாதவனது சிநேகம் முடிவில் தான் சாவதற்கேதுவான துன்பத்தை விளைவிக்கும் என்பது.                (உ)

ங. குணனுங் குடிமையுங் குற்றமுங் குன்றா
  வினனு மறிந்தியாக்க நட்பு

பரி —(இ - ள்) ஒருவன் குணத்தினையும் குடிப்பிறப்பினையும் குற்றத்தினையும் குறைவற்ற சுற்றத்தினையு மாராய்ந்தறிந்து, அவனோடு நட்புச்செய்க எ-று.

குற்றமில்லாதார் உலகத்தின்மையின் உள்ளது பொறுக்கப்படுவதாயின், அவர்நட்பு விடற்பாற் றன்றென்பார் 'குற்றமும்' என்றும், சுற்றப்பிணிப்புடையார் நட்டாரோடும் பிணிப்புண்டு வருதலிற் 'குன்றுவினனும்' என்றும், விடப்படிற் றங்குறையாமென்பார் 'அறிந்தியாக்க' என்றுங் கூறினார்

தெளி —(இ - ள்) குணமும் - (ஒருவனது) குணத்தையும், குடிமையும் - குடிப்பிறப்பையும், குற்றமும் - குற்றத்தையும், குன்றுவினனும் - குறைவற்ற சுற்றத்தையும், அறிந்து - ஆராய்ந்தறிந்து, நட்பு - நட்பினை, யாக்க - (அவனோடு) செய்யக்கடவன், எ-று.

குற்றமில்லாதவர் உலகத்திலே இல்லாமையால் உள்ளகுற்றம் பொறுக்கத்தக்க குற்றமுடையராயிருந்தால், அவரநட்பு விடக்கூடாதென்பார் 'குற்றமும்' என்றும், சுற்றத்தாரோடு கட்டுண்டிருப்பவர் நட்பாளரோடும் கட்டுண்டு வருதலால் 'குன்றுவினனும்' என்றும், விடப்பட்டால் தங்குறையாமென்பார் 'அறிந்தியாக்க' என்றுஞ் சொன்னார்.

(க - து) குணத்தையும் குடிப்பிறப்பையும் குற்றத்தையும் சுற்றத்தாரையும் அறிந்து சிநேகித்தல்வேண்டும் என்பது.                (ங)

ச. குடிப்பிறந்து தன்கட் பழிநாணு வானைக்
  கொடுத்துங் கொளல்வேண்டு நட்பு

பரி —(இ - ள்) உயர்ந்த குடியின்கட் பிறந்து தன்மாட்டு உலகர் சொலலும் பழிக்கு அஞ்சுவானைச் 1 சில கொடுத்தாயினும் நட்புக்கோடல் சிறந்தது, எ-று

குடிப்பிறப்பாற் றன் 2 பிழை செய்யாமையும், பழிக்கஞ்சலாற் 3 பிழைத்தன பொறுத்தலும் பெற்றும் 4 இவை யிரண்டு முடையானைப் பெறுதலருமையின், அவன் நட்பை விலைகொடுத்துங் கொள்க வென்பதாம்.

தெளி —(இ - ள்) குடிப்பிறந்து- உயர்ந்த குடியிற்பிறந்து, தன்கண்- தனனிடத்து, பழி - (உலகர் சொலலும்) பழிக்கு, நாணுவானை- அஞ்சுவானை,

1 சில - அவன் விரும்பும் பொருள்கள் சிலவற்றை.

2 பிழை - குற்றமுள்ள காரியங்களை.

3 பிழைத்தன - பிறர்செய்தகுற்றங்களை

4 இவைஇரண்டும் - பிழைசெய்யாமையும் பிழைத்தன பொறுத்தலும்

கொடுத்தும் - (சில, கொடுத்தாயினும், நட்புக்கொளல் வேண்டும் - சிநேகங் கொள்ளுதல் சிறந்தது, எ-று

குடிப்பிறப்பால் தான் பிழை செய்யாமையும், பழிக்கு அஞ்சலால் பிழை பொறுத்தலும் பெற்றாம், இவை இரண்டுமுடையவனைப் பெறுதல் அருமையானால் அவனுடைய விலைகொடுத்தும் கொள்கவென்பதாம்

(க - து) உயர்குடியிற் பிறந்து பழிக்கு நாணுவானைப் பொருள் கொடுத்தாயினுஞ் சினேகஞ் செய்தல் வேண்டும் என்பது. (௪)

௫. அழச்சொல்லி யல்ல திடித்து வழக்கறிய
வல்லார்நட் பாய்ந்து கொளல்.

**பரி**—(இ - ள்.) நாம் உலக வழக்கல்லது செய்யக்கருதிற் 1 சோகம் பிறக்கும் வகை சொல்லி விலக்கியும் செய்தக்கால் பின்னுஞ் செய்யாவகை 2 நெருக்கியும் 3 அவ்வழக்குச் செய்யாவழி செய்விக்கவும் வல்லாரை ஆராய்ந்து நட்புக்கொள்க, எ-று

அழச்சொல்லி இடித்தெனவந்த பரிகார வினைகளான அவற்றிற்கேற்ற 4 குற்றவினைகள் வருவிக்கப்பட்டன வழக்கு - உலகத்தார் அடிப்படச்செய்து போந்த செயல் 5 தம்மொடு நட்டாரும் அறியும்வகை அறிவித்த லரிதாகலின் 'அறியவல்லார்' என்றார் இரண்டாவது இறுதிக்கட் டொக்கது

**தெளி.**—(இ - ள்) அல்லது-(தாம்) உலகநடையல்லாததை, (செய்யநினைக்கின்) அழச்சொல்லி - அழும்வகைச்சொல்லி, (விலக்கியும்) (செய்தக்கால்) இடித்து - (பின்னும் செய்யாவகை) நெருக்கியும், வழக்கு-அவ்வுலகநடையைச் (செய்யாவிடத்து) அறியவல்லார் - செய்விக்கவும்வல்லவரை, ஆய்ந்து - ஆராய்ந்து, நட்பு - நட்பினை, கொளல் - கொள்ளக்கடவர், எ - று

அழச்சொல்லி இடித்து என வந்த பரிகாரத்தொழில்களால் அவைகளுக்கு ஏற்ற குற்றத்தொழில்கள் வருவிக்கப்பட்டன வழக்கு - உலகத்தார் ஆதி தொடங்கிச் செய்துவந்த செயல் தம்மோடு சினேகித்தவரும் அறியும்வகை அறிவித்தல் அரிதாகலால் 'அறியவல்லார்' என்றார் வல்லார் என்பதனிறுதியில

(க - து.) தீநெறியை விலக்கி நன்னெறியிற் செலுத்தவல்லவரது நட்பை ஆராய்ந்துகொள்ளல் வேண்டும் என்பது. (௫)

1 சோகம் - தன்ம் அஃதாவது இஷ்டவஸ்து பிரிந்தகாலத்து மீண்டும் கிடைத்தற்கு உரியதாகாமையை யறிதல

2 நெருக்கியும் - கண்டித்துப் புத்திசொல்லியும்.

3 அவ்வழக்கு - உலகவழக்கு

4 குற்றவினைகள் - செய்யக்கருதின், செய்தக்கால் என்பன

5 தாமறிதலேயன்றித் தம்மொடு நட்டாரும் என்றும் பாடமுண்டு.

௬. கேட்டினு முண்டோ
நீட்டி யளப்பதோர் கோல்

பரி.—(இ - ள்) ஒருவனுக்குக் கேடென்பது தன்னட்டாராகிய புலங்களை எஞ்சாம லளப்பதோர் கோல்; ஆகலின், அதன் கணணும் அவராற் பெறப்படுவதோர் நலவறி வுண்டு, எ-று.

தந்த நட்பெல்லைகள் சுருங்கியிருக்கவும் செல்வக்காலத்துப் * புறத்துத் தோன்றாமற் போந்தார் பின் கேடுவந்துழிச் செயல் வேறுபடுதலின் அக்கேட்டால் அவை வரையறுக்கப்படுமென்பதுபற்றிக் கேடடினைக்கோல் ஆக்கியும், 1 அதனால் 2 அவரை யளந்தறிந்தால் ஆவாரையே கோடலின் அவ்வறிவை 'உறுதி' என்றுங் கூறினர் 3 கிளைஞர்-ஆகுபெயர் 4 இஃதேகதேசவுருவகம். இவை நான்கு பாட்டானும் ஆராயுமாறும் ஆராய்ந்தால் நட்கப்படுவார் இவரென்பதூஉங் கூறப்பட்டன.

தெளி.—(இ - ள்) (ஒருவனுக்குக் கேடென்பது) கிளைஞரை - தனது சிநேகிதராகிய (நிலங்களை), நீட்டியளப்பது - குறையாமல் அளப்பதாகிய, ஓர் கோல் - ஒருகோலாம், (ஆகலால்) கேடடினும் - அக்கேட்டினிடத்தும், ஒரு றுதி - (அவராலே பெறப்படுவ) தொரு நலவறிவு, உண்டு - எ-று.

தமது தமது சினேகத்தினெல்லைகள் சுருங்கியிருக்கவும் செல்வமுள்ள காலத்திலே புறத்து வெளிப்படாமல் வந்தவர் பின் கேடுவந்தவிடத்துச் செயல் வேறுபடுதலால் அக்கேட்டால் அச்சிநேகத்தினெல்லைகள் அளவுசெய்தறியப் படுமென்பதுபற்றிக் கேடடினைக் கோல் ஆக்கியும், அதனால் அவரை அளந்தறிந்தால் ஆவாரையே கொள்ளுதலால் அவ்வறிவை 'உறுதி' என்றும் சொல்லினர். கிளைஞர்-ஆகுபெயர் இஃது ஏகதேசவுருவகம் இவை நான்குபாட்டாலும் ஆராயும் விதமும ஆராய்ந்தால சினேகிக்கப்படுவார் இவரெனபதும் சொல்லப்பட்டன.

(க - து.) ஒருவனுக் குண்டாகும் கேட்டினாலும் சினேகரது தன்மையினை யறிந்து கொள்ளத்தக்க உறுதியுண்டாம் என்பது. (௬)

௭. ஊதிய மென்ப தொருவற்குப் பேதையார்
கேண்மை யொரீஇ விடல்.

---

* புறத்துத்தோன்றாமற் போந்தார் - தமது தமது சிநேகத்தின் எல்லைகள் சுருங்கியிருத்தலை வெளிக்குத் தோன்றாதபடி யுடனிருந்து வந்தவர்.

1 அதனால் - கேடாகிய கோலினால். 2 அவரை-நட்டாரை

3 கிளைஞர் என்னும் முதற்பொருளின் பெயர் அதன் பண்பாகிய நட்புக்காதலால் பொருளாகுபெயர்

4 கேடடினைக்கோல் என்றுருவகஞ் செய்ததற்கியைய கிளைஞரது நட்பினைப் புல (நில) மென்றுருவகஞ் செய்யாமையினால இக்குறள் ஏகதேசவுருவக வணியாயிற்று.

பரி —(இ - ள்.) ஒருவனுக்குப் 1 பேறென்று சொல்லப்படுவது அறிவிலாரோடு நட்புக்கொண்டானாயின் 2 அதனையொழிந்து 3 அவரின் நீங்குதல், எ - று.

நட்பொழிந்தாலும் நீங்காக்கால் 4 வெறிகமழ் சந்தனமும் வேங்கையும் வேமாறுபோலத் 5 தீங்கு வருதலின் 'விடல்' என்றும், நீங்கியவழித் தீங்கொழிதலேயன்றி இருமை யின்பத்திற்கு முரிமை யெய்தலு முடைமையின் அதனை 'ஊதியம்' என்றுங் கூறினார்.

தெளி —(இ - ள்.) ஒருவற்கு - ஒருவனுக்கு, ஊதியமென்பது - பேறென்று சொல்லப்படுவது, பேதையார் - அறிவிலாதவருடனே, (சிநேகங் கொண்டானானால்) கேண்மை - அச்சிநேகத்தை, ஒரீஇ - ஒழிந்து, விடல் - (அவரினின்றும்) நீங்குதலாம், எ-று.

நட்பொழிந்தாலும் விட்டு நீங்காதவிடத்து வாசனை வீசா நின்ற சந்தன மரமும் வேங்கை மரமும் வேகும் விதம் போன்று தீங்குவருதலால் 'விடல்' என்றும், நீங்கியவிடத்துத் தீங்கொழிதலே யல்லாமல் இருமை யின்பங்களுக்கு உரிமையடைதலுமுடைமையால் அதனை 'ஊதியம்' என்றும் சொல்லினார்.

(க - து) அறிவில்லாரது சிநேகத்தை யொழித்தலே ஒருவனுக்குப் பேறும் என்பது. (எ)

௮ உள்ளற்க வுள்ளஞ் சிறுகுவ கொள்ளற்க
வல்லற்க ணாற்றறுப்பார் நட்பு.

பரி —(இ - ள்.) தம்மூக்கஞ் சுருங்குதற்குக் காரணமாய வினைகளைச் செய்ய நினையாதொழிக, அதுபோலத் தமக்கொரு துன்பம் வந்துழிக் கைவிடுவார் நட்பினைக் கொள்ளாதொழிக, எ-று.

உள்ளஞ் சிறுகுவவாவன தம்மின் வலியாரோடு 6 தொடங்கியனவும் 7 பயனில்லனவுமாம் 8 ஆறு என்பது முதனிலைத்தொழிற்பெயர் 9 முன்னெல்லா

1 பேறு - இலாபம். 2 அதனை - நட
3 அவரின் - அறிவிலாரிடத்தினின்றும்.
4 "மனத்தான் மறுவில ரேனுந்தாஞ் சேர்ந்த, இனத்தா லிகழப் படுவர் - புனத்து, வெறிகமழ் சந்தனமும் வேங்கையும் வேமே, எறிபுனந் தீப்பட்டக் கால்" என்று நாலடியார் கூறுவதிங்கறியத்தக்கதாம்.
5 தீங்குவருதலின் - அறிவிலாதவரது சேர்க்கையால் தீமையுண்டாகுதலால்.
6 தொடங்கியனவும் - ஆரம்பித்த போர்த்தொழில்களும்.
7 பயனில்லனவும் - பிரயோஜன மில்லாத தொழில்களும்.
8 ஆற்று என்னும் பகுதியே தாங்குதல் என்னும் தொழிற்பெயர்ப் பொருள் தாய் நின்றது.
9 தமக்கு ஒரு துன்பம் வருவதன்முன்னெல்லாம் உறுதியாகத் தாங்குவார் போன்றிருந்து துன்பம் வந்தவிடத்து நீங்கிப்போகுதலால் வலியறுப்பார் என்று கூறப்பட்டது. (வலியறுப்பார் - கைவிடுவார்)

ம வலியராவார்போன்று ஒழிதலின் 1 வலியறுப்பார் என்றார் 2எடுத்துக்காட்டுவமை 3 கொள்ளின அழிந்தேவிடுமெனபதாம

பரி —(இ-ள) உள்ளம - (தம்) மனவெழுச்சி, சிறுகுவ - சுருங்குதற்குக் காரணமாகிய தொழில்களை, உள்ளற்க - (செய்ய) நினையாதிருக்கக்கடவா, (அதுபோல்) அல்லற்கண்- (தமக்கொரு) துன்பம வந்தவிடத்து, ஆற்றறுப்பார் - கைவிடுவோரது, நட்பு - சினேகத்தை, கொள்ளற்க - கொள்ளாதிருக்கக்கடவா, எ-று

தம்மனவெழுச்சி சுருங்குதற்குக் காரணமாகிய தொழில்களாவன தம்மினும் வலியவரோடு தொடங்கியவையும பயனில்லாதவையும ஆம் ஆற்று என்பது முதனிலைத்தொழிற்பெயர் முன்னெல்லாம வலியாவர்போலிருந்து ஒழிதலால் 'ஆற்றறுப்பார்' என்றார் ஆற்றறுத்தல - வலியறுத்தல். இஃது எடுத்துக்காட்டுவமையணி. கொண்டால் அழிந்தே விடுமென்பதாம்

(க - து) ஒவ்வொருவரும மனந்தளரும் தொழிலைச செய்யாமலும ஆபத்தில கைவிடுவாரது சிநேகத்தைக கொள்ளாமலும் இருக்கக்கடவர் என்பது. (அ)

௯ கெடுங்காலைக் கைவிடுவார் கேண்மை யடுங்காலை
யுள்ளினு முள்ளஞ் சுடும்.

பரி —(இ-ள) ஒருவன கெடுங்காலத்து அவனைவிட்டு நீங்குவார் முன்னவனோடு செய்த நட்பு தன்னைக் கூற்றடுங்காலத்து 4 ஒருவன் நினைப்பினும், அந்நினைத்த வுள்ளத்தைச் சுடும, எ-று.

நினைத்த துணையானே இயைபில்லாத பிறனுக்கும் கூற்றினும கொடிதா மெனக் கைவிட்டெண்ணிச்செய்த நட்பின் கொடுமைகூறியவாறு 5 இனி அவன்

---

1 ஆற்றறுப்பார் என்றும பாடமுண்டு

2 உள்ளஞ் சிறுகுவ உள்ளற்க என்னும வாக்கியத்திற்கும அல்லற்கணாற்றறுப்பார் நட்புகொள்ளற்க எனனும் வாக்கியத்திற்கும் இடையே அது போல என்னும் சொல தொக்கு நின்றதினாலே இச்செய்யுள் எடுத்துக்காட்டுவமையணியாயிற்று.

3 கொள்ளின - தமக்கொரு துன்பம வந்தவிடத்துக் கைவிடுவார் சிநேகத்தைக்கொண்டால்

4 ஒருவன் - அபலா னொருவன

5 இனி இதற்கு (கெடுங்காலைக் கைவிடும) சிநேகிதன் தானே (தனக்கு) உண்டாகிய கெடுதியைத் தன்னை (ப்பிறனொருவன வெளிப்படையாக நின்று) கொல்லுங் காலத்தில நினைத்தாலும அக்கொல்லுங் கெடுதியைப் பார்க்கினும அதிகமாக வருத்தும என்று பொருள் கூறுவாரு முண்டென்பது. ஒருவன வெளிப்படையாக நின்று வருத்துவதினும கெடுங்காலத்தில கைவிடுவாரது நட்பு கொடிதென்பது கருத்து.

ருனே ஆககியகேடு தனனே யடுங்காலை யுள்ளினும் அக்கேட்டினுஞ் சுடுமென் றுரைபபாரு முளா இவை மூன்றுபாட்டானும ஆராயநதால் நட்கபபடாதார் இவரெனபது கூறபபட்டது.

தெளி —(இ - ள்) கெடுஙகாலை - (ஒருவன்) கெடுங்காலத்து, கைவிடு வார் - (அவனைவிட்டு) நீங்குவார், கேண்மை - (முன் அவனோடுசெயத) நட்பா னது, அடுஙகாலை - (தன்னை யமன்)கொல்லுங் காலத்து, உள்ளினும்-(ஒருவன்) நினைத்தாலும், உள்ளம் - (அந்நினைத்த) உள்ளத்தை, சுடும் - வருத்தும் எ-று

நினைத்த ளவிலே சினேக சமமநதமிலலாத பிறனுககும் யமனிலும கொடிதாமென்று கைவிட எணணிச்செய்த நட்பின் கொடுமை செறலவியபடி இவை மூன்றுபாட்டாலும ஆராயந்தால சினேகிககபபடாதவர் இவரெனபது சொல்லபபட்டது.

(க - து) கெடுங்காலததுக் கைவிடுவாரது சினேகிதமானது பெ ருங்கொடுமையைத் தரத்தக்கதாம் என்பது. (கூ)

கூ0. மருவுக மாசற்றார் கேண்மையொன் றீத்து
மொருவுக வொப்பிலார் நட்பு.

பரி —(இ - ள்) 1 உலகோடொத்துக் குற்றமறறார் நட்பினையே பயிலக, உலகோடொத்தலில்லார் நட்பினை அறியாது கொணடாராயின், அவர் வேண் டிய தொனறனைக் கொடுததாயினும விடுக, எ-று

உலகோடொத்தார் நட்பு இருமை யின்பமும் பயத்தலின் 'மருவுக' என் றும, 2 அதனோடு மாறாயினர் நட்புத் துன்பமே பயத்தலின், 3 அதனொழிவை விலை கொடுத்தும கொள்கவெனறுங் கூறினர். இதனால 4 அவவிருமையுந் தொகுத்துக் கூறபபட்டன.

தெளி—(இ -ள்) மாசற்றார் - (உலகத்தோடொத்துக) குற்றமற்றவர து, கேண்மை - நட்பையே, மருவுக-பழககக்கடவன், ஒப்பிலார் - (உலகததோ டு) ஒத்தலிலலாதவரது, நட்பு - நட்பை, (அறியாது கொணடாரானல்) ஒன் று - (அவர் வேண்டிய) தொனறை, ஈத்தும் - கொடுத்தாயினும், ஒருவுக-விடக கடவன், எ-று.

---

1 உலகோடொத்து - உயர்ந்தாரது ஒழுக்கத்திற்கு மாறுபடாது.

2 அதனோடு - உலகோடு.

3 அதனொழிவை - உலகநடையோடு விரோதப்பட்டிருபபவரது சிநேகத்தின ஒழிவை.

4 அவ்விருமையும் - சிநேகிக்கப்படுவோர் மாசற்றார் என்பதும் சிநேகிக்கப்படா தார் ஒப்பிலாதார் என்பதும். இவ்வதிகாரததின் கானகாவது குறளில நல்லவர்களது நட்பை கொடுத்துங் கொளல வேணடும என்று கூறின ர் இங்கே கெட்டவர்களது நட்பை ஒன்றீத்தும் ஒருவுக என்றார்

உலகத்தோடொத்தவர் நட்பு இருமை யின்பமும் தருதலால் 'மருவுக' என்றும், அதனோடு மாறுயினவர் நட்புத் துன்பமே தருதலால், அதனொழிவை விலை கொடுத்தாயினுங் கொள்க என்றும் சொல்லினார் இதனால் சினேகிக்கப்படுவோரும் படாதாரும் ஆகிய அவ்விருமையும் தொகுத்துச் சொல்லப்பட்டன

(க - து) குற்றமற்றவரது சிநேகத்தைக்கொண்டு மற்றையோரது சிநேகத்தைப் பொருள் கொடுத்தாயினும் விடல் வேண்டும் என்பது. (ம)

—:(o):—

## அக - ம். அதி.—பழைமை.

**பரி** —அஃதாவது நட்டாரது பழையராந்தன்மைபற்றி அவர்பிழைத்தன பொறுத்தல். 1 காரணப்பெயர் காரியத்திற் காயிற்று ஆராய்ந்து நட்கப்பட்டாரெனினும் பொறுக்கப்படுங் குற்றமுடைய ராகலானும் 2 ஊழ்வகையானும் நட்டாமாட்டுப் பிழையுளதாமென்பது அறிவித்தற்கு, 3 இது நட்டாராய்தலின்பின் வைக்கப்பட்டது

**தெளி.**—அஃதாவது நட்பினரது பழையராந்தன்மைபற்றி அவர் செய்த பிழைகளைப் பொறுத்தல் பழைமை யென்னும் காரணப்பெயர் அப்பழைமைபற்றிச் செய்யும் பிழைத்தனவற்றைப் பொறுத்தலாகிய காரியத்திற்கு ஆயிற்று. ஆராய்ந்து சினேகிக்கப்பட்டாராயினும் பொறுக்கப்படும் குற்றமுடையராகலாலும் ஊழ்வகையாலும் நட்புக் கொளப்பட்டவரிடத்துப் பிழையுளதாமென்பது அறிவித்தற்கு, இது நட்டாராய்தலின்பின் வைக்கப்பட்டது.

க. **பழைமை யெனப்படுவ தியாதெனின் யாதுங்**
**கிழமையைக் கீழ்ந்திடா நட்பு.**

**பரி.**—(இ - ள்) பழைமையென்று சொல்லப்படுவ தியாதென்று வினவின், 4 அது பழைமையோர் உரிமையாற் செய்வனவற்றைச் சிறிதுஞ் 5 சிதையாது 6 அவற்றிற் குடம்படும் நட்பு, எ-று.

7 கிழமை-ஆகுபெயர். கெழுதகைமையென வருவனவுமது உரிமையாற் செய்வனவாவன கருமமாயின செய்யுங்காற் கேளாது செய்தல், கெடுமவ

1 பழைமை யென்னும் காரணப்பெயர் அதன் காரியமாகிய பிழைகளைப் பொறுத்தலுக்காதலால் காரணவாகுபெயர்

2 ஊழ்வகையானும் - விதிவசத்தாலும். 3 இது - பழைமை.

4 அது - பழைமை. 5 சிதையாது - விலக்காமல்.

6 அவற்றிற் குடம்படும் - பழைமையோர் உரிமையால் செய்யுங்காரியங்களுக்குச் சம்மதிக்கும்.

7 கிழமை யெனனும் காரணப்பெயர் அதனாற் செய்யும் காரியங்களுக் காதலால் காரணவாகுபெயர் பின்னுள்ள குறள்களில் கெழுதகைமை(உரிமை) யென்று வருவனவும் இவ்வாறே காரணவாகுபெயர்களென்று கொள்க

கை செய்தல், தமக்கு வேண்டியன தாமே கோடல், 1 பணிவச்சங்களின்மை யென்றிவை 2 முதலாயின. சிதைத்தல் - விலக்கல். இதனாற் பழைமையாவது காலஞ் சென்றதன்று இப்பெற்றித்தாய நட்பென்பது கூறப்பட்டது.

**தெளி.**—(இ - ள்.) பழைமை யெனப்படுவது - பழைமையென்று சொல்லப்படுவது, யாதெனின் - யாதென்று கேட்டால், (அது) கிழமையை - (பழைமையோர்) உரிமையாலே செய்தவைகளை, யாதும் - சிறிதாயினும், கீழ்ந்திடா நட்பு - சிதைக்காமல் (அவைகளுக்கு உடன்படுவதாகிய) நட்பு, எ - று.

கிழமை - ஆகுபெயர். பின் கெழுதகைமையென வருவனவுமது. உரிமையாற்செய்வனவாவன கருமங்கள் செய்யும்போது கேளாது செய்தல், கெடுமவை செய்தல், தமக்கு வேண்டியவைகளைத் தாமே கொள்ளுதல், பணிவச்சங்களில்லாமை யென்றிவை முதலானவை. சிதைத்தல்-விலக்குதல். இதனாலே பழைமையாவது காலஞ் சென்றதன்று இப்படிப்பட்ட நட்டென்பது சொல்லப்பட்டது.

(க - து) முன்னோர் உரிமையாற் செய்து வந்தவற்றை யனுசரித்தொழுகும் நட்பே பழைமையாம் என்பது. (க)

உ. **நட்பிற் குறுப்புக் கெழுதகைமை மற்றதற்**
**குப்பாதல் சான்றோர் கடன்.**

**பரி.**—(இ - ள்.) நட்பிற்கு அவயவமாவன நட்டார் உரிமையாற் செய்வன; அதனால் அவ்வுரிமைக்கு இனியராதல் அமைந்தார்க்கு முறைமை, எ - று.

3 வேறன்மை தோன்ற 'உறுப்பு' என்றார். 4 உறுப்பென்பது ஈண்டு 5 இ

---

1 - வணக்கம். அச்சம் - பயம்.

2 முதலாயின என்றதனால் அரசனுக்குச் சமமாகத் தன்னை நினைத்து அதற்கேற்ற கோலத்துடன் வருதல், முறைபாராட்டி யிழித்துக்கூறல் முதலானவைகளையுங் கொள்க.

3 நட்பிற்கு நட்டார் உரிமையாற்செய்வன வேறன்மை (வேறுபட்டிராமை) தோன்ற (நட்பெனனும் முதலுக்குச் சிநேகிதர் உரிமையாற் செய்வனவற்றை) உறுப்பு என்றுகூறினார். [முதலு (பொருளு) சுருசினை (அவயவம்) வேறுபட்டிராமை போன்று நட்பிற்குச் சிநேகிதர் உரிமையாற் செய்வன வேறுபடாதிருக்கின்றன வென்பதாம்.]

4 பொருளினிடத்து உறுப்பும், குணமும், தொழிலும், ஜாதியும் இருப்பதன்றிக் குணத்தினிடத்து உறுப்பிருத்தல் கூடாமைபற்றி நட்பெனனுங் குணத்திற்கு 'உறுப்பென்பது ஈண்டிலக்கணை யடியாகவந்த குறிப்புச் சொல்' என்று கூறப்பட்டது. இங்கு உறுப்பில்லாத குணத்திற்கு உறுப்புடையதாகக் கூறப்பட்டவாறறிக.

5 இலக்கணையாவது ஒருபொருளி னிலக்கணத்தை மற்றொரு பொருட்குத் தந்துரைப்பது. [இங்கே முதலுக்குள்ள உறுப்பைக் குணத்திற்குத் தந்துரைத்தவாறறிக.]

லகக்ணயடியாகவரந்த 1 குறிப்புச்சொல் 2 அவயவமாதலறிந்தே இனியவரா வரென்பது தோன்றச் சான்றோர்மேல வைத்தார்

தேளி —(இ - ள்) (நட்பிற்கு)உறுப்பு - அவயவமாவன, கெழுதகைமை- (நட்பினா) உரிமையாற் செய்பவையாய, (ஆதலால்) அதற்கு - அவ்வுரிமைக் கு, உப்பாதல் - இனிமையராதல், சான்றோா - நிறைந்தோாக்கு, கடன் - முறைமை, எ-று

மற்று - அசை வேறலலாமைதோனற 'உறுப்பு' என்றா உறுப்பென்டது இங்கு இலக்கணையடியாக வந்த குறிப்புச்சொல் அவயவமாகுதலறிந்தே இனியவராகவரென்டது தோனறச் சானறோர்மேல வைத்தாா

(க - து) சிநேகிதருரிமையாற் செய்பவையே நடபிற்கு அவயவமாதலின, அவற்றை யுகப்பதே பெரியோர் கடமை எனபது (உ)

ந. பழகிய நட்பெவன் செய்யுங் கெழுதகைமை
செய்தாங் கமையாக் கடை.

பரி —(இ - ள்) தாமுடம்படாதனவேனும நட்டாா உரிமையாற செய்தனவற்றிற்குத் தாஞ்செய்தாற்போல உடமபடாராயின, அவரோடு பழையதாயவந்த நட்பு என்ன பயனைச் செய்யும, எ-று.

செய்தாற்போல வுடமபடுதலாவது தாமும அவரிடத்துரிமையா னுடம்படுதல. இவை யிரணடுபோட்டானும பழைமையான வரும உரிமையது சிறப்புக கூறப்பட்டது

தேளி —(இ - ள ) கெழுதகைமை - (தாமுடம்படாத காரியமானாலும் நட்பினா) உரிமையினாலே செய்தவைகளுக்கு, செய்தாங்கு - (தாம) செய்தவைபோல், அமையாக்கடை - உடன்படாராயின, பழகிய - (அவரோடு)பழையதாயவந்த, நட்பு - சிநேகம், எவன் செய்யும- என்னபயனை செய்யும், எ று.

செய்தாற் போன்று உடனபடுதலாவது தாமும் அவரிடத்து உரிமையால் உடன்படுதல இவை இரணடுபாட்டாலும பழைமையால் வரும்உரிமையது சிறப்புச் சொலலப்பட்டது.

(க - து.) சிநேகிதருரிமையாற செய்தவைகளுக்கு உடன்படாதவரது நட்பு பயனற்றதாம என்பது. (ந)

ச விழைதகையான் வேண்டி யிருப்பர் கெழுதகையாற்
கேளாது நட்டார் செயின்.

---

1 குறிப்புச்சொல்லாவது செடபொருளும ஆகுபெயர்ப் பொருளுமலலாத வேறுபொருளைத் தரும்செயகை

2 சிநேகிதர்கள தாம் உரிமையாற செய்வன நட்பினுக்கு அவயவமாதலறிந்தே அரசனுக்கு இனியவராவரென்பதாம.

பரி — (இ - ள்) தங்கருமத்தை நட்டார் உரிமையாற் கேளாது செய்தாராயின, அச்செயலது விழைபபடுந்தன்மைபறறி அதனை விருமபுவர் அறிவுடையார், எ-று

ஒருவர்க்குத் தங்கருமந் தாமறியாமன முடிந்திருத்தலினுஉங்கு நன்மையின்மையின, அச்செயல விழையத்தக்கதாயிறறு அதனை 1 அவவாறறிந்து விருப்புதல் அறிவுடையார்க்கலல தின்மையின, அவர்மேல வைத்துக் கூறினார், 2 வேண்டியிருபபரென்பது எழுந்திருபபரெனபதுபோல ஒருசொன னீர்மைத்து இதனாற் கேளாது செய்துழி அதனை விருப்புகவென்பது கூறபபட்டது.

தெளி —(இ - ள்) நட்டார் - நட்பினர், கெழுதகையால் - உரிமையால், கேளாது - கேடகாமல், செயின் - (தஙகருமத்தைச்) செயதாராயின், விழைதகையான - (அசசெயலது) விருமபபபடும தனமைபற்றி, (அறிவுடையோா) வேண்டியிருப்பர் - (அச்செயலை) விரும்புவா, எ-று

ஒருவர்க்குத் தஙகருமம் தாம் அறியாமல முடிந்திருக்கையைக் காட்டிலும் நன்மையிலலாமையால், அசசெயல் விரும்பததக்கதாயிறறு. அச்செயலை அப்படியறிந்து விருமபுதல அறிவுடையார்க் கல்லது இல்லாமையால, அவவறிவுடையார்மேல்வைத்துச் சொல்லினா. வேணடியிருபபர் என்பது ஒருசொற றன்மையது. இதனால கேளாது செயதவிடததுஅதனை விருமபுகவெனபது சொல்லபபடடது

(க - து.) சிநேகிதருரிமையாற் றம்மைக்கேளாது செய்ததை யறிவுடையோர் விரும்புவர் என்பது. (ச)

௫. பேதைமை யொன்றோ பெருங்கிழமை யென்றுணர்க
நோதகக நட்டார் செயின.

பரி —(இ - ள.) தாம் வெறுக்கத்தககனவறறை நட்டா செய்தாராயின, அதறகுக் காரணம 3 ஒன்றிற பேதைமை யெனறுதல ஒனறின மிககவுரிமை யென்றுதல் கொள்க, எ-று.

ஒன்றோவென்டது எணணிடைச்சொல் 4 செயினெனவே, 5 தமபியல் பாற் செயயாமைபெறறும 6 இது வருகினறவற்றுள்ளு மொக்கும 7

1 அவ்வாறறிந்து - விழையத்தககதாகவறிந்து,
2 எழுந்திருப்பா என்பது எழுவார் என்று பொருள்பட்டு ஒரு சொல்லின் தனமையதாய் நினறுறபோனறு வேண்டியிருப்பர் எனறது வேணடுவார் என்று பொருள்பட்டு ஒருசொலலின் தன்மையதாய நின்றதென்க.
3 ஒன்றின் - ஒருபட்சத்தில.
4 செயினெனவே - வெறுககத்தககவைகளைச சிநேகிதர்கள் செய்தாராயின என்று சொலலவே.
5 தம்மியல்பால் - சிநேகிதர் தமது சுபாவத்தினால்
6 இதுவருகின்றவற்றுள்ளும் - தமது இயல்பினால செய்யாமை பாடல்களிலும்.
7 இழவும் - கைப்பொருளிழத்தற்குக் காரணமாகிய ஊழ

ஊழான் வரும்பேதைமை யாவர்க்கு முண்மையிற் றமக் 1 கேதங்கொண்டா ரென்றுதல 2ஊழ்வகையான் எமமின்வரற்பாலது ஒற்றுமை மிகுதிபற்றி 3 அவரின வநததென்றுதல் கொள்வதலலது 4 அன்பினமையென்று கொள்ளப படாதென்பதாம். கெடுமவகை செய்யின அதற்குக் காரணம இதனுற் கூறப் பட்டது.

தெளி.—(இ - ள்) நோதக்க - (தாம்) வெறுக்கத்தக்கவைகளை, நட்டார்- சினேகித்தவர், செயின - செயதாரானல், (அதற்குக்காரணம்) பேதைமையொன்றோ - (ஒன்றில்) அறியாமை யென்றுதல், பெருநகிழமையொன்றோ - (ஒன்றில்) மிகுநதஉரிமையென்றுதல, என்று உணாக - என்றறியக்கடவா, எ-று.

ஒன்றோ என்பது எண்ணுப்பொருளில் வந்த இடைச்சொல். செயினென வே, தம்மியல்பினல் செய்யாமை பெறறும். இதுவருகின்றவைகளுள்ளும் ஒக்கும். இழவூழால்வரும் பேதைமை யார்க்கும் உண்டாகலால தமக்கு ஏதங்கொண்டாரெனறுவது ஊழவகையால் எம்மால வரக்கடவது ஒறறுமை மிகுதிபற்றி அவரால் வநததெனறுவது கொள்வதல்லாமல் அன்பில்லாமை யென்று கொள்ளப்படாதென்பதாம். கெடுமவகை செய்யின் அதறகுக் காரணம இதனுல் சொல்லப்பட்டது.

(க - து.) சிநேகிதர் வெறுக்கத்தக்கவைகளைச் செயதால் அவை யுரிமையால் நேர்ந்தவையெனறு அறிவுடையார் கொளளுவர் என் பது. (ரு)

கூ. எல்லைக்க ணின்றுர் துறவார் தொலைவிடததுந்
தொல்லைக்க ணின்றுர் தொடர்பு.

பரி —(இ - ள்.) நட்பு வரம் பிகவாது அதன் கண்ணே நின்றவர் தம் மொடு பழைமையிற் றிரியாது நின்றாரது நட்பினை அவராற் றொலைவு வந்தவிடத்தும விடார், எ-று.

பழைமையிற் றிரியாமை - உரிமை யொழியாமை. தொலைவு - பொருட் கேடும் போர்க்கேடும்.

தெளி.—(இ - ள்.) எல்லைக்கணின்றார் - (நட்பின் வரம்பு கடவாது) அந் நட்பின்வரம்பிலே நின்றவர், தொல்லைக்கணின்றார் -(தம்மோடு) பழைமையில் வேறுபடாது நின்றவரது, தொடர்பு-நட்பினை, தொலைவிடத்தும்-(அவராலே) தொலைவு வந்தவிடத்தும், துறவார் - விடார், எ-று.

---

1 ஏதங்கொண்டார் - தீங்கு செய்தார்.

2 ஊழ்வகையான் - விதிவசத்தால். உரிமைவகையான் என்றும் பாடமுண்டு.

3 அவரின் - சிநேகிதரால்.

4 அன்பின்மையான் வந்ததென்று என்றும் பாடமுண்டு.

பழைமையில வேறுபடாமை-உரிமை யொழியாமை தொலைவு-பொருட கேடும போககேடும்.

(க - து) நட்பின வரம்பிலே நின்றவா நடபினரால் கேடுநேர்ந்த விடத்தும் அவரது நட்பை விடார் என்பது. (சு)

எ. அழிவந்த செய்யினு மன்பறா ரன்பின
வழிவந்த கேணமை யவர்

பரி.—(இ - ள்) நடடார் தமக் * கழிவுவந்தவற்றைச் செய்தாராயினும் அவர்மாட் டனபொழியார், அன்புடனே பழையதாய்வந்த நடபினையுடையார், எ-று.

1 அழியென்பது முதனிலைத்தொழிறபெயர் அழிவு - மேறசொலலிய கேடுகள். இவை யிரண்டோட்டானுங் கேடுசெயதககணணும் நடபு விடற்பாற் றன்றென்பது கூறப்பட்டது.

தேனி.—(இ - ள்.) அனபின் - அன்புடனே, வழிவந்த - பழையதாய் வந்த, கேண்மையவர் - நட்பினையுடையவர், (நடபினா) அழிவந்த - (தமக்கு) அழிவுவந்தவைகளை, செய்யினும - செய்தாராலும், அன்பறார் - (அநநட்பின ரிடத்தே) அனபுநீங்கார், எ-று

அழி யென்பது முதனிலைத தொழிற்பெயர் அழிவு-முன்சொலலிய பொருட்கேடும போககேடும் இவை இரண்டோட்டாலும் கேடுசெய்த விடத்தும் நட்பு விடுந்தன்மையதன்றென்பது சொல்லபபட்டது

(க - து.) பழைமையான நட்பினையுடையவர் தமது நட்பினர் கெடுதி செய்தாலும் அவரிடத்து அன்பு நீங்கார் என்பது (எ)

அ. கேளிழுக்கங் கேளாக கெழுதகைமை வல்லார்க்கு
நாளிழுகக நட்டார் செயின்

பரி.—(இ - ள்.) நட்டார்செய்த பிழையைத் தாமாகவே யன்றிப் பிறர் சொன்னாலுங் 2 கொள்ளாத உரிமையறிய வல்லார்க்கு அவர் பிழை செய்வாராயின், 3 அது பயன்பட்ட நாளாம், எ-று.

பிழையாவன - சொல்லாது 4 நற்பொருள் வௌவல், பணியாமை, அஞ்

---

* அழிவுவந்த - அழிவு தரததக்க.

1 அழி என்னும் பகுதி அழிவு என்னும் தொழிற்பெயர்ப் பொருளை யுணர்த்தி நின்றதினாலே முதனிலை (பகுதி) தொழிறபெயராயிற்று.

2 கொள்ளாத - அங்கீகரியாத. 3 அது - பிழை (தவறு) செய்தநாள்.

4 நற்பொருள்வௌவல் - அரசனுக்குரிய சிறந்தபொருளகளைத் தனக்குரியதாகக் கொள்ளுதல்.

சாமை 1 முதலாயின, கேட்டல் - 2 உடகோடல். கெழுதகைமைவல்லாரெனபது ஒருபெயராய்க் கேளாதவென்னு மெச்சத்திற்கு 3 முடிபாயிற்று. செய்துபோகதுழியலலது 4 அவ்வன்மை வெளிபபடாமையின, 5 செய்யாதன நாளலலவாயின. இதனாற் பிழைபொறுத்தற் சிறபபுக கூறப்பட்டது.

தெளி.—(இ - ள்) கேள் - நட்பினர் (செய்த), இழுக்கம் - பிழையை, கேளா - (தாமாகவேயலலாமல பிறர்சொல்லினும) கொள்ளாத, கெழுதகைமைவலலார்க்கு - உரிமையறிய வலலவர்க்கு, நட்டார் - அந்நட்பினர், இழுக்கம் - பிழையை, செயின்-செயதாராலல, (அது) நாள்-(பயனபட்ட) நாளாம், எ-று.

பிழையாவன - சொல்லாமல் நற்பொருள் வெளவல், பணியாமை, அஞ்சாமை முதலானவை கேட்டல-உட்கொள்ளுதல் கேளா என்னும் ஈறுகெட்ட எதிர்மறைப்பெயரெச்சம கெழுதகைமை வல்லார் என்னும் பெயரைக் கொண்டு முடிநதது. கெழுதகைமைவல்லார என்பது தொடர்மொழியாய் நில்லாது இஙகே ஒருமொழி (சொல) யாய் நின்றது பிழை செயதவிடததலலாமல் அவ்வல்லமை வெளிப்படாமையால, செயயாதவை நாளல்லவாயின. இதனால பிழைபொறுததற்சிறப்புச் சொலலபபட்டது.

(க - து.) நட்பினரது பிழையைக் கவனியாதவர்களுக்கு நட்பினர் பிழைசெய்தநாள் பயன்பட்ட நாளாம எனபது. (அ)

கூ. கெடாஅ வழிவநத கேண்மையார் கேண்மை
விடாஅர் விழையு முலகு.

பரி.—(இ - ள்) உரிமையறாது பழையதாய்வந்த நட்பினையுடையாரது நட்பினை அவர் பிழைநோக்கி விடுதல்செயயாதாரை உலகம நடபுகுறித்து விரும்பும, எ-று.

6 கெடாதென்பத னிறுதிநிலை விகாரத்தாற் றொக்கது. விடாதாரையெனவே, 7 விடுதற்காரணங் கூறபபட்டது. நம்மாட்டும் இவரித்தன்மைய

1 முதலாயின என்றதனால் - மேற்கொண்ட காரியத்தைக கெடும்படி செய்தல, அரசனைககேளாமலே ஒரு காரியத்தைத் தொடங்கிச செய்தல் முதலானவைகளையும் கொள்க.

2 உட்கோடல் - மனத்திற்கொள்ளுதல்.

3 முடிபாயிற்று - முடிக்குஞ் சொல்லாயிற்று

4 அவ்வன்மை - கெழுதகைமை (உரிமை) யினவலலமை

5 செய்யாதன - சிநேகிதர் தவறுசெய்யாத நாள்கள்.

6 கெடாது என்பது எதிர்மறை வினையெச்சம்.

7 விடுதற்காரணம் சிநேகிதர்செய்யும் பிழைநோககுதல

ராவரென்று யாவருந் தாமேவந்து நட்பாவரெனபதாம். 1 கெடாரென்று பாடமோதி, நட்புத்தன்மையிற் கெடாராகி யெனறுரைப்பாருமுளா

தெளி — (இ - ள்) கெடா - (உரிமை) கெடாமல், வழிவந்த - பழைய தாயவந்த, கேண்மையார்-நட்பினையுடையவரது, கேணமை-நட்பினை, விடாா - (அவர்பிழைநோக்கி) விடுதலசெய்யாதவரை, உலகு- உலகமானது, விழையும்- (நட்புக்குறித்து) விரும்பும், எ-று

கெடாது என்பதன் துவ்விகுதி செய்யுள் விகாரத்தால் தொகக்கின்றது விடாதாரை யென்வே, விடுதற்குக் காரணம் சொலலப்பட்டது. நம்மிடத்தும் இவர் இப்படிபபட்டவராவாரென்று யாவரும் தாமேவந்து நட்பாவரென்பதாம்.

(க - து.) தொன்று தொட்டு வந்த நடபினரது நட்பை விடாதவரை உலகத்தார் நட்புக்குறிதது விரும்புவர் என்பது. (கூ)

கo. விழையார் விழையப் படுப பழையார்கட
பண்பிற் றலைப்பிரியா தார்.

பரி.—(இ - ள்.) பழைய நட்டார் பிழை செய்தாராயினும் 2 அவர்மாட்டுத் தம் பண்பினீங்காதாா பகைவரானும் விரும்பப்படுவர், எ-று

தம் 3 பண்பாவது செய்யாத முனபோல அன்புடையராதல் 4 மூன்றனுருபுஞ் சிறப்புமமையும விகாரத்தாற் றொக்கன 5 அததிரிபின்மை நோக்கிப பகைவரும் நட்டாராவரென்பதாம் இவை யிரண்டுபாட்டானும் பழைமையறிவார் எய்தும பயன கூறப்பட்டது

தெளி —(இ - ள்) பழையார்கண் - (பழையநட்பினர் பிழைசெய்தாராயினும்) அந்நட்பினரிடத்து, பண்பிற்றலைப்பிரியாதாா -(தம) பணபினின்றும நீங்காதவர், விழையார் - பகைவரானும, விழையபபடுப - விரும்பப்படுவா, எ-று.

தம்பண்பாவது பிழைசெய்யாத முன்புபோல அனபுடையவராதல், அக்குணநோக்கிப் பகைவரும் நட்பினராவரெனபதாம் இவை இரணடுபாட்டானும் பழைமை யறிவார் அடையும பயன் சொல்லப்பட்டது.

(க - து ) தொன்று தொட்டு வந்த நட்பினர் செய்த பிழையைப பொறுப்பவரைப் பகைவரும விரும்புவர் என்பது. (ம)

——:(o):——

1 கெடாஅ என்பதைக் கெடார் என்று பாடங்கூறி, அதற்குச் சிநேகத்தனமையிற் கெடாதவராகி யென்று பொருள் கூறுவாரு முணடென்பது.

2 அவர்மாட்டு - பழைய சிநேகிதரிடத்து 3 பண்பு - குணம்.

4 விழையார் என்பதனிறுதியில் ஆன் என்னும் மூனறனுருபும், உம என்னும் இழிவுசிறப்பும்மையும் செய்யுள் விகாரத்தால் தொக்குகின்றன.

5 அத்திரிபின்மை - பிழைசெய்தபோதும் குணம வேறுபடாமை.

## அஉ - ம். அதி.—தீநட்பு.

**பரி —** இனிப பொறுக்கபபடாத குறறமுடைமையின விடற்பாலதாய நடபு நடபாராய்தற்கட சுருஙகசசொலலிய துணையான் அடஙகாமையின், 1 அதனை 2 யிருவகைபபடுத்து இரணடதிகாரத்தாற கூறுவானறொடங்கி, முதறகட டீநடபுக் கூறுகினறா 3 அஃதாவது தீககுணத்தாரோடு உளதாய நட்பு, 4 குணத்தின்றீமை ஒற்றுமைபறறி உடையாமேறறாய், அது பின் அவரோடு செயத நடபினமேறறாயிறறு. அதிகாரமுறைமை கூறுமையே விள ஙகும,

**தெளி —** இனிப பொறுக்கபபடாத குறறமுடைமையால் விடத்தக்கதாகிய நடபு நட்பாராய்த லதிகாரததில் சுருஙகசசொலலியவளவால் அடங்காமையால, அதனை இருவகைபபடுத்தி இரணடதிகாரததாலே சொலலததொடஙகி, முன்னே தீநட்புச் சொல்லுகிறா. அஃதாவது தீககுணததாரோடு உணடாகிய நட்பாம குணத்தினது தீமை ஒற்றுமைபறறி அததீககுண முடையவாகளினமேலதாய், அது பின அத்தீக்குண முடையாரோடு செயதநடபின்மேலாயிறறு அதிகாரமுறைமை சொலலாமலே விளஙகும்

> க பருகுவார் போலினும பண்பிலார் கேண்மை
> பெருகலிற் குனற லினிது.

**பரி —** (இ - ள்.) காதன் மிகுதியாற் பருகுவார் போனறாராயினுந் தீக்குணமுடையார் நட்பு வளாதலிற றேயதல் நன்று, எ-று

5 "பருகு வன்ன வருகா நோக்கமொடு" எனறார் பிறரும நறகுண மில்லாரெனவே, தீககுணமுடையாரெனபது 6 அருததாபததியானவந்தது பெருகிறைல் வருங்கேடு குன்றிறைல வாராமையின 'குன்றலினிது' எனறா இதனற் றீநடபினது ஆகாமை பொதுவகையாற் கூறப்பட்டது. இனிசசிறபபுவகையாற் கூறுப,

**தெளி —** (இ - ள் ) பருகுவார் போலினும - (ஆசை மிகுதியால) உணபவர் போனறாராயினும், பணபிலார் - குணமிலாரது (தீககுணமுடையவரது

1
2 இருவகைப்படுதது - தீநட்பு கூடாநட்பு என்றிருவகையாககி
3 அஃதாவது - தீநட்பாவது.
4 குணததின்தீமை அதனையுடையவாக்காதலால் பண்பாகுபெயா; பின அத தீக்குண முடையவருடன செயத நட்பிறகாதலால் பொருளாகுபெயர், ஆகவே இஃதிருமடியாகுபெயர்,
5 பத்துப்பாட்டு பொருநராற்றுபபடை எஎ-வது வரி இதன்பொருள (தன்னைக்கணணுற்) பருகுக் தன்மையை யொதத கெடாதபார்வையாலே என்பது
6 அருத்தாபத்தியாவது இஙஙனமனறாயின் இது கூடாதென்றுணர்வது.

என்றபடி), கேண்மை - நட்பானது, பெருகலின் - வளர்தலினும், குன்றல் - குறைதல், இனிது - நல்லது, எ-று.

நற்குண மிலலாரெனவே, தீக்குணமுடையாரென்பது அருத்தாபத்தியாற்பெறப்பட்டது பெருகினால் வருங் கேடு குன்றினால் வாராமையின் 'குன்றலினிது' என்றார் இதனால் தீநட்பினது ஆகாமை பொதுவகையாற் சொல்லப்பட்டது இனிச்சிறப்புவகையாற் கூறுவா.

(க - து) நற்குண மிலலாதவரது சிநேகம வளர்தலினும குறைதல நல்லது என்பது. (க)

உ. உறினட் டறினொரூஉ மொப்பிலார் கேண்மை
பெறினு மிழப்பினு மென்.

பரி —(இ - ள்) தமக்குப் பயனுளவழி நட்புச்செய்து அஃதிலவழியொழியும 1 ஒப்பிலாரது நட்பினைப் பெற்றால் 2 ஆக்கமியாது இழந்தால 3 கேடியாது, எ று

4 தமக்குறறன பார்ப்பார் பிறரோடு பொருததமிலராகலின, அவரை 'ஒப்பிலார்' என்றார் 5 அவர்மாட்டு நேதுமற்றன்மையே அமையு மென்பதாம

தெளி —(இ - ள்) உறின - (தமக்குப் பயன) உள்ளவிடத்து, நட்டு - சிநேகித்து, அறின் - (அப்பயன) இல்லாவிடத்து, ஒரூஉம - ஒழியும, ஒப்பிலார் - ஒப்பிலலாதவரது, கேண்மை - சிநேகத்தை, பெறினும் (என்) - பெற்றால (ஆக்கம) யாது, இழப்பினும் என - இழந்தால (கேடு)யாது, எ-று.

தமக்கு உற்றவை பார்ப்பவர் பிறரோடு பொருந்தமிலராதலால்; அவரை 'ஒப்பிலார்' என்றார் அவரிடத்து அயலாந்தன்மையே பொருந்து மெனபதாம்.

(க - து) பயனைக்கிச் சிநேகிப்பாரது சிநேகம இருந்தாலும் போனாலும பயனில்லை என்பது. (உ)

ங, உறுவது சீர்தூக்கு நட்பும் பெறுவது
கொள்வாருங் கள்வரு நேர்

பரி.—(இ - ள்) நட்பளவு பாராது அதனால வரும் பயனளவு பார்க்கும நட்டாரும 6 கொடுப்பாரைக் கொள்ளாது விலையைக் கொள்ளும் 7 பொதும

1 ஒப்பிலார் - மனமொத்திராதவரது 2 ஆக்கம - இலாபம்.
3 கேடு - கஷ்டம 4 தமககுறறன - தமக்கு வரும் பயனகளை.
5 அவர்மாட்டு - தமக்குற்றன பார்ப்பாரிடத்து,
6 கொடுப்பாரை - விலையாகப் பொருளைக் கொடுப்பவரை.
7 பொது மகளிர் - போகமனுபவிப்பதறகாகப் பொருளை விலையாகக் கொடுக்கும் பலர்க்கும் பொதுவாயிருக்கும் பெணகள்.

களிரும்,பிறர் கேடுநோக்காது அவர்சோர்வு நோக்குங் கள்வரும் தமமுள்ளொ ப்பர், எ-று.

1 நட்பு - ஆகுபெயர் பொருளையே குறித்து வருசிந்தொழுகலின், 2 கணிகையர் கள்வரெனறிவரோ டொப்பரெனபதாயிற்று இவை இரணடு பாட்டானும் தமக்குறுவது பார்ப்பார் நட்பினதீமை கூறப்பட்டது

தெளி —(இ-ள்) உறுவது சீர்தூக்கு நட்பும் - (நட்பளவு பாராமல் அந்நட்பால்) வரும்பிரயோசனத்தளவு பார்க்கும் நட்பினரும், பெறுவது கொள்வாரும் - (கொடுப்பாரைக் கொள்ளாமல்) விலையைக் கொள்ளும் வேசையரும், கள்வரும் - (பிறர் கேடுநோக்காது அவர் சோர்வு பார்க்கும்) கள்வரும், நேர - (தம்முள்) ஒப்பர், எ-று

நட்பு - ஆகுபெயர் பொருளையேகுறித்து வருசிந்து நட்டதலால், உறுவது சீர்தூக்கும் நட்பினர் வேசையர் கள்வரென றிவர்களோடு ஒப்பாவரென பதாயிற்று இவைஇரண்டு பாட்டானும் தமக்குவரும பிரயோசனத்தளவைப் பார்ப்பவரது நட்பின தீமை சொல்லப்பட்டது நோவர் எனனும் வினைமுற்று வகர விடைநிலையும் அர் விகுதியும் கெட்டு நோ என வந்தது.

(க-து) பயனோக்கிச் சிநேகிப்பவர் வேசையரையும் திருடரையும் ஒப்பர் எனபது. (௬)

௪ அமரகத் தாற்றறுக்குங் கல்லாமா வன்னார்
தமரிற் றனிமை தலை

பரி.—(இ-ள) அமர்வாராத முன்னெல்லாந் தாங்குவதுபோன்று வந்துழிக் களத்திடை வீழ்த்துப்போங் கலவியில்லாத புரவிபோல்வாரது 3 தமர்மையில் தனிமை சிறப்புடைத்து, எ-று.

கல்லாமை - 4 கதியைந்தும 5 சாரிபதினெட்டும்பொருமுரணும் றறலும் அறியாமை துன்பம்வாராதமுனனெல்லாந் துணையாவார்போன்று வந்துழிவிட்

1 நட்பு எனனும் பணபுப்பெயர் அதனையுடையவர்க்காதலால் பண்பாகுபெயர்.

2 கணிகையர் - பொதுமகளிர்.

3 தமர்மையில் - சிநேகிதராயிருக்கும் தன்மையைப் பார்க்கிலும்

4 மல்ல (மல்லர்) கதி, வாநர (குரங்கு) கதி, மயூர (மயில்)கதி, வல்லிய (புலி) கதி, விடை (ரிஷபம்) கதி என்னும் ஐந்து. கதி - நடை "மல்லொடு மயூர மற்றை வானரம் வல்லி யங்கள், சொல்லுமால் விடைக ளென்ப தாகத கதிக ளைந்தாம்" என்று

5 சாரி - வட்டமாயோடல்.

டு நீங்குவரெனபது 1 உவமையிற்ற பெற்றும் 2 அவா தமரானல் வருமிறுதி தனியானுல வாராமையின, தனிமையைத 'தலை' எனருா எனவே 3 அதுவுந தீதாதல பெறுதும்

தெளி —(இ - ள்.) (போர்வாராத முன்னெல்லாம் தாங்குவதுபோலிருந்து) அமரகதது-போர்வநதவிடதது, ஆற்றறுககும் - போர்க்களத்திலே தளளிவிடடுப போகின்ற, கலலா - கலவி யிலலாத, - மாவன்னார் -குதிரைபோல்பவரது, தமரின - தமராந்தனமையிலும, தனிமை - தனிததிருததல், தலை - சிறப்புடையது, எ-று.

கல்லாமை - கதியைநதம சாரி டதினெட்டும் போாசெயயுந திறமும் அறியாமை துன்பம வாராத முனனெலலாம துணையாவாா போன்றிருநது அது வந்தவிடத்து விடடு நீஙகுவாரென்பது உவமையாற பெற்றும் அவர்தமரானுல் வரும அழிவு தனியானுல வாராமையால, தனிமையைத் 'தலை' என்றார். எனவே அதுவும் தீதாதல பெறபபடடது

(க - து.) சமயத்திற கைவிடுவாரது சிநேகத்தைக் கொளவதிலும் தனிததிருத்தல் நல்லது என்பது (ச)

ரு. செயதேமஞ் சாராச் சிறியவர் புனகேண்மை
யெயதலி னெயதாமை நனறு.

பரி —(இ - ள்.) செயதுவைத்தாலும அரணுகாத கிழமக்களது நேட்பு ஒருவற் குண்டாதலின் இலலையாதல நன்று, எ-று

4 சிறபபும்மை விகாரத்தாற்றொக்கது அரணுகாமை- தொலைவின்கண் விட்டு நீஙகுதல. 5 எய்தலி னெய்தாமை நனறெனபதறகு 6 மேலுரைத்தாங் குரைக்க சாராத வென்னும் பெயரெசசம் கேண்மை யென்னும பெயர்கொணடது, சிறியவரென்பதனைக கொள்ளின், செயதெனபது 7 நின்றுவறறும்.

---

1 உவமையால் - அமரகத தாறறறுக்கும கல்லாமா என்னும் உவமானததினுல்.

2 அவர் - கல்லாமா அன்னார், 3 அதுவும் - தனிமையும்.

4 செய்து என்பத னிற்றில வுயர்வு சிறப்பும்மை செய்யுள் விகாரத்தால தொக்கு நின்றது

5 செயதேமஞ்சாராச்சிறியவாபுன்கேண்மை ஒருவற்குண்டாதலினல வரும் அழிவு அவரைச் சிநேகங கொள்ளாது தனிமையா யிருத்தலினல் வாராமையினுல் அச்சிறியவரது சிநேகமிலலாதிருத்தல் சிறபபுடைய தென்பதாம

6 மேலுரைத்தாங்கு - 'அமரகதது' என்று மேலுள்ள குறளில் 'தமரிற்றனிமைதலை' என்பதற்கு விசேடங் கூறினறபோல.

7 நின்று வற்றும் - இருந்தும் பயனில்லாது போம். இது செய்யுட் குறறம் பத்தினுள் நின்று பயனின்மை என்னும் குற்றம்

இவை இரண்டுபாட்டானும் * தொலைவிற் றுணையாகாத நட்பினதீமை கூறப்பட்டது.

தெளி.—(இ - ள்.) செய்து- செய்துவைத்தாலும், ஏமஞ்சாரா- காவலாகாத, சிறியவர் - கீழ்மக்களது, புன்கேண்மை - தீநட்பு, எய்தலின் - (ஒருவனுக்கு) உண்டாதலைக்காட்டிலும், எய்தாமை- இல்லாதிருத்தல், நன்று - நல்லது, எ-று.

சிறப்பும்மை விகாரத்தாற் றொக்குநின்றது. காவலாகாமை - தொலைவிடத்து விட்டு நீங்குதல். எய்தலி னெய்தாமை நன்றென்பதற்கு முன் உரைத்தபடி உரைத்துக்கொள்க. இவை யிரண்டு பாட்டாலும் தொலைவிலே துணையாகாத நட்பினது தீமை சொல்லப்பட்டது.

(க - து) கீழ்மக்களது சிநேகம் உண்டாதலைப் பார்க்கிலும் உண்டாகா திருத்தல் நல்லது என்பது. (௫)

௬. பேதை பெருங்கெழீஇ நட்பி னறிவுடையார்
1 ஏதின்மை கோடி யுறும்.

பரி —(இ - ள்.) அறிவிலானது மிகச்செறிந்த நட்பின் அறிவுடையானது பகைமை கோடிமடங்கு நன்று, எ-று

2 கெழீஇயவென்பது ஈறுகெட்டு விகாரத்தாற் றொக்கது. 3 பன்மை உயர்த்தற்கண் வந்தது. அறிவுடையான்பகைமை ஒரு தீங்கும் பயவாமையானும் பேதைநட்பு எல்லாத்தீங்கும்பயத்தலானும் 4 'கோடியுறும்'என்றார் 5 பெருங்கழி நட்பென்று பாடமோதுவாருமுளர்

தெளி —(இ - ள்) பேதை - அறிவில்லாதவனது, பெருங்கெழீஇ நட்பின் -மிகநெருங்கிய நட்பைப்பார்க்கிலும், அறிவுடையார்- அறிவுடையவனது, ஏதின்மை - பகைமை, கோடியுறும் - கோடிப்பங்கு நல்லது, எ-று

---

* தொலைவில் - அழிவு வந்தவிடத்து.

1 ஏதின்மை - சம்பந்தமில்லாமை.

2 கெழுமிய என்பது கெழீஇ என விகாரப்பட்டுநின்றதெனினும் ஒக்கும்

3 பேதையென்றதற்கேற்ப ஒருமையால் அறிவுடையான் என்று கூறாது உயர்த்தற்பொருட்டு அறிவுடையார் என்ப பன்மையாற் கூறினமையினாலே 'பன்மை உயர்த்தற்கண்வந்தது' என்று கூறப்பட்டது இதற்குவிதி 'ஒருவரைக் கூறும்பன்மைக் கிளவியும்' என்னுந் தொல்காப்பியச் சூத்திரத்திற் காண்க.

4 கோடி - நூறுலட்சம் 'பழுதெண்ணுமந்திரியில்' என்னுங்குறளின் விசேடவுரையில் "எழுபதுகோடியென்றது மிகப்பலவாய எண்ணிறகொன்று காட்டியவாறு" என்றுகூறியிருத்தலும் இங்குக்கவனிக்கத்தக்கதாம்.

5 பெருங் கெழீஇ நட்பின் என்பதனைப் பெருங்கழிநட்பு என்று பாடங்கூறுவாருமுண்டு

'கேழ்இல் என்பதனவிகுறி (ய) செய்யுள் விகாரத்தால் தொக்குநின்றது அறிவுடையான் என்னும் ஒருமை உயர்த்தற்பொருட்டு அறிவுடையார் என்ப டன்மையாகக் கூறப்பட்டது அறிவுடையவனது பகைமை ஒருநீங்கும் செய யாதொழியும் பேதையினது நட்பு எல்லாத்தீங்கும் தருதலானும் 'கோடியுறும்' என்றார்.

(க - து) அறிவில்லாதவனது சிநேகத்தைக் கொள்ளுவதிலும் அறிவுடையவனது பகைமையைக் கொள்ளுதல் நல்லது என்பது. (௬)

எ. நகைவகைய ராகிய நட்பிற் பகைவராற்
பத்தடுத்த கோடி யுறும்

**பரி**—(இ - ள்.) தாமறிதல் வகையராகாது நகுதல் வகையராதற் கேது வாகிய நட்டார் வருவனவற்றின் பகைவரான் வருவன பத்தடுக்கிய கோடி மடங்கு நல்ல, எ-று.

§ நட்பு - ஆகுபெயர் அந்நட்டாவது 1 விடமரும் 2 தூர்த்தரும் வேழம்பரும் போன்று பலவகையார் 3 நகுவித்துத் தாம் பயன்கொண் டொழிவாரோடு உளதாயது. 4 பகைவராலென்பது ஆவாய்நிற்றலின், வருவனவென்பது வருவிக்கப்பட்டது பத்தடுத்தகோடி - பத்தாகத்தொகுத்தகோடி அந்நட்டான வரு மின்பங்களின் அப்பகைவரான்வருந் துன்பங்கள் இறப்பநல்லவென்பதாம் இத்துணை பிறரெல்லாஞ் சொல்லிலக்கணத்தோடு மாறுகொளவுரைத்தார்

**தெளி.**—(இ - ள்.) நகைவகையராகிய- (தாம் அறிதல் வகையராகாமல்) நகுதல் வகையராதற்குக் காரணமாகிய, நட்பின-நட்பால (வருவனவற்றின), பகைவரால - பகைவரால் (வருவன), பத்தடுத்தகோடியுறும - பத்துக்கோடி மடங்கு நல்லவையாம், எ - று.

நட்பு - ஆகுபெயர் அந்நட்பாவது விடமரும், தூர்த்தரும், கழைக்கூத்தரும் போன்று பலவகையால நகுவித்துத் தாம் பயன்கொண்டொழிவாரோடு உண்டாகியது. பகைவரால என்பது வேண்டி நிற்றலால், வருவனவென்பது வருவிக்கப்பட்டது பத்தடுத்தகோடி-பத்தாகத்தொகுத்தகோடி அந்நட்பினால வரு மின்பங்களிலும் அப்பகைவரால்வருந் துன்பங்கள் மிக நல்லவென்பதாம இக்குறளுக்குப் பிறரெல்லாம் சொல்லிலக்கணத்தோடு விரோதமுண்டாகப் பொருள்கூறினர்

(க - து) நகுதல் காரணமாகச் செய்யும் சிநேகிதரால் வரும் கெடுதியிலும் பகைவரால் வருங் கெடுதி நல்லதாம் என்பது. (எ)

---

§ நட்பால்வருவனவற்றை நட்புஎன்றது கருவியாகுபெயர்.

1 விடமர் - காமுகர். 2 தூர்த்தர் - வஞ்சகர் 3 நகுவித்து - களிப்பித்து

4 பகைவராலென்பது வருவனவென்பதை அவாய் (வேண்டி)நிற்றலின் அது வருவிக்கப்பட்டது என்றும் பாடமுண்டு.

அ ஒல்லும் கருமம் உடற்று பவர்கேண்மை
சொல்லாடார் சோர விடல்.

பரி —(இ - ள) தம்மான முடியுங் கருமத்தை முடியாதாக்கிச் செய்யாதாரோடு கொண்ட நட்பினை ¶ அது கண்டால் அவரறியச்சொல்லாதே சோர விடுக, எ - று.

முடியாதாக்குதல் § முடியாதாக நடித்தல். சோரவிடல் - விடுகின்றவாறு தோன்றாமல் ஒருகாலைக்கொருகால் 1 ஓயவிடுதல் அறியச்சொல்லினும் விடுகின்றவாறு தோன்றினும் அதுபொழுது 2 பரிகரித்துப் பின்னு நட்டாயொழுக்க கருதுவராகலின் 'சொல்லாடார்' என்றும், 'சோரவிடல்' என்றுங்கூறினார். இவைமூன்றுபாட்டானும் முறையே பேதையார், நகுவிப்பார், இயல்வது செய்யாதாரென்றிவர்கள் நட்பின் தீமை கூறப்பட்டது.

தெளி —(இ - ள) ஒல்லுங்கருமம்-(தம்மாலே)முடியுங்காரியத்தை, உடற்றுபவர் - முடியாதாக்கிச் செய்யாதாரோடுகொண்ட, கேண்மை - நட்பினை, (அதுகண்டால்) சொல்லாடார் - (அவரறியச்) சொல்லாமல், சோரவிடல் - தளரவிடக்கடவர், எ - று.

முடியாதாக்குதல் முடியாதாக நடித்தல் சோரவிடல் - விடுகின்றவிதந் தோன்றாமல் ஒருகாலைக்கொருகால் ஓயவிடுதல் அறியச்சொல்லினாலும் விடுகின்றவிதந் தெரிந்தாலும் அப்போது பரிகரித்துப் பின்னும் நட்பாயிருக்க நினைப்பார்களாதலால் 'சொல்லாடார்' என்றும், 'சோரவிடல்' என்றுஞ்சொல்லினார். இவை மூன்றுபாட்டாலும் முறையே பேதையர், நகுவிப்பவர், இயல்வதுசெய்யாதவர் என்ற இவர்களது நட்பின் தீமை சொல்லப்பட்டது

(க - து) தம்மாலாகுங் காரியத்தை யாகாததாக நடிப்பவரது சிநேகத்தை அவர்க்குச் சொல்லாமலே விடல் வேண்டும் என்பது. (அ)

கூ கனவினு மின்னாது மன்னோ வினைவேறு
சொல்வேறு பட்டார் தொடர்பு.

பரி —(இ - ள) வினையுஞ்சொல்லு மொவ்வாது வேறுவேறாயிருப்பார் நட்பு நனவின்கண்ணேயன்றிக் கனவின்கண்ணு மின்னாது, எ - று.

3 வினை சொற்களொவ்வாமை முதன்மேலேற்றப்பட்டது 4 அஃதா

---

¶ அது என்றது - தம்மால் முடியுந்தொழிலை முடியாதாக நடித்துச்செய்யா

§ முடியாதாக நடித்தல் - தம்மால் முடியுந்தொழிலை முடியாததாகக் காட்டுதல்.

1 ஓயவிடுதல் - தளரவிடுதல் 2 பரிகரித்து - விலக்கி

3 வினையுஞ் சொல்லும் தம்முள் ஒவ்வாதிருத்தலைத் தீநட்பினராகிய முதலின் மேலேற்றி 'வினைவேறு சொல்வேறுபட்டார்' என்று கூறப்பட்டது.

4 அஃதாவது - வினைசொற்களினது ஒவ்வாமையாவது.

உதவியிடத்துப் பகைவராகச் சொல்லின் நட்டாராயிருத்தல் 1 நிகழ்வின்கண் உளதாயிருத்தலால் 'கனவினு மின்னாது' என்றார் 2 உம்மை-எச்சவும்மை, இழிவு சிறப்பும்மையுமாம் மன்னும் ஓவும் அசைநிலை

தெளி.—(இ - ள) வினைவேறு சொல்வேறு பட்டார் - வினையுஞ் சொல்லும் (ஒவ்வாமல்) வேறு வேறாயிருப்பவரது, தொடர்பு - நட்பு, கனவினும் (கனவிலேமாத்திர மல்லாமல்) சொப்பனத்திலும், இன்னாது - துன்பஞ்செய்வதாகும், எ - று. .

வினைசொற்களது ஒவ்வாமை அதனெடுபடையவர்மேலேற்றப்பட்டது தொழிலுஞ் சொல்லும் ஒவ்வாமல வேறுவேறாயிருத்தல - தொழிலிலேபகை வராய்ச் சொல்லிலே நட்பினராயிருக்கை அனுபவத்திலே உண்டாயிருத்தலா லே 'கனவினுமின்னாது' என்றார் மன், ஓ - அசைநிலை

(க - து.) சொலலும் செயலும் வேறுபட்டிருப்பவரது சிநேகம் கனவிலும் துன்பந்தரும் என்பது. (௯)

௧0. எனைத்துங் குறுகுத லோம்பல் மனைக்கெழீஇ
மன்றிற் பழிப்பார் தொடர்பு

பரி.—(இ - ள்.) தனியே மனைக்கணிருந்துழிக் கூடியிருந்து பலரோடு மன்றின்கணிருந்துழிப் பழிகூறுவாரது நட்பு சிறிதாயினுந் தம்மை நணுகுதலைப் 3 பரிகரிக்க, எ - று

மனைக்கட் கெழுமுதலும் மன்றின்கட் பழித்தலுந் தீதாகலின் அவரொருகாலுந் தம்மை நணுகாமைக் 4 குறிக்கொண்டு காக்கவென்பார், 5 அவர் நட்பின் மேல வைத்துக் கூறினார் இவையிரண்டுபாட்டானும் வஞ்சர்நட்பின் றீமை கூறப்பட்டது

தெளி.—(இ - ள ) மனை - (தனியே)வீட்டிலே (இருந்தபோது), கெழீஇ- கூடி, மன்றில் - சபையிலே (பலருடனிருந்தபோது), பழிப்பார் - பழி சொல்லுவோரது, தொடர்பு - நட்பு, எனைத்தும் - எவ்வளவு சிறிதாயினும், குறுகுதல் - (தம்மைச்) சேர்தலை, ஓம்பல்-பரிகரிக்கக்கடவர், எ - று

---

1 நிகழ்வின்கண் உளதாயிருத்தலால - ஜாக்கிரத்திலனுபிச சொப்பனம் உண்டாயிருக்கும் காலத்திலும் தீயாருடைய நட்பு உள்ளதுபோலிருத்தலால. [ஜாக்கிரத்தில அதிகபழக்கமாயிருப்பது சொப்பனத்தில மிகுதியாகத் தோற்றுவது இயல்பாதலாற்றிக் 'கனவினு மின்னாது' என்று கூறப்பட்டது ]

2 உம்மை - கனவினும் என்பதிலுள்ள உம்மை.

3 பரிகரிக்க - ஒழிக்கக்கடவர். 4 குறிக்கொண்டு - கவனம் வைத்து

5 அவர் நட்பினமேல வைத்துக் கூறினர் - தீயாரது சிநேகத்தின்மேல குறுகுதலை (சேர்தலை) வைத்துச் சொல்லினர்.

வீட்டிலே நட்புச் செய்தலும் சபையிலே பழித்தலுமாகிய இவ்விருசெயலுமுடைத்தாகலின் அவர் ஒருபோதும் தம்மைச்சேராதவிதம் குறிக்கொண்டு காக்கவேண்டுமென்பார், அவர் நட்பின்மேல் வைத்துச் சொல்லினார் இவை இரண்டுபாட்டாலும் வஞ்சகர் நட்பின் நிலை சொல்லப்பட்டது.

(க-து) வீட்டிற் சிநேகித்துச் சபையிற் பழிப்பாரது சிநேகத்தை யறவொழிக்கவேண்டும் என்பது. (௰)

## அ௩ - ம் அதி—கூடாநட்பு.

**பரி.**—இனி ஏனைக்கூடா நட்புக் கூறுகின்றார். அஃதாவது பகைமையான் அகத்தாற் கூடாதிருந்தே தமக்கு வாய்க்குமிடம் பெறுந்துணையும் புறத்தாற் கூடி யொழுகுவார் நட்பு.

**தெளி.**—இனி மற்றைக் கூடா நட்புச் சொல்லுகின்றார். அஃதாவது பகைமையால் மனத்தாற் கூடாதிருந்தே தமக்குச் சமயம் கிடைக்குமளவும் புறத்திலே கூடி நடப்பவர் நட்பு.

க சீரிடங் காணி னெறிதற்குப் பட்டடை
நேரா நிரந்தவர் நட்பு.

**பரி.**—(இ-ள்) கூடாதிருந்தே தமக்கு வாய்க்குமிடம் பெறுந்துணையுங் கூடி யொழுகுவார் நட்பு 1 அது பெற்றால், 2 அறவெறிதற்குத் துணையாய 3 பட்டடையாம், எ-று.

எறியு மெல்லை வாராமுன்னெல்லாந் தாங்குவதுபோன்றிருந்து வந்துழி அறவெறிவிப்பதாய பட்டடைக்கும் 4 அத்தன்மைத்தாய நட்பிற்கும் 5 தொழிலொப்புமை யுண்மையான், 6 அதுபற்றி 7 அந்நட்பினைப் பட்டடையாக வுபசரித்தார். 8 தீரிடமென்று பாடமோதி முடிவிடமென் றுரைப்பாருமுளர்.

---

1 அது - வாய்க்குமிடம்

2 (பொன் முதலியவற்றை வேறுகருவிகள்) அறவெறிதற்கு (சிறிதும் மிச்சமில்லாதபடி) முழுதும் வெட்டுதற்கு

3 பட்டடை-தட்டார் முதலியோர் பொன் முதலியவைகளை வைத்தடிப்பதற்கும் வெட்டுவதற்கும் ஆதாரமாயிருப்பதொருகருவி இது பணையென்றும் கூடம் என்றும் சொல்லப்படும்

4 அத்தன்மைத்தாய - பட்டடை போன்றதாய.

5 தொழிலொப்புமை யுண்மையால் - தாங்குவதுபோன்றிருத்தலும் முழுதும் வெட்டச்செய்தலுமாகிய தொழில் உவமானமாயிருத்தலால்.

6 அதுபற்றி - தொழில் ஒப்புமை யுண்மைபற்றி.

7 அந்நட்பினை - மனத்தால் கூடாதிருந்தே தமக்கு வாய்க்குமிடம் வருமளவும் கூடி நடப்பவரது சிநேகத்தை

8 சீரிடம் என்பதனைத் தீரிடம் என்று பாடங்கூறி அதற்குப் பொருள் முடிவிடம் என்று கூறுவாரு முண்டென்பது.

தெளி.—(இ-ள்) நேரா - கூடாதிருந்தே, நிரந்தவர் - (வாய்க்குமட்டும் பொறுத்திருந்து) கூடி நட்பவரது, நட்பு - சிநேகம், சீரிடம் - வாய்க்கு மிடம், காணின் - பெற்றால், எறிதற்கு - (அடி) எறிதற்குத் துணையாகிய, பட்டடை - பட்டடையாம், எ-று.

எதிர்பகைவர் வாரா முன்னெல்லாம் தமக்குநட்புபோலிருந்து அது வந்தவிடத்து அவனெறிவிற்றாகிய பட்டடைக்கும் கூட்டப்பட்டதாகிய நட்பிற்கும் தொழிலொப்புமை யிருத்தலால், அதனை அ[illegible] பட்டடையாக உவமித்தார்.

(க-து) உட்பகைகொண்டு வெளிக்குச் சிநேகித்துத் தொழுதவரது நட்பானது சமயம் நேர்ந்தவிடத்துத் தாங்காது அடிவெறியும் ஆயுதத்திற்குத் துணையாய பட்டடைக்கு நேராம் என்பது. (க)

உ இனம்போன் றினமல்லார் கேண்மை மகளிர்
மனம்போல வேறு படும்.

பரி.—(இ-ள்) தமக்கு 1 உற்றார்போன்று உறாதாரோடு உளதாய நட்பு இடம் பெற்றாற் பெண்டிர் மனம்போல வேறுபடும், எ-று.

2 அவர்மனம் வேறுபடுதல் 3 "பெண்மனம் பேதின் றொருப்படுப் பேனென்னு, மெண்ணி லொருவன்" என்றதனானுமறிக. நட்பு வேறுபடுதலாவது பழைய பகையேயாதல். இவை இரண்டுபாட்டானுங் கூடாநட்பினது குறிப்பு கூறப்பட்டது.

தெளி.—(இ-ள்) இனம் போன்று - தமக்கு உறவர்போன்று, இனமல்லார் - உறாதவர்களுடன், (உண்டாகிய) கேண்மை - சிநேகமானது, (இடம்பெ

1 உற்றார் போன்று - சிநேகிதர்போலிருந்து

2 அவர்மனம் - பெண்பாலாரின்மனம்.

3 வளையாபதி இதன்பொருள் பெண்களினுடைய மனத்தை வேறுபடுதலில்லாமல் ஒருதன்மையதாகச் செய்வேன் என்று கூறுகின்ற ஆராய்ச்சியில்லாத ஒருவன் என்பது,

"மடந்தையர் வதன நல்ல மதியென மாற்றம் வாநோ
கடைந்தவா ரமுத மென்னக் கவினுமென் றுலு முள்ளம்
விடங்கொடு புரிந்த வாள்போல வெங்கொலை விரும்பு மந்த
அடங்கலா மனஞ்செல் வண்ண மாரறிந் தறைய கிற்பார்"

என்று பாகவதம் கூறுவதும்,

"பெண்ணெனப் படுவ கேண்மோ பீடில பிறப்பு நோக்கா
வுண்ணிறை யுடைய வல்ல வொராயிர மனத்த வாகும்"

என்று சீவக சிந்தாமணி கூறுவதும் இக்கருத்தினவாம்.

ந்ற)கள் - டெண்டாலா ந, டனம்போல மனதுபோன்று, வேறுபடு-வேறுமையுடைபும, எ-று.

சிநேகம் வேறுபடுத்லாகது இடம் பெற்றால பழைப்பகையே யாகுதல. இவை இரண்டொடாலும் கூடா நட்பினது குற்றம சொல்லப்பட்டது

(க - து.) உறவாளர்போல நடித்து உறவாகாதவர் நட்பானது பெண்களது மனம்போல வேறுபட்டிருக்கும் எனபது (உ)

௩. பலநல்ல கற்றக் கடைத்து மனநல்ல
ராகுதன மாணாக கரிது.

பரி —(இ - ள்) நல்லன பலநூல்களைக கற்றவிடத்தும அதனுன் மனந் திருந்தி நடபாதல் பகைவாக கில்லை, எ-று

நல்லன - மனக்குற்றங் கெடுப்பன [1]மனநல்லரெனச் சினைவினை முதன மேனின்றது நல்லராகுதல [2]செற்றம விடுதல உள்ளே செற்றமுடையாரைக கலவி புடைமைபற்றி நட்டென்று கருதற்க வெனபதாம

தெளி —(இ - ள்) நல்ல - நல்லவையாகிய, பல - பலநூல்களை, கற்றக கடைத்தும - கற்றவிடத்தும், (அதனுல்)மனநல்லராகுதல-மனந்திருந்தி நடபினராகுதல, மாணுர்க்கு - பகைவர்க்கு, அரிது - இல்லை, எ-று

நல்லவை-மனக்குற்றங் கெடுப்பவை மனநல்லர் என மனமென்னும சினையின் தொழில் முதலமேல நின்றது நல்லராகுதல - கோபமவிடுதல, உள்ளே கோபமுடையரைக கலவியுடைமைபற்றி நட்பென்று எண்ணலாகாதென்பதாம.

(க - து) கூடா நட்பினர் நல்லநூல்களைக் கற்றாராயினும அவர் மனந்திருந்தி நடபினையுடைய ராதலில்லை என்பது. (௩)

௪, முகத்தி னினிய நகாஅ வகத்தின்னு
வஞ்சரை யஞ்சப படும.

பரி —(இ - ள்) கண்டபொழுது முகத்தால் இனியவாகச சிரித்து எப்பொழுதும் மனத்தா லின்னாராய வஞ்சரை அஞ்சல்வேண்டும், எ - று

நகையது வகைபற்றி 'இனிய' என்றும, அகத்துச், செற்றம் நிகழவும் அதற்கு மறுதலையாய நகையைப்புறத்து விளைத்தலின்'வஞ்சர்'என்றும், 'அச்செ

---

1 மனமாகிய சினையினது நன்றாகுதலாகிய வினை பகைவரென்னும முதலின் மேல நின்றது. அஃதாவது சினைவினையை முதலினமேலேற்றி (மனநன்மையாகுதல் என்று கூறுது) மனநல்லர் என்று கூறப்பட்ட தெனபது.

2 செற்றம விடுதல் - மனத்தின்கண் கொண்டிருந்த தீராத கோபத்தை யொழித்தல

பட்டு1 குறிப்பறிதற்குக் கருவியாய முகத்தானுந் தோன்றுமையின் 2 'அஞ்சப்படும்' என்றுங் கூறினார். இவை இரண்டு பாட்டானுங் குற்றத்திற் கேதுவாய 3 அவர் கொடுமை கூறப்பட்டது.

தெளி —(இ - ள) (கண்டபோது) முகத்தின - முகத்தால், இனிய - இனிமையுள்ளவராக, நகாஅ - சிரித்து அகத்து-மனத்தால, இன்னு - (எப்பொழுதும்) இனியராகாத, வஞ்சரை - அஞ்சப்படும் - அஞ்சலவேணடும, எ-று.

நகையதுவகைபற்றி 'இனிய' என்றும், மனத்திலே கோபம தோன்றுகிறதாவும் அக்கோபத்திற்கு விரோதமாகிய நகையைப புறத்திலே காட்டலால் 'வஞ்சர்' என்றும், அக்கோபம குறிப்பறிதற்குச் சாதனமாகிய முகத்தாலும தோன்றுமையால 'அஞ்சப்படும்' என்றும சொலலினார் இவை இரணடு பாட்டாலும குற்றத்திற்குக் காரணமாகிய அவர கொடுமை சொலலபபட்டது.

(க - து) வெளிக்கு முகமலர்ந்து நகைத்து உளளே பகைபாராட்டும் வஞ்சகருக்குப பயப்படவேணடும என்பது. (ச)

௫. மனத்தி னமையா தவரை யெனைத்தொன்றுஞ்
சொல்லினாற் றேறற்பாற் றன்று

பரி —(இ - ள) மனத்தாற் றம்மொடு மேவாதாரை யாதொரு கருமத்தின் கண்ணும் சொலலாற் றெளிதன் முறைமைத் தன்றென்று சொலலும நீதிநூல, எ-று

நீதிநூ லென்பதுஅவாய் நிலையான்வந்தது பகைமை மறைத்தற்பொருட்டுச் சொலலுகின்ற வஞ்சனைச் சொல்லைச் செவ்விய சொல்லெனக் கருதி 4 அவரைக் கருமங்களிற்றெளிதல் நீதிநூன்முறைமை யன்றெனபதாம

தெளி —(இ - ள) மனத்தின் - மனத்தால, அமையாதவரை -(தம்மோடு) பொருந்தாதவரை, எனைத்தொன்றும - யாதொரு கருமத்திலும், சொலலினால்—தேறற்பாற்றன்று - தெளிதன் முறைமையது அன்று, (என்றுநீதிநூல் சொல்லும) எ - று

நீதிநூல் என்பது அவாய் நிலையால் வந்தது பகைமையை மறைத்தற் பொருட்டுச் சொல்லுகின்ற வஞ்சனைச்சொலலை நல்ல சொல்லென நினைத்து அவரைக் கருமங்களிலே தெளிதல நீதிநூலின்முறைமை அன்றெனபதாம்.

(க - து.) மனம வேறுபட்டவரது சொற்களை நம்பலாகாது என்பது

---

1 குறிப்பறிதலாவது பிறர் நினைத்திருப்பதை அவர் சொல்லாமலே தெரிந்து கொள்ளுதல்

2 அஞ்சுதல் செய்யப்படும் என்றும் பாடமுண்டு.

3 அவர் - கூடா நட்பினர். 4 அவரை - கூடா நட்பினரை.

சு நட்டார்போ னல்லவை சொல்லினு மொட்டார்சொ
ல்லொல்லை யுணரப் படும்.

பரி—(இ-ள்) நட்டாரபோல நன்மை பயக்குஞ் சொற்களைச் சொன்னாராயினும் பகைவர் சொற்கள் 1 அது பயவாமை அச்சொல்லிய பொழுதே யறியப்படும், எ-று

சொல்லினு மெனவே, 2 சொல்லாமையே பெற்றும் ஒட்டாராதலாற் றீமை படத்தல் ஒருதலை யெனபார 'ஒல்லை யுணரப்படும்' என்றார்

தெளி.—(இ-ள்) நட்டார்போர் - நட்பினர்போல், நல்லவை - நன்மைதருஞ் சொற்களை, சொல்லினும் - சொன்னாரானும, ஒட்டார்சொல - பகைவர் சொற்கள், (அதுதாராமை) ஒல்லை - விரைவிலே (அச்சொல்லியபொழுதே யென்றபடி) உணரப்படும் - அறியப்படும், எ-று

சொல்லினும எனவே, அவா அவைசொல்லாமையே பெற்றும், பகைவராதலால் தீமை தருதல நிச்சயமெனடார 'ஒல்லை யுணரப்படும்' என்றார்.

(க-து) சினேகிதர்போன்று பகைவர் நலந்தருஞ் சொற்களைச் சொன்னாராயினும அச்சொற்கள் நலந்தரா வெனபது (சு)

எ. சொல்வணக்க மொன்னார்கட் கொள்ளற்க வில்வணக்கந்
தீங்கு குறித்தமை யான்

பரி—(இ-ள்) வில்லினது வணக்கம் 3 ஏற்றவர்க்குத் தீமை செய்தலைக் குறித்தமையால பகைவர் மாட்டுப் பிறக்குஞ் சொல்லினது வணக்கத்தையும் தமக்கு நன்மை செய்தலைக் குறித்ததென்று கருதற்க, எ-று

தம்வணக்க மன்றெனபது தோன்றச் 'சொல்வணக்கம' என்றும், வில்வணக்கம வேறாயினும் வணங்குதலொப்புமைபற்றி அதனைக் குறிப்பை ஏதுவாக்கியுங் கூறினார், 4 வில்லியது குறிப்பு அவனுடைய வில்வணக்கத்தின்மேனிற்றலான், ஒன்னாரது குறிப்பும் அவருடைய சொல்வணக்கத்தின் மேலதாயிற்று. 5 இதுவுந் தீங்கு குறித்த வணக்கமென்றே கொண்டஞ்சிக் காக்கவென்பதாம. இவைமூன்று பாட்டானும் 6 அவரைச் சொல்லாற் றெளியற்க வென்பது கூறப்பட்டது.

தெளி—(இ-ள்) வில்வணக்கம் - வில்லினது வணக்கம, தீங்கு - (ஏற்றவர்க்குத்) தீமை செய்தலை, குறித்தமையான் - குறித்தமையால், ஒன்னார்கண் - பகைவரிடத்தே(பிறக்கும), சொல் வணக்கம் - சொல்லினது வணக்கத்தையும், கொள்ளற்க (தமக்கு நன்மைசெய்தலைக் குறித்ததென்று) நினையாதிருக்கக்கடவர், எ-று.

---

1 அது பயவாமை - நன்மையை யுண்டாக்காமை,

2 சொல்லாமையே - நன்மையைத் தருஞ் சொற்களைச் சொல்லாமையே

3 ஏற்றவர்க்கு - எதிர்த்தவர்களுக்கு.

4 வில்லியது குறிப்பு - வில்லை யுடையவனது கருத்து

5 இதுவும் - சொல் வணக்கமும். 6 அவரை - கூடா நட்பினரை

"நின்றெனபது" அரசர்க்கிடென்பதும் அவாய் நிலையால வந்தன உள்ளொன்று புறமொன்றாதல ஒருவனுககுத் தகாதாயினும் பகைவரிடத்தாலை தகுமெனபது நீதிநூலின துணிவெனடார், அதன்மேல் வைத்துச்சொலலினாா சால என்பதிசா என்றுயிற்று என்றுவாரைப் புல்லெனக் கூட்டுக.

(க - து) வெளிக்குச் சினேகம் பாராட்டி யுள்ளே தமமை யிகழ்ந்தொழுகும பகைவரைத் தாமுமவவாறு சிநேகித்தொழுகல வேணடும என்பது. (௯)

௯௦ பகைநட்பாங் காலம் வருங்கால முகநட்
டகநட் பொரீஇ விடல்.

பரி —(இ - ள்) தமபகைவா நமக்கு நட்டாரா யொழுகுங்காலம வந்தால் தாமும அவரோடு முகத்தால நட்புச்செயது அகத்தால [1] அதனைவிட்டு பின [2] அதுவுந் தவிாக, எ-று.

அக்காலமாவது தம்மாலும பகையென்று வெளிபபட நீககலாகாத வளவு. இதனானே ஆமளவெலலாம நீக்குகவென்பது பெற்றாம் இவை யிரணடு பாட்டானும் [3] அகநட்பிடை யொழுகுமாறு கூறப்பட்டது

தேளி —(இ - ள்.) பகை - (நமது) பகைவர், நட்பாங்காலம - (தமககு) நட்பினராய் நடக்குங்காலம், வருங்கால - வந்தால, முகம - (தாமும) முகத்தால், நட்டு - (அவரோடு) நட்புசசெய்து, அகம - மனத்தால, நட்பு - அந்நட்பை, ஒரீஇ - நீக்கி, விடல - (பின அதுவும்) விடக்கடவர், எ-று

அக்காலமாவது தம்மாலும் பகையென்று வெளிபபட நீககக்கூடாத து. இதனாலே கூடுமளவெல்லாம் நீக்குகவென்பது பெறறும இவை யிரண்டு பாட்டாலும் அகநட்பிடத்து நடக்குமவிதம சொலலபபட்டது.

(க - து.) பகைவர் நட்பினராலுும அவர் நட்பைத் தம்மாலானவரையும் நீக்கவேண்டும் எனபது. (௰)

——— (௦). ———

## ௮௪ - ம் அதி.—பேதைமை.

பரி —இனி [4] அகநட்பினை யெதிாமறுத்துப் பகை முகத்தாற கூறிய தொடங்கினர். அப்பகைதான் முற்றக்கடியுங் குற்றமன்மையி னுளவாய

---

1 அதனை-நட்பினை 2 அதுவும்-முகத்தால பகைவருடன சிநேகஞ்செய்தலும

3 அக்நட்பிடை - கூடா நட்பிடத்து.

4 அகநட்பை - பொறுக்கப்படாத குற்றமுடைமையினால விடத்தகுவதாகிய நிட்ப, கூடாநட்புகளை.

1 வெகுளியானும் காமத்தானும் வருவனவாம் 2 அவற்றுள் 3 வெகுளியான் வருவன ஐந்ததிகாரத்தானும் 4 காமத்தான் வருவன ஐந்ததிகாரத்தானும் கூறுவார், அவ்விரண்டற்கும் அடியாய மயக்கத்தை 5 இருவகைப்படுத்து, இரண்டதிகாரத்தாற் கூறுவான்றொடங்கி, முதற்கட் பேதைமை கூறுகின்றார் 6 அஃதாவது யாதுமறியாமை.

**தெளி** —இனி அகப்பகை எதிர்மறுத்துப் பகைமுகத்தாலே சொல்லத் தொடங்கினார். அப்பகைதான் முழுவதும் விடக்கூடிய குற்றம் அல்லாமையினால் உண்டாய குரோதத்தாலும் காமத்தாலும் வருவனவாய அவைகளுள் குரோதத்தால் வருபவை ஐந்ததிகாரத்தாலும் காமத்தால் வருபவை ஐந்ததிகாரத்தாலும் சொல்லுவார், அவ்விரண்டற்குங் காரணமாகிய மயக்கத்தை இருவகைப்படுத்தி, இரண்டதிகாரத்தாலே சொல்லத்தொடங்கி, முதலிலே பேதைமை சொல்லுகிறார் 6 அஃதாவது யாதொன்றும் அறியாமை.

க. பேதைமை யென்பதொன் றியாதெனி னேதங்கொண்
டூதியம் போக விடல்.

**பரி** —(இ - ள்) பேதைமையென்று சொல்லப்படுவது ஒருவனுக்கு ஏனைக் குற்றங்களெல்லாவற்றினும் மிக்கதொன்று, அதுதான் யாதென்று வினவின், தனக்குக் கேடு பயப்பனவற்றைக் கைக்கொண்டு ஆக்கம் பயப்பனவற்றைக் கைவிடுதல், எ-று

கேடு - வறுமை, பழி, பாவங்கள் ஆக்கம் - செல்வம், புகழ், அறங்கள் தானே தன் 7 இருமையுங் கெடுத்துக் கோடலென்பதாம்

---

1 வெகுளியும் (கோபமும்) காமமும் (இச்சையும்) பகைவர் முதலியோரிடத்தும் மனைவி முதலியோரிடத்தும் முறையே சந்தர்ப்பநோக்கிச் செலுத்தவேண்டுவனவா யிருத்தலால் அவை முற்றக்கடியுங் குற்றமல்லவாயின வெனக்

2 அவற்றுள் - வெகுளி காமமென்னு மிரண்டனுள்.

3 மனுதரும சாஸ்திரம் ஏழாமத்தியாயத்தில் "கோபத்தாலுண்டான எட்டுத் துக்கங்களாவன —கோள், துணிவு, துரோகம், பொறாமை, பிறன் குணத்தைச்சகியாமை, ஒருவன் பொருளை யபகரித்தல், காரணமின்றி யடித்தல், திட்டுதல் ஆக எட்டு" என்று கூறுகின்றது.

4 ஷை ஷை அத்தியாயத்தில் "காமத்தாலுண்டான பத்துத் துக்கங்களாவன— வேட்டையாடுதல், சூதாடுதல், பகலிற்றூங்குதல், வம்பளத்தல், ஸ்திரீலோலனாயிருத்தல், குடித்தல், பாட்டு, கூத்து, வாத்தியமிவைகளில் விருப்பமுள்ளவனாயிருத்தல், வீணேதிரிச்சல் ஆகப்பத்து" என்று கூறுகின்றது

5 இருவகைப்படுத்து - பேதைமை, புல்லறிவாண்மை யென இரண்டுவகைப்ப

6 அஃதாவது - பேதைமையாவது, யாதுமறியாமை - செய்வன தவிர்வனவறியாமை.

7 இருமை - இம்மை, மறுமை

(தெளி — இ - ள்) பேதைமையென்பது - பேதைமை யென்று சொல்லப்படுவது, ஒன்று - (ஒருவனுக்கு மற்றைக் குற்றங்களெல்லாவற்றிலும் மிகுந்த) ஒன்று, யாதெனின் - (அதுதான்) யாதென்று கேட்டால், ஏதங்கொண்டு - (தனக்குக்) கேடுதருமவைகளைக் கைக்கொண்டு, ஊதியம் - ஆக்கந்தருமவைகளை, போகவிடல் - கைவிடுதல், எ-று

கேடு - வறுமை, பழி, பாவங்கள் ஆக்கம் - செல்வம், புகழ், அறங்கள் தானே தன்னிருமைப் பயனும் கெடுத்துக்கொள்ளுதலென்பதாம்

(க-து) பேதைமையாவது தீமைதருவனவற்றைக் கைக்கொண்டு நன்மைதருவனவற்றைக் கைவிடுதலாம் என்பது. (க)

உ. பேதைமையு ளெல்லாம் பேதைமை காதன்மை
கையல்ல தன்கட் செயல்

பரி —(இ - ள்) ஒருவனுக்குப் பேதைமை யெல்லாவற்றுள்ளும் மிக்க பேதைமையாவது தனக்காகாத ஒழுக்கத்தின்கட் காதன்மை செய்தல், எ-று

1 இருமைக்கும் ஆகாவென்று நூலோர் 2 கடிந்த செயல்களை விரும்பிச் செய்தலென்பதாம். இவை யிரண்டுபாட்டானும் பேதைமைய திலக்கணங் கூறப்பட்டது

தெளி —(இ - ள) (ஒருவனுக்கு) பேதைமையுளெல்லாம்-பேதைமையெல்லாவற்றிலும், பேதைமை - மிகுந்தபேதைமையாவது, கையல்லதன்கண்- (தனக்கு ஆகாத செய்கையில், காதன்மை - ஆசையை, செயல்,செய்தலாம் எ-று

இருமைக்கும் ஆகாவென்று நூலோர் கடிந்தசெயல்களை விரும்பிச் செய்தலென்பதாம், இவை இரண்டுபாட்டாலும் பேதைமையது இலக்கணம் சொல்லப்பட்டது.

(க - து.) அறியாமையிலும் அறியாமையாவது தனக்காகாத காரியத்தை விரும்பிச் செய்தலாம் என்பது. (உ)

ங. நாணாமை நாடாமை நாரின்மை யாதொன்றும்
பேணாமை பேதை தொழில்.

பரி.—(இ - ள்.) நாணவேண்டுமவற்றுக்கு நாணாமையும் நாடவேண்டுமவற்றை நாடாமையும் யாவர்மாட்டும் முறிந்தசொற்செயலுடைமையும் பேணவேண்டுமவற்றுள் யாதொன்றனையும் பேணாமையும் பேதையது தொழில், எ-று

நாணவேண்டுமவை - பழி பாவங்கள் 3 நாடவேண்டுமவை - கருமங்களிற் செய்வன தவிர்வன. முறிதல் - 4 கண்ணறுதல். 5 பேணவேண்டுமவை-

1 இருமைக்கும் - இம்மைக்கும் மறுமைக்கும் 2 கடிந்த - விலக்கிய
3 நாடவேண்டுமவை - ஆராயத்தக்கவை.
4 கண்ணறுதல் - தாட்சண்ணியமில்லாமை
5 பேணவேண்டுமவை - விரும்பத்தக்கவை

குடிப்பிறப்பு, கல்வி, ஒழுக்க முதலாயின இவை பேதைக்கு எஞ்ஞான்று மியலாய் வருதலின் 'தொழில்' என்றார்

தெளி —(இ - ள்) நாணாமை - (நாணவேண்டுமவைகளுக்கு) நாணாமையும், நாடாமை - (நாடவேண்டுமவைகளை) நாடாமையும், நாரின்மை - (யாவரிடத்தும்) முறிந்த சொற்செயலுடைமையும், யாதொன்றும் - (பேணவேண்டுமவைகளுள்) யாதொன்றையும், பேணாமை - பேணாமையும், பேதைதொழில், மூடனது தொழில்களாம், எ-று

நாணவேண்டுமவை - பழிபாவங்கள் நாடவேண்டுமவை - கருமங்களிலே செய்வன [விதி] தவிர்வன (விலக்குகள்) முறிதல - கண்ணறுதல பேணவேண்டுமவை - குடிப்பிறப்பு கல்வி, ஒழுக்க முதலாயின, இவை பேதைக்கு எஞ்ஞான்றும் இயல்பாய வருதலாலே 'தொழில்' என்றார்

(க - து.) மூடனது தொழில் நாணாமை முதலியவைகளாம என்பது. (௩)

௪. ஓதி யுணர்ந்தும் பிறர்க்குரைத்துந் தானடங்காப்
பேதையிற் பேதையா ரில்.

பரி.—(இ - ள்) மனமொழி மெய்களடங்குதற் கேதுவாய நூல்களை யோதியும், அவ்வடக்கத்தான் வரும் பயனை யுணர்ந்தும், 1 அதனை யறிய வூறப் பிறர்க்குரைத்தும், தான் 2 அவை யடங்கி யொழுகாத பேதைபோலப் பேதையார் உலகத்தில்லை, எ - று.

3 உம்மை முன்னுங் கூட்டப்பட்டது இப்பேதைமை தனக்கு 4 மருந்தாய 5 இவற்றான் நீராமையானும் வேறு மருந்தின்மையானும 'பேதையிற் பேதையாரில்' என்றார். இவை இரண்டுபாட்டானும் பேதையது தொழில் பொதுவகையாற் கூறப்பட்டது. இனிச் சிறப்புவகையாற் கூறுப.

தெளி.—(இ - ள்) ஓதி - (மனமொழிமெய்கள் அடங்குவதற்குக் காரணமாகிய நூல்களை) ஓதியும், உணர்ந்தும் - (அவ்வடக்கத்தால் வரும் பயனை) அறிந்தும், பிறர்க்கு உரைத்தும் - (அதனை யறியும்படி பிறர்க்குச்) சொல்லியும், தான் அடங்கா - தான் (அவை) அடங்கி நடவாத, பேதையின் - மூடன்போல், பேதையார் - மூடர், இல-(உலகில்) இல்லை, எ-று.

---

1 அதனை - மனோவாக்குக் காயமென்னும திரிகரணங்களும் அடங்குதலால் வரும் பயனை.

2 அவை - மனமொழி மெய்கள்.

3 உணர்ந்தும் என்பதிலுள்ள உம்மையை ஓதி யென்பதனோடுங் கூட்டி ஓதியும என் றுரைக்கப்பட்டது

4 மருந்தாய - பரிகாரமான.

5 இவற்றால் - ஓதுதல உணருதல பிறர்க்குரைத்தலென்னு மிவைகளால்.

உடைமை ஒறி என்பதனுடனுங் கூட்டப்பட்டது. இப்பேதைமை தனக்கு பருப்பாகிய இவைகளாலே நிராமையாலும் வேற்றுமையாக நிலவாமையாலும் 'பேதைபிற பேதையாரில்' என்றார் இவை யிரண்டு பாட்டாலும் பேதையது தொழில் பொதுவகையால் சொல்லப்பட்டது இனிச் சிறப்புவகையாற் கூறுவர்

(க - து) ஓதுதலு முணர்தலு முரைத்தலு முடையராகித் தாமடங்காமலிருப்பவர் மூடரிற் சிறந்தவராவார் என்பது. (௪)

௫. ஒருமைச் செயலாற்றும் பேதை யெழுமையுந்
தான்புக் கழுந்து மளறு

பரி —(இ - ள்) பேதையாயினான் வரும் பிறவிகளெல்லாந் தானபுக்கழுந்தும் நிரயத்தினை இவ்வொரு பிறப்புள்ளே செயதுகொள்ள வல்லனும், எ-று

1 எல்லாப் பிறப்பும் ஏழாயடங்குதல அறியப்பட்டமையின, முற்றும்மை கொடுத்தார அழுந்தும் நிரயம் - அழுந்துதற்கிடனாய நிரயம ஈண்டைப் பிறப்புக்களினுங் 2 கொடுவினை வயத்தால் அந்நிரயத் துன்பமே யுழந்து வருதலின 'எழுமையுந் தானபுக்கழுந்து மளறு' என்றார முடிவில காலமெல்லாம் தான் நிரயத்துன்ப முழத்தற் கேதுவாகக் கொடுவினைகளையே யறிந்து சிலகாலத்துள்ளே செயதுகோடல பிறாக் கரிதாகலின 'ஆற்றும்' என்றார். இதனான் 3அவன மறுமைச்செயல் கூறப்பட்டது

தெளி —(இ - ன்) பேதை - மூடனானவன், எழுமையும் - வரும பிறவிகளி லெல்லாம், தான் புக்கு - தான் புகுந்து, அழுந்தும்-அழுந்துதற்கிடமாகிய, அளறு - நரகத்தை, ஒருமை - இவ்வொரு பிறப்புள்ளே, செயலாற்றும்- செயதுகொள்ள வல்லவனாவான், எ-று

எல்லாபபிறப்பும ஏழாய அடங்குதல் அறியப்பட்டமையினால்'எழுமையும்' என்று முற்றும்மைகொடுத்தார இவ்விடத்துப்பிறப்புகளிலும கொடுவினைவசத்தால அந்நரகத்துன்பமே அனுபவித்து வருதலால 'எழுமையுந் தான்புக்கழுந்து மளறு' என்றார். முடிவில்லாத காலமெல்லாம (நெடுங்காலம்) தான நரகத்துன்பம் அனுபவித்தற்குக் காரணமாகிய கொடுவினைகளையே அறிந்து சிலகாலத்துள்ளே செயதுகொள்ளுதல பிறர்க்கு அரிதாதலால 'ஆற்றும' என்றார் இதனால அவன் மறுமைச்செயல சொல்லப்பட்டது.

(க - து.) மூடனானவன இப்பிறப்பிலேயே இனிவரும் பலபிறப்புகளி லனுபவிக்கும துன்பங்களை யுண்டாக்கிக்கொள்ளுவான என்பது. (௫)

---

1 எழுவகைப் பிறப்பு - தேவர், மனிதர், விலங்கு (மிருகம்), பறவை, ஊர்வன (தவழ்வன), நீர்வாழ்வன, தாவரம் (மரமுதலியவை) என்பனவாம்.
2 கொடுவினை - தீவினை. 3 அவன் - பேதையாயினனது.

௬. பொய்படு மொன்றோ புனைபூணுங் கையறியாப்
பேதை வினைமேற் கொளின்

பரி —(இ - ள்) செய்யுமுறைமை யறியாதபேதை ஒருகருமத்தை மேற்கொள்வனாயின், 1 அதுவும் புரைபட்டுத் தானுந் தளைபூணும், எ-று

புரைபடுதல் - பின் ஆகாவகை 2 உள்ளழிதல் ஒன்றோவென்பது எண்ணிடைச்சொல் 3 அதனையுங்கெடுத்துத் தானுங்கெடுமென்பதாம். இதனால் 4 அவன்செல்வம் படைக்குமாறு கூறப்பட்டது

தெளி —(இ - ள்) கையறியா - செய்யுமுறைமையறியாத, பேதை - மூடனானவன், வினை - ஒருதொழிலை, மேற்கொளின் - மேற்கொள்வானானால், பொய்படும் - (அதுவும்) புரைபடும், ஒன்றோ - அது ஒன்றுதானோ, புனைபூணும் - (தானும்) தளைபூணும், எ-று.

புரைபடுதல் - பின் ஆகாதபடி உள்ளழிதல் ஒன்றோ என்பது எண்ணுட பொருளில் வந்த இடைச்சொல். அதனையும் கெடுத்துத் தானும் கெடுமென்பதாம் இதனால் அவன் செல்வம் படைக்கும் விதம் சொல்லப்பட்டது. தளை விலங்கு.

(க - து.) மூடன் தான் மேற்கொண்ட காரியத்தைக் கெடுப்பதோடு தன்னையுங் கெடுத்துக்கொள்ளுவான் என்பது. (௬)

எ. ஏதிலா ரார்த் தமர்பசிப்பர் பேதை
பெருஞ்செல்வ முற்றக் கடை.

பரி.—(இ - ள்.) பேதையாயினான் பெரிய செலவத்தைத் தெய்வத்தானெய்தியவழி, தன்னோடோரியைபுமில்லாதார் 5 நிறைய, எல்லாவியைபுமுடைய 6 தமராயினார் பசியாநிற்பர், எ-று.

எல்லா நன்மையுஞ் செய்துகோடற் கருவியென்பது தோன்றப் 'பெருஞ்செல்வம்' என்றும், 7 அதனைப்படைக்கு மாற்றலிலாமை தோன்ற 'உற்றக்கடை' என்றும், எல்லாம் பெறுதற்றோன்ற 'ஆர' என்றும், உணவும் பெறாமை தோன்றப் 'பசிப்பர்' என்றுங் கூறினார்.

தெளி —(இ - ள்) பேதை - மூடனானவன், பெருஞ்செல்வம் - பெரிய செல்வத்தை, உற்றக்கடை - (ஊழால்) அடைந்தவிடத்து, ஏதிலார் - (தன்னோடு) ஒருசம்பந்தமுமில்லாதவர், ஆர - நிறைய, தமர் - (எல்லாச் சம்பந்தமுமுடைய) தமமவராயினார், பசிப்பர் - பசியாநிற்பர், எ-று.

1 அதுவும் - அக்கருமமும். 2 உள்ளழிதல் - மனஞ்சோருதல்.
3 அதனையும் - மேற்கொண்ட கருமத்தையும், 4 அவன் - பேதை.
5 நிறைய - திருப்தியாயனுபவிக்க. 6 தமர் - சுற்றத்தார்.
7 அதனை - பெருஞ்செல்வத்தை.

எல்லாரனைப்பட செய்துகொள்ளற்குச் சாதனமென்பது தோன்ற 'பெருஞ்செல்வம்' என்றும், அதனைப் படைக்கும் வலிமை இல்லாமை தோன்ற 'உறற்கண்ணும்' என்றும், எல்லாம் பெறுதல் தோன்ற 'ஆர்' என்றும், உணவும் முறைமை தோன்றப 'படிட்டா' என்றும் சொல்லினார்

(க - து) அறிவினன் செல்வமடைந்தவிடத்து அயலார் சுகமடையச் சுற்றத்தார் துன்புறுவர் என்பது (எ)

அ. மையலொருவன் களித்தற்றாற் பேதைதன்
கையொன் றுடைமை பெறின்.

பரி —(இ - ள) பேதையாயினான் தன்கைக்கண்ணே ஒன்றனை யுடைமையாகப் பெறுவானாயின, [1] அவன் மயக்குதல் முன்னே பித்தினையுடையானொருவன் அம்மயக்கத்தின்மேலே மதுவுண்டு மயங்கினாற்போலும், எ-று

பெறினெனவே, தெய்வத்தாலன்றித் தன்னாற்பெறுமை பெறும் பேதைமையுஞ் செல்வக்களிப்பும் ஒருங்குடைமையால் அவன் செய்வன மையலும் [2] மதுக்களிப்பும் ஒருங்குடையான் செய்வனபோறம் [3] தலைதடுமாறுமென்பதாம் இவையிரண்டுபாட்டானும் அவன் செல்வமெய்தியவழிப் பயன்கொள்ளுமாறு கூறப்பட்டது

தெளி —(இ - ள்,) பேதை-மூடனானவன், தன்கை-தனதுகையிலே, ஒன்று-ஒருபொருளை, உடைமை - உடைமையாக, பெறின- பெறுவானானால, மையலொருவன - (அவனமயக்குதல் முன்னே) பித்தினையுடையான ஒருவன், களித்தற்று - (அம்மயக்கத்தின்மேலே) மதுவுண்டு மயங்கினாற்போலும், எ - று

ஆல் - அசை பெறின்எனவே, அவன் ஊழாலல்லாமல் தன்னாலே பெறுமைபெறும் பேதைமையும் செல்வக்களிப்பும் ஒருசேர உடைமையால அவன்செய்காரியங்கள் மையலும் மதுக்களிப்பும் ஒருசேரவுடையவன் செய்காரியங்களைப்போலே தலைதடுமாறுமென்பதாம் இவையிரண்டுபாட்டாலும் அவன் செல்வமடைந்தவிடத்துப் பயன்கொள்ளுமவிதம் சொல்லப்பட்டது

(க - து,) அறிவீனன பொருளைப் பெறுவானாயின மிகவும் மயங்குவன் என்பது (அ)

கூ. பெரிதினிது பேதையார் கேண்மை பிரிவின்கட்
பீழை தருவதொன் றில்.

பரி —(இ - ள்.) பின் பிரிவுவந்துழி அஃதிருவர்க்குந் தருவதொரு துன்பமில்லை; ஆகலாற் பேதையாயினார் தம்முட்கொண்ட நட்பு மிகவினிது, எ - று

---

1 அவன் - பேதை

2 மதுக்களிப்பு - மது(கள்)உண்டலாலுண்டாய மயக்கம்.

3 தலைதடுமாறும் - முறைபிறழும்.

1 நாடோறுந் தேய்ந்து வருதலின், துன்பந்தாராதாயிற்று. [2] புகழ்வார் போன்று பழித்தவாறு இதனால் அவரது நட்பின் குற்றங் கூறப்பட்டது.

தெளி.—(இ - ள்) பிரிவின்கண்-(பின்) பிரிவுவந்தவிடத்து, (அப்பிரிவு) தருவது - (இருவருக்கும்) தருவதாகிய, பீழையொன்று - ஒருதுன்பம், இல் - இல்லை, (ஆதலால்) பேதையார்-மூடராயினார், கேண்மை - (தம்முட்கொண்ட) நட்பு, பெரிதினிது-மிகவுமினிது, எ - று

நட்பு தினந்தோறும் தேய்ந்துவருதலால், துன்பந்தாராதாயிற்று புகழ்வார்போன்று பழித்தபடி இதனால் அவரது நட்பின்குற்றம் சொல்லப்பட்டது

(க - து) மூடரது சிநேகம் பிரிவினிடத்துத் துன்பந்தராமையின் பந்தரும் என்பது. (௯)

௪௦ கழாஅக்கால் பள்ளியுள் வைத்தற்றாற் சான்றோர்
குழாஅத்துப் பேதை புகல்,

பரி.—(இ - ள்) சான்றோரவையின்கட் பேதையாயினான் புகுதல் தூயவல்ல மிதித்தகாலை இன்பந்தரும் அமளிக்கண்ணே வைத்தாற்போலும், எ - று

3 கழுவாக்காலென்பது இடக்கரடக்கு 4 அதனால் அவ்வமளியும் இழிக்கப்படுமாறுபோல இவனால் அவ்வவையும் இழிக்கப்படுமென்பதாம் இதனால் 5 அவன் அவையிடை யிருக்குமாறு கூறப்பட்டது

---

1 "நுனிநீக்கித் தூரிற்றின் றன்ன தகைத்தரோ பண்பிலா, ஈரமி லாளர் தொடர்பு" என்று நாலடியார் கூறுவதிங்கறியத்தக்கது.

2 'பெரிதினிது பேதையார்கேண்மை' என்றுபுகழ்வார்போல (அறிவுடையவரது நட்புபோலப் பிரிவின்கண் துன்பந்தாராமைபற்றி) 'பிரிவின்கட் பீழைதருவதொன்றில்' என்று பேதையார்நட்பைப் பழித்தவாறுமெனக.

3 மலமிதித்தகால் என்று கூறாது கழாக்கால் என்று கூறினமையினால் இடக்கரடக்காயிற்று. இடக்கரடக்காவது நன்மக்களிடத்தே சொல்லத்தகாத சொல்லை, அவ வாய்பாடுமறைத்து வேறுவாய்பாட்டாற் சொல்வது இதுபற்றித் தொல்காப்பியம் "அவையல் கிளவி மறைத்தனர் கிளத்தல்" என்றும், பிங்கலந்தை "இடக்கர் மறைமொழி யெக்கருமாகும்" என்றும் கூறுவதிங்கறியத்தக்கது

4 அதனால் - கழுவாதகாலால்.

5 "கல்லாது நீண்ட வொருவ னுலகத்து, நல்லறிவாள ரிடைப்புக்கு மெல்ல, விருப்பினு மாயிருக் தற்றே யிராஅ, துரைப்பினு நாய்குரைத் தற்று" என்று நாலடியார் கூறுவது மிங்கறியத்தக்கதாம்

தெளி —(இ - ள்.) சான்றோர்-பெரியோரது, குழாத்து-சபையினிடத்து, பேதை - மூடனானவன், புகல-புகுதல, கழாஅககால-கழுவாதகாலை, [அசுத்தமி தித்தகாலையெனறபடி] பள்ளியுள்- (இன்பந்தருஞ்) சயனத்தினமேல், வைத் தற்று-வைத்தாற்போலும், எ - று

ஆல்-அசை. கழுவாககால என்பது இடக்கரடக்கர்ச்சொல அதனால அச் சயனமும இழிவுசெயயப்படும விதமபோல் இவனால் அசசபையும இழிவுசெ யயபபடுமென்பதாம. இதனால அவன் சபையிடத்து இருககும்விதம சொலலப பட்டது.

(க - து) மூடன் சானறோர் சபையில பிரவேசித்தல் பரிசுத்த மான இடததில் அபரிசுததபபொருள சேர்நதது போலாம என் பது. (ய)

——— (o) ———

## அரு - ம். அதி.—புல்லறிவாண்மை.

பரி.—இனி ஏனைப்புலலறிவாண்மை கூறுகின்றார 1 அது புல்லியவறிவி னையாடா றன்மையென விரியும். 2 அஃதாவது தான் சிறறறிவினனா யிருந் தே தன்னைப்பேரறிவினனாக மதித்து உயர்ந்தோர் கூறும 3 உறுதிச்சொற கொள்ளாமை.

தெளி.—இனி மறறைப புலலறிவாண்மை சொலலுகின்றார். அது புல் லிய அறிவை ஆளுதறறன்மையென விரியும். அஃதாவது தான சிறறறிவின னாயிருந்தே தனனைப பேரறிவினனாக மதித்து உயர்நதோர் சொலலும் உறு திச்சொலலைக் கொள்ளாமை.

க. அறிவின்மை யின்மையு ளின்மை பிறிதினமை
யினமையா வையா துலகு.

பரி.—(இ - ள் ) ஒருவனுக்கு இலலாமை பலவற்றுள்ளும் மிக்கவில்லா மையாவது அறிவில்லாமை, மறறைப்பொரு ளிலலாமையோவெனின, அதனை 4 அப்பெறறித்தாய இல்லாமையாகக கொள்ளார உலகத்தார், எ - று.

5 அறிவென்பது ஈணடுத் தலைமைபறறி நல்லறிவின்மேனின்றது. புல்ல

1 அது - புல்லறிவாணமை. 2 அஃதாவது - புல்லறிவாண்மையாவது.

3 உறுதிச்சொல் - நன்மையைத்தரும்சொல்.

4 அப்பெற்றித்தாய -அறிவில்லாமையான

"நுண்ணுணர் வின்மை வறுமை யஃதுடைமை, பண்ணப் பணைத்த பெருஞ் செல்வம்" எனறு நாலடியார கூறுவது மிங்கறியததககதாம்

5 அறிவுஎன்பது நலலறிவிறகும் புல்லறிவிற்கும பொதுவாயிருத்தல்பற்றி அப்பொதுமையைவிலக்கத் தலைமைபற்றியவழக்கால் 'அறிவென்பது ஈண் டுத்தலைமைபற்றி நல்லறிவின்மேனின்றது' எனறு கூறப்பட்டது.

றிவாளர் செல்வமெய்தியவழியும இம்மை மறுமைப்பயனெய்தாமையின் 1 அ தனை 'இன்மையுள்இன்மை' என்றும், நல்லறிவாளர் வறுமையெய்தியவழியும் 2 அஃதிழவாமையின் 3 அதனை 'இன்மையாவையாது' என்றுங் கூறினார் இத ஞற புல்லறிவினது குற்றங் கூறப்பட்டது

தெளி —(இ - ள்) இன்மையுள் - (ஒருவனுக்கு) இல்லாமைபலவற்றுள் ளும், இன்மை-மிகுந்த இல்லாமையாவது, அறிவின்மை-அறிவில்லாமை, பிறி தின்மை-மற்றைப் பொருளில்லாமையோவெனின,(அதனை) உலகு-உலகத்தார், இன்மையா-(அப்படிப்பட்ட)இல்லாமையாக, வையாது-கொள்ளார், எ - று.

அறிவென்பது இங்கே தலைமைபற்றி நல்லறிவின்மேல் நின்றது புல்ல றிவாளர் செல்வமடைந்தவிடத்தும இம்மை மறுமைப்பயனடையாமையால அ தனை 'இன்மையுள்இன்மை' என்றும, நல்லறிவாளர் வறுமையடைந்தவிடத்து ம் அப்பயனை இழவாமையால் அதனை, 'இன்மையாவையாது' என்றும் சொல் லினார் இதனால் புல்லறிவின் குற்றம் சொல்லப்பட்டது

(க - து) ஒருவனுக்கு அறிவில்லாமை தரித்திரமும் அஃதுண் மை செல்வமுமாம என்பது. (க)

உ. அறிவிலா னெஞ்சுவந் தீதல் பிறிதியாது
மில்லை பெறுவான் றவம.

பரி —(இ -ள்.) 4 புல்லறிவுடையான் ஒருவனுக்கு மனமுவந்து ஒன்று கொடுத்தல கூடிற்றாயின, 5 அதற்குக் காரணம பெறுகின்றவ னல்வினையே வேறொன்று மில்லை, எ - று

ஓரோவழி நெஞ்சுவந்தீதல் கூடலிற் புல்லறிவாளரும் நல்வினைசெய்ப, என்பார்க்குப் பெறுவான் 6 வீழ்பொருளெய்தியான்போல்வதல்லது இம் மை நோக்கியாக மறுமை நோக்கியாக ஈகின்றாரல்லரெனக் கூறியவாறு கூ டிற்றாயின் அதற்குககாரணம் என்னுஞ் சொற்கள் அவாய் நிலையான் வந்தன. இதனால அஃதுடையார் தம்மாட்டு நல்லன செய்தலறியாமை கூறப்பட்டது.

தெளி.— (இ - ள்) அறிவிலான் - புல்லறிவுடையவன், நெஞ்சுவந்து - மனமகிழ்ந்து, ஈதல் - (ஒருவனுக்கு ஒன்று) கொடுத்தல், (கூடியதானால அதற் குக்காரணம்) பெறுவான - பெறுகின்றவனது, தவம - நல்வினையே, பிறிதியா தும் - வேறொன்றும், இல்லை - எ-று.

---

1 அதனை - செல்வத்தை 2 அஃது - இம்மைமறுமைப்பயன்
3 அதனை - வறுமையை
4 புல்லறிவுடையான் - தாழ்ந்தபுத்தியையுடையவன்
5 அதற்கு - மனமுவந்து ஒன்று கொடுத்தற்கு.
6 வீழ்பொருள் - விழுந்துகிடந்ததொருபொருளை.

ஓரோரிடத்தே மனமகிழ்ந்து கொடுத்தல் கூடுமாயின் புல்லறிவாளரும் ஈகையின் செய்பவரென்பதற்குப் பெறுவான் பெரும்பொருள் அடைந்தவன் போலவதல்லாமல் இம்மை நோக்கியாவது மறுமை நோக்கியாவது கொடுக்கின்றாரல்லரெனச்சொல்லியபடி. இதனால் புல்லறிவுடையார் தம்மிடத்து நல்லவை செய்தலறியாமை சொல்லப்பட்டது.

(க - து) அறிவிலான் ஒருவனுக்கு ஒன்றைக்கொடுத்தற்குக்காரணம் பெறுகின்றவனது தவமன்றிப் பிறிதில்லை என்பது. (உ)

௩. அறிவிலார் தாந்தம்மைப் பீழிக்கும் பீழை
செறுவார்க்குஞ் செய்த லரிது.

பரி.—(இ - ள்) புல்லறிவுடையார் தாமே தம்மை வருத்தும் வருத்தம்[1] அது செய்தற்குரியராய தம்பகைவர்க்குஞ் செய்தலரிது, எ-று.

பகைவர் தாம் அறிந்தொன்றனைக் காலம்பார்த்திருந்து செய்வதல்லது வறுமை, பழி, பாவ[2] முதலிய பலவற்றையும் எக்காலத்துஞ் செய்யமாட்டாமையின்[3] அவர்க்குஞ் 'செய்தலரிது' என்றார். இதனால்[4] அவர் தம்மாட்டுத் தீயன செய்தலறிவரென்பது கூறப்பட்டது.

தெளி.—(இ - ள்) அறிவிலார் - புல்லறிவுடையவர், தாம் - தாமே, தம்மைப் பீழிக்கும் - தம்மைவருத்தும், பீழை - வருத்தம், செறுவார்க்கும் - (வருத்துதல் செய்தற்கு உரியராய தமது) பகைவர்க்கும், செய்தல் அரிது - செய்தல் முடியாது, எ-று.

பகைவர் தாம்அறிந்தஒருதீமையைக் காலம்பார்த்திருந்து செய்வதல்லாமல் வறுமை, பழி, பாவ முதலிய பலவற்றையும் எக்காலத்தும் செய்யமாட்டாமையால் அவர்க்கும் 'செய்தலரிது' என்றார். இதனால் அவர் தம்மிடத்துத் தீயவை செய்தலறிவரென்பது சொல்லப்பட்டது.

(க - து.) அறிவில்லாதவர் பகைவர் செய்தற்கரிய துன்பங்களையும் தாமே தமக்கு உண்டாக்கிக் கொள்ளுவர் என்பது. (௩)

௪. வெண்மை யெனப்படுவ தியாதெனி னொண்மை
யுடையம்யா மென்னுஞ் செருக்கு.

பரி.—(இ - ள்) புல்லறிவுடைமை யென்றுசொல்லப்படுவது யாதெனின்,[5] அது தம்மைத்தாமே யாம் நல்லறிவுடையமென்று நன்குமதிக்கும் மயக்கம், எ-று.

---

1 அது - வருத்தம்.
2 முதலிய என்றதனால் - பிறரால்அவமானமடைதல், காவலிலிருத்தல், அடிபடல், அபராதந்தருதல், பிறாக்கடிமையாதல் முதலியவைகளையும் கொள்க.
3 அவர்க்கும் - பகைவர்க்கும். 4 அவர் - அறிவிலார்.
5 அது - புல்லறிவுடைமை,

வெண்மையாவது அறிவுமுதிராமை. 1 ஒண்மையெனக் காரியப்பெயர் காரணத்திற்காயிற்று. உலகத்தார் இகழ்தல் அறிந்திருந்தும் 2 அவ்வாறு மதித்தலான் 3 மயக்கம் என்றார்.

**தெளி**.—(இ - ள்) வெண்மையெனப்படுவது-புல்லறிவுடைமையென்று சொல்லப்படுவது, யாதெனின்-யாதென்று கேட்டால், (அது) ஒண்மையுடையம் யாம் - (தம்மைத்தாமே) யாம் நல்லறிவுடையோம், என்னும் - என்று நினைக்கும் நிகழும், செருக்கு - மயக்கம், எ-று.

வெண்மை - இளமை அஃதாவது அறிவுமுதிராமை. ஒண்மை யென்னும் காரியப்பெயர் அதன் காரணமான நல்லறிவிற்காயிற்று. உலகத்தார் இகழ்தல் அறிந்திருந்தும் அப்படி மதித்தலால் மயக்கம் என்றார்.

(க - து) தம்மைத் தாமே உயர்த்திப் பேசிக்கொள்பவர் புல்லறிவாளராவ ரென்பது. (௪)

௫ கல்லாத மேற்கொண் டொழுகல் கசடற
வல்லதூஉ மையந் தரும்.

**பரி**.—(இ - ள்) புல்லறிவாளர் தாங்கல்லாத நூல்களையும் கற்றாராகத் தாம் மேலிட்டுக்கொண்டு ஒழுகுதல், 4 கசடறக் கற்றதொரு நூலுண்டாயின், 5 அதன் கண்ணும் பிறர்க்கு ஐயத்தை விளைக்கும், எ-று.

வல்லதென ஏழாவது இறுதிக்கண் தொக்கது. உண்டாயினென்பது அவாய்நிலையான் வந்தது. ஐயம் அதுவல்லரென்பதூஉம் இவ்வாறு கொல்லோ வென்பது.

**தெளி**.—(இ - ள்) (புல்லறிவாளர்) கல்லாத - (தாம்) கல்லாத நூல்களையும், மேற்கொண்டு - (கற்றவராகத்தாம்) மேலிட்டுக்கொண்டு, ஒழுகல் - நடக்குதல், கசடற - குற்றமற, வல்லதூஉம் - கற்றதொருநூல் (உண்டாயின்) அதனிடத்தும், (பிறருக்கு) ஐயம் - ஐயத்தை, தரும் - விளைக்கும், எ-று.

வல்லது என்பதனிறுதியில் ஏழனுருபு தொக்குநின்றது. உண்டாயினென்பது அவாய்நிலையால் வந்தது. ஐயம் இவர் அந்த நூலிலே வல்லவரென்பதும் இப்படித்தானிருக்குமோ வென்பது.

(க - து) புல்லறிவாளர் கல்லாத நூல்களையும் கற்றவராகப் பேசித் தாம்கற்ற நூல்களிலும் பிறர்க்கு ஐயத்தை யுண்டாக்குவ ரென்பது. (௫)

1 நன்மை யென்னும் பொருளதான ஒண்மை யென்னும் காரியப்பெயர் அவ்வொண்மைக்குக் காரணமான அறிவிற்கு ஆயிற்று, ஆகவே, இது காரியம் காரணமாய உபசாரவழக்கு. காரியவாகு பெயரெனினும் ஒக்கும்.
2 அவ்வாறுமதித்தலால் - தம்மைத்தாமே யாம் நல்லறிவுடையமென்று பாராட்டுதலால்.
3 செருக்கு என்றார் என்றும் பாடமுண்டு.
4 கசடற - சந்தேக விபரீதமில்லாமல்.
5 அதன்கண்ணும் - கசடறக்கற்ற நூலினிடத்தும்.

சு. அற்ற மறைத்தலோ புல்லறிவு தமவயிற்
குற்ற மறையா வழி

பரி—(இ - ள்.) புல்லறிவாளர் தங்களிடமுள்ள குற்றங்களையறிந்து [1] கடியாராயின், ஆடையால் அற்றமறைத்தாராகத் தம்மைக் கருதுதலும் புல்லறிவாம், எ-று.

குற்றமறைத்தலாவது [2] அவற்றை இலவாகச்செய்தல். மறைக்கப்படுவன பலவற்றுள்ளும் உயர்ந்தவற்றையெல்லாம் மறையாது தாழ்ந்ததொன்றனையே மறைத்து அவ்வளவால் தம்மையுமுலக வொழுக்கினராக மதித்தலும் புல்லறிவென்பதாம். இவை மூன்றுபாட்டானும் அவர் தம்மை [3] வியத்தற் குற்றங் கூறப்பட்டது.

தெளி.—(இ - ள்) (புல்லறிவாளர்) தமவயின் - தம்மிடத்து, (உண்டாகும்) குற்றம் - குற்றங்களை, மறையாவழி - (அறிந்து) கடியாரானால், அற்றம் - மறைக்கத்தக்க அவயவத்தை, மறைத்தலோ - (ஆடையால்) மறைத்தவராகத் தம்மை நினைத்தலும், புல்லறிவு - புல்லறிவாம், எ-று.

குற்றமறைத்தலாவது அவைகளை இல்லாமற்போகச்செய்தல் மறைக்கப்படுமவை பலவற்றிலும் உயர்ந்தவைகளையெல்லாம் மறையாமல் தாழ்ந்ததொன்றையே மறைத்து அவ்வளவால் தம்மையும் உலகநடையுள்ளவராக மதித்தலும் புல்லறிவென்பதாம் இவை மூன்று பாட்டாலும் அவர் தம்மை வியத்தற் குற்றம் சொல்லப்பட்டது.

(க - து) புல்லறிவாளர் தம்மிடத்துண்டாகும் குற்றங்களை ஒழிக்காமல் தம்மை நன்னடக்கையுள்ளவராகக் கருதுவரென்பது. (சு)

எ. அருமறை சோரு மறிவிலான் செய்யும்
பெருமிறை தானே தனக்கு.

பரி—(இ - ள்) பெறுதற்கரிய உபதேசப் பொருளைப் பெற்றாலும் உட்கொள்ளாது போகவிடும் புல்லறிவாளன் [4] அவ்வுறுதியறியாமையாற் றானே தனக்கு மிக்க வருத்தத்தைச் செய்துகொள்ளும், எ-று.

சோருமென [5] இடத்துநிகழ்பொருளின்றொழில் இடத்தின்மேனின்றது. மிக்கவருத்தம்-பொறுத்தற்கரிய துன்பங்கள் இனி அருமறைசோருமென்பதற

---

1 கடியாராயின - ஒழிக்காமற்போவாரானால்.

2 அவற்றை - தம்மிடத்துண்டாகும் குற்றங்களை.

3 வியத்தல் - உயர்த்திப்பேசுதல்.

4 அவ்வுறுதி - பெறுதற்கரிய வுபதேசப் பொருளாலடையும் நன்மை.

5 அறிவிலான் என்னும் இடத்து நிகழ் (இருக்கும்) (அருமறையென்னும்) பொருளின் சோருதலாகிய தொழில் அறிவிலான என்னும் இடத்தின்மேல நின்றது. மறையின சோருதற் றொழிலை அஃதுடையான மேலேற்றிக் கூறினமையால் இஃது இடத்து நிகழ்பொருளின தொழில இடத்தின மேலாய வுபசாரவழக்கு.

கும் பிறரெல்லாம் உள்ளத்தடக்கப்படும் எண்ணத்தை வாய்சோர்ந்து 'பிற ர்க்குரைக்குமென் றுரைத்தார். 1 அது 2 பேணாமையென்னும் பேதைமை யாவதன்றிப் புல்லறிவாண்மை யன்மை யறிக.

**தெளி**.—(இ - ள்) அருமை-பெறுதற்கரிய உபதேசப்பொருளை, சோ ரும்-(பெறினும்) உட்கொள்ளாதுபோக்கும், அறிவிலான் - புல்லறிவாளன், (அவ்வுறுதி அறியாமையால்) தானே தனக்கு—பெருமிறை - மிகுந்த வருத்த த்தை, செய்யும் - செய்துகொள்ளுவான், எ - று.

சோரும் என்று இடத்துநிகழ் பொருளின் தொழில் இடத்தின்மேல் நின்றது. மிகுந்தவருத்தம்-பொறுத்தற்கரிய துன்பம். இனி அருமறை சோ ரும் என்பதற்கு மற்றவரெல்லாம் மனத்தி லடக்கப்படும் எண்ணத்தை வாய் தவறிப் பிறர்க்குச் சொல்லுவான் என்று பொருள் கூறினர். அதுபேணாமை யென்னும் பேதைமையாவதல்லாமல் புல்லறிவாண்மை யாகாமையை யறிந்து கொள்க.

(க - து) பெரியோர் கூறிய உபதேசப் பொருளையறியாமையால் புல்லறிவாளன் தனக்குத்தானே மிக்க வருத்தத்தைச் செய்துகொள்ளு வான் என்பது. (எ)

அ. 3 ஏவவுஞ் செய்கலான் றான்றேறா னவ்வுயிர்
போஒ மளவுமோர் நோய்.

**பரி**.—(இ - ள்.) புல்லறிவாளன் தனக்குறுதியாயவற்றை அறிவுடையா ர் சொல்லாநிற்கவுஞ் செய்யான், அதுவன்றித் தானாகவும் இவை செய்வன வென்றறியான், அவ்வுயிர் யாக்கையி னீங்குமளவும் நிலத்திற்குப் பொறுத்த ற்கரிய தொருநோயாம், எ - று.

உயிர் தான் உணர்தற்றன்மைத்தா யிருந்தும் நின்ற யாக்கைவயத்தான் மருடற்றன்மைத்தாய் வேறுபடுதலின் 'அவ்வுயிர்' என்றும், 4 அதனினீங்கிய பொழுதே 5 அதற்கு 6 இரண்டனுளொன்று கூடுதலிற் 'போஒமளவும்' என்

1 அது - அவ்வாறுஉரைத்தல.

2 பேணாமை (விரும்பத்தக்கவையுள் யாதொன்றையும்) விரும்பாமை.

3 நன்னூல்விருத்தியுரைகாரர்'உவப்பினு முயர்வினும்' என்னும் சூத்திரத்தினு ரையில இக்குறளையுதாரணமாகக்காட்டி "செறலின்(கோபத்தினால்)உயர் திணை யஃறிணையாயிற்று" என்றனர் புல்லறிவாளனென்பது உயர்திணை. அவ்வுயிர் என்பது அஃறிணை.

4 அதனின் - உடம்பினின்றும் 5 அதற்கு - பூமிக்கு.

6 இரண்டனுள் ஒன்று கூடுதலின் - உயிர் உடலென்னு மிரண்டனுள் உடல் ஒன்றைப் பொறுத்தல் கூடுதலினால

றும், 1 குலமலை 2 முதலிய பொறுக்கின்ற நிலத்திற்குப் பாவயாகதை பெ ரும்பொறையாய்த் துன்பஞ் செய்தலின 'ஓர்நோய்' எனறும் கூறினர்

தேலி:—(இ - ள) (புல்லறிவாளன) ஏவவும - (தனக்கு உறுதியான வைகளை அறிவுடையார்) சொல்லா நிற்கவும, செய்கலான்-செய்யான், (அதுவ ல்லாமல்) தான்-தானாகவும், தேருன - (இவைசெய்பவையென்று) அறியான, அவவுயிர் - அந்தவுயிரானது, போமளவும்-(உடம்பைவிட்டுப)போமளவும, ஓர் நோய - (பூமிக்குப்பொறுத்தற்கரிய) தொருநோயாம், எ - று

உயிர் தான அறியுந்தனமையதாயிருந்தும் நின்ற தேகவசத்தால மயங்குந் தன்மையதாய வேறுபடுதலால 'அவவுயிர்' எனறும, அதனினீங்கியபொழுதே அதற்கு இரண்டினுள் ஒன்றுகூடுதலால் 'போமளவும்' எனறும, குலமலை முத லானவைகளைச் சுமக்கினற பூமிக்குப் பாவவுடம்பு பெருஞ்சுமையாயத் துன் பஞ்செய்தலால 'ஓர்நோய்' எனறும் சொலலினர்

(க - து.) புல்லறிவாளனுக்குப் பெரியோர்கூறிய காரியங்களைச செய்தலும நனமையான காரியங்களைத்தானே தெளிந்து செய்தலும இல்லை என்பது. (அ)

கூ. காணாதாற் காட்டுவான் றானகாணான் காணாதான
கண்டானாந் தான்கண்ட வாறு.

பரி —(இ - ள்) தன்னை எல்லாமறிந்தானாக மதித்தலாற பிறரால ஒன றறியுந்தனமை யிலாதானை அறிவிக்கப்புகுவான 3 அவனாற் பழிக்கப்பட்டுத் தான் அறியானாய்முடியும, இனிஅவவறியுந்தன்மை யிலலாதான 4 கொணடது விடாமையாற் றனறிந்தவாற்றால 5 அதனை அறிந்தானாய முடியும, எ - று.

புல்லறிவாளர்க்கு நல்லறிவு கொளுவுதல ஒருவாற்றானும் இயைவதன் றெனபதாம்.

தேலி —(இ - ள்.) (தன்னை எலலாமறிந்தவனாக மதித்தலால்) காணா தான்-(பிறராலஒன்றை)அறியுந்தனமையிலலாதவனை, காட்டுவான- அறிவிக்கப் புகுவோன், தான்காணான்-(அவனாலே பழிக்கப்பட்டுத) தான அறியாதவனாய் முடியும, காணாதான் - (இனி) அவ்வறியுந்தன்மை யிலலாதவன, (கொண் டதுவிடாமையால) தான்கண்டவாறு - தான் அறிந்தவிதத்தால், கண்டானாம - அதனை)அறிந்தவனாய முடியும, எ - று.

---

1 குலமலை - பெருமலை, அது மேருமலைமுதலானவைகளாம்.

2 முதலியஎன்றதனால குன்று, யாறு, காடு, நாடு முதலியவைகளையும கொள்க.

3 அவனால் - புல்லறிவாளனால்.

4 மூர்க்கனு முதலையும் கொண்டது விடா எனபதிங் கறியத்தக்கது.

5 அதனை - கொண்டதை.

புல்லறிவாளனுக்கு நலலறிவைவருவித்தல் ஒருவழியாலும் பொருந்துவ தன்றென்பதாம்.

(க - து) புலலறிவாளனுக்கு உறுதியானவைகளைச் சொல்லு வான அவனுல் பழிக்கப்பட்டவமான மடைவான என்பது. (கூ)

க0. உலகத்தா ருண 1 டென்ப திலலென்பான் வையத்
தலகையா வைககப படும்.

பரி—(இ - ள்) உயர்ந்தோா பலரும உணடென்ப தோர் பொருளைத் தன புல்லறிவா னிலலையெனறு சொல்லுவான் மகனென்று கருதபபடான்; வையத்துக காணபபடுவதோா பேயெனறு கருதபபடும, எ - று

கடவுளும், மறுபிறப்பும, இருவினைபபயனுமமுதலாக 2 அவர் உளவென பன பலவேனுஞ் 3 சாதிபற்றி 'உணடெனபது' எனறும், தானேவேணடியகூ றலால ஒபபும வடிவால் 4 ஒவவாமையு முடைமையிற றன்யாக்கை கரநது ம க்கள்யாககையுட் டோன்றுதலவலல'அலகை'என்றுங கூறினர் இவை நான்கு பாட்டானும் உறுதிசசொற் கொள்ளாமையது குறறங கூறபபடடது.

தெளி.—(இ - ள்) உலகத்தார - உயாந்தோர் பலரும், உணடென்பது - உண்டென்பதோர் பொருளை, இலலென்டான-(தன்புலலறிவால்) இல்லையென றுசொல்லுவோன, (மனிதனென்று நினைக்கபபடான்) வையத்து - பூமியிலே, அலகையா - (காணபபடுகிற) ஒருபேயெனறு, வைககபபடும - நினைககப்படு வான், எ - று

கடவுளும், மறுபிறப்பும், இருவினைப்பயனும் முதலாக அவர் உண்டென் பவை பலவாயினும் சாதியொருமைப்பற்றி 'உண்டெனபது' என்றும், தானே வேண்டியவை சொல்லலால் ஒபபாதலும, வடிவால் ஒவவாமையும்உடைமை யால் தன்னுடம்பைமறைத்து மக்களுடம்பிலே தோன்றுதல் வலல 'அலகை' என்றும் சொல்லினர். இவை நான்குபாட்டாலும் உறுதிச்சொலலைக் கொள் ளாமையினது குற்றம் சொல்லபபட்டது.

(க - து.) பெரியோருண்டென்பதை யிலலை யெனறு சொல்லு வோன் உலகத்தோராற் பேய் என்று நினைககப்படுவான் என்பது (ώ)

———(o):———

1 எனபது என்பது ஈறுதோன்றிய சாதியொருமைப்பெயர்.

2 அவா - உயாநதோர்

3 சாதி - சாதியொருமை.

4 ஒவ்வாமையும - ஒத்திராமையும்

## அசா ௯ம் அதி.— 'கல்.

பரி.—இனி 1 அவற்றான் வரும் வெகுளி காமங்களுள் அரசர்க்கு வெகுளி பெரும்பான்மைத்தாகலின், 2 அதனான் வருவனகூறுவான்றொடங்கி, முதற்கண் இகல் கூறுகின்றார். 3 அஃதாவது இருவர் தம்முட்பொருது வலிதொலைதற்கேதுவாய மாறுபாடு.

தெளி.—இனி அவைகளாலவரும் கோபம காமஙகளுள்ளே அரசருக்குக கோபம பெரும்பான்மையதாக இருபபதாகலின, அதனால் வருங்குறறஙகளைச சொலலத்தொடஙகி, முதலிலே இகல் சொல்லுகினறா அஃதாவது இருவர் தம்முள்ளே போா செயது வலிகுறைதற்குக காரணமாய மாறுபாடு.

க. இகலெனப வெலலா வுயிர்கடும் பகலெனனும்
பண்பின்மை பாரிக்கு நோய்.

பரி.—(இ- ள்) எல்லாவுயிர்கட்கும் பிறவுயிாகளோடு கூடாமையென்னுந் தீகுணத்தை வளாக்குங்குற்றம இகலென்று சொல்லுவா நூலோர், எ - று.

4 மக்களையும் விலஙகுகளோ டொப்பிபப தெனபது தோனற 'எலலாவுயிர்கடும' என்றும, 5 பகுதிக் குணத்தை இடை நின்று விளைததலிற 'பகலெனனும் பணபின்மை' என்றுங் கூறினா. 6 நறகுணமினமை அருததாபத்தியாற தீக்குணமாயிறறு இதனால் இகலது குற்றம கூறபபட்டது.

தெளி.—(இ - ள்) எல்லா வுயிாக்கும் - எல்லாவுயிர்களுககும், பகலெனனும் -(பிறவுயிாகளோடு) கூடாமை யெனனும, பணபின்மை-தீகுணத்தை, பாரிக்கும - வளர்கும, நோய - குற்றம, இகல்-மாறுபாடாம், எனப-என்று (நூலோர்) சொல்லுவர், எ- று.

மககளையும் விலங்குகளோடு ஒபபாக்குவதென்பது தோன்ற 'எல்லாவுயிர்க்கும்' எனறும், கூடாமையென்னும் தீக்குணததை நடுநின்று விளைததலால 'பகலெனனும பணபின்மை' என்றும் சொலலினா. [illegible]

---

1 அவற்றான் - பேதைமை புல்லறிவாண்மைகளால்.

2 அதனான் - வெகுளியால்

3 அஃது - இகல்

4 மாறுபாடானது நல்லறிவுடையவர்களையும பகுத்தறிவிலலாத விலஙகு (மிருகம) போலாககிவிடுதலால் மக்களுயி[illegible] [illegible] பபட 'எலலாவுயிாக்கும்' என்று கூறப்பட்டது. [illegible] ல மாறுபாடுடையார் விலஙகோ டொபபாவ ரென்பதாயிற் றென்க.

5 பகுதி - பிரிவு

6 பண்பின்மை - நற்குணமின்மை அஃதிங்கே அருத்தாபத்தியால தீகுணத்திற்காயிற்று; நற்குணமிலலாமை தீகுணமாயிருததலா லென்க.

படது அருந்தாபந்திபிறல திகருணமாயிறறு இதனல மாறுபாடடினது குற றம் சொல்லப்பட்டது

(க - து) யாவரிடததும நடபிலலாமையை வளர்க்கும் குற்றம மாறுபாடாகும எனபது. (க)

௨. பகலகருதிப பறறு செயினு மிகல் கருதி
யினனசெய் யாமை தலை.

பரி —(இ - ள்) தமமோடு கூடாமையைக் கருதி ஒருவன் வெறுபபன செய்தாறுயினும, அவனெடு மாறுபடுதலைக குறித்துத தாமவனுககு இன்னுத வற்றைச செயயாமை உயாநதது, எ-று

செய்யிற் பகைமை வளரத் தாந் தாழ்நதுவரலானும, 1 ஒழியின் அபப றறுதன தாமே யோயக்துபோகத தாம ஓங்கிவரலானும 'செயயாமை தலை' என்றா. 2 பறறுதவென்பது விகாரமாயிறறு

தெளி.—(இ - ள்) பகல் - (தம்மோடு) கூடாமையை, கருதி - நினைத்து, பற்று - வெறுப்பவைகளை, செயினும-(ஒருவன) செயதாறுயினும், இகலகருதி-(அவனெடு) மாறுபடுதலைக குறிதது, இன்ன - துன்பந்தருமவைகளை, செயயாமை - (தாம அவனுககுச்) செய்யாமை, தலை - உயாநதது, எ-று

துனபந தருமவைகளைச் செயதால் பகைமைவளரத் தாம் தாழநதுவருத லாலும், ஒழிநதால் அவ்வெறுபபவைகள் ஓய்நதுபோகந தாம்ஓங்கிவருதலாலு ம் 'செயயாமை தலை' என்றார் பற்றுத வென்பது விகாரத்தால் பறறு என்று யிற்று

(க - து) மாறுபாட்டினல் தமக்குககெடுதி செய்பவனுக்குத் தாமும் மாறுபட்டுக்கெடுதி செய்யாதிருத்தல் வேண்டும் என்பது. (௨)

௩. இகலெனனு மெவ்வநோய் நீககிற் றவலில்லாத்
தாவில் விளக்கந தரும்.

பரி.—(இ - ள்.) மாறுபாடென்று சொல்லப்படுகின்ற துன்பத்தைச் செய்யு நோயை ஒருவன் தன் மனததினின்று நீக்குமாயின அவனுக்கு அந்நீக்கு தல் 3 எஞ்ஞான்றும் உளனுதற கேதுவாய புகழைக் கொடுக்கும, எ-று

---

1 ஒழியின் - துனபந் தருமவைகளைச செயயா தொழிந்தால்.

2 பற்றுதன என்னும எதிாமறை வினையாலணையும பெயர் சாரியையும் விகுதி யும் தொக்கு நிற்கப பற்று என நின்றது

3 எஞ்ஞானறும உளனுதல் - உலக முள்ளளவும் புகழுடம்பினனு யிருத்தல்.

1 தவலிலலாமை அருத்தாபத்தியான அபபொருட்டாயிற்று 2 தாவில் விளக்கம் 3 வெளிபபடை. யாவரு நணடராவா, ஆகவே, எலலாச் செல்வமு மெயதிக்கொடை 4 முதலிய காரணஙகளாற் புகழுபெறு மென்பதாம

தேவி.—(இ - ள்.) (ஒருவன) இகலெனனும் - மாறுபா டெனறுசொல படுகின்ற, எவவம் - துன்பதனைச செய்யும், நோய் - நோயை, நீககின் - (த் மனத்திலிருந்து) நீக்குவானாயின், (அவனுக்கு அந்நீக்குதல) தவலிலலா-(எக்காலும) அழிவிலலாமைக்கு (உளளுதறகுக்) காரணமாகிய, தாவில விளக்கம் - புகழை, தரும் - கொடுக்கும், எ-று.

தவலில்லாமை யென்பது அருத்தாபத்தியால் எககாலும உள்ளுதல் என்னும் பொருளதாயிறறு புகழைத்தாவில விளககம் என்றது - வெளிபபடை. யாவருமா நண்பராவர், ஆகவே, எல்லாச செல்வமுமபெறறுக் கொடை முதலான காரணஙகளால புகழ்பெறுவா னென்பதாம.

(க - து) மாறுபாட்டை நீக்கி யிருபபவன் எபபொழுதும் புகழுடையவனாயிருபபன் என்பது (௬)

௪ இன்பத்து ளின்பம் பயக்கு மிகலெனனுந்
துன்பததுட் டுன்பங கெடின.

பரி—(இ - ள்.) மாறுபாடெனறு சொலலபபடுகினற துன்பஙகளெல்லாவறறினும் மிக்க துனபம ஒருவனுக் கில்லையாயின, அவவின்மை அவனுக் இனபஙகளெலலாவற்றினும மிகக வின்பத்தினைக் கொடுக்கும, எ-று

---

1 தவலிலலாமை(அழிதலிலலாமை)அருத்தாபத்தியினால் (இனமாகியபொருள்களிலே ஒனறை எடுத்துக் கூறிய சொல தனபொருட் கினமாகியபொருளைக் குறிப்பா லறிவிததலால்) அப்பொருட்டாயிற்று (எஞ்ஞான்று முளளுதல் என்னும் பொருளதாயிற்று)

2 தாவில்விளக்கம் - கெடுதலில்லாத புகழ. புகழாகிய விளக்கிற்கன்றி ஏனைய விளக்கிற்குக்கெடுதலில்லாமை யின்மையால் அவவிளக்கோடு இதனிடை வேறறுமைதோன்ற விளககெனவாளா கூறாது அடைகொடுத்துத் 'தாவில விளக்கம்' என்று கூறப்பட்டது புகழாகிய விளக்கு எக்காலும் உளது என்பது "ஒன்றா வுலகத் துயர்ந்த புகழல்லால், பொன்றாது நிறபதொன்றில்" என்னுங் குறளினு லறிக

3 வெளிப்படை - இயல்பாகவே பொருள் விளங்கி நிறகுஞ்சொல். அஃதீவது இயற்சொல். [தாவில விளக்கம் என்னும் சொல் இயல்பாகவே புகழ் என்னும் அருத்தத்தைக் காட்டிநின்றதெனபது.]

4 முதலிய என்றதனால் கல்வி, ஆணமை முதலியவைகளையும கொளக.

துன்பத்துள் துன்பம் - பலரோடு பொருது வலிதொலைதலான யாவர்க்கு மெளியனாதல். 1 அதனை இடையின்றியே பயத்தலின் 2 'இகலென்னும்' என்றார். இன்பத்துளின்பம் - யாவருக்குமினியனாதலின் எல்லாப்பயனும் எய்துதல்.

தெளி.—(இ - ள்) இகலென்னும் - மாறுபாடென்று சொல்லப்படுகின்ற, துன்பத்துள் - துன்பங்களெல்லாவற்றினும், துன்பம் - மிகுந்த துன்பம், கெடின் - (ஒருவனுக்கு) இல்லையாயின், (அவ்வில்லாமை அவனுக்கு) இன்பத்துள் - இன்பங்களெல்லாவற்றினும், இன்பம் - மிகுந்த வின்பத்தை, பயக்கும் - கொடுக்கும், எ-று.

துன்பத்துட் டுன்பம் - மாறுபாடுடையோன் பலரோடும் போர் செய்து வலிமை தொலைதலால் யாவர்க்கும் எளியவனாயிருப்பது. அதனை விரைவிலே தருதலால் 'இகலென்னும் துன்பத்துட் டுன்பம்' என்றார். இன்பத்துளின்பம் - மாறுபாடில்லோன் யாவருக்குமினியனாகலால் எல்லாப்பயனும் பெற்றிருப்பது.

(க - து.) மாறுபாடென்னும் குற்றத்தை யொழித்தவனுக்குப் பகைவரின்மையால் அவன் மிகு சந்தோஷமுடையவனாயிருப்பன் என்பது. (௪)

௫. இகலெதிர் சாய்ந்தொழுக வல்லாரை யாரே
மிகலூக்குந் தன்மை யவர்.

பரி.—(இ - ள்.) தம்முள்ளத்து மாறுபாடு தோன்றிய வழி அதனையேற்றுக்கொள்ளாது 3 சாய்ந்தொழுக வல்லாரை வெல்லக்கருதுந் தன்மையுடையார் யாவர், எ-று.

இகலை யொழிக்க தொழுகல் வேந்தர்க்கு எவ்வாற்றானும் அரிதாகலின் 'வல்லாரை' என்றும், 4 அவர் யாவர்க்கும் இனியராகலின் அவரைவெல்லக் கருதுவர் யாவரு மில்லை என்றுங் கூறினார். இவை நான்கு பாட்டானும் இகலாதார்க்கு வரும் நன்மை கூறப்பட்டது.

தெளி.—(இ - ள்) இகல - மாறுபாடு, (தம்மனத்திற் றோன்றிய விடத்து) எதிர்சாய்ந் தொழுகவல்லாரை - (அம்மாறுபாட்டினை ஏற்றுக்கொள்ளாமற்) சாய்ந்து நடக்க வல்லவனை, மிகலூக்கும் - வெல்ல நினைக்கும், தன்மையவர் - தன்மையை யுடையவர், யார் - யாவர், எ-று.

---

1 அதனை - எளியனாயுறுவதை.

2 இகலெனனுந் துன்பத்துட் டுன்பம் என்றும் பாடமுண்டு. இகலால் வரும் துன்பத்துட்டுன்பத்தை இகலென்னுந் துன்பத்துட்டுன்பமென்று அபேதப்படுத்திக்கூறினமையினால் இது காரணங் காரியமாய உபசார வழக்கு.

3 சாய்ந்து - தாழ்ந்து 4 அவர் - அவ்வல்லார்.

மாறுபாட்டை நீக்கி நடத்தல் வேந்தருக்கு எவ்விடத்தாலும் அரிதாகலால் 'வல்லாரை' என்றும், அவர் யாவர்க்கும் நட்பாகலால் அவரை வெல்ல நினைப்பவர் யாவரும் இல்லை என்றும் சொல்லினர். இவை நான்குபாட்டாலும் மாறுபடாதவர்க்கு வரும் நன்மை சொல்லப்பட்டது.

(க-து) மாறுபாட்டை நீக்கினவனுக்கு யாவரும் நட்பாயிருத்தலால் அவனை வெல்ல நினைப்பவர் ஒருவருமில்லை என்பது. (௫)

௬. இகலின் மிகலினி தென்பவன் வாழ்க்கை
தவலுங் கெடலு நணித்து.

**பரி** —(இ-ள்.) பிறரோடு மாறுபடுதற்கண் மிகுதல் எனக்கு இனிதென்று அதனைச் செய்வானது உயிர்வாழ்க்கை பிழைத்தலும் முற்றக்கெடுதலுஞ் 1 சிறிதுபொழுதுள் உளவாம், எ-று.

மிகுதல் - மேன்மேல் 2 ஊக்குதல். இனிதென்பது தான் வேறல் குறித்தல். பிழைத்தல் - வறுமையா னின்னுறுதல். முற்றக்கெடுதல் - இறத்தல். 3 இவற்றோடு நணித்தென்பதனைத் தனித்தனிகூட்டி, உம்மைகளை எதிரதும் இறந்ததுந் தழீஇய வெச்சவும்மையாக வுரைக்க. பொருட்கேடும் உயிர்க்கேடும் 4 அப்பொழுதே யுளவாமென்பதாம்.

**தெளி** —(இ-ள்) இகலின் - (பிறரோடு) மாறுபடுதலிலே, மிகல் - மிகுதல், இனிதென்பவன்-(எனக்கு) இனிதென்று (அம்மாறுபடுதலைச்) செய்பவனது, வாழ்க்கை - உயிர்வாழ்க்கை, தவலும் - பிழைத்தலும், நணித்து - சிறிதுபொழுதிலுண்டாம், கெடலும் - முழுதுங்கெடுதலும், நணித்து - சிறிதுபொழுதிலுண்டாம், எ-று.

மிகுதல் - மேலுமேலுமெழும்பல். இனிதென்பது தான் வெல்லுதல் குறித்தல். பிழைத்தல் - வறுமையாலே துன்பமுடையவனாதல். முழுதுங்கெடுதல் - இறத்தல். தவலும் கெடலும் என்னும் இவைகளோடு நணித்து என்பது தனித்தனி கூட்டப்பட்டது. உம்மைகளை எதிரதும் இறந்ததும் தழுவிய எச்சவும்மையாக வுரைத்துக்கொள்க. பொருட்கேடும் உயிர்க்கேடும் அப்பொழுதே உண்டாகுமென்பதாம்.

---

1 சிறிதுபொழுதுள் விரைவில.

2 ஊக்குதல் - பிரயத்தனப்படுதல்.

3 இவற்றோடு - (தவலும் கெடலும் என்னுமிவைகளோடு) நணித்து என்பதனைத் தனித்தனி தவலுமாணித்து கெடலும்நணித்து என்று கூட்டி, தவலும் என்றவும்மையை எதிரது தழுவிய வெச்சவும்மையாகவும் கெடலும் என்றவும்மையை இறந்தது தழுவிய எச்சவும்மையாகவும் சொல்லிக் கொள்க.

4 அப்பொழுதே - பிறரோடுமாறுபடுதல் மிகுந்தபொழுதே.

(க-து) பிறரோடு மாறுபடுதலையே தனக்கின்பமென்று அதனைச் செய்துவருபவன் விரைவிலழிவான் என்பது. (௬)

௭. மிகன்மேவல் மெய்ப்பொருள் காணா ரிகன்மேவ
லின்னா வறிவி னவர்

பரி.—(இ-ள்.) இகலோடு மேவுதலையுடைய இன்னாத வறிவினை யுடையார் வெற்றிபொருந்துதலையுடைய நீதிநூற்பொருளை யறியமாட்டார், எ-று.

இன்னாவறிவு - தமக்கும் பிறர்க்கும் தீங்குபயக்குமறிவு. வெற்றி - 1 வழிநின்றார்க்கு உளதாவது காணப்படும் பயத்ததாகலின், 2 மெய்ந்நூல் எனப்பட்டது. இகலால் அறிவு கலங்குதலின் 'காணார்' என்றார். இவை யிரண்டு பாட்டானும் இகலினார்க்கு வருந் தீங்கு கூறப்பட்டது.

தெளி.—(இ-ள்.) இகன்மேவல் - மாறுபாட்டோடு பொருந்துதலையுடைய, இன்னா - துன்பஞ்செய்கின்ற, அறிவினவர் - அறிவையுடையவர், மிகன்மேவல் - வெற்றிபொருந்துதலையுடைய, மெய்ப்பொருள் - நீதிநூற்பொருளை, காணார் - அறியமாட்டார், எ-று.

இன்னாவறிவு – தமக்கும் பிறர்க்கும் தீங்கை உண்டாக்கும் அறிவு. வெற்றி - வழிநின்றார்க்கு உண்டாவது. பிரத்தியட்சமாக அறியப்படும் பிரயோசனத்தை யுடையதாதலால், மெய்ந்நூல் எனப்பட்டது. மாறுபாட்டினாலே அறிவுகலங்குதலால் 'காணார்' என்றார். இவை இரண்டுபாட்டாலும் மாறுபட்டவர்க்கு வரும் தீங்கு சொல்லப்பட்டது.

(க-து) மாறுபட்ட வறிவினையுடையவர் நீதிநூற்பொருளை யறியமாட்டார் என்பது. (௭)

௮. இகலிற் கெதிர்சாய்த லாக்க மதனை
மிகலூக்கி னூக்குமாங் கேடு.

பரி.—(இ-ள்.) தன்னுள்ளத்து மாறுபாடு தோன்றியவழி 3 அதனையெதிர்தலையொழிதல் ஒருவனுக்கு ஆக்கமாம், 4 அதுசெய்யாது 5 அதன்கண் மிகுதலை மேற்கொள்வானாயிற் கேடு தன்கண்வருதலை மேற்கொள்ளும், எ-று.

எதிர்தல் - ஏற்றுக்கோடல். சாய்த்தபொழுதே வருதலின் 6 'சாய்தலா

---

1 வழிநின்றார்க்கு - நீதிநூல்கூறியபடி நடப்பவர்க்கு.

2 மெய்யையுணர்த்தும் நீதிநூலைக் காரியவாகுபெயரால் மெய் என்று கூறப்பட்டது. மெய்ந்நூல் - மெய்யையுணர்த்தும் நூல்.

3 அதனையெதிர்தலை - மாறுபாட்டை யேற்றுக்கொள்ளுதலை.

4 அது - ஒழிதல். 5 அதன்கண் - மாறுபாட்டில்.

6 சாய்த்தபோதுண்டா மாக்கத்தைச்சாய்தல் ஆக்கம் என்று கூறினமையினால் இது காரணம் காரியமாய உபசாரவழக்கு.

க்கம்' என்றார். 1 இகலிற்கெனவும் அதனையெனவும் வந்தன வேற்றுமை மயக்கம்.

தெளி.—(இ-ள்.) இகலிற்கு - (தன்னுள்ளத்து) மாறுபாடுதோன்றியவிடத்து, எதிர்சாய்தல் - (அதனை) எதிர்தலையொழிதல், ஆக்கம் - (ஒருவனுக்கு) ஆக்கமாம், (அது செய்யாமல்) அதனை - அம்மாறுபாட்டிலே, மிகல் - மிகுதலை, ஊக்கின் - மேற்கொள்ளுவானாயின், கேடு - கேடும், ஊக்குமாம் - (தன்னிடத்து வருதலை) மேற்கொள்ளும், எ-று.

எதிர்தல் - ஏற்றுக்கொள்ளுதல். சாய்ந்தபொழுதே வருதலால் 'சாய்தலாக்கம்' என்றார். இகலை என்பது இகலிற்கு எனவும் அதன்கண் என்பது அதனை எனவும் வந்தமையினால் வேற்றுமை மயக்கமாயின.

(க-து.) ஒருவனுக்கு மாறுபாட்டை யொழித்தல் செல்வமும் மேற்கொள்ளுதல் கேடுமாம் என்பது. (அ)

௩. இகல்காணா னாக்கம் வருங்கா லதனை
மிகல்காணுங் கேடு தரற்கு.

பரி.—(இ-ள்.) ஒருவன் றனக்கு 2 ஆக்கம் வரும்வழிக் காரணமுண்டாயினும் இகலை நினையான், தனக்குக் கேடுசெய்துகோடற்கட் காரணமின்றியும் 3 அதன்கண் மிகுதலை நினைக்கும், எ-று.

இகலான் வருங்கேடு பிறரானன்றென்பது தோன்றத் 'தரற்கு' என்றார். 4 நான்காவதும் இரண்டாவதும் ஏழாவதன்கண் வந்தன. 5 ஆக்கக்கேடுகட்கு முன்னடப்பன இகலினது இன்மை உண்மைகளென்பதாம்.

தெளி.—(இ-ள்.) ஆக்கம் வருங்கால் - (ஒருவன் தன்னிடத்து) ஆக்கம் வரும்போது, (காரணம் உண்டாயினும்) இகல் - மாறுபாட்டை, காணான் - நினையான், கேடுதரற்கு - (தனக்குக்) கேடுசெய்துகொள்ளுமிடத்து, (கார

---

1 இகலிற்கு என்பதிலுள்ள (கு என்னும்) நான்கனுருபு தனக்குரிய பொருளைவிட்டு (இகலையென) இரண்டனுருபின் பொருளிலும், அதனை என்பதிலுள்ள (ஐ என்னும்) இரண்டனுருபு தனக்குரிய பொருளைவிட்டு (அதன்கண்ணென) ஏழனுருபின் பொருளிலும் வந்தமையினால் வேற்றுமை மயக்கமா மென்க.

2 ஆக்கம் - செல்வம். 3 அதன்கண் - மாறுபாட்டில்.

4 தரற்கு என்னும் நான்கனுருபும், அதனை என்னும் இரண்டனுருபும் தமக்குரிய பொருளைவிட்டு ஏழனுருபின் இடப்பொருளில் வந்தன.

5 ஆக்கத்திற்குமுன் நடப்பது மாறுபாட்டினது இல்லாமையும், கேட்டிற்கு முன்னடப்பது மாறுபாட்டினது உண்மையுமாமென்க. எனவே, மாறுபாடில்லையானால் செல்வமும் மாறுபாடுண்டானால் கேடும்உண்டாமென்பதாயிற்றென்க.

னாய் இலவாதிருத்தும்) அதனை - அதனிடத்தே, மிகல - மிகுதலை, காணும் - நினைப்பான், எ-று

மாறுபாட்டால் வருங்கேடு பிறரால் அன்றென்பது தோன்றத் 'தாற்கு' என்றார் ஆக்கக்கேடு கெட்குமுன் கடப்பவை மாறுபடாமையும் மாறுபடுதலுமா மென்பதாம்.

(க - து) ஒருவன தன்னிடத்துச் செல்வம வரும்போது மாறுபாட்டை நினையாது, கேடுவரும்போது அதனைநினைப்பான என்பது. (௯)

௯௦. இகலானா மின்னாத வெல்லா நகலானா
நன்னய மெனனுஞ் செருக்கு.

பரி—(இ - ள்) ஒருவனுக்கு மாறுபா டொன்றனே இன்னாதனவெல்லாம் உளவாம்; நட்பொன்றனே நலல நீதியென்னும பெருஞ்செலவம் உளதாம், எ-று.

இன்னாதன - வறுமை, பழி, பாவ முதலாயின நகல் - மகிழ்தல் [1] நகலென்பதூஉஞ் செருக்கெனபதூஉம் தத்தங் காரணங்கடகாயின நயமென்னுஞ் செருக்கெனக [2] காரியத்தைக்காரணமாக உபசரித்தார் இவை மூன்றுபாட்டானும [3] அவ்விருமையுங் கூறப்பட்டன.

தெளி—(இ - ள்) இகலான - (ஒருவனுக்கு) மாறுபாடொன்றினாலே, இன்னாதவெல்லாம - துன்பஞ்செய்பவையெல்லாம, ஆம - உண்டாகும, நகலான் - நட்பொன்றினாலே, நன்னயம் என்னும - நலலநீதியென்னும, செருக்கு - பெருஞ்செலவம், ஆம - உண்டாகும, எ-று

இன்னாதன - வறுமை, பழி, பாவங்கள் முதலானவை நகல் - மகிழ்தல் நகலென்பதும செருக்கெனபதும் தத்தங் காரணங்களுக்காயின நயமென்னுஞ் செருக்கெனக் காரியத்தைக் காரணமாக உபசரித்தார். இவை மூன்று பாட்டாலும் அவ்விருமையும சொலலப்பட்டன.

(க - து.) ஒருவனுக்கு மாறுபாட்டினாலே துன்பமும் நட்பினாலே செல்வமுமுண்டா மென்பது (௰)

1 மகிழ்ச்சி என்னும் பொருளதான நகல எனபது அதறகுக காரணமான நட்பிற்கும், தருக்குதலென்னும பொருளதான செருக்கு எனபது அதற்குக் காரணமான பெருஞ்செலவத்திறகு மாயசிற்றலால் இவை காரியவாகு பெயர்.

2 காரணததைக் காரியமாக வுபசரித்தார் எனறும் பாடமுண்டு நயத்தால் (நீதியால்) உணடாகும செருககை (பெருஞ் செலவத்தை) நயமெனனுஞ் செருககு என றபேதப்படுத்திக் கூறினமையினல் உபசார வழககாயிற்றெனக.

3 அவ்விருமையும - மாறுபடாதவாக்கு வரும நன்மையும மாறுபட்டவாக்கு வரும தீமையும

## அஎ - ம். அதி.—பகைமாட்சி.

பரி—அஃதாவது அறிவின்மை * முதலிய குற்றங்களுடைமையாற் பகையை மாட்சிப்படுத்தல். அரசர்க்கு எவ்வாற்றானும் பகையின்மை கூடாமையின் 1 மேற்பொதுவகையான் விலக்கப்பட்ட இகலை ஈண்டுச் சிறப்புவகையான் 2 விதிக்கின்றாராகலின், 3 இஃததன்பின் வைக்கப்பட்டது.

தெளி.—அஃதாவது அறிவில்லாமை முதலாகிய குற்றங்களுடைமையால் பகையை மாட்சிமைப்படுத்தல். அரசர்க்கு எவ்வழியாலும் பகையில்லாமை கூடாமையால் மேலே பொதுவகையால் விலக்கப்பட்ட இகலை இவ்விடத்தே சிறப்பு வகையால் விதிக்கின்றாராகலால், இஃது அதன்பின் வைக்கப்பட்டது.

க. வலியார்க்கு மாறேற்றல் ஓம்புக ஓம்பா
மெலியார்மேல் மேக பகை.

பரி—(இ-ள்) தம்மின் வலியார்க்குப் பகையாயெதிர்தலை ஒழிக; ஏனை மெலியார்க்குப் பகையாதலை ஒழியாது விரும்புக, எ - று.

வலியாரென்புழித் துணைவலியுமடங்கலின், மெலியாரென்புழித் 4 துணை வலியின்மையுங் கொள்ளப்படும். அத்துணைதான் படை பொருள் 5 முதலிய வேற்றுமைத்துணையும் நல்லறிவுடைமை நீதிநூல்வழி யொழுகல் 6 முதலிய ஒற்றுமைத்துணையுமென விரண்டாம். 7 அவ்விரண்டுமில்லாரை வெல்வார்க்கு வலிதொலையாமையின் அவரோடு பகைத்தல் விதிக்கப்பட்டது. 8 சிங்க நோக்காகிய இதனுட் பகைமாட்சி பொதுவகையாற் கூறப்பட்டது.

---

* முதலிய என்றதனால் பெரியோரைத் துணைகொள்ளாமை, சிற்றினஞ் சேருதல், வலி காலம் இடங்களை யறியாமை, சோம்பலுடைமை முதலியவைகளையுங் கொள்க.

1 மேல் - முன்னுள்ள இகலதிகாரத்தில.

2 விதிக்கின்றாராகலின் - நியமிக்கின்றாராதலால்.

3 இஃததன்பின் - பகைமாட்சியதிகாரம் இகலதிகாரத்தின் பின்னர்.

4 துணைவலி - உதவியாயிருப்பவரது வலிமை.

5 முதலிய என்றதனால் துணையாயிருப்பவர், சுற்றத்தார், சிநேகர் முதலியவர்களையுங்கொள்க.

6 முதலிய என்றதனால் அமைச்சர் புரோகிதர்களின் ஆலோசனைக்கிணங்கி நடத்தல், செயகாரியங்களில் மறதியில்லாமை, ஊக்கமுடைமை முதலிய

7 அவ்விரண்டும் - வேற்றுமைத்துணையும் ஒற்றுமைத்துணையும் [வேற்றுமை பேதம். ஒற்றுமை - அபேதம்]

8 சிங்கத்தினது நோக்கம் (பார்வை) முன்னும் பின்னும் செல்லுதல்போன்று இக்குறளிற் கூறிய பகைமாட்சி முன்னதிகாரத்திலும் பின்னதிகாரத்திலும் செல்லுதலாலே 'சிங்கநோக்காகிய இதனுள்' என்று கூறப்பட்டது.

தெளி —(இ - ள்) வலியார்க்கு - (தம்மின்) வலியவர்க்கு, மாறேற்றல்- பகையாயெதிர்தலை, ஓம்புக-ஒழிபக்கடவர், மெலியார்மேல் - மற்றைமெலிய வர்க்கு, பகை-பகையாதலை, ஓம்பா-ஒழியாமல, மேக-விரும்பககடவா, எ-று.

வலியாரென்றவிடத்துத் துணைவலியும் அடஙகலால், மெலியாரென்ற விடத்துத் துணைவலியில்லாமையும் கொள்ளபபடுமே அத்துணைசான படை பொருள் முதலாகிய வேற்றுமைத்துணையும் நலலறிவு உடைத்தாயிருததல் நீதிநூல் வழியில் ஒழுகுதல முதலாகிய ஒற்றுமைததுணையும் எனவிரணடாம் அவ்விரண்டு மில்லாரை வெலவார்ககு வலிமை நொலையாமையால அவரோடு பகைத்தல விதிக்கப்பட்டது. சிஙகநோககாகிய இதனுள பகைமாட்சி பொதுவகையாலே சொலலபபட்டது

(க - து) வலியார்க்குப பகையாதலை யொழித்து மெலியார்ககுப் பகையாதலை விரும்ப வேணடுமே எனபது (க)

உ. அன்பில னான்ற துணையிலன் றானறுவ்வா
னென்பரியு மேதிலான் றுப்பு.

பரி —(இ - ள்) ஒருவன் றன்சுற்றத்தினமே லனபிலன, அதுவேயன்றி வலிய துணையிலன, அதனமேற் றுன்வலியிலன், அபபெற்றியானமேல்வநத டைகவன் வலியினை யாஙஙனந் தொலைக்கும். எ - று

சுற்றமும் 1 இருவகைத்துணையும் தன்வலியுமிலனுகலின, அவனமேற் செலவார்கரு வலி வளாவதன்றித் தொலையா தென்பதாம் துவவான் 2 துவ்வினைச செய்டான்.

தெளி —(இ - ள்.) (ஒருவன்) அன்பிலன் - (தன்சுற்றத்தார்மேல்) அன்பிலன், ஆன்றதுணையிலன - (அதுவேயன்றி) வலியதுணையிலன, தான்றுவ்வான - (அதன்மேல்) தானவலியிலன், (அப்படிபபட்டவன் மேல்வநத) ஏதிலான் - பகைவன், துபபு - வலிமையை, எனபரியும - எப்படி தொலைப்பான், எ - று.

சுற்றமும் இருவகைநதுணையும் தனவலியும் இல்லனுகலால், அவன்மேலே போருக்குச் செலவார்கரு வலி வளர்வ தலலாமல தொலையாதென்பதாம்.

(க - து) அன்பும் துணையும்வலியுமிலலா தவன் மேல்வரும் பகைவனது வலிமை யொருகாலுநதொலையா தெனபது. (உ)

---

1 இருவகைத்துணை - படை பொருள் முதலிய வேற்றுமைத்துணையும், நல்லறிவுடைமை முதலிய ஒற்றுமைத்துணையுமாம்.

2 துவவினைசசெயயான - வலிமைவினைச் செய்யாதவன பகைவருடன் போர்புரியும் வலியிலலாதவ னென்றபடி

௩. அஞ்சு மறியா னமைவில னீகலான
தஞ்ச மெளியன் பகைக்கு.

பரி—(இ-ள்) ஒருவன் அஞ்சவேண்டாதவற்றிற்கு அஞ்சாநிற்கும், அறியவேண்டுவனவற்றை யறியான், பிறரோடுபொருத்தமிலன், இவற்றின்மேலும் யாவர்மாட்டும் இவறன்மாலையன், இப்பெற்றியான பகைவர்க்கு மிகவெளியன், எ-று

தஞ்சமெளியனென்பன ஒருபொருட்பன்மொழி 1 இந்நான்கு குற்றமுமுடையான் பகையின்றியு மழியுமாகலின் 'தஞ்சமெளியன்' என்றார்.

தெளி—(இ-ள்) (ஒருவன் அஞ்சும் - (அஞ்சவேண்டாதவைகளுக்கு) அஞ்சுவான், அறியான் - (அறியவேண்டும் வகைகளை) அறியான், அமைவிலன் - (பிறரோடு) பொருத்தமிலன், ஈகலான் - (இவைகளின் மேலும் யாவரிடத்தும்) உலோபகுணமுடையன், (இப்படிப்பட்டவன்) பகைக்கு - பகைவர்க்கு, தஞ்சமெளியன் - மிகவெளியனுவான், எ-று

தஞ்சமெளிய னென்பவை ஒருபொருளைக் குறித்துவந்த பலசொல் இந்நான்கு குற்றமு முடையான் பகையில்லாமலும் அழியுமாகலால் 'தஞ்சமெளியன்' என்றார்

(க - து.) அச்சமும், அறியாமையும், நட்பில்லாமையும், உலோபகுணமுமுடையவன் பகைவர்க்கு மிகவுமெளியனுவன் என்பது (௩)

௪. நீங்கான் வெகுளி நிறையில னெஞ்ஞான்றும
யாங்கணும் யார்க்கு மெளிது

பரி—(இ-ள்.) ஒருவன் வெகுளியினீங்கான், அதுவேயன்றித் தான் நிறையுடையனல்லன், அவன்மேற் சேறல் எக்காலத்தும் எவ்விடத்தும் யார்க்கு மெளிது, எ-று

நிறை - 2 மறைபிறரறியாமை. வெகுடன்மாலையனுகலானும், மறைவெளிப்படுத்தலானும், மேற்செல்வார்க்குக் காலமும இடனும் வலியுமறிந்து சேறல் வேண்டாதாயிற்று இனி 3 இனிதென்று பாடமோதி அவன்பகைமை இனிதென்றுரைப்பாரு முளர்

---

1 இந்நான்கு குற்றமும என்றது அஞ்சுதல், அறியாமை, அமைவில்லாமை, ஈயாமை என்பனவற்றை.

2 கலித்தொகை நெய்தற்கலி ககூ - ல "நிறையெனப்படுவது மறைபிறரறியாமை" என்று கூறுகின்றது இதற்குப் பொருள் நச்சினார்க்கினியார் "நிறையென்று சொல்லப்படுவது மறைந்ததொருகாரியம் பிறரறியாம லொழுகுதல்" என்றனர்

3 யார்க்கு மெளிது என்பதனை யார்க்குமினிது என்று பாடஞ் சொல்லுவாருமுண்டு.

தெளி —(இ-ள்.) (ஒருவன்) வெகுளி - கோபத்தினின்றும், நீங்கான் - நிறையிலன் - (அதுவேயன்றிக் காக்கும்) நிறையுடையனல்லன், (அவன்மேலே செல்லுதல்) எஞ்ஞான்றும் - எக்காலத்தும், யாங்கணும் - எவ்விடத்தும், யார்க்கும் - எவர்க்கும், எளிது - இலேசாம், எ-று.

நிறை - மறைபிறரறியாமை. இவன் கோபகுண முடையனாகலாலும், இரகசியத்தை வெளிப்படுத்தலாலும், இவன்மேலே போகக்குச் செல்வார்க்குக் காலமும் இடமும் வலியும் அறிந்து செல்லுதல் வேண்டுவதில்லையாயிற்று.

(க-து) கோபத்தையும் நிறையில்லாமையுமுடையவன் யாவர்க்கும் எளியனாவன் என்பது. (௪)

௫. வழிநோக்கான் வாய்ப்பன செய்யான் பழிநோக்கான்
பண்பிலன் பற்றார்க் கினிது.

பரி —(இ-ள்.) ஒருவன் நீதிநூலை யோதான், அது விதித்த தொழில்களைச் செய்யான், தனக்கு வரும் பழியை நோக்கான், தான் பண்புடையனல்லன், அவன் பகைவர்க்கு அப்பகைமை யினிது, எ-று.

தொல்லோ ரடிப்பட்டு வழங்கிவந்த தாகலான் 'வழி' என்றும், தப்பாது பயன் படுதலின் 'வாய்ப்பன' என்றும், இக்குற்றங்களுடையான் றானே யழிதலிற் 'பற்றார்க் கினிது' என்றுங் கூறினார்.

தெளி —(இ-ள்.) (ஒருவன்) வழிநோக்கான் - நீதிநூலைக் கல்லான், வாய்ப்பன செய்யான் - (அது) விதித்த தொழில்களைச் செய்யான், பழிநோக்கான் - (தனக்குவரும்) பழியைப்பாரான், பண்பிலன் - (தான்) குணமுடையனல்லன், பற்றார்க்கு - (அவன்) பகைவர்க்கு, இனிது - (அப்பகை) இனிதாம், எ-று.

பழையோராதியாக வழங்கிவந்ததாதலால் 'வழி' என்றும், தப்பாது பிரயோசனப்படுதலால் 'வாய்ப்பன' என்றும், இக்குற்றங்களுடையவன் தானே அழிதலால் 'பற்றார்க்கினிது' என்றும் சொல்லினார்.

(க-து) நீதிநூலையோதாமலும் அது விதித்தவற்றைச் செய்யாமலும் பழியைக் கருதாமலும் பண்புடையனாகாமலுமிருப்பவனது பகைமை அவன் பகைவர்க்கு மிகவுமினிதாம் என்பது. (௫)

௬. காணாச் சினத்தான் கழிபெருங் காமத்தான்
பேணாமை பேணப் படும்.

பரி.—(இ-ள்.) தன்னையும் பிறரையுந் தானறியாமைக் கேதுவாகிய வெகுளியை யுடையான் யாவன், மேன்மேல் வளரா நின்ற மிக்க காமத்தை யுடையான் யாவன், அவரது பகைமை விரும்பிக் கொள்ளப்படும், எ-று.

- 1 காணுத சினமென்பது விகாரமாயிற்று 2 முன்னோனுக்கு யாவரும் பகையாகலானும், 3 ஏனோனுக்குக் காரியந் தோன்றாமையானும், தாமே யழிவரென்பது பற்றி இவர் பேணுமை வேண்டப்படும் என்றார்.

தெளி.—(இ - ள்) காணுச்சினத்தான் - (தன்னையும் பிறரையுந்தான்)அறியாமைக்குக்காரணமாகிய கோபத்தை யுடையவன (யாவன்), கழிபெருங்காமத்தான் - மேலுமேலும் வளரா நின்ற மிகுந்த காமத்தையுடையவன் (யாவன்), பேணுமை-(அவரது)பகைமை, வேண்டப்படும்-விரும்பிக் கொள்ளப்படும், எ-று.

காணுத சினம் என்பது காணுச்சினம் என விகாரமாயிற்று முன் சொல்லப்பட்டவனுக்கு யாவரும் பகையாகலானும், பின்சொல்லப்பட்டவனுக்குக் காரியம் தோன்றாமையானும், தாமே அழிவரென்பதுபற்றி இவர் பேணுமை வேண்டப்படும் என்றார்.

(க. து) கோபத்தையும் காமத்தையுமுடையவர்கள் பகைவர்க்கு மிகவெளியராவர் என்பது (சு)

எ. கொடுத்துங்கொளல்வேண்டு மன்ற வடுத்திருந்து
மாணுத செய்வான் பகை.

பரி.—(இ - ள்) வினையைத் தொடங்கியிருந்து அதற்கேலாதன செய்வான் பகைமையைச் சிலபொரு ளழியக் கொடுத்தாயினுங் கோடல் ஒருதலையாகவேண்டும், எ-று.

ஏலாதன - 4 மெலியனுய் வைத்துத் துணிதலும் 5 வலியனுய் வைத்துத் தணிதலும் 6 முதலாயின 7 அப்பொழுது 8 அதனுற் சிலபொருளழியினும் பின் பல பொருளெய்தற்கு ஐயமின்மையின் 'கொளல் வேண்டுமன்ற' என்றார். இவையாறுபாட்டானும் 9 அது சிறப்புவகையாற் கூறப்பட்டது

---

1 காணுத என்னும் எதிர்மறைப் பெயரெச்சம் தகரவெழுத்துப்பேறரோடு கூடிய அகரவிகுதிகெட்டுக் காணு என நின்றது

2 முன்னோனுக்கு - காணுச்சினத்தானுக்கு.

3 ஏனோனுக்கு - கழிபெருங்காமத்தானுக்கு

4 மெலியனுய்வைத்துத்துணிதல் - தன்வலி, துணைவலி, வினைவலிகளில் குறைவுள்ளவனுயிருந்தும் பகைவருடன் போர்செய்ய நிச்சயித்தல

5 வலியனுய் வைத்துத்தணிதல் - தன்வலிமுதலியவைகளில் மிகுந்துள்ளவனுயிருந்தும் பகைவருடன் போர்செய்யா தடங்கிக்கிடத்தல்

6 முதலாயின என்றதனுல் போர்க்குச் சென்றுள்ள சுத்தவீரரிடத்துச் சந்தேகப்படுதல், தக்கபடி பொருள்தராமை முதலியவைகளையுங்கொள்க

7 அப்பொழுது - பொருள்கொடுத்துப் பகையைக்கொள்ளும் காலத்தில்.

8 அதனுல் - கொடுத்தலால்.

9 அது - பகைமாட்சி.

**தெளி.**—(இ - ள்.) அடுத்திருந்து - (தொழிலைத்) தொடங்கியிருந்து, மாணாத - (அதற்கு) ஏற்காதவைகளை, செய்வான் - செய்பவனது, பகை - பகைமையை, கொடுத்தும் - (சிலபொருள் அழியக்) கொடுத்தாயினும், கொளல் - கொள்ளுதல், மன்ற - நிச்சயமாக, வேண்டும் - எ-று.

ஏற்காதன - மெலியவனாயிருந்து துணிதலும் வலியவனாயிருந்து தணிதலும் முதலாயின. அப்பொழுது அதனாலே சிலபொருள் அழியினும் பின்னே பலபொருள்களைப் பெறுதற்குச் சந்தேகம் இல்லாமையால் 'கொடுத்துங் கொளல்வேண்டு மன்ற' என்றார். இவை ஆறுபாட்டாலும் அது சிறப்புவகையாலே சொல்லப்பட்டது.

(க - து) தகுதியில்லாதகாரியங்களைச் செய்பவர்களது பகையினைப்பொருள் கொடுத்தாயினுங் கொள்ளல் வேண்டும் என்பது. (௭)

௮. குணனிலனாய்க் குற்றம் பலவாயின் மாற்றார்க்
கினனிலனாம் ஏமாப் புடைத்து

**பரி.**—(இ - ள்.) ஒருவன் குணமொன்றுமிலனாய் உடைய குற்றம் பலவாயவழி அவன் துணையிலனாம், [1] அவ்விலனாதல்தானே அவன் பகைவர்க்குத் துணையாதலையுடைத்து, எ - று.

குணம்-இறைமாட்சியுட்சொல்லியன. குற்றம்-இவ்வதிகாரத்துச் சொல்லியனவும் மற்று [2] அத்தன்மையனவும். துணை-சுற்றம், நட்பு, பொருள், படை [3] முதலாயின. பகைவர்க்கு [4] இவற்றானுளதாம் பயன் [5] தானே யுளதாமாகலின் 'ஏமாப்புடைத்து' என்றார். [6] இலனாயென்னுஞ் செய்தெனெச்சம் உடைய வென வந்த பெயரெச்சக்குறிப்புக் கொண்டது.

**தெளி.**—(இ - ள்.) (ஒருவன்) குணனிலனாய் - குணமொன்றுமிலனாய், குற்றம்பலவாயின் - (உடைய) குற்றம் பலவாகியவிடத்து, இனனிலனாம் - (அவன்) துணையில்லாதவனாகும், (அவ்விலனாதல்தானே) மாற்றார்க்கு - (அவன்) பகைவர்க்கு, ஏமாப்புடைத்து - துணையாதலையுடைத்து, எ - று.

---

1 அவ்விலனாதற்றானே - குணமும் துணையும் இல்லாதவனாயிருத்தல்தானே

2 அத்தன்மையனவும் என்றது பிறரது மகளிரைவெளவுதல், பிறர்பொருளை அநியாயமாக அபகரித்தல், துணையாகாதவரைத் துணையாகக்கொள்ளுதல் முதலானவைகளை

3 முதலாயின என்றதனால் அமைச்சர், புரோகிதர், அரண் முதலியவைகளையுங்கொள்க.

4 இவற்றான் - சுற்றம் நட்பு முதலியவைகளால்.

5 தானே - சுற்றம் நட்பு முதலியவைகளில்லாமலே

6 இலனாய் என்னும் செய்து என்னும் வாய்பாட்டிறந்தகால வினையெச்சம் (இயைபுநோக்கி) உருவித்துக் கூறிய உடையஎன்னும் குறிப்புப் பெயரெச்சத்தைக் கொண்டு முடிந்தது.

* குணம் - இறைமாட்சி அதிகாரத்துள்ளே சொல்லப்பட்டவை குற்றம் - இவ்வதிகாரத்துள்ளே சொல்லப்பட்டவையும் மற்றும் அப்படிப்பட்டவையும். துணை - சுற்றம், நட்பு, பொருள், படைமுதலானவை. பகைவர்க்கு இவைகளால் உண்டாகும்பயன் தானே உண்டாமாகலால் 'ஏமாப்புடைத்து' என்றார். இலனாய் என்னும்செய்து என்னும் வினையெச்சம் உடைய என்று வந்த குறிப்புப் பெயரெச்சத்தைக் கொண்டு முடிந்தது

(க-து.) குணமின்மையும் பலகுற்றமுமுடைய அரசன் துணையில்லாதொழிதலால் அவன் பகைவர்க்கு மிகவு மெளியவனாவன் என்பது. (அ)

௬௯. செறுவார்க்குச் சேணிகவா வின்ப மறிவிலா
வஞ்சும் பகைவர்ப் பெறின்.

பரி.—(இ - ள்) நீதியை யறிதலில்லாத அஞ்சும் பகைவரைப் பெற்றால், அவரைச் செறுவார்க்கு உயர்ந்த வின்பங்கள் நீங்கா, எ - று.

1 உபாயமறிதலும் அறிந்தாற் செய்து முடிக்குந் திண்மையுமில்லாதாரே பகைவராதல் கூடாமையிற் 'பெறின்' என்றும், 2 அவரை யறிந்து 3 மேற்சென்றபொழுதே பகையின்மையுஞ் செல்வமும் ஒருங்கே யெய்தலிற் 4 சேணுடையின்பங்கள் இகவா என்றுங் கூறினார்.

தெளி —(இ - ள்) அறிவிலா-(நீதியை) அறிதலில்லாத, அஞ்சும—பகைவர்-பகைவரை, பெறின் - பெற்றால், செறுவார்க்கு (அப்பகைவரை) வெல்வார்க்கு, சேண் - உயர்வுள்ள, இன்பம்-இன்பங்கள், இகவா - நீங்கா, எ - று

உபாயமறிதலும் அறிந்தால் செய்து முடிக்குந்திடமும் இல்லாதவரே பகைவராதல் கூடாமையால் 'பெறின்' என்றும், அவரை அறிந்து மேற்சென்றபொழுதே பகையில்லாமையும் செல்வமும் ஒருசேர அடைதலாலே சேணபங்களிகவா என்றும் சொல்லினார்.

(க - து.) நீதியையறியாமையையும் அஞ்சுதலையு முடையவரைப் பகைத்தவருக்கு உயர்வுள்ள இன்பங்கள் நீங்கமாட்டா என்பது. (கூ)

௭௦. கல்லான வெகுளுஞ் சிறுபொருளெஞ்ஞான்று
மொல்லானை யொல்லா தொளி.

பரி.—(இ - ள்.) நீதிநூலைக் கல்லாதானோடு பகைத்தலான் வரும் எளிய பொருளை மேவாதானை எஞ்ஞான்றும் புகழ் மேவாது, எ-று

1 சாம பேத தான தண்டமென்னும் நால்வகை யுபாயம்.
2 அவரை - அப்பகைவரை
3 மேற்சென்றபொழுது - போர்புரியப் போனகாலத்தில்.
4 சேணுடையின்பங்கள் - உயர்வுள்ள சுகங்கள்.

சிறுபொருள் - 1 முயற்சி சிறிதாய பொருள் நீதியறியாதானை வெல்லஎளிதாயிருக்கவும் 2 அது மாட்டாதானை வெற்றியான் வரும் புகழ் கூடாதென்பதாம், ஆகவே, இச்சிறிய முயற்சியாற் பெரிய பயனெய்துக வென்றவாறாயிற்று 3 இதற்குப் பிறரெல்லாம் அதிகாரத்தோடு 4 மாறுதனமேலும் ஓர் 5 பொருட்டொடர்ப்புமாம லுரைத்தார். இவை மூன்று பாட்டானும் 6 அதனினுய பயன் கூறப்பட்டது.

தெளி —(இ-ள்.) கல்லான - (நீதிநூலைக்) கல்லாதவனோடும் - பகைத்தலால் வரும், சிறுபொருள் - எளியபொருளை, ஒல்லானை - அடையாதவனை, எஞ்ஞான்றும் - எக்காலும், ஒளி - புகழ், ஒல்லாது - அடையாது, எ-று.

சிறுபொருள்-முயற்சி சிறிதாகிய பொருள் நீதி யறியாதவனை வெல்லுதல எளிதாயிருக்கவும் அது மாட்டாதவனை வெற்றியால வரும் புகழ் கூடாதென்பதாம், ஆகவே, இச சிறிய முயற்சியாலே பெரிய பயனடைக வென்றபடியாயிற்று. இவை மூன்று பாட்டாலும் அதனாலாகிய பயன் சொல்லப்பட்டது.

(க - து.) நீதிநூலைக்கல்லாதவனுடன் பகைத்தலால் வரும்பொருளை யடையாதவனைப் புகழடையாது என்பது. (ய)

——— (o) ———

## அஅ-ம். அதி.—பகைத்திறந் தெரிதல்.

பரி —அஃதாவது மாறாத பகையை ஆக்குதற் குற்றமும், முன் ஆகின்ற பகையுள் நட்பாக்கற்பாலதும், நொதுமலாக்கற்பாலதும், 7 அவற்றின்கட் செய்வதும், ஏனைக் களைதற்பாலதன்கட் செய்வனவும், 8 களையும் பருவமும், களையாக்கால் அப்படி மிழுக்கும் என்று இத்திறங்களை ஆராய்தல். 9 இரட்டுற

1 முயற்சி சிறிதாய பொருள் - சிறிய முயற்சியால வந்த பெரும்பொருள்.

2 அது மாட்டாதானை - வெல்லமாட்டாதவனை.

3 இதற்கு - இக்குறளுக்கு

4 மாறுதனமேலும் - மாறுபடுதல் மேலும்;

5 பொருட்டொடர்பு - அர்த்தத்தின் சம்பந்தம்.

6 அதனினுயபயன் - பகைமாட்சியாலான பிரயோஜனம்.

7 அவற்றினகண் - நட்பாக்குந் தன்மையதும் அயலாக்குந் தன்மையதுமான

8 களையும் பருவம் - அழிக்கும் காலம்

9 இரட்டுற மொழிதல் - ஒருவாக்கியத்தை இரண்டு பொருள்படச்சொல்லுதல் இங்கே பகைத்திறந்தெரிதல் என்னும் வாக்கியத்தில் பகைத்திற மென்பதனை ஆறாம்வேற்றுமைத் தொகையாகவும் ஏழாம்வேற்றுமை யுருபும் பொருளுமுடன் றொக்கதொகையாகவும் கொண்டு முறையே 'பகையது திறமும்' என்றும் 'பகையிடத்தாக்குந் திறமும்' என்றுவிரிக்கப்பட்டவாறறிக

மொழிதலெனபதனுற பகையது திறமும் பகையிடத்தாக்கும திறமுமென விரிககபபட்டது 1 இவையெலலாம் மாணுப பகையவாகலின, 2 இது பகைமாட்சியினபின் வைககபபட்டது

தெளி.—அஃதாவது மாட்சிமைப படாத பகையை ஆககுதற்குற்றமும், முனபு உணடாகி நின்ற பகையுள் நட்பாகுந் தன்மையதும, அயலாகும் தனமையதும, அவைகளிலே செயவதும், மறறைக களையுந்தன்மையுடையதனிடத்தே செய்வனவும், களையும் பருவமும, களையாமறபோனல் படுங்குறறமும் என்று இவ்விதங்களை ஆராய்தல். இரட்டுறமொழிதலென்னு முத்தியினுல பகையது திறமும் பகையினிடதுச் செயயும் திறமுமென்று விரிககபபட்டது. இவையெலலாம மாட்சிமைப படாத பகையினிடததன வாகலால், இது பகைமாட்சியினபின் வைககப்பட்டது.

க. பகையெனனும் பண்பி லதனை யொருவ
னகையேயும வேண்டற்பாற் றனறு

பரி.—(இ - ள்) பகையென்று சொலலபபடுந் தீமை பயப்பதனை ஒருவன விளையாட்டின்கண்ணே யாயினும் விரும்புத லியற்கைத்தன்றெனறு கூறும நீதிநூல, எ-று.

மாணுத பகையை யாக்கிக் கோடல் எவவாற்றுனும தீமையே பயத்தலிற் பணபிலது எனறும, 3 அதனை விளையாட்டின்கண் வேண்டினுஞ் செறறமே விளைத்து மெய்யா மாகலின்'நகையேயும'என்றும, வேண்டாமை தொலலையோரது துணிவென்பார் நீதிநூன்மேல் வைத்துங் கூறினா 4 அப்பெயா அவாய் நிலையான் வந்தது.

தெளி.—(இ - ள்) ஒருவன்-பகையென்னும் - பகையென்று சொல்லபபடும், பண்பி லதனை - தீமை யுண்டாக்குவதனை, நகையேயும - விளையாட்டிடத்தே யாயினும், வேண்டற்பாற்றன்று - விருமபுதற றனமையை யுடையதன்று (என்று சொல்லும் நீதிநூல), எ-று.

மாட்சிமைப் படாத பகையை ஆக்கிக்கொள்ளுதல் எவ்விதத்தாலும்தீமையே தருதலால் பண்பிலது என்றும், அதனை விளையாட்டிடத்து வேண்டினும கோபமே விளைத்து மெய்யாமாகலால் 'நகையேயும்' என்றும், வேண்டாமை பழமையோரது துணிவென்பார் நீதிநூல்மேல் வைத்தும் சொல்லினர். நீதிநூல என்பது வருவிக்கப்பட்டது.

(க - து) ஒருவன் பகையென்னுந் தீமைகுணத்தை விளையாட்டிலும் விரும்பாதிருக்க வேண்டும என்பது. (க)

---

1 இவையெல்லாம் - இத்திறங்களியாவும்.
2 இது - பகைத்திறந் தெரிதல்,
3 அதனை - மாட்சிமைப்படாத பகையை.
4 அப்பெயர் - நீதிநூல் என்னும் பெயர்.

உ 1 வில்லே ருழவர் பகைகொளினுங் கொள்ளற்க
2 சொல்லே ருழவர் பகை

பரி —(இ - ள்) ஒருவன் வில்லை 3 ஏராகவுடைய உழவரோடு பகை கொண்டானாயினும் சொல்லை ஏராகவுடைய உழவரோடு பகை கொள்ளா தொழிக, எ-று.

4 சொல் ஆகுபெயரான நீதிநூலமேல் நின்றது வீரம சூழ்ச்சி யென்னு ம் ஆற்றலகளுள வீரமே யுடையாரோடு பகைகொணடாற் கேடுவருதல ஒருத லையன்று, வந்ததாயினுந் தனக்கேயாம், ஏனைச் சூழச்சி யுடையாரோடாயிற் றன்வழியினுள்ளார்க்குந் தப்பாதுவருதலின், 5 அது கொள்ளினும் இது கொ ள்ளற்க வென்றார். உம்மையான் அதுவு மாகாமை பெறுதும். 6 இரண்டு மு டையாரோடு கொள்ளலாகாமை சொல்லவேண்டா வாயிற்று. 7 உருவக வி சேடம்

தெளி —(இ - ள்) (ஒருவன்) வில - வில்லை ஏா-ஏராக வுடைய, உழ வா - உழவரோடு, பகைகொளினும் - பகை கொணடானானாலும், சொல-சொ ல்லை, ஏா - ஏராகவுடைய, உழவா - உழவரோடு, பகை - கொள்ளற்க - கொ ள்ளா தொழியக் கடவன, எ று

சொல் ஆகுபெயராய் நீதிநூலின்மேல நின்றது வீரம ஆலோசனை என னும் வலிமைகளுள் வீரமே யுடையவரோடு பகை கொண்டால கேடுவருவது நிச்சயமன்று, வந்தாலும் தனக்கேயாம, மற்றை ஆலோசனையுடையவரோ டானால் தன வமிசத்தோர்க்கும தப்பாது கேடுவருதலால், அது கொள்ளினும் இதுகொள்ளற்க வென்றார். கொளினும என்கிற எதிர்மறை உம்மையால வில் லேருழவர் பகையும் ஆகாமை பெறபபடும இரணடு முடையவரோடு கொள் ளலாகாமை சொல்ல வேண்டா வாயிற்று இது சிறப்புருவகவணி.

(க - து.) அரசனுக்கு வீரர்களது பகையிலும் மந்திரிகளது ப கை கொடிதா மென்பது (உ)

---

1 வில்லே ருழவர் - வீரர் வில் என்று கூறினதினாலே மற்றைவாள் வேல் மு தலிய படைகளும இனங்களாய எஞ்சி (குறைந்து) நின்றன.

2 சொல்லேருழவர் - அமைச்சர்

3 ஏர் - கலப்பை.

4 சொல் எனபது சொல்லாலாயதி நீதிநூலுக் காதலால் முதற கருவியாகு பெயர.

5 அது (வில்லே ருழவா பகை) கொண்டாலும் இது (சொல்லேருழவர்பகை) கொள்ளவேண்டாம் என்று கூறினார.

6 இரணடு முடையாரோடு - வீரமும் சூழ்ச்சியும் உடையவர்களுடன்.

7 உருவக விசேடமெனினும் சிறப்புருவகமெனினும ஒக்கும். சிறப்புருவகமாவ

௩. ஏமுற் றவரினு மேழை தமியனாய்ப்
பல்லார் பகைகொள் பவன்.

பரி.—(இ-ள்) தான் தனியனாய் நின்று பலரோடு பகை கொள்வான பித்தரானாரினும் அறிவிலன், எ-று.

தனிமை-சுற்றம் நட்புப் படை 1 முதலிய வின்மை. 2 மயக்கத்தால் ஒப்பாராயினும் ஏமுற்றவர் அதனாற் கேடெய்துவதாமையின், கேடெய்துதலுமுடைய 3 இவனை அவரினும் ஏழை என்றார். தனக்காவது துணையுள வழியும் வேறல் ஐயமாயிருக்க அஃதின்றியும் பலரோடு பகைகொண்டு அவரால் 4 வேறுவேறு பொருதற்கண்ணும் ஒருங்கு பொருதற் கண்ணும் அழிந்தே விடுதல். இவை மூன்று பாட்டானும் பகைகோடற் குற்றம் 5 பொதுவினுஞ் சிறப்பினுங் கூறப்பட்டது.

தெளி.—(இ-ள்) தமியனாய - (தான்) தனியனாயிருந்துகொண்டு, பல்லார் - பலரோடு, பகைகொள்பவன - பகைகொள்வான், ஏமுற்றவரினும்-பித்தங் கொண்டவரினும், ஏழை - அறிவிலன், எ-று.

தனிமை-சுற்றம் நட்புப் படை முதலானவை இல்லாமை. மயக்கத்தால் அவ்விருவரும் ஒப்பாராயினும் பித்தங்கொண்டவர் அப்பித்தத்தினாலே கேடடையாமையால், கேடடைதலுமுடைய இவனை அவரினும் ஏழை என்றார். கே

---

து ஒருபொருளின் அடைகளை யுருவகப்படுத்தி அதனால் அப்பொருளையும் உருவகப்படுத்துவது.

இங்கே வீரருக்கு அடையாயுள்ள வில்லையும் அமைச்சர்க்கு அடையாயுள்ள சொல்லையும் ஏராக வுருவகப்படுத்தி அது காரணமாக அவர்களை யுழவராக வுருவகப்படுத்தினமைகாண்க.

[வீரராகிய உழவர் பகைவராகிய வயல்களில் வில்லாகிய ஏரைச் செலுத்திப் பாணமாகிய விதையை விதைத்து வெற்றியாகிய விளைவைக் கொள்ளுவாரென்றும் அமைச்சராகிய உழவர் சபையாகிய வயலில் சொல(நீதிநூல்)லாகிய ஏரைச் செலுத்தி நியாயமாகிய விதையைவிதைத்து யாவரையும் ஒப்பச்செய்தலாகிய விளைவைக் கொள்ளுவாரென்றும் விரித்துரைத்துக் கொள்க.]

1 முதலிய என்றதனால் தன்வலி துணைவலி சரியான அரண் அமைச்சர் புரோகிதர்களினது ஆலோசனையைக் கேட்டல் முதலியவைகளையும் கொள்க.

2 மயக்கத்தால் ஒப்பாராயினும் - தமியனாய்ப் பல்லார் பகைகொள்பவனும் பித்தங்கொண்டவருக் மயக்கத்தால் ஒப்பாயிருப்பாராயினும்.

3 இவனை - தமியனாய்ப் பல்லார் பகைகொள்பவனை.

4 வேறு வேறு - தனித்தனியாக,

5 பொதுவாகக்கூறியது ௧-வது குறள், சிறப்பாகக் கூறியது ௨-வது, ௩-வது குறள்.

காவது துணையுள்ளவிடத்தும வேலலுதல் சந்தேகமாயிருகக அத்துணை யில்லாமலும் பலரோடு பகைகொணடு அவராலவேறு வேறு போர செய்யிடத்தும் ஒருமுகமாகப் போர் செய்யிடத்தும் அழிகதே விடுதல இவை மூன்றுபாட்டாலும் பகைகொளாநதற் குறறம பொதுவினும் சிறபபினும் சொலலப்பட்டது

(க - து) தனிததிருந்து பலரோடு பகைப்பவன் மிகவும அறிவினனுவன் என்பது. (௩)

௪. பகைநட்பாக கொண்டொழுகும் பண்புடை யாளன்
றகைமைககட் டங்கிற் றுலகு.

பரி —(இ - ள் ) வேண்டியவழிப பகையை வேறுபடுததுத் தனக்கு நட்பாகச் செயதுகொண டொழுகும் இயல்பினையுடைய அரசனது பெருமையுள்ளே 1 அடங்கிறறு இவவுலகு, எ - று

வேண்டிய வழியென்பது 2 ஆக்கத்தான் வநதது. வேறுபடுத்தல்-பகைநிலைமையி னீககுதல். ஒழுகல - நீதிவழியொழுகல் பெருமை - பொருள் படை என இருவகைத்தாய ஆறறல அதன் வழித்தாதறகு எஞ்ஞான்றுந் திரிபின்மையின், அத துணிவுபறறித் 'தங்கிறறு' என்றார்.

தெளி —(இ - ள )பகை-பகையை, நடபாக் கொண்டொழுகும் - (வேண்டியவிடதது வேறுபடுததிந தனககு) நடபாகச் செய்துகொணடு நடக்கும், பணபுடையாளன்-இயலபினையுடைய அரசனது, தகைமைக்கண - பெருமையுள்ளே, உலகு-உலகம, தங்கிறறு-அடஙகிற்று, எ - று

வேண்டிய விடத்து என்பது நடபாக என்னும் ஆக்கச்சொலலினுல் வந்தது வேறுபடுத்தல்-பகைநிலையினின்றும் நீககுதல் ஒழுகல்-நீதிவழிநடததல பெருமை-பொருள் படை எனஇருவகையதாகிய ஆற்றல். அப்பெருமையின்வழியதாதற்கு என்றும் வேறுபாடில்லாமையால், அத்துணிவுபற்றித் 'தங்கிற்று' என்றார்.

(க - து.) வேண்டியவிடத்துப் பகைவரை நட்பினராககொண்டு நடக்கும்அரசனது பெருமையுள்ளே உலகம் நிலைபெற்றதென பது. (௪)

௫. தன்றுணை யின்றாற் பகையிரண்டாற் றானொருவ
னின்றுணையாக் கொள்கவற்றி னொன்று.

பரி.—(இ - ள்.) தனக்குதவுந் துணையோவெனின இல்லை, 3 நலிவுசெய்யும் பகையோவெனின் இரணடு, அஙஙனமாய் நினறவழி ஒருவனுகிய தான

1 அடஙகிறறு - சுவாதினப்பட்டது.
2 பொருள்களை வருவித்துரைககும் ஏதுக்களுள் ஆக்கசசொலலும் ஒன்றுஎன்பது இஙகேயறியத்தக்கது
3 நலிவுசெயயும் - வருததும்

அப்பகையிரண்டனுட் பொருந்தியதொன்றை அப்பொழுதைக்கு இனிய துணையாகச் செய்துகொள்க, எ - று.

பொருந்தியது-ஏனையதனை வேறற்கு ஏற்றது. அப்பொழுது-அவ்வெல்லும்பொழுது திரிபின்றாகச் செய்துகொள்கவென்பார் 'இன்றுணையா' என்றார் 1 ஆலகன் - அசை இவை யிரண்டுபாட்டானும் நட்பாக்கற்பாலது கூறப்பட்டது

தேளி —(இ - ள) தனறுணை-தனக்கு உதவுந்துணையோவெனில், இன்று - இல்லை, பகை-(நலிவுசெய்யும்) பகையோவெனில, இரண்டு-(அவ்விதமாய்ச் சிறப்பிடத்து)தானொருவன் - ஒருவனாகிய தான, அவற்றின்-அப்பகையிரண்டனுள், ஒன்று-(பொருந்தியதாகிய)ஒன்றை,இன்றுணையா - (அப்பொழுதிற்கு) இனியதுணையாக, கொள்க - (செய்து) கொள்ளக்கடவன், எ - று.

பொருந்தியது - மற்றொருபகையை வெல்லுதற்கு ஏற்றது அப்பொழுது - அவ்வெல்லும்பொழுது வேறுபாடில்லாமல செய்துகொள்கவென்பார், இன்றுணையா' என்றார் ஆவிரண்டும-அசை இவை இரண்டுபாட்டாலும் நட்பாக்கற்றன்மையது சொல்லப்பட்டது.

(க - து) தனக்குத் துணையின்றிப் பகையிரண்டாயிருக்கு மரசன் அச்சமயத்திற்கேற்றபடி அவ்விரண்டிலொன்றைத் துணையாகக் கொள்ளக்கடவன் என்பது. (௫)

௬ தேறினுந் தேறா விடினு மழிவின்கட்
டேறான் பகாஅன் விடல்.

பரி —(இ - ள்) பகைவனை முன் 2 தெளிந்தானாயினுந் தெளிந்திலனாயினும் தனக்குப் புறத்தொருவினையால் றாழ்வு வந்துழிக் கூடாது நீக்காது இடையேவிட்டு வைக்க, எ - று

முன் தெளிந்தானாயினும் 3 அப்பொழுது கூடாதொழிகவென்றது, 4 உள்ளாய்நின்று கெடுத்தல் நோக்கி தெளிந்திலனாயினும் அப்பொழுது நீக்காதொழிக வென்றது, 5 அவ்வழிவிற்குத் துணையாதல நோக்கி இதனை நொதுமலாக்கற்பாலது கூறப்பட்டது.

1 ஆலகன் - இன்றால இரண்டால் என்பவற்றிலுள்ள ஆலகள்.

2 தெளிந்தானாயினும் - இப்போதிவன பகைவனல்லனென்று தெளிந்திருந்தானாலும்.

3 அப்பொழுது - புறத்தொருதொழிலால தாழ்வு (தோலவி) உண்டாயகாலத்தில்.

4 உள்ளாய் - உட்பகையாய்,

5 அவ்வழிவிற்கு - புறத்தொரு தொழிலாலவந்த தாழ்விற்கு

தெளி.—(இ - ள்) தேறினும் - (பகைவனை முன்) தெளிந்தானாயினும், தேறுவிடினும்-தெளிந்திலனாயினும், அழிவினகண்-(தனக்குப் புறத்தொருதொழிலால்) தாழ்வுவந்தவிடத்து, தேறான்-கூடாது, பகான்-நீக்காது, விடல் - (கடுவே) விட்டுவைக்கக்கடவன். எ - று

முன்தெளிந்தானானாலும் அப்போது கூடாதொழிகவென்றது, உள்ளாய் நின்று கெடுத்தலைநோக்கி தெளிந்திலனாயினும் அப்போது நீக்காதொழிக வென்றது, அவ்வழிப்பிறர்க்குத் துணையாதனோக்கி இதனால் அயலாக்குந்தன்மை யது சொல்லப்பட்டது.

(க - து) அரசன தனக்கொரு தாழ்வுவந்தவிடத்துப் பகைவருடன் கூடாமலும் அவரை நீக்காமலு மிருக்கக்கடவன் எனபது. (சு)

எ. நோவற்க நொநத தறியார்க்கு மேவற்க
மெனமை பகைவ ரகதது.

பரி —(இ - ள்.) நொந்ததனைத தாமாக வறியாத நட்டார்க்குத் தன்னோவு சொலலறக, வலியின்மை பாரத்திருக்கும பகைவர்பாட்டு அவ்வலிமையின்மையை 1 மேலிட்டுக கொள்ளறக, எ - று.

2 நோவென்னும முதனிலைத்தொழிறபெயர் ஈண்டு அதுசொல்லுதற்கணாயிற்று பகைவாகட் டவிாவது கூறுவாா, நட்டாகட் டவிர்வதும் உடன்கூறினா இதனால் அவ 3 விருபகுதிக்கண்ணுஞ் செய்வது கூறப்பட்டது

தெளி —(இ - ள்) நொநதது - நொந்ததனை, அறியார்கரு-(தாமாக)அறியாதநட்பினர்க்கு, நோவற்க-(தன்) நோவுசொல்லாதிருக்ககடவன், மெனமை-வலியில்லாமையை, பகைவரகத்து-(பார்ததிருக்கும) பகைவரிடதது, மேவற்க - (அவ்வலியிலலாமையை) மேலிட்டுக கொள்ளாதிருககககடவன், எ-று.

நோ என்னும முதனிலைத் தொழிற்பெயர் இங்கே அநநோவைச் சொல்லுதலி லாயிற்று. பகைவரிடத்தே செய்யலாகாதது சொல்லவந்தவர், நட்பினரிடத்தே செய்யலாகாததும் உடன்சொல்லினா இதனால் அவ்விருவகையிடததும் செய்வது சொல்லபபட்டது.

(க - து.) அரசன தனநட்பினருக்குத தனது நோவைச சொல்லுதலும் பகைவர்கருத் தனது வலியினமையைககாட்டுதலும ஒழியக்கடவன் எனபது (எ)

---

1 மேலிட்டுககொள்ளல்—தன்னிடத்திருபபதாகக் காட்டுதல்.

2 வருநதுதல் எனனும் பொருளதான நோ (நோதல்) என்னும் முதனிலைத் தொழிறபெயர் இஙகே அநநோவைச் சொலலுதலி லாயிற்று [பகுதி தொழிற்பெயராய் பொருளையுணர்தது மிடத்து அது முதனிலைத தொழிற் பெயரெனபபடுகின்றது ]

3 இருபகுதிககணணும - சிநேகிதரிடததும பகைவரிடத்தும

அ. வகையறிந்து தற்செய்து தற்காப்ப மாயும்
பகைவர்கட் பட்ட செருக்கு.

பரி —(இ - ள்) தான் வினைசெய்யும் வகையை அறிந்து அது முடிதற்கு வேண்டுந் தன்னைப் பெருக்கி மறவிபுகாமற்றன்னைக் காக்கவே, தன்பகைவர் மாட்டுளதாய களிப்புக்கெடும், எ - று.

வகை - வலியனாயின் தானெதிரே பொருமாறும், மெலியனாயவழிப் போர்விலக்குமாறு [1] முதலாயின பெருக்கல் - பொருள் படைகளாற்பெருக்கச்செய்தல் களிப்பு - [2] இவற்றான் வேறுமென்றெண்ணி மகிழ்ந்திருத்தல் [3] இவ்விருகுதலறிந்து தாமே அடங்குவரென்பதாம் இதனுற் கனைந்தபடாமை தனக்குச் செயவன கூறப்பட்டன.

தெளி —(இ - ள) வகையறிந்து - (தான் தொழில் செய்யும்) வகையை யறிந்து, தற்செய்து - (அத்தொழில் முடித்தற்கு ஏற்பத்) தன்னைப் பெருக்கி, தற்காப்ப - (மறதி அடையாமல்) தன்னைக்காக்கவே, பகைவர்கண் - (தன்) பகைவரிடத்து, பட்ட - உண்டாகிய, செருக்கு - களிப்பு, மாயும் - கெடும் எ-று.

வகை வலியவனாய்த் தான் நேரே போர்செயவிரும்பும், மெலியவனாயவளவிலே போர் விலக்கும் விருப்பம் முதலானவை பெருக்கல்-பொருள் படைகளாலே பெருக்கச்செய்தல், களிப்பு - இவைகளால் வெல்வோமென்றெண்ணி, மகிழ்ந்திருத்தல் இவ்விருகுதல் அறிந்து தாமே அடங்குவரென்பதாம் இதனாற் களையுந்தன்மையதனிடத்துச் செய்வன சொல்லப்பட்டன

(க - து) தொழில்வகை யறிந்து மறதியின்றித் தன்னைக் காக்கப் பகைவர் செருக்குக் கெடும் என்பது (அ)

கூ. இளைதாக முண்மரங் கொல்க களையுநர்
கைகொல்லுங் காழ்த்த விடத்து.

பரி —(இ - ள்.) களையவேண்டுவதாய முண்மரத்தை இளைதாய நிலைமைக்கட் களைக, அன்றியே [4] முதிர்ந்த நிலைமைக்கட் களையலுறிற் களைவார் கையினை [5] அதுதான் களையும், எ-று.

---

1 முதலாயின என்றதனால் இரண்டுபகைவரில் ஒருபகைவரைத்தனக்குத் துணையாகக்கொள்ளுதல், பகைவரிடத்துத் தனது வலியில்லாமையைக் காட்டாமை முதலியவைகளையுங்கொள்க

2 இவற்றான் - பொருள் படைகளால

3 இவ்விருகுதலறிந்து—(வகையறிந்து தற்செய்து தற்காக்கும்) அழுத்தத்தை (பக்தோபஸ்தை)த் தெரிந்து.

4 முதிர்ந்த - வயிரம் பற்றிய. 5 அதுதான - அம்முள் மரமே.

களையப்படுவதாய தம்பகையை அது மெலிதாய காலத்தே களைக, அன்றி வலிதாய காலத்துக் களையலுறின் தம்மை அதுதான் களையு மென்பது தோன்ற நின்றமையின் இது [1] பிறிது மொழிதல். இதனாற் களையும் பருவங் கூறப்பட்டது.

தெளி —(இ - ள) முள்மரம் - (களையவேண்டுவதாகிய) முள்ளு மரத்தை, இளைதாக - இளைதாகிய நிலையிலே, கொல்க - களையக்கடவர், (அல்லாமல்) காழ்த்த விடத்து - முதிர்ந்த நிலையில், (களையத் தொடங்கினால்) களையுநர் - களைபவரது, கை - கையை, கொல்லும் - (அதுதான்) களையும், எ-று

களையப்படுவதாகிய தம்பகையை அப்பகை மெலிதாகிய காலத்தே களைக, அப்படி செய்யாமல் வலிதாகிய காலத்தே களையத் தொடங்கினால் தம்மை அப்பகைதான் களையுமென்பது தோன்ற நின்றமையால் இக்குறள் பிறிது மொழிதலணி இதனாற் களையும் பருவம் சொல்லப்பட்டது

(க - து) பகைவர் மெலியராயுள்ள காலத்தே அவரை யழிக்க வேண்டும் என்பது (கூ)

ய உயிர்ப்ப வுளரல்லர் மன்ற செயிர்ப்பவர்
செம்மல் சிதைக்கலா தார்

பரி —(இ - ள்,) தம்மொடு பகைப்பாரது [2] தருக்கினைக் கெடுக்கலா யிருக்க இகழ்ச்சியான் [3] அது செய்யாத வரசர் பின் உயிர்க்குமாத்திரத்திற்கும் உளரல்லா ரொருதலையாக, எ-று

[4] அவர் வலியராய்த் தம்மைக் [5] களைதல் ஒருதலையாகலின், இறந்தாரே யாவரென்பதாம் [6] அவரை யிகழ்ந்த துணையானே தாமிறப்பரெனினு மமையும் இதனாற் களையாதொழிதற் குற்றம் கூறப்பட்டது

தெளி.—(இ - ள்) செயிர்ப்பவர் -(தம்மோடு) பகைப்பாரது, செம்மல்-தருக்கினை, (கெடுக்கலாயிருக்க இகழ்ச்சியால்) சிதைக்கலாதார்-(அது) செய்யாத அரசர் உயிர்ப்ப - (பின்) மூச்சுவிடுமாத்திரத்திற்கும், மன்ற - நிச்சயமாக, உளரல்லர் - இருக்கின்றவரல்லர், எ-று

அவர் வலியவராய்த் தம்மைக் களைதல் நிச்சயமாகலால், இறந்தாரே யாவரென்பதாம் இதனால் களையாதவிடத் துண்டாகும் குற்றம் சொல்லப்பட்டது

(க - து) பகைவரது செருக்கை இகழ்ச்சியால் கெடுக்காத வரசர் விரைவிலழிவர் என்பது. (ய)

---

1 ஒருபொருளை விளக்கச் செய்வதற்கு அப்பொருளோடொத்த மற்றொரு பொருளைக் கூறுதல் பிறிதுமொழிதலணி.
2 தருக்கினை - காவத்தை. 3 அது - கெடுத்தல.
4 அவர் - பகைவர். 5 களைதல - அழித்தல.
6 உயிர்ப்ப வுளரலலர் என்பதற்கு அவர் (பகைவர்) மூச்சுவிட்ட வளவாலே தாம் சாவரென்று பொருள் கூறினும் பொருந்தும் (மிக எளிதில பகைவரா லழிவரெனபது திரண்டபொருள்).

## அ௯-ம். அதி.—உட்பகை.

பரி—அஃதாவது 1 புறப்பகைக்கு இடனாகக்கொடுத்து 2 அது வெல்லுக துணையும் 3 உள்ளாய் நிற்கும் பகை. 4 இதுவும் களையப்படுவதன் பாலதாகலின், பகைத்திறந்தெரிதலின்பின் வைக்கப்பட்டது

தெளி.—அஃதாவது புறப்பகைக்கு இடமாக்கிக்கொடுத்து அது வெலலுமளவும் உள்ளாய் நிற்கும் பகை இதுவும் களையப்படுவதிலே சேர்ந்ததாகலால, பகைத்திறந்தெரிதலின்பின் வைக்கப்பட்டது

க நிழனீரு மின்னாத வின்னா தமர்நீரு
மின்னாவா மின்னா செயின்.

பரி—(இ-ள) ஒருவனுக்கு அனுபவிக்க வேண்டுவனவாய நிழலும் நீரும முன் இனியவேனும பின நோய் செய்வன இன்னாவாம், அதுபோலத் தழுவ வேண்டுவனவாய 5 தம ரியல்புகளும் முன இனியவேனும் பின் இன்னா செய்வன இன்னாவாம், எ-று.

நோய்-6 பெருங்கால் பெருவயிறு 7 முதலாயின தம ரென்றதனால் உடபகையாதற் குரியராய 8 ஞாதிய ரென்பதறிக இன்னா செயல-முன்வெளிப்படாமை நின்று துணைபெறறவழிக கெடுத்தல்.

தெளி—(இ-ள்) (ஒருவனுக்கு) நிழனீரும்-(அனுபவிக்கவேண்டுவன வாகிய) நிழலும் நீரும, இன்னாத-(முன் இன்பஞ் செயவனவாயினும் பின்) நோய் செய்டவை, இன்னா - இனியனவல்லவாம, (அதுபோல்) தமர்நீரும - (தழுவ வேண்டுவனவாகிய) தம்மவரியல்புகளும், இன்னாசெயின் - (முன் இன்பஞ் செய்வனவாயினும் பின்) துன்பஞ் செய்பவை, இன்னாவாம - இனியனவல்லவாம், எ-று

நோய்-பெருங்கால பெருவயிறு முதலானவை தமரென்றதனால் உடபகையாதற்குரியராய ஞாதியரென்பதறிக. இன்னாசெயல-முன் வெளிப்படாதிருந்து துணைபெறற விடத்துக் கெடுத்தல்.

(க-து.) உட்பகையாயுள்ள சுற்றததார் பின்பு துன்பஞ் செய்யும் நீரும் நிழலும்போ லாவர் என்பது. (க)

---

1 புறப்பகைக்கு - வெளிப்படையாயுள்ள பகைவாக்கு.
2 அது - புறப்பகை, 3 உள்ளாய் - கட்பாய்
4 இதுவும் - உடபகையும்,
5 தமரியல்புகளும் - சுற்றத்தார து குணங்களும்.
6 பெருங்கால் - யானைக்கால்.
7 முதலாயின என்றதனால் கணிர்சுரம், குஷ்டம், குன்மம், கட்டி முதலானவைகளும் கொள்க.
8 ஞாதியர் - தாயத்தார் (பங்காளிகள்).

௨. வாள்போல் பகைவரை யஞ்சற்க வஞ்சுக
கேள்போல் பகைவர் தொடர்பு

பரி.—(இ-ள்.) வாள்போல எறிது மென்று வெளிப்பட்டு நிற்கும் பகைவரை அஞ்சாதொழிக, அங்ஙனம் நில்லாது கேள்போல மறைந்து நிற்கும் பகைவர் நட்பினை அஞ்சுக, எ-று.

முன்னே யறிந்து காக்கப்படுதலான் 'அஞ்சற்க' என்றும், அங்ஙனம் அறியவும் காக்கவும் படாமையிற் கேடுதல் ஒருதலை யென்பது பற்றி 'அஞ்சுக' என்றுங் கூறினார். பின்செய்யும் பகையினுங் கொடிதாகலானும் காக்கும் காலம் 1 அதுவாகலானும் அஞ்சப்படுவது முன்செய்த 2 அவர் தொடர்பாயிற்று. இவை யிரண்டு பாட்டானும் உட்பகை ஆகாதென்பது கூறப்பட்டது.

தெளி.—(இ-ள்.) வாள்போல - வாள்போல, (வெட்டுவோமென்று வெளிப்பட்டு நிற்கும்) பகைவரை-அஞ்சற்க - அஞ்சாதிருக்கக்கடவர், (அப்படி நில்லாமல்) கேள்போல்-உறவினர்போலே,(மறைந்து நிற்கும்)பகைவர்-பகைவரது, தொடர்பு - நட்பினை, அஞ்சுக-அஞ்சக்கடவர், எ-று.

முன்னே யறிந்து காக்கப்படுதலால்'அஞ்சற்க'என்றும்,அப்படி அறியவும் காக்கவுங் கூடாமையால் கெடுதல் நிச்சய மென்பதுபற்றி 'அஞ்சுக' என்றும் சொல்லினார். பின் செய்யும் பகையினும் கொடிதாகலாலும் காக்குங் காலம் அதுவாகலாலும் அஞ்சப்படுவது முன் செய்த அவர் நட்பாயிற்று. இவை இரண்டு பாட்டாலும் உட்பகையாகாதென்பது சொல்லப்பட்டது.

(க - து.) உறவினர்போலுள்ள பகைவர்க்கு மிகவுமஞ்சவேண்டும் என்பது. (௨)

௩. உட்பகை யஞ்சித்தற் காக்க வுலைவிடத்து
மட்பகையின் மாணத் தெறும்.

பரி—(இ-ள்) உட்பகையாயினாரை யஞ்சித்தன்னைக் காத்துக்கொண்டொழுகுக; அங்ஙன மொழுகாதவழித் தனக்கோர் தளர்ச்சி வந்தவிடத்துக் குயவன் மட்கலத்தை யறுக்குங் கருவிபோல 3 அவர் தப்பாமற் கெடுப்பர், எ-று.

காத்தல் - 4 அவரணையாமலும் அவர்க்கு உடம்படாமலும் பரிகரித்தல்.

---

1 அதுவாகலானும் - கேள்போல் மறைந்து நடக்கும் பகைவரது சிநேகமாதலாலும்.

2 அவர் - கேள்போல் மறைந்து நடக்கும் பகைவர்

3 அவர்-உட்பகையாயினோர்.

4 உட்பகையாயினோர் தம்மிடத்துச் சேராமலும் அப்பகைவரது செயல்களுக்கு உட்படாமலும் (அவரை) விலக்குதல்.

1 மண்ணை அறுக்குங் கருவி மட்பகையெனப்பட்டது பகைமை தோன்றாமல் 2 உள்ளாயிருந்தே பிளந்தறுத்தலின், கெடுப்பதற்குத் தப்பாதென்பதாம்

தெளி.—(இ-ள்) உட்பகை - உட்பகையாயினாரை, அஞ்சி - அஞ்சி, தற்காக்க - தன்னைக் காத்துக்கொண்டு நடக்கக்கடவர், (அப்படி நடவாதபோது) உலைவிடத்து - (தனக்கு ஒரு) தளர்ச்சி வந்தவிடத்து, மட்பகையின் - (குயவன்) மட்கலத்தை அறுக்கும் ஆயுதம்போல, மாண - தப்பாமல், தெறும் - (அவர்) கெடுப்பர், எ-று.

காத்தல் - அவரோடு உறவாயிருந்தும் அவருக்கு உடன்படாமலும் பரிகரித்தல். மண்ணைப் பிரிக்கும் கருவி மட்பகை எனப்பட்டது பகைமை தோன்றாமல் உள்ளாயிருந்தே பிளத்தலால், கெடுத்தல் தப்பாதென்பதாம்.

(க-து) உட்பகையுள்ளார் சமயமறிந்து கெடுத்தலால் அவர்க்கு அஞ்சித் தன்னைக் காத்துக்கொள்ளல் வேண்டும் என்பது. (௩)

௪. மனமாணா வுட்பகை தோன்றி னினமாணா
வேதம் பலவுந் தரும்.

பரி.—(இ-ள்) 4 புறந்திருந்தியதுபோன்று அகந்திருந்தாத உட்பகை அரசனுக்கு உண்டாவதாயின், 5 அஃது 6 அவனுக்குச் சுற்றம் வயமாகாமைக் கேதுவாகிய குற்றம் பலவற்றையுங் கொடுக்கும், எ-று.

7 அவை - சுற்றத்தாரை 8 உள்ளாய் நின்று வேறுபடுத்தலும், 9 அதனால் 10 அவர் வேறுபட்டவழித் 11 தான் தேறாமையும், பின் 12 அவற்றான் விளைவனவுமாம்.

---

1 மண்ணைப் பகுக்குங்கருவியைக் குடாரா ஊசி யென்பர். இது மண்ணினின்று கழுவலானவற்றைப் புணர்ப்பவனுமிடத்துத்தான் உடனிருந்தும் முடிவில் அவற்றைப் பிரித்துவிடுவதற் கேதுவாயிருப்பதென்க

2 உள்ளாயிருந்தே - உடனாயிருந்தே 3 கீழறுத்தலின் - புறப்பகைக்கு இடமாக்கிக்கொடுத்து வருதலால்.

4 புறந்திருந்தியது போன்று அகந்திருந்தாத—வெளியில் நட்பிருப்பது போற் காட்டி மனத்தில் நட்புக்கொள்ளாத.

5 அஃது - உட்பகை 6 அவனுக்கு - அரசனுக்கு

7 அவை - பலகுற்றங்கள். 8 உள்ளாய்நின்று - நட்பாயிருந்து.

9 அதனால் - வேறுபடுத்தலால் (ஒற்றுமையைக்கெடுத்தலால்).

10 அவர் - சுற்றத்தார்

11 தான்தேறாமையும் - அரசனாகிய தான் சுற்றத்தாரால் நம்பப்படாமையும்.

12 அவற்றான் விளைவனவுமாம் - வேறுபடுத்தலாலும் தேறாமையாலும் உண்டாகும் தீமைகளுமாம்.

தெளி.—(இ - ள்) மனமாணா - (புறந்திருந்தியதுபோன்று) அகந்திருந்தா, உட்பகை-தோன்றின்-(அரசனுக்கு) உண்டாவதானால், (அஃது அவனுக்கு) இனமாணா - சுற்றம் வசப்படாமைக்குக்காரணமாகிய, ஏதம்பலவும்-குற்றம்பலவற்றையும், தரும்-கொடுக்கும், எ-று

அவை-சுற்றத்தாரை உள்ளாயினின்று வேறுபடுத்தலும், அதனால் அவர் வேறுபட்டதைத் தான் தேறாமையும், பின் அவைகளால் விளைவனவு

(க - து) உட்பகையுள்ள வரசன் பலகுற்றங்களுக் காளாவனென்பது (௪)

௫ உறன்முறையா னுட்பகை தோன்றி னிறன்முறையா
னேதம் பலவுந் தரும்.

**பரி**—(இ - ள்) புறத்து 1 உறவுமுறைத் தன்மையோடு கூடிய உட்பகை அரசனுக்கு உண்டாவதாயின், 2 அஃது அவனுக்கு இறத்தன் முறையோடு கூடிய குற்றம் பலவற்றையுங் கொடுக்கும், எ - று

3 அவை - புறப்பகைத் துணையாய் நின்றே 4 அது தோன்றாமற் கோறல் 5 முதலிய வஞ்சனை செய்தலும், அமைச்சர் 6 முதலிய உறுப்புகளைத் 7 தேய்த்தலும் 8 முதலாயின

தெளி —(இ - ள்) உறன்முறையான் - (புறத்தில்) உறவுமுறைத்தன்மையோடுகூடிய, உட்பகை-தோன்றின்-(அரசனுக்கு) உண்டாவதானால், (அஃது அவனுக்கு) இறன்முறையான் - இறத்தல் முறையோடு கூடிய, ஏதம்பலவும்-குற்றம் பலவற்றையும், தரும் - கொடுக்கும், எ - று

அவை-புறப்பகைக்குத் துணையாய்நின்றே அதுதோன்றாமல் கொல்லுதல் முதலிய வஞ்சனைசெய்தலும், மந்திரிகள் முதலிய அங்கங்களைத் தேய்த்தலும் முதலானவை

(க - து) உறவு முறைத்தன்மையோடு கூடிய பகையால் அரசன் பல குற்றங்களையு மடைந்தழிவான் என்பது (௫)

---

1 உறவுமுறைத்தன்மை - பந்துத்துவம்
2 அஃது அவனுக்கு - உட்பகை அரசனுக்கு 3 அவை - பலகுற்றங்கள்
4 அது தோன்றாமல் - புறப்பகைக்குத் துணையா யிருத்தல் வெளிப்படாதபடி.
5 முதலிய என்றதனால் பகைவர்க்கு அடிமையாகச் செய்தல், தனியனாக்கி ஓடச்செய்தல் முதலியவைகளையுங் கொள்க
6 முதலிய என்றதனால் நாடு, அரண், பொருள், படை, நட்புக்களையுங் கொள்க
7 தேய்த்தல் - நாளுக்கு நாள் தம்மளவிற் குறைதற்குரிய காரியங்களைச் செய்தல்
8 முதலாயின என்றதனால் அரசனது சோர்வையும், வெல்லுங் காலத்தையும், அதற்குரிய இடத்தையும் பகைவர்க்குத் தெரிவித்தல் முதலானவைகளையுங் கொள்க.

௬. ஒன்றாமை யொன்றியார் கட்படி
பொன்றாமை யொன்ற லரிது.

பரி.—(இ-ள்) பகைமை தனக்குள்ளாயினர் மாட்டே பிறக்குமாயின், அரசனுக்கு இறவாமை கூடுதல் எஞ்ஞான்று மரிது, எ-று.

பொருள் படை 1 முதலிய உறுப்புகளாற் பெரியனாய காலத்து மென்பார் 'எஞ்ஞான்றும்' என்றார். இவை நான்கு பாட்டானும் 2 அதனாற் றனக்கு வருங் குற்றங் கூறப்பட்டது.

தெளி.—(இ-ள்) ஒன்றாமை - பகைமை, ஒன்றியார்கண் - (தனக்கு) உள்ளாயினரிடத்து, படின் - உண்டாகுமாயின், பொன்றாமை - (அரசனுக்கு) இறவாமை, ஒன்றல் - கூடுதல், எஞ்ஞான்றும் - எக்காலும், அரிது - முடியாது, எ-று.

பொருள்படை முதலிய உறுப்புக்களாலே பெரியனாகிய காலத்துமென்பார் 'எஞ்ஞான்றும்' என்றார். இவை நான்குபாட்டாலும் அதனால் தனக்கு வருந் தீங்கு சொல்லப்பட்டது.

(க - து) அரசனுக்குத் தனக்குள்ளாயினரிடத்து உட்பகையுண்டாயின் அவன் இறவாம லிருத்தலில்லை என்பது. (௬)

௭. செப்பின் புணர்ச்சிபோற் கூடினுங் கூடாதே
யுட்பகை யுற்ற குடி.

பரி.—(இ-ள்) செப்பினது புணர்ச்சிபோலப் புறத்து வேற்றுமை தெரியாமற் கூடினாராயினும், உட்பகை உண்டாய குடியிலுள்ளார் அகத்துத் தம்முட் கூடார், எ-று.

செப்பினது புணர்ச்சி - 3 செப்புமூடியோடு புணர்ந்த 4 புணர்ச்சி உட்பகையான் மனம் வேறுபட்டமையிற் புறப்பகை பெற்றுழி வீற்றுவீற்றாவரென்பதாம். 5 குடி கூடாதென்பதனை நாடு வந்ததென்பது போலக் கொள்க. 6 உட்பகை தானுற்ற குடியோடு கூடாதென்றும் உட்பகையுண்டாய குடி அப்பகையோடு கூடாதென்றும் உரைப்பாருமுளர்.

---

1 முதலிய என்றதனால் அரண் நட்பு முதலியவைகளையுங் கொள்க.
2 அதனால் - உட்பகையால்.
3 செப்பு - சிமிழ். 4 புணர்ச்சி சேர்க்கை.
5 நாடு வந்ததென்ற விடத்து நாடு என்பது இடவாகு பெயராய் நாட்டிலுள்ளார்க் கானதுபோல் குடி கூடாது என்ற விடத்துக் குடி யென்பது இடவாகுபெயராயக் குடியிலுள்ளார்க் காயிற்றென்க.
6 உட்பகையுற்ற குடி கூடாது என்பதற்கு உட்பகை யுடையான் தானிருக்கிற குடியிலுள்ளாரோடு கூடான் என்றும், உட்பகையுண்டாகிய குடியிலுள்ளார் அவ்வுட்பகை யுள்ளாருடன் கூடாரென்றும் பொருளுரைப்பாருமுண்டென்பது.

தேளி —(இ- ள) செபபின் செடபினது; புணர்ச்சிபோல்-புணர்ச்சியை டபோல, கூடிநுய - (பறநதேவேறறுமை தெரியாமற) கூடினுராயினும, உடப கை—உறற - உளாட்கிய, குடி-குடியிலுள்ளார், கூடாதே-(அகத்தே தமமுட்) கூடார, எ - று.

செட்டினது புணாசசி-செபபு மேனமூடியோடு புணாநத புணர்சசி அவர் உடபகையால மனம வேறுபடடமையால் புறபடகைபெற்றவிடத்தே வேறு வேறுவரெனபதாம.

(க - து) உட்பகையுண்டாகிய குடியிலுள்ளவா புறதது வேற் றுமை தெரியாமற கூடினவராயிருந்தாலும அகத்துத தம்முள கூடா ரெனபது (எ)

அ. அரம் 1 பொருத 2 பொனபோலத் தேயு முரமபொரு துட்பகை யுற்ற குடி

பரி —(இ -ள) முன் வளாநது வநதநாயினும உடபகையுண்டாயகுடி அரததாற பொரபபட்ட இருமபுபோல 3 அதனுறபொரப்பட்டு வலிதேயும், எ-று

பொருதென்னுஞ் செயட்டாடடுவினையெசசம் தேயுமெனனும் வினைகொ ண்டது. 4 அஃது உரத்தின றெழிலாயினுங குடிமே லேற்றுதலின், வினை முதலவினையாயிற்று காரியஞ் செயவதுபோன்று பொருக்தி மெலலமெல்லப் பிரிவித்தலான், வலி தேயகதுவிடு மென்பதாம இவை யிரணடு பாடடானும் 5 அவன் குடிகரு வருந திங்கு கூறபபட்டது

தேளி —(இ - ள) (முன்னேவளர்ந்து வநததாயினும்) உட்பகையுற்றகு டி-உட்பகையுண்டாகியகுடி, அரம்பொருத-அரததினுலே தேயக்கபபட்ட, பொ னபோல - இரும்புபோல, பொருது - (அதனுலே) தேய்க்கப்பட்டு, உரம் - வலிமை, தேயும - குறையும், எ-று

1 பொருத பொருது எனபன செயடடாடடுவினைபபொருளில் வநத செய

2 இரும்புக்கும் பொன எனனும் பெயரிருததலாலே இரும்பைப் பொன் என று கூறினுர.

3 அதனுல் பொரபபட்டு - உடபகையால கெடுக்கபபட்டு.

4 அஃது - (தேயும் என்னும் வினை) உரததின் (வலியின) தொழிலாயிருநதா லும (குடிதேயும என்று தேயதற்றெழிலை) குடியின்மேலேறறிக கூறு தலால் (தேயும் என்னும் வினை) குடி யென்னும் வினைமுதலின (எழுவா யின்) வினையாயிறறென்க

5 அவன் - உடபகையுடையான

'செயப்படாவினைப்பொருளில்வந்த பொருது என்னும் வினையெச்சம் தேயும் என்னும் வினைகொண்டு முடிந்தது. தேய்தல் வலியினது தொழிலாயினும் குடிமேலேற்றிக் கூறுதலால், குடி யென்னும் வினைமுதலின் வினையாயிற்று. உட்பகையாயுள்ளவர் காரியஞ்செய்வதுபோன்று பொருந்தி யெல்லமெல்லக் குடியிலுள்ளாரைப் பிரியச்செய்தலால், வலிமை தேய்ந்துவிடுமென்பதாம். இவையிரண்டாட்டாலும் அவன்குடிக்கு வரும் தீங்கு சொல்லப்பட்டது.

(க - து.) உட்பகையுள்ளகுடி அரத்தினால் தேய்க்கப்பட்ட இரும்புபோல வலிகுறைந்தொழியும் என்பது. (அ)

௯ எட்பக வன்ன சிறுமைத்தே யாயினு
முட்பகை யுள்ளதாங் கேடு.

**பரி.**—(இ - ள்.) அரசனது உட்பகை 1 அவன் பெருமையை நோக்க எள்ளின்பிளவை யொத்த சிறுமையுடைத்தே யாயினும் 2 பெருமையெல்லாம் அழியவருங்கேடு 3 அதனகத்த தாம், எ - று.

எத்துணையும் பெரிதாயகேடு தனக்கெல்லைவருந்துணையும் எத்துணையுஞ் சிறிதாய உட்பகையுள்ளே யடங்கியிருந்து, வந்தால் வெளிப்பட்டு நிறகுமென்பதாம். இதனால் 4 அது சிறிதென்று இகழப்படாதென்பது கூறப்பட்டது.

**தெளி.**—(இ - ள்.) உட்பகை - (அரசனது) உட்பகை, (அவன்பெருமையை நோக்க) எட்பகவன்ன - எள்ளின்பிளவையொத்த, சிறுமைத்தேயாயினும் - சிறுமையுடையதேயாயினும், கேடு - (பெருமையெல்லாம் அழியவரும்) கேடு, உள்ளதாம் - (அத)னகத்ததாம், எ - று.

மிகவும் பெரிதாயகேடு தனக்கு எல்லைவருமளவும் மிகவுஞ் சிறிதாய உட்பகை உள்ளே அடங்கியிருந்து, வந்தால் வெளிப்பட்டு நிறகுமென்பதாம். இதனால் அது சிறிதென்று இகழப்படாதென்பது சொல்லப்பட்டது.

(க - து.) உட்பகை சிறிதாயிருந்தாலும் அதனாலுண்டாகுங்கேடு பெரிதாமென்பது. (௯)

௯௦. உடம்பா டிலாதவர் வாழ்க்கை குடங்கருட்
பாம்போ டுடனுறைந் தற்று.

**பரி.**—(இ - ள்.) மனப்பொருத்த மில்லாதாரோடுகூட ஒருவன் வாழும் வாழ்க்கை ஒருகுடிலுள்ளே பாம்போடுகூட உறைந்தாற்போலும், எ - று.

---

1 அவன் - அரசன்.

2 பெருமையெல்லாம் - அரசனது பெருமையாவும்.

3 அதனகத்ததாம் - அப்பெருமையினிடத்ததாம்.

4 அது - உட்பகை.

குடங்கமென்னும் வடசொறதிரிநது நினறது இடச்சிறுமையானும் பயி றசியாறுமடயாமையாற கோட்படல் ஒருதலையாம, ஆகவே, 1 அவ்வுவமையால் 2 அவனுயிாக்கு இறுதி வருதல ஒருதலையெனபது பெறறும். இதனுற 3 கண ணோடாதவரைக கடிகவென்பது கூறபபட்டது

தெளி.—(இ - ள்) உடம்பாடிலாதவர் - மனப்பொருத்த மிலலாதவரோ டுகூட, வாழ்ககை - (ஒருவன்) வாழும் வாழ்வு, குடங்கருள - ஒருகுடிசையினு ள்ளே, பாமபோடுடன் - பாமபோடுகூட, உறைநதறறு - வாழநதாறபோலும், - எ - று.

குடங்கம என்னும் வடசொல் குடங்கா எனததிரிநது நின்றது இடச் சிறுமையாலும பழககத்தாலும் பாமபினுலே கடிக்கபபடுதல் நிசசயமாம, ஆ கவே, அவவுவமையால அவனுயிர்க்கு முடிவுவருதல நிச்சயமென்பது பெற் றும இதனுலே கணணோடஞ்செயபாதவரைக் கடியககடவனென்பது சொ லலபபட்டது

(க - து) ஒருவன் மனவொற்றுமை யிலலாதவரோடுகூடி வாழும் வாழககையானது அவனுக்கு விரைவில் ஆபததையுணடாக்கும் எ னபது (௰)

## கூ0 - ம் அதி.—பெரியாரைப்பிழையாமை.

பரி —அஃதாவது பெரியராயினுரை அவமதிதது ஒழுகாமை. 4 இரட் டுறமொழிதலெனபதனுற் பெரியாரென்பது ஆறறலாற் பெரியராய வேந்தர் மேலும, தவததாற பெரியராய முனிவாமேலும நினறது மேற்சொல்லாது எஞ்சிநின்றதாகலின், 5 இது வெகுளியான வருவனவற்ற திறுதிக்கண வைக் கபபட்டது

தெளி.—அஃதாவது பெரியராயினுரை அவமதித்து நடவாமை இரட்டு றமொழிதலெனனு முத்தினுலே பெரியாரெனபதுவலிமையினுலே பெரியரா கிய வேநதர்மேலும, தவததினுலே பெரியராகிய முனிவாமேலும் நினறது மேறசொலலாமல குறைநது நின்றதாகலால, இது குரோதததால் வருமவைக ளது முடிவில வைககபபட்டது

---

1 அவ்வுவமையால'- பாமபோ டுடனுறைநதற்று என்னும்உவமானததினுலே.

2 அவனுயிர்க்கு-மனபபொருத்தமில்லாதவருடன் கூடிவாழுகினறவனுயிருக்கு.

3 கண்ணோடாதவரைக் கடிக - மனபபொருத்தமில்லாதவரை விலக்கவேண டும்

4 இரட்டுறமொழிதல் - ஒருவாககியத்தை யிரண்டு பொருள்படச் சொல்லு தல் இங்கேபெரியார் என்றது ஆறறலால் பெரியரான அரசரையும் தவத்தினுல பெரியரான முனிவர்களையும உணாததி நினறவாறறிக.

5 இது - பெரியாரைப பிழையாமை

க ஆற்றுவா ராற்ற லிகழாமை போற்றுவார்
போற்றலு ளெல்லாந் தலை.

பரி.—(இ-ள்) எடுத்துக்கொண்டன யாவும் முடிக்க வல்லாருடைய ஆற்றல்களை அவமதியாமை, தங்கட் டீங்குவாராமற் காப்பார் செய்யுங் காவல்க ளெல்லாவற்றினும் மிக்கது, எ-று.

ஆற்றலென்பது பெருமை, அறிவு, முயற்சியென்னும் மூன்றனமேலும் நிற்றலிற் 1 சாதிபொதுமை இகழ்ந்தவழிக் 2 களைய வல்லாரென்பது தோன்ற 'ஆற்றுவார்' என்றும், அரண், படை, பொருள், நட்பு முதலிய பிறகாவல்கள் 3 அவரா னழிதலாகலின் அவ்விகழாமையைத் 4 தலையாயகாவல் என்றுங் கூறினர். பொதுவகையால் அவ் 5 விருதிறத்தாரையும் பிழையாமையது சிறப்பு இதனாற் கூறப்பட்டது.

தெளி.—(இ-ள்) ஆற்றுவார் - (எடுத்துக்கொண்ட காரியங்களையாவும் முடிக்க) வல்லாருடைய, ஆற்றல் - வல்லமைகளை, இகழாமை - அவமதியாமை, போற்றுவார் - (தமக்கிடர்வந்து நீங்குவாராமற்) காப்பவர், (செய்யும்) போற்றலுளெல்லாம் - காவல்களெல்லாவற்றினும், தலை - மிகுந்தது, எ-று.

ஆற்றலென்பது பெருமை, அறிவு, முயற்சி என்கிற மூன்றின்மேலும் நிற்றலால் சாதிபொதுமைப்பெயர் இகழ்ந்தவிடத்தே தம்மைக்களைய வல்லாரென்பதுதோன்ற 'ஆற்றுவார்' என்றும், அரண், படை, பொருள், நட்பு முதலிய மற்றைக்காவல்கள் அவரால் அழியுமாகலால் அவ்விகழாமையை தலைமையானகாவல் என்றும் சொல்லினார் பொதுவகையால் அவ்விருவகைப் பெரியோர்க்கும் பிழைசெய்யாமையது சிறப்புஇதனாற் சொல்லப்பட்டது.

(க-து.) தம்மைக்காக்குமாறு விரும்புவோர் எடுத்துக்கொண்ட காரியங்களெல்லாவற்றையும் தவறின்றி முடிக்கவல்ல ஆற்றலுள்ளவரை இகழாதிருத்தல் வேண்டும் என்பது. (க)

உ பெரியாரைப் பேணா தொழுகிற் பெரியாராற்
பேரா விடும்பை தரும்.

பரி.—(இ-ள்) ஆற்றல்களாற் பெரியராயினாரை வேந்தர் நன்கு மதியாது அவமதித்து ஒழுகுவாராயின் அவ்வொழுக்கம் அப்பெரியாரால் அவர்க்கு எஞ்ஞான்றும் நீங்காத துன்பங்களைக் கொடுக்கும், எ-று.

1 சாதிபொதுமைப்பெயர் என்றும் பாடமுண்டு.

2 களையவல்லார் - அழிக்கவல்லவர்

3 அவரால் - பெருமை, அறிவு, முயற்சி யென்னும் ஆற்றலுடையவரால்.

4 தலை யென்றும் பாடமுண்டு.

5 இருதிறத்தார் - ஆற்றலாற் பெரியராய வேந்தர், தவத்தாற் பெரியராய முனிவர்.

அத்துன்பங்களாவன 1 இருமையினும் இடையறாது வரும் 2 மூவகைத் துன்பங்களுமாம். 3 அவையெல்லாந் தாமே செய்துகொள்கின்றனரென்பது தோன்ற 4 ஒழுக்கத்தை வினைமுதலாக்கியும் பெரியாரைக் கருவியாக்கியுங் கூறினர். போதுவகையால் 5 அவரைப் பிழைத்தற்குற்றம் இதனாற் கூறப்பட்டது. இனிச் சிறப்பு வகையாற் கூறுப.

**தெளி.**—(இ-ள்) (வேந்தர் பெரியாரை- (பெருமை, அறிவு, முயற்சி என்றும் வலிமைகளாலே) பெரியராயினாரை, பேணாது - மனங்கொள்ளாமல், (அவமதித்து) ஒழுகின்- நடப்பாராயின், (அந்நடக்கையானது) பெரியாரால் - அப்பெரியவரால், பேராவிடும்பை - (எந்நாளும்) நீங்காத துன்பங்களை, தரும் - (அவவேந்தருக்குக்) கொடுக்கும், எ-று.

அத்துன்பங்களாவன இருமையிலும் ஓயாமல் வருகின்ற மூவகைத் துன்பங்களுமாம் அவையெல்லாந் தாமே செய்துகொள்ளுகின்றனரென்பது தோன்ற ஒழுக்கத்தை வினைமுதலாக்கியும் பெரியாரைக் கருவியாக்கியும் சொன்னார். பொதுவகையால் அவர்க்குப் பிழைசெயற்குற்றம் இதனாற் சொல்லப்பட்டது. இனிச் சிறப்பு வகையாற் சொல்லுவர்.

(க - து) அரசர் வலிமைகளாற் பெரியவராயினவரை அவமதித்து நடத்தல் அஃது அவருக்கு எப்பொழுதும் நீங்காத துன்பத்தைக் கொடுக்கும் என்பது. (௨)

௩. கெடல்வேண்டிற் கேளாது செய்க வடல்வேண்டி
னாற்று பவர்க ணிழுக்கு

**பரி.**—(இ-ள்) வேறு வேந்தரைக் கோறல் வேண்டியவழி 6 அதனை அப்பொழுதே செய்யவல்ல வேந்தர்மாட்டுப் பிழையினைத் தான் கெடுதல் வேண்டினானாயின், ஒருவன் நீதிநூலைக் கடந்து செய்க, எ-று.

அப்பெரியாரைக் 7 "காலனுங் காலம் பார்க்கும் பாராது, வேலீண்டுதா

---

1 இருமையினும் - இப்பிறப்பினும் வருபிறப்பிலும்.

2 மூவகைத் துன்பங்கள் - தன்னைப்பற்றி வருவனவும், பிறவுயிர்களைப்பற்றி வருவனவும், தெய்வத்தைப்பற்றி வருவனவு மாகிய மூவகைப் பிறவித்துன்பங்கள்.

3 அவை - துன்பங்கள்

4 ஒழுகின் என்னும் எச்சத்தினின்றும் பிரிந்த அவ்வொழுக்கம் என்பதை எழுவாயாக்கியும் (பெரியாரைப்) பெரியாரால் என்று துணைக்கருவியாக்கியும் (அவ்வொழுக்கம்) 'பெரியாரால்' பேரா விடும்பை தரும்' என்று கூறினாரென்க

5 அவரை - பெரியாரை.

6 அதனை - வேறு வேந்தரைக் கொல்லுதலை.

7 புறநானூறு, ௪௧, இதன்பொருள் யமனும் தன்னால் உயிர் கொள்ளலாகுங் காலம் வருமளவும் பார்ப்பான், அப்படி காலம் பாராமல் வேற்படை நெருங்கிய சேனையினையுடைய பெருமையுடைய அரசர்கள் சாகும்படி (நீ) வேண்டிய விடத்துக் கொல்லும் வெல்லும் போரையுடைய அரசனே என்பது.

னை விரும்பியோர் நோலைய, வேண்டிடத் தமேம் வெலபோர் வேநதே" என்றார் பிறரும். நீதிநூல் செயலாகாதென்று கூறலின் 'கேளாது' எனறார்.

தெளி—(இ-ள்) அடலவேணடின - (வேறறு வேந்தரைக்) கொல்லு தல வேணடிய விடத்து. ஆற்றுபவர்கண - (அதனை அப்பொழுதே) செய்யவ ல்ல வேந்தரிடத்து, இழுக்கு - பிழையினை, கெடல வேண்டின் - தான் கெடுத ல வேண்டினனாயின, கேளாது - (நீதிநூலிலே சொல்லப்பட்டதைக) கேளாம ல், செய்க - (ஒருவன்) செய்யக்கடவன, எ-று

நீதிநூல் செயலாகாதென்று சொலலுதலாலே 'கேளாது' என்றார்.

(க-து) ஒருவன தான கெடவிரும்பினால் பகைவரை நினைத்த பொழுதே அழிக்கும வல்லமையுள்ள வேந்தரிடத்துப பிழை செய்யக கடவன் என்பது (௩)

௪. கூற்றத்தைக் கையால் விளித்தற்றா லாற்றுவார்க் காற்றாதா ரின்னா செயல

பரி—(இ-ள்) மூவகைப்பாறறலு முடையார்க்கு அவை யில்லாதார் தாம முற்பட்டு 1 இன்னாதவற்றைச் செய்தல் தானேயும் வரற்பாலனாய 2 கூ ற்றுவனை அதற்கு முன்னே கைகாட்டி அழைத்தா லொக்கும, எ-று.

3 கையால விளித்தல் இகழ்ச்சிக் குறிப்பிற்று. தாமேயும் உயிர் 4 முதலி ய கோடற குரியாரை அதற்குமுனனே விரைநது தம்மேல வருவித்துக்கொ ள்வார் இறப்பினது 5 உண்மையும் அண்மையுங் கூறியவாறு இவை இரண் பாட்டானும் வேந்தரைப் பிழைத்தலின் குறறங் கூறப்பட்டது

—(இ-ள்.) ஆற்றுவார்க்கு - மூவகையாறறலு முடையார்க்கு, ஆற்றாதார் - அவ்வாற்றலகளில்லாதவர், (தாமமுறபட்டு) இன்னா - இன்னாத வைகளை, செயல - செய்தல, கூற்றத்தை - (தானேயும வருந் தன்மையனாகிய) கூற்றுவனை, கையால - (அதற்கு முனனே) கைகாட்டி, விளித்தற்று - அழை த்தாலொக்கும், எ-று.

ஆல் - அசை. கையாலழைத்தல் இகழ்ச்சிக்குறிப்பினது தாமேயும உ யிர் முதலானவைகளைக் கொள்ளுதற் குரியவரை அதற்கு முன்னே விரைந்து தம்மேல வருவித்துக்கொள்வாரது மரணத்தினது உண்மையும் சமீபமும் சொ

1 இன்னாதவற்றை - துன்பந் தருவனவற்றை.

2 கூற்றுவனை யமனை

3 ஒருவன் யமனைக் கைகாட்டி வாவென்றழைத்தல் அவனிடத்துத் தனக்குள்ள இகழ்ச்சி (இழிவு) பற்றி யாதலால் 'கையால விளித்தல் இகழ்ச்சிக் குறி ப்பிற்று' என்று கூறப்பட்டது.

4 முதலிய என்றதனால் இடம், பொருள், ஏவல் முதலியவற்றையுங் கொள்க.

5 உண்மை - நிசம்.

லியபடி இவை யிரண்டு பாட்டாலும் வேந்தர்க்குப் பிழை செய்தலின் குற்றஞ் சொல்லப்பட்டது.

(க-து) வலியுள்ள அரசருக்கு வலியில்லாதவர் பிழை செய்தல் எழுவைக் கைகாட்டி அழைத்ததை யொக்கும் என்பது. (௪)

௫ யாண்டுச்சென் றியாண்டு முளராகார் வெந்துப்பின்
வேந்து செறப்பட் டவர்.

பரி—(இ-ள்) பகைவாக்கு வெய்தாய வலியினையுடைய வேந்தனாற் செறப்பட்ட அரசர் அவனைத் தப்பி எங்கேபோ யுளராவர், ஓரிடத்தும் உளராகார், எ-று.

1 இடைவந்த சொற்கள் அவாய்நிலையான் வந்தன. வெந்துப்பின் வேந்தாகலான் தன்னிலம் விட்டுப்போயவர்க்கு இடங் கொடுப்பாரில்லை, 2 உளராயின் 3 இவர் இனி யாகாரென்பது நோக்கி 4 அவனோடு நட்புக்கோடற் பொருட்டும் தாமே வந்தெய்திய 5 அவருடைமையை வெளவுதற்பொருட்டுங் கொல்லுவர், அன்றெனின் உடனே 6 யழிவரென்பன நோக்கி 'யாண்டுச்சென் றியாண்டு முளராகார்' என்றார். இதனால் 7 அக்குற்றமுடையார் 8 அருமையுடைய அரண் சேர்ந்தும் உய்யா ரென்பது கூறப்பட்டது.

தெளி.—(இ-ள்) வெந்துப்பின் - (பகைவாக்கு) வெவ்விதாகிய வலிமையினை யுடைய, வேந்து - வேந்தனால், செறப்பட்டவர் - கோபிக்கப்பட்ட அரசர், யாண்டுச்சென்று - (அவனைத் தப்பி) எங்கேபோய் (உளராவர்) யாண்டும் - ஓரிடத்தும் - உளராகார்—எ-று.

இடையில் வந்த சொற்கள் அவாய்நிலையால் வந்தன. வெவ்விய வலியுடைய அரசனாதலாலே தமது நிலம் விட்டுப்போனவர்க்கு இடங் கொடுப்பாரில்லை, உளரானால் இவர் இனி ஆகாரென்பது நோக்கி அவனோடு நட்புக் கொள்ளுதற் பொருட்டும் தாமே வந்து அடைந்த அவருடைமையை அபகரித்தற் பொருட்டுமே கொல்லுவர், அன்றெனின் உடனே அவர் அழிவரென்பன நோக்கி 'யாண்டுச்சென் றியாண்டு முளராகார்' என்றார். இதனால் அக்குற்றமுடையார் அருமையுடைய அரணை சேர்ந்தும் உய்யா ரென்பது சொல்லப்பட்டது.

(க-து) வலியுள்ள அரசனாற் கோபிக்கப்பட்டவர் எவ்விடத்தும் பிழைத்தல் முடியா தென்பது. (௫)

---

1 இடைவந்த சொற்கள் - அவனைத் தப்பி என்பதும் உளராவர் என்பதும்.
2 உளராயின் - இடங் கொடுப்பவருண்டானால்.
3 இவர் - வெந்துப்பின் வேந்தால் செறப்பட்டவர்.
4 அவனோடு - வெந்துப்பின் வேந்தனோடு.
5 அவருடைமையை-வலியுள்ள வரசனால் கோபிக்கப்பட்டவருடையபொருளை.
6 அழிவர் - (வெந்துப்பின் வேந்தனால் கோபிக்கப்பட்டவர்) சாவர்,
7 அக்குற்றமுடையார் - பெரியாரைப் பிழைத்தகுற்ற முடையவர்
8 "அருமை யுடைய அரண்சேர்ந்து முய்யார், பெருமை யுடையார் செறின்" என்று நாலடியார் கூறுகின்றது

௬. எரியாற் சுடப்படினு முய்வுண்டா முய்யார்
பெரியார்ப் பிழைத்தொழுகு வார்

பரி — (இ - ள்) காட்டிடைச் சென்றானொருவன் [1] ஆண்டைத் தீயாற் சுடப்பட்டானாயினும் ஒருவாற்றான் உயிருய்தல் கூடும், [2] தவத்தாற் பெரியாரைப் பிழைத்து ஒழுகுவார் எவ்வாற்றானும் உயிருய்யார், எ-று

தீ முன் உடம்பினைக் கதுவி [3] அதுவழியாக உயிர்மேற் சேறலின் இடையே உய்யவுங் கூடும், [4]அருந்தவர் வெகுளி அன்னதன்றித் தானிற்பது கணமாய் அதற்குள்ளே யாவர்க்குங் காத்தலரிதாகலின், [5] அது கூடாதாகலான் [6] அதற்கேதுவாய பிழை செய்யற்க வென்பதாம்

தெளி — (இ - ள்) (காட்டினிடத்துச்சென்றானொருவன்) எரியால்-(அவ்விடத்துத்) தீயால், சுடப்படினும்-சுடப்பட்டானனாலும், உய்வு (ஒருவழியால்) உயிர்பிழைத்தல், உண்டாம் - கூடும், பெரியார் - (தவத்தாற்) பெரியார்களை, பிழைத்தொழுகுவார் - பிழைசெய்து நடப்பவர், உய்யார் - (எவ்வழியாலும்) உயிர்பிழையார், எ-று

தீயானது முன்பு உடம்பினைப்பற்றி அதுவழியாக உயிர்மேலே செல்லுதலால் நடுவிலே உய்யவுங் கூடும், அருந்தவர்கோபம் அப்படிப்பட்டதல்லாமல் தான் நிற்பது கணமாய் அதற்குள்ளே யாவர்க்கும் காத்தல் அரிதாகலின், அது கூடாதாகலால் அதற்குக் காரணமாகிய பிழைசெய்யவேண்டாமென்பதாம்.

(க - து) தவத்தாற் பெரியவர்களுக்குப் பிழை செய்து நடப்பவர் எவ்வாற்றாலும் பிழைத்தல் முடியாதென்பது (௬)

௭. வகைமாண்ட வாழ்க்கையும் வான்பொருளு மென்னாந்
தகைமாண்ட தக்கார் செறின்.

பரி.—(இ - ள்) சாப வருள்கட் கேதுவாய பெருமை மாட்சிமைப்பட்ட அருந்தவர் அரசனை வெகுள்வராயின் உறுப்பழகுபெற்ற அவனரசாட்சியும் ஈட்டிவைத்த பெரும்பொருளும் [7] என்படும்விடும், எ-று.

உறுப்பு - அமைச்சு, நாடு, அரண், படை யெனவிவை செறினென்பது

---

1 ஆண்டைத்தீயால் - காட்டுத் தீயால்.

2 "குணமென்னுங் குன்றேறி நின்றார் வெகுளி, கணமேயுங் காத்த லரிது" என்னுங் குறளும் இங்குக் கவனிக்கத்தக்கது

3 அது வழியாக - உடம்பைப் பற்றியவாயிலாக

4 அருந்தவர் - செய்தற்கரிய தவத்தையுடையவர்

5 அது . உயிர்பிழைத்தல். 6 அதற்கு - உயிர்பிழையாமைக்கு

7 என்பட்டுவிடும் - அடியோடழிந்துபோம்.

அவர் செறுமை தோன்றநின்றது இவ்வெச்சத்தான 1 முன் வருவனவற்றிற்கும் 2 இஃதொக்கும். அரசர் தஞ் செல்வக்களிப்பான் அருந்தவர்மாட்டுப் பிழை செய்வாராயின், அச்செல்வம் அவர் வெகுளித்தீயான் ஒருகணத்துள்ளே வெந்துவிடுமென்பதாம்

தெளி —(இ - ள்.) தகை-(சாபாநுக்கிரகங்களுக்குக் காரணமாகிய) பெருமையால், மாண்ட - மாட்சிமைப்பட்ட, தக்கார் - அருந்தவர், செறின் - (அரசனைக்) கோபிப்பாராளுல், வகை - அங்கத்தினுல், மாணட் - அழகுபெற்ற, வாழ்க்கையும் -(அவ்வரச) னரசாட்சியும், வானபொருளும் -(சமபாதித்துவைத்த) பெரும்பொருளும, எனனும் - எனபடடுவிடும, எ-று

அங்கம் - அமைச்சு, நாடு, அரண், படை எனவிவை. செறினென்பது அவர் கோபியாமை தோன்றநின்றது செறின் எனனும இவவினையெச்சத்தால் பினவருமவைகளுக்கும் இஃது ஒக்கும். அரசர் தமது செலவக்களிப்பால் அருந்தவரிடத்துப் பிழைசெய்வாராயின், அச்செல்வம் அவர் கோபத்தீயால் ஒருகணத்துளளே வெநதுவிடுமென்பதாம்.

(க - து.) தவப்பெருமை யுடையாரால கோபிக்கப்பட்ட அரசரது வாழ்வும் பொருளும் விரைநது கெடும எனபது (எ)

அ. குன்றன்னர் குன்ற மதிப்பிற் குடியொடு
நின்றன்னர் மாய்வர் நிலத்து

பரி —(இ - ள் ) குன்றத்தையொக்கும் அருந்தவர்கெடநினைப்பாராயின், அப்பொழுதே இந்நிலத்து நிலைபெற்றாற்போலுஞ் செல்வர் தங் குடியொடும மாய்வர், எ-று

வெயில் மழை முதலிய பொறுத்தலுஞ் சலியாமையும உள்ளிட்டகுணங்களுடைமையின 'குன்றன்னார்' என்றார் 3"மல்லன மலையனைய மாதவர்" என்றார் பிறரும். நிலைபெற்றாற் போறலாவது இறப்பப பெரியராகலின 4 இவர்க்கு எஞ்ஞான்றும் அழிவில்லையென்று கண்டார்ாற் கருதப்படுதல.

தெளி.—(இ - ள் ) குனறனனார - மலையையொக்கும் அருநதவர், குன்ற - கெட, மதிப்பின - நினைப்பாராளுல், (அப்பொழுதே) நிலத்து -

1 முன்வருவன - இவ்வதிகாரத்தின் எட்டாவது குறளில் 'மதிப்பின்' என்றும், ௯-வது குறளில் 'சீறின்' என்றும, ௰-வது குறளில், 'செறின்' என்றும் வருவன. [முன் என்றது இங்கே இடமுன் ]

2 இஃது - அவர் (அருநதவர்) செறுமை (கோபியாமை)

3 சீவக சிந்தாமணி முத்தியிலம்பகம் ௧௬௧. இதன்பொருள் வளப்பம பொருந்திய மலையை யொத்த பெரிய தபோதனர் எனபது

4 இவர்க்கு - இப்பெருஞ்செல்வமுடையவர்கடகு.

து, நிலைநின்றார் - நிலைபெற்றுப் போலுள்ள செல்வர், குடியொடு - (தமது) குடியோடும், மாய்வர் - அழிவர், எ - று

வெயில் மழை முதலானவைகளைப் பொறுத்தலும் அசையாமையும் உடன் கொண்டுள்ள குணங்களுடைமையால் 'குன்றன்னார்' என்றார். நிலைபெற்றுப் போலுதலாவது மிகவும் பெருஞ்செல்வமுடையோராதலால் இவர்க்கு எக்காலும் அழிவில்லையென்று கண்டவரால் நினைக்கப்படுதல்.

(க - து) தவத்தாற் பெரியார் கெடும்படி நினைப்பாராயின் பெருஞ்செல்வர் தம் குடியொடும் கெடுவரென்பது. (அ)

௯ ஏந்திய கொள்கையார் சீறின் இடைமுரிந்து
வேந்தனும் வேந்து கெடும்.

பரி.—(இ - ள்.) காத்தற் கருமையான உயர்ந்த விரதங்களை உடையார் வெகுள்வராயின், அவராற்றலான் இந்திரனும் இடையே தன்பதம் இழந்து கெடும், எ - று

1 "வேந்தன் மேய தீம்புன லுலகமும்" என்றார் பிறரும். 2 நகுடனென்பான் இந்திரன் பதம்பெற்றுச் செல்கின்ற காலத்துப் பெற்ற களிப்பு மிகுதியான் அகத்தியனை வெகுளவோரா பிழைசெய்ய அதனாற் சாபமெய்தி அப்பதம் இடையே இழந்தானென்பதனை யுட்கொண்டு, இவ்வாறு கூறினார். இவை நான்கு பாட்டானும் முனிவரைப் பிழைத்தலின் குற்றங் கூறப்பட்டது

தேவி—(இ - ள்) ஏந்திய கொள்கையார் - (காத்தற்கருமையால்) உயர்ந்த விரதங்களையுடையார், சீறின் - கோபிப்பாராயின், (அவர் வலிமையால்) வேந்தனும் - இந்திரனும், இடைமுரிந்து - நடுவே (தன்பத) மிழந்து, வேந்து கெடும் - கெடுவான், எ - று

வேந்தன் என்பது இங்கே இந்திரன்மேல் நின்றது. இந்திரனுக்கு 'வேந்தன்' என்னும் பெயரிருத்தல் "வேந்தன் மேய தீம்புன லுலகமும்" என்று தொல்காப்பியம் கூறுதலாலறிக. நகுஷனென்னும் அரசன் இந்திரனது பதவி

---

1 தொல்காப்பியம் பொருளதிகாரம் அகத்திணையியல், ரு. இதன்பொருள் இந்திரன் விரும்பிய இனியபுனல் (நீர்) சூழ்ந்த மருதநிலமும் என்பது

2 நகுஷனென்னும் சந்திரவம்சத்தரசன் நூறு அசுவமேதயாகஞ் செய்து இந்திரனது பதவியைப்பெற்றுச் சப்தரிஷிகள் சுமக்கப் பல்லக்கின்மேல் ஏறி இந்திராணியின் வீட்டிற்குப்போகும்போது அவ்விந்திராணியின்மேலுள்ள ஆசைமிகுதியினால் சர்ப்ப சர்ப்ப (ஓடு ஓடு) என்று கூற, அதனைக்கேட்டுச் சப்தரிஷிகளுள் ஒருவரான அகத்தியமுனிவர் கோபித்து அந்நகுஷனைச் சர்ப்பமாக (பாம்பாக)ச் சபித்தாரென்பது கதை. இக்கதையின் விரிவைத் திருவிளையாடற்புராணம் இந்திரன்பழிதீர்த்த படலத்திற் காண்க.

கைப்பற்றப்போகின்ற காலத்தி லடைந்த சந்தோஷத்தின் மிகுதியினால அகத்தியமுனிவர் கோபப்படும்படியானதொரு தப்பிதத்தைச் செய்ய அந்தப்பிழைத் தால் நகுஷராசன அம்முனிவரது சாபத்தையடைந்து அவ்விந்திரபதவியை யிழந்து மலைப்பாம்பாயினனென்பதனை மனத்துட்கொண்டு (ஏந்திய கொள்கையார் சீறின் இடைமுரிந்து, வேந்தனும் வேந்து கெடும் என்று) இப்படிச்சொன்னார் இவை ஈண்டுக்காட்டியது முனிவர்க்குப் பிழைசெய்தலின் குற்றம் சொல்லப் பட்டது.

(க - து.) தவத்திற்பெரியோர் கோபித்தால இந்திரனுங் கெடுவன் என்பது. (௯)

௯0. இறந்தமைந்த சார்புடைய ராயினு முய்யார்
சிறந்தமைந்த சீரார் செறின்.

பரி —(இ - ள்) கழியமிக்க தவத்தினையுடையார் வெகுள்வராயின், அவரான் வெகுளப்பட்டார் கழியப் பெரியசார்பு உடையராயினும், 1 அதுபற்றி உய்யமாட்டார், எ - று

சார்பு - அரண், படை, பொருள், நட்பென்னுமிவை 2 அவையெல்லாம் வெகுண்டவரது ஆற்றலாற் 3 திரிபுரம்போல அழிந்துவிடு மாகலின் 'உய்யார்' என்றார். 4 சீருடையது சீரெனப்பட்டது இதனை 5 அக்குற்றமுடையார் சார்புபற்றியும் உய்யாரென்பது கூறப்பட்டது

---

1 அது - சார்பு

2 அவை - அரண், படை, பொருள், நட்பென்பவை

3 திரிபுரம் - இரும்பு, பொன், வெள்ளியாலாகிய மதில்களையுடைய மூன்று பட்டணங்கள் வித்துவமாலி, தாருகாக்கன், கமலாக்கன் என்னு மூன்றசுரர்கள் பிரமனைநோக்கி யரியதவஞ்செய்து, அப்பிரமனதந்த வரத்தினால் திரிபுரத்தைப்பெற்றுப் பலவசுரர்களுடன் அத்திரிபுரத்துடன் நினைத்த விடத்திற்குச் சென்று பிராணிகளுக்குக் கெடுதியுண்டாக்கிவர, தேவர்கள் அதனைப் பொறுக்கமாட்டாது சிவபெருமானிடத்துச் சென்று முறையிட, அப்பெருமான் அம்முறைக்கிரங்கி அத்தேவர்கள் சமைத்துத்தந்த தேரின்மேலேறிச்சென்று அத்திரிபுரத்தைச் சிரித்தெரித் தழித்தனர் என்பது கதை [' வளைத்த வெஞ்சிலை தாங்கினோன் மால்கணை செலுத்தி, யிளைத்த நுண்ணிடை உமைபார்த் திளநகை விளைப்பத், திளைத்த மூவெயிற் றீயவிர் தொருகணஞ் செலாமுன், தொளைத்த நிமையோர் மாய்ந்தனா சாம்பரா யொழிந்தே;'' என்று பாரதங் கூறுகின்றது] இதன் விரிவைப் பாரதம் பதினேழாம் போர்ச்சருக்கத்திற் காண்க.

4 சீர் - (சிறப்பு) என்னும் பண்புப்பெயர் அதனை யுடையதவத்திற காதலால் பண்பாகுபெயர்

5 அக்குற்றம் - பெரியாரைப் பிழைத்தற் குற்றம்.

தெளி —(இ - ள்.) சிறந்தமைந்த-மிகவும் அதிகமான, சீரார்-தவத்தினை யுடையவர், செறின்-கோபிப்பாராகில், (அவரால கோபிக்கபபட்டவர்) இறந்தமைந்த - மிகவும பெரிய, சார்புடையராயினும் - பற்றுகக்கோடுடையாராகிலும, உயயார-(அதுபற்றி) உய்யமாட்டார், எ - று.

சார்பு - அரண, படை, பொருள், நட்பு என் இவை. அவை யெல்லாம் கோபிபபவரது வலிமையால் திரிபுரம்போல அழிந்துவிடுமாகலால் 'உய்யார்' என்றார். சீரையுடையதவம் சீரெனபபட்டது. இதனால் அகுற்றமுடையவர் சார்புபறறியும உயயாரெனபது சொலலபபட்டது.

(க - து.) தவமுடையார் கோபித்தால அரணமுதலிய சார்புடையவரும் பிழையார் எனபது (ம)

---

## கூக - ம். அதி.—பெண்வழிச்சேறல்.

பரி.—இனிக காமத்தான் வருவன நேரே பகையலல வாயினும ஆக்கஞ் சிதைத்தல அழிவுதலைத்தருத லெனனுந் தொழில்களாற் பகையோடொத்த விற பகைபபாற் படுவனவாம; ஆகலான 1 அவற்றைப் பகைப்பகுதியதிறுதிககட் கூறுவான றொடங்கி, முதறகட் பெண்வழிச்சேறல கூறுகின்றார். 2அஃதாவது 3தனவழி யொழுகற பாலளாய இலலாள்வழியே தான ஒழுகுதல்

தெளி —இனிக காமததால வருபவை நேரே பகையல்லவாயினும் பெருக்கஞ்சிதைததல அழிவைத்தருதல் எனகிற தொழிலகளாலே பகையோடு ஒத்தலால் பகையினிடததுப் பொருந்துவனவாம, ஆதலால அவைகளைப பகைப் பகுதியின் முடிவிலே சொலலத்தொடங்கி, முதலிலே பெணவழிச்சேறல் சொல்லுகிறார். அஃதாவது தன்வழி நடத்தற்கு உரியவளாகிய மனையாள் வழியே தான் நடத்தல.

க. மனைவிழைவார் மாண்பய னெய்தார் வினைவிழைவார்
வேண்டாப் பொருளு மது.

பரி.—(இ - ள்.) இன்பங் காரணமாகத் தம் மனையாளை விழைந்து அவடன்மையராய் ஒழுகுவார் தமக்கு இன்றுணையாய அறத்தினை யெய்தார், இவிப் பொருள் செய்தலை முயல்வார் அதற் கிடையீடென்று இகழும் பொருளும் அவ்வின்பம், எ-று

---

1 அவற்றை - காமததினால் வருவனவற்றை

2 அஃதாவது - பெணவழிசசேறலாவது

3 "தன்னு ளாளப் படுமனைவி தன்னு ளாளப் படுவா னேல், அன்னாற் கறனும் பொருளுமுள வாகா தொல்லைப பொருளானும, மன்னு பயன்கள் வினை முடியா மறுமை யணுகா தெபபிழையும, முன்னும் பின்னும் பெருகாணு மூவாப் பழியு மதிமைந்தா" என்று விநாயகபுராணங் கூறுவதின் கறியத்தக்கதாம.

1 மனையும் விழைதலும் பயனும் ஆகுபெயர்: அவ்வின்பம் - அவன்றன்மை யுராதற்கு ஏதுவாய வின்பம், 2 அஃது 3 அவளாற் பயனுடைய வறத்தினும் அவ் வறத்திற்குத் தன்கும் ஏதுவாய பொருளினுஞ் செல்லவிடாமையின், விடற்பா றென்றதாம்.

தெளி —(இ - ள்) மனைவிழைவார் - (இன்பகாரணமாகத்) தம் மனை யாளை விரும்பி அவள் வழிநடப்பவர், மாண்பயன - (தமக்கு) இனியதுணையா கிய அறத்தை, எய்தார் - அடையார், வினைவிழைவார் - இனிய பொருள் சம் பாதித்தலை முயல்பவர், வேண்டாப்பொருளும் - (அதற்கு விரோதமென்று) இகழும் பொருளும், அது - அவ்வின்பம், எ-று

அவ்வின்பம்- அவனது நன்மையராதற்குக் காரணமான வின்பம் அஃது அவளாலே பயனுகிய அறத்திலும் அவ்வறத்திற்கும் தனனதிகாரத்திறகும் காரணமாகிய பொருளிலும் செல்லவிடாமையால, விடப்படுக தன்மையதெ னபதாம்.

(க - து.) மனையாள் வழியில் நடப்பவர் அறத்தின் பயனடையார் என்பது. (க)

௨. பேணாது பெணவிழைவா னாக்கம் பெரியதோர்
நாணாக நாணுத் தரும்.

பரி.—(இ - ள) தன் ஆண்மையை விட்டு மனையாளது பெண்மையை விழைவான எயதிநின்ற செல்வம், இவவுலகத்து ஆணபாலார்க கெலலாம் பெரியதோர் நாணுணடாகத் தனககும நாணுதலைக் கொடுக்கும், எ-று

4 எய்திநின்றதாயிற்று, படைக்கும் ஆற்ற லிலனுதலின் 5 அசசெலவத்

1 மனை (வீடு) என்னும் இடப்பெயர் அங்குள்ள பெண்ணிற் (மனைவிக்) காத லால் இடவாகுபெயர்

விழைவு என்னும் கருவிப்பெயர் அதன் காரியமாய மனையாளின் றன்மையராய ஒழுகுதலுக்காதலால் கருவியாகுபெயர்

பயன் என்னும காரியப்பெயர் அதறகுக காரணமாய அறத்திற்காதலால் காரி யவாகுபெயர்.

2 அஃது - அவ்வின்பம்.

3 அவளால் - மனையாளால், [இலலறத்தானுககுப் பயனுடைய அறத்திறகு மனை யாள் துணையாயிருத்தலாலே 'அவளாற பயனுடைய வறத்தினும்' என்று கூறப்பட்டது ]

4 பேணாது பெண்விழைவான் பொருளைச் சம்பாதிக்கும் வல்லமை யில்லாதவ னு யிருத்தலாலே அவனிடத்துச் செலவம் எய்தி (அடைந்து) நிற்பதாகா து எய்தி நின்றதாயிற்றென்க.

5 அச்செல்வத்தால் - தனது முயற்சியாலன்றி முன்னரே யடைந்து நின்ற

தால் சாதலும் அவற்றிற்கு முதலாகிய பயன் கொள்வாள் 1 அவளாகலின், அவ்வாண்மைச்செய்கை அவள்கண்ணதாயிற்றென்று ஆண்பாலார் யாவரும் நாண அதனால் தன் ஆண்மையின்மை அறிந்து பின் தானும் நாணுமென்பது நோக்கிப் 'பெரியதோர் நாணாக நாணுத் தரும்' என்றார், இவை இரண்டுபாட்டாலும் மனைவிழைதற் குற்றங் கூறப்பட்டது.

தெளி —(இ - ள) பேணாது - (தன் ஆண்மையை) விரும்பாமல் (விட்டு), பெண்விழைவான் - மனையாளது பெண்மையை விரும்புவோன், ஆக்கம் - (அடைந்துநின்ற) செல்வம், (இவ்வுலகத்து ஆண்டாளராக் கெல்லாம்) பெரிய தோர் நாண் - பெரிதாகிய ஓர் வெட்கம், ஆக - உண்டாக, (தனக்கும்) நாணு - நாணுதலை, தரும் - கொடுக்கும், எ-று

செல்வம் அடைந்து நின்றதாயிற்று; சமபாதிகளும் வலிமையில்லாகவின் முன்னமே அடைந்துநின்றதான அச்செல்வத்தால் கொடுத்தலும் அனுபவித்தலும் முதலாகிய பயன் கொள்வாள் அவளாகலால், அவ்வாண்மைச்செய்கை அவளிடத்ததாயிற்றென்று ஆண்பாலார் யாவரும் நாண அதனாலே தன்னாண்மை யில்லாமை அறிந்து பின்னே தானும் நாணுவனென்பது நோக்கிப் 'பெரியதோர் நாணாக நாணுத் தரும்' என்றார் இவை இரண்டுபாட்டாலும் மனையாளை விரும்புதற்குற்றம் சொல்லப்பட்டது

(க - து,) மனையாளது பெண்மையை விரும்புவோனது செல்வம் அவனுக்கு வெட்கத்தைத் தரும் என்பது (௨)

௩. இல்லாள்கட் டாழ்ந்த வியல்பின்மை யெஞ்ஞான்று
நல்லாரு ணாணுத் தரும்

பரி —(இ - ள்) ஒருவன் இல்லாண்மாட்டுத் தாழ்தற்கு ஏதுவாய அச்சம் அவனை நல்லாரிடைச் செல்லுங்கால் நாணுதலை அவனுக்கு எக்காலத்தும் கொடுக்கும், எ - று

2 அவட்டான் அஞ்சி ஒழுகுதல் இயல்பாகலின், அவளை யஞ்சுதல் இயல்பின்மையாயிற்று அங்ஙன மஞ்சி யொழுகுதலின், அவளை நியமிப்பாரில்லையாம், ஆகவே, எல்லாக்குற்றமும் விளையுமென்பது நோக்கி, எஞ்ஞான்றும நாணுத்தரும் என்றார்

தெளி.—(இ - ள்) (ஒருவன்) இல்லாள்கண் - மனையாளிடத்து, தாழ்ந்தவியல்பின்மை - தாழ்தற்குக் காரணமாகிய அச்சம், நல்லாருள் - (அவ்வச்சமில்லாத) நல்லாரிடத்துச், (செல்லுங்கால்) நாணு - நாணுதலை, (அவனுக்கு) எஞ்ஞான்றும் - எக்காலும், தரும் - கொடுக்கும், எ - று.

1 அவளாகலின் - மனையாளாதலால்.

2 அவட்டான - மனையாள்.

அவன் தனக்கு அஞ்சி நடத்தல் இடம்பார்க்கலால், அவளுக்கு அஞ்சுதல் இயல்பிலனாமையாகிய அப்படி அஞ்சி நடத்தலால், அவனைப் பிரியமிப்பார் இல்லையாம், ஆகவே, எல்லார்க்கும் நாணும் விளைப்பதுமொக்கி, எஞ்ஞான்றும் நாணுந்தரும் என்றார்.

(க - து) மனையாளுக்கஞ்சுவோன் அவ்வச்சமில்லாரைக் காணின் வெட்கமடைவன் என்பது. (௩)

௪. மனையாளை யஞ்சு மறுமையி லாளன்
வினையாண்மை [1] வீறெய்த லின்று

பரி —(இ - ள்) தன் மனையாளை யஞ்சி ஒழுகுகின்ற மறுமைப்பயனில்லாதானுக்கு வினைசெய்தாளுந்தன்மை உண்டாயவழியும் நல்லோரால் கொண்டாடப்படாது, எ - று.

2 உண்டாயவழியுமென்பது அவாய்நிலையான் வந்தது. இல்லறஞ் செய்தற்குரிய நன்மையின்மையின் 'மறுமையிலாளன்' என்றும், வினையை யாளுந்தன்மை தன்னுள்ளே நிகழாது [3] அவளான் முடிவுபோகாமையின் 'வீறெய்தலின்று' என்றுங் கூறினார்.

தெளி —(இ - ள்) மனையாளை- (தன்) மனையாளுக்கு, அஞ்சும் - அஞ்சி நடக்கின்ற, மறுமையிலாளன்- மறுமைப் பயனில்லாதவனுக்கு, வினையாண்மை- தொழிலையாளுந்தன்மை, (உண்டாகியவழியும்) வீறெய்தலின்று- (நல்லோரால்) கொண்டாடப்படுதலில்லை, எ - று.

உண்டாய வழியும் என்பது அவாய நிலையால் வந்தது. இல்லறஞ் செய்தற்குரிய நன்மை இல்லாமையால 'மறுமையிலாளன' என்றும், தொழிலை யாளுந்தன்மை தன்றன்மையில்லாத அவளால் முடிவுபோகாமையால 'வீறெய்தலின்று' என்றும் சொல்லினர்.

(க - து) மனையாளுக்கஞ்சுவோனது தொழில் பெருமையடையாது என்பது. (௪)

௫. இல்லாளை யஞ்சுவா னஞ்சுமற் றெஞ்ஞான்று
நல்லார்க்கு நல்ல செயல்

பரி —(இ - ள்) தன் மனையாளை யஞ்சுவான் தான் தேடிய பொருளேயாயினும் அதனால் நல்லார்க்கு நல்லன செய்தலை எஞ்ஞான்றும் அஞ்சாநிற்கும், எ - று.

1 வீறெய்தலின்று - பெருமையடைதலில்லை.

2 வீறெய்தலின்றென்பது வேண்டி நிற்றலாலே உண்டாயவழியும் என்பது வருவித்துரைக்கப்பட்டது

3 அவளான் - மனையாளுக்குப் பயந்து நடப்பவனால

நல்லார் - தேவர், அருந்தவர், சான்றோர், இருமுதுகுரவர் 1 முதலாயினோரும் 2 நல்விருந்தினரும். நல்லன செய்தல்-அவர்விரும்புவன கொடுத்தல், 3 அது செய்யவேண்டிய 4 நாட்களிலு மென்பார் 'எஞ்ஞான்றும்' என்றார் 5 "இல்லாளையஞ்சி விருந்தின்முகங் கொன்ற நெஞ்சிற், புல்லாளனாக" என்றார் பிறரும்

தெளி —(இ - ள்) இல்லாளையஞ்சுவான்- (தன்) மனையாளுக்கு அஞ்சுவோன், (தான் தேடியபொருளேயாயினும் அப்பொருளால்) நல்லார்க்கு— நல்லசெயல் - நல்லவைகள்செய்தற்கு, எஞ்ஞான்றும் - எந்நாளும், அஞ்சும் - அஞ்சாநிற்பன், எ - று

மற்று - அசைநிலை நல்லார் - தேவர், அருந்தவர், சான்றோர், தாய்தந்தைகள் முதலாயினோரும், குற்றமற்ற விருந்தினரும். நல்லனசெய்தல - அந்நல்லவர் விரும்பினவற்றைக் கொடுத்தல் அது செய்யவேண்டிய நாட்களிலு மென்பார் 'எஞ்ஞான்றும்' என்றார்.

(க - து.) மனையவளுக்கஞ்சுவோன் நல்லவர்களுக் குதவி செய்தல் முடியாது என்பது. (ரு)

சு. இமையாரின் வாழினும் பாடிலரே யில்லா
ளமையார்தோ ளஞ்சு பவர்.

பரி —(இ - ள்.) தம் மில்லாளுடைய 6 வேய்போலுந் தோளினை அஞ்சுவார் 7 வீரத்தாற் றுறக்கமெய்திய அமரர்போல இவ்வுலகத்து வாழ்ந்தாராயினும் ஆண்மை யிலர், எ - று

---

1 முதலாயினோர் என்றது நட்பினர், வமிசகுரு, ஞானகுருமுதலியவர்களை,

2 நல்விருந்து - வாராவிருந்தினர் அவரார்வார் - விதுரன்வீட்டிற்குக் கண்ணனும் அப்பூதியடிகள் வீட்டிற்கு அப்பர்சுவாமிகளும் வந்தாற்போன்ற விருந்தினர்

3 அது - விரும்புவனகொடுத்தல்.

4 நாள்கள் - சிராத்தம், தேவபூசை, முதலியவைகள் செய்யவேண்டும் தினங்கள்.

5 சீவகசிந்தாமணி மண்மகளிலம்பகம், உகஅ இதன் பொருள் மனையாளுக்குப் பயந்து விருந்தினரது முகத்தை மகிழ்ச்சி செய்யாது விட்டமனத்தினையுடைய புல்லாளனாகக்கடவேன் என்பது [புல்லாளனாதல் - அற்பபுத்தியையுடையவனாதல] விருந்தினரது முகம் மகிழ்ச்சியடையாது போதலை "மோப்பக் குழையு மனிச்ச முகந்திரிந்து, நோக்கக் குழையும் விருந்து" என்பதனா லறிக.

6 வேய் - மூங்கில்

7 போர்க்களத்தில பகைவர்க்குப்பின்னிடாது போரிட்டு மடிந்தவர் தேவராகி வீரசுவர்க்கத்தை யடைதல பற்றி வீரத்தாற் றுறக்கமடைந்த அமரர் போல என்று கூறப்பட்டது பாரதம் ௰அ-ம் போர்ச்சருக்கம் உ௩ரு-ம் பாடல் "குருகுல திபதி திறலவெஞ் செருமுனை யதனின் மேதகு, மயிர்துன் குழலர மட நல்லார்பல ரனிகொண் டெதிர்கொள் வமர ரனபின், உயிர்கொண் டதுசுர குறையும் வானுல குடல்கொண் டதுதன துடையூ பூமியே" என்று கூறுவது மிங்கறியத்தக்கது.

அமரர்போல வாழ்தலாவது பகைத்த வீரர் தோள்களையெல்லாம் வென்று நன்குமதிக்கப்பட்டு வாழ்தல். [1] அது கூடாமையின் [2] 'வாழினும்' என்றார். அமையார்தோளென்னவே, அஞ்சுதற் காரணத்து எண்மை கூறியவாறு. வீரர்தோள்களை வென்றாராயினும் இல்லாள்தோள்களை அஞ்சுவார் ஆண்மையிலரென்பதாம். இவை நான்குபாட்டானும் அவளை யஞ்சுதற்குற்றம் கூறப்பட்டது.

தெளி —(இ - ள்.) இல்லாள் - (தம்) மில்லாளுடைய, அமையார்தோள் - மூங்கில்போலுந்தோளுக்கு, அஞ்சுபவர் - பயப்படுபவர், இமையாரின் - (வீரத்தாலே சுவர்க்கமடைந்த) தேவர்போல, வாழினும் - (இவ்வுலகத்து) வாழ்ந்தாராயினும், பாடிலர் - ஆண்மையிலர், எ - று.

தேவர்போல வாழ்தலாவது பகைத்தவீரர் தோள்களையெல்லாம் வெல்லுதலால் நன்குமதிக்கப்பட்டு வாழ்தல். அது கூடாமையால் 'வாழினும்' என்றார். அமையார்தோளெனவே, அஞ்சுதற் காரணத்து எளிமைசொல்லியபடி. வீரரது தோள்களை வென்றாராயினும் இல்லாளதுதோள்களுக்கு அஞ்சுவோர் ஆண்மையிலரென்பதாம். இவை நான்குபாட்டாலும் அவளுக்கு அஞ்சுதற்குற்றம் சொல்லப்பட்டது.

(க - து) மனையாளுக் கஞ்சுவோர் தேவர்போலச் சிறப்புற்று வாழ்ந்தாலும் பெருமையுடையாரல்லர் என்பது. (கூ)

எ பெண்ணேவல் செய்தொழுகு மாண்மையி னாணுடைப்
பெண்ணே பெருமை யுடைத்து.

பரி —(இ - ள்.) நாணின்றித் தன் இல்லாளது ஏவற்றொழிலைச் செய்து திரிகின்றவனது [3] ஆண்டன்மையின் நாணினையுடைய அவள் [4] பெண்டன்மையே மேம்பாடுடைத்து, எ - று.

[5] நாணுடைப் பெண்ணென வேண்டாது கூறியது அவளேவல் செய்வானது நாணின்மை முடித்தற்காதலின், [6] அம்மறுதலைத்தொழில் வருவிக்கப்பட்டது. ஏவல்—ஆகுபெயர். இறுதிக்கட் பெண்ணென்பதூஉம் அது. ஏவல் செய்வித்துக் கோடற்சிறப்புத் தோன்றப் பெண்ணே யென்பப் பிரித்தார்.

---

1 அது - நன்குமதிக்கப்பட்டு வாழ்தல்.

2 வாழினும் என்ற உம்மை எதிர்மறைப்பொருளது.

3 ஆண்மை - ஆளுந்தன்மை, அஃதாவது ஒன்றற்குந் தளராது நிற்றலாம்.

4 பெண்மை - கட்புலனாயதோர் அமைதித்தன்மை. (கட்புலனாதல் - நேத்திரேந்திரியத்திற்கு விஷயமாதல்.)

5 வேண்டாது கூறல்வேண்டியதொன்றை முடித்தற்காதலால் நாணுடைப்பெண் என்பதை வேண்டாது கூறி அதனால் நாணின்மையென்னும் வேண்டியதொன்றை முடித்தார்.

6 நாணுடைமைக்கு மறுதலைத்தொழில் நாணின்மை.

தெளி —(இ - ள்.) (நாணில்லாமையால்) பெண் - (தனது) இல்லாளது, ஏவல் - ஏவற்றொழிலை, செய்தொழுகும் - செய்துதிரிகின்றவனது, ஆண்மையின் - ஆண்டன்மையைக்காட்டிலும், நாணுடை - நாணத்தையுடைய, பெண்ணே - (அவள்) பெண்டன்மையே, பெருமை - மேம்பாடுடைத்து - உடையது, எ - று.

பெண் ஏவலாளாகாது அடைகோடற்கு நாணுடைப்பெண்ணென வேண்டாற்ற சொல்லியது அவனை அவ்வேவல் செய்வானது நாணில்லாமை முடித்தற்காதலால், அந்நாணில்லாமை என்னும் மறுதலைத்தொழில் வருவிக்கப்பட்டது. ஏவல் என்பது ஏவற்றொழிலுக்காதலால் தொழிலாகு பெயர். இறுதியில் பெண் என்பது ஆகுபெயர். பெண் என்னும் பொருட்பெயர் அதன் தன்மைக் காதலால் பொருளுக்கு ஏற்ற ஏவல் செய்விருதுகொள்ளுதற் சிறப்புத்தோன்ற பெண்ணே எனப்பிரிந்தார் ஏகாரம் பிரிநிலைப் பொருளது.

(க - த) பெண்ணேவல் செய்தொழுகும் ஆண்டன்மையிலும் அப்பெண்ணினது பெண்டன்மையே சிறந்ததாம் என்பது. (எ)

> ௮ நட்டார் குறைமுடியார் நன்றாற்றார் நன்னுதலாள்
> பெட்டாங் கொழுகு பவர்

பரி —(இ - ள்.) தாம் வேண்டியவாறன்றித் தம் மனையாள் வேண்டியவாறு ஒழுகுவார் தம்மோடு நட்புச்செய்தார் உற்ற குறை முடிக்கமாட்டார், அதுவேயன்றி மறுமைக்குத் துணையாய அறஞ்செய்யவு மாட்டார், எ - று.

1 நன்னுதலாளென்பதனை "அமையார்தோள்" என்புழிப்போலக் கொள்க. அவடானே அறிந்து ஏவலும் பொருள் கொடுத்தலுங் கூடாமையின், 2 இருமைக்கும் வேண்டுவன செய்யமாட்டா ரென்பதாம்.

தெளி —(இ - ள்.) (தாம்வேண்டியபடி யன்றி) நன்னுதலாள்-(தம்) மனையாள், பெட்டாங்கு- வேண்டியபடி, ஒழுகுபவர் - நடப்பவர், நட்டார் -(தம்மோடு) நட்புச்செய்தார், (உற்ற) குறை - குறையை, முடியார் - முடிக்கமாட்டார், (அதுவேயல்லாமல்) நன்று - (மறுமைக்குத் துணையாகிய) அறத்தையும், ஆற்றார் - செய்யவுமாட்டார், எ - று.

நன்னுதலாளென்பதனை "அமையார்தோள்" என்றவிடத்துப்போலக் கொள்க. அவள்தானே அறிந்து ஏவுதலும் பொருள்கொடுத்தலும் கூடாமையால், இருமைக்கும் வேண்டுவன செய்யமாட்டா ரென்பதாம்.

---

1 'அமையார்தோள் எனவே அஞ்சற்குக் காரணத்து ஏனைமை கூறியவாறு' என்று கூறினதுபோல நன்னுதலாள் எனவே அஞ்சுதற் காரணத்தது ஏனைமை கூறியவாறு என்று கூறிக்கொள்க. [நன்னுதலார்- அழகிய நெற்றியையுடைய பெண்கள்.]

2 இருமைக்கும் - இப்பிறப்பிற்கும் வருபிறப்பிற்கும்.

(க - து.) மனையாளிஷ்டப்படி நடப்பவர் தமது சிநேகருக்குமுறைவார்; நன்மைபுரிந்து செய்யார் என்பது. (அ)

௯. அறவினையு மான்ற பொருளும் பிறவினையும்
பெண்ணேவல் செய்வார்க ணில.

பரி—(இ - ள) அறச்செயலும் அது முடித்தற்கு ஏதுவாய பொருட்செயலும் 1 அவ்விரண்டின் வேறாய இன்பச் செயல்களும் தம்மனையாளை ஏவல்செய்வார்மாட்டு உளவாகா, எ - று

2 புலன்களோடுதாகலின் பிறவினையெனப் பன்மை யாயிற்று அவை நோக்கி அறச் செயல் பொருட்செயல்கள் முன்னே யொழிந்தாராகுத 3 தலைமை அவள்கண்ணதாகலின், பின் 4 அவைதாமும் இலவாயின வெனபது தோன்ற, 5 அவற்றைப் பிரித்துக் கூறினர். இவை மூன்றுடாட்டானும் 6 அவளேவல் செய்தற் குற்றங் கூறப்பட்டது

தெளி—(இ - ள) அறவினையும் - அறச்செயலும், ஆன்றபொருளும் - அது முடித்தற்குக் காரணமாகிய பொருட்செயலும், பிறவினையும் - அவ்விரண்டின் வேறாகிய இன்பச்செயல்களும், பெண்ணேவல - (தம) மனையாளேவலை, செய்வார்கண் - செய்பவரிடத்து, இல - உண்டாகா, எ-று

காமவின்பம் செவியாதி ஐம்புலன்களானும் அனுபவித்தற்குரித்தா யிருத்தலாலே அதனை ஒருமையாற் கூறாது பிறவினை என்று பன்மையாற் கூறினர் அவ்வின்பச்செயல்கள்நோக்கி அறச் செயல பொருட்செயல்களை முன்னே ஒழிந்தாராகுத் தலைமை அவளிடத் திருத்தலால, பின அச்செயல்களும இல்லை யெனபது தோன்ற அவற்றைப் பிறவினை யெனப் பிரித்துச் சொல்லினார் இவை மூன்று பாட்டாலும அவளேவற் செய்தற் குற்றம சொல்லப்பட்டது

(க - து.) மனையாளேவலில் நிற்போரிடம் அறம் பொருள் இன்பங்களுக் குரிய செயல்களில்லை என்பது (௯)

---

1 அவ்விரண்டின் - அறச்செயல பொருட்செயல் என்னும இரண்டிற்கும

2 அறவினையும ஆன்ற பொருளும என்று ஒருமையாற் கூறினதற்கேறப இன்பச் செயலை யொருமையாற் கூறாது பிறவினை (இன்பச்செயல்கள்) யென்று பன்மையாற் கூறினது இன்பச்செயல் மெய்வாய்கண் மூக்குச் செவி யென்னும ஐம்புலன்களுக்கும விஷயமாயிருத்தலினெனக [பிற என்பது இங்குப் பன்மை இதற கொருமை பிறிது என்பது ] இதனைக் "கண்டுகேட் டுண்டுயிர்த் துற்றறியு மைம்புலனும, ஒண்டொடி கண்ணே யுள" என்று பின்வருங் குறளாலும் அறிக.

3 தலைமை - முதன்மை (அதிகாரம்).

4 அவைதாமும் - இன்பச் செயல்களும்

5 [illegible]

௧0 எண்சேர்ந்த நெஞ்சத் திடனுடையார்க் கெஞ்ஞான்றும்
பெண்சேர்ந்தாம் பேதைமை யில்.

**பரி** —(இ - ள்) கருமச் சூழ்ச்சிக்கட் சென்ற நெஞ்சத்தினையும் அதனா லாய செல்வத்தினையும் உடையராய வேந்தர்க்கு மனையாளைச் சேர்தலான் வரு மினைய பேதைமை எக்காலத்தும் உண்டாகாது, எ-று.

1 "இடனில் பருவத்தும்" எனவும் 2 "இடனின்றி யிரந்தோர்க்கு" எனவும் வந்தமையான் இடனென்பது 3 அப்பொருட்டாதலறிக இளமைக்காலத்து மென்பார் 'எஞ்ஞான்றும்' என்றார் அப் 4 பேதைமையாவது 5 மேற் சொல்லிய விழைதல், அஞ்சல், ஏவல் செய்தலென்னும் மூன்றற்கு காரணமாயது 6 எதிர்மறை முகத்தான் அம்மூன்றும் இதனாற் றொகுத்துக் கூறப்பட்டன.

**தெளி** —(இ - ள்) எண் சேர்ந்த - (மேற்கொண்ட கருமத்தை) ஆலோசித்தலிற் சென்ற, நெஞ்சத்து - மனத்தினையும், இடன் - அவ்வாலோசனையினாலாகிய செல்வத்தினையும், உடையார்க்கு - உடையராகிய அரசர்களுக்கு, பெண்சேர்ந்து - மனையாளைச் சேர்தலால், ஆம் - உண்டாகும், பேதைமை - அறியாமை, எஞ்ஞான்றும் - எக்காலத்திலும், இல் - உண்டாகாது, எ-று.

இடன் என்பது செல்வமென்னும் பொருளில் வந்தது. இளமைப் பருவத்தும் பெண்சேர்ந்தாம் பேதைமை யில் என்பார் 'எஞ்ஞான்றும்' என்றார். அப்பேதைமையாவது மேற்குறள்களில் சொல்லிய விரும்புதல், அஞ்சுதல், ஏவல் செய்தல் என்னும் மூன்றற்கும் காரணமாயிருப்பது. எதிர்மறைவாயிலாக அம்மூன்றும் இதனால் தொகுத்துச் சொல்லப்பட்டன.

(க - து.) நல்ல மனமும் நல்ல செல்வமும் உடையாரிடம் பெண்வழிச் சேறல் எனனும் பேதைமை யில்லை என்பது. (௧0)

---

1 திருக்குறள் ஒப்புரவறிதல் அ. இதன்பொருள் செல்வஞ் சுருங்கிய காலத்தும் என்பது.

2 கலித்தொகை பாலைக்கலி க. இதன்பொருள் (தம்முடைய இல்வாழ்க்கைக்கு வேண்டும்) பொருளில்லாது யாசித்தவர்களுக்கு என்பது

3 அப்பொருட்டாதல் - செல்வம் என்னும் அருத்தத்தினை யுடையதாதல்

4 பேதைமை - யாதுமறியாமை.

5 இவ்வதிகாரத்தின் க-வது, உ-வது குறள்களில் விழைதலும் ௩-வது முதல் ௬-வது குறள் வரையில் அஞ்சுதலும் எ-வது முதல் ௯-வது குறள் வரையில் ஏவல்செய்தலும் சொல்லடப்பட்டிருக்கின்றன

6 'பெண் சேர்ந்தாம் பேதைமையில்' என்று எதிர்மறை வாயிலாக விழைதல் அஞ்சுதல் ஏவல் செய்தலென்னும் மூன்றும் இக்குறளால் சேர்த்துச் சொல்லப்பட்டன.

## ௯௨ - ம். அதி.—வரைவின் மகளிர்.

**பரி.**—அஃதாவது[1] தந்நலம் விலைகொடுப்பார் யாவர்க்கும் விற்பதல்லது[2] அதற்கு ஆவார் ஆகாதார் என்னும் வரைவிலாத மகளிரது இயல்பு, ஆதலால்[3] தமக்குரிய மகளிரான வருகுற்றத்தின்பின் வைக்கப்பட்டது.

**தெளி.**—அஃதாவது தமது நலத்தை விலைகொடுப்பார் யாவர்க்கும் விற்பதல்லாமல் அதற்கு ஆவார் ஆகாதார் எனகிற வரைவில்லாத மகளிரது இயல்பு, ஆதலால் தமக்குரிய மகளிரால் வருங்குற்றத்தின்பின் வைக்கப்பட்டது.

க. அன்பின் விழையார் பொருள்விழையு மாய்தொடியா
ரின்சொ லிழுக்குத் தரும்.

**பரி.**—(இ - ள்) ஒருவனை அன்புபற்றி விழையாது பொருள்பற்றிவிழையும் மகளிர்[4] அது கைபுகுந் துணையுந் தாம் அன்புபற்றி விழைந்தாராகச் சொல்லும் இனிய சொல் அவனுக்குப் பின்[5] இன்னாமையைப் பயக்கும், எ-று.

பொருளென்புழி இன் விகாரத்தாற் றொக்கது. ஆய்ந்த தொடியினையுடையாரென்றதனானும் இன்சொல் என்றதனானும், அவர்[6] கருவி கூறப்பட்டது. அச்சொல் அப்பொழுதைக்கு இனிதுபோன்று பின் வறுமைபயத்தலின், அது கொள்ளற்க வென்பதாம்.

**தெளி.**—(இ - ள்) அன்பின்விழையார்-(ஒருவனை) அன்புபற்றி விரும்பாது, பொருள்விழையும் - பொருள்பற்றி விரும்பும், ஆய்தொடியார் - மகளிர், இன் சொல்-(அது கைவருமளவும் தாம் அன்புபற்றி விரும்பினவராகச் சொல்லும்) இனியசொல், (அவனுக்கு) இழுக்கு - (பின்பு) இன்னாமையை, தரும் - உண்டாக்கும், எ - று.

---

1 தந்நலம் - தமது போகத்தை.

2 "இழிபவ ருயர்ந்தோர் மூத்தோ ரிளையவர் கழியா நோயர்,கழிபவர் யாவரேனுங் கணவரைப் பட்டு நெஞ்சம்,அழிபவர் பொருள்கொண் டெண்ணுக் கெணணெய்போ லளந்து காட்டிப்,பழிபடு போகம் விற்பார்" ஆதலால் 'அதற்கு (தமது நலத்திற்கு) ஆவார் ஆகாதார் என்னும் வரைவிலாத (நியமமில்லாத) மகளிர்' என்று கூறப்பட்டது.

3 கற்புடைய மாதர்போல் இளமைப் பருவத்தில் பிதாவினாலும் யௌவன பருவத்திற் கணவனாலும் வயோதிகப் பருவத்தில் புத்திரனாலும் காக்கத் தக்கவரல்லராதலால் பொதுமகளிரைத் 'தமக்குரிய மகளிர்' என்றார். எனவே பொதுமகளிர் தமக் கிஷ்டப்படி நடப்பாரென்பதாயிற் றெனக.

4 அது - பொருள். 5 இன்னாமையை - துன்பத்தை.

6 கருவி - ஆய்தொடியும் இன்சொல்லும்.

பொருள் என்றப்பட்டது. இன்சாரியை செய்யுள் விகாரத்தாற் றொக்குநின்றது. சாரியைபெறாதவிடத்து பொருளின் என்றாம். இன் என்பது இதுகுப பற்றி என்னும் பொருள்விகாரத்தது. ஆய்தொடியார் - ஆராய்ந்தணிந்த வளையல்களையுடைய பெண்கள். ஆடந்தொடியினையுடையார் என்றதனாலும் இனியசொல் என்றதனாலும் அவ்வாய்தொடியார்து(மக்கும்) சாதனம் சொல்லப்பட்டது. அவ்வினியசொல் அக்காலத்திற்கு இனிமைதருவது போன்றிருந்து பின்பு தரித்திரத்தை யுண்டாக்குதலால், அவ்வின்சொல் கொள்ளலாகா தென்பதாம்.

(க - து.) பொருளையே விரும்பும் வேசையரது சொல் துன்பத்தையே தரும் என்பது. (க)

௨. பயன்றூக்கிப் பண்புரைக்கும் பண்பின் மகளிர்
நயன்றூக்கி நள்ளா விடல்.

**பரி.**—(இ-ள்) ஒருவனுக்கு உள்ளபொருளை அளந்தறிந்து 1 அஃதெய்துந்துணையுந் தம் பண்புடைமை சொல்லும் 2 பண்பில்லாத மகளிரது ஒழுக்காற்றினை ஆராய்ந்தறிந்து 3 அவரைப் பொருந்தாது விடுக, எ-று.

பண்பு சொல்லினைக் கல்லது தங்கட் கிடவாமை தோன்றப் 'பண்பின் மகளிர்' என்றும், 4 அவர்க்கு 5 அது சாதிதருமமாதலால் நூலானேயன்றி 6 அவர் செயலானு மறிந்தென்பார் 'நயன்றூக்கி' என்றும், 7 அவ்வறிவு அவரை விடுதற்கு உபாய மென்பது தோன்றப் பின் 'நள்ளாவிடல்' என்றுங் கூறினார்.

**தெளி.**—(இ-ள்) பயன் றூக்கி-(ஒருவனுக்கு உள்ள) பொருளை அளந்தறிந்து, பண்புரைக்கும்-(அது கிடைக்கு மளவும் தமது) குணமுடைமை சொல்லும், பண்பின் மகளிர் - குணமில்லாத மகளிரது, நயன்றூக்கி - நடைக்கை வழியை ஆராய்ந்தறிந்து, நள்ளா - (அவரைப்) பொருந்தாமல், விடல் - விடக்கடவர், எ-று.

பண்பு சொல்லலல்லது அவரிடத்திலலாமை தோன்றப 'பண்பின மகளிர்' என்றும், அவர்க்கு அது சாதிதருமமாதல் நூலாலே யல்லாமல் அவர் செயலா

1 அஃது - பொருள்.

2 பொதுமகளிர்க்குப் பண்பிலலை யென்பது கலிங்கர் பொது மகளிரில "பொத்தனுற கலனும் புணர்பிரியா வன்றிலும போல, சித்தனு மமைப பிரியல மென்றுரைத்த,பொற்றொடியும் போத்தகாக்கோ டாயினள் நன்னெஞ்சே, சிறறியோ போதியோ நீ" என்று கூறுவதினாலு மறிதற பாற்றும்.

3 அவரை - பண்பிலலாத மகளிரை, 4 அவர்க்கு - பொதுமகளிர்க்கு.

5 அது - பண்பில்லாமை 6 அவர - பொதுமகளிர.

7 அவ்வறிவு - பொதுமகளிர்க்குப் பண்பிலலாமை சாதிதருமமாயிருத்தலை சாஸ்திரவாயிலாகவன்றி அவரது நடத்தையினாலு மறிந்த அறிவு

நயக்குந்திறனென்பார் 'பயன்தூக்கி' என்றும், அவ்வறிவு அவரை விடுதற்கு உபாயமின்மை தோன்றப் பின்பு 'நள்ளாவிடம்' என்றும் சொல்லினர்.

(க-து) பயனைக் கருதி இனியவார்த்தை பேசும் வேசையரை விடல் வேண்டும் என்பது. (௨)

௩. பொருட்பெண்டிர் பொய்ம்மை முயக்க மிருட்டறையி
லேதில பிணந்தழீஇ யற்று

பரி—(இ-ள்) கொடுப்பாரை விரும்பாது பொருளையே விரும்பும்பொதுமகளிரது பொய்ம்மையை யுடைய முயக்கம், பிண மெடுப்பார் இருட்டறைக்கண்ணே முன்னறியாத பிணத்தைத் தழுவினாற் போலும், எ-று.

பொருட்கு முயங்கும் மகளிர் கருத்துஞ் செயலும் ஆராயாது சாதியும் பருவமும் ஒவ்வாதாரை முயங்குங்கால் 1அவர் குறிப்புக் கூலிக்குப் பிண மெடுப்பார் காணப்படாததோர் இடத்தினகத்து இயைபில்லாததோர் பிணத்தை எடுக்குங்கால் 2அவர் குறிப்போடொக்கு மெனவே, 3அகத்தால் அருவரா நின்றும் பொருணோக்கிப் புறத்தால் தழுவுவார், 4அதனையொழிக வென்பதாம். இவை மூன்றுபாட்டானும் 5அவர் சொல்லும் செயலும் பொய்யென்பது கூறப்பட்டது.

தெளி—(இ-ள்) பொருட்பெண்டிர்- (கொடுப்பாரை விரும்பாது பொருளையே விரும்பும்) பொதுமகளிரது, பொய்ம்மை- பொய்ம்மையையுடைய, முயக்கம்- தழுவுதலானது, (பிணமெடுப்பவர்) இருட்டறையில் -இருட்டுவீட்டில், ஏதில்பிணம்-முன்னறியாத பிணத்தை, தழீஇயற்று-தழுவினாற்போலும், எ-று.

பொருளுக்குத்தழுவும் பரத்தையர் கருத்தும் செயலும் ஆராயாமல் சாதியும் பருவமும் ஒவ்வாதாரைக் கூடும்போது அவர் குறிப்புக் கூலிக்குப் பிணமெடுப்பவர் காணப்படாததோரிடத்தில் சம்பந்தமில்லாததொருபிணத்தை எடுக்கும்போது அவர் குறிப்போடொக்கும் எனவே, அகத்தால் அருவராநின்றும் பொருளைநோக்கிப் புறத்தால் தழுவுவார், அதனை ஒழியக்கடவரென்பதாம் இவை மூன்றுபாட்டாலும் அவர் சொல்லும் செயலும் பொய்யென்பது சொல்லப்பட்டது.

(க-து) வேசையர் பிறரைப் புணருதல் கூலிக்காரர் இருட்டுவீட்டில் பிணத்தைத் தழுவுதலோடொக்கும் என்பது. (௩)

---

1 அவர் குறிப்பு - பொதுமகளிரது எண்ணம்.

2 அவர் - பிணமெடுப்பவர்.

3 அகத்தால் அருவராநின்றும் - மனத்தினுள்வெறுத்தும்.

4 அதனை - தழுவுதலை. 5 அவர் - பொதுமகளிர்

௪ பொருட்பொருளார் புன்னலந் தோயா ரருட்பொரு
ளாயு மறிவி னவர்.

பரி.—(இ - ள்.) இன்பமாகிய பொருளை இகழாது பொருளாகிய பொருளையே விரும்பும் மகளிரது புல்லிய நலத்தை அருளோடு கூடிய பொருளை ஆராய்ந்து செய்யும் அறிவினை யுடையார் தீண்டார், எ - று.

1 அறமுதலிய நான்கும் பொருளெனப்படுதலின், பொருட்பொருள் அருட்பொருளென 2 விசேஷித்தார். புன்மை - 3 இழிந்தார்க்கே உரித்தாதல். தாம் விரும்புகின்ற அறத்திற்கு 4 அவர் மெய்க்கலப்பு மாறுதலை யாகலின், தோயாரென்பதாம்.

தெளி.—(இ - ள்.) பொருட்பொருளார் - (இன்பமாகிய பொருளை இகழ்ந்து) பொருளாகிய பொருளையே விரும்பும் மகளிரது, புன்னலம் - புல்லிய நலத்தை, அருட்பொருள் - அருளோடு கூடிய பொருளை, ஆயும் - ஆராய்ந்து சம்பாதிக்கும், அறிவினவர் - அறிவினை யுடையவர், தோயார் - தீண்டார், எ - று.

அறமுதலாகிய நான்கும் பொருளெனப்படுதலால், பொருட்பொருள் அருட்பொருள் என விசேடித்தார். புன்மை - இழிந்தார்க்கே உரியதாதல். தாம் விரும்புகின்ற அறத்திற்கு அவர் மெய்க்கலப்பு விரோதமாகலால், தோயாரென்பதாம்.

(க - து.) அருளை நாடும் அறிஞர் வேசையரைக் கூடாரென்பது. (௪)

௫. பொதுநலத்தார் புன்னலந் தோயார் மதிநலத்தின்
மாண்ட வறிவி னவர்.

பரி.—(இ - ள்.) இயற்கையாகிய மதிநன்மையான் மாட்சிமைப்பட்ட 5 செயற்கை யறிவினை யுடையார் பொருள் கொடுப்பார்க் கெல்லாம் பொதுவாய ஆசையினை யுடைய மகளிரது புல்லிய நலத்தைத் தீண்டார், எ - று.

---

1 அறமுதலானவைகளைப் பொருளாகக் கூறுதல் தார்க்கிகருள் ஒருசாரரான வைசேடிகரது மதம்.

2 விசேடித்தல் - விசேடணத்துடன் (அடையோடு) கூடிவருதல். இங்கே பொருள் என்பது பொருள் என்னும் விசேடணத்தையும் அருள் என்பது பொருள் என்னும் விசேடணத்தையும் பெற்றுவந்தன. விசேடணம் முன்னும் பின்னும் வரலாமென்பது "திணைநிலஞ் சாதி குடியே யுடைமை, குணந்தொழில் கல்வி சிறப்பாம் பெயரோ, டியற்பெய ரேற்றிடிற் பின்வரல் சிறப்பே" என்று நன்னூல் கூறுவதா லறிக.

3 இழிந்தார் - சாதியாலிழிந்தார் ஒழுக்கத்தினாலிழிந்தாரென் றிருவகையராவர். "சாதிசண் டாளன் கதிபெறும் தருமம் வழுவலிற் கன்மசண் டாளன், ஓதிய வழிக ளொன்றினுங் கதிதா னுறற்கிடா ரெனப்படுங் கொடியதே" என்று சிவஞான நிலயம் கூறுவதினா லறியத்தக்கது.

4 அவர் மெய்க்கலப்பு - பொதுமகளிரது உடம்பைத் தழுவிப் போகித்தல்.

5 செயற்கையறிவு - கல்விகேள்விகளாலாய வறிவு

மதிநன்மை - முற்பிறப்புகளிற் செய்த நல்வினைகளான் மனந் தெளிவுடைத்தாதல் அதனானறிக் கலவியறிவு மாட்சிமைப்படாமையின் 'மதிநலத்தின் மாண்டவறிவினவர்' என்றும், 1 அவ்வறிவுடையார்கட்கு 2 அவராசையது பொய்ம்மையும் மெய்ந்நலத்தது பொதுமையும் விளங்கித் தோன்றலின் 'தோயார்' என்றுங் கூறினார்.

தேவி —(இ - ள்) மதிநலத்தின - (இயற்கையாகிய) மதிநன்மையால், மாண்ட -மாட்சிமைப்பட்ட, அறிவினவர் - (செயற்கை) யறிவினை யுடையார், பொதுநலத்தார் -(பொருள் கொடுப்பவர்க்கெல்லாம்) பொதுவாகிய ஆசையினையுடைய மகளிரது, புன்னலம் - புல்லிய நலத்தை, தோயார் - தீண்டார், எ-று

மதிநன்மை- முற்பிறப்புகளிற் செய்த நல்வினைகளால் மனந் தெளிவுடைத்தாதல். அத்தெளிவின் றல்லாமல் அக்கல்வியறிவு மாட்சிமைப்படாமையால் 'மதிநலத்தின மாண்ட வறிவினவர்' என்றும், அவ்வறிவுடையார்க்கு அவராசையது பொய்ம்மையும் மெய்ந்நலம் பலருக்கும் பொதுவாயிருக்கையும் விளங்கித் தோன்றலால் 'தோயார்' என்றுஞ் சொல்லினர்

(க - து) இயற்கையறிவும் செயற்கையறிவுமுடைய பெரியோர் வேசையரைச் சேரார் என்பது. (ரு)

கூ. தந்நலம் பாரிப்பார் தோயார் தகைசெருக்கிப்
புன்னலம் பாரிப்பார் தோள்

பரி —(இ - ள்.) 3 ஆடல் பாடல் அழகென்பனவற்றால் களித்துத் தம் புல்லிய நலத்தை விலைகொடுப்பார் யாவர்மாட்டும் பரப்பும் மகளிர்தோளினை அறிவொழுக்கங்களானாய தம்புகழை உலகத்துப் பரப்புதற்குரிய உயர்ந்தோர் தீண்டார், எ-று

ஆடன் முதலிய மூன்று முடைமை அவர்க்கு மேம்பாடாகலின் 'தகை' என்றும், தோயின் அறிவொழுக்கங்கள் அழியு மாகலின் அவற்றால் புகழ் பரப்புவார் 'தோயார்' என்றுங் கூறினர் தந்நலமென்புழி 4 நலம் ஆகுபெயர். இவைமூன்று பாட்டானும் அவரை உயர்ந்தோர் தீண்டா ரென்பது கூறப்பட்டது

---

1 அவ்வறிவுடையார்க்கு - இயற்கையறிவும் செயற்கையறிவுமுடையார்க்கு.

2 அவர் - பொதுமளிர்

3 "எழிலாற் பாட லாடலின் விச்சை பெருக்கி யுளமோவவா, மொழியாற செயலால் வசமாக்கி முற்றும் பொருளைப் பறித்துவிடும், பழிநாணாத பரத்தையரைப் பற்றா ராய்ந்த பண்புடையார்" என்று விநாயக புராணங் கூறுவது மிங்கறியத்தக்கதாம்.

4 நலம் என்பது நலத்தினாலாய புகழுக் காதலால் கருவியாகு பெயர்.

தெளி.—(இ-ள்) தகை - ஆடல் பாடல் அழகுகளாலே, செருக்கி - களித்து, புன்னலம் - (தமது) புல்லிய நலத்தை, பாரிப்பார் - (விலைகொடுப்பார்க்குப் பரப்பும் மகளிரது, தோள் - தோளை, தந்நலம் - (அறிவொழுக்கங்களாகிய) தமது புகழை, பாரிப்பார் - (உலகத்தே) பரப்புதற்குரிய உயர்ந்தோர். தோயார் - தீண்டார், எ-று.

ஆடல் முதலிய நுண்ணுணர்வுடைமை அவர்க்கு மேம்பாடாகலால் 'தகை' என்றும், தோய்தல் அறிவொழுக்கங்களை அழிப்பதாகலால் அவ்வறிவொழுக்கங்களாலே புகழ் பரப்பவேண்டுவோர் 'தோயார்' என்றும் சொல்லினார். தந்நலம் என்றவிடத்து நலம் ஆகுபெயர். இவை மூன்றுபாட்டானும் அவரை உயர்ந்தோர் தீண்டாரென்பது சொல்லப்பட்டது.

(க-து) தமது புகழைப் பரப்பும் பெரியோர் பொதுமகளிரை விரும்பார் என்பது. (௬)

௭ நிறைநெஞ்ச மில்லவர் தோய்வர் பிறநெஞ்சிற்
பேணிப் புணர்பவர் தோள்

பரி.—(இ-ள்) நெஞ்சின்கண் பிறவற்றை ஆசைப்பட்டு அவை காரணமாகக் கொடுப்பாரை மெய்யாற் புணரும் மகளிர் தோள்களை நிறையான் திருத்திய நெஞ்சமில்லாதார் தோய்வர், எ-று.

பொருளும் அதனாற் படைக்கப்படுவனவும் விரும்பும் நெஞ்சு [1] அவற்றின் மேலதாகலின் புணர்வது உடம்பு மாத்திரம் என்பது அறிந்து [2] அதுவழி ஓடாது நிற்கும் நெஞ்சினை உடையார் தோயாமையின் [3] அஃதிலார் 'தோய்வர்' என்றார்.

தெளி.—(இ-ள்) நெஞ்சின் - நெஞ்சினால், பிற - வேறு பொருள்களை, பேணி - ஆசைப்பட்டு, (அப்பொருள் காரணமாகக் கொடுப்பவரை) புணர்பவர் - (மெய்யினாலே) புணரும் மகளிரது, தோள் - தோள்களை, நிறை நெஞ்சமில்லவர் - நிறையினாலே திருத்திய மனமில்லாதவர், தோய்வர் - புணர்வர், எ-று.

பொருளும் அப்பொருளால் படைக்கப்படுவனவும் விரும்புகிற நெஞ்சு அவைகளின்மேலே இருத்தலால் புணர்வது அவருடம்பு மாத்திரம் என்பதறிந்து அதன்வழி ஓடாது நிற்கும் நெஞ்சினையுடையார் தோயாமையால் அஃதில்லாதார் 'தோய்வர்' என்றார்.

---

1 அவற்றின்மேல் - பொருளும் பொருளால் உண்டாக்கிக்கொள்ளும் போகப் பொருள்களும் என்னும் இரண்டினிடத்தில்.

2 அதுவழி - புணர்ச்சியின் வழி. 3 அஃதிலார் - நிறைநெஞ்சமில்லவர்.

(௯-து) திருந்திய மனமில்லாதவர் வேசையரைச் சேர்வர் என்
பது.

(எ)

அ ஆயு மறிவின ரல்லார்க் கணங்கென்ப
மாய மகளிர் முயக்கு.

பரி—(இ-ள்) உருவு சொல் செயல்களான் வஞ்சித்தலை வல்ல மகளி
ரது முயக்கத்தை அவ்வஞ்சனை ஆராய்தற்கு அறிவுடையரல்லார்க்கு 1 அண்
ங்குத்தாக்கென்று சொல்லுவர் நூலோர், எ-று.

அணங்கு - காமநெறியான் உயிர்கொள்ளும் தெய்வமகள். தாக்கு - தீண்
டல். 2 இவ்வுருவகந்தான் 3 அம்முயக்கம் முன் இனிதுபோன்று பின் உயிர்
கோடல் பெறுதும். 4 இது நூலோர் துணிவென்பது தோன்ற அவர்மேல்
வைத்துக் கூறினார். அப்பெயர் அவாய்நிலையான் வந்தது.

தெளி—(இ-ள்.) மாயமகளிர் - (உருவு சொற் செயல்களால்) வஞ்சித்
தல் வல்லமகளிரது, முயக்கு - புணர்ச்சியை, ஆயும் - (அவ்வஞ்சனையை) ஆ
ராய்தற்கிடமாகிய, அறிவினரல்லார்க்கு - அறிவுடையவ ரல்லாதவர்க்கு, அணங்கு-
அணங்குதாக்கு, என்ப - என்று (நூலோர்) சொல்வர், எ-று.

அணங்கு - காமவழியால் உயிர்கொள்ளுந் தெய்வமகள். தாக்கு - தீ
ண்டல். இவ்வுருவகத்தால் அப்புணர்ச்சி முன்னே இனிதுபோலே தோன்றிப்

---

1 அணங்குதாக்கு - மோகினிபிடித்தல் காமசிந்தையுடைய வாலிபர்களை மோ
கினியென்னும் தெய்வம் பிடித்துக் கனவில் பிரியமுள்ள மங்கைபோல
வந்து புணர்ந்து வீரியத்தைவெளிப்படுத்தி நாளடைவில் இளைக்கச்செய்து
கொல்லும் என்பது சம்பிரதாயம். ௱௯வது அதி-2 வது குறளில் "தாக்க
ணங்கு" என்று வந்திருத்தலும், அதற்குப் பொருள் "தானேதாக்கி வருத்
துவ தோரணங்கு" என்றுபொருள் கூறியிருத்தலு மிங்கறியத்தக்கனவாம்.

2 இவ்வுருவகந்தான் - மாயமகளிர் முயக்கத்தை அணங்குதாக்கு என்று உரு
வகஞ் செய்திருத்தலால்

3 "ஆமாபோ னக்கி யவர்கைப் பொருள்கொண்டு, சேமாப்போற் குப்புறூஉஞ்
சில்லைக்க ணன்பினை, ஏமாந் தெமதென் றிருந்தார் பெறுபவே, தாமாம் ப
லரா னகை" என்று நாலடியார் கூறுவ திங்கறியத்தக்கதாம் [ஆமா - காட்
டுப்பசு காட்டுப்பசு முன்னே ஒருவரையினிமை யுண்டாம் வண்ணம் நக்
கிப்பின்னே கொல்வது போன்று பொதுமகளிரது புணர்ச்சியும்முன்னே
இனிமை யுண்டாம் வண்ணம் செய்து பின்னே தன்னைப் பெற்றாரை முத
லற அழிக்குமென்பதாம்.

4 இது - பொதுமகளிரது புணர்ச்சி முன்னே இனிதுபோன்றிருந்து பின்னே
உயிர் கொள்ளுதல்.

பின்பு உயிர்கொள்ளுதல்பெற்றும். இது நூலோர் துணிவென்பதுதோன்ற அதைமேல் வைத்துச் சொல்லினார். தாக்கு என்னும் பெயர் அவாய்நிலையால் வந்தது.

(க - து.) நூலோர் வேசையர் புணர்ச்சியை அறிவில்லார்க்கு அணங்கு தாக்கு என்று சொல்லுவர் என்பது. (அ)

௬. 1 வரைவிலா மாணிழையார் மென்றோள் புரையிலாப்
பூரியர்க ளாழு மளறு.

பரி.— (இ - ள்) உயர்ந்தோர் இழிந்தோ ரென்னாது விலைகொடுப்பார் யாவரையும் முயங்கும் மகளிரது மெல்லிய தோள்கள் 2 அக் குற்றத்தை யறியும் அறிவில்லாத கீழ்மக்கள் புக்கழுந்தும் நிரயம், எ - று.

உயர்தற் கேதுவாகலின் 'புரை' எனப்பட்டது. சாதியா னிழிந்தாரி னீக்குதற்குப் 'புரையிலாப் பூரியர்கள்' என்றும் 3 அவர் ஆழ்தற்கேது 4 உருவ முதலிய மூன்றுமென்பது தோன்ற 'மாணிழையார் மென்றோள்' என்றும், 5 அவர்க்கு அளற்றினை யிடையின்றிப் பயக்கு மென்பது தோன்ற 6 உருவக மாக்கியுங் கூறினார்.

தெளி.—(இ - ள்) வரைவிலா - உயர்ந்தோர் இழிந்தோரென்னாது விலைகொடுப்பவ ரியாவரையும் கூடும், மாணிழையார் - மாட்சிமைப்பட்ட ஆபரணத்தையுடைய மகளிரது, மென்றோள் - மெல்லியதோள்கள், புரையிலா - (அக்குற்றத்தை அறியும்) அறிவில்லாத, பூரியர்கள் - கீழ்மக்கள், ஆழும் - (புக்கு)அழுந்தும், அளறு - நரகமாம், எ - று.

பொதுமகளிரது குற்றத்தை யொருவரறிதல் அவருயருதற்குக் காரணமாயிருத்தலாலே அவ்வறிதல் 'புரை' என்று கூறப்பட்டது. சாதியா லிழிந்தாரினின்றும் நீக்குதற்குப் 'புரையிலாப்பூரியர்கள்' என்றும், அவராழ்தற்கேது உருவமுதலாகிய மூன்றுமென்பது தோன்ற 'மாணிழையார் மென்றோள்' என்றும், அவர்க்கு நரகத்தைத் தடையில்லாமல் தருமென்பது தோன்ற உருவகமாக்கியுஞ் சொல்லினார்.

1 வரைவிலாத - ஒரெல்லைக்குள் நிற்றலில்லாத,

2 அக்குற்றத்தை - யாவரையும் புணரும்குற்றத்தை

3 அவர் - சாதியாலன்றி ஒழுக்கத்தாலிழிந்த மூடர்.

4 உருவமுதலியமூன்று - உருவு, சொல், செயல்,

5 அவர்க்கு - புரையிலாப் பூரியர்க்கு.

6 உருவகமாக்கியும் - வரைவிலாமாணிழையார் தோள்களை அளறு (நரகம்) என்று உருவகப்படுத்தியும்

(க - து.) வேசையர் தோள்கள் கீழ்மக்கள் அழுந்தும் நரகமாம் என்பது. (௬)

௯0. இருமனப் பெண்டிருங் கள்ளுங் கவறுந்
திருநீக்கப் பட்டார் தொடர்பு.

பரி.—(இ - ள்) 1 கவர்த்த மனத்தினையுடைய மகளிரும் கள்ளும் சூதும் மென இம்மூன்றும் திருமகளால் நீக்கப்பட்டார்க்கு நட்பு, எ - று.

இருமனம் - ஒருவனோடு புணர்தலும் புணராமையும் ஒருகாலத்தே யுடைமனம். 2 கவறு - ஆகுபெயர் ஒத்த குற்றத்த வாகலின், கள்ளும் சூதும் உடன் கூறப்பட்டன. வடநூலாரும் 3 இக்கருத்தான் விசனமென உடன்கூறினார். வருகின்ற அதிகார முறைமையும் இதனா னறிக 4 திணைவிரா யெண்ணிடத்துப் பன்மை பற்றி முடிபு கோடலின், ஈண்டு அஃறிணையாற் கொண்டது. திரு நீக்கப்படுதல் 5 இக்குறிகளான் அறியப்படு மென்பதாம். இவை யனைத்தும் பாட்டானும் 6 சேரார் இழிந்தோ ரென்பது கூறப்பட்டது.

தெளி —(இ - ள்) இருமனப்பெண்டிரும் - கவர்த்தமனத்தையுடைய மகளிரும், கள்ளும் - கவறும் - சூதும், (என இம்மூன்றும்) திரு - திருமகளால், நீக்கப்பட்டார் - விடப்பட்டவர்க்கு, தொடர்பு - நட்பாம், எ - று

இருமனம் - ஒருவனோடு கூடுதலும் கூடாமையும் ஒருகாலத்திலே யுடையமனம் கவறு -சினையாகுபெயர் கள்ளும் சூதும் பரத்தையர்க்குச் சமானமான குற்றமுடையவை யாகலாலே உடன்சொல்லப்பட்டன. வடநூலாரும் இவ்வபிப்பிராயத்தினாலே விசனமென்றுடன் சொல்லினர். வருகின்ற அதிகாரமுறைமையும் இதனாலே அறிக இருமனப்பெண்டிர் என்னும் உயர்திணையும் கள்

---

1 கவர்த்த - இரண்டுபட்ட

2 பாயசிகை(சூதாடுகருவி)என்னும் பொருளதான கவறுஎன்னும் சினைப்பெயர் அதனமுதலாகிய சூதிற்காதலால் சினையாகுபெயர்.

3 இவ்வபிப்பிராயத்தினாலே காமங் கள் சூது என்னும் மூன்றனையும் விசனமென்று உடன்வைத்து "வேட்டங் கடுஞ்சொல் மிகுதண்டஞ் சூதுபொருள் வீட்டங்கட் காமமோ டேழு" என்று கூறினாரென்க

4 "பலவயி னானு மெண்ணுத்திணை விரவுப்பெயர், அஃறிணை முடிபின செய்யு ளுள்ளே" என்னும் (தொல்காப்பியசூத்திர) விதியினாலே அஃறிணையோடு உயர்திணை விரவி மிகுதியினாலே நட்பு என்று அஃறிணை முடிபு கொ

5 இக்குறிகளால்-இருமனப்பெண்டிர், கள், கவறு என்னும் மூன்றும் உடையவரா யிருக்குமடையாளங்களால்.

6 சேரார் - பொதுமகளிரைப் புணர்வார்

கவறு என்னும் அஃறிணைப் பெயர் கவற்றேனாணியவிடத்து (கள்கவறுஎன்னும் அஃறிணை உடைமைப்பெயர் அஃறிணை) முடிபுகொள்ளவேண்டியிருத்தலால், இவண் நட்பு என்னும் அஃறிணையால (உயர்திணை) முடிபு கொண்டது. திருக்கப்பட்டமை இவ்விடைமொழிகளால் அறியப்படுமென்பதாம். இவை நான்கும் கூடாதும் சேர்வார் இந்நோரென்பது சொல்லப்பட்டது.

(க - து.) வேசையரும், கள்ளும், சூதும் இலக்குமியால் கைவிடப்பட்டார்க்கு நட்பாம் என்பது. (௰)

## ௯௩ - ம் அதி.—கள்ளுண்ணாமை.

**பரி.**—இனி ஒழுக்கமும் உணர்வு மழிதற்கண் அவ்வரைவின் மகளிரோடொப்பதாய கள்ளினை யுண்ணாமையது சிறப்பு 1 எதிர்மறைமுகத்தாற் கூறுகின்றார்.

**தெளி.**— இனி ஒழுக்கமும் உணர்வும் அழிதலில் அப்பரத்தையரோடு ஒப்பதாகிய கள்ளினை உண்ணாமையது சிறப்பு எதிர்மறைமுகத்தாலே சொல்லுகிறார்.

> க உட்கப் படாஅ ரொளியிழப்ப ரெஞ்ஞான்றுங்
> கட்காதல் கொண்டொழுகு வார்.

**பரி**—(இ - ள்) கள்ளின்மேற் காதல்செய்தொழுகு மரசர் எஞ்ஞான்றும் பகைவரா லஞ்சப்படார், அதுவேயன்றி முன்னெய்தி நின்ற ஒளியினையு மிழப்பர், எ - று.

அறிவினையால் பொருள் படை 2 முதலியவற்றாற் பெரியராய காலத்தும் பகைவர் அஞ்சார், தம்முன்னோர் னெய்தினின்ற 3 ஒளியினையும் இகழ்தற்பாட்டான இழப்பரென்பதாம். 4 இவை யிரண்டானும் அரசு இனிது செல்லாதென்பது இதனாற் கூறப்பட்டது

**தெளி.**—(இ - ள்.) கட்காதல் கொண்டு-கள்ளின்மேல் ஆசைகொண்டு, ஒழுகுவார்- நடக்குமரசர், எஞ்ஞான்றும் - எந்நாளும், உட்கப்படார்- (பகைவ

1 எதிர்மறைமுகத்தால் - (கள்ளுண்டல் என்று உடம்பாட்டு வாயிலாகக்கள்ளுண்ணாமையின் சிறப்பினைக் கூறாது கள்ளுண்ணாமையென்று) எதிர்மறை வாயிலாக.

2 முதலியவென்றதனால் அறிவும் ஆண்மையுங் கொள்க

3 ஒளி - தானுள்ளகாலத்து மிகுந்தோன்றுதலுடைமை(மதிப்பு).

4 இவையிரண்டானும் - பகைவரஞ்சாமை, ஒளியினை (மதிப்பை) யிழத்தலென்னு மிவ்விரண்டினாலும்.

மனமொழிமெய்கள் தம்வயத்த வன்மையான் நாணழியும், அழியவே, ஈன்றாட்கும் இன்னாதாயிற்று, ஆனபின், கள் 1 இருமையுங் கெடுத்தலறிந்து சேயவைக்கண்ணே கடியுஞ் சான்றோர்க்கு இன்னாதாதல் சொல்லவேண்டுமோ வென்பதாம்.

தெளி.—(இ - ள்) ஈன்றாள் முகத்தேயும் (யாதுசெய்தாலும் மகிழும்) தாய் முன்பாயினும், களி - கள்ளுண்டு களித்தல், இன்னாது - துன்பஞ் செய்வதாம், மற்றுச் சான்றோர் முகத்து - ஆனபின் (குற்றம் யாதும் பொறாத) பெரியோர் முன்பு, (களித்தல்) என் - (அவர்க்கு) யாதாகும், எ-று.

ஆல்-அசை மனமொழிமெய்கள் தம வசப்படாமையால் நாணம் அழியும், அழியவே, தாய்க்கும் துன்பஞ் செய்வதாயிற்று, ஆனபிறகு, கள் இருமையும் கெடுத்தலறிந்து தூரத்தே விலக்கும் பெரியோர்க்குத் துன்பஞ் செய்வதாதல் சொல்லவேண்டுமோ வென்பதாம்.

(க - து) ஒருவன் கள்ளுண்டு களித்தல் அவனை யீன்றதாய்க்குந் துன்பந் தருமாயின், அது பெரியார்க்குத் துன்பந்தருதல் சொல்ல வேண்டுமோ என்பது. (௩)

௪. நாணென்னு நல்லாள் புறங்கொடுக்குங் கள்ளென்னும்
2 பேணாப் பெருங்குற்றத் தார்க்கு

பரி.—(இ - ள்) கள்ளென்று சொல்லப்படுகின்ற யாவரு மிகழும் மிக்க குற்றத்தினை யுடையாரை நாணென்று சொல்லப்படுகின்ற உயர்ந்தவள் நோக்குதற்கஞ்சி அவர்க்கு 3 எதிர்முக மாகாள், எ-று.

காணுதற்கு மஞ்சி உலகத்தார் செய்கைக்கண்ணே நீக்குவராகலிற் 'பேணா' என்றும், பின் ஒருவாற்றானும் 4 கழுவப்படாமையிற் 'பெருங்குற்றம்' என்றும், இழிந்தோரைப் பார்க்கிலாமையின் 'நல்லாள்' என்றும் கூறினார். 5 பெண்பாலாக்கியது வடமொழி முறைமைபற்றி இவை மூன்று பாட்டானும் 6 ஒளியிழத்தற் காரணங் கூறப்பட்டது

---

1 இருமை - இப்பிறப்பு, வருபிறப்பு.

2 பேணா - விரும்பாத 3 எதிர்முகமாகாள் - பிரசன்னமாகாள்.

4 கழுவப்படாமையின் - பிராயச்சித்தத்தாற் போக்கப்படாமையினால்.

5 பிரயோகவிவேகம் திங்குப்படலம் ௰௫-வது பாடலினுரையில் "நாணென்னு நல்லாள் புறங்கொடுக்குங்கள் ளென்னும், பேணாப்பெருங்குற்றத்தார்க்கு" என்னுந்திருவள்ளுவரில் பரிமேலழகர் நாணென்னு நன்மையென்ற பாலதனை நல்லாள் எனப் பெண்பாலாகக் கூறியது வடமொழிமுறைமைபற்றி யென்றதனின், வடமொழியுள் லச்சை (வெட்கம்) யென்பது பெண்பாற் சொல்லென்க" என்றிருப்பதிங்குக் கவனிக்கத்தக்கதென்க.

6 ஒளி - மதிப்பு.

தெளி —(இ - ள்.) கள்ளென்னும்-கள் என்று சொல்லப்படுகிற, பேணா-(யாவரும்) இகழ்வதாய், பெருங்குற்றத்தார்க்கு-மிகுந்த குற்றத்தினை யுடையவரை, நாணென்னும் நல்லாள்-நாணமென்று சொல்லப்படுகிற உயர்ந்தவள் (பார்த்தற்கு அஞ்சி, புறங்கொடுக்கும்-(அவர்க்கு)எதிர்முகமாகாள், எ-று.

காணுதற்கும் அருசி உலகத்தார் தூரத்தே நீக்குவர் ஆதலால 'பேணா' என்றும், பின் ஒருவழியானும் நீக்கப்படாமையால 'பெருங்குற்றம்' என்றும், இழிந்தோரிடத்து நில்லாமையால 'நல்லாள்' என்றும் சொல்லினார். இவை மூன்றும் புறங்கொடுத்து ஒளிப்பதற் காரணம் சொல்லப்பட்டது.

(க - து) கள்ளுண்பாரிடத்து நாணமின் றென்பது. (௪)

௫. கையறி யாமை யுடைத்தே பொருள்கொடுத்து
மெய்யறி யாமை கொளல்

பரி —(இ - ள்) ஒருவன் விலைப்பொருளைக் கொடுத்துக் கள்ளாற்றனக்கு மெய்யறியாமையைக் கொள்ளுதல் அவன் பழவினைப் பயனாய செய்வதறியாமையைத் தனக்குக் காரணமாக வுடைத்து, எ-று.

தன்னை யறியாமை சொல்லவே ஒழிந்தன யாவு மறியாமை சொல்லல் வேண்டாவாயிற்று. கை [1] அப்பொருட்டாதல் [2] "பழனுடைப் பெருமரம் வீழ்ந்தெனக் கையற்று" என்பதனானு மறிக. அறிவார் விலைகொடுத்து ஒன்றனைக் கொள்ளுங்கால் நீயது கொள்ளாமையின், மெய்யறியாமை கொளல் [3] முன்னையறியாமையான் வந்த தென்பதாம்.

தெளி —(இ - ள்) (ஒருவன்) பொருள் கொடுத்து - விலைப்பொருளைக் கொடுத்து, மெய்யறியாமை-(கள்ளாலே தனக்கு)மெய்ம்மறப்பினை, கொளல்-கொள்ளுதல், கையறியாமை -(அவன் பழவினைப் பயனாகிய)செய்வதறியாமையை, உடைத்து - (தனக்குக் காரணமாக) உடைத்து, எ-று.

தன்னை யறியாமை சொல்லவே, ஒழிந்தவையாவையும் அறியாமை சொல்லல் வேண்டாவாயிற்று. ஈண்டுக் கையென்பது செயவது என்னும் பொருளில் வந்தது. அறிவார் விலைகொடுத்து ஒன்றைக் கொள்ளுங்கால் தீயதைக்கொள்ளாமையால், மெய்யறியாமை கொளல் முன்னையறியாமையால் வந்ததென்பதாம்.

(க - து) பொருளைக் கொடுத்துக் கள்ளுண்டு மெய்ம்மறந்துவிடுதல் அறியாமையின் பயனும் என்பது. (௫)

---

1 அப்பொருட்டாதல் - செயவதென்னும் பொருளினையுடையதாதல்

2 புறநானூறு, ௨0௧. இதன்பொருள்[பறவைகள்]பழங்களை யுடைய பெரியமரம் பழுத்துமாறியதென்று செயவதொழிந்து என்பது

3 முன்னையறியாமை - சனமாந்தரத்திற்செய்த தீவினையின் பயனான அறியாமை.

கீழ்நீர்க், குளித்தானை - நீருள்ளே மூழ்கினொருவனை, (மற்றொருவன்) தீ - விளக்கினால், துரீஇயற்று - தேடுவதையொக்கும், எ - று.

களித்தானை என்பது களித்தானுக்கு என்னும் பொருளிலும் வந்தது. நீருள்ளவனுக்குச் செல்லாமைபோல அவன் மனத்துள் காரணம் செல்லாதென்பதாம். இதனால் அவனைத் தெளிவித்தல் முடியாதென்பது சொல்லப்பட்டது.

(க - து.) கள்ளுண்டானைத் தெளிவித்தல் முடியாது என்பது (௯)

௧௰. கள்ளுண்ணாப் போழ்திற் களித்தானைக் காணுங்கா
லுள்ளான்கொ லுண்டதன் சோர்வு

பரி —(இ - ள்) கள்ளுண்டானொருவன் தான் அஃதுண்ணாது தெளிந்திருந்த பொழுதின்கண் உண்டு களித்த பிறனைக் காணுமன்றே, காணுங்கால் தானுண்டபொழுது உளதாஞ் சோர்வினை அவன் சோர்வால் [1] அதுவு மிற்றென்று கருதான்போலும், எ - று.

சோர்வு - மனமொழிமெய்கள் தன்வயத்தவல்லவாதல். [2] கருதலளவையான் அதனையறிகின்ற பயந்துணரின் ஒழியுமென இதனால் [3] அஃதொழிதற் காரணங் கூறப்பட்டது.

தெளி —(இ - ள்) (கள்ளுண்பவனொருவன் தான்) கள்ளுண்ணாப் போதில் - கள்ளையுண்ணாமல் தெளிந்திருந்த பொழுதில், களித்தானை - (கள்ளுண்டு) களித்தபிறனை, (காணுமல்லவா) காணுங்கால் - காணுமிடத்து, உண்டதன் சோர்வு - (தான்) உண்டபொழுது உண்டாகுஞ்சோர்வை, உள்ளான்கொல் - (அவன்சோர்வால் அதுவும் இப்படிப்பட்டதென்று) நினையான்போலும், எ-று.

சோர்வு - மனமொழி மெய்கள் தன்வசப்படாமை. அனுமானப் பிரமாணத்தால் கள்ளுண்டவனிலைமையை ஆலோசித்து அறிந்தால்ஒழியுமென இதனால் அஃது ஒழிதற்காரணஞ் சொல்லப்பட்டது.

(க - து) கள்ளுண்பவன் தான் குடியாதபோது குடித்தவனைக் கண்டு தன் சோர்வை நினைப்பானாயின் அவன் குடியான் என்பது (௰)

---

1 அதுவும் - தானுண்டபோது தனக்குண்டாகுஞ் சோர்வும் (தளர்ச்சியும்)

2 கருதலளவை - அனுமானப் பிரமாணம். அது வருமாறு —யானுஞ் சோர்வுடையவனாவேன் என்பது பிரதிஞ்ஞை, கள்ளுண்டலால் என்பது ஏது, யாண்டு யாண்டுக் கள்ளுண்டலுண்டு, ஆண்டு ஆண்டுச் சோருதலுண்டு, கள்ளுண்டுசோரும் பிறனைப்போல என்பது உதாரணம்.

3 அஃது - கள்ளுண்டல்.

1 கவற்றினது உருட்சியை அதன்கண் ஆயத்தின்மேல் ஏற்றியும், 2 சூதாடலை அது கூறலாகிய காரணத்தின்மேல் வைத்துக் கூறினார். பொருளாயமென்பது 3 உம்மைத்தொகை 4 ஆயம் — வடமொழித் திரிசொல். காத்தற்கண்ணும் இயற்றற்கண்ணும் கருத்திலனாகலின், 5 அவையிரண்டும் பகைவர்பாற் செல்லுமென்பதாம்.

**தெளி.**—(இ-ள்.) உருளாயம் - உருளுங் கவற்றில் அகப்பட்ட ஆதாயத்தை, ஓவாது - இடைவிடாமல், கூறின் - சொல்லிச் சூதாடுவாயின், பொருள் (அரசன் சம்பாதித்த) பொருளும், ஆயம் - (அவன்) பொருள் வருவாயும், போஒய் - (அவனைவிட்டுப்) போய், புறமே படும் - பகைவரிடத்தே தங்கும், எ-று.

கவற்றினது உருட்சியை அதனாலாகிய ஆயத்தின்மேல் ஏற்றியும், சூதாடுதலை அது சொல்லலாகிய காரணத்தின்மேல் வைத்தும் சொல்லினார். பொருளாயமென்பது பொருளும் ஆயமும் என விரிதலால் உம்மைத்தொகை. ஆயம் என்பது வடசொல். காத்தலினும் செய்தலினும் கருத்திலனாகலால், அவை இரண்டும் பகைவரிடத்தே செல்லும் என்பதாம்.

(க-து) ஓயாமல் சூதாடுவோனது பொருள் விரைவில் ஒழியும் என்பது. (௩)

௪ சிறுமை பலசெய்து சீரழிக்குஞ் சூதின்
வறுமை தருவதொன் றில்.

**பரி.**—(இ-ள்) தன்னை விழைந்தார்க்கு முன்னில்லாத துன்பங்கள் பலவற்றையும் விளைத்து உள்ள புகழையுங் கெடுக்குஞ் சூதுபோல நல்குரவினைக் கொடுக்கவல்லது பிறிதொன்றில்லை, எ-று.

---

1 கவற்றினது (பாய்ச்சிகையினது) உருட்சியை (உருளுதலை) கவற்றினது உருட்சியினுண்டாம் ஆயத்தின்மேலேற்றி 'உருளாயம்' என்று கூறப்பட்டது. இது காரணத்தின் தொழில் காரியத்தின் மேலாய உபசாரவழக்கு.

2 சூதாடுதலை அது (அச்சூதாடுதற்குக்) கூறலாகிய காரணத்தின்மேல் வைத்துக் 'கூறின்' என்று கூறப்பட்டது. கூறின் என்னும் கருவியின் பெயர் அதன்காரியமாகிய சூதாடுதலுக்காதலால் கருவியாகு பெயர்.

3 உம் என்னும் இடைச்சொல் தொக்கு நிற்றலால் உம்மைத்தொகையாம்.

4 ஆயம் என்பது பலபொருள் குறித்த ஒரு பெயர்த்திரிசொல். இங்கே ஆயம் என்பது ஆதாயத்தையும் பொருள்வருவாயையும் உணர்த்தி நின்றது. "ஆயமே கவற்றிற் றாய மாதாய மாதர் கூட்டம்" என்று நிகண்டு கூறுகின்றது. வடசொல் இன்னதென்பது 'வடசொற் கிளவி வடவெழுத் தொரீஇ, யெழுத்தொடு புணர்ந்த சொல்லா குமே" என்னும் (தொல்காப்பியச்) சூத்திரத்தானினிது விளங்கும். திரிசொல் - இயற்சொல்லின் வேறுபட்டசொல்.

5 அவையிரண்டும் - சம்பாதித்த பொருளும் பொருள்வரும் வழியும்.

அத்துன்பங்கள் முன்னர்க்கூறப்பட்ட நல்வினைகளையும் நல்லினத்தையும் நீக்கித் தீவினைகளையுந் தீயினத்தையுங் கூட்டுதலால் 'சீரழிக்கும்' என்றார் வறுமைக்கு எல்லையாவ தென்பதாம்.

தெளி—(இ - ள்) சிறுமைபல - (முன்னில்லாத) துன்பங்கள் பலவற்றை யும், செய்து - (தன்னைவிரும்பினவர்க்குச்) செய்து, சீர்-(உள்ள) புகழையும், அழிக்கும் - கெடுக்கும், சூதின் - சூதுபோல, வறுமை - வறுமையை, தருவது - கொடுக்கவல்லது, ஒன்று - வேறொன்று, இல - இல்லை, எ - று.

அத்துன்பங்கள் பின்னே சொல்லப்படும் நல்வினைகளையும், நல்லினத்தையும் நீக்கித் தீவினைகளையும், தீயினத்தினையும் கூட்டுதலால் 'சீரழிக்கும்' என்றார் சூதாடுவோர் வறுமைக்கு எல்லையாவரென்பதாம்

(க - து) துன்பத்தையுண்டாக்கிப் புகழைக்கெடுக்கும் சூதுபோல் தரித்திரத்தைத் தருவது பிறிதொன்றில்லை என்பது (௪)

௫. கவறுங் கழகமுங் கையுந் தருக்கி
யிவறியா ரில்லாகி யார்.

பரி—(இ - ள்) 1 முற்காலத்துத் தாமுளராகியே இலராகியொழுகினர் கவற்றினையும் 2அஃதாடு களத்தினையும் அவ்வாடற்கு வேண்டுங் கைத்தொழி லினையும் மேற்கொண்டு கைவிடாத வேந்தர், எ - று

கைத்தொழில—3 வெல்லுமாயம்பட்டப் பிடித்தெறிதல் 4 அவ்விவறுதலாற் பாண்டவர் தம்மரசுவிட்டு வனத்திடைப்போய் ஆண்டு மறைந்தொழுகினரென அநுபவங் காட்டியவாறு இவை யைந்துபாட்டானும் 5 அதனது வறுமை பயத்தற் குற்றங் கூறப்பட்டது

தெளி—(இ - ள்) இல்லாகியார் - (முற்காலத்திலே தாமுடையவரா யிருந்தே) இல்லாதவராயொழுகினவர், கவறும்-கவற்றினையும், கழகமும் - அஃதாமிடத்தினையும், கையும் - (அவ்வாடுதற்குவேண்டும்) கைத்தொழிலினையும், தருக்கியிவறியார் - மேற்கொண்டு கைவிடாதவேந்தர், எ - று.

---

1 முற்காலத்தில (துவாபரயுகத்தில்) தாமுயிருடையவராயிருந்தே பொருளி லாதவராகிக் காட்டிலே திரிந்தவேந்தர் பாண்டவரென்பது.

2 அஃது - சூதாடுகருவியான கவறு (பாய்ச்சிகை)

3 வெல்லுமாயம்பட்டப்பிடித்தெறிதல் - வெல்லக்கூடிய ஆதாயமுண்டாம்படி பாய ச்சிகையினை யுள்வாகப் பிடித்தெறிதல்.

4 அவ்விவறுதலால - சூதாடுங்கருவியையும், அஃதாடுமிடத்தினையும், அதனை யாடுதற்கு வேண்டும் கைத்தொழிலினையும் கைவிடாதிருந்ததலால.

5 அதனது —சூதினது

கைத்தொழில் - வெல்லுமட்டாய்ச்சிகையைப் பிடித்தெறிதல் மேற்கொண்டு கைவிடாததினாலே பாண்டவர் தம்மரசிழந்து காட்டிலேபோய் அங்கே மறைந்தொழுகினரென அனுட்டங்காட்டியபடி. நளனது சரித்திரமுமிங்கு நியத்தக்கதாம் இவையிரண்டுபாட்டானும் வறுமையுண்டாகக்குற்றம் சொல்லப்பட்டது.

(க - து.) சூதையும் சூதாடுமிடத்தையும் சூதாடுதொழிலையும் கைவிடாத வரசர் யாதுமிலராவர் எனபது. (௫)

௬ அகடாரா ரல்ல லுழப்பர்சூ தென்னு
முகடியான் மூடப்பட் டார்.

**பரி.**—(இ - ள்.) 1 தன்பெயர்சொல்லல் மங்கலமன்மையிற் சூதென்று சொல்லப்படும் முகடியான விழுங்கப்பட்டார் இம்மைக்கண் வயிறாரப்பெறார், மறுமைக்கண் நிரயத்துன்ப முழப்பர், எ - று.

செல்வங்கெடுத்து நல்குரவு கொடுத்தற்றொழில் வேறுபட்டாமையிற் 'சூதென்னு முகடி' என்றும், வெற்றி தோல்வி களேகக்கிஒருபொழுதும் விடாராகலின் 2 ஈண்டு 'அகடாரார்' என்றும், பொய்யுங் களவும் முதலிய பாவங்கள் ஈட்டலின் 3 ஆண்டு 'அல்லலுழப்பர்' என்றுங் கூறினார் 4 வயிறாரமை சொல்லவே, ஏனைப்புலன்க ளுகப்பெறாமை சொல்ல வேண்டாவாயிற்று. 5 உழப்பரெனபது எதிர்காலவினை.

**தெளி.**—(இ - ள்) சூதென்னும் - (தனது பெயர்சொல்லல் மங்கலமல்லாமையால்)சூதென்று(வேறுபெயராற்)சொல்லப்படுகிற, முகடியால் - மூதேவியால், மூடப்பட்டார்- விழுங்கப்பட்டவர், அகடாரார் - (இம்மையிலே) வயிறு நிறையப்பெறார், அல்லலுழப்பர் - (மறுமையிலே) நரகத்துன்பமனுபவிப்பர், எ - று.

செல்வங்கெடுத்து வறுமை கொடுத்தற்றொழில் வேறுபடாமையால 'சூதென்னு முகடி' என்றும், வெற்றி தோல்விகள்நோக்கி ஒருபொழுதும விடாராகலால் இங்கு 'அகடாரார்' என்றும், பொய்யும் களவு முதலாகிய பாவங்கள் சம்பாதித்தலால அங்கு 'அல்லலுழப்பர்' என்றும் சொல்லினார் வயிறாரமை சொல்லவே, மற்றை ஆடை யணிமுதலாகிய விஷயங்களை அனுபவிக்கப்பெறாமை சொல்லவேண்டாவாயிற்று உழப்பரென்பது எதிர்காலவினைச்சொல்

---

1 தன்பெயர் சொல்லல் - மூதேவியென்று தனது பெயரைச் சொல்லுதல்

2 ஈண்டு - இம்மையில் 3 ஆண்டு - மறுமையில

4 வயிறாரமை - வயிறு நிரம்ப வுண்ணாமை.

5 உழப்பர் என்பது எதிர்காலத் தெரிநிலை வினைமுற்று. [சூதென்னும் முகடியால் மூடப்படுதல் காரணமாயும் அல்லலுழத்தல் காரியமாயும் இருத்தலாலே மூடப்பட்டார் என்று இறந்தகாலமாகவும் உழப்பர் என்று எதிர்காலமாகவுஞ் சொல்லப்பட்டன வென்க]

(க - து) சூதென்னும் மூதேவியால் விழுங்கப்பட்டவர் இம்மையின் வறுமையும் மறுமையில் நரகமும் அநுபவிப்பர் என்பது. (௬)

எ. பழகிய செல்வமும் பண்புங் கெடுக்கும்
கழகத்துக் காலை புகின்.

பரி—(இ - ள்) அறம் பொருளின்பங்கட்குக் கடைத்தகாலம் அரசனுக்குச் சூதாடுகளத்தின்கட் கழியுமாயின், அக்கழிவு தொன்றுதொட்டுவந்த அவன் செல்வத்தினையும் நற்குணங்களையும் போக்கும், எ - று.

1 பழகியவென்பது பண்புடனும் இயையும் தான் செய்துகொள்ளும் அறமுதலியவேயன்றி முன்னோரைத்தொடங்கி வருகின்ற செல்வமும் முன்செய்த நல்வினையின் பயனாய பண்பும் இல்லாமென்பதாம்.

தெளி—(இ - ள்.) காலை - (அறம்பொருளின்பங்களுக்கு விதித்த) காலம், (அரசனுக்கு) கழகத்து - சூதாடுமிடத்து, புகின் - கழியுமாயின், (அக்கழிவு) பழகிய - நெடுநாளாய் வந்த, செல்வமும் - (அவன்) செல்வத்தையும், பண்பும் - நற்குணங்களையும், கெடுக்கும் - போக்கும், எ - று.

பழகிய என்பது பண்பென்பதனுடனும் இயைந்து நின்றது. தான் செய்துகொள்ளும் அறமுதலானவையேயல்லாமல் முன்னோரைத் தொடங்கிவருகின்ற செல்வமும் முன்செய்த நல்வினையின்பயனாகிய நற்குணங்களும் இல்லாமற் போமென்பதாம்.

(க - து) அரசன் இடைவிடாது சூதாடுவானாயின் அஃது அவனது செல்வத்தையும் குணங்களையும் கெடுக்கும் என்பது. (எ)

அ. பொருள்கெடுத்துப் பொய்மேற் கொளீஇ யருள்கெடுத்
தல்ல லுழப்பிக்குஞ் சூது.

பரி—(இ - ள்) சூது தன்னைப் பயின்றவன் பொருளைக் கெடுத்துப் பொய்ம்மையை மேற்கொள்ளப்பண்ணி மனத்தெழும் அருளைக்கெடுத்து இவ்வாற்றான் 2 அவனை இருமையினுந் துன்பமுறுவிக்கும், எ - று.

3 இத்தொழில்கள் மூன்றற்கும் சூது வினைமுதலாகவும், தோல்வி, வெ

---

1 பழகிய என்பதனைப் பண்பு என்பதனோடுங் கூட்டித் தொன்றுதொட்டுவந்த நற்குணங்களையும் என்று பொருள் கொள்க.

2 அவனை - தன்னைப் பயின்றவனை.

3 பொருளைக்கெடுத்தல், பொய்யைமேற்கொள்ளப்பண்ணல், அருளைக் கெடுத்தல் என்னுமித்தொழில்கள் மூன்றினுக்கும் சூதினைக்கர்த்தாவாகவும், பொருளைக்கெடுத்தற்குத்தோல்வியைக்கருவி (துணைக்காரணம்) யாகவும், பொய்யைமேற்கொள்ளுதற்கு வெற்றியைக்கருவியாகவும், அருளைக்கெடுத்தற்குச் செற்றத்தை (கோபத்தை) க்கருவியாகவும் கொள்ளுக வென்பதாம்.

ற்றி, சொற்சொன்ன முறையே கருவிகளாகவுங் கொள்க. 1 முன்னதனால் இம்மையினும், 2 ஏனையவற்றால் மறுமையினும் 3 ஆம். 4 பொருள்கொடுத்தென்பது பாடமாயின், அவ்வெச்சத்திற்கு முடிவு மேற்கொளீஇயென்பதின் மேற்கோடலாகிய வினைமுதல்வினை.

தெளி —(இ - ள்) சூது—சூதானது, பொருள்கெடுத்து - (தன்னைப்பற்றினவனது) பொருளைக்கெடுத்து, பொய் - பொய்யை, மேற்கொளீஇ - மேற்கொள்ளப்பண்ணி, அருள்கெடுத்து-(மனதில் எழுகிற) அருளைக்கெடுத்து, (இவ்வழியால்) அல்லலுழப்பிக்கும் - (அவனை இருமையிலும்) துன்பமுறுவிக்கும், எ - று.

பொருள்கெடுத்தல் முதலாகிய இத்தொழில்கள் மூன்றற்கும் சூது எழுவாயாகவும், தோல்வி, வெற்றி, கோபம் என்பன முறையே சாதனங்களாகவும் கொள்க. முன்னையதால் இம்மையினும், பின்னவைகளால் மறுமையினுமாம்,

(க - து) சூதானது தன்னைப் பழகினவனது பொருளைக் கெடுத்துப் பொய்யை மேற்கொள்ளச்செய்து அருளைக்கெடுத்து அவனைத் துன்பமுறச்செய்யும் என்பது. (அ)

கூ. உடைசெல்வ மூணொளி கல்வியென் றைந்து
மடையாவா மாயங் கொளின்.

பரி —(இ - ள்) அரசன் சூதினைத் தனக்கு விநோதத்தொழிலாக விரும்புமாயின், அவனை 5 ஒளியும் கல்வியும் செல்வமும் 6 ஊணும் 7 உடையுமென்றிவ்வைந்துஞ் சாராவாம், எ - று.

8 ஆயம்—சூதுபெயர். 9 இச்சிறப்புமுறை செய்யுளாகிய பிறழ

---

1 முன்னதனால் - பொருள்கெடுத்தலால்.

2 ஏனையவற்றால் - பொய்யைமேற்கொள்ளுதல் அருளைக்கெடுத்தல் என்பனவற்றால்.

3 ஆம் - துன்பமாகும்.

4 பொருள்கெடுத்து என்பதற்குப் பிரதியாகப் பொருள்கொடுத்து என்பது பாடமானால், அக்கொடுத்து என்னும் (செய்தெனனும் வாய்பாட்டிறந்த காலவினை) எச்சத்திற்கு முடிக்குஞ்சொல் மேற்கொளீஇ என்பவிடத்து (அதனுட் குறிப்பான) மேற்கோடலாகிய வினைமுதல் (கருத்தாவாகிய சூதினது) வினையாமெனக. கொடுத்து மேற்கோடல் என்றியையும்.

5 ஒளி - மதிப்பு. 6 ஊண் - உணவு. 7 உடை - ஆடை.

8 ஆயம் என்பது (ஆதாயத்தைத்) தருஞ் சூதிற்காதலால் காரியவாகு பெயர். ஆயம் - சூதாவாரும் ஆதாயமென்பதை "உருளாயம்" என்பதனு லறிக.

9 ஒளி, கல்வி, செல்வம், ஊண், உடை யென்னும் சிறப்புமுறை செய்யுணோக்கி 'உடைசெல்வமூணொளிகல்வி' யென்று பிறழ (மாறுபட) நின்ற

[illegible] செல்வம் - 1 அறுவகை யுறுப்புக்கள் ஊணுடை யென்பனவற்றால் அடக்கிக் கொள்ளப்பட்டன. காலமுங் கருத்தும் பெறாமையின், 2 இவை அடையாவாயின. இவை நான்கு பாட்டானும் சிறுமைபலசெய்து அவற்றிருமையுங் கெடுத்தல் கூறப்பட்டது.

**தெளி.**—(இ-ள்) (அரசன்) ஆயம் - சூதினை, கொளின் - (தனக்கு வினோதத் தொழிலாக) விரும்புவானாயின், ஒளி - ஒளியும், கலவி - கலவியும், செலவம் - செலவமும், ஊண - ஊணும், உடை - உடையும், என்றைந்தும் - என்ற இவ்வைந்தும், அடையாவாம் - (அவனை) சேராவாம், எ - று.

ஆயம் சூதுக்கருவியால் காரியவாகு பெயர். ஒளிகல்வி என்றமுறைக்குத் தெளிப்புறச் சிறப்புமுறை செய்யுள் நோக்கிப் பிறழ நின்றது. செல்வம் - அறுவகையுறுப்புகள். ஊணுடை யென்பவைகளால் அடக்கிக் கொள்ளப்படும். காலமுங் கருத்தும் பெறாமையால், இவை உண்டாகாவென்பதாம். இவை நான்கு பாட்டானுஞ் சிறுமைபலசெய்து அவைகளால் இருமையுங் கெடுத்தல் சொல்லப்பட்டது.

(க - து) சூதாடுவோனுக்கு மதிப்பு முதலானவை யுண்டாகாவென்பது (கூ)

கo இழத்தொறூஉங் காதலிக்குஞ் சூதேபோற் றுன்ப
முழத்தொறூஉங் காதற் றுயிர்.

**பரி.**—(இ - ள்) சூதாடுவான் 3 இருமைப்பயன்களையு மிழக்குந்தோறும் 4 அதன்மேற் காதல் செய்யுஞ் சூதனைப்போல உடம்பான் 5 மூவகைத் துன்பங்களையும் அனுபவிக்குந்தோறும் 6 அதன்மேற் காதலையுடைத்து உயிர், எ - று.

---

தென்க. சிறப்புமுறையாவது மதிப்பினாலே கல்வியின் சிறப்பும், கல்வியினாலே (நடத்தும் வகையால்) பொருளின் சிறப்பும், பொருளினாலே உணவின் சிறப்பும், உணவினாலே தேகபுஷ்டி யுண்டாவதால் உடையுடுத்தலின் சிறப்பும் அமைந்திருப்பதாமெனக்-[உடையில்லாதானுக்கு உண்டியும், உண்டியில்லாதானுக்குச் செல்வமும், செல்வமில்லாதானுக்குக் கல்வியும், கல்வியில்லாதானுக்கு மதிப்பும் உளவாகா என்பது கருத்து] இறைமாட்சி முதற்குறளில் விசேடவுரையில் 'ஈண்டுச் செய்யுணோக்கிப் பிறழவைத்தார்" என்பது மிகைப்படுத்தக்கதாம்.

1 அறுவகை யுறுப்பு - அமைச்சு, நாடு, அரண், பொருள், படை, நட்பு என்பன.

2 இவை - ஒளி, கல்வி, செல்வம், ஊண், உடை என்பன.

3 இருமைப்பயன் - இப்பிறப்பிலும் வருபிறப்பிலும் உண்டாகும் (நல்வினையின் பயனாய) சுகபோகம்.

4 அதன்மேல் - சூதாடுதலின்மேல்.

5 மூவகைத்துன்பம் - (1) தன்னைப்பற்றியும், (2) பிறவுயிர்களைப்பற்றியும், (3) தெய்வத்தைப்பற்றியும் வரும் பிறவித்துன்பங்கள்.

6 அதன்மேல் - உடம்பின்மேல்

சூது [1] அறுபெயர் உயிரினது அறியாமை கூறுவார்போன்று சூதனது அறியாமை கூறல் கருத்தாகலின், [2] அதனை யாப்புறுத்தற்பொருட்டு [3] உவமையாக்கிக் கூறினார். [4] இதன் [5] எதிர்மறைமுகத்தால் சூதினை வெறுத் தொழிவானை யொக்கும் உடம்பின் வெறுத்தொழியு முயிரெனவுங் கொள்க. இதனான் [6] அஃதொழிதற் கருமையும் ஒழியாதது பெருமையுங் கூறப் பட்டன.

**தெளி.**—(இ - ள்) இழத்தொறூஉம் - சூதாடலால் (இருமைப்பயன் களையும்) இழக்குந்தோறும், காதலிக்கும் - (அதனையே) ஆசைசெய்யும், சூதேபோல - சூதனைப்போல, உயிர் - உயிரானது, துன்பமுழத்தொறூஉம் - (உடம்பால்) துன்பங்களையும் அனுபவிக்குந்தோறும், காதற்று - (அதனையே) ஆசையுடைத்து, எ - று.

சூது-பண்பாகுபெயர் உயிரினது அறியாமை சொல்வார்போன்று சூதன து அறியாமை சொல்லுதல் கருத்தாகலால், அதனை உறுதிப்படுத்தற்பொருட்டு உவமான மாக்கினார் இதனெதிர்மறைமுகத்தால் சூதினைவெறுத்து ஒழி பவனையொக்கும் உடம்பினை வெறுத்து ஒழியும் உயிரெனவுங் கொள்க, இதனால் அதுவிடுதற் கருமையும் விடாவாத பெருமையும் சொல்லப் பட்டன

(க - து) சூதாடுவோன் இருமைப்பயன்களையுமிழத்தலை யறியா து அதனையே விரும்புவன் என்பது. (௰)



## கூ௫ - ம். அதி.—மருந்து.

**பரி.**— [7] பழவினையானும் காரணங்களானும் மக்கட்கு வாத முதலிய பிணிகள்வரும், அவற்றுட் பழவினையான் வருவன அதன் கழிவின்கணல்லது தீராமையின் [8] அவையொழிந்து, ஏனைக் காரணங்களான் வருவனவற் றைத் தீர்க்கும் மருந்தினைநிரலக் கூறுகின்றார் காரணங்களாவன உணவு செய ல்களனொவ்வாமையாகலின், பிணிகளுங் காரணத்தான் வருவனவாயின

---

1 சூது என்னும் பண்புப்பெயர் அதனையுடையவனுக்காதலால் பண்பாகு பெயர்.

2 அதனை - சூதனது அறியாமையை

3 உவமையாக்கி - 'இழத்தொறூஉங்காதலிக்குஞ் சூதேபோல்' என்றுவமான மாக்கி.

4 இதன் - 'இழத்தொறூஉம்' என்னும் இக்குறளின்.

5 காதலிக்கும் என்பதற்கு வெறுத்தொழிதல் என்பதும் காதற்று என்பத ற்கு வெறுத்தொழிதல் என்பதும் எதிர்மறையாகுமென்க.

6 அஃது - சூது. அஃது ஒழித்தற்கருமையும் என்றும் பாடமுண்டு.

7 பழவினை - முன்ஜன்மத்திற்செய்தகருமம்.

8 ஒழிந்து - பழவினையால் வரும் நோய்களையொழிந்து

தோற்.—பழவினையானும் காரணங்களானும் மனிதர்க்கு வாதமுதலாகிய பிணிகள் வரும், அவைகளுள் பழவினையால் வருவன அவ்வினைகழியும்போ தல்லாமல் தீராமையால் அவையொழிந்து, மற்றைக் காரணங்களால் வரும் வைகட்கேற்றிருக்கு மருந்தின் திறம் சொல்லுகின்றார். காரணங்களாவன உணவு செயல்களினது வித்தியாசமாகலால், நோய்களும் காரணத்தால் வருவனவாயின.

**க. மிகினுங் குறையினு நோய்செய்யு நூலோர்**
**வளிமுதலா வெண்ணிய மூன்று.**

பரி.—(இ - ள்) உணவுஞ் செயல்களும் ஒருவன் பகுதிகோடொத்த அளவினன்றி 1 அதனின் மிகுமாயினும் குறையுமாயினும் 2 ஆயுள்வேத முடையாரால் 3 வாதமுதலாக வெண்ணப்பட்ட மூன்று நோயும் அவனுக்குத் துன்பஞ்செய்யும், எ - று.

நூலோர் எண்ணியவெனவே, அவர் 4 அவற்றான் வகுத்த வாதப்பகுதி பித்தப்பகுதி ஐயப்பகுதியென்னும் பகுதிப்பாடும் பெறப்படும். 5 அவற்றிற்கு ஒத்தலாவது 6 சுவை 7 வீரியங்களானும் அளவானும் பொருந்துதல். செயல்களோடொத்தலாவது மனமொழி மெய்களாற் செய்யுந் தொழில்களை 8 அவை வருந்தாவகை தக்கமுறையே யொழுகுதல் 9 இவையிரண்டும் இவ்வனமன்றி மிகுதல் குறைதல் செய்யின், 10 அவை தத்தநிலையி னில்லாவாய் வருத்துமென்பதாம் 11 காரண மிரண்டும் அவாய்நிலையான் வந்தன 12 முற்றும்மை வி

1 அதனின் - சரீரசுபாவத்திலும். 2 ஆயுள்வேதம் - வைத்தியசாஸ்திரம்.
3 வாதம் - வாயு.
4 அவற்றான் - வாதமுதலானவைகளால் "நீதி கருணை நிலைமை யபிமானம், போத மவையினமை போரிற புறங்கொடுத்தல், மேதக் கவர்ப்பழித்தல் வேண்டா தவைபிறற்றல், வாத (வாயு) க்குணமு மதி." "அறிவுடைமை யைகநடக்க லாகத்தழகு, நெறியுடைமை சொல்வன்மை நீர்மை - பெற வரிய, வத்துவிதஞான தாதரவா மாணமையிவை, பித்த (பித்தம்) குண மென்றெனப் பேசு." "பொறிபிற ழாமை புகழகருணை யூக்கம், குறிம தனைக் கோடமிலாமை- பொறையோர, நிபமின றியவீகை நெஞ்சத்துவகை, கப (சிலேத்துமம்)மான றியகுணமாக காண்" என்று அமிர்தசாரங் கூறுவது மிக்கறியத்தக்கதாம்.
5 அவற்றிற்கு - வாதப்பகுதி (பிரிவு) முதலிய பகுதிப்பாட்டிற்கு.
6 சுவை - உருசி. 7 வீரியம் - பலம் 8 அவை - மனமொழிமெய்கள்.
9 இவையிரண்டும் - உணவு ஒத்தல் செயல்கள் ஒத்தல் என்னு மிவ்விரண்டும்.
10 அவை - மனமொழி மெய்கள்.
11 மிகினுங் குறையினும் என்பவை அவாவி (வேண்டி) நிற்றலாலே [நோய்களுக் காரணமான] உணவும் செயல்களும் வருவித் துரைக்கப்பட்டன.
12 மூன்று என்பதனீற்றில் [இனைத்தென்றறி பொருளில்வந்த] முற்றும்மை செய்யுள்விகாரத்தாற்றொக்கு நின்றது.

[illegible] இதனால், யாக்கைக்கு இயல்பாகிய நோய் 1 மூவகைத் தென்பதூஉம், அவை துன்பஞ்செய்தற் காரணம் 2 இருவகைத் தென்பதூஉம் கூறப்பட்டன. இன்பஞ்செய்தற்காரணம் முன்னாகக் கூறுப

**தெளி**—(இ-ள்) 'உணவும் செயல்களும் ஒருவன் சரீர சுபாவத்துக்கு ஒத்த அளவினவன்றி மிகினும் - (அவைகள்) மிகுமாயினும், குறையினும் - குறையுமாயினும், நூலோர் - ஆயுள்வேதமுடையோரால, வளிமுதலா - வாதமுதலாக, எண்ணிய - எண்ணப்பட்ட, மூன்று - மூன்றுநோயும், (அவனுக்கு) நோய் - துன்பத்தை, செய்யும் - உண்டாக்கும், எ - று

நூலோரெண்ணிய வெனவே, அவர் அவைகளால் வகுத்த வாதப்பகுதி பித்தப்பகுதி சிலேத்துமப்பகுதி என்கிற பகுதிப்பாடும்பெறும். அவைகளுக்கு உணவு ஒத்தலாவது சுவை வீரியங்களாலும் அளவாலும் பொருத்துதல். செயல்கள் ஒத்தலாவது மனமொழிமெய்களாலே செய்யுந்தொழில்களை அவைவருந்தத்தகுமுன்னே யொழிதல். இவையிரண்டும் இப்படியல்லாமல் மிகுதல்குறைதல் செய்தால் அவை தத்தம் நிலையிலேயில்லாமல் வருத்துமென்பதாம். இதனால் உடம்புகளுக்கு இயல்பாகிய நோய் மூவகைத்தென்பதும், அவை துன்பஞ்செய்தற்கான காரணம் இருவகைத்தென்பதும் சொல்லப்பட்டன. இன்பஞ்செய்தற்காரணம் பின்னேசொல்லுவர்

(க-து) ஒருவனுக்கு உணவும் செயலும் ஒத்தவளவின்றி மிகுமாயினும் குறையுமாயினும் அவனுக்கு வாதமுதலிய மூன்று நோயும் துன்பஞ்செய்யும் என்பது. (க)

உ. மருந்தென வேண்டாவாம் யாக்கைக் கருந்திய
தற்றது போற்றி யுணின்

**பரி**—(இ-ள்.) ஒருவன் முன்னுண்டது அற்றபடியைக் குறிகளாற் றெளியவறிந்து பின்னுணவுண்ணுமாயின் அவன்யாக்கைக்கு மருந்தென்று வேறுவேண்டாவாம், எ-று.

குறிகளாவன யாக்கைநோய்ம்மை, நோக்கின்றூய்மை, கரணங்கடொழிற் குரியவாதல், பசிமிகுதலென்னு மிவை முதலாயின. பிணிகள் யாக்கையவாகலின் 'யாக்கைக்கு' என்றார். உணின் என்பது 3 அதனருமை தோன்ற நின்றது.

**தெளி**.—(இ-ள்.) (ஒருவன்) அருந்தியது - (முன்) உண்ணப்பட்டது, அற்றது - சீரணித்தபடியை, போற்றி - (குறிகளாலே) தெளியவறிந்து - உணின்

1 மூவகைத்து - வாதப்பகுதி, பித்தப்பகுதி, சிலேத்துமப்பகுதி என்று மூன்றுவகையது.

2 இருவகைத்து - உணவு செயல்களென்னும் இரண்டுவகையது

3 அதனருமை - (அருந்தியதற்றதுபோற்றி) உண்ணுதலினருமை.

(பின்னை) உண்டானாயின் - யாக்கைக்கு - (அவ) னுடம்புக்கு, மருந்தென - மருந்தென்று, வேண்டாவாம் - (வேறு) வேண்டுவதில்லை, எ - று.

குறிகளாவன - உடம்பு சிறுகியிருத்தல், நோக்கம் பரிசுத்தமாயிருத்தல், காசமூர்த்தி காரணங்கள் தொழிற்குரியவாதல், பசிமிகுதல் எனவிவைமுதலாயின பிணிகள் உடலுக்கே ஆதலால் 'யாக்கைக்கு' என்றார். உணினென்பது அடன்றுமைதோன்ற நின்றது.

(க - து) ஒருவன் உண்ணப்பட்டது சீரணித்தபடியை நன்றாய் அறிந்து உண்பானாயின் அவனுடம்பிற்கு வேறுமருந்து வேண்டாம் என்பது. (உ)

௩. அற்றா லளவறிந் துண்க அஃதுடம்பு
பெற்றான் நெடிதுய்க்கு மாறு.

பரி.— (இ - ள்) முன்னுண்டது 1 அற்றாற் பின்னுண்பதனை 2 அறுமளவறிந்து 3 அவ்வளவிற்றாக உண்க, 4 இடம்பவும் பலவாய பிறயாக்கைகளிற் பிழைத்துப் பெறுதற்கரிய இம்மானுடயாக்கையைப் பெற்றான் 5 அதனை நெடுங்காலம் கொண்டு செலுத்துநெறி 6 அதுவாகலான், எ - று

இம்மை மறுமை வீடு பேறுகளெய்தற்பாலது ஈதொன்றுமேயாகலின், 'உடம்பு பெற்றான்' என்றும், 7 அது நெடிது நின்றுழி 8 அவை பெருகச்செய்து கொள்ளலாமாகலின் 'நெடிதுய்க்குமாறு' என்றுங் கூறினார். 9 பெற்றாலென்று பாடமோதுவாருமுளர்.

தெளி —(இ - ள்) அற்றால் - (முன்னுணப்பட்டது) அற்றால், (பின்னுணப்படுவதனை) அளவறிந்து - அறுமளவறிந்து, உண்க - அவ்வளவினதாக உண்ணக்கடவன், உடம்பு - (மிகவும் பலவாய வேறு சரீரங்களினின்றுந் தப்பிப் பெறுதற்கரிய மானித) உடம்பை, பெற்றான் - பெற்றவன், நெடிது - (அதனை) நெடுங்காலம், உய்க்குமாறு - கொண்டு செலுத்தும்வழி, அஃது - அதுவாம், (ஆகலான்) எ - று.

---

1 அற்றால் - சீரணித்தால். 2 அறுமளவு - சீரணிக்குமளவு.

3 அவ்வளவிற்றாக - சீரணிக்கும் அளவையுடையதாக.

4 "புன்மரமெனிப் புழுப் புள்விலங்கெனும், பன்மைய துயர்செயும் பவங்கள் தப்பியே, வன்மைகொள் நிலமிசை மக்களாகுதல், நன்மைகொளுயிர்க்கெலாம் அரிது நம்பியே" என்று பிரபுலிங்கலீலை கூறுவது இங்கறியத்தக்கதாம்.

5 அதனை - மானுடயாக்கையை.

6 அது வாதலான் - அளவறிந்துண்ணுதலாதலால். 7 அது - மனிதவுடம்பு.

8 அவை - இம்மை மறுமை வீடுபேறுகள். [பேறு - பெறப்படுவது]

9 பெற்றான், என்பதனைப் பெற்றால் என்று பாடங்கூறுவாருமுண்டு.

இம்மை மறுமை வீடு பேறுகளை அடைதற்கு உரியது இம்மனித வுடம்பொன்றேயாகலான் 'உடம்பு பெற்றான்' என்றும், அது நெடுங்காலம் நின்றவிடத்து அவை பெருகச்செய்து கொள்ளலாமாகலான் 'நெடிதுய்க்குமாறு' என்றும் சொல்லினார்.

(க-து.) மானுடயாக்கையின் பயனை அடையவிரும்புவோன் அவ்வறிந்துண்ணக்கடவன் என்பது. (௫)

அச. அற்றதறிந்து கடைப்பிடித்து மாறல்ல
துய்க்க துவரப் பசித்து.

பரி—(இ-ள்) முன்னுண்டது அற்றபடியை யறிந்து பின் மிகப்பசித்து உண்ணுங்கால் மாறுகொள்ளாத உணவுகளைக் 1 குறிக்கொண்டுண்க எ-று.

2 'அற்றதறிந்து' என்னும் பெயர்த்துரை அதனை யாப்புறுத்தற் பொருட்டு. உண்டது அற்றாலும் அதன் பயனாகிய 3 இரதம் அற்றதாகலான் 4 அதுவும் அறல் வேண்டுமென்பார் மிகப்பசித்து என்றார் 5 பசித்தல் வினை ஈண்டு உடையான் மேல் நின்றது. மாறுகொள்ளாமையாவது உண்டான் பகுதியோடு மாறுகொள்ளாமையும், காலவியல்போடு மாறுகொள்ளாமையும், சுவை வீரியங்களால் தம்முள் மாறுகொள்ளாமையுமாம் 6 அவையாவன 7 முறையே

---

1 குறிக்கொண்டு - கவனமாய்

2 'அற்றாலளவறிந்துண்க' என்று கூறினவர் அதனோடமையாது பின்னும் 'அற்றதறிந்து' என்று கூறியது அதனை (அற்றாலளவறிந்துண்ணுதலை) உறுதிப்படுத்தற்கெனக் [அற்றதறிந்தென்னும் பெயர்த்துரை - அற்றதறிந்து என்கிற அனுவாதம் முன்புகூறிய தொன்றைப்பின்பும் ஒருநிமித்தம்பற்றிக்கூறுதல் அனுவாதமாம்]

3 இரதம் - சாரம் 4 அதுவும் - இரதமும்

5 பசித்து என்னும் சினை (வயிற்றின்) வினை இங்கே உடையான் மேல (முதலின்மேல்) நின்றது

6 அவையாவன - மாறுகொள்ளுதல்களாவன

7 (1) உண்டான் பகுதியோடு மாறுகொள்ளுதல் - வாதப்பித்தசிலேத்துமங்களானாகிய உடம்பிற்கு அடைவுபடாதவைகளைச் செய்தல்; (2) காலவியல்போடு மாறுகொள்ளுதல் - பெரும்பொழுது சிறுபொழுது என்னும் காலவேறுபாடுகளுள்ளே ஒருகாலத்திற்காவன பிறிதொருகாலத்திற்கு ஆகாமற்போதல்; (3) சுவை வீரியங்களால் தம்முள் மாறுகொள்ளுதல் - தேனும் நெய்யும் தம்முள்ஒத்து நஞ்சாதல்போல்வனவாம் என்பது முறையே என்பதன் அடைவாமெனக.

[illegible]ங்களாறுப் பகுதிக் கடாதவற்றைச் செய்வனவாதலும், 1 பெரும்பொழுது 2 சிறுபொழுதென்னும் காலவேறுபாடுகளுள் ஒன்றற்காவன பிறிதொன்றற் காகாமையும், தேனும் நெய்யுந் தம்முளொத்து நஞ்சாதல் போல்வனவுமாம். 3 அவற்றைக் குறிக்கொள்ளாது மனம்பட்டவாற்றாற் றுய்ப்பின் 4 அதனானே நோயும் மரணமும் வருதலின் 'கடைப்பிடித்து' என்றார்.

தெளி —(இ - ள்) அற்றதறிந்து-(முன்னுண்டது) அற்றபடியை அறிந்து, துவரப்பசித்து -(பின்னே) மிகப்பசித்து, (உண்ணும்போது) மாறல்ல - மாறு கொள்ளாத உணவுகளை, கடைப்பிடித்து - குறிக்கொண்டு, துய்க்க - உண்ணக்கடவன, எ-று.

'அற்றதறிந்து' என்று பின்னுஞ் சொல்லியது அதனை உறுதிப்படுத்தற்பொருட்டு. உண்டது அற்றதும் அதன் பயனாகிய இரதம் அற்றதாகலால் அதுவும் அறியவேண்டுமென்பார் 'துவரப்பசித்து' என்றார். பசித்தல் என்னும் வினை இங்கே அதனை யுடையவன்மேல் நின்றது. மாறுகொள்ளாமையாவது உண்பவன் சரீர சுபாவத்தோடு மாறுகொள்ளாமையும், கால வியல்போடு மாறுகொள்ளாமையும், சுவை வீரியங்களால் தம்முள்ளே மாறுகொள்ளாமையுமாம். அவை வன முறையே வாத பித்த சிலேத்துமங்களாலாகிய சரீர சுபாவங்களுக்கு அடைவுபடாதவைகளைச் செய்வனவாதலும், பெரும்பொழுது சிறுபொழுது என்கிற காலவேறுபாடுகளுள்ளே ஒன்றற்கு ஆவன பிறிதொன்றற்கு ஆகாமையும், தேனும் நெய்யும் தம்முள் ஒத்து நஞ்சாதல்போல்வனவுமாம். அவைகளைக் குறிக்கொள்ளாது மனம்பட்டவழியால் உண்டால் அதனாலே நோயும் மரணமும் வருதலால் 'கடைப்பிடித்து' என்றார்.

(க - து.) ஒருவன் நன்றாய்ப்பசித்தபின் மாறு கோளில்லாத வுணவை யுண்ணக்கடவன் என்பது. (௪)

௫ மாறுபா டில்லாத வுண்டி மறுத்துண்ணி
னூறுபா டில்லை யுயிர்க்கு.

---

1 பெரும்பொழுது - கார் (ஆவணி, புரட்டாசி), கூதிர் (ஐப்பசி, கார்த்திகை), முன்பனி (மார்கழி, தை), பின்பனி (மாசி, பங்குனி), இளவேனில் (சித்திரை, வைகாசி), முதுவேனில் (ஆனி, ஆடி), என்னும் ஆறுபகுதியினை யுடையதாம்.

2 சிறுபொழுது - மாலை (1 - 10 நாழிகை இரா), யாமம் [11 - 20 நாழிகை யிரா), வைகுறு (21 - 30 நாழிகை யிரா), காலை [1 - 10 நாழிகை பகல்), நண்பகல் (11 - 20 நாழிகை பகல்), எற்பாடு (21 - 30 நாழிகை பகல், என்னும் ஆறுபகுதியினையுடையதாம்.

3 அவற்றை - உணவுகளை. 4 அதனானே - உண்டலாலே

(க-து) மாறுபாடில்லாத வுணவை யளவறிந்துண்போனுக்கு வியாதியுண்டாகா தென்பது.

௬. இழிவறிந் துண்பான்க ணின்பம்போ னிற்குங்
கழிபே ரிரையான்க ணோய்

பரி—(இ-ள்) 1 அக்குறைதலை நன்றென்றறிந்து அவ்வாறே யுண்பவன்மாட்டு இன்பம் நீங்காது நிலைநிற்குமாறுபோல மிகப் பெரிய விரையை விழுங்குவான்மாட்டு நோய் நீங்காது நிலைநிற்கும், எ-று.

உவவாதேயுண்டல் - உணவைலாமளவிற் சிறிது குறையவுண்டல். இன்பமாவது வாத முதலிய மூன்றும் தத்தநிலையிற் றிரியாமையின் மனமொழிமெய்கள் அவன் வயத்தவாதலும் அதனான் அறமுதலிய நான்கு மெய்தலுமாம். இரையை யளவின்றியெடுத்து அதனை வருந்தும் விலங்கோ டொத்தலின் 'இரையான்' என்றார். 2 விதி யெதிர்மறைகளை உவமமும் பொருளுமாக்கியது 3 இரண்டானும் பெறுதற்கு.

தெளி—(இ-ள்.) இழிவறிந்து - அக்குறைதலை(நலமென்று)அறிந்து, உண்பான்கண் - (அவ்வாறே) உண்பவனிடத்து, இன்பம்போல - இன்பம் நீங்காமல் நிலைத்திருக்கும் விதம்போல, கழிபேரிரையான்கண - மிகப்பெரிய இரையை விழுங்குவோனிடத்து, நோய்-பிணி, நிற்கும் - நீங்காதிருக்கும், எ-று.

உவவாதேயுண்டல் - உணவைலாமளவிற் சிறிது குறையவுண்டல். இன்பமாவது வாத முதலாகிய மூன்றும் தமதுதமது நிலையில் வேறுபடாமையால் மனமொழிமெய்கள் அவன் வசப்பட்டனவாதலும் அதனால் அற முதலாகிய நான்கும் அடைதலுமாம். இரையை அருந்த அளவின்றி எடுத்து அதனால் வருந்தும் மிருகத்தோடொத்தலால் 'இரையான்' என்றார். உடம்பாடெதிர்மறைகளை உவமானமும் உவமேயமுமாக்கியது இரண்டாலும் பெறுதற் கெனக.

(க-து) அளவறிந்து குறைவாக உண்பவனிடத்து இன்பமும் அஃதறியாது மிகுதியாக வுண்பவனிடத்து நோயும் நிலைபெறும் என்பது. (சு)

---

1 அக்குறைதலை - மாறுபாடில்லாத விடத்தும் உணவு குறைவாதலை.

2 இழிவறிந் துண்பான்க ணின்பம் என்பது விதி (உடம்பாடு), கழிபேரிரையான்க ணோய் என்பது எதிர்மறை (இழிவறிந்துண்பானுக்குக் கழிபேரிரையானும் இன்பத்திற்கு நோயும் எதிர்மறை) இழிவறிந்துண்பான்க ணின்பம்போல் என்பது உவமம் (உவமானம்); கழிபேரிரையான்கணோய் நிற்கும் என்பது பொருள் (உவமேயம்).

3 இரண்டாலும் பெறுதற்கு - உடம்பாட்டாலும் எதிர்மறையாலும் முறையே மாறுபாடில்லாத வுணவை யுணவளவிற் சிறிது குறையவுண்டால் இன்பமுண்டாதலும், மிருகம்போ லளவுகடந்து மிகப் பெரிய விரையை விழுங்கினால் நோயுண்டாதலும் பெறுதற் கெனக.

எ. தீயள வன்றித் தெரியான் பெரிதுண்ணின்
நோயள வின்றிப் படும்.

பரி — (இ - ள்) தன்பகுதியும் அதற்கேற்றவுணவுங் காலமு மாராயாது வேண்டியதோருணவை வேண்டியதோர்காலத்து வயிற்றுத் தீயளவன்றி ஒருவன் மிகவுண்ணுமாயின், அவனோடு நோய்கள் எல்லையற வளரும், எ - று.

1 தெரியாமைவினைக்குச் செயப்படுபொருள்கள் அதிகாரத்தான் வந்தன. நோய் 2 சாதியொருமை இவை இரண்டுபாட்டானும் 3 அவ்வகை யுண்ணுவழிப்படு மிழுக்குக் கூறப்பட்டது

தெளி — (இ - ள) தெரியான்-(தன் சரீரசுபாவமும் அதற்கேற்றவுணவுங் காலமும்) ஆராயாது, (வேண்டியதோருணவை வேண்டியதோர்காலத்து) தீயளவன்றி - (வயிற்றுத்) தீயளவல்லாமல், பெரிதுண்ணின் - (ஒருவன்) மிகவுண்ணுமாயின், (அவனிடத்து) நோய்- பிணி, அளவின்றி - அளவில்லாமல், படும்- வளரும், எ - று

தெரியான் என்பதன் தெரியாமை வினைக்குச் செயப்படுபொருள்கள் அதிகாரத்தினால் வந்தன. நோய் என்பது சாதி யொருமைப்பெயர். இவை இரண்டுபாட்டானும் அப்படி உண்ணுதலிடத் துண்டாகும் தவறு சொல்லப்பட்டது.

(க - து) சிரணிக்கும் அளவறியாது மிகுதியும் உண்பவனிடத்து நோய்கள் அளவறப்பெருகும் என்பது. (எ)

அ. நோய்நாடி நோய்முத னாடி யதுதணிக்கும்
வாய்நாடி வாய்ப்பச் செயல்.

பரி — (இ - ள்) மருத்துவனாயினான் ஆதுரனமாட்டு நிகழ்கின்ற நோயை அதன்குறிகளான் இன்னதென்று துணிந்து, பின் அதுவருதற் காரணத்தை ஆராய்ந்து தெளிந்து, பின் அது தீர்க்கு முபாயத்தினை யறிந்து, அதனைச் செய்யும்வழிப் பிழையாமற் செய்க, எ-று

காரணம்—உணவு செயலென 4 முற்கூறிய விரண்டும். 5 அவற்றை ஆயுள்வேதமுடையார் நிதானமென்ப. 6 அவை நாடுதற் பயன் - நோயினையும

---

1 (தெரியான் என்னும்) தெரியாமைவினைக்குத் தன்பகுதியும் அதற்கேற்றவுணவுங் காலமும் என்னும் செயப்படுபொருள்கள (மருந்து என்னுமிந்த) அதிகாரத்தினால் வந்தன அதிகாரத்தால் வருவித்து முடிப்பதனை அநுஷங்கமென்பர் வடநூலார்.

2 நோய் என்பது ஈறுதோன்றாத சாதியொருமைப்பெயர்.

3 அவ்வகை யுண்ணுவழி - மாறுபாடில்லாத வுண்டியை மறுத்துண்ணுதலிடத்து.

4 முற்கூறிய - 'மிகினுங் குறையினும்' என்னுங் குறளிற் சொன்ன.

5 அவற்றை - உணவுசெயல்களை. 6 அவை - உணவுசெயல்.

வாயினையும் ஐயமறத் துணிதல், மருந்துசெய்தல், உதிரங்களைதல், அறுத்தல், சுடுதல் 1முதலிய செயல்களெல்லாம் அடங்குதற்கு 'அது தணிக்கும் வாய்' என்றார். 2 'கழுவாயுமுள' என்றார் பிறரும். பிழையாமை—பழையமருத்துவர் செய்துவருகின்ற முறைமையிற் றப்பாமை.

தெளி —(இ - ள) (மருத்துவனுபினுன்) நோய் - (நோயாளியிடத்து நிகழுகின்ற) நோயை, நாடி - (அதன்குறிகளால் இன்னதென்று) துணிந்து, நோய்முதல் - (பின்பு) அந்நோய்வருதற்காரணத்தை, நாடி - ஆராய்ந்துதெளிந்து, அது தணிக்கும்வாய் - (பின்) அந்நோயைத்தீர்க்கும் உபாயத்தினை, நாடி - அறிந்து, வாய்ப்பச்செயல் - (அவ்வுபாயத்தினைச் செய்யும்வழிப்) பிழைபடாமற் செய்யக்கடவன், எ-று.

காரணம் உணவுசெயலென்று முன்சொல்லப்பட்டவை, அவற்றினை வைத்திய நூலார் நிதான மென்பர். அவை நாடுதற்குப்பயன் - நோயையும் உபாயத்தையும் ஐயமறத்துணிதல் மருந்துசெய்தல், உதிரங்களைதல் அறுத்தல், சுடுதல் முதலாகிய செயல்களெல்லாம் அடங்குதற்கு 'அது தணிக்கும்வாய்' என்றார் பிழைபடாமை - பழையமருத்துவர் செய்துவருகின்ற முறைமையிலே தப்பாமை, மருத்துவன் - வைத்தியன்

(க - து) மருத்துவனுபினுன வியாதியாளனிடத்து நோய் முதலியவைகளை நன்காராய்ந்து வயித்தியஞ்செய்யக்கடவன் என்பது. (௮).

௯ உற்றா னளவும் பிணியளவுங் காலமுங்
கற்றான் கருதிச் செயல்.

பரி —(இ - ள்) ஆயுள்வேதத்தினைக் கற்றமருத்துவன், 3 அவ்வுபாயத்தினைச் செய்யுங்கால் ஆதுரனளவினையும் அவன்கணிகழ்கின்ற நோயினளவினையும் தன்செயற்கேற்ற காலத்தினையும், 4 அந்நூனெறியால் நோக்கி 5 அவற்றோடு பொருந்தச் செய்க, எ-று.

ஆதுரனளவு—பகுதி பருவம் வேதனை வலிகளினளவு பிணியளவு— 6 சாத்தியம் அசாத்தியம் யாப்பியமென்னுஞ் சாதி வேறுபாடும், தொடக்க

1 முதலிய என்றதனால் பற்றிடல், கலிக்கமிடுதல், நசியமவாரதல் முதலியவைகளையும் கொள்க.

2 புறநானூறு, ௩௪ இதன்பொருள் (பாதகங்களைப்)போக்கும்வழியும் (பிராயச்சித்தமும்) உள்ளனபது

3 அவ்வுபாயத்தினை - நோய் தீர்க்குமுபாயத்தினை.

4 அந்நூனெறியால் - ஆயுள் வேதத்தின் வழியால்.

5 அவற்றோடு - உற்றானளவு, பிணியளவு, காலம் என்பவைகளுடன்.

6 சாத்தியம் - தீர்க்கத் தக்கது. அசாத்தியம் - தீர்க்கத் தகாதது. யாப்பியம்- பெரும்பான்மை தீர்க்கத் தக்கதும் சிறுபான்மை தீர்க்கத் தகாததுமாயுள்ளது.

றுஞ் சொல்லினார். இதனால் அதனைத் தீர்த்தற்கு வேண்டுவனவெல்லாம் தொகுத்துச் சொல்லப்பட்டன.

(இ-ள்.) நோயாளி, அந்நோயைத் தீர்க்கும் வைத்தியன், அதற்குச் சாதனமான மருந்து, அம்மருந்தைத் தவறுபடாமற் செய்பவன் என்னும் நான்கு வகையையுடைய நான்கு திறத்தது மருந்தாம் என்பது. (௰)

அங்கவியல் முற்றிற்று.

---

# ஒழிபியல்.

பரி.—இனி அவ்வரசியலினும் அங்கவியலினும் அடங்காதொழிந்தவற்றை இருபத்துமூன்றதிகாரத்தாற் கூறுவான்றொடங்கி, முதற்கட் குடிமை கூறுகின்றார்.

தெளி.—இனி அவ்வரசியலிலும் அங்கவியலிலும் அடங்காதொழிந்தவைகளை இருபத்துமூன்றதிகாரத்திலே சொல்லத் தொடங்கி, முதலிலே குடிமை சொல்லுகிறார்.

## ௯௬-ம் அதி.—குடிமை.

பரி.—அஃதாவது உயர்ந்த குடியின்கட் பிறந்தாரது தன்மை. உயர்ந்த குடிப்பிறப்பு 1 நால்வகை வருணத்தார்க்கும் இன்றியமையாததாகலின், அச்சிறப்புப்பற்றி இது முன் வைக்கப்பட்டது.

தெளி.—அஃதாவது உயர்ந்த குடியினிடத்துப் பிறந்தவரது தன்மை. உயர்ந்தகுடிப் பிறப்பு நால்வகை வருணத்தார்க்கும் அவசியம் வேண்டுவதாதலால், அச்சிறப்புப்பற்றி இது முன் வைக்கப்பட்டது.

௧. இற்பிறந்தார் கண்ணல்ல தில்லை யியல்பாகச்
செப்பமு நாணு மொருங்கு.

பரி.—(இ-ள்.) செம்மையும் நாணும் சேரக் குடிப்பிறந்தார்மாட்டல்லது பிறர்மாட்டியற்கையாக உளவாகா, எ-று.

இல்லென்பது ஆகுபெயர். செப்பம்—கருத்துஞ் சொல்லுஞ் செயலுந் தம்முள் மாறுகொள்ளாமை. நாண்—பழி பாவங்களின் ஒடுக்கம். 2 இவை 3 இற்பிறந்தார்க்காயின் ஒருவர் கற்பிக்கவேண்டாமற் றோன்றுவனவாம்; பிறர்க்காயிற் கற்பித்தவழியும் நெடிது நில்லா வென்பதாம்.

---

1 நால்வகை வருணத்தார் (சாதியார்)—பிராமண க்ஷத்திரிய வைசிய சூத்திரர்.
2 இவை - செம்மையும் நாணும்.
3 இற்பிறந்தார்க்காயின் - உயர்ந்த குடியிலே பிறந்தவர்களானால்.

நின்-ஆகாயத்தில், மதிக்கண் - சந்திரனிடத்து, மறுப்போல் - களங்கம்போல், உயர்ந்து-ஓங்கி, விளங்கும் - தோன்றும், எ - று.

உயர்ந்தகுடிக்கு விசும்பும், அதிற்பிறந்தோருக்கு மதியும், அவர் குற்றத்துக்குக் களங்கமும், உவமானங்களாகப் பொருத்திக் கூறப்பட்டன. மாறுபட்டது குடியினது உயர்ச்சியினாலும், சந்திரன் போன்ற அவர் நற்குணங்களோடு மாறுகலாலும், அக்குற்றமானது உலகெங்கும் பரந்து வெளிப்படுமென்பதாம்.

(க - து) குடிப்பிறந்தாரிடத் துண்டாகுங் குற்றம் சந்திரனிடத்துக் களங்கம் போன்று ஓங்கி விளங்கும் என்பது. (எ)

அ. நலத்தின்க ணாரின்மை தோன்றி னவனைக்
குலத்தின்க ணையப் படும்.

பரி—(இ - ள்) குலநல முடையனாய் வருகின்றவன்கண்ணே ஈரமின்மை யுண்டாமாயின், அவனை அக்குலப்பிறப்பின்கண்ணே ஐயப்படும் உலகம், எ - று.

1 நலமுங் குலமும் ஆகுபெயர். 2 நாரின்மையாற் கோடாமையுங் கடுஞ்சொலும் முதலிய கூறப்பட்டன. தோன்றினென்பது தோன்றாமை விளக்கி நின்றது. நலனுடையனாய் வருதலினிடையே 3 இவை தோன்றலின், 4 உள்ளது ஐயமாயிற்று. 5 உலகமென்பது அவாய் நிலையான் வந்தது. ஐயப்படலென்பது பாடமாயின், 6 ஐயப்படுகவென விதியாக்கி யுரைக்க. இவை யிரண்டுபாட்டானும் 7 வேறுபட்டவழிப் படுங் குற்றங் கூறப்பட்டது.

தெளி—(இ - ள்) நலத்தின்கண் - (குல) நலமுடையனாய் வருகின்றவனிடத்தே, நாரின்மை - அன்பில்லாமை, தோன்றின்-உண்டாமாயின், (உலகம்) அவனை—குலத்தின் கண்-அக்குலப் பிறப்பினிடத்தே, ஐயப்படும்-சந்தேகப்படும், எ - று.

நலமும் குலமும் ஆகுபெயர். அன்பில்லாமையால் கோடாமையுங்கடுஞ் சொல்லும் முதலானவை சொல்லப்பட்டன. தோன்றினென்பது நாரின்மை

---

1 நலம் என்னும் பண்புப்பெயர் அதனையுடையவனுக்காதலால் பண்பாகுபெயர்; குலம் என்னும் இடப்பெயர் அதன்கட்டோன்றிய பிறப்பிற்காதலால் இடவாகுபெயர்.

2 அன்பில்லாதவனிடத்து இன்முகமுடைமையும் ஈகையும் இன்சொல்லும் இகழாமையும் இராவென்பது நினைப்பிக்கத்தக்கது.

3 இவை - கோடாமை, கடுஞ்சொல்முதலானவை.

4 உள்ளது - நார் (அன்பு) இருப்பது.

5 ஐயப்படுமென்பது உலகம்என்பதையவாவி (வேண்டி) நின்றது.

6 ஐயப்படும் என்பதற்குப் பிரதியாக ஐயப்படல் என்பது பாடமானால் ஐயப்படுக என்று உடன்பாட்டு வியங்கோள்வினைமுற்றாகச் சொல்லிக் கொள்க.

7 வேறுபட்டவழி - உயர்குடிப்பிறப்பினின்றும் வேறுபட்டவிடத்து.

உடன்பிறந்தாரையும் மறந்து, உடம்பினது நிலையினையும் மானத்தி னது நிலைமையையும் நோக்கி 1 அவை செய்யற்க வென்பதாம்.

தெளி —(இ-ள்) இன்றியமையா - செய்யாது விடப்பட்டால் அமை யாத, சிறப்பினவாயினும் - சிறப்பினையுடையனவேயாயினும், குன்ற - (தங் குடிப்பிறப்பானது) தாழ, வருப - வருஞ்செயல்களை, விடல் - விட்டுவிடுக, எ-று.

அமையாமை - இறந்தால் குடிப்பிறப்பென்பது அதிகாரமுறைமையால் வந்தது. தாழவிருக்கக்கருதியவிடத்தே இழிதொழில்களைச் செய்யாவிடில் பிழைக் கக்கூடுமென்றாலும் பெருமையின் முறைமையை மறந்து, உடம்பினது நிலையில் லாமையையும் மானத்தினது நிலையுடைமையும் ஆராய்ந்து அவை செய்யவே ண்டாமென்பதாம்.

(க-து) தங்குடிப்பிறப்புத் தாழவருஞ் செயல்களால் இன்றியமை யாத சிறப்பு வருவதாயிருப்பினும் அவற்றை விடல்வேண்டும் என் பது. (௧)

௨ சீரினுஞ் சீரல்ல செய்யாரே சீரொடு
பேராண்மை வேண்டு பவர்.

பரி —(இ-ள்) புகழ் செய்யுமிடத்துந் தங்குடிமைக் கொவ்வாத இளி வரவுகளைச் செய்யார், புகழுடனே மானத்தை நிறுத்துதலை விரும்புவார், எ-று.

எவ்விடத்தும் நிலைகுலையாத திண்மையான் உளதாதல்பற்றிப் 'பேராண் மை' எனப்பட்டது. நிலையுடைய புகழின்பொருட்டாகவுஞ் செய்யாரெனப தாம்.

தெளி —(இ-ள்) சீரொடு - புகழுடனே, பேராண்மை - மானத்தை நிறுத்துதலை, வேண்டுபவர் - விரும்புபவர், சீரினும் - புகழ் சம்பாதிக்குமிடத்தும், சீரல்ல - (தங்குடிக்கு) ஒவ்வாத இழிதொழில்களை, செய்யார் - செய்யமாட்டார், எ-று.

எவ்விடத்தும் நிலைகுலையாத திடத்தால் உண்டாதல்பற்றி மானம் 'பேரா ண்மை' எனப்பட்டது. நிலையுடைய புகழின் பொருட்டாகவும் சீரல்லவற்றைச் செய்யாரெனபதாம்.

(க-து.) புகழுடனே மானத்தை நிறுத்துவார் தங்குடிப்பிறப் பிற் கொவ்வாத இழிதொழில்களைச் செய்யமாட்டார் என்பது. (௨)

---

1 அவை - இளிவந்தன

தலையினின்றும் [illegible] அதனின்றும் இழிந்த, மயிரனையர் - மயிரினை ஒப்பர், எ-று.

அந்நிலையினின்றும் இழிந்தவிடத்தே இகழப்பட்டு [illegible] மரியாதை செய்யப்படுதலும், [illegible] அதனின்றும் [illegible] இழிந்தவிடத்தே இழிவு செய்யப்படுதலும் உவமான [illegible].

(க-து.) [illegible] நிலையினின்றும் தாழ்ந்தவர் ஒருபொருளாக மதிக்கப்படாதவராவர் என்பது. (௪)

௫ குன்றி னனையாருங் குன்றுவர் குன்றுவ
குன்றி யனைய செயின்.

பரி—(இ-ள்) குடிப்பிறப்பான் மலைபோல உயர்ந்தோரும் தாழ்தற் கேதுவாகிய செயல்களை ஒருகுன்றி யளவாயினுஞ் செய்வராயிற் றாழ்வர், எ-று.

குன்றியனையவெனவும் இழிவு சிறப்பும்மை விகாரத்தாற் றொக்கது. தாழ்தற்கேதுவாய செயல்களாவன- இளிவந்தன. 1 சொற்பின்வருநிலை

தெளி—(இ-ன்) குன்றினனையாரும் - (குடிப்பிறப்பால்) மலைபோலு யர்ந்தவரும், குன்றுவ - தாழ்தற்குக் காரணமாகிய செயல்களை, குன்றியனை ய ஒருகுன்றியளவாயினும், செயின் - செய்வாராயின், குன்றுவர் - தாழ் வார், எ-று.

குன்றியனையவும் என்கிற இழிவுசிறப்பும்மை செய்யுள் விகாரத்தால் தொக்கு நின்றது. தாழ்தற்குக் காரணமாகிய செயல்களாவன -பழிக்கப்படுஞ் செயல்கள். இது சொற்பின்வருநிலையணி.

(க-து.) உயர்ந்தகுடியிற் பிறந்தார் தாழ்தற்கேதுவாகிய செயல்களிற் சிறிதே செயினும் அதனாற் குறைவடைவர் என்பது. (௫)

கூ. புகழின்றாற் புத்தேணாட் டுய்யாதா லென்மற்
றிகழ்வார்பின் சென்று நிலை.

பரி—(இ-ள்) 2 மானத்தைவிட்டுத் தன்னையவமதிப்பார்பின்னே ஒருவன் சென்று நிற்கின்ற நிலை இவ்வுலகத்துப் புகழ்பயவாது; ஏனைப்புத்தேளுலகத்துச் செலுத்தாது, இனி அவனுக்கு அது செய்வது யாது? எ-று

1 முன்வந்தசொல்லே பின்னும் வந்து பொருள்வேறுபட்டிருப்பது சொற் பின் வருநிலையணியாம். இக்குறளில் முன்வந்த சொல்லே பின்னும் வந்து பொருள்வேறுபட்டிருத்தலையறிக.

2 "என்பாயினு மியல்பிலார் பின்சென்று, தம்பா டுரைப்பரோ தம்முடை யார்" என்று நாலடியார் கூறுவதிங்குக் கவனிக்கத்தக்கது.

பரி.—(இ-ள்) தமக்கோர் இழிவு வந்தவழிப் பொறுத்துஉயிர் வாழாது அதனை நீத்த மானமுடையாரது புகழ்வடிவினை எஞ்ஞான்றும் தொழுது துதியாநிற்பர் உலகத்தார், எ-று.

1 "புலவர் பாடும் புகழுடையோர் விசும்பின், வலவனேவா வானவூர்தி, எய்துப"வாகலின், 2 துறக்கச்செலவு சொல்லவேண்டாவாயிற்று. இவை நான்கு பாட்டானும் மானப்பொருட்டாய இறப்பினது சிறப்புக் கூறப்பட்டது.

தெளி.—(இ-ள்.) இளிவரின் - (தமக்கோர்) அவமானம்வந்தவிடத்து, வாழாத - (பொறுத்து உயிர்வாழாமல் அவ்)வுயிரைவிட்ட, மானமுடையார் - மானமுடையவரது, ஒளி - புகழ்வடிவை, உலகு - உலகத்தார், தொழுதேத்தும் - (எக்காலும்) தொழுது துதியாநிற்பர், எ-று.

புலவர்பாடும் புகழையுடையோர் விசும்பில் பாகனால் செலுத்தப்படாத வானவூர்தியெய்துவராதலால், சுவர்க்கமடைதல் சொல்லவேண்டாவாயிற்று. இவை நான்கு பாட்டாலும் மானப்பொருட்டாகிய இறப்பின் சிறப்புச் சொல்லப்பட்டது.

(க-து.) அவமானம் நேர்ந்தவிடத்து இறந்தாரது புகழ்வடிவை உலகத்தார் எப்பொழுதும் துதியாநிற்பர் என்பது. (ய)

## கூ௮-ம். அதி.—பெருமை.

பரி.—அஃதாவது செயற்கரியசெய்தல், தருக்கின்மை, பிறர்குற்றங்கூறாமை யென்றிவை முதலிய நற்குணங்களாற் பெரியராந் தன்மை. 3 நிலையின் மேன்மேலுயர்த்தற் பயத்தவாய இவை உளவாவது நிலையிற் றாழாமையுள் வழியாகலின், இது மானத்தின்பின் வைக்கப்பட்டது.

தெளி.—(இ-ள்) அஃதாவது செய்தற்கரியவற்றைச் செய்தல், செருக்கில்லாமை, பிறர் குற்றஞ்சொல்லாமை என்ற இவைமுதலாகிய நற்குணங்களாலே பெரியராயிருக்குந் தன்மையாம். தனனிலையினின்றும் மேலுமேலும் உயர்த்துதற் றன்மையவாகிய இக்குணங்கள் உண்டாவது நிலையிலிருந்து தாழாமை உள்ளவிடத்தேயாகலால், இது மானத்தின்பின் வைக்கப்பட்டது.

---

1 புறநானூறு, ௨௭. இதன்பொருள் புலவரால் பாடப்படும்புகழையுடையோர் ஆகாயத்தின்கண் பாகனாற் செலுத்தப்படாத விமானத்தைப் பொருந்துவார் என்பது.

2 துறக்கச் செலவு இளிவரின் வாழாத மானமுடையார் சுவர்க்கத்தை யடைதல்.

3 "தானிலைக்கட் டன்னை நிறுப்பானுந் தன்னை, நிலைகலக்கிக் கீழிடு வானு - நிலையினு, மேன்மே லுயர்த்து நிறுப்பானுந் தன்னைத், தலையாகச் செய் வானுந் தான்" என்று நாலடியார் கூறுவதிங்கறியத்தக்கது.

(க - து) மக்களுயிர்க்குப் பொதுவாகிய பிறப்பியல்பு ஒக்குமேயாயினும் செய்தொழில்களது வேற்றுமையால் சிறப்பியல்புகள் ஒத்திருத்தலில்லை என்பது. (௨)

௩. மேலிருந்து மேலல்லார் மேலல்லர் கீழிருந்துங்
கீழல்லார் கீழல் லவர்.

பரி.—(இ - ள்.) செயற்கரிய செய்கலாது சிறியராயினோர், உயர்ந்த அமளி முதலியவற்றின்மிசை யிருந்தாராயினும் பெரியராகார், 1 அவைசெய்து பெரியராயினோர், தாழ்ந்த வெறுநிலத்து இருந்தாராயினும் சிறியராகார், எ - று.

மேலிருத்தல் கீழிருத்தல்களாற் செல்வ நல்குரவுகளும், மேல் கீழ்களாற் பெருமை சிறுமைகளுங் கருதப்பட்டன. இவை யிரண்டோடுமாறும் முறையே குடிமையாதிரத்தாலுஞ் செல்வமாத்திரத்தாலும் அஃதுளதாகாமை கூறப்பட்டது.

தெளி —(இ - ள்.) மேலல்லார் - (செய்தற்கரியவைகளைச் செய்யமாட்டாமல்) சிறியராயினோர், மேலிருந்தும் - உயர்ந்த ஆசனமுதலியவற்றின்மேல் இருந்தாராயினும், மேலல்லர் - பெரியராகார், கீழல்லவர் - (அவைசெய்து) பெரியராயினோர், கீழிருந்தும் - தாழ்ந்த வெறுநிலத்தில் இருந்தாராயினும், கீழல்லார் - சிறியராகார், எ-று.

மேலிருத்தல்கீழிருத்தல்களாலே செல்வவறுமைகளும், மேல்கீழ்களாலே பெருமைசிறுமைகளும் கருதப்பட்டன. இவை இரண்டோடுமாறும் முறையே குடிப்பிறப்புமாத்திரத்தாலும், செல்வமாத்திரத்தாலும் பெருமை உண்டாகாமை சொல்லப்பட்டது.

(க - து.) மேன்மைக்குணமுடையார் கீழிருந்தாலும் மேன்மைக் குணமுடையவரே யாவர்; அக்குணமில்லாதார் மேலிருந்தாலும் அவராகார் என்பது. (௩)

௪. ஒருமை மகளிரே போலப் பெருமையுந்
தன்னைத்தான் கொண்டொழுகி னுண்டு.

பரி.—(இ - ள்.) கவரா மனத்தினையுடைய மகளிர் 2 நிறையின் வழுவாமல் தம்மைத் தாம் காத்துக்கொண்டொழுகுமாறுபோல, பெருமைக்குணமும், ஒருவன் 3 நிறையின் வழுவாமல் தன்னைத் தான் காத்துக்கொண்டொழுகுவானாயின், அவன்கணுண்டாம், எ - று.

---

1 அவை - செய்தற்கரியவை.
2 நிறை - கற்பு அஃதாவது தன்கணவனைத் தெய்வமென் றுணர்வதோர்மேற்கோள்.
3 நிறை - காப்பனகாத்துக் கடிவனகடிந்து ஒழுகும் ஒழுக்கும். "நிறையெனப் படுவது மறைபிற ரறியாமை" என்று கலித்தொகை கூறுகின்றது.

பொருளினுஞ்சிறந்த உவமையினும் வந்தது: கற்புண்டாதல் தோன்ற நின்றமையின், உடமை எச்சவும்மை ஒழுகுதல் மனமொழிமெய்களையொடுக்கி ஒட்பு வுழுந்தலின் செய்துபோதல் இதனால் அஃதுளதாமாறு கூறப்பட்டது.

தேளி —(இ - ள.) ஒருமை - பிளவுபடாத மனநிலையுடைய, மகளிரே போல - பெண்கள் (சிறையினின்றும் தவறாது தமமைத்தாங்களே பாதுகாத்துக்கொண்டு நடக்கும்விதம்) போல, பெருமையும் - பெருமைக்குணமும், தன்னைத்தான் கொண்டொழுகின -(ஒருவன் சிறையினின்றும் தவறாமல்) தன்னைத் தான் பாதுகாத்துக்கொண்டு நடக்கவல்லனாயின, உண்டு - (அவனிடத்து) உண்டாம், எ - று

உவமேயத்தின தொழிலான 'தன்னைத்தான கொண்டொழுகின்' என்பது 'ஒருமை மகளிர' என்னும உவமேயத்திலும வந்தது. ஒருமை மகளிர்க்குக் கற்புண்டாதல் தோன்ற நின்றமையினாலே பெருமையும என்றவும்மை இறந்தது தழுவிய எச்சவும்மை ஒழுகுதல் - மனமொழிமெய்களை அடக்கி உபகாரமுதலானவை செய்துவருதல. இதனால பெருமை உண்டாமாறு சொல்லப்பட்டது.

(க - து.) தன்னைத்தான் காத்துக்கொண்டு நடப்பானிடத்துப் பெருமைக்குணம உண்டாகும எனபது. (௪).

௫ பெருமை யுடையவ ராற்றுவா ராற்றி
னருமை யுடைய செயல.

பரி —(இ - ள் ) 1 அவவாற்றாற் பெருமை யுடையராயினர் தாம் வறியராயவழியும பிறரால செய்தற்கரியவாய நற்செயல்களை விடாது 2 அவை செய்யு நெறியாற் கடைபோகச்செய்தலை வல்லராவர், எ-று

வறியராய வழியு மென்பது, முன்செய்து போந்தமை தோன்றப் 'பெருமை யுடையவர்' என்பதனானும் 'ஆற்றுவார்' என்பதனானும் பெற்றாம் இதனால 3 அதனை யுடையார் செயதிகூறப்பட்டது

தேளி.—(இ - ள்.) பெருமையுடையவர்-(அவவழியாலே) பெருமையுடையவராயினர், (தாம வறியராகியவிடத்தும) அருமையுடைய -(பிறராலேசெய்தற்கு) அருமையுடையவையாகிய, செயல-(நற்) செயல்களை, ஆற்றின்-(விடாமலைசெய்யும்) வழியால, ஆற்றுவார்-(முடிவுபெறச்) செய்தலைவல்லவராவர், எ-று

வறியராயவிடத்தும் என்பது அரியசெயல்களை முன்செய்து வந்தமைதோ

1 அவ்வாற்றால் - செய்தற்கரியவைகளைச் செய்து வந்ததினால்
2 அவை - செய்தற்கரியவைகளை. 3 அதனை - பெருமையை.

தெளி.—(இ-ள்) பெருமை - பெருமையுடையவர், அற்றமறைக்கும் - (பிறர் மானத்தைச் சொல்லாமல்) அவமானத்தை மறையாநிற்பர், சிறுமை - மற்றைச்சிறுமையுடையவர், குற்றமே கூறிவிடும் - (பிறர் குணத்தை மறைத்துக்) குற்றத்தையே சொல்லிவிடுவர், எ-று.

மறைத்தலும் சொல்லலும் மறைவிடத்திலும் பொருந்தி நின்றன. அற்றம் - கருவியாகுபெயர். தான்-அசை. இவை மூன்றுபாட்டாலும் இருவர் செயலும் சேர்த்துச் சொல்லப்பட்டன.

(க-து) பெருமையுடையார் பிறரது மானத்தையும் சிறுமையுடையார் பிறரது அவமானத்தையுமே கூறுநிற்பர் என்பது. (௰)



## ௯௯-ம். அதி.—சான்றாண்மை.

பரி.—அஃதாவது பலகுணங்களாலு நிறைந்து அவற்றை யாளுந்தன்மை. 1 பலகுணங்களாலு மென்பது சாலுதற் றொழிலாற் பெறப்படுதலின், அவற்றையென்பது வருவிக்கப்பட்டது. பெருமையு ளடங்காத குணங்கள் பலவற்றையுந் தொகுத்துக்கொண்டு நிற்றலின், இஃததன்பின் வைக்கப்பட்டது.

தெளி.—அஃதாவது பலகுணங்களாலும் நிறைந்து அவைகளை ஆளுந்தன்மை. பலகுணங்களாலும் என்பது சாலுதல் (என்னும்) தொழிலால் பெறப்படுதலால், அவைகளை என்னும் செயப்படுபொருள் வருவிக்கப்பட்டது. பெருமையுள் அடங்காத பலகுணங்களையும் தொகுத்துக் கொண்டு நிற்கையால், இஃது அதன்பின் வைக்கப்பட்டது.

௧. கடனென்ப நல்லவை யெல்லாங் கடனறிந்து
சான்றாண்மை மேற்கொள் பவர்க்கு.

பரி.—(இ-ள்.) நமக்குத் தகுவது இதுவென் றறிந்து சான்றாண்மையை மேற்கொண் டொழுகுவார்க்கு நல்லனவாய குணங்களெல்லாம் இயல்பா யிருக்குமென்று சொல்லுவர் நூலோர், எ-று.

---

1 சான்றாண்மை யென்பதற்கு நிறைந்து ஆளுந்தன்மையென்பது பொருள். சான்று (நிறைந்து) என்னும் (செய்தென்னும்) வினையெச்சத்தின் பகுதியான சால் [சாலுதல்—நிறைதல்.] என்னும் தொழிலால் பலகுணங்களாலும் என்பது பெறப்படுதலாலே, (ஆண்மையென்னும் தொழிற்கியைய) அவற்றை (அப்பலகுணங்களை) யென்னும் செயப்படுபொருள் வருவிக்கப்பட்டதென்பது.

1 சிலகுணங்க ளிலவாயவழியும், உள்ளன செய்துகொண்டனவாய வழியுஞ் சான்றாண்மையெனனுஞ்சொற்பொருள் கூடாமையின, நூலோர் இவ்வேதுபெபர்பற்றி அவரிலக்கணம் இவவாறு கூறுவரெனபதாம்.

தேளி —(இ - ள்.) கடனறிந்து-(தமக்கு இது) தகுவதென்று அறிந்து, சான்று-(பலகுணங்களாலும்) நிறைந்து, ஆண்மை-(அவைகளை) ஆளுந்தன்மையை, மேறகொள்பவாக்கு-மேற்கொண்டு நடப்பவாக்கு; நல்லவையெல்லாம்-நல்லனவாய குணங்களெலலாம், கடன் - இயல்பாயிருக்கும, என்ப-என்று (நூலோர்) சொலலுவர், எ-று

சிலகுணங்க ளில்லாதவிடத்தும், உள்ளகுணங்கள் இயல்பாயிராமல்செய்துகொண்டனவாய விடத்துஞ் சான்றாண்மையென்னுஞ்சொற்பொருள் கூடாமையால, நூலோர இவவேதுபெயர்பற்றி அவரிலக்கணம் இப்படி சொல்லுவாரென்பதாம

(க - து) சான்றோர்க்கு நல்லனவாகிய குணங்களெலலாம் இயல்பாயிருக்குமெனபது. (க)

உ. குணநலஞ் சான்றோர நலனே பிறநல
மெந்நலத் துள்ளதூஉ மன்று.

பரி.—(இ - ள்) சானறோர் நலமாவது குணங்களானாய நலமே; அஃதொழிந்த 2 உறுப்புக்களானாய நலம ஒரு நலத்தினு முள்ளதன்று, எ - று

அந்நலத்தை முன்னே 3 பிரித்தமையின ஏனைப்புற நலத்தைப்'பிறநலம்' என்றும, 4 அது குடிப்பிறப்பும கல்வியு முதலாக நூலோரெடுத்த நலங்களுட் புகுதாமையின் 'எந்நலத்துள்ளதூஉ மன்று'என்றுங் கூறினார் இவை யிரண்டாலும் 5 சால்பிறகேறற குணங்கள் பொதுவகையாற் கூறப்பட்டன.

---

1 நல்லனவாய குணங்களில சிலகுணங்களில்லாத விடத்தும் உளளன (உள்ள நல்லகுணங்கள் இயல்பாகவிராமல் பிறந்து சேர்க்கையால)செய்து கொண்டுள்ளவிடத்தும சான்றாண்மை யென்னும சொலலுக்குப் பலகுணங்களாலும நிறைந்து அவற்றை யாளுந்தன்மை என்னும் பொருள் சம்பவியாமையால், நூலோர் சான்றாண்மை யென்னு மிக்காரணபபெயர் பற்றி அவர் (சான்றோரது) இலக்கணம் ('கடனென்ப - மேற்கொள்பவர்க்கு' என்று) இவ்வாற கூறுவரென்பதாம்.

2 உறுப்புக்கள் -குடிப்பிறப்பு, கல்வி, கேள்வி, முதலானவை.

3 பிரித்தமையின்-குணநலமே என்று பிரித்துக் கூறினதினால்.[நலனே என்பதிலுள்ள ஏகாரம் குணநலம் என்பதனோடு பிரித்துக்கூட்டப்பட்டது. இவ்வேகாரம் பிரிநிலைப் பொருளில்வந்தது.]

4 அது - குணநல மாகியஅக (உள்) நலம்.

5 சாலபிறகு - நிறைவிற்கு.

தெளி.—(இ - ள்.) சான்றோர்நலன் - சான்றோர்நலமாவது, குணநலமே - குணங்களாலாகியநலமே, பிறநலம் - அஃதொழிந்த உறுப்புக்களாலாகிய நலம், எந்நலத்துள்ளதூஉம் - ஒரு நலத்திலுமுள்ளது, அன்று - அல்ல, எ - று.

பிற நலங்களுள் ஒன்று செல்லாமையால் 'எந்நலத்துள்ளதூஉமன்று' என்றும் சொன்னார். இவை இரண்டுபாட்டாலும் சால்பிற்கு ஏற்றகுணங்கள் பொது வகையாற் சொல்லப்பட்டன.

(க - து.) குணங்களாலாய நலமே சான்றோர்க்கு நலமாம் என்பது. (௨)

௩. அன்புநா ணொப்புரவு கண்ணோட்டம் வாய்மையொ
டைந்துசால் பூன்றிய தூண்.

பரி.—(இ - ள்.) சுற்றத்தார்மேலே யன்றிப் பிறர்மேலு முளதாய அன்பும், பழிபாவங்களி னாணும், யாவர்மாட்டு மொப்புரவு செய்தலும், பழையார்மேற் கண்ணோட்டமும், எவ்விடத்தும் மெய்ம்மைகூறலும் என சால்பென்னும் பாரத்தைத் தாங்கிய தூணைந்து, எ - று.

1 ஒன்னோடு முன்னைந்தோடே கூடிநின்று 2 இக்குணங்க ளிலவழிச் சால்பு நிலைபெறாமையின், 3 இவற்றைத் 'தூண்' என்றார் 4 ஏகதேச வுருவகம்.

தெளி.—(இ - ள்.) அன்பு - (சுற்றத்தார்மேலேயல்லாமற் பிறர்மேலும் உண்டாகிய) அன்பும், நாண் - (பழிபாவங்களில்) நாணும், ஒப்புரவு - (யாவரிடத்தும்) உபகாரஞ்செய்தலும், கண்ணோட்டம் - (பழையவர்மேல்) கண்ணோட்டமும், வாய்மை - எவ்விடத்தும் மெய்ம்மை சொல்லலும், (என) சால்பு - சால்பென்னும் பாரத்தை, ஊன்றிய - தாங்கிய, தூண் - தூண்கள், ஐந்து, ஐந்தாம், எ - று.

---

1 வாய்மையோடு என்பதிலுள்ள எண்ணுப்பொருளில் வந்த ஒடு என்னும் இடைச்சொல் அன்போடு, நாணோடு, ஒப்புரவோடு, கண்ணோட்டமோடு என்று முன்னுள்ள ஐந்தோடும் கூடினது.

2 இக்குணங்கள - அன்பு, நாண், ஒப்புரவு, கண்ணோட்டம், வாய்மை என்னும் குணங்கள்,

3 இவற்றை - அன்புமுதலிய குணங்களை

4 அன்புமுதலியகுணங்களைத் தூணாக வுருவகஞ்செய்தவர் அதற்கியையச் சால்பினைப்பார (மனை) மாகவுருவகஞ்செய்யாமையினாலே ஏகதேசவுருவக

என்னும் பொருளிலவாகிய ஓம் என்னும் இடைச்சொல் முன்னுள்ளவற்றோடு கூடி நின்றது. இக்குணங்களை இல்லாதவிடத்தே சால்பு நிலைபெறாமையால், இவைகளைத் 'தூண்' என்றார். இஃது ஏகதேச உருவகவணி.

(க - து.) சான்றோர் அன்பு முதலிய ஐந்தனையும் உடையராயிருப்பர் என்பது. (௩)

௪. கொல்லா நலத்தது நோன்மை பிறர்தீமை
சொல்லா நலத்தது சால்பு.

பரி— (இ - ள) 1பிறவறங்களும் வேண்டுமாயினும் தவம் ஒருயிரையுங் கொல்லாத அறத்தினைக் கண்ணதாம்; அதுபோல 2பிறகுணங்களும் வேண்டுமாயினும் சால்பு பிறர் குற்றத்தைச் சொல்லாத குணத்தினைக் கண்ணதாம், எ-று.

3நலமென்னும் ஆகுபெயர்ப்பொரு 4ளிரண்டனையுந் தலைமைதோன்ற 5இவ்விரண்டற்கு மதிகாரமாக்கிக் கூறினார். தவத்திற்குக் கொல்லாவறஞ் சிறந்தாற்போலச் சால்பிற்குப் பிறர் குற்றஞ் சொல்லாக்குணஞ் சிறந்த தென்பதாம்.

தெளி —(இ - ள) நோன்மை - தவமாவது, கொல்லா நலத்தது - (பிறவறங்களும் வேண்டுமாயினும்) ஒருயிரையுங் கொல்லாத அறத்தினிடத்ததாம்; (அதுபோல) சால்பு - சால்பாவது, பிறர்தீமை சொல்லா நலத்தது - (பிறகுணங்களும் வேண்டுமாயினும்,பிறர்குற்றத்தைச் சொல்லாத குணத்தினிடத்ததாம், எ - று.

நலம் என்னும் ஆகுபெயர்ப்பொருளிரண்டனையும் தலைமைதோன்றுமாறு நோன்மைசால்பு என்னுமிவ்விரண்டினுக்கும் அதிகாரமாக்கிச் சொல்லினர். தவத்திற்குக் கொல்லாத அறம் சிறந்தாற்போன்று சால்பிற்குப் பிறர் குற்றம் சொல்லாதகுணம் சிறந்ததென்பதாம்.

(க - து) சான்றோர் பிறர் குற்றத்தைச் சொல்லார் என்பது. (௪)

---

1 பிறவறங்களை ௨௭-வது அதிகாரத்தின் அவதாரிகையிற்காண்க.

2 பிறகுணங்களென்றது அன்பு, நாண், ஒப்புரவு முதலானவைகளை.

3 முன்னுள்ள நலத்தது என்பதன் பகுதியாதான நலமென்னும் பண்புப்பெயரும் பின்னுள்ள நலத்தது என்பதின் பகுதியதான நலம் என்னும் பண்புப்பெயரும் முறையே (பண்பையுடைய) அறத்திற்கும் குணத்திற்குமாதலால் பண்பாகுபெயர். [இங்கே அறமும் குணமும் பொருளாகக் கொள்ளப்பட்டன ]

4 இரண்டனையும் - அறத்தினையும் குணத்தினையும்.

5 இவ்விரண்டற்கும் - தவத்திற்கும் சால்பிற்கும்,

ரு. ஆற்றுவா ராற்றல் பணித லதுசான்றோர்
மாற்றாரை மாற்றும் படை.

பரி.—(இ - ள்) ஒருகருமத்தைச் செய்து முடிப்பாரது ஆற்றலாவது [1] அதற்குத் துணையாவாரைத் தாழ்ந்து கூட்டிக்கொள்ளுதல்; இனிச் சால்புடையார் தம்பகைவரைப் பகைமை யொழிக்குங் கருவியும் [2] அது, எ - று.

ஆற்றல— [3] அதுவல்லராந் தன்மை. இறந்தது தழீஇயவெச்சவும்மை விகாரத்தாற் றொக்கது. சால்பிற்கேற்ற பணிதற் குணத்தது சிறப்புக் கூறுவார் [4] ஏனையது முடன் கூறினார்.

தெளி.—(இ - ள்) ஆற்றுவார் - (ஒருகருமத்தைச்) செய்து முடிப்பவரது, ஆற்றல - வலிமையாவது, பணிதல் - (அதற்குத் துணையாவாரைத்) தாழ்ந்து கூட்டிக்கொள்ளுதல, சான்றோர் - (இனிச்) சால்புடையவர், மாற்றாரை - தமது பகைவரை, மாற்றும்படை - (பகைமை)யொழிக்குஞ் சாதனமும், அது - அதுவாம், எ - று.

ஆற்றல - அது செய்யவல்லராந்தன்மை படையும் என்ற இறந்தது தழுவிய எச்சவும்மை விகாரத்தால தொக்கு நின்றது சால்பிற்கு ஏற்ற பணிதற் குணத்தது சிறப்புச்சொல்லுவார் மற்றது முடன்சொல்லினர்.

(க - து.) சான்றோர் எப்பொழுதும் வணக்கமுடையராயிருத்தலால் அவர்க்குப் பகைவரில்லை என்பது. (ரு)

கூ. சால்பிற்குக் கட்டளை யாதெனிற் றோல்வி
[5] துலையல்லார் கண்ணுங் கொளல்.

பரி.—(இ - ள்) சால்பாகிய பொன்னி னளவறிதற்கு உரைகல்லாகிய செயல் யாதெனின், [6] அது தம்மி னுயர்ந்தார்மாட்டுக் கொள்ளுந் தோல்வியை இழிந்தார் மாட்டுங் கோடல், எ - று.

துலை—ஒப்பு [7] எச்சவும்மையான் இருதிறத்தார் கண்ணும் வேண்டுதல் பெற்றும். கொள்ளுதல்—வெல்லுமாற்ற லுடையராயிருந்தே [8] ஏற்றுக்கொள்ளுதல். இழிந்தாரை வெல்லுதல் கருதித்தம்மோ டொப்பித்துக் கொள்ளா

---

1 அதற்கு - அக்கருமத்தைச்செய்து முடிப்பதற்கு.
2 அது - பணிதல் 3 அது - பணிதல்.
4 ஏனையதும் - மாற்றாரைமாற்றும் படை அது (பணிதல்) என்பதும்.
5 துலையல்லார் - ஒப்பாகாதவர். 6 அது - அச்செயல்.
7 துலையல்லார் கண்ணும் என்ற எதிரது தழுவிய எச்சவும்மையினால் உயர்ந்தார் இழிந்தாரெனனும் இருவரிடத்தும் (தோல்வி) வேண்டுதல் பெற்றும்.
8 ஏற்றுக்கொள்ளுதல் - (இழிந்தாரிடத்துத் தாம் தோல்வியை) அங்கீகரித்துக் கொள்ளுதல்

து தோல்வியான் 1 அவரி னுயர்வாராயின, 2 அதனாற சால்பன வறியப்படு மென்பதாம

தெளி—(இ - ள்) சால்பிற்கு - சால்பாகிய (பொன்னினள)வறிதற்கு, கட்டளை - உரைகல்லாகிய செயல், யாதெனின் - யாதெனறால,(அது) தோல்வி (தமமினுயர்நதவரிடத்துக் கொள்ளுக்) தோல்வியை, துலையல்லார்கண்ணும - இழிந்தவரிடத்தும், கொளல்- கொள்ளுதலாம், எ - று

துலை - சமானம் துலையல்லாகண்ணும் என்ற எச்சவும்மையால இரு திறத்தா ரிடத்தும் வேண்டுதல பெறறும கொள்ளுதல்-வெலலும்வலிமை புடையரா யிருநதே ஏற்றுக்கொள்ளுதல்.இழிந்தாரை வெல்லநினைத்துத் தமக் குச சமானமாக்கிககொள்ளாமல் தோற்பினால் அவரிலும் உயர்வராயின், அத னாலே சால்பினளவு அறியபபடு மென்பதாம்.

(க - து) சான்றோர் தம்மின் உயாந்தாரிடத்தே யனறி இழிந்தா ரிடத்தும தோலவியைக கொள்ளுவர் என்பது. (கூ)

எ. இன்னாசெய் தார்க்கு மினியவே செய்யாககா
லென்ன பயத்ததோ சாலபு

பரி —(இ - ள்) தமக்கின்னாதவற்றைச் செய்தார்க்குஞ் சால்புடையார் இனியவறறைச செயயாராயின், அச்சாலபு வேறென்ன பயனை யுடைதது, எ - று

சிறபபும்மை அவர் இன்னாசெய்தற் கிடனாதல் விளக்கி நின்றது. ஓகா ரம்-அசை. 3 வினா எதிர்மறைப பொருட்டு. தாமு மின்னாசெய்வராயின், சால் பாலொரு பயனுமில்லை யெனபதாம். இவை யைந்துபாட்டானுஞ் சிறப்புவகை யாற் கூறபபட்டது.

தெளி.—(இ - ள்) (சால்புடையார்) இன்னா - (தமக்குத்) துன்பந்தரு மவைகளை, செய்தார்க்கும்—இனியவே - இன்பந் தருமவைகளை, செய்யாக் கால்-செயயாராலை, சால்பு-அசசால்பு, என்ன பயத்தது- (வேறு) என்னபய னையுடையது, எ - று

இன்னாசெய்தார்க்கும் எனற இழிவுசிறப்பும்மை சால்புடையவா இன்னா செய்தற்கு இடமாதல் விளக்கிநின்றது ஓ-அசை என்ன என்னும் வினா எதிர்மறைப் பொருளது தாமும இன்னாசெய்தவர்க்கு இன்னாசெய்வாரா யின் தம்முடைய சால்பால் ஒருபயனும் இலலை யென்பதாம். இவை ஐந் துபாட்டாலும் சால்பு சிறப்புவகையாற் சொலலப்படடது.

---

1 அவரின் - இழிந்தாரைக்காட்டிலும்.

2 அதனால் - தோல்வியாலுமபருதலால்,

3 என்ன என்னும் வினா எதிர்மறைபபொருளில் வந்தது. [என்ன என்பது யாதொருபயனும் இல்லையென்னும் பொருளில வந்த தென்பதாம.]

(க-து) சால்புடையோர் தீமை செய்தவர்க்கும் நன்மை செய்வர் என்பது. (௭)

அ இன்மை யொருவற்கு இளிவன்று சால்பென்னுந்
திண்மையுண் டாகப் பெறின்.

பரி.—(இ-ள்) சால்பென்று சொல்லப்படும் வலியுண்டாகப் பெறின் ஒருவனுக்கு நல்குரவு இளிவாகாது, எ-று.

தளராமை காட்டிற்றின், வலியாயிற்று. 1 இன்மையான் வருவதனை இன்மைதானாக உபசரித்துக் கூறினார். சால்புடையார் கலங்காதவழியும் மேம்பட்டுத் தோன்றுவர் என்பதாம்.

தெளி.(இ-ள்) சால்பென்னும் - சால்பென்று சொல்லப்படும், திண்மை - வலிமை, உண்டாகப்பெறின் - உண்டாகப்பெற்றால், ஒருவர்க்கு - ஒருவனுக்கு, இன்மை - வறுமை (யால் வருவது) இளிவன்று - இகழ்வாகாது, எ-று.

தளராமைக் காட்டிற்றலால், சால்பு வலியாயிற்று. இன்மையால் வருவதனை இன்மையாகவே உபசரித்துக் கூறினார். சால்புடையவர் வறுமை நேரிட்டவிடத்தும் மேம்பட்டே தோன்றுவர்.

(க-து) சால்புடையார் வறுமையடைந்தாலும் அதனால் இழிவடையார் என்பது. (அ)

௯. ஊழி பெயரினுந் தாம்பெயரார் சான்றாண்மைக்
காழி யெனப்படு வார்.

பரி.—(இ-ள்) சால்புடைமையாகிய கடற்குக் கரையென்று சொல்லப்படுவோர் ஏனைக்கடலும் கரையுள்ளவாம் காலந்திரிந்தாலும், தாந்திரியார். எ-று.

சான்றாண்மையது பெருமைதோன்ற 2 அதனைக் கடலாக்கியும், 3 அதனைத் தாங்கிக்கொண்டு நிற்றலின் 4 அஃதுடையாரைக் கரையாக்கியுங் கூறினார். 5 "பெருங்கடற் காழி யனையன் மாதோ" என்றார் பிறரும். 6 ஏகதேசவுருவகம்.

1 இன்மை (பொருளில்லாமை) யால் வருகின்றதாகிய இழிவினை இன்மையாகவே உபசரித்துச் சொல்லுகின்றார். இது காரணம் காரியமாய உபசாரவழக்கு. கலங்காதவழியும் - வியாகுலப்படாதிருக்கும்பொழுதும்.

2 அதனை - சான்றாண்மையை. 3 அதனை - சான்றாண்மையாகிய கடலை.

4 அஃதுடையாரை - சான்றாண்மையுடையவரை.

5 புறநானூறு, ௩௩௰. இதன்பொருள் [பகைவரது சேனைதன்னளவுகடந்து வாராதபடி விலக்குகின்றவன்] பெரியகடலுக்கு (அதனீரை யளவுகடந்து வாராதபடி விலக்குகின்ற) கரையை யொத்தவன் என்பது.

6 சான்றாண்மையுடையாரைக் கரையாகவுருவகஞ்செய்தவர் அதற் கியைய சான்றாண்மையைக் கடலாக வுருவகஞ் செய்யாமையினாலே ஏகதேசவுருவகமாயிற்று.

**தேளி.**—(இ - ள்) சான்றாண்மைக்கு - சால்புடைமையாகிய கடலுக்கு, ஆழியெனப்படுவோர் - கரையென்று சொல்லப்படுவோர், ஊழிபெயரினும் - (மற்றைக்கடலும் கரையுள் நிலலாமற்) காலம் வேறுபட்டாலும், தாம் பெயரார் - தாம் வேறுபடார்; எ - று.

சான்றாண்மையின் பெருமை தோன்ற அதனைக் கடலாக்கியும் அதனைத் தாங்கிக்கொண்டு நிற்றலால் அதனையுடையாரைக் கரையாக்கியும் சொல்லினமையின் இஃது ஏகதேசவுருவகவணி.

(க - து.) சால்புடையார் தமக்கு என்ன ஆபத்து நேர்ந்தவிடத்தும் தமது நிலையினின்றும் மாறுபடுதலில்லை என்பது. (௯)

௯௦. **சான்றவர் சான்றாண்மை குன்றி னிருநிலந்தான்**
**றாங்காது மன்னோ பொறை.**

**பரி.**—(இ - ள்) பலகுணங்களானும் நிறைந்தவர் தந்தன்மை குன்றுவராயின் மற்றையிருநிலந்தானுந் தன்பொறையைத் தாங்காதாய் முடியும், எ - று.

தானுமென்னு மெச்சவும்மை விகாரத்தாற்றொக்கது. 1 அவர்க்கது குன்றுமையும் 2 அதற்கது தாங்கலும் இயல்பாகலான், 3 அவையெஞ்ஞான்று முளவாகா நின்றனவென்பது தோன்றநின்றமையின், மன் ஒழியிசைக்கண் வந்தது. ஓகாரம் - அசை 4 இதற்கு இருநிலம் பொறை தாங்குவது சான்றவர் துணையாக வென்றலான 5 அதுவும் அது தாங்கலாற்று தென்றுரைப்பாருமுளர் இவை மூன்றுபாட்டானும் அவற்று நிறைந்தவரது சிறப்புக் கூறப்பட்டது.

**தேளி.**—(இ - ள்.) சான்றவர் - (பலகுணங்களாலும்) நிறைந்தவர், சான்றாண்மை - (தமது) தன்மை, குன்றின் - குன்றுவாராயின், இருநிலந்தான் - மற்றைப்பெரிய பூமிதானும், பொறை - (தன) பாரத்தை, தாங்காது - தாங்காதாய் முடியும், எ - று.

தானுமென்னும் எதிரதுதழுவிய எச்சவும்மை செய்யுள் விகாரத்தால் தொக்குநின்றது அவர்க்கு அது குன்றுமையும் அதற்கு அது தாங்கலும் இயல்பாகலால், அவை எக்காலும் உண்டாகா நின்றன வென்பது தோன்றநின்றமையால், மன்னென்னு மிடைச்சொல் ஒழியிசையில் வந்தது. ஓகாரம் - அசை. இவை மூன்றுபாட்டானும் பலகுணங்களாலும் நிறைந்தவரது சிறப்புச் சொல்லப்பட்டது

---

1 அவர்க்கது - சான்றவர்க்குச் சான்றாண்மை.

2 அதற்கது - பூமிக்குப் பாரம்.

3 அவை - சான்றவர்க்குச் சான்றாண்மை குன்றுமை, பூமிக்குப் பாரந் தாங்கல். 4 இதற்கு - இக்குறளுக்கு.

5 அதுவும் அது தாங்கலாற்றுது - பூமியும் பாரந்தாங்குதல்செய்யாது.

(க - து) சால்புடையார் தமது நிலையினின்றும் மாறுபடுவராயின் உலகம் நிலைபெறாது போம் என்பது. (௰)

## ௱ - ம் அதி.—பண்புடைமை.

**பரி.**—அஃதாவது பெருமை சான்றாண்மைகளிற் றப்பவழுவாதுநின்றே எல்லாரியல்புகளு மறிந்தொத்தொழுகுதல்; 1 'பண்பெனப் படுவது பாடறிந் தொழுகல்' என்றார் பிறரும். அதிகாரமுறைமையும் இதனானே விளங்கும்.

**தேவி.**—அஃதாவது பெருமை சான்றாண்மைகளில் தாம் வழுவாது நின்றே எல்லாரியல்புகளும் அறிந்து அவற்றிற்கொத்து நடத்தலுடையராதல். அதிகாரமுறைமையும் இதனானே விளங்கும்.

க. எண்பதத்தா லெய்த லெளிதென்ப யார்மாட்டும்
பண்புடைமை யென்னும் வழக்கு.

**பரி.**—(இ - ள்.) யாவர்மாட்டும் மெளியசெவ்வியராதலால் அரிதாய பண்புடைமையென்னும் நன்னெறியினை யெய்துதல் எளிதென்று சொல்லுவர் நூலோர், எ-று.

குணங்களா னிறைந்த செவ்வியெளிய ராயக்கால் பண்புடைமைதானே உண்டாமாகலின் 'எண்பதத்தா லெய்த லெளிது' என்றும், 2அஃதுலகத்தை யெல்லாம் வசிகரித்தற் பயத்ததாகலின் 3அதனைத் தொல்லோர்சென்ற நன்னெறியாக்கியும், அதனை யெளிதி னெய்துதற்கு 4இது நூலோரோதிய வுபாயமென்பார் 5அவர்மேல் வைத்துங் கூறினார்.

**தேவி.**—(இ - ள்.) யார்மாட்டும் - யாரிடத்தும், எண்பதத்தால் - எளிய சமயத்தராயிருத்தலால், பண்புடைமை யென்னும் - (அரிதாகிய) பண்புடைமை யென்றுசொல்லப்படுகின்ற, வழக்கு - நல்வழியை, எய்தல் - அடைதல், எளிது - இலேசு, என்ப - என்று (நூலோர்) சொல்லுவர், எ - று.

குணங்களால் நிறைந்து எளிய சமயத்தருமாகியவிடத்து பண்புடைமை தானே உண்டாமாகலால் 'எண்பதத்தா லெய்த லெளிது' என்றும், அஃது உலகத்தையெல்லாம் தன்வசப்படுத்தற் றன்மையதாக விருத்தலால் அதனைப் பழையோர்சென்ற நல்வழி யாக்கியும், அதனை எளிதிலடைதற்கு இது நூலோரோதிய உபாயமென்பார் அவர்மேல் வைத்துச் சொல்லினர்

---

1 கலித்தொகை நெய்தற்கலி, ௧௬. இதன்பொருள் மக்கட் பண்பு என்று சொல்லப்படுவது உலகவொழுக்க மறிந்தொழுகுதல் என்பது.

2 அஃது - பண்புடைமை   3 அதனை - பண்புடைமையை.

4 இது - யாவரிடத்துஞ் எளிய சமயத்தரா யிருத்தல்.   5 அவர் - நூலோர்.

(க - து.) ஒருவர் யாவரிடத்தும் எளியி சமயத்தை யுடையவரா யிருப்பாராயின் அவர் பண்புடைமையென்னும் நன்மார்க்கத்தை இலேசிற் பெறுவர் என்பது. (க)

உ. அன்புடைமை யான்ற குடிப்பிறத்த லிவ்விரண்டும்
பண்புடைமை யென்னும் வழக்கு.

பரி.—(இ - ள்) பிறர்மே லன்புடையனாதலும் உலகத்தோடமைந்த குடியின்கட் பிறத்தலுமாகிய இவ்விரண்டும் ஒருவனுக்குப் பண்புடைமை யென்று உலகத்தார் சொல்லுப நன்னெறி, எ - று

அமைதல - ஒத்துவருதல் குடிப்பிறத்த லென்றது பிறந்தார்செயலை. [1] தனித்தவழி ஆகாது இரண்டுங்கூடியவழியே ஆவதெனபது தோன்ற, முற்றும்மை கொடுத்தார் [2] காரணங்கள் காரியமாக வுபசரிக்கபபட்டன. இவையிரண்டு பாட்டாலும் பண்புடையராதற் காரணங் கூறப்பட்டது.

தெளி —(இ - ள்.) அன்புடைமை - (பிறர்மேல) அன் புடையனாதலும், ஆன்றகுடிப பிறத்தல் - (உலகத்தோடு) அமைந்தகுடியிற் பிறத்தலும், (ஆகிய) இவ்விரண்டும்—பண்புடைமை யென்னும்-(ஒருவனுக்குப) பண்புடைமை யென்று (உலகத்தார்) சொல்லும், வழக்கு - நல்வழி, எ - று.

அமைதல-ஒத்துவருதல்.குடிபபிறத்தலென்றது குடிபபிறந்தவரதுசெயலை. இரண்டும் தனித்தவிடத்து ஆகாது கூடியவழியே பண்புடைமை யாவதெனபது தோன்ற இவ்விரண்டும் என முற்றும்மை கொடுத்தார் 'அன்புடைமை ஆன்றகுடிப பிறத்தல்' என்னும காரணங்கள் 'பண்புடைமை யென்னும்வழக்கு' என்று காரியமாக உபசரிக்கப்பட்டன இவை இரண்டு பாட்டாலும் பண்புடையராதற்குக காரணம் சொல்லபபட்டது

(க - து) ஒருவனுக்குப பண்புடமை யாவது அன்புடைமையும் உயர்குடியிற பிறத்தலுமாம என்பது (உ)

---

1 அன்புடமை ஆன்ற குடிப்பிறத்தல் எனனுமிரண்டனுள ஒன்று தனித்துள்ள விடத்துப பண்புடைமை யுண்டாகாது இவவிரண்டுங் கூடிய விடத்தே (பணபுடைமை) யுண்டாவ தென்பது தோன்ற 'இரண்டும்' என முற்றும்மை கொடுத்தார்.

2 அன்புடைமையினாலும் ஆன்றகுடிப்பிறத்தலாலும் உண்டாகும்பண்புடைமையை 'அன்புடைமையான்ற குடிப்பிறத்த லிவ்விரண்டும் பண்புடைமை' என்றேற்றுமைப படுத்திக் கூறியதினால் 'காரணங்கள்(அன்புடைமை ஆன்றகுடிப்பிறத்தல் என்னுங் காரணங்கள்) காரிய மாக(பண்புடைமை யென்னும் வழக்கு என்று காரியமாக)வுபசரிக்கபபட்டன' என்று கூறப்பட்டது. இது காரணம் காரியமாய வுபசார வழக்கு

௩. உறுப்பொத்தல் மக்களொப் பன்றால் வெறுத்தக்க
பண்பொத்த லொப்பதா மொப்பு.

பரி.—(இ - ள்.) செறியத்தகாத வுடம்பாலொத்தல் ஒருவனுக்கு நன்மக்களோ டொப்பாகாமையின் 1 அது பொருந்துவதன்று; இனிப் பொருந்துவதாய வொப்பாவது செறியத்தக்க பண்பா லொத்தல், எ - று.

2 வடநூலார் அங்கமென்றமையின் 'உறுப்பு' என்றார். ஒருவனுக்கு நன்மக்களோடு பொருந்த ஒப்பாவது உயிரின்வேறாய் நிலையுதலில்லா வுடம்பொத்தலன்று வேறன்றி நிலைபெறுதலுடைய பண்பொத்தலாகலான், அப்பெற்றித்தாய 3 அவர் பண்பினையுடையனாக வென்பதாம்.

தெளி.—(இ - ள்.) உறுப்பொத்தல் - (நெருங்கத்தகாத) உடம்பாலொத்தல், மக்களொப்பன்று - (ஒருவனுக்கு) நல்லமனிதரோடு (ஒப்பாகாமையால்) அதுபொருந்துவதன்று, ஒப்பதாம - (இனிப்) பொருந்துவதாகிய, ஒப்பு - ஒப்பாவது, வெறுத்தக்க - நெருங்கத்தக்க, பண்பொத்தல் - பண்பாலொத்தல், எ - று.

வடநூலார் உடம்பை அங்கமென்று கூறுகின்றமைபற்றி 'உறுப்பு' என்றார். ஒருவனுக்கு நன்மக்களோடு பொருந்தும் ஒப்பாவது உயிரின்வேறாய் நிலைபெறாத உடம்பொத்தலன்று வேறல்லாமல் நிலைபெறுதலுடைய பண்பொத்தலாகலால், அப்படிப்பட்ட அவர் பண்பினையுடையனாக வென்பதாம்.

(க - து.) பண்புடையாரே நன்மக்களாவர் என்பது. (௩)

௪. நயனொடு நன்றி புரிந்த பயனுடையார்
பண்புபா ராட்டு முலகு.

பரி.—(இ - ள்.) நீதியையும் அறத்தையும் விரும்புதலாற் பிறர்க்குந் தமக்கும் பயன்படுத லுடையாரது பண்பினை உலகத்தார் கொண்டாடாநிற்பர், எ - று.

புரிந்த வென்னும் பெயரெச்சம் ஈண்டுக் காரணப்பொருட்டு. நயனொடு நன்றிபுரிதலும் பயனுடைமையும் பண்புகாரணமாக வந்தமையின், 4 அதனைப் 'பாராட்டும்' என்றார்.

தெளி.—(இ - ள்.) நயன் - நீதியையும், நன்றி - அறத்தையும், புரிந்த - விரும்புதலால், பயனுடையார் - (பிறர்க்குந் தமக்கும்) பயன்படுத லுடையவர

---

1 அது - உடம்பா லொத்தல்.

2 நீதிநெறி விளக்கம் 'அங்கம் (உடல்) குலைவதறிவு' என்று கூறுவது ஈங்கறியத்தக்கதாம்.

3 அவர் - நன்மக்கள்.  4 அதனை - பண்பினை.

பண்பு - பண்பினை, உலகு - உலகத்தார், பாராட்டும் - கொண்டாடாநிற்பர், எ - று

புரிந்த என்னும் பெயரெச்சம் இங்கே காரணப் பொருளில் வந்தது. நயனொடு நன்றிபுரிதலும் பயனுடைமையும் பண்பு காரணமாக வந்தமையால், அதனைப் 'பாராட்டும்' என்றார்

(க - து) பண்புடையார் நீதியையும் தருமத்தையும் விரும்புதலால் அவரையே உலகத்தார் கொண்டாடாநிற்பர் என்பது. (௪)

௫ நகையுள்ளு மின்னா திகழ்ச்சி பகையுள்ளும்
பண்புள பாடறிவார் மாட்டு.

பரி —(இ - ள்) தன்னை யிகழ்தல் ஒருவற்கு விளையாட்டின்கண்ணும் இன்னாது; ஆகலாற் பிறர் பாடறிந்தொழுகுவார் மாட்டுப் பகைமையுள்வழியும் அஃதுளதாகாது இனியவாய பண்புகளே உளவாவன, எ - று

'பாடறிவார்' எனவே அவ்வின்னாமை யறிதலும் பெற்றாம் [1] அதனையறிந்தவர் பின் [2] அதுசெய்யார் இனியவே செய்வாரென்பது கருத்து. [3] இதற்குப் பிறரெல்லாம் [4] இரண்டு தொடருந் தம்முள் [5] இயையாம லுரைப்பாரும், இன்னாதென்னுஞ் சொற்குப் பிறவாதென் றுரைப்பாருமாயினர்

தெளி —(இ - ள்.) இகழ்ச்சி - (தன்னை) இகழ்தல், நகையுள்ளும் - (ஒருவனுக்கு) விளையாட்டினிடத்தும், இன்னாது - துன்பந்தருவதாம், (ஆகலால்) பாடறிவார் மாட்டு - (பிற) ரியல்பறிந்து நடப்பவரிடத்து, பகையுள்ளும் பகையுள்ளவிடத்தும், பண்பு - (அப்பகை உண்டாகாமல் இனிமையாகிய) பண்புகளே, உள - உண்டாவனவாம், எ - று

'பாடறிவார்' எனவே அவ்வின்னாமை யறிதலும் பெற்றாம் அதனை அறிந்தவர் பின் அதுசெய்யார் இனியனவே செய்வாரென்பது கருத்து.

(க - து.) பண்புடையார் பகையுண்டானவிடத்தும் இனிமைக் குணமுடையாராயே இருப்பார் என்பது. (௫)

௬. பண்புடையார்ப் பட்டுண் டுலக மதுவின்றேல்
மண்புக்கு மாய்வது மன்.

பரி —(இ - ள்) பண்புடையார்கண்ணே படுதலால் உல[6]கியல் எஞ்ஞா

---

1 அதனை - பிறரியல்பினை.
2 அது - இன்னாமை. 3 இதற்கு - இக்குறளிற்கு.
4 இரண்டு தொடரும் - இகழ்ச்சி நகையுள்ளுமின்னாது, பாடறிவார் மாட்டுப் பகையுள்ளும் பண்புள என்னும் இரண்டு தொடரும்.
5 இயையாமல் - பொருந்தாமல். 6 இயல் - ஒழுக்கம்.

ன்று உண்டாய் வாராநின்றது, 1 ஆண்டுப்படுத லில்லையாயின் அது மண்ணி னகட்புக்கு மாய்ந்து போவதாம், எ-று

2 படவென்பது திரிந்து நின்றது 3 உலகு-ஆகுபெயர் மறைப்பணி லவோர் சார்பன்மையின் ஓர் 4 சார்புமின்றி மண்ணின்கட்புக்கு 5 மாயுமது வேண்டாவாயிற்றென்பது பட நின்றமையின், மன் 6 ஒழியிசைக்கண் வந்தது. இவை நான்கு பாட்டானும் 7 அதனை யுடையாரதுயர்ச்சி கூறப்பட்டது.

தெளி —(இ - ள்.) பண்புடையார் - பண்புடையவரிடத்தே, பட்டு-படுத லால், உலகம் - உலகியல், உண்டு - (எக்காலமும்) உளதாயவராநின்றது, இன் றேல் - (அங்ஙனம் படுதல்) இல்லையாயின், அது - அவ்வுலகியல், மண்புக்கு - மண் ணிலேபுகுந்து, மாய்வது - மாய்ந்துபோவதாம், எ - று

படவெனும் எச்சம் பட்டெனத் திரிந்து நின்றது உலகு -இடவாகுபெ பெயர். மறைப்பணிலலார் சார்பல்லாமையால ஒருசார்பு மிலலாமல மண ணிற் புகுந்து மாயுமது வேண்டாவாயிற்றென்பது தோன்ற நின்றமையால், ம ன்னெனுமிசைச்சொல் ஒழியிசையில் வந்தது இவை நான்குபாட்டாலும் அ தனையுடையவரது உயர்ச்சிசொலலப்பட்டது

(க - து) உலகியல பண்புடையாராலேயே நடைபெறுகின்றதென் பது (௬)

௭. அரம்போலுங் கூர்மைய ரேனு மரம்போல்வர்
மக்கட்பண் பில்லா தவர்.

பரி —(இ - ள்) மக்கட்கேயுரிய பண்பிலலாதவர் அரத்தின் கூர்மை போலுங் கூர்மையையுடையரே யாயினும் ஓரறிவிற்றாயமரத்தினையொப்பர், எ-று

8 அரம்- ஆகுபெயர். ஓரறிவு - ஊறறினையறிதல் 9 உவமையிரண்டனுள்

---

1 ஆண்டுப்படுதல்-பண்புடையவரிடத்தே பொருந்துதல்.
2 படவென்னும் செயவெனெச்சம் பட்டு எனத்திரிந்து நின்றது.
3 உலகு என்னுமிடப் பெயர் அங்குள்ள இயலுக்காதலால இடவாகுபெயர்.
4 சார்புமின்றி - ஆதாரமு மில்லாமல்.
5 மாயுமது (நாசமுறும உலகியல்) வேண்டாவாயிற்று (தானிருத்தற்காதார மாகப் பண்புடையவ ரிருத்தலாலே நாசமுறுதலை விரும்பாதாயிற்று).
6 ஒழிந்தசொற்பொருளைத் தருவது ஒழியிசை யெனப்படும்.
7 அதனை - பண்பினை,
8 அரம் என்னும் பொருட் பெயர் அதன் பண்பாகிய கூர்மைக்காதலால் பொ ருளாகு பெயர்.
9 உவமை யிரண்டனுள் - அரத்தின்கூர்மை, மரம் என்னுமுவமான மிரண்ட

1 முன்னது தான் 2 மடிவின்றித் தன்னையுற்றபொருள்களை 3 மடிவித்தலாகிய தொழில்பற்றி வந்தது 4 ஏனையது 5 விசேடவறிவின்மையாகிய பண்புபற்றி வந்தது அவ்விசேடவறிவிற்குப் பயனாகிய மக்கட்பண்பின்மையின், 6 அதுதானுமில்லையென்றாயிற்று.

தெளி.—(இ-ள்.) மக்கள் — நன்மக்களுக்கே யுரிய, பண்பில்லாதவர்- அரம்போலும், அரத்தின் கூர்மைபோலும், கூர்மையரேனும் - கூர்மையை யுடையரேயாயினும், மரம்போல்வர் - (ஓரறிவினதாகிய) மரத்தினையொப்பர், எ-று.

அரம் - பொருளாகுபெயர் ஓரறிவு- பரிசத்தை அறிதல் உவமானமிரண்டனுள் முன்னதுதான் மடிவில்லாமல் தன்னையுற்ற பொருள்களை மடிவித்தலாகிய தொழில்பற்றிவந்தது. மற்றது விசேட அறிவில்லாமையாகிய குணம்பற்றிவந்தது அவ்விசேடவறிவிற்குப் பயனாகிய மக்கட்பண்பில்லாமையால், அவ்வறிவுதானுமில்லையென்பதாயிற்று.

(க-து.) பண்பில்லாதவர் கூரிய புத்தியை யுடையவராயிருப்பினும் மரத்தோடொப்பாவர் என்பது. (எ)

அ. நண்பாற்றா ராகி நயமில செய்வார்க்கும்
பண்பாற்றா ராதல் கடை.

பரி.—(இ-ள்.) தம்மொடு நட்பினைச் செய்யாது பகைமையைச் செய்தொழுகுவார்மாட்டும் தாம் பண்புடையரா யொழுகாமை அறிவுடையார்க்கிழுக்காம், எ-று.

நயம் - 7 ஈரம். சிறப்பும்மை 8 அவர் பண்பாற்றாமைக்கிடனாதல் தோன்றநின்றது 9 அதனைச்செய்யிற்றாமும் 10 அவர் தன்மையராவரென்பார் 'கடை' என்றார்.

தெளி.—(இ-ள்.) நண்பு - நட்பினை, ஆற்றாராகி - (தம்மொடு) செய்யாதவராகி, நயமில - பகைமையை, செய்வார்க்கும் - செய்து நடப்பவரிடத்

1 முன்னது - அரத்தின் கூர்மை யென்னுமுவமானம்

2 மடிவு - மடங்குதல் 3 மடிவித்தல் - கெடச்செய்தல்.

4 ஏனையது - மரம் என்னுமுவமானம்.

5 விசேடவறிவு - மனவுணர்ச்சி (பகுத்தறிவு) "மக்கடாமேயாறறிவுயிரே" என்று தொல்காப்பியன் கூறுகின்றது.

6 அது தானும் - விசேடவறிவுதானும். 7 ஈரம் - அன்பு.

8 அவர் - நயமிலசெய்வார். 9 அதனை - பண்புடையவராய் நடவாமையை.

10 அவர் - நயமிலசெய்வார்.

தும், பண்புடையராதல் (தாம்) பண்புடையராய் நடவாமை, கடை - (அறிவு டையராகற்) இழுக்காம், எ - று.

நயம் - நிரம் செய்வார்க்கு மெனற இதிவுசிறப்பும்மை அவர் பண்புடையராய் நடவாமைக்கு இடனாதலைத் தோன்றநின்றது. அதனைச்செய்யின் தாமும் அவர் தன்மைய ராவரெனபார் 'கடை' என்றார்.

(க - து) பகைவரிடத்து நட்பினைச் செய்யாது பகை செய்தொழுகுவார் பண்புடைய ராகார் எனபது.

(அ)

கூ. நகல்வல்ல ரல்லார்க்கு மாயிரு ஞாலம்
பகலும்பாற் பட்டன் றிருள்.

பரி.—(இ - ள்) பண்பின்மையான் ஒருவரோடுங்கலந்து உண்மகிழ்தன் மாட்டாதார்க்கு மிகவும் பெரிய ஞாலம் இருளில்லாத பகற்பொழுதினும் இருளின்கட் கிடந்ததாம், எ - று.

எல்லாரோடுங் கலந்தறியப் பெறுமையிற் பண்பில்லார்க்கு உலகியல் தெரியாதெனபார், உலக மிருளின்கட் பட்டது என்றார். 1 பாழ்பட்டன்றிருளென்றுபாடமோதி, இருணீங்கிற்றனறென் றுரைப்பாருமுளர்.

தெளி.—(இ - ள்.) நகல்வல்ல ரல்லார்க்கு - (பண்பில்லாமையால் ஒருவரோடுங் கலந்து உள் மகிழ்தல் மாட்டாதவர்க்கு, மாயிருஞாலம் - மிகவும்பெரிய பூமியானது, பகலும் - (இருளில்லாத) பகற் பொழுதிலும், இருள் - இருளினிடத்தே பட்டன்று- கிடந்ததாம், எ - று.

எல்லாரோடும் கலந்து அறியப்பெறுமையால் பண்பில்லாதவர்க்கு உலகியல் தெரியாதென்பார், உலகம் இருளினிடத்துப்பட்டது என்றார்.

(க - து.) பிறரோடு நட்புச் செய்தொழுகும் பண்பில்லாதவர்க்கு உலகியல் தெரியாது என்பது.

(கூ)

௰. பண்பிலான் பெற்ற பெருஞ்செல்வ நன்பால்
கலந்தீமை யாற்றிரிந் தற்று.

பரி.—(இ - ள்) பண்பில்லாதவன் முன்னைநல்வினையானெய்திய பெரிய செல்வம் 2 அக்குற்றத்தால் ஒருவற்கும் பயன்படாது கெடுதல் நல்லவான பால் ஏற்ற 3 கலத்தின் குற்றத்தால் இன்சுவைத்தாகாது கெட்டாற்போலும், எ - று.

1 பாற்பட்டன் றிருள் என்பதற்குப் பிரதியாகப் பாழ்பட்டன் றிருள் என்று பாடஞ்சொல்லி, இருள் நீங்கினதல்ல வென்று பொருள் கூறுவாருமுண்டு.
2 அக்குற்றத்தால் - பண்பில்லாதிருக்கும் குற்றத்தால்.
3 கலத்தின் - பாத்திரத்தின்.

கலத்தீமை யென்பது மெலித்து நின்றது. 1 தொழிலுவமமாகலின் 2 பொருளின்கண் 3 ஒத்ததொழில் வருவிக்கப்பட்டது. 4 படைக்குமாற்ற லின்றித் தோன்றப் 'பெற்ற' என்றும், எல்லாப்பயனுங் கோடற்கேற்ற இடனுடைமை தோன்றப் 'பெருஞ்செல்வம்' என்றுங் கூறினார். அச்செல்வமும் பயன்படாதென்ற இதனான் வருகின்ற அதிகாரப் பொருண்மையுந் 5 தோற்றுவாய் செய்யப்பட்டது. இவை நான்கு பாட்டானும் 6 அஃதில்லாரதிழிவு கூறப்பட்டது.

தெளி —(இ-ள்) பண்பிலான் - பண்பில்லாதவன், பெற்ற - (முன்னை நல்வினையினால்) அடைந்த, பெருஞ்செல்வம், பெரியசெல்வம்-(அக்குற்றத்தால் ஒருவர்க்கும் பயன் படாது கெடுதல்) நன்பால் - நல்ல (பசுவின்) பால், கலம் - (ஏற்ற) கலத்தினது, தீமையால் - குற்றத்தால், (இனியசுவையுடையதாகாது,) திரிந்தற்று - கெட்டாற் போலும், எ - று.

கலத்தீமை யென்பது கலந்தீமை யென மெலித்தல்விகாரமடைந்து நின்றது. தொழிலுவமமாகலால் உவமேயத்தில் ஒத்ததொழில் வருவிக்கப்பட்டது. படைக்கும் வலிமையில்லாதல் தோன்றப் 'பெற்ற' என்றும், எல்லாப் பயனுங்கொள்ளுதற்கு ஏற்ற இடமுடைமை தோன்றப் 'பெருஞ்செல்வம்' என்று சொன்னார். அச்செல்வமும் பயன்படாதென்ற இதனால் வருகிற அதிகாரப் பொருண்மையுந் தோற்றுவாய் செய்யப்பட்டது. இவை நான்கு பாட்டானும் அஃதில்லாதாரது இழிவு சொல்லப்பட்டது.

(க - து) பண்பில்லாதவனது செல்வம் ஒருவர்க்கும் பயன் படுதலில்லை என்பது. (ம)

1 தொழிலுவம மாகலின் - 'நன்பால் கலத்தீமையால்' திரிதற்றொழில் உவமானமா யிருத்தலால்

2 பொருளின்கண் - 'பண்பிலான் பெற்ற பெருஞ்செல்வம்' என்னும் உவமேயத்தில்.

3 ஒத்ததொழில் - அக்குற்றத்தால் ஒருவர்க்கும் பயன் படாது கெடுதல் என்னும் தகுந்த தொழில்.

4 படைக்கும் - பொருளைச் சம்பாதிக்கும்.

5 தோற்றுவாய் - தொடக்கம்.

6 அஃதில்லாரது - பண்பில்லாரது.

## ௱௧ - ம். அதி. நன்றியில்செல்வம்.

பரி.—அஃதாவது ஈட்டியார்க்கும் பிறர்க்கும் பயன்படுதலில்லாத செல்வத்தினியல்பு. 1 உடையானது குற்றஞ் செல்வத்தின்மேலேற்றப்பட்டது. அதிகாரமுறைமை 2 மேற்றோற்றுவாய் செய்தவதனாற் பெறும்.

தெளி.—அஃதாவது சம்பாதித்தவனுக்கும் பிறர்க்கும் பயன் படுதலில்லாத செல்வத்தி னியல்பு. செல்வமுடையானது குற்றம் செல்வத்தின்மேல் ஏற்றப்பட்டது. அதிகார முறைமை முன்தோற்றுவாய் செய்தவதனாற் பெறும்.

க வைத்தான்வாய் சான்ற பெரும்பொரு ளஃதுண்ணான்
செத்தான் செயக்கிடந்த தில.

பரி.—(இ - ள்) தன் மனையகலமெல்லாம் நிறைதற் கேதுவாய பெரும் பொருளை 3 ஈட்டிவைத்து உலோபத்தால் அதனை யுண்ணாதவன் உள்ளாயினுஞ் செத்தானாம், அதன்கண் அவனாற் செயக்கிடந்ததோ ருரிமை யின்மையான், எ - று.

4 வைத்தானென்பது முற்றெச்சம். உண்ணுதல் - அதனை 5 ஐம்புலன் களானும் நுகர்தல். 6 வாய்சான்ற பெரும்பொருளை வைத்தானொருவன் அதனை

---

1 செல்வத்தைத் தேடினானது நன்றியின்மையாகிய குணத்தை அவனது செல்வத்தின்மே லேற்றி 'நன்றியில் செல்வம்' என்று கூறினதினால் இஃது உடையவன் குணம் உடைமைமேலாய உபசாரவழக்கு.

2 மேல் அதிகாரத்தி னிறுதியில் "பணியிலான் பெற்ற பெருஞ்செல்வ நன்றால், கலந்தீமை யாற்றிரிந் தற்று" என்று தொடக்கஞ் செய்ததனால் பெறப்பட்டது.

3 "தீயாலோ நீராலோ தேர்வேந்தர் தம்மாலோ, மாயாத தெவ்வர் வலியாலோ - யாதாலோ, இப்பொருள்போய் மாய்கின்ற தென்றுபொருள் வைத்தார்கள், எப்பொழுது நீங்கா ரிடர்" என்று பெருந்தேவனார் பாரதங்கூறுவதின் கறியத்தக்கதாம்.

4 வைத்தான என்னும் முற்று வைத்து என்று வினையெச்சமாயிற்று. வினைமுற்று பெயர்கொண்டு முடியாது வினைகொண்டுமுடியுமிடத்து எச்சமாமென்க. இங்கே வைத்தான் என்பது உண்ணான் என்பதைக்கொண்டு முடிந்தது.

5 ஐம்புலன்கள் -(சுகத்தைத் தருவதாய் அனுபவித்தற்கு விரோதமின்றிய) சப்தாதி விஷயங்கள்.

6 இக்குறளிற்கு மற்றோருரை கூறுகின்றார். அது வருமாறு:—வாய்சான்ற - மனையிடமெல்லாம் நிறைதற்குக் காரணமாகிய, பெரும்பொருள் - பெரு

ன்றுது செத்தவழி அதன்கண் அவனுற் செயக்கிடந்ததோ ருரிமையில்லை யாகலான், வையாது பெற்றபொழுதே நுகர்கவென றுரைப்பினு மமையும். 1 இதற்குச் செத்தானென்பது எச்சம். இதனுல் ஈட்டியானுக்குப் பயன்படாமை கூறப்பட்டது.

தேவி.—(இ - ள்) வாய்சான்ற - (தன்) மனை யிடமெல்லாம நிறைதற்குக்காரண மாகிய, பெரும்பொருள-பெரியபொருளை, வைததான-(சம்பாதித்து) வைத்து, அஃது - அபபொருளை, உணணுன் - (உலோபத்தால) அனுபவியாதவன, (உளனுயினும்) செத்தான் - செததானும, செயக்கிடநதது (அபபொருளினிடத்து அவனுலே) செயக்கிடநதோ ருரிமையானது, இல-இல்லை, (ஆதலால) எ - று.

வைத்தான் எனனும் தெரிநிலைவினைமுற்று வினை யெச்சமாயிற்று. உண்ணுதல - அபபொருளால ஐமபுலனகளையு மனுபவித்தல இதனுலே சம்பாதித்தவனுக்கு அச்செலவம பயன்படா விலலாமை சொலலபபட்டது.

(க - து) பெருமபொருளைத் தேடிவைத்து அதனபயனை அனுபவியாதவன உயிரோடிருக்குங் காலததுஞ் செத்தவனுக் கொபபாவன னெனபது. (க)

உ. பொருளானு மெல்லாமென றீயா திவறு
மருளானு மாணாப பிறப்பு.

பரி —(இ - ள்) பொருளொன்று முண்டாக அதனு லெலலா முண்டாமெனறிநது 2 அதனை ஈட்டிப பின் பிறர்ககீயாது பற்றுள்ளஞ்செய்யு மயக்கத்தாலே ஒருவனுக்கு 3 நிறைதலிலலாத பேய்பபிறப புண்டாம், எ-று.

இருமையினு மெய்து மின்பங்கள் பலவுமடங்க 'எல்லாம்' எனறும், ஈட்டுதற்கு முன்னுண்டாய அறிவு பின்மயங்குதலின் 'மருள' என்றும், பொருளுண்டாயிருக்கப பிறர்பசி கண்டிருந்த தீவினைபற்றி உணவுக ளுளவாயிருக்கப் பசித்து வருந்தும் பிறப்புளதா மென்றுங் கூறினுர்

ம்பொருளை, வைத்தான - (சமபாதித்து) வைததானொருவன், அஃதுண்ணுன்-அப்பொருளை யனுபவியாது, செத்தான்-செத்தவிடத்து(செத்தால்), செயககிடந்தது - (அபபொருளினிடத்து அவனுல்) செய்யக்கிடந்ததோருரிமை (சுதந்தரம), இல - இல்லை, [ஆகலால்], (பொருளைச் சேர்த்து) வைக்காமல் பெற்றகாலத்திலேயே அனுபவிக்கக் கடவன் என்பதாம்.

1 இதற்கு - [இந்தஅருத்தத்திற்கு] செத்தான் என்னும் வினைமுற்று செத்தவிடத்து என வினையெச்சமாயிற்று.

2 அதனை - பொருளை.

3 நிறைதல் - திருப்தியடைதல்.

தெளி.—(இ - ள்) பொருளான்-(பொருளொன்றுமுண்டாக) அப்பொருளினால், எல்லாம்—ஆம்-உண்டாகும், என்று - என்று அறிந்து, (அதனைச் சம்பாதித்து) ஈயாது-(பிறர்க்குக்) கொடாமல், இவறும்-உலோபத்தைச் செய்யும், மருளான்-மயக்கத்தினாலே, மாணா- நிறைதலில்லாத, பிறப்பு-(பேய்ப்) பிறப்பு, ஆம்- ஒருவனுக்கு உண்டாம், எ - று.

இருமையினும் அடையும் இன்பங்கள் பலவும் அடங்க 'எல்லாம்' என்றும், பொருளைச் சம்பாதிக்கற்கு முன்னே உண்டாகிய அறிவானது சம்பாதித்த பின்னை மயங்குதலால் 'மருள்' என்றும், பொருள் உண்டாயிருக்கப் பிறருடைய பசி கண்டும் கொடாததனால் உணவுகள் உண்டாயிருக்கப் பசித்து வருந்தும் பிறப்பு உண்டா மென்றும் சொல்லிற்று.

(க - து) பொருளின் பயனையறிந்து அதனைச் சம்பாதித்துப் பிறர்க்கீயாது லோபஞ் செய்பவனுக்கு மறுமையில் பேய்ப்பிறப்புண்டாகுமென்பது. (உ)

**௩.** ஈட்ட மிவறி யிசைவேண்டா வாடவர்
தோற்ற நிலக்குப் பொறை.

பரி.— (இ - ள்) யாம் பிறரினும் மிக ஈட்டுதுமென்று பொருளின் திட்ப மாத்திரத்தையே விரும்பி அதன்பயனாய புகழை விரும்பாத மக்களது பிறப்பு நிலத்திற்குப் பாரமாம் அத்துணையே, எ - று.

இசை இருமைக்கு முறுதியாய அறமாகலின், ஈகையான் அதனையே வேண்டல் செய்யாது ஈட்டற் றுன்பத்தையுங் காத்தற் றுன்பத்தையும் வேண்டிய அறிவின்மைபற்றி 'நிலக்குப்பொறை' என்றார். பிறப்பென்றது அதற்குரிய வுடம்பினை.

**தெளி.**—(இ - ள்) ஈட்டம் (மற்றவரைக்காட்டிலும் மிகுதியாகச்) சம்பாதிப்போமென்று, இவறி - (பொருள் சம்பாதிக்கை மாத்திரத்தையே) விரும்பி, இசை-(அப்பொருளின் பயனாகிய) புகழை, வேண்டாவாடவர்-விரும்பாத மக்களது, தோற்றம்- பிறப்பு, நிலக்கு பூமிக்கு, பொறை - பாரமாம், (அவ்வளவே) எ - று.

புகழ் இருமைக்கும் உறுதியாகிய அறமாகலால், ஈகையால் அப்புகழினையே வேண்டுதல் செய்யாமல் சம்பாதித்தற் றுன்பத்தையும், காப்பாற்றற் றுன்பத்தையும் வேண்டிய அறிவின்மை பற்றி 'நிலக்குப்பொறை' என்றார். பிறப்பென்றது அப்பிறப்பிற் குரிய உடம்பினை.

**(க - து.) பொருளைச் சம்பாதித்து அதன் பயனாகிய புகழை விரும்பாதமக்களால் உலகிற்குப் பிரயோஜனம் இல்லை என்பது. (௩)**

வின்றது ஒன்றுமில்லார் போலப் 1 பயனிரண்டு மிழத்தலின் 'இல' என்றார்.

தெளி —(இ - ள்) கொடுப்பதூஉம் - (பிறர்க்கு) ஈவதும், துய்ப்பதூஉம்-(தாம்) அனுபவிப்பதும், (ஆகிய இரண்டு செய்கையும்) இல்லார்க்கு-உடையரல்லாதார்க்கு, அடுக்கிய -(பலவாக) அடுக்கிய, கோடியுண்டாயினும் கோடிப் பொருள் உண்டாயினும், இல - (ஒன்றும்) இல்லை, எ - று,

இன்பத்தினும் அறம் சிறந்தமையால், கொடுத்தற்றொழில் முன் சொல்லப்பட்டது அடுக்கியகோடி யென்றது இங்கு எண்ணப்படும் பொருளின்மேல் நின்றது. ஒன்றுமில்லார்போற் பயனிரண்டும் இழத்தலால் 'இல' என்றார்.

(க - து.) அறத்தின் பொருட்டுப் பிறர்க்குக் கொடுத்தலும் இன்பத்தின் பொருட்டுத் தாம் அனுபவித்தலும் ஆகிய செய்கைகளிரண்டிம் இல்லாதார்க்கு எவ்வளவு பொருளிருந்தாலும் அதனால் யாதும் பயனில்லை என்பது (ரு)

௬. ஏதம் பெருஞ்செல்வந் தான்றுவ்வான் றக்கார்க்கொன்
றீத லியல்பிலா தான்.

பரி —(இ - ள்) தானுகராதும் அதன்மேலுந் தகுதியுடையார்க்கு அவர் வேண்டியதொன்றனை ஈதலியற்கை யிலனாயினான் இரண்டுஞ் செய்தற்கிடனுடைத்தாய செல்வத்திற்கு ஒருநோய், எ - று

- 2 தானக் 3 கோடற் கேற்புடைமை. 4 ஏதம்-ஆகுபெயர். நுகரப்படுதலும் ஈயப்படுதலுமாகிய தொழிற்குரியதனை 5 அன்றாக்கினமையின் 'நோய்' என்றார். ஈதலியல்பிலாதானது பெருஞ்செல்வம் அவனுக்கு 6 ஈட்டல் காத்தன் முதலியவற்றால் துன்பமேயாமென றுரைப்பாருமுளர். இவையிரண்டுபாட்டானும் 7 அவ்விருமையும் உடன் கூறப்பட்டன.

---

1 பயனிரண்டும் - அறப்பயனும் இன்பப்பயனும்.

2 தானமாவது தருமவழியால் கிடைத்த பொருள்களைத் தக்கவர்களுக்கு மகிழ்ச்சியுடன் கொடுத்தலாம்.

3 கோடற்கேற்புடைமை - கொள்ளுவதற்குத் தகுதியுடைமை,

4 ஏதம் (துன்பம்) என்னும் காரியப்பெயர் அதனைத்தருவதற்குக் கருவியாகிய நோய்க்காதலால காரியவாகு பெயர்.

5 அன்றாக்கினமையின் - தொழிற்குரிய தல்லதாகச் செய்ததினால்.

6 ஈட்டல் - சம்பாதித்தல். "ஈட்டலுந் துன்பமற் றீட்டிய வொண்பொருளைக் காத்தலு மாங்கே கடுந்துன்பங் காத்தல், குறைபடிற் றுன்பங் கெடிற்றுன்பந் துன்பம் குறைபதி மற்றைப்பொருள்" என்று நாலடியார் கூறுவதினைக் கருதியத்தக்கதாம்.

7 அவ்விருமையும் - (நன்றியில் செல்வம்) சம்பாதித்தவனுக்குப் பயன்படவில்லாமையும், பிறர்க்குப்பயன்பட வில்லாமையும்.

**தெளி.**—(இ - ள்) தான்றுவ்வான் - தான் அனுபவியாதவனாகி, (அதன் பெறுபயன்) தக்கார்க்கு - தகுதியுடையவர்க்கு, ஒன்று - (அவர்வேண்டிய) தொருபொருளை, ஈதலியல்பிலாதான் - கொடுத்தற் றன்மையிலாதவன், பெருஞ் செல்வம் - (அவ்விரண்டு செய்தற்கு இடமுடையதாகிய) பெரிய செல்வத்திற்கு, ஏதம் - ஒருநோய், எ - று.

தக்கார் - தன்மை வாய்ந்ததற்கு ஏற்றவர். ஏதம்-காரியவாகுபெயர். அனுபவிக்கப்படுதலும் ஈயப்படுதலுமாகிய தொழிற்கு உரியபொருளினை அல்லதாக இன்மையால் 'நோய்' என்றார் இவை இரண்டோடாலும் அவ்விருமையும் உடன் சொல்லப்பட்டது.

(இ - ள.) தான் அனுபவித்தலும் தகுதியுடையார்க்கீதலும் இல்லாதவன் தானுடைத்தாயிருக்குஞ் செல்வத்திற்கு நோயாவன் என்பது. (௬)

**௭. அற்றார்க்கொன் றாற்றாதான் செல்வ மிகநலம்**
**பெற்றா டமியண்மூத் தற்று.**

**பரி.**—(இ - ள்) ஒருபொருளுமிலராயினார்க்கு அவர் வேண்டிய தொன்றனைக் கொடாதானது செல்வம் கொன்னே கழிதல் 1 பெண்டிரின் மிக்க நலத்தினைப்பெற்றாளொருத்தி கொடுப்பாரின்மையிற் கொழுநனின்றித் 2 தமியளாய் மூத்தற்றன்மைத்து, எ - று.

நலம் — வடிவினன்மையும் குணத்தினன்மையும். 3 இரண்டுமொருங்கு பெறுதலரிதாகலின் 'பெற்றாள்' என்றார். கொடுப்பாரும் கொழுநனுமே யன்றித் தானும் பயனிழந்து கழிந்த குமரியோடு 4 உவமை கூறினமையின், 5 தானும் ஏற்பாலுமேயன்றிச் செல்வமும் பயனிழந்து கழியுமென்பதாயிற்று.

**தெளி.**—(இ - ள்) அற்றார்க்கு-(ஒருபொருளு)மிலராயினார்க்கு, ஒன்று-(அவர்வேண்டிய) தொருபொருளினை, ஆற்றாதான்-கொடாதவனது, செல்வம்-(வீணாகக் கழிதல்,) மிகநலம்-(பெண்டிரின்) மிகுந்தநலத்தினை, பெற்றாள்-பெற்ற வொருத்தி, (கொடுப்பாரில்லாமையினாலே) தமியள் - (கணவனில்லாமல்) தனியளாய், மூத்தற்று - மூத்ததன்மைத்து, எ- று.

நலம்- வடிவினன்மையும் குணத்தினன்மையும் இவ்விரண்டும் ஒருசேரப் பெறுதல அரிதாகலால் 'பெற்றாள்' என்றார் கொடுப்பாரும் கணவனுமே யல்லாமல் தானும் பயனிழந்து கழிந்தகுமரியோடு உவமை சொன்னமையால், தானும் ஏற்பாலுமே யல்லாமல் செல்வமும் பயனிழந்து கழியுமென்பதாம்.

---

1 பெண்டிரின் - பெண்களுக்குள்ளே   2 தமியளாய்-தனித்தவளாய்
3 இரண்டும் - வடிவு (உருவத்தின் அழகும் குணத்தினழகும் (நற்குணமும்)
4 உவமை - ஒப்பு.   5 தானும் - (பொருளைத் தரித்திரர்க்குக்கொடுக்காதவனாகிய) தானும்.

வர்க்குக்கொடுத்தல் முதலாகிய) அறத்தை, நோக்காது- நினைப்பதுஞ் செய்யாமல, ஈட்டிய-சம்பாதித்த, ஒணபொருள் ஒள்ளியபொருளை, கொள்வார் -(கொண்டுபோயப் பயன்) கொள்ளுவார், பிறர் - அன்னியராவர் , எ - று.

படலுகிய அறமும் இன்பமும் செய்துகொள்ளாதவனுக்குப் பொருளாக் உள்ளது சம்பாதித்தற றுன்பமே யெனபது தோன்ற 'ஈட்டிய' எனறும், அவன் சந்ததியி லுள்ளவர்கும் உதவாதென்பது தோன்றப் 'பிறர்' என்றும் சொல்லினர்.

(க - து.) பிறர்க்குங் கொடுக்காது தானும் அனுபவியாது சம்பாதித்துச சேர்த்துவைத்தவனது பொருளைப பிறர்கொண்டு அதன் பயனடைவர் என்பது. (௯)

௰. சீருடைச் செல்வர் சிறுதுனி மாரி
வறங்கூர்ந் தனைய துடைத்து.

பரி— (இ - ள்) புகழுடைத்தாய செல்வததினை யுடையவரது நிற்குங்காலஞ் சிறியதாய வறுமை உலகததைபெலலாம் நிலைநிறுத்துமேகம் வறுமை மிககாறபோல்வதோ ரியலபினை யுடைத்து, எ-று.

1 துனி- வெறுபபு; அதனைச் செய்தலாற் றுனியெனப்பட்டது. யாவர்க்கும் பயன்பட்டார் 2 அதனுன் வறியராய வழியும் அவ்வறுமை கடிதினீங்குதலிற பின்புஞ் செலவராய்ப பயன்படுவரென்பது 3 உவமையாற் பெறப்பட்டது, படவே நன்றியிலலாத செலவம் எஞ்ஞான்றும பயனபடாதென்பதாயிற்று. 4 இதறகுச் சீருடைச்செல்வர் இரவலரோடு வெறுக்கும நிலையில்

1 துனியை (வெறுப்பை)ச் செய்யும் வறுமையைத் துனியெனறது காரியவாகுபெயர்.

2 அதனுல் - பயன்படுதலால்.

3 உவமையால் - மாரிவறங் கூர்ந்தனையது என்னு முவமானத்தினுல். [மேகம் மழை பொழிதலால் நீரில்லாது வறுமையடைந்தவிடத்தும அந்நீரில்லாவறுமை விரைவில்நீங்கிப் பின்பும் நீருடையதாய் மழைபொழிவது போன்று சீருடைச்செல்வர் பிறர்கருப் பயன்படுதலால் தரித்திரராயவிடத்தும் அத்தரித்திரம் விரைவில்நீங்கிப் பின்பும் செல்வமுடையவராய்ப் பயன் படுவாரென்பதாம் ]

4 இக் குறளுக்குச் சீருடைச் செலவர் - சீரினை (புகழினை) யுடைத்தாகிய செல்வத்தை புடையவர், சிறுதுனி - (யாசகரோடு வெறுக்கும்) நிலையில்லாத வெறுப்பு, மாரிவறங் கூர்ந்தனையது - மேகம் வறுமை மிகுந்த தொத்த தன்மையை, உடைத்து — உடையதாம் என்று நன்றியில்செல்வம் என்னு மிவ்வதிகாரத்தோடு பொருந்தாமை மேலும் ஓர் பொருட் சம்பந்தம் படாமற் பொருள் கூறுவாரு முண்டு. சீருடைச் செல்வர் இரவலரோடு வெறுத்தல் யாண்டு மின்மையின் அஃதுரையாகாதாயிற் றென்க.

வெறுப்பு மாரி வறங் கூர்ந்தனைய தன்மையையுடைத்தென அதிகாரத்தோடு பொருந்தாமை மேலும் ஓர் பொருட்டொடர்பு படாமையுரைப்பாரு முளர். இவை நான்குபாட்டானும் அச்செல்வத்தது குற்றங் கூறப்பட்டது

தெளி.—(இ - ள்.) சீருடை - புகழுடைத்தாகிய, செல்வர் - செல்வத்தினையுடையவரது, சிறுதுனி - (சிறுகுங்காலம்) சிறிதாயவறுமை, மாரி - (உலகத்தையெல்லாம் நிலைநிறுத்துகிற) மேகம், வறங்கூர்ந்தனையது - வறுமைமிகுந்ததுபோல்வதோ ரியல்பினை, உடைத்து - உடையதாம், எ-று

துனி - வெறுப்பு; வெறுப்பைச் செய்தலால் வறுமை துனியெனப்பட்டது. யாவர்க்கும் பயன்பட்டவர் அதனால் வறியவராகியவிடத்தும் அவ்வறுமை விரைவில்நீங்குதலால் பின்னும் செல்வராய்ப் பயன்படுவரென்பது உவமானத்தாற் பெறப்பட்டது; படவே நன்றியில்லாத செல்வம் எக்காலும் பயன்படாதென்பதாயிற்று. இவை நான்குபாட்டானும் நன்றியில்செல்வத்தினது குற்றம் சொல்லப்பட்டது

(க - து.) ஈகையாளர் இசையால தரித்திர மடைந்தவிடத்தும் விரைவிலது நீங்கிப் பிறர்க்குப் பயன்படுவ ரென்பது (௰)

## ௧௦௨ - ம். அதி.—நாணுடைமை.

பரி.—அஃதாவது மேற்சொல்லிய [1] சால்பு [2] பண்பு [3] முதலிய குணங்களா னுயர்ந்தோர் தமக்கொவ்வாத கருமங்களில் நாணுதலுடையராந்தன்மை. அதிகார முறைமையும் இதனானே விளங்கும்

தெளி.—அஃதாவது முன்சொல்லப்பட்ட சால்பு பண்பு முதலாகிய குணங்களால் உயர்ந்தோர் தமக்குத் தகாதகருமங்களில் நாணுதலுடையராந் தன்மை. அதிகாரமுறைமையும் இதனாலே விளங்கும்.

க. [4] கருமத்தா னாணுத னாணுத் திருநுதல்
நல்லவர் நாணுப் பிற.

பரி.—(இ-ள்) நன்மக்கணாணுவது இழிந்த கருமங் காரணமாக நாணுதல்,

---

1 சால்பு - பல்குணங்களானும் நிறைதல்.
2 பண்பு - எல்லாரியல்புகளு மறிந்தொத்து நடத்தல்.
3 முதலிய என்றதனால் நன்றியறிதலாகிய குணமில்லாமையும் கொள்க.
4 "இழிந்த தொழிலி னாணுவதே யெய்தற் கரிய நாணென்பர், ஒழிந்த மனவாக் குடனொக்க மொளிவா னுதலார் நாணையாம்" என்று விநாயக புராணங் கூறுவதி னறியத்தக்கதாம்.

1 அஃதன்றி மனமொழி மெய்கள் தொடுக்கத்தான் வருவனவோவெனின், அவை 2 அவரனவல்ல அழகிய நுதலினையுடைய குலமகளிர் 3 நாணங்கள், எ - று.

பிற குலமகளிர் நாணென்றதனான் 4 ஏனையது நன்மக்க ணாணென்பதூஉம், நாணுதலென்றதனாற் கருமத்தினிழிவும் பெறாம். திருநுதனல்லவ ரென்பது 5 புகழ்ச்சிக் குறிப்பு. 6 ஏதுப் பன்மைபற்றிய 'பிற ' என்றார் 7 இனி அற மறைத்தன முதலியன பொதுமகளிர் நாணோ டொக்குமென் றுரைப்பாரு முளர். அவர்க்கு நாண் கேடு பயக்குமென விலக்கப்பட்டமையானும், அவர் பெயராற் கூறப்படாமையானும், அஃதுரையன்மையறிக. இதனான் நாணி னிலக்கணங் கூறப்பட்டது,

தெளி—(இ - ள்.) நாணு - (நன்மக்களது) நாணுவது, கருமத்தால் - (இழிந்த) கருமம் காரணமாக, நாணுதல் - நாணுதலாம், பிற - அஃதல்லாமல் மனமொழி மெய்களது ஒடுக்கத்தால வருவனவோ என்றால் அவை, (அவரனவல்ல) திருநுதல் - அழகிய நெற்றியை யுடைய, நல்லவர் - குலமகளிரது, நாணு - நாணங்கள், எ - று

பிற குல மகளிரது நாணென்றதனால் மற்றது நன்மக்களது நாணென்பதும், நாணுத லென்பதனால கருமத்தினதிழிவும் பெறாம் திருநுத னல்ல

---

1 அஃதன்றி - இழிந்த கருமங் காரணமாக நாணுத லல்லாமல்.

2 அவரனவல்ல - நன்மக்க ளளவி லிருப்பன வல்ல

3 "நாணென்பது பெண்டிர்க்கு இயல்பாக வுளதொருதன்மை" என்றனர் நக்கீரனார் "நாணாவது செயத் தகாதனவற்றின்கண் உள்ள மொடுங்குதல்" என்றனர் நச்சினார்க்கினியர்

4 ஏனையது - கருமத்தால் நாணுதல்

5 புகழ்ச்சிக் குறிப்பு - புகழ்ச்சிப்பொருளில் வந்த குறிப்புச் சொல்,

6 மனவொடுக்கத்தான மொழியொடுக்கத்தான் மெய்யொடுக்கத்தான் என ஏதுப் பன்மை பற்றி(சாதனம்பலவாயிருத்தலாலே) 'பிற' என்று பன்மையாற்கூறப்பட்டது. பிறவென்பது அஃறிணைப்பலவின்பால் படர்க்கைப் பெயர்ச்சொல்.

7 இனித் 'திருநுத, னல்லவர் நாணுப் பிற' என்பதற்குப் பிற - அற்ற(அவமானத்தை) மறைத்தல் முதலியன, திருநுதல் நல்லவர் நாணு - பொதுமகளிர் நாணோடொக்கும், என்று பொருள் கூறுவாரு முண்டு. அவர்க்கு (பொதுமகளிர்க்கு) நாண் கேடுண்டாக்கும் என்று விலக்கப்பட்டிருத்தலானும் (திருநுதனல்லவா என்பதன்றி) அவர் (பொதுமகளிர்க் குரிய) பெயரால் கூறப்படாமையானும் அவ்வுரை யுரையல்ல வென்க. பொதுமகளிர் நாணுடையவரா யிருந்தால் அஃதவர்க்குக் கேடுண்டாக்கு மென்பது "பெற்றமையு மென்னும் பெரியோரும் பெற்றபொருள், மற்றமையு மென் றிகழ்வேது - முற்றியநன், மானமில்லா வில்லாளு மான முறும் வேசியரும், ஈன முறுவா ரிவர்" என்று நீதிவெண்பா கூறுவதனால நன்கு விளங்கும்.

வரென்பது புகழச்சிக் குறிப்பு. காரணத்தின்பன்மைப்பற்றிப் 'பிற' என்றார். இதனுல் காரணினது இலக்கணம் சொல்லப்பட்டது

(க - ர) நன்மக்களுக்கு நாணுவது இழிந்தகருமங் காரணமாக நாணுதலேயாம் என்பது. (க)

௨. ஊணுடை யெச்ச முயிர்க்கெல்லாம் வேறல்ல
நாணுடைமை மாந்தர் சிறப்பு.

பரி.—(இ - ள்.) ஊணும் உடையும் அவை யொழிந்தனவும் மக்களுயிர்க் கெல்லாம் பொது; நன்மக்கட்குச் சிறப்பாவது நாணுடைமையே, 1 அவையல்ல, எ - று.

ஒழிந்தன - உறக்கமும் அச்சமுங் காமமும். சிறப்பு - அவ்வுயிர்களின் வேறுபாடு 2 அச்சமென்று பாடமோதுவாருமுளர்.

தெளி.—(இ - ள்,) ஊண் - உண்டியும், உடை - ஆடையும், எச்சம -(அவை) ஒழிந்தவைகளும், உயிர்க்கெல்லாம் -(மக்க)ளுயிர்க்கெல்லாம், வேறல்ல- பொதுவாம், மாந்தர் சிறப்பு - நன்மக்களுக்குச் சிறப்பாவது, நாணுடைமை - நாணமுடைமையே, (அவையல்ல) எ - று.

ஒழிந்தவை - உறக்கமும் அச்சமும் காமமும். சிறப்பு - அவ்வுயிர்களின் வேறுபாடு

(க - து.) மற்றையுயிர்களிலும் மாந்தர்க்குச் சிறப்பாவது நாணுடைமையாம் என்பது. (௨)

௩. ஊனைக் குறித்த வுயிரெல்லா
நன்மை குறித்தது சால்பு.

பரி.—(இ - ள.) எல்லாவுயிர்களும் உடம்பினைத் தமக்கு நிலைக்களனாகக் கொண்டு அதனைவிடா, அதுபோலச் சால்பு நாணென்னு நன்மைக்குணத்தைத் தனக்கு நிலைக்களனாகக் கொண்டு அதனை விடாது, எ - று

3 உடம்பென்பது சாதி யொருமை. 4 நன்மை - ஆகுபெயர். உயிர் உடம்போடு கூடியல்லது பயனெய்தாதவாறு போலச் சால்பு நாணோடு கூடியல்லது பயனெய்தா தென்பதாம். 5 ஊனைக் குறித்தவென்று பாடமோதுவாருமுளர்.

---

1 அவை - ஊண் உடை முதலானவை
2 எச்சம் என்பதனை அச்சமென்று பாடஞ் சொல்லுவாருமுண்டு.
3 உடம்பு என்பது ஈறுதோன்றாத சாதி யொருமைப் பெயர்
4 நன்மையென்னும் பண்புப் பெயர் அதனையுடைய குணத்திற் காதலால் பண்பாகுபெயர். (இதற்குக் குணம் பொருளாகக் கருதப்பட்டது.)
5 ஊனைக் குறித்த என்பதனை ஊனைக் குறித்த என்று பாடங் கூறுவாருமுண்டு. ஊண் - உண்டி.

தெளி.—(இ - ள்.) உயிரெல்லாம் - எல்லாவுயிர்களும், ஊனை - உடம்பினை, குறித்த - தமக்கு இருப்பிடமாகக் கொண்டு அதனை விடாவாம், (அதுபோல) சால்பு - (நற்குணங்களின்) நிறைவானது, நாணென்னும் நன்மை - நாணென்கிற நற்குணத்தை, குறித்தது - தனக்கு இருப்பிடமாகக்கொண்டு அதனை விடாது, எ - று.

உடம்பென்பது சாதியொருமைப் பெயர். நன்மை - பண்பாகுபெயர். உயிர் உடம்போடு கூடியல்லது பயனடையாதது போன்று சால்பு நாணோடு கூடியல்லது பயனடையாதென்பதாம்.

(க - து.) சால்பு நிலைக்குமிடம் நாணும் என்பது. (௩)

௪. அணியன்றோ நாணுடைமை சான்றோர்க் கஃதின்றேற்
பிணியன்றோ பீடு நடை.

பரி.—(இ - ள்.) சான்றோர்க்கு நாணுடைமை யாபரணமாம், அவ்வாபரணமிலையாயின் அவர் 1 பெருமிதத்தையுடைய நடை கண்டார்க்குப் பிணியாம், எ - று.

அழகு செய்தலின் 'அணி' என்றும், பொறுத்தற் கருமையிற் 'பிணி' என்றுங் கூறினர். 2 ஓகாரவிடைச் சொற்கள் எதிர்மறைக்கண் வந்தன. இவை மூன்றுபாட்டானும் அதன் சிறப்புக் கூறப்பட்டது.

தெளி.—(இ - ள்.) சான்றோர்க்கு - நற்குணங்களால் நிறைந்தவர்க்கு, நாணுடைமை - நாணமுடைமை, அணியன்றோ - ஆபரணமாம், அஃதின்றேல் - அவ்வாபரணம் இல்லையாயின், பீடுநடை - (அவர்) பெருமித நடை, பிணியன்றோ - (கண்டவர்க்கு) நோயாம், எ - று.

அழகு செய்தலால் 'அணி' என்றும், சகித்தற் கருமையால் 'பிணி' என்றும், சொல்லினர். ஓகாரவிடைச்சொற்கள் எதிர்மறைப்பொருளில் வந்தன. இவை மூன்று பாட்டாலும் நாணின் சிறப்புச் சொல்லப்பட்டது.

(க - து.) நாணுடைமை என்னும் ஆபரணமில்லார்க்குப் பெருமித நடையில்லை என்பது. (௪)

---

1 பெருமிதம் - மேம்பாடு.

2 அன்று அன்று என்னும் எதிர்மறைக் குறிப்புவினைமுற்றுக்களிரண்டும் எதிர்மறைப் பொருளில் வந்த ஓகாரவிடைச்சொற்களுடன் புணர்ந்து ஆம், ஆம் என்னும் பொருளை யுணர்த்தி நின்றன. இரண்டெதிர்மறைச்சொற்கள் தம்முட் புணருமிடத்து உடம்பாட்டுப் பொருளை யுணர்த்துமென்பது நியமம்.

௫ பிறர்பழியுந் தம்பழியு நாணுவார் நாணுக்
குறைபதி யென்னு முலகு.

பரி.—(இ - ள்.) பிறர்க்கு வரும் பழியையுந் தமக்கு வரும் பழியையும் ஒப்பமதித்து நாணுவாரை உலகத்தார் நாணுக் குறைவிடமென்று சொல்லுவர், எ - று.

ஒப்பமதித்தல் - அதுவுந் தமக்கு வந்ததாகவே கருதுதல். அக்கருத்துடையார் பெரியராகலின், அவரை உயர்ந்தோர் யாவரும் புகழ்வரென்பதாம். இதனால் 1 அதனை யுடையாரது சிறப்புக் கூறப்பட்டது.

தெளி.—(இ - ள்.) பிறர் பழியும் - பிறர்க்கு வரும் பழியையும், தம்பழியும் - தமக்குவரும் பழியையும், நாணுவார் - (சமமாக மதித்து) நாணுவாரை, உலகு - உலகத்தார், நாணுக்கு-நாணத்திற்கு, உறைபதியென்னும் - இருப்பிடமென்று சொல்லுவர், எ - று.

சமமாகமதித்தல் - பிறர்க்கு வரும் பழியையும் தமக்கு வந்ததாகவே நினைத்தல். அக்கருத்துடையவர் பெரியராகலால், அவரை உயர்ந்தோர் யாவரும் புகழ்வரென்பதாம். இதனால் அதனை யுடையவரது சிறப்புச் சொல்லப்பட்டது.

(க - து.) பிறர்க்குவரும் பழியையுந் தமக்குவரும் பழியாகமதித்து நாணுவாரே நாணத்திற் கிருப்பிடமாவரென்பது. (௫)

௬. நாண்வேலி கொள்ளாது மன்னோ வியன்ஞாலம்
பேணலர் மேலா யவர்.

பரி.—(இ - ள்.) உயர்ந்தவர், தமக்கேமமாக நாணினைக் கொள்வதன்றி, அகன்றஞாலத்தைக் கொள்ள விரும்பார், எ-று.

பழிபாவங்கள் புகுதாமற் காத்தலின் 'வேலி' என்றார். 2 நாணும் ஞாலமுந் தம்முண்மாறுபவழி அந்நாணினைக் கொள்வதல்லது அவைபுகுதுநெறியாய ஞாலத்தினைக்கொள்ள விரும்பா ரென்பதாம். மன்னும் ஓவும் அசை. 3 நாணாகிய வேலியைப் பெற்றல்லது ஞாலம்பெற விரும்பாரென் றுரைப்பாருமுளர்.

---

1 அதனை - நாணினை.

2 நாணும் ஞாலமுந் தம்முண் மாறுபவழி - நாணம் ஞாலம் என்னுமிரண்டனுள் ஏதாவதொன்றனைக்கொள்ள நேர்ந்தவிடத்து.

3 மேலாயவர்-நாண்வேலி - நாணாகிய வேலியை, கொள்ளாது - பெற்றாலல்லாமல் வியன்ஞாலம் பேணலர் - 'பெரிய' உலகத்தைப் பெறவிரும்பார், என்றுரை கூறுவாரு முண்டு.

தேவி.—(இ - ள்) மேலாயவர் - உயர்ந்தவர், வேலி - (தமக்குக்) காப்பாக, நாண் - நாணத்தினை, கொள்ளாது - கொள்வதல்லாமல், வியன்ஞாலம் - பரப்பான பூமியை, பேணலர் - கொள்ளவிரும்பார், எ - று.

பழிபாவங்கள் அடையாமற்காத்தலால் 'வேலி' என்றார். நாணமும் பூமியும் தமமுன் மாறுபட்டவிடத்து அக்காணத்தைக்கொள்வதல்லது அப்பழி பாவங்கள் புகும் வழியாகிய பூமியைக் கொள்ளவிரும்பாரென்பதாம். மன்னும் ஓவும்-அசைகள்.

(க - து) உயர்ந்தோர் நாணத்தைவிடுதலால் உலகத்தைப்பெறுவதாயிருந்தாலும் அது செய்யார் என்பது. (௬)

௭. நாணா லுயிரைத் துறப்ப ருயிர்ப்பொருட்டா
லாணடுறவார் நாணாள பவர்.

பரி.—(இ - ள்.) நாணினது சிறப்பறிந்து அதனை விடாதொழுகுவார் 1 அந்நாணு முயிருந் தம்முண் மாறாயவழி நாண்சிதையாமறபொருட்டு உயிரை நீப்பர், உயிர் சிதையாமற்பொருட்டு நாணினை நீக்கார், எ - று.

உயிரினும் நாண் சிறந்ததென்பதாம். இவை யிரண்டுபாட்டானும் 2 அவர் செயல் கூறப்பட்டது.

தேவி.—(இ - ள்.) நாணாள்பவர் (நாணினது சிறப்பறிந்து) அந்நாணத்தினை விடாதுகடைப்பவர், (அந்நாணும் உயிருந்தம்முன்மாறுபட்டவிடத்து) நாணால் - நாண் சிதையாமற் பொருட்டு, உயிர் - உயிரை, துறப்பர் - நீக்குவார், உயிர்ப்பொருட்டால் - உயிர்சிதையாமற்பொருட்டு, நாண் - நாணினை, துறவார் - நீக்கார், எ - று.

நாண் - உயிரினுஞ் சிறந்ததென்பதாம், இவை இரண்டுபாட்டாலும் அவர் செயல் சொல்லப்பட்டது

(க - து.) நாணின் சிறப்பை யறிந்தவர் அது கெடும்படிவரின் உயிரைவிட்டேனும் அக்காணத்தைக் காப்பரென்பது. (௭)

௮. பிறர்நாணத் தக்கது தானுணா னாயி
னறநாணத் தக்க துடைத்து.

பரி.—(இ - ள்.) கேட்டாருங் கண்டாரு நாணத்தக்க பழியை ஒருவன் நாணாது செய்யுமாயின், அக்நாணமை அவனை அறம் விட்டு நீங்கத்தக்க குற்றத்தினை யுடைத்து, எ - று.

---

1 நாணும் உயிரும் தம்முண் மாறுபவழி - நாண் உயிரென்னுமிரண்டனுள் ஒன்றாவதொன்றை நீக்க நேர்ந்தவிடத்து.
2 அவர் - நாணமுடையார்.

தானெனச் செய்வானைப் பிரிக்கின்றாராகலின் 'பிறர்' என்றார். நாணுடைமையிலாதானை அறஞ்சாராதெனபதாம்.

**தெளி** —(இ - ள்) பிறர் - கேட்டவரும் கண்டவரும், நாணத்தக்கது - நாணத்தக்கபழியை, தானாணாஅன் - (ஒருவன்) தானாணாது செய்வானாயின், (அக்காரணமை) அறம் - நாணத்தக்கது- (அவனை) விட்டு நீங்கத்தக்க குற்றத்தினை, உடைத்து - உடையதாம், எ - று

தான என்றுடமியைச் செயவானைப்பிரிக்கின்றாராதலால் 'பிறர்' என்றார். நாணுடைத்தமிலாதவனை அறம் சாராதெனபதாம்.

(க - து) நாணமில்லாளிடத்து அறமின் றென்பது. (௮)

௬௯. குலஞ்சுடுங் கொள்கை பிழைப்பி னலஞ்சுடு
நாணின்மை நின்றக் கடை.

**பரி** —(இ - ள்) ஒருவனுக் கொழுக்கம் பிழைக்குமாயின் அப்பிழைப்பு அவன் குடிப்பிறப் பொன்றனையுங் கெடுக்கும்; ஒருவன்மாட்டு நாணின்மை நின்றவழி அந்நிலை அவனலம் யாவற்றையுங் கெடுக்கும், எ - று.

நிற்றல - ஒருபொழுதும் நீங்காமை. நலம் சாதியொருமை யாகலிற் பிறப்பு, கல்வி, குணம், செயல், இனமென்றிவற்றான் வந்தனவெல்லாங் கொள்ளப்படும் ஒழுகக அழிவினும் நாணழிவு இறப்பத் தீ தென்பதாம்.

**தெளி.**—(இ - ள்) கொள்கை - ஒழுக்கம், பிழைப்பின் - (ஒருவனுக்கு வழுவுமாயின், (அவ்வழுவு) குலம் - (அவன்) குடிப்பிறப்பொன்றையும் சுடும் - கெடுக்கும், நாணின்மை - நாணில்லாமை, நின்றக்கடை - (ஒருவனிடத்து) நிலைபெற்று, (அந்நிலை) நலம் - (அவனது) நன்மைகளையெல்லாம், சுடும் - கெடுக்கும், எ-று,

நிற்றல்-ஒருகாலத்தும நீங்காமை நலம் சாதியொருமைப் பெயராதலால் பிறப்பு, கல்வி, குணம், செயல், இனம் என்றிவைகளால் வந்த நன்மைகளெல்லாங் கொள்ளப்படும். ஒழுகக அழிவைக் காட்டிலும் நாணழிவு மிகத் தீ தென்பதாம்.

(க - து.) நாணில்லாமை ஒருவனிடத்துண்டாகுமாயின் அஃது அவனது நன்மைகளை எல்லாவற்றையும் முதலறக் கெடுக்கும் என்பது. (௯)

௨௰. நாணகத் தில்லா ரியக்க மரப்பாவை
நாணா லுயிர்மருட்டி யற்று.

**பரி.**—(இ - ள்.) தம்மனத்தின்கண் [1]நாணில்லாத மக்கள் உயிருடையார்

---

1 நாண் - வெட்கம்.

போன்றியங்குகின்ற வியக்கம் மரத்தாற் செய்த 1 பாவை 2 இயந்திரக் கயிற்றினுறுப் தன்னியக்கத்தால உயிருடைத்தாக மயக்கினாற்போலும், எ-று.

3 கருவியே கருத்தாவாயிற்று. நாணில்லாத மக்களியக்கம் 4 நாணுடைய பாவையியக்கம் போல்வ தல்லது உயிரியக்க மன்றென்பதாம். இவை மூன்றுபாட்டானும் நாணில்லார திழிவு கூறப்பட்டது.

**தேளி.**—(இ-ள்) அகத்து-(தம) மனத்தில், நாண்-நாணத்தை, இடமார- இல்லாதமக்கள், இயக்கம்-(உயிருடையவர்போன்று சஞ்சரிக்கின்ற) சஞ்சரிப்பு, மரப்பாவை-மரத்தாற்செய்தபாவை, நாணால-எந்திரக்கயிற்றினால (ஆகிய தனது சஞ்சரிப்பால்), உயிர்-உயிருடையதாக, மருட்டியற்று-மயக்கினாற்போலும், எ-று

நாணால என்னும் கருவியே கருத்தாவாக நின்றது. நாணில்லாத மக்களசைவு நாணுடையபாவையினசைவுபோலவ தல்லது உயிரசைவல்ல வென்பதாம். இவை மூன்றுபாட்டானும நாணில்லாதவரது இழிவு சொல்லப்பட்டது.

(க-து.) நாணமில்லாதார் நடைப்பிணமாவர் என்பது. (௰)

## ௱௩-ம் அதி.—குடிசெயல்வகை.

பரி—அஃதாவது ஒருவன் றான்பிறந்த குடியை உயரச்செய்தலின் திறம் இது தாழ்வினை கணுநதுடையார்க் குளதாவதாகலின் நாணுடைமையின்பின் வைக்கப்பட்டது.

தேளி—அஃதாவது ஒருவன் தான்பிறந்த குடியை உயரச்செய்தலின் விதம் இது தாழ்வினிடத்து நாணுடையவர்க்கு உண்டாவதாகலால நாணுடைமையின்பின் வைக்கப்பட்டது.

---

1 பாவை-பிரதிமை (பொம்மை).

2 இயந்திரக்கயிறு-சூத்திரக்கயிறு.

3 நாணால் என்னும் துணைக்கருவியே கருத்தா (செய்பவன்) வாய்நின்றது. [சேனாவரையர் தொல்காப்பிய மூன்றாம்வேற்றுமைச் சூத்திரத்துரையில் "வினை முதலாவது (கருத்தாவாவது) கருவிமுதலாயின காரணங்களைத் தொழிற்படுத்துவது. கருவியாவது வினைமுதற்றொழிற் பயனைச்செயப்படு பொருட்கணுய்ப்பது" என்றனர். "செயப்படுபொருளைச் செய்ததுபோல" என்னுஞ் சூத்திரத்தின் விசேடவுரையில் நச்சினார்க்கினியார் "இனி ஒன்றெனமுடித்தலான் இவ்வாளெறியும் எனக்கருவியைத்தானே செயவதாகக் கூறுங்கருவிக் கருத்தாவும், கொள்க" என்று கூறுவதிங்கறியத்தக்கதாம்.

4 நாணுடைய: சூத்திரக்கயிறுடைய.

க. கருமஞ் செயவொருவன் கைதூவே னென்னும்
பெருமையிற் பீடுடைய தில்

பரி.—(இ - ள்.) தன்குடி செய்தற்பொருட்டுத் தொடங்கிய 1 கரும முடியாமையின் எண்ணிய கருமஞ் செய்தற்கியான் 2 கையொழியே னென்னும் ஆள்வினைப் பெருமைபோல ஒருவனுக்கு மேம்பாடுடைய பெருமை பிறி தில், எ - று.

குடிசெய்தற்கென்பது 3 அதிகாரத்தான் வந்தது. பலவகைத்தாய கருமச்செயலாற் செல்வமும் புகழுமெய்திக் குடியுயருமாகலின் 'பீடுடையதில்' என்றார். 4 குடிசெய்தற் கருமமே கூறுதலால், தன்கருமஞ் செயவென்றும் பிறர் கருமஞ் செயவென்றும் உரைப்பாரு முளர், தன் கருமமும் அதுவேயாகலானும், பிறரேவல் செய்தல் தலைமையன்மையானும், அவையுரை யன்மையறிக.

தேவி.—(இ - ள்) (தன்குடிசெய்தற்பொருட்டுத் தொடங்கியகருமமுடியாமையால்)-கருமஞ்செய-(எண்ணிய) கருமஞ்செய்தற்கு, கைதூவேனென்னும்-(யான்) கையொழியேனென்கிற, பெருமையின்-முயற்சிப்பெருமை போல், ஒருவன்-ஒருவனுக்கு, பீடுடையது-மேம்பாடுடைய பெருமை, இல-மற்றொன்றில்லை, எ - று

குடிசெய்தற்கென்பது அதிகாரத்தால் வந்தது. பலவகைப்பட்ட கருமச்செயலினாலே செல்வமும் புகழுமடைந்து குடி உயருமாகலால 'பீடுடைய தில்' என்றார்.

(க - து.) தன்குடி யுயர்தற பொருட்டு மேற்கொண்ட கருமத்தை முடிப்பவனுக்கு மேம்பாடுடைய பெருமை யுண்டாகும் என்பது. (க)

உ. ஆள்வினைய மான்ற வறிவு மெனவிரண்டி
னீள்வினையா னீளுங் குடி

1 கருமம் - காரியம். 2 கையொழியேன் - விடேன்.

3 அதிகாரத்தான் - குடிசெயல்வகை யென்னுமதிகாரத்தினால்

4 கருமஞ்செய என்பதற்குக் குடிசெய்தற்கருமமே கூறுதலால், தன்கருமஞ் செய்ய என்றும் பிறர் கருமஞ்செய்ய என்றும் (இருவகையாகப்பொருள்) கூறுவாரு முண்டு. தன் கருமமும் அதுவே (குடிசெய்தற்கருமமே) யாதலானும், [இது குடிசெய்தற்கருமமே கூறுதலால், தன் கருமஞ்செய்ய என்று கூறிய முதலுரையின் மறுப்பு. தன் கருமமும் குடிசெய்தற்கருமமாயே யிருத்தலறியாது குடிசெய்தற்கருமம் வேறு தன் கருமம் வேறு என்று பிரித்தது வழுவா மென்பது கருத்து.] பிறரது ஏவலைச் செய்தல் தலைமையல்லவாதலானும் [இது பிறர் கருமஞ்செய்ய என்று கூறிய இரண்டாமுரையின் மறுப்பு. சுதந்தரமாக விருத்தற்குரிய தன்மையைக் கருதாது பிறரது ஏவலைச்செய்திருத்தல் உத்தமமான தன்றென்பது கருத்து] அவை யுரையல்ல வென்றறிக.

பரி—(இ - ள்) முயற்சியும் நிறைந்த வறிவுமென்று சொல்லப்பட்ட இரண்டினையுமுடைய இடையறாத கருமச்செயலால் ஒருவன் குடியுயரும், எ - று.

நிறைதல் - 1 இயற்கையறிவு 2 செயற்கையறிவோடுகூடி நிரம்புதல் ஆள்வினை - மடிபுகுதாமற் பொருட்டு ஆன்றவறிவு - உயர்தற்கேற்ற செயல்களும் அவைமுடிதற்குத் திறமும் பிழையாம லெண்ணுதற்பொருட்டு. இவை யிரண்டுபோட்டாலும் 3 அச்செயற்குக் காரணங் கூறப்பட்டது

தெளி —(இ - ள்) ஆள்வினையும- முயற்சியும், ஆன்றவறிவும்-நிறைந்தவறிவும், என விரண்டின் -என்று சொல்லப்பட்ட இரண்டினையுமுடைய, நீள்வினையால்- ஓய்வில்லாத கருமச்செயலால், குடி- (ஒருவனது) குடி, நீளும் - உயரும், எ - து

நிறைதல - இயற்கையறிவு செயற்கையறிவோடுகூடி நிரம்புதல். ஆள்வினை - சோம்பல் அடையாமற்பொருட்டு ஆன்றவறிவு - உயர்தற்கு ஏற்றசெயல்களும் அவை முடிக்குமவிதமும பிழைபடாமல எண்ணுதறபொருட்டு இவை யிரண்டுபோட்டாலும அச்செயறகுககாரணம் சொல்லப்பட்டது.

(க - து) ஒருவனது குடி அவனது முயற்சியும் நிறைந்த அறிவுமென்று சொல்லப்பட்ட இரண்டோடுகூடிய இடையறாத தொழிலால் உயரும் எனபது (௨)

௩. குடிசெய்வ லென்னு மொருவற்குத் தெய்வ
மடிதற்றுத் தானமுந் துறும்.

பரி.—(இ - ள்.) என் குடியினை யுயரச்செய்யக்கடவே னென்று கொண்டு அதற்கேற்ற கருமங்களின் முயலும் ஒருவனுக்குத் 4 தெய்வம் ஆடையைத் தற்றுக்கொண்டு தான முந்துறறு நிற்கும், எ - று.

முயற்சியை 5 அதன் காரணத்தாற் கூறினார் தற்றுதல்- இறுகவுடுத்தல். 6 முன்னடப்பாரசெயல நியதிமே லேற்றப்பட்டது.

---

1 இயறகையறிவு - சன்மார்க்கரததிற் செய்த நல்வினையாலுண்டாய மாறுபடுதலில்லாத புத்தி.
2 செயற்கையறிவு - கலவிகேள்விகளினாலாய புத்தி.
3 அசசெயறகு - தான் பிறந்த குடியை யுயரச்செய்தற்கு.
4 தெயவம - ஊழ்
5 அதன காரணம - முயற்சியின காரணம் (தெய்வம்). முயற்சியென்று கூறாது தெய்வம் எனறு கூறினதினால்'முயற்சியை அதன் காரணத்தாற் கூறினார்' எனறு கூறபபட்டது. தெய்வத்தின் காரியமாயமுயற்சியைத் தெய்வமென்று கூறினமையின இது காரணம் காரியமாய வுபசாரவழககு.
6 எமது குடியினை உயரச்செய்வேமென்று அதற்கேற்ற காரியஙகளில முன்னடபபவரது செயல் (அவரது செயலுககுக காரணமான) நியதி (தெய்வத்தின்) மேலேற்றிக் கூறப்பட்டது. இஃது ஒனறினசெயல மறறொன்றின்மேலாய வுபசாரவழககு.

தெளி.—(இ-ள்) குடிசெய்வலென்னும்-(என்)குடியினை உயரச்செய்ய க்கடவேனென்றுகொண்டு (அதற்கு ஏற்றகருமங்களின்) முயலுகிற, ஒருவற்கு-ஒருவனுக்கு, தெய்வம்-தெய்வமானது, மடி- ஆடையை, தற்று-இறுகவுடுத்திக்கொண்டு, தான் முந்துறும் - முன்னே யுறுதுணைசெய்யும், எ-று.

முயற்சியை அதனது காரணத்தினாற் சொல்லினர் தற்றுதல் - இறுக (நன்றாக)வுடுத்தல். இருதுக் கட்டலாம். முன்னடப்பார்செயல வூழ்மேல் ஏற்றப்பட்டது.

(க-து) தன்குடியுயர்தற்பொருட்டு அதற்கேற்றகருமங்களில் முயலுபவனுக்கு அம்முயற்சியே முன்னின்று அக்கருமங்களைமுடிவுறச்செய்யும் என்பது. (௩)

௪. சூழாமற் றானே முடிவெய்துந் தங்குடியைத்
தாழா துஞற்று பவர்க்கு.

பரி.—(இ-ள்.) தங்குடிக்காம் வினையை விரைந்து முயலவார்க்கு அவ்வினை முடிக்குந்திறம் அவர் சூழவேண்டாமற் றானே முடிவெய்தும், எ-று.

குடி—ஆகுபெயர் தெய்வ முந்துறுதலால் பயன் கூறியவாறு இவையிரண்டுபாட்டானும்[1] அதற்குத் தெய்வந் துணையாதல் கூறப்பட்டது

தெளி—(இ-ள்) தங்குடியை-தமதுகுடிக்காந தொழிலை,தாழாது விரைந்து, உஞற்றுபவர்க்கு - முயல்பவர்க்கு, (அத்தொழில் முடிக்குமவிதம்) சூழாமல்-அவர் ஆலோசிக்க வேண்டாமல், தானேமுடிவெய்தும் - தானே முடிவுபெறும், எ-று.

குடியென்பது அது விருத்தியாதற்குக் கருவியான தொழிலுக்கு ஆதலால் கருவி ஆகுபெயர் ஊழ்முந்துறுதலாற பயன் சொலலியபடி. இவை இரண்டுபாட்டாலும் அதற்கு ஊழ்துணையாதல் சொல்லப்பட்டது.

(க-து.) தன்குடியுயர்தற்காந்தொழிலை விரைந்து செய்பவருக்கு அத்தொழில் யாதொருதடையுமின்றி முடிவுபெறும் என்பது. (௪)

௫. குற்ற மிலனாய்க் குடிசெய்து வாழ்வானைச்
சுற்றமாச் சுற்று முலகு.

பரி.—(இ-ள்.) குற்றமாயின செய்யாது தன்குடியை யுயரச்செய் தொழுகுவானை அவனுக்குச் சுற்றமாக வேண்டித் தாமே சென்று சூழ்வர் உலகத்தார், எ-று.

---

1 அதற்கு - குடிசெயற்கு.

குறைபாயின—அறநீதிகட்கு மாறுதலையாய செயல்கள் தாமும் பயனெய்த நேருக்கி டாவருஞ்சென்று சார்வ ரென்பதாம்.

தெளி.—(இ-ள்.) குற்றமிலனாய - குற்றமானவை செய்யாமல், குடி செய்து - (தன) குடியை உயரச்செய்து, வாழ்வானை - நடப்பவனை, சுற்றமா - (அவனுக்குச) சுற்றமாகவேண்டி, உலகு - உலகத்தார், சுற்றும் - (தாமேசென்று) சூழவர், எ-று.

குற்றமாயின - அறநீதிகளுக்கு விரோதமான செயலகள், தாமும்பயனடைதனேக்கி யாவரும் சென்று சாாவரென்பதாம.

(க-து) தீங்கானகாரியங்களைச் செயயாமல் தன்குடியை யுயரச் செயது நடப்பவனை யுலகத்தார் சுற்றமாகவேணடிச் சூழாநிற்பர் என் பது.

(௫)

௬. நல்லாண்மை யென்ப தொருவற்குத் தான்பிறந்த
இல்லாண்மை யாக்கிக் கொளல்.

பரி—(இ-ள்) ஒருவனுக்கு நல்ல ஆண்மையென்று உயர்த்துச்சொல்லபபடுவது தான் பிறநத குடியினை யாளுநதன்மையைத் தனக்குளதாக்கிகோடல, எ-று.

1 போர்த்தொழிலி னீக்குதற்கு 'நலலாண்மை' என விசேடிததார். குடியினையாளுநதனமை—குடியிலுள்ளாரை யுயரச்செயது தனவழிப்படுததல். 2 அதனைச செய்துகோடல் நலலாண்மையாமாறு வருகின்ற பாட்டாற பெறபபடும்.

தெளி—(இ-ள்.) ஒருவற்கு - ஒருவனுக்கு, நல்லாண்மையென்பது-நல்லஆண்மை யென்று உயர்த்திச் சொலலப்படுவது, தான் பிறந்த-இல் லாண்மை - குடியினை ஆளுந்தன்மையை, ஆக்கிக்கொளல் - (தனக்கு) உளதாகிக் கொள்ளுதல், எ-று.

போர்த்தொழிலி னீக்குதற்கு 'நல்லாண்மை' என விசேடித்தார். குடியையாளுந்தன்மை - குடியிலுள்ளவரை உயரசசெய்து தன்வழிப்படுத்தல். அதனைச் செய்துகொள்ளுதல் நல்லாண்மையாம்விதம் வருகிற பாட்டாற் பெறப்படும்.

(க-து.) ஒருவன்தனது குடியையுயர்த்திக்கொண்டால் அஃதவனுக்குச் சிறந்த ஆண்மையாம் என்பது.

(௬)

1 ஆண்மை யென்று கூறாது நல் என்னும் விசேடத் தந்து நல்லாண்மை யென்று கூறியது போர்த்தொழிலிற் காட்டும் ஆண்மையை நீக்குதற்காமென்க. [விசேடித்தல் - பிரித்துக் காட்டல்.]

2 அதனை - தன்வழிப்படுத்தலை.

எ. அமரகத்து வன்கண்ணர் போலத் தமரகத்து
மாற்றுவார் மேற்றே பொறை

பரி—(இ - ள்.) 1 களத்தின்கட் சென்றார் பலராயினும் போர்தாங்குதல் வன்கண்ணர் மேலதானாற்போல, குடியின்கட் பிறந்தார் பலராயினும் 2 அதன்பாரம் பொறுத்தல் 3 அதுவல்லார் மேலதாம், எ - று.

4 பொருட்கொக்க வேண்டுஞ்சொற்கள் உவமைக்கண் வருவிக்கப்பட்டன. தன்குடிதிக்கப்படுவோர் 5 ஆவரே யென்பதாம் இவை மூன்றுபாட்டானும் 6 அது செய்வா ரெய்துஞ் சிறப்புக் கூறப்பட்டது

தெளி—(இ - ள்.) அமரகத்து -களத்திலிடத்து, (சென்றவர் பலராயினும் போர் தாங்குதல்) வன்கண்ணர்போல - சூரர் (மேலானாற) போல, தமரகத்தும் - குடியினிடத்து (பிறந்தவர் பலராயினும்), பொறை - (அதனபாரம்) பொறுத்தல், ஆற்றுவார் மேற்றே - (அது) வல்லவர் மேலதேயாம் எ- று.

உவமேயத்திற் கொக்குமாறு வேணடுஞ் சொற்கள் உவமானத்தில வருவிக்கப்பட்டன. தன்குடிதிக்கப்படுவோர் ஆவரேயென்பதாம. இவை மூனறுபாட்டாலும் அவை செயவாரடையும் சிறப்புச் சொலலப்பட்டது.

(க - து) குடியினபாரத்தை (உரிமையை) பபொறுத்தல அக்குடியிற்பிறந்தார் பலரில் ஒருவரிடததேயாம் எனபது. (எ)

அ. குடிசெய்வார்க் கில்லைப் பருவ மடிசெய்து
மானங் கருதக் கெடும்.

பரி.—(இ - ள்) தங்குடியினை யுயரச்செய்வார் அச்செயலையே நோக்காது காலத்தைநோக்கி மடியினைச் செய்துகொண்டு மானத்தையுங் கருதுவராயிற் குடி கெடும், ஆகலான அவர்க்குக் காலநியதி யில்லை, எ - று.

---

1 களத்தின்கண் - போர்செய்யுமிடத்தில்.

2 அதன் - குடியினது. 3 அது - பாரம் பொறுத்தல்.

4 தமரகத்து மாற்றுவார் மேற்றே பொறை, என்னும் பொருட்கு (உவமேயத்திற்கு) ஒக்க (ஒத்திருக்கும்படி) (சென்றார் பலராயினும் போர்தாங்குதல் மேலதானால என்னும்) வேண்டுஞ் சொறகள், அமரகத்து வன்கண்ணர் போல என்னும் உவமைக்கண (உவமானத்தில) வருவிக்கப்பட்டன. உவமேயத்தில் பிறந்தார் பலராயினும் என்றுவருவித்தற் கேற்க உவமானத்தில் சென்றார் பலராயினும் என்பதும் அதன்பாரம்பொறுத்தல் என்பதற்கேற்க மேலதானால் என்பதும் வருவிக்கப்பட்டன வென்க.

5 அவரே - குடியின்பாரம் பொறுப்பாரே.

6 அதுசெய்வார் - தாம் பிறந்த குடியை யுயரச்செய்வார்

காலத்தை நோக்கி மடிசெய்தல—வெயில் மழை பனியென்பன வுடை ைநோக்கிப பினனாச் செய்துமென் றொழிந்திருத்தல். மானங் கருதுதல்-இக்குடிப்பிறந்துள்ளீர் யாவரும இன்பமுற இக்காலத்துத் துன்பமுறுவேன் யா னென் றுட்கோடல. மேல 1 'இகலவெலலும வேநதர்க்கு வேணடும பொழுது' என்றதுடகொணடு 2 இவாக்கும வேணடுமோ வென்று கருதினும 3 அது கருதறகவென்று மறுத்தவாறு.

தேனி.—(இ - ள்.) மடிசெய்து - (தமது குடியினையுயரச் செய்வார், அசசெயலையே நோக்காது காலத்தை நோக்கிச) சோம்பல செய்துகொணடு, மானம - மானத்தையும், கருத - நினைப்பாராகில, கெடும - (குடி) கெடும, (ஆத லால்) குடிசெயவார்க்கு-குடியினை யுயரசசெய் யுமவர்க்கு, பருவம்- காலநியதி, இல்லை—எ - று.

காலத்தை நோக்கிச்சோம்பல் செய்தல் - வெயில் மழை பனியென்பன வுடைமை நோக்கிப பினனே செயவேமென்று ஒழிந்திருத்தல். மானங்கருதல்-இக்குடிபிறந்துள்ளார் யாவரும் இன்பமுற இக்காலத்துத் துன்பமுறுவோனயா னென் றுட்கொள்ளுதல் முன் 'இகல்வெல்லும வேந்தர்க்கு வேண்டும்பொழுது' என்றதனைப்பற்றிக்கொணடு இவர்க்கும வேண்டுமோ வென்று நினைக்கினும அது நினைக்கலாகாதென மறுத்தபடி.

(க - து.) தங்குடியினையுயரசசெய்வார் சோம்பலையும் மானத்தையும மேற்கொள்ளாமல் மேற்கொண்டகருமத்தை விரைந்து முடிப்பர் என்பது. (௮)

௯. இடும்பைக்கே கொள்கலங் கொல்லோ குடும்பத்தைக்
குற்ற மறைப்பா னுடம்பு.

பரி.—(இ - ள்) மூவகைத்துன்பமு முறற்பாலதாய தன்குடியை அவை யுறாமற்காக்க முயல்வானது உடம்பு அம்முயற்சித் துன்பத்திற்கே கொள் கலமாமத்துணையோ, 4 அஃதொழிந்து இன்பத்திற்காத லில்லையோ? எ - று.

---

1 காலமறிதல், ௩ இதன்பொருள் பகைவரது வலிமையை வெல்லநினைக்கும் அரசர்க்குஅதற் கேற்றகாலம் வேண்டும் என்பது

2 இவர்க்கும் வேணடுமோ-குடிசெயவார்க்கும் (காலத்தைநோக்கி)மடி (சோம்பிக்கிடத்தல்) செய்தல வேண்டுமோ என்றெண்ணினாலும் அது (மானத்தைக்) கருதுதல் கூடாதென்று மறுத்துக் கூறியதென்க.

3 குடி செய்வார் காலத்தைநோக்கி மடிசெய்தாலும் மானங்கருதலாகா தென்பதாம்.

4 அஃதொழிந்து - [முயற்சித்துன்பத்திற்குக்கொள்கல (பாத்திரம்) மாத லொழிந்து.] இன்பத்திற்காதலில்லையோ (இன்பத்திற்குக் கொள்கல மாகுதலில்லையோ].

1 "உறைபெய லோலை போல, மறைக்குவன் பெருமநிற் குறித்து வருவேலே" என்புழிப் போல மறைத்தல் 2 இப்பொருட்டாயிற்று. என்குடி முழுதும் இன்புற்று உயரவே யான் இருமையும் பெறுதலான் இம்மெய்வருத்தமாத்திரம் எனக்கு நன்றென்று முயலும் அறிவுடையான் அஃதொருஞான்றும் ஒழியாமை நோக்கி 'இடும்பைக்கே கொள்கலங் கொல்லோ' என்றார். 3 இது குறிப்புமொழி. இவை யிரண்டு பாட்டானும் 4 அவர் 5 அதுசெய்யுமியல்பு கூறப்பட்டது.

தெளி —(இ-ள்) குடும்பத்தை - (அத்தியாத்துமம் அதிபூதம் அதிதைவம் என்னும் மூவகைத் துன்பமும் அடையுந்தன்மையதான) தன்குடியை, குற்றமறைப்பான - அம்மூவகைத் துன்பங்களும் அடையாமற் காக்க முயல்பவனது, உடம்பு-தேகம், இடும்பைக்கே- (அம்முயற்சித்) துன்பத்திற்கே, கொள்கலங்கொல் - கொள்கலமா மவனவோ [அது நீங்கி இன்பத்திற் காகுதலில்லையோ ]எ - று.

மறைத்தல் என்பது இங்குக் காத்தல் என்னும் பொருளில் வந்தது. என்குடி முழுதும் இன்புற்று உயரவே நான் இருமையும் பெறுதலால் இம்மெய்வருத்தமாத்திரம் எனக்கு நல்லதென்று முயலும் அறிவுடையவன் அம்மெய்வருத்தத்தை ஒருநாளும் விடாமையை நோக்கி 'இடும்பைக்கே கொள்கலங் கொல்லோ' என்றார். இது குறிப்புமொழி ஓ - அசை இவை இரண்டு பாட்டாலும் அவர் அதுசெய்யுமியல்பு சொல்லப்பட்டது

(க - து.) தனது குடியைக் காக்க முயற்சிப்பவனது உடம்பு அம்முயற்சித் துன்பத்திற்கே யிருப்பிடமாம் என்பது. (௯)

௩௰. இடுக்கண்கால் கொன்றிட வீழு மடுத்தூன்றும்
நல்லா ளிலாத குடி.

---

1 புறநானூறு, ௨௯0 இதன்பொருள். மழை பெய்தலை (மேல்விழவொட்டாது) ஓலைக் குடையானது காப்பதுபோன்று காப்பாற்றுவன் (என்று) பெருமானே உன்னைக்கருதி வருவேன் என்பது.

2 இப்பொருட்டாயிற்று - காத்தல் என்னும் பொருளினதாயிற்று.

3 இது (உடம்பினை யிடும்பைக்கே கொள்கலம் என்றது) குறிப்புமொழி. குறிப்பாற் பொருளுணர்த்து மொழி குறிப்பு மொழியாம். குடும்பத்தைக் குற்றமறைப்பானுடம்பு இடும்பைக்கே கொள்கலமாயினும் இருமையின் பயனடைதற்குக் காரணமாயிருத்தலால் அஃது அவனுக்கு இனிமையாமென்பது குறிப்பாற் பெறப்படுவதாமென்க "இடும்பைக் கிடும்பை யியலுடம்பி தன்றே" என்று நல்வழி கூறுகின்றது.

4 அவர் - குடிசெய்வார்.

5 அது - குடிசெய்தல்.

**பரி.**—(இ - ள ) துனபமாகிய கவியம் புகுந்து தன்முதலைவெட்டிச் சாய்க்கஒரு 1 பறறின்றி வீழாநிற்கும் 2 அக்காலத்துப் 3 பறறுவன கொடுத்துத் தாஙகவலல கல்லாண்மகன் பிறவாத குடியாகிய மரம, எ று.,

முதல்—அதன்வழிக்குரியார் வளர்ப்பாரைப பெற்றுழி வளாத்து பயன்படுதலும் அலலாவழிக கெடுதலு முடைமையின், மரமாககினார், 4 "தூங்குசிறை வாவலுறை தொனமரங்க ளனன, ஓங்குகுல நையவத னுட்பிறந்த வீரர், தாஙகலகட னுக்குதலை சாயபபவரு நீச்சொ, னீஙகனமட வார்களகடனென்றெழுந்து போகதான" என்றார் பிறரும். 5 இது குறிபபுருவகம். இத னுன 6 அவரிலலாத குடிக்குளதாம் குறறங கூறபபட்டது.

**தேனி.**—(இ - ள் ) அடுத்து - (தான் விழும்போது) முட்டுக் கொடுத்து, ஊன்றும - தாஙகவல்ல, கலலான் - கலலவாணமகன், இலாத - பிறவாத குடி - குடியாகிய (மரம்), இடுககண் - துன்பமாகிய (கோடரியானது), (புகுந்து) கால - (தன்) முதலை, கொன்றிட - வெட்டிச்சாய்கக, வீழும் - (ஒருபற்றிலலாமல) வீழாநிற்கும், எ று.

முதல்-அக்குடியின் வழிக்கு உரியார்.வளர்பபாரைப் பெறறவிடத்து வளர்த்து பயனபடுதலும், அலலாவிடத்துக் கெடுதலும் உடைமையால் குடியை மரமாககினார் இது குறிப்புருவகவணி இதனால அவரிலலாத குடிக்கு உளதாம் குறறம் சொலலபபட்டது.

(க - து.) தன்னைத்தாங்கவல்ல நல்ல ஆண்மக னில்லாதகுடியானது முதலறக்கெடும் என்பது. (ௌ)

1 பற்றின்றி - ஆதாரமில்லாமல் 2 அக்காலத்து - தான் விழும்பொழுது.

3 பற்றுவன - விழாது தாங்கவல்ல முட்டுக்கள் (உதவிகள்).

4 சீவகசிந்தாமணி காநதருவதத்தையாரிலம்பகம் ௬. இதனபொருள் தொங்கிய சிறகுகளை யுடையவாவல (வவ்வால்) வசிககினற ஆலமரங்கள் (தாம் கெட அவை கெடாதபடி அவறறுட்டோன்றிய விழுது தாஙகினாற்) போல, ஓங்கிய தமது குலமானது (உதவியின்றித்) தளர்ச்சியடைகின்ற அளவிலே அக்குடியினுடபிறந்த வீரர் தலைசாய்ககு மாறுண்டாகா நின்ற)இவன் பிறந்து இக்குலங்கெட்டதென்னும்) தீச்சொல் (பிறவாதபடி தமது குலத்தைத்)தாஙகுதல் (உயரச்செய்தல) கடமையாகும். நீங்கல் (தமது குலத்தைத்தாஙகாதுபோதல்) பேதைய (மூட)ரது கடமையாகும் (ஆதலால் யானுமுயன்று பொருள் தேடி என்குலத்தைத் தாங்குவேன்) என்று கூறியெழுந்திருந்து வநதான சீதத்தன் என்பது. "சிதலைதினப்பட்டவாலமரத்தை, மதலையாய் மற்றதன் வீழூன்றியாங்குக், குதலைமை தந்தைக்கட்டோன்றிற் றுனபெற்ற, புதல்வன் மறைப்பக்கெடும்" என்று நாலடியார் கூறுவது மிங்கறியத்தக்கதாம்.

5 இடுக்கணை கவியமாகவும் குடியை மரமாகவும் அதுதூன்றும் என்னும் ஏதுவால் குறிப்பாக வுணருமாறு உருவகஞ்செய்தமையினாலே இககுறள் குறிப்புருவகமாயிற்று.

6 அவர் - தாங்குவார்.

## ௱௪-ம் அதி.—உழவு.

பரி.—அஃதாவது சிறுபான்மை [1] வணிகர்க்கும் பெரும்பான்மை வேளாளர்க்கு முரித்தாய உழுதற்றொழில். செய்விக்குங்கால் [2] ஏனையோர்க்கு முரித்து. இது, மேற்குடிப்புயர்தற் கேதுவென்ற ஆள்வினைவகையாகலின், குடிசெயல்வகையின்பின் வைக்கப்பட்டது.

தெளி.—அஃதாவது சிறுபான்மை வாணிகர்க்கும் பெரும்பான்மை வேளாளர்களும் உரித்தாகிய உழுதற்றொழில் இது செய்விக்கும்போது மற்றவர்களுக்கும் உரித்தாகும். இது, முன்னே குடி உயர்தற்கு ஏதுவென்ற முயற்சிவகையாகலால், குடிசெயல்வகையின்பின் வைக்கப்பட்டது.

க. சுழன்றுமேர்ப் பின்ன துலக மதனா
லுழந்து முழவே தலை.

பரி.—(இ - ள்.) உழுதலான்வரும் மெய்வருத்த நோக்கிப் பிறதொழில் களைச் செய்துதிரிதரும், முடிவில் ஏருடையார் வழியதாயிற்று உலகம். ஆதலான் எல்லாவருத்த முற்றும், தலையாயதொழில் உழவே, எ - று.

ஏர் — [3] ஆகுபெயர். பிறதொழில்களாற் பொருளெய்தியவழியும் உணவின்பொருட்டு உழவார்கட் செலல்வேண்டுதலின் 'சுழன்றுமேர்ப்பின்னதுலகம்' என்றும், வருத்த மிலவேனும் பிறதொழில்கள் கடையென்பது போதர 'உழந்து முழவே தலை' என்றுங் கூறினார். இதனால் உழவினது சிறப்புக் கூறப்பட்டது.

---

1 "வேளாண் மாந்தர்க் குழுதூ ணல்ல, திலலென மொழிப பிறவகை நிகழ்ச்சி" எனனும் (தொலகாப்பியம் மரபியல்) சூத்திரத்தின் விசேடவுரையில் நச்சினார்க்கினியார் "அவருள் வணிகர்க்கும் ஒழிந்த வேளாளர்க்கும் ஒத்தசெய்தியெனவாகிய வுழவுத்தொழிலும் நிரைகாத்தலும் வாணிகமுமென்பன அவற்றின ஒத்தசிறப்பினவன்றி அவற்றுள்ளும் ஓரோவொன்று ஓரோவருணத்தார்க்கு உரியவாமாகலானும் ஈண்டு அவைவிதந்து கூறினானென்பது. நிரைகாவலும் உழவுத்தொழிலும் வணிகர்க்கும் வேளாளர்க்குந்தமமோறுதல் போலாது வாணிகவாழ்க்கை வேளாண்மாந்தர்க்குச்சிறுவரவிற்றெனவும் உழுதுண்டல் வணிகர்க்குச் சிறுவரவிற்றெனவும் எனவகைக் கூலத்தோடுபட்டதே பெருவரவிற்றெனவுங் கூறினான் இச்சூத்திரங்களானென்பது." என்று கூறியதிங்கறியத்தக்கதாம்.

2 ஏனையோர்க்கும் - பிராமணர்முதலானவர்களுக்கும்.

3 ஏர் (கலப்பை) என்னும் உடைமைப்பெயர் அதனை யுடையவருக்காதலால் உடைமையாகுபெயர். இது "பொருண் முதலாறோடு" என்னும் நன்னூல் ஆகுபெயர்ச் சூத்திரத்தின் 'ஆதி' எனபதனுளடங்கும்.

தேவி.—(இ - ள) உலகம்- சுழன்றும்-(உழுதலால் வரும் உடல வருத்த நோக்கி- பிறதொழில்களைச்செய்து) திரிந்தும், ஏர்ப்பின்னது - (முடிவிலே) ஏருடையார் வழிப்பதாயிற்று, அதனால - ஆதலால, உழந்தும் - எல்லாவருத்த முற்றும், தலை - தலைமையாகிய (தொழில), உழவே - உழுதலேயாம, எ - று.

ஏரென்பது ஏருடையார்க்கு ஆதலால் ஆகுபெயர். பிறதொழில்களாலே பொருள் பெறுமவிடத்தும் உணவி னிமித்தம் உழுவாரிடத்துச செல்லவேணடுதலால 'சுழன்றுமேர்ப்பின்னதுலகம்' என்றும், வருத்தம் இலலையாயினும் பிறதொழிலகள் கடை யென்பதுதோன்ற 'உழந்து முழவே தலை' என்றும சொலலினார். இதனால உழவினது சிறப்புச் சொல்லப்பட்டது

(க - து) எதொழிலுள்ளும் உழவுத்தொழிலே தலைமையாம் என்பது. (க)

௨. உழுவா ருலகத்தார்க் காணி யஃதாற்றா
தெழுவாரை யெல்லாம் பொறுத்து.

பரி.—(இ - ள்) அவ்வுழுதலைச் செய்யமாட்டாது பிறதொழிகண்மேற் செலவாா யாவரையுந் தாங்குதலால், 1 அதுவல்லார் உலகத்தாராகிய தோககு அச்சாணியாவா, எ - று.

2 "காடுகொன்று நாடாக்கிக் குளந்தொட்டு" என்றாற்போல 3 உழுவாரென்றது உழுவிப்பாரமேலுஞ் செல்லும் உலகத்தாரென்றது ஈண்டிவரை யொழிந்தாரை. கலங்காம னிறுத்தற்கண் ஆணிபோறலின் 'ஆணி' என்றார். பொறுத்தலான் என்பது திரிந்து நின்றது 4 ஏகதேச வுருவகம். 5 அஃதாற்றார்

1 அது - உழுதல்.

2 பத்துப் பாட்டு, பட்டினப்பாலை, 283, 284 வதுவரி. இதன்பொருள் (சோழ மண்டலத்தில்)காடாகிய இடங்களை யெல்லாம் வெட்டிப் போட்டு (முன்பு போலக்) குடியிருந்துவிளையப்பண்ணி, (தூர்ந்து போன) குளங்களைத் தோண்டி என்பது.

3 கொன்று, ஆக்கி, தொட்டு என்னுந்தன்வினை கொன்றுவித்து, ஆக்குவித்து, தொடுவித்து எனப் பிறவினையும் ஆனாற்போல உழுவார்என்னுந்தன் வினை உழுவிப்பார் எனப்பிறவினையுமாயிற் றென்பதாம்,

4 உழுவாரை (அச்சு)ஆணியாக வுருவகஞ்செய்தவர் அதற் கியைய வுலகத்தாரைத் தேராக வுருவகஞ் செய்யாமையினாலே இக்குறள் ஏகதேச வுருவக வணியாயிற்று

5 'அஃதாற்றா, தெழுவாரை யெல்லாம் பொறுத்து' என்பதற்குப் பிரதியாகப் அஃதாற்றார் தொழுவாரே யெல்லாம் பொறுத்து என்று பாடங்கூறி அதற்கு அஃதாற்றார் - அது (உழுதல)செய்யாதவர், எல்லாம்பொறுத்து (காப்பவர் செய்யும்) துன்ப மெல்லாவற்றையும் பொறுத்து, தொழுவாரே - (அவரைத்) தொழுவாரே யாவர் என்று பொருள் கூறுவாருமுண்டென்பது

தொழுவாரே யெல்லாம் பொறுத்தென்று பாடமோதி, அது மாட்டாதார் புரப்பார் செய்யும் பரிபவமெல்லாம் பொறுத்து அவரைத் தொழுவாரேயாக வென்றுரைப்பாருமுளர்.

தெளி.—(இ - ள்) உழுவார் - உழுதல்வல்லார், அஃதாற்றாது - அவ்வுழுதலைச் செய்யமாட்டாமல், எழுவாரை யெல்லாம் - (பிறதொழில்களின்மேல்) செல்வோர் யாவரையும், பொறுத்து - தாங்குதலால், உலகத்தார்க்கு - உலகத்தாராகிய (தேர்க்கு,) ஆணி - அச்சாணியாவர், எ - று.

உழுவாரென்றது உழுவிப்பாருக்குமாம். உலகத்தாரென்றது இங்கே இவ்வுழவரல்லாதாரை. கலங்காமல் நிறுத்தலில் உழுவார் உலகத்திற்கு ஆணிபோறலால், 'ஆணி' என்றார். இஃதேகதேசவுருவகவணி. பொறுத்தலானென்பது பொறுத்து எனத் திரிந்துநின்றது.

(க - து) உலகத்தை நிலைநிறுத்துவோர் உழுவாரேயாவர் என்பது. (௨)

௩. உழுதுண்டு வாழ்வாரே வாழ்வார்மற் றெல்லாந்
தொழுதுண்டு பின்செல் பவர்.

பரி.—(இ - ள்) யாவரு முண்ணும் வகை உழுதலைச்செய்து 1 அதனாற் றாமுமுண்டு வாழ்கின்றாரே தமக்குரியராய் வாழ்கின்றவர்; மற்றையாரெல்லாம் பிறரைத் தொழுது 2 அதனாற் றாமுண்டு அவரைப் பின்செல்கின்றவர், எ - று.

3 மற்றென்பது வழக்குப்பற்றி வந்தது. தாமு மக்கட்பிறப்பினராய் வைத்துப் பிறரைத்தொழுது அவர் சிலகொடுப்பத் தம்முயிரோம்பி அவர்பின் செல்வார் தமக்குரியரல்லரென்பது கருத்து.

தெளி.—(இ - ள்) உழுது - (யாவரும் உண்ணும்படி) உழுதலைச் செய்து, உண்டு -(அதனால் தாமும்)உண்டு, வாழ்வாரே - வாழுகின்றவரே, வாழ்வார்-(தமக்கு உரியராய) வாழ்கின்றவர், மற்றெல்லாம் - மற்றவரெல்லாரும், தொழுது - (பிறரைத்) தொழுது, உண்டு - (அதனால் தாம்) உண்டு, பின்செல்பவர்- (அவரைப்) பின் செல்லுகின்றவர், எ - று.

மற்றென்பது பிறிது என்னும் பொருளில் வந்தது. தாமும் மனிதப்பிறப்பினராய்ப் பிறந்திருந்தும் பிறரைத் தொழுது அவர்சிலபொருள் கொடுக்கத் தமதுயிர்காத்து அவர்பின்செல்வார் தமக்கு உரியரல்லரென்பது கருத்து.

(க - து.) உழுதுண்டுவாழ்வார் வாழ்வே வாழ்வா மென்பது. (௩)

---

1 அதனால் - உழுதலால். 2 அதனால் - பிறரைத் தொழுதலால்.
மற்றெல்லாம் என்றதில் மற்றென்னுமிடைச்சொல் வினைமாற்றிலும் அசைநிலையிலும் வாராது உலக வழக்குப்பற்றிய பிறிது என்னும் பொருளில் வந்தது, பிறிது என்பது வினைமாற்றி லடங்கும் என்பாருமுண்டு.

௪ பலகுடை நீழலுந் தங்குடைக்கீழ்க் காண்பர்
அலகுடை நீழ லவர்.

பரி.—(இ-ள்) உழுதற்றொழிலான் நெல்வினை யுடையராய தண்ணளி யுடையோர் பலவேந்தர் குடைநிழலதாய மண் முழுதினையுந் தம்வேந்தர் குடைக்கீழே காண்பர், எ-று.

அலகு - கதிர், 1 அஃதீண்டாகுபெயராய் நெல்லின்மேனின்றது. 2 உடை யடுடையென்பது குறைந்து நின்றது. 3 நிழல்போறலின் நீழலெனப்பட்டது நீழ லவரென்றது இரப்போர்க்கெல்லா மீதலேநோக்கி 4 ஒற்றுமைபற்றித் 'தங் குடை' என்றார் 5 குடைநீழலென்பதூஉம் ஆகுபெயர் 6 "ஊன்றுசால் மரு ங்கி னீன்றதன் பயனே" என்றதனால் தம்மரசனுக்கு கொற்றம் பெருக்கி மண்முழுதும் அவனதாகக் காண்டிருப்பரென்பதாம். 7 'இரப்போர் சுற்ற மும் புரப்போர் கொற்றமும், உழவிடை விளைப்போர்' என்றார் பிறரும்.

தெளி.—(இ-ள்) அலகுடை-(உழுதற்றொழிலால்) நெல்வினையுடையரா கிய, நீழலவர் - தண்ணளியுடையோர், பலகுடை நீழலும்- பலவேந்தர் குடை நிழலதாய (பூமிமுழுதையும்), தங்குடைக்கீழ் - தம் (வேந்தர்) குடைக்கீழே, காண்பர்-காணுவர், எ-று.

1 கதிர் என்னும் சினைப்பெயர் அதன் முதலாகிய நெல்லுக்காதலால் சினையாகு பெயர்.

2 உடைய என்னும் குறிப்புப்பெயரெச்சம் ஈறுகுறைந்து உடை என

3 உழுவாரிடத்துள்ள தண்ணளி (கிருபை) யாசிப்பவர்க்கு நீழல்போன்றிருத்தலாலே தண்ணளியை நீழல் (நிழல்) என்று கூறப்பட்டது (வெயிலால் வருந்தினவருக்கு மரத்தினது நிழல் ஆதரவாயிருப்பதுபோன்று வறுமையினால் வருந்தினவர்க்கு உழுவாரது தண்ணளி ஆதரவா யிருக்கின்றதென்பதாம்.) நீழல்போன்ற தண்ணளியை நீழலென்றது உவமையாகு பெயர்.

4 அரசருக்கும் உழுவாருக்கு முள்ள ஒற்றுமைபற்றி அரசரது குடையை உழுவாரின் மேலேற்றித் 'தங்குடை' என்று கூறப்பட்டது. இவ்வொற்றுமையை "வார்சான்ற கூந்தல் வரம்புயர வைகலும், நீர்சான் றுயரவே நெல்லுயரும்- சீர்சான்ற, தாவாக் குடியுயரத் தாங்கருஞ்சீர்க் கோவுயர்தல், ஓவா துரைக்கு முலகு" என்று சிறுபஞ்சமூலங் கூறுதலா லறிக.

5 குடைநீழல் என்னும் தானியின் பெயர் அதற்குத் தானமாகிய பூமிக்காதலால் தானியாகு பெயர்.

6 புறநானூறு, ௩௫. இதன்பொருள் (உழுகின்ற கலப்பை) நிலத்தினிடத்தே ஊன்றியசாலினிடத்து விளைந்த நெல்லினது பயனே என்பது.

7 சிலப்பதிகாரம் நடுகற்காதை ௱௪௯, ௱௫௦-வது வரி. இதன்பொருள் யாசிப்பவருடைய சுற்றத்தாரையும் தம்மைக்காக்கும் அரசருடைய வெற்றியையும் உழவினிடத்தே யுண்டாக்குவோர் என்பது.

அஃது - கதிர், அஃது இங்கே ஆகுபெயராய்ச் செல்வுக்காயிற்று. உடைய என்றது உடைமைக் குடைக்குத் தனது நிழல்போதுதலால் நிழலெனப்பட்டது. நிழலென்றது இரட்டோக் கெல்லாம் ஈதுகுடைக்கீழ். ஒற்றுமைப்படுத் 'தங்குடை' என்றார். குடைநிழலெனப்படும் ஆகுபெயர். தம்மரசனுக்கு வெற்றிபெருக்கி மண்முழுதும் அவனதாகக்கண்டிருப்பரென்பதாம்.

(க - து) உழுதற் றொழிலாலுண்டாகிய செல்வத்தினை யுடையோர் பலவேந்தரது நாட்டையும் தம்மரசனது ஆட்சிக்குள்ளாம் வண்ணம் காணுந் தன்மையராவர் என்பது. (௪)

௫. இரவா ரிரப்பார்க்கொன் றீவர் கரவாது
கைசெய்தூண் மாலை யவர்.

பரி — (இ - ள்) தங்கையா லுழுதுண்டலை யியல்பாகவுடையார் பிறரைத் தாமிரவார், தம்மையிரப்பார்க்கு அவர் வேண்டியதொன்றனைக் கரவாது கொடுப்பர், எ - று.

1 செய்தென்பதற்கு உழுதலையெனவருவிக்க. கைசெய்தூண்மாலையவ ரென்பது 2 ஒருஞான்றும் அழிவில்லாத செல்வமுடையரெனனும் ஏதுவை யுட்கொண்டு நின்றது.

தெளி.—(இ - ள்) கை - (தமது)கையால், செய்து -(உழுதலைச்)செய்து, ஊண்மாலையவர்-உண்ணுதலை இயல்பாகவுடையவர், இரவார் - (பிறரைத்தாம்) இரவார், இரப்பார்க்கு - (தம்மை) இரப்பவர்க்கு, ஒன்று - (அவர் வேண்டிய) தொருபொருளை, கரவாது - ஒளிக்காமல், ஈவர் - கொடுப்பார், எ - று.

செய்து என்னும் எச்சத்திறகிலைய உழுதலை யென்று வருவித்துக் கொள்க. கைசெய்தூண்மாலையவரென்பது ஒருநாளும் அழிவில்லாத செல்வமுடையாரென்னும் காரணத்தை உள்ளேகொண்டு நின்றது.

(க - து.) பிறரையாசியாமல் யாசிப்பவர்க்குக் கொடுக்குந்தன்மையவர் உழுதுண்பவரேயாவர் என்பது. (௫)

௬. உழவினார் கைம்மடங்கி னில்லை விழைவதூஉம்
விட்டேமென் பார்க்கு நிலை.

1 செய்து என்னும் (செயப்படுபொருள் குன்றாத) வினைக்கிலைய உழுதலை என்னும் செயப்படுபொருளை வருவித்துரைத்துக் கொள்க.
2 "ஆற்றங் கரையின் மரமு மரசறிய, வீற்றிருந்த வாழ்வும் விழுமன்றே- யேற்றம், உழுதுண்டு வாழ்வதற் கொப்பில்லை கண்டீர், பழுதுண்டு வேறோர் பணிக்கு" என்று ஔவையார் கூறுவதினை அறியத்தக்கதாம்.

பரி —(இ - ள்.) *உழுதலையுடையார்கை அதனைச்செய்யாது மடங்குமாயின், யாவரும் விழைபுமுணவும யாந்துறந்தேம் மென்பார்க்கு 1 அவ்வறத்தின்கணிற்றலு முளவாகா, எ - று.

2 உம்மை இறுதிக்கண்ணும் வந்தியைந்தது உணவின்மையால், தாமுண்டலும இல்லறஞ்செய்தலும் யாவர்க்கு மில்லையாயின. 3 அவருறுடபுமாத்திரமாய கை வாளாவிருப்பின உலகத்து இம்மை மறுமை வீடென்னும் பயன்கள் நிகழா வெனபதாம் 4 ஒன்றனை மனத்தால் விழைதலுமொழிந்தே மென்பார்க்கென வுரைப்பாரு முளர். இவையைந்துபாட்டானும் 5 அதனைசசெய்வாரது சிறபபுக கூறப்பட்டது

தேவி.—(இ - ள்) உழவினர் - உழுதலையுடையவர், கைம்மடங்கின் - கை (அவ்வுழுதலைசசெய்யாது) மடங்குமாயின், விழைவதூஉம் - (யாவரும்) விருமபுமுணவும், விட்டேமென்பார்க்கு -(யாம்) துறந்தோ மென்பார்க்கு, நிலை- (அவ்வறத்திலே) நிற்றலும், இல்லை-உளவாகா, எ-று.

உம்மை இறுதியிலும் வந்து கூடியது. உணவில்லாமையால், தாமுண்டலும் இலலறமசெயதலும யாவர்கருமில்லையாயின அவருறுப்புமாததிரமாகிய கை சும்மாவிருககின் உலகத்தில் இம்மை மறுமை வீடென்னும் பயன்கள் நிகழாவெனபதாம். இவ்வைநதுபாட்டாலும் அதனைச் செய்வாரது சிறப்புச் சொல்லபபட்டது

(க - து.) உழவுத்தொழில் நின்றவிடத்துத் துறவிகளுக்கும் நிலையில்லை என்பது. (௬)

எ. தொடிப்புழுதி கஃசா வுணக்கிற் பிடித்தெருவும்
வேண்டாது சாலப் படும்.

பரி.—(இ - ள்.) ஒரு நிலத்தினையுழுதவன் ஒருபலப்புழுதி கஃசாம் வண்ணம 6 அதனைக் காயவிடுவனாயின், 7 அதன்கட் செய்தபயிர் ஒருபிடியின்கணடங்கிய எருவுமிடவேண்டாமற் பணைத்து விளையும், எ - று.

1 அவ்வறத்தின்கண் - துறவறத்தில்.

2 விழைவதூஉம் என்பதிலுள்ள உம்மை
இயது.

3 அவர் - உழவினர்.

4 விழைவதூஉம் }விட்டே மென்பார்க்கு என்பதற்கு ஒருபொருளை மனத்தினால் விருமபுதலும் ஒழிந்தே மென்பார்க்கு என்று பொருள் கூறுவாரு முண்டென்பது.

5 அதனை - உழுதலை. 6 அதனை-புழுதியை 7 அதன்கண- அந்நிலத்தில்

பிடித்து—பிடியளவென்றது. 1 பிடித்தவென்பதனை விகாரமென்பாரு முளர். வேண்டாமை, சான்று என்பன திரிந்துநின்றன.

**தெளி** — இ - ள் (ஒருவன் தன் நிலத்தை உழுதவன்) தொடிப்புழுதி - ஒருபலப் புழுதி, கஃசா - கால்பலமாம்படி, உணக்கின் - (அதனைக்) காயவிடுவானாயின், (அதனிடத்துச்செய்த பயிர்) பிடித்தெருவு - ஒருபிடியில் அடங்கிய எருவும், வேண்டாது - (இடுதல்) வேண்டாமல், சாலப்படும் - பருத்துவிளையும், எ - று

பிடித்து - பிடியிலுள்ளது வேண்டாமல், சான்று என்பன வேண்டாது சால எனத்திரிந்தன.

(க - து.) உழுதலாலுண்டாகிய புழுதி நன்றாய் உலருமாறுசெய்து பயிரிடின் அப்பயிருக்கு எருவிடுதல் அனாவசியமாம் என்பது. (எ)

அ. ஏரினு நன்றா லெருவிடுதல் கட்டபின்
நீரினு நன்றதன் காப்பு.

**பரி.**—(இ - ள்) அப்பயிர்க்கு அவ்வுழுதலினும் எருப்பெய்தல் நன்று; 2 இவ்விரண்டுஞ் செய்து களைகட்டால் 3 அதனைக்காத்தல் 4 அதற்கு நீர்காலயாத்தலினு நன்று, எ - று

ஏர்— 5 ஆகுபெயர். காத்தல்—பட்டி முதலியவற்றான் அழிவெய்தாமற் காத்தல். உழுதல், எருப்பெய்தல், களைகட்டல், நீர்காலயாத்தல், காத்தலென் றிம்முறையவாய இவ்வைந்தும் வேண்டுமென்பதாம்

**தெளி** —(இ - ள்.) (அப்பயிர்க்கு) ஏரினும் - அவ்வுழுதலினும், எருவிடுதல்- எருப்பெய்தல், நன்று-நல்லது, கட்டபின்-(இவ்விரண்டுஞ் செய்து)களைபிடுங்கியபின், அதன் காப்பு - அதனைக் காத்தல், நீரினும் - நீர் பாய்ச்சலினும், நன்று-நல்லது, எ - று,

ஏர் என்பது உழுதலுக்காதலால் ஆகுபெயர். ஆல்- அசை. காத்தல்-பட்டிமாடு முதலானவைகளால் அழிவடையாமற் காத்தல் உழுதல், எருப்பெய்தல், களைபிடுங்கல், நீர்பாய்ச்சல், காத்தல் என்று இம்முறையினவாகிய ஐந்தும் வேண்டுமென்பதாம்.

(க - து.) பயிர்க்கு உழுதல் முதலிய ஐந்தும் வேண்டுமென்பது. (அ)

---

1 பிடித்த எருவேண்டாது பிடித்தெரு என்றாயிற்றென்பாருமுண்டு. இவ்வழியில் பெயரெச்சத்தகரஞ்செய்யுள் விகாரத்தாற் றொக்கின்றது.

2 இவ்விரண்டும் - உழுதலும் எருவிடுதலும்.

3 அதனை - அப்பயிரை. 4 அதற்கு - அப்பயிருக்கு.

5 ஏர் என்னும் கருவியின்பெயர் அதன்காரியமாகிய வுழுதலுக் காதலால் கருவியாகுபெயர்.

செல்லான் கிழவ னிருப்பி னிலம்புலந்
தில்லாளி னூடி விடும்.

பரி.—(இ-ள்) அந்நிலத்திற் குரியவன் அதனைச் சென்று பார்த்து அடுத்தனசெய்யாது மடிந்திருக்குமாயின், அஃது அவனில்லாள்போலத் தன்னுள்ளே வெறுத்துப் பின்னவனோடு மூடிவிடும், எ - று.

1 செல்லுதல-ஆகுபெயர். பிறரை யேவியிராது தானே சேறல்வேண்டுமென்பது தோன்றக்'கிழவன்'என்றார் தனக்குச்சென்று வேண்டுவன செய்யாது வேறிடத்திருந்தவழி மனையா ளூடுமாறுபோல வெறுத்து அவன் போகமிழத்தலை நோக்கி இவை மூன்றுபாட்டானும் 2 அதுசெய்யுமாறு கூறப்பட்டது.

தெளி —(இ - ள்,) கிழவன் - (அந்நிலத்துக்கு) உரியவன், செல்லான - (அந்நிலத்தினிடத்து நாள்தோறும்) போய்ப்பார்த்து வேண்டியவை செய்யாமல, இருப்பின் - (சோம்பி) யிருந்தால், நிலம்- அந்நிலம், இல்லாளின் (அவன்) மனைவிபோல், புலந்து - (தன்னுள்ளே) வெறுத்து, (பின்) ஊடிவிடும் - (அவ னோடு) பிணங்கிவிடும், எ-று.

செல்லுதல-ஆகுபெயர் பிறரை ஏவியிராமல் தானே செல்லுதல்வேண்டுமென்பது தோன்றக்'கிழவன்' என்றார். தன்னிடத்து வந்து வேண்டியவை செய்யாது வேறிடத்திருந்தவிடத்து மனையாள பிணங்குமவிதம்போல வெறுத்து அவன்போகமிழத்தலைக்கருதி இவை மூன்றுபாட்டாலும் அதுசெய்யுமவிதம் சொல்லப்பட்டது

(க - து.) விளைநிலத்தைக் கவனியாதவனுக்கு அதனாலபயனுண்டாகாது என்பது (கூ)

௧0. இலமென் றசைஇ யிருப்பாரைக் காணி
னிலமென்னு நல்லா ணகும்.

பரி.—(இ - ள் ) யாம வறியேமென்று சொலலி மடிந்திருப்பாரைக் கண்டால், நிலமகளென்று உயர்த்துச் சொல்லப்படுகின்ற நல்லாள் தன்னுள்ளே நகாநிற்கும், எ - று.

உழுதல் முதலிய செய்வார் யாவர்க்குஞ் செல்வங் கொடுத்து வருகின்ற வாறுபற்றி 'நல்லாள்' என்றும், 3 அதுகண்டுவைத்தும் அதுசெய்யாது வறு

1 செலலுதல என்னும் கருவியின்பெயர் அதன்காரியமாகிய பார்த்து வேண்டியவை செய்தலுக்காதலால் கருவியாகுபெயர், பார்த்துவேண்டியவை செய்தலுக்குச் செல்லுதல காரணமா மென்க.

2 அது - உழவு.

3 அது கண்டு - உழுதல், எருவிடுதல், களைபிடுங்கல், நீர்பாய்ச்சல் பட்டி (திருட்டு) மாடு முதலியவைகளாலழிவடையாமற் காத்தல் செய்வார் யாவர்க்கும் செல்வங்கொடுத்து வருகின்றவிதத்தைப்பார்த்து

மை யுறுகின்ற பெருமையைப்பற்றி 'நகும்' என்றுங் கூறினார். 1 இரப்பாரை யென்று பாடம் ஓதுவாருமுளர். இதனான் 2 அது செய்யாதவழிப்படும் இழுக்குக் கூறப்பட்டது. வருகின்ற அதிகார முறைமைக்குக் காரணமுமிது.

தெளி.—(இ-ள்) இலமென்று-யாம் வறியேமென்று சொல்லி, அசைஇ இருப்பாரை-சோம்பியிருப்பவரை, காணின்-கண்டால், நிலமென்னும் நல்லாள்-நிலமகளென்று உபசரித்துச் சொல்லப்படுகிற நல்லாள், நகும்-(தன்னுள்ளே) சிரியாநிற்பள், எ-று.

உழுதன்முதலியவை செய்வோர் யாவர்க்கும் செல்வங்கொடுத்து வருகின்ற விதம்பற்றி 'நல்லாள்' என்றும், அதனைப்பெற்றும் அதுசெய்யாது வறுமையுறுகின்ற அறிவீனமைபற்றி 'நகும்' என்றுஞ் சொல்லினார். இதனால் அது செய்யாவிடத்து உண்டாகும் இழுக்குச் சொல்லப்பட்டது. வருகின்ற அதிகார முறைமைக்குக் காரணமுமிது.

(க-து) வறியேமென்று உழவுத்தொழில் செய்யாது சோம்பியிருப்பவர் அவமதிப்படைவரென்பது. (௰)

## ௧௦௫-ம் அதி.—நல்குரவு.

பரி.—அஃதாவது நுகரப்படுவனயாவும் இல்லாமை.

தெளி.—அஃதாவது அநுபவிக்கப்படுவனயாவும் இல்லாமை.

க. 3 இன்மையி னின்னாத தியாதெனி னின்மையி
னின்மையே யின்னா தது.

பரி.—(இ-ன்) ஒருவனுக்கு வறுமைபோல இன்னாதது யாதென்று வினவின், வறுமைபோல இன்னாதது வறுமையே, பிறிதில்லை, எ-று.

— — — டஞ்செய்வது. ஒப்பதில்லையெனவே, மிகுதியின்மை சொல்லவேண்டாவாயிற்று.

தெளி.—(இ-ன்) இன்மையின்-(ஒருவனுக்கு) வறுமைபோல, இன்னாதது-துன்பஞ்செய்வது, யாதெனின்-யாதென்று கேட்டால், இன்மையின்-

1 இருப்பாரை என்பதற்குப் பிரதியாக இரப்பாரை (யாசிப்பாரை) என்று பாடங் கூறுவாருமுண்டு.

2 அது - உழவு.

3 "வறுமை போல வின்னாது வறுமை யன்றி வேறில்லை" என்று விநாயகபுராணங் கூறுகின்றது.

வறுமைபோல, இன்னாதது -துன்பஞ்செய்வது, இன்மையே-வறுமையே, (வேறொன்றில்லை) எ-று.

வறுமைக்கு ஒப்பதில்லை யெனவே, மிகுந்ததில்லாமை சொல்லவேண்டாதாயிற்று.

(க-து) வறுமைபோலத் துன்பஞ்செய்வது பிறிதொன்றில்லை என்பது. (க)

உ. இன்மை யெனவொரு பாவி மறுமையு
மிம்மையு மின்றி வரும்.

பரி —(இ-ள்.) வறுமையென்று சொல்லப்படுவதொருபாவி ஒருவனுழை வருங்கால் அவனுக்கு மறுமையின்பமு மிம்மையின்பமு மில்லையாகவரும், எ-று

'இன்மையெனவொருபாவி' என்பதற்கு மேல் 1 'அழுக்காறெனவொருபாவி' என்புழி யுரைத்தாங் குரைக்க 2 மறுமை இம்மையென்பன ஆகுபெயர். 3 ஈயாமையானுந் துவ்வாமையானும் அவையில்லவாயின 4 இன்றிவிடுமென்று பாடமோதிப் பாவியாலென விரித்துரைப்பாரு முளர்.

தெளி —(இ-ள்) இன்மையென வொருபாவி- வறுமையென்றுசொல்லப்படுவதொருபாவி, (ஒருவனிடத்து வரும்போது அவனுக்கு) மறுமையும் - மறுமையின்பமும், இம்மையும்-இம்மையின்பமும், இன்றி -இல்லையாக, வரும்- வாராநிற்கும், எ-று

1 அழுக்காறுமை அ (இலக்கணநூலார்கொள்கைப்படி) இன்மையென்னும் பண்பிற்கு (குணத்திற்கு)ப் பண்பி (பண்பியாந்தன்மை அஃதாவது இவ்வின்மை யென்னுங்குணமே மற்றொருகுணத்தையேற்றுக்குணியாகுந்தன்மை) யில்லையேனும் தன்னை (இன்மையாகியதன்னை) யாக்கினானை (சோம்பலாலுண்டுபண்ணினவனை) இருமையும (இம்மைப்பயனும் மறுமைப்பயனும) கெடுத்தறகொடுமைபற்றி இன்மையைப் பாவியென்றார், கொடியானைப் பாவியெனனும் வழக்குண்மையின் என்பது உரைத்தாங்குரைக்க; என்பதன்விரிவு.

2 மறுமை, இம்மை என்னுமிடப்பெயர் அங்குள்ள இன்பத்திற்காதலால் இடவாகுபெயர்.

3 ஈயாமையால் மறுமையின்பமும் துவ்வாமையால் இம்மையின்பமும் இல்லவாயினவென்பதாம்.

4 இன்றிவரும் என்பதற்குப் பிரதியாக இன்றிவிடும் என்று பாடங்கூறிப் பாவியென்பதனைப் பாவியால என (மூன்றனுருபு) விரித்துச் சொல்லு

(க - து.) வறுமையானது உயர்குடிப்பிறப்பினையும் அறக்கேற்ற சொற்களையுங் கெடுக்கும் என்பது. (௩)

௪ இற்பிறந்தார் கண்ணேயு மின்மை யிளிவந்த
சொற்பிறக்குஞ் சோர்வு தரும்.

பரி.—(இ - ள்) இளிவந்தசொற்பிறவாத குடிப்பிறந்தார் மாட்டே யும் அது பிறத்தற்கேதுவாகிய சோர்வினை நல்குரவு உண்டாக்கும், எ-று.

1 சிறப்புடைமை 2 அவர்மாட்டு 3 அது பிறவாமை தோன்ற நின் றது இளிவந்தசொல் - 4 இளிவருதற்கேதுவாகியசொல். அஃதா வது ஏற்கவேண்டு மென்றல் சோர்வு - தாமுறுகின்ற துன்பமிகுதி யால் ஒரோவழித் தம்பிறப்பினை மறந்து 5 அது சொல்லுவதாக நினைத்தல்.

தெளி —(இ - ள) இன்மை - வறுமையானது, இற்பிறந்தார்கண்ணே யும் - அவமானச்சொல்பிறவாத உயர்ந்த குடியிற் பிறந்தவரிடத்தேயும், இளிவந்தசொல் - அவமானச்சொல், பிறக்கும் - பிறத்தற்குக் காரணமாகிய, சோர்வு-சோர்வினை, தரும்-உண்டாக்கும், எ-று.

சிறப்புடைமை அவரிடத்து அது பிறவாமை தோன்றநின்றது. அவமா னச்சொலாவது எமக்கு ஈயவேண்டுமென்றல் சோர்வு-தாமடைகிற துன்பமிகுதியால் ஒரோவிடத்துத் தங்குடிப்பிறப்பினை மறந்து அது சொல்லுவதாக நினைத்தல்.

(க - து) வறுமையானது உயர்குடிப்பிறந்தாரிடத்தும் பழியை உண்டாக்கும் என்பது (௪)

௫. நல்குர வென்னு மிடும்பையுட் பல்குரைத்
துன்பங்கள் சென்று படும்.

பரி.—(இ-ள) நல்குரவென்று சொல்லப்படுந் துன்பமொன்றனுள்ளே பல துன்பங்களும் வந்துவிளையும், எ-று.

குரை - 6 இசைநிறை 7 செலவு—விரைவின்கண்வந்தது துன் பமும் 8 தானு முடனே நிகழ்தலின் நல்குரவைத் துன்பமாக்கியும், அத

1 உடைமை - இற்பிறந்தார் கண்ணேயுமென்ற வுயர்வு சிறப்புமமை.
2 அவர் - இற்பிறந்தார். 3 அது - இளிவந்தசொல்
4 இளிவருதற்கேதுவாகிய - இ [illegible]
5 அது - இளிவந்தசொல்
6 செய்யுளில் இசை (ஓசையை) நிறைத்துவருவது இசைநிறை யெனப் படும் தொல்காப்பியம் இடைச்சொல்லியலில் "ஏயுங் குறையு மிசை நிறை யசைநிலை, யாயிரண் டாகு மியற்கைத் தென்ப" எனறுகூறுகின றது.
7 சென்று என்பதன்பகுதியதான செலவுஎன்பது விரைவுப் பொருளில் வந்தது
8 தானும் - வறுமையும்.

துன்பமடியாகச் செல்வர் கடைநோக்கிச் செறற்றுன்பமும், அவரைக் கா ணாமற்றுன்பமும், கண்டான் மறுத்துழி நிகழுந்துன்பமும, மறுக்கவிடத்து அவர் கொடுத்தது வாங்கற் றுன்பமும், அது கொண்டுபோந்து நுகர்வன கூட்டற்றுன்பமு முதலாயின நாடோறும் வேறுவேறாக வருதலின் எல்லாத்து ன்பங்களு முளவாமெனறுங் கூறினர் இவை யைந்துபாட்டாலும் வறு மையின்கொடுமை கூறப்பட்டது

தெளி.—(இ - ள்,) நல்குரவென்னும் - வறுமையென்று சொலலப்படு, இடும்பையுள் - துன்பமொன்றனுள்ளே, பல-பலவாகிய, துன்பங்கள் - துன பங்களும், சென்று - விரைந்து - வந்து-படுதல் விளையும், எ - று.

குறை - இசைநிறை துன்பமும் தானும் உடனே தோன்றலால் வறுமை யைத் துன்பமாகவும், அத்துன்பகாரணமாகச்செல்வர் மனைவாயிலுக்குச் செல்லுதற்றுன்டமும், அவரைக்காணாதற்றுன்டமும், கண்டபின் மறுத்தவிடத் து உண்டாகுந்துன்பமும், மறுக்காதவிடத்தும் அவர் கொடுத்தபொருளை வாங்கு தற்றுன்பமும, அப்பொருளைக் கொண்டுவந்து அனுபவிப்பவைகளைக கூட்டுதற் றுன்பமும முதலானவை நாடோறும் வேறுவேறாகவருதலால் எல்லாத்துன் பங்களு முண்டாகுமென்றுஞ் சொல்லினர் இவை ஐந்துபாட்டாலும வறுமை யினகொடுமை சொல்லப்பட்டது

(க - து) வறுமையுடையான் பலதுனபங்களுககு முறைவிடமா வனெனபது. (௫)

௬. * நற்பொரு ணன்குணர்ந்து சொல்லினு நல்கூர்ந்தார்
சொறபொருள சோர்வு படும்.

பரி.—(இ - ள்) மெய்ந்நூறபொருளைத் தெளியவறிந்து சொனனரா யினும, நலகூர்ந்தார சொலலுஞ்சொற பொருளின்மையைத் தலைபடும், எ-று

பொருளின்மையைத்தலைபடுதலாவது யாமிவர்சொலலியன விரும் பிக் கேட்குமாயிற் கணணோடி இவருறுகின்ற குறை முடிககவேண்டு மெ ன்றஞ்சி யாவருங் கேளாமையிற பயனிலசொல்லாய்முடிதல். கல்வியு ம் பயனபடா தென்பதாம்.

தெளி —(இ - ள்.) நறபொருள் - மெய்ந்நூற்பொருளை, நன்குணர்ந்து- தெளியவறிந்து, சொல்லினும்-சொன்னாராலும், நல்கூர்ந்தார்- வறுமைப்பட் டவர், சொல் -சொல்லுஞ் சொல்லானது, பொருள்சோர்வு -பொருளில்லாமை யை, படும் - கூடும், எ - று.

* "எனைத்துணைய வேனு மிலம்பாட்டார் கல்வி, தினைத்துணையுஞ் சீர்ப்பா டிலவாம்" என்று நீதிநெறிவிளக்கங் கூறுவதிங்கறியத்தக்கதாம.

...ாரு ஈலைமைகளைப்பக்கூடுமாவது யாம் இவர்சொல்லியவற்றை விரும்பிக்கேட்போராகில முகங்கொடுத்து இவரடைகின்ற குறையை முடிக்கவேண்டுமென்று நினைப்பாரும் கேளாமையால் பயனில சொல்லாய்முடிதல் கலவியுடையன்ட்ட வென்பதாம்.

(க - து) வறியவர் மெய்ந்நூற்பொருளைத் தெளியவறிந்து சொன்னாலும் அது பயன்படாதுபோம் என்பது. (௬)

எ. 1 அறஞ்சாரா நல்குர வீன்றதா யானும்
பிறன்போல நோக்கப் படும்.

பரி.—(இ - ள்) அறத்தோடியைபில்லாத நல்குரவுடையான தன்னையீன்ற தாயாலும் பிறனைக் கருதுமாறுபோலக் கருதி நோக்கப்படும், எ-று

அறத்தோடுகூடாமை- 2 காரண காரியங்களு ளொன்றா யியையாமை, 3 நல்குரவு - ஆகுபெயர். சிறப்புமை 4 அவளதியற்கை யன்புடைமை விளக்கிநின்றது. கொள்வதின்றாதலே யன்றிக் கொடுப்பதுண்டாதலு முடைமையின், 5 அது நோக்கிச் சுற்றத்தார் யாவருந் துறப்பரென்பதாம்.

தெளி —(இ - ள்.) அறஞ்சாரா - அறத்தோடு பொருந்துதலில்லாத, நல்குரவு - வறுமையையுடையவன, ஈன்றதாயானும் - (தன்னைப்) பெற்றதாயினும், பிறன்போல - அன்னியனைக் (கருதும் விதம்) போல, நோக்கப்படும் - (நினைத்துப்) பார்க்கப்படுவேன், எ - று.

அறத்தோடுபொருந்துதலில்லாமை - காரண காரியங்களுள் ஒன்றாய் அமையாமை நல்குரவு-ஆகுபெயர் ஈன்றதாயானும் என்ற உயர்வு சிறப்பும்மை அவளது இயற்கையன்புடைமையை விளக்கிநின்றது அவனிடத்தே கொள்ளதிலாமையேயன்றிக் கொடுப்பதுண்டாதலும் உடைமையால், அதுநோக்கிச் சுற்றத்தார்யாவரும் கைவிடுவரென்பதாம்.

1 "தாயம் பகைகொண்ட பெண்டிர் பெரும்பகை தன்னுடைய, சேயும் பகையுறவோரும் பகையிச் செகும்பகை, ஆயும் பொழுதி லருஞ்செல்வ மில்ல" என்றுபட்டினத்தடிகள் கூறுவதிங்கறியத்தக்கதாம்

2 அறத்தின் காரியம் செல்வமாயும் மறத்தின் காரியம் தரித்திரமாயு மிருத்தலால 'காரணகாரியங்களுளொன்றாயியையாமை' என்று கூறப்பட்டது

3 நல்குரவு என்னும் பண்புப்பெயர் அதனை யுடையவனுக்காதலால் பண்பாகுபெயர்.

4 ஈன் - தாய 5 அது - கொடுப்பது

[illegible] இரப்பவரும் அவர்க்கு இல்லாமையால் 'இரக்க' என்றும், [illegible] கரவாதாரையே 'கரப்பின்' என்றும், காட்டுவார் [illegible] தூய்மையுடையவிடத்தே அழுக்குச்சேருதல் போல அ[illegible] 'அவர் பழி' என்றும், குறைவில்லாதவரிடத்தே இரக்கப்படாமையால் 'தம் பழியன்று' என்றும் சொல்கிறார்.

(க - து) யாசிப்பவர் யாசிக்கத்தகுதியவர்களிடத்தே யாசிக்கக்கடவர் என்பது. (க)

உ. இன்ப மொருவற் கிரத்த லிரந்தவை
துன்ப முறாஅ வரின்.

பரி.— (இ - ள்) ஒருவற்கு இரத்தலும் இன்பத்திற்கு ஏதுவாம், இரந்த பொருள்கள் தாம் துன்புடைமையாற் றுன்புறாமல் வருமாயின், எ - று.

1 இன்பம்—ஆகுபெயர். உறாமலென்பது கடைக்குறைந்து நின்றது. துன்பம்—சாதியொருமைப்பெயர். அவையாவன ஈவார்கண் காலமும் இடமும் அறிந்து சேறலும், அவர் குறிப்பறிதலும், அவரைத் தம்வயத்தராக்கலும், அவர் மனங்கெகிழ்வன நாடிச் சொல்லலும் முதலியவற்றான் வருவனவும், மறுத்துழி வருவனவுமாம். 2 அவையுறாமல் வருதலாவது அவர் முன்னுணர்ந்தீக வேண்டல. 3 இரந்தவர் துன்பமுறுவரின் என்ன பாடமோதி, இரக்கப்பட்டவர் பொருளின்மை முதலியவற்றாற் றுன்புறாது எதிர்வந்து தருவாராயின் என்றுரைப்பாருமுளர். இவை யிரண்டு பாட்டானும் [illegible] [illegible] மெல்லிக்கண் இளிவில்லாவிரவு விலக்கப்படாதென்பது கூறப்பட்டது.

தெளி —(இ - ள்) ஒருவற்கு - ஒருவனுக்கு, இரத்தல்-இரத்தல்தானும், இன்பம் -இன்பத்திற்கு ஏதுவாம், இரந்தவை-இரந்தபொருள்கள், (ஈவாரது அறிவுடைமையால்) துன்பமுறா, (தான்) துன்பமுறாமல், வரின்-வருமானால், எ - று.

இன்பம்-ஆகுபெயர். உறாமலென்பது உறா எனக் கடைக்குறைந்து நின்றது. துன்பம் - ஈறுதோன்றுதசாதியொருமைப்பெயர். துன்பமாவன - ஈவாரிடத்துக் காலமும் இடமும் அறிந்துசெல்லுதலும், அவர்குறிப்பறிதலும்,

---

1 இன்பம் என்னும் காரியத்தின்பெயர் அதன்காரணத்திற்காதலால் காரியவாகுபெயர்.

2 அவை - துன்பங்கள்

3 இரந்தவை துன்பமுறாஅவரின் என்பதற்குப்பிரதியாக இரந்தவர் துன்பமுறுவரின் என்றுபாடங்கூறி, அதற்கு யாசிக்கப்பட்டவர் பொருளில்லாமை முதலானவைகளால் துன்பமடையாது எதிர்வந்துகொடுப்பாரானால் என்று பொருள் கூறுவாருமுண்டென்பது

ச. இரத்தலும் ஈதலே போலும் கரத்தல்
கனவிலும் தேற்றாதார் மாட்டு.

**பரி**—(இ-ள்) தமக்குள்ளது கரத்தலைக் கனவின்கண்ணும் அறியாரைச் சென்று இரத்தலும் வறியார்க்கு ஈதலே போலும், எ-று.

உம்மை எச்சவும்மை. 1 அவ்வாறு நின்றது. 2 தான் புகழுடையவர் தாயினும் முன்னுள்ளதாய புகழ் கெடாமையின் 'ஈதலே போலும்' என்றார். ஏகாரம் பிரிநிலை.

**தெளி**—(இ-ள்.) கரத்தல்-(தமக்கு உள்ளது) மறைத்தலை, கனவிலும்-சொப்பனத்திலும், தேற்றாதார்மாட்டு = அறியாதவரிடத்து, இரத்தலும்-(சென்று பொருளை) யாசித்தலும், ஈதலேபோலும்-(வறியவர்க்குக்) கொடுத்தலேபோலும், எ-று.

இரத்தலும் என்ற உம்மை இவ்விடத்தும் அப்படி நின்றது. தான் புகழுடையவனாகாதாயினும் முன்னுண்டாகிய புகழ்கெடும்படி வாராமையால் 'ஈதலே போலும்' என்றார். ஏ பிரிநிலை.

(க-து) தமக்குள்ளதை ஒளித்தலைச் சொப்பனத்திலும் நினையாதவரிடத்து யாசித்தலும் புகழ்கெட வாராமையால் வறியவர்க்குக் கொடுத்தலே போல்வதாம் என்பது. (ச)

ரு. கரப்பிலார் வையகத் துண்மையாற் கண்ணின்
றிரப்பவர் மேற்கொள் வது.

**பரி**—(இ-ள்) சொல்லுதல் மாட்டாது முன்னிற்றல் மாத்திரத்தால் இரப்பார் உயிரோம்பற்பொருட்டு அதனை மேற்கொண்டு போகின்றது 3 அவர்க்கு உள்ளது கரவாது கொடுப்பாரும் சிலர் உலகத்துளராய உண்மையானே, பிறிதொன்றானன்று, எ-று.

4 அவரில்லையாயின், மானம் நீக்கமாட்டாமையின் உயிர் நீப்பரென்பதாம்.

**தெளி**—(இ-ள்) கண்ணின்று-(சொல்லுதல் மாட்டாமல்) முன்னின்ற மாத்திரத்தால், இரப்பவர்-யாசிப்பவர், (உயிர்காத்தற்பொருட்டு) மேற்கொள்வது-(அவ்யாசித்தலை) மேற்கொண்டு செல்லுகின்றது, கரப்பிலார்-(அவர்க்கு உள்ளது) ஒளிக்காமற் கொடுப்பவர் (சிலர்), வையகத்து-உலகத்து, உண்மையான்-இருக்கின்றபடியினாலே, (பிறிதொன்றாலன்று) எ-று.

---

1 அவ்வாறு-இரத்தலினிழிவைவிளக்கி. 2 தான்-இரத்தல்.
3 அவர்க்கு-யாசகர்க்கு. 4 அவர்-கரப்பிலார்.

அவரியல்பையுடையாரும், மானம் விடாதாராகையால் உயிர் விடுவரென்
டதாம்.

(க-து) குறிப்பறிந்து உள்ளது ஒளிக்காது கொடுக்கவல்லார் சிலர் இருப்பதினாலேயே உயிர்விடாது மானமுடையாரும் யாசகத்தையே மேற்கொண்டிருக்கிறார்கள் என்பது. (௫)

௬. கரப்பிடும்பை யில்லாரைக் காணி னிரப்பிடும்பை
யெல்லா மொருங்கு கெடும்.

**பரி.**—(இ-ள்.) உள்ளது கரத்தலாகிய நோயில்லாரைக் கண்டால் யாசிப்பவர்க்கு நிரப்பான் வருந் துன்பங்களெல்லாஞ் சேரக் கெடும், எ-று.

கரத்தல் ஒருவர்க்கு வேண்டுவ தொன்றன்மையின் 1 அதனை நோய் என்றும், அந்நோயிலாத இரக்கத்தக்காரைக் கண்ட பொழுதே 2 அவர் கழிவுவகைய ராவராகலின் 'எல்லா மொருங்கு கெடும்' என்றுங் கூறினார். 3 இடும்பை - ஆகுபெயர். 4 முழுதுங் கெடுமென்று பாடமோதி, ஒருங்கு கெடுமென வுரைப்பாருமுளர்.

**தெளி.**—(இ-ள்.) கரப்பிடும்பை - (உள்ளதை) ஒளித்தலாகிய நோய், இல்லாரை - இல்லாதவரை, காணின் - கண்டால், (மானம் விடாதவர்க்கு) நிரப்பிடும்பையெல்லாம் - வறுமையால்வருந் துன்பங்களெல்லாம், ஒருங்குகெடும் - ஒருசேரக்கெடும், எ-று.

ஒளித்தல் ஒருவர்க்கு வேண்டுவ தொன்றல்லாமையால் அதனை நோய் என்றும், அந்நோயில்லாத யாசிக்கத்தக்கவரைக்கண்டபொழுதே அவர் மிகுமகிழ்ச்சியினராவராகலால் 'எல்லாமொருங்கு கெடும்' என்றுங் கூறினார். இடும்பை-ஆகுபெயர்.

(க-து) மானம் விடாது யாசிப்பவர்க்கு உள்ளதொளித்தலென்னும் நோயில்லாரைக்கண்டால் வறுமைத்துன்பங்களெல்லாம் முழுதுங்கெடும் என்பது. (௬)

௭. இகழ்ந்தெள்ளா தீவாரைக் காணின் மகிழ்ந்துள்ள
முள்ளு ளுவப்ப துடைத்து.

---

1 அதனை - ஒளித்தலை 2 அவர் - யாசிப்பவர்.

3 துன்பம் என்னும் பொருளதான இடும்பையென்னும் காரியப்பெயர் அதனைத்தருவதற்குக்கருவியாகிய நோய்க்காதலால் காரியவாகுபெயர்.

4 ஒருங்குகெடும் என்பதற்குப் பிரதியாக முழுதுங்கெடும் என்று பாடங்கூறி அதற்குக்குறையாமற்கெடும் என்று பொருளுரைப்பாருமுளர்.

௭0 கரப்பவர்க் கியாங்கொளிக்குங் கொல்லோ விரப்பவர்
சொல்லாடப் போஒ முயிர்.

பரி —(இ - ள்) கரப்பார் இல்லையென்று சொல்லாடிய துணையானே இரப்பார்க்கு உயிர்போகாநின்றது, இனிச்சொல்லாடுகின்ற அவர் தமக்கு உயிர் நின்றுநிற்றலான 1 அப்பொழுது 2 எப்புரையுட் புக்கொளித்துநிற்கும், எ-று.

உயிர்போகலாவது இனி யாமெனசெய்துமென்றேங்கிச் செயலற்று நிற்றல்; "3 அந்நிலையே—மாயானோ மாற்றி விடின" என்றார் பிறரும் கேட்டார்க்குக் கொலவுறுப்பச்சொற் சொல்வாரைக்கோறல் சொல்லவேண்டா வாயினும் 4 அதுகாணகின்றிலம் இஃதெனனோ வெனபதாம். 5 வறுமையுற்றுழி மறையாது இரக்கப்படுவோராய கேளிர்கட்கும் அதனைச் சொல்லாட உயிர்போம், ஆனபின மறைக்கப்படுவோராய பிறர்க்குச் சொல்லாடியக்கால் போகாதே ங்கே யொளித்துநிற்கும் இரண்டானும் போமேயன்றேவென இரவஞ்சினானொருவன் கூற்றாக்கி யுரைப்பாரு முளர் இவை மூன்றுபாட்டானும் அவ்விரவின் குற்றமும் கரவின் குற்றமும் ஒருங்கு கூறப்பட்டன

தெளி —(இ - ள்) சொல்லாட-(ஒளிப்பவர் இல்லையென்று) சொல்லிய மாத்திரத்தே, இரப்பவர்-இரப்பவர்க்கு, உயிர் போம்-உயிர் போகாநின்றது, கரப்பவர்க்கு-(இனிச்சொல்லுகின்ற) அவ்வொளிப்பவர்க்கு, (உயிர்பின்னும் இருத்தலால் அப்பொழுது) யாங்கு-எப்புரையுள், ஒளிக்குங்கொல்- புகுந்தொளித்து நிற்குமோ, எ-று

1 அப்பொழுது - இரப்பார்க்குக்கரப்பார் பொருளில்லையென்னு மக்காலத்தில

2 எப்புரையுள் - எவ்விடமேயில

3 நாலடியார் இரவச்சம், 8 இதன்பொருள் (மானந்தீராதயாசக னொருவன் பொருளுடைய ஒருவனிடத்துச் சென்று எனக்குப்பொருள் ஈவாயென்று சொல்லியாசிக்கவுடன்படுவானானால்) மாறறிவிடின்-(அப்பொருளுடையான பொருளில்லையென்றுசொல்லி) மறுத்துவிட்டால், அந்நிலையே-அப்பொழுதே, மாயானோ-(அவன்) உயிர்நீங்காமலிருப்பானோ, (இரான்) என்பது

4 அது - சொல்வாரைக் கொல்லுதல்.

5 (வறுமையுற்றவிடத்து மறையாமல் யாசிக்கப்படுவோராகிய சுற்றத்தார்களுக்கும் அவ்வறுமையை) இரப்பவர்-சொல்லாட-சொல்ல, போமுயிர்-உயிர்போம், (ஆனபின்) கரப்பவர்க்கு - மறைக்கப்படுவோராயபிறர்க்கு, யாங்கொளிக்குங்கொல் (சொல்லாடியக்கால் போகாது) எங்கே ஒளித்து நிற்கும், (சொல்லுதலிரண்டாலும் உயிர் போமேயன்றோ) என்று இரத்தலுக்கஞ்சினானொருவன் சொல்லாக்கி (இக்குறளுக்குப்பொருள்) உரைப்பாருமுண்டென்பது

உயிர்போதலாவது இரப்பவர் இனியாமென்ன செய்வோமென்று வறுமைச்செயலற்று நிற்றல். கேட்டாரைக் கொல்லவல்லதாகிய சொல் சொல்வாரைக் கொல்லுதல் சொல்லவேண்டாவாயினும் அது காண்கின்றிலம் இஃது என்னேயென்பதாம். இவை மூன்றுபாட்டானும் அவ்விரவின்குற்றமும் காரணக்குற்றமும் சேர்த்துச்சொல்லப்பட்டன.

(க - து.) தமக்குள்ளதை யொளிப்பார் இல்லை யென்ற அளவானே இரப்பார்க்கு உயிர் போகா நின்றது அவ்வாறாக அவ்வொளிப்பார்க்கு உயிர்போகாதிருத்தல் அதிசயமே யென்பது. (௰)

---

# ௧0௮ - ம். அதி.—கயமை

பரி.—அஃதாவது மேல் அரசியலுள்ளும் அங்கவியலுள்ளுஞ் சிறப்புவகையாற் கூறப்பட்ட குணங்களுள் ஏற்புடையன குறிப்பினால் யாவர்க்கு மெய்த வைத்தமையின் ஆண்டுக் குறிப்பாற் கூறியனவும் ஈண்டொழிபியலுள் வெளிப்படக் கூறியனவுமாய குணங்களை யாவுமிலராய கீழோரது தன்மை. அதனால் இஃதெல்லாவற்றிற்கும் பின் வைக்கப்பட்டது.

தெளி.—அஃதாவது முன்னே அரசியலுள்ளும் அங்கவியலுள்ளும் சிறப்புவகையாற் சொல்லப்பட்ட குணங்களுள் ஏற்புடையவைகளைக் குறிப்பினால் யாவர்க்கும் பொருந்த வைத்தமையால் அங்கே குறிப்பாற் சொல்லியவையும் இங்கே ஒழிபியலுள் வெளிப்படச் சொல்லியவையும் ஆகிய குணங்களுள் யாவுமிலராகிய கீழோரது தன்மை. அதனால் இஃது எல்லாவற்றிற்கும் பின் வைக்கப்பட்டது

க. மக்களே போல்வர் கயவ ரவரன்ன
வொப்பா ரியாங்கண்ட தில்.

பரி.—(இ - ள்.) வடிவான் முழுதும் மக்களையொப்பர் கயவர்; அவர் மக்களையொத்தாற்போன்றவொப்பு [1] வேறிரண்டு சாதிக்கண் யாங்கண்டதில்லை, எ - று.

[2] முழுதுமொத்தல் [3] தேற்றேகாரத்தாற் பெற்றாம். [4] அவரென்றது அவர்மாட்டுளதாய வொப்புமையை. மக்கட்சாதிக்கும் கயச்சாதிக்கும் வடி

---

1 வேறிரண்டு சாதிக்கண் - மக்கட்சாதி கயச்சாதி யென்னுமிரண்டு சாதியு மொழிந்த வேறிரண்டு சாதியிடத்து.

2 முழுதுமொத்தல் - மக்களும் கயவரும் வடிவால் முழுதுமொத்திருத்தல்.

3 தேற்றம் - துணிவு. 4 அவர் - கயவர்.

வேறுபடுகின்ற குணங்களது உண்மையின்மைகளானல்லது வேறுமை யறியப்படாதெனபதாம். இதனாற் கயவரது குற்றமிகுதி கூறப்பட்டது.

தேவர் —(இ - ள்) கயவர்- கீழோர், மக்களேபோல்வர்-(வடிவால் முழுதும்) மக்களைப்போலிருப்பர், அவரன்னவொப்பார் - அவர் மக்களை யொத்தாற்போன்ற வொப்பு, யாம் கண்டதில- (வேறிரண்டு சாதிகளிடத்து) யாம் கண்டிலம், எ-று.

முழுதுமொத்தல்-மக்களேஎன்னும் தேற்றேகாரத்தாற் பெறுதும். அவரெனாது அவரிடத்தே உள்ள வொப்புமையை மக்கட்சாதிக்கும் கயச்சாதிக்கும் வடிவொத்தலால் குணங்களினிருப்பினாலும், இல்லாமையாலும் அல்லது வேறுமை அறியப்படாதெனபதாம். இதனாற் கயவரது குற்றமிகுதிசொல்லப்பட்டது.

(௧ - து) மக்களுங் கயவரும் குணங்களாலன்றி வடிவால் தம்முளொப்பர் எனபது. (௧)

௨. நன்றறி வாரிற் கயவர் திருவுடையர்
நெஞ்சத் தவல மிலர்.

பரி —(இ - ள்) தமக்குறுதியாவன வறிவாரின் 1 அவையறியாத கீழ்மக்கள் நன்மையுடையர், 2 அவர்போல 3 அவைகாரணமாகத் தநெஞ்சத்திடைக் கவலை யிலராகலான், எ-று.

நன்றென்பது சாதியொருமை உறுதிகளாவன 4 இம்மை மறுமை வீடுகட்குரியவாய புகழறஞானங்கள் 5 இவற்றையறிவார் 6 இவை செய்யாதொழிந்தேம், இகச்செய்யப் பெறுகின்றிலேமென்றும், செய்கின்ற வினைதமக்கு இடையூறு வருங்கொலென்றும், 7 இவற்றின் மறுதலையாய பழிபாவமறியாமை யென்பனவற்றுள் யாதுவிளையுமோ வென்றும் இவ்வாற்றுற கவலையெய்துவர், கயவர் அப்புகழ் முதலிய வொழிதலும்பழிமுதலிய செய்யாமின்றும் யாதுங்கவலையுடையரல்லராகலான் ‘திருவுடையர்’ எனக் குறிப்பா லிகழ்ந்தவாறு. இதனாற் பழிமுதலியவற்றிற் கஞ்சாரென்பது கூறப்பட்டது.

---

1 அவை - தமக்கு உறுதியாவனவற்றை. 2 அவர்-நன்றறிவார்

3 அவை - தமக்குறுதியாவன.

4 இம்மைக்குரியது புகழ் எனவும் மறுமைக்குரியது அறமென்றும், வீட்டிற்குரியது ஞானமென்றும் கொள்க.

5 இவற்றை - புகழறஞானங்களை. 6 இவை - புகழறஞானங்கள்.

7 இவற்றின் - புகழறஞானங்களின்.

தெளி.—(இ - ள்) நன்று - (தமக்கு) உறுதியானவைகளை, அறிவாரின்- அறிவோரைக்காட்டிலும், கயவர் - (அவையறியாத) கீழ்மக்கள், திருவுடையர்- நன்மையுடையவராவர், (அப்போல அவைகாரணமாக)நெஞ்சத்து- (தமது) நெஞ்சினிடத்து, அவலமிலர்-கவலையிலர், (ஆகலால்) எ-று

நன்றென்பது-ஈறுதோன்றாத சாதியொருமைப்பெயர். உறுதிகளாவன- இம்மை மறுமை வீடுகளுக்கு உரியவாகிய புகழ்புண்ணியஞானங்கள். இவைகளையறிவோர் இவைசெய்யாவிடின் நேரே அறிவுடைதாகச் செய்யப்பெறுகின்றிலோமே என்றும், செய்கின்ற இவைகளுக்கு இடையூறுவருமோ வென்றும், இவைகளுக்கு மாறாகிய பழிபாவமறியாமை யென்பவைகளில் யாதுவிளையுமோவென்றும் இடைவிடாமலே கவலைப்படுவர். கயவர் அப்புகழ் முதலானவைகளை விட்டுப் பழிமுதலானவைகளைச் செய்யாவிடினும் ஒருகவலையு மிலராயிருப்பராதலால் 'திருவுடையார்' எனக் குறிப்பாலிகழ்ந்தபடி. இதனால் கயவர் பழிபாவ முதலானவைகளுக்கு அஞ்சாரென்பது சொல்லப்பட்டது.

(௧ - து) கீழ்மக்கள் பழிபாவங்களைத் தருங் காரியங்களை அஞ்சாது செய்தும் மனம்வருந்துதலில்லை என்பது. (உ)

௩. தேவ ரனையர் கயவ ரவருந்தாம்
மேவன செய்தொழுக லான்.

பரி.—(இ - ள்) தேவரும் கயவரும் ஒரு தன்மையர், அஃதியாதனுலெனின், தேவரைப்போன்று தம்மை நியமிப்பாரின்றிக் கயவரும் தாம்விரும்புவனவற்றைச் செய்தொழுகலான், எ-று

1 உயர்ச்சியும் இழிவுமாகிய அதன்காரணவேறுபாடு குறிப்பாற்றோன்ற நின்றமையின், இது 2 புகழ்வார்போன்று பழித்தவாறாயிற்று. இதனால் விலக்கற்பாடின்றி வேண்டிய செய்வரென்பது கூறப்பட்டது.

தெளி.—(இ - ள்) தேவரனையர்கயவர் - தேவரும் கயவரும் ஒருதன்மையராவர், (அது யாதினாலெனில்) அவரும் - அக்கயவரும், (தேவரைப்போன்று தம்மை நியமிப்பாரில்லாமையால்) தாமேவன - தாம்விரும்புமவைகளை, செய்தொழுகலான் - செய்து நடத்தலால், எ - று.

உயர்ச்சியும் இழிவுமாகிய அதனதுகாரண வேறுபாடு குறிப்பாற்றோன்ற நின்றமையால், இது புகழ்வார் போன்று பழித்தபடியாயிற்று. இதனால்

1 விரும்புவனவற்றைச் செய்யாமை உயர்ச்சிக்குக் காரணமென்றும், விலக்கப்படுதலில்லாமல் விரும்புவனவற்றைச் செய்தல் இழிவிற்குக்காரணமென்றுங் கொள்க.

2 தேவரனையர் கயவர் என்று புகழ்வார்போன்று 'மேவனசெய்தொழுகலான்' என்னும் ஏதுவினாலே கயவரைப்பழித்தாரென்க.

நடவா விலககபடடுத விலலாமல் வேணடியனவைகளைச் செய்வாரென்பது சொ
லலப்பட்டது

(க - து.) கீழ்மககள தாம்விருமபியவற்றை விருமபியவாறே செ
ய்வர் என்பது. (௩)

சு. அகபபட்டி யாவாரைக காணி னவரின
மிகபபட்டுச செம்மாக்குங கீழ

பரி —(இ - ள்) கீழாயினன தனனிற் சுருஙகிய 1 பட்டியா யொழுகுவா
ரைக் கண்டானாயின, அவவொழுக்கத்தின்கண் 2 அவரிறறான் மேம்பட்டு 3 அ
தனாற றன்மிகுதிகாட்டி யிறுமாககும், எ று

அகபபட்டி- 4 அகமாகியபட்டி 5 பட்டிபோன்று வேணடியவாறே யொ
ழுகலின் 'பட்டி' எனறார 6 "கோதககசெய்யுஞ சிறுபட்டி" என்றார் பிறரும்'
இதனால 7 அவர் மேமபடுமாறு கூறபபட்டது

தேவி.—(இ - ள்) கீழ் - கீழாயினன, அகபபட்டியாவாரை - (தன்
னிற்) குறைநதபட்டியாய் நடபபவரை, காணின - கணடானானால், (அந்நட
ககையிலே)அவரின்-அவரைக்காட்டிலும, மிகபபட்டு -(தான) மேமபட்டு,செம
மாககும - (அதனால தனமிகுதிகாட்டி) இறுமாபபான, எ - று

அகபபட்டி - அகமாகியபட்டி பட்டிபோனறு வேண்டியபடியே நடத்த
லால 'பட்டி' என்றார் இதனால் அவர்மேமபடும விதம சொலலபபட்டது

(க - து ) கீழ்மகன தன்னிற கீழாயினாரைககண்டவிடத்து அவ
ரிடத்துததனது செயகைகளைக்கூறி இறுமாப்பன் எனபது. (சு)

எ. அசசமே கீழ்கள தாசார மெச்ச
மவாவுண்டே லுண்டாஞ் சிறிது

பரி —(இ - ள் ) கயவர தாய வாசாரம் கண்டதுண்டாயின் 8 அதற்குக்
காரணம் அரசனான் ஏதம் வருமெனறஞ்ச மசசமே 9 அஃதொழிநதால, தம்

---

1 பட்டியாய - மனவடக்கமிலலாதவராய

2 அவரின் - அகப்பட்டியாயொழுகுவாரிலும

3 அதனால் - அமமேமபாட்டினால. 4 அகம - மனம்

5 பட்டி - காவலில்லாதவன் (அயோககியனென்றபடி)

6 கலித்தொகை குறிஞ்சிக்கலி, ௰௫ இதன்பொருள் கோவத்தக்க தொழிலக
ளைச்செய்யும் சிறியனாகிய காவலிலலாதவன எனபது

7 அவர் - கயவர் 8 அதறகு - அவவாசாரததிறகு

9 அஃது - அவவசசம.

யாய அவாவப்பட்டபொருள் [1] அதனானுண்டாமாயின் [2] சிறிதுண்டாம், எ - று.

[3] ஆசாரத்தின் காரணத்தை 'ஆசாரம்' என்றும், [4] அவாவப்பட்டதனை 'அவா' என்றுங் கூறினர். [5] எச்சத்தினைக்கண்ணெனனுருபேற்றதாக இறுதிக்கட்டொக்கது. பெரும்பான்மை அச்சம், சிறுபான்மை பொருட்பேறு, இவ்விரண்டானுமன்றி இயல்பாக வுண்டாகாதென்பதாம். வேண்டியசெய்தலே இயல்பு, ஆசாரஞ்செய்தல் இயல்பன்றென்பது இதனாற் கூறப்பட்டது.

தேவி —(இ - ள்) கீழ்களதாசாரம் - கீழோரது ஆசாரம், (கண்டது 'உண்டாயின் அதற்குக்காரணம்) அச்சமே - (அரசனாலே துன்பம் வருமென்று அஞ்சும்) அச்சமே, எச்சம் -(அது) ஒழிந்தால், அவா -(தம்மால்) அவாவப்பட்ட பொருள், உண்டேல் - (அதனால்) உண்டாமாகில், சிறிது-உண்டாம் - எ - று.

ஆசாரத்தின் காரணத்தை 'ஆசாரம்' என்றும், அவாவப்படும் பொருளை 'அவா' என்றும் சொல்லினார் எச்சம் என்பது ஒழிந்தால் என்னும் பொருளதாய் நின்றது கீழ்மக்களுக்கு ஆசாரம் பெரும்பான்மை அச்சம் சிறுபான்மை பொருட்பேறு என்னுமிவ்விரண்டானுமல்லாமல் இயல்பாக உண்டாகாதென்பதாம். கீழ்மக்களுக்கு வேண்டியபடி செய்தலே யியல்பு, ஆசாரஞ் செய்த லியல்பன்றென்பது இதனாற் சொல்லப்பட்டது.

(க - து) கீழ்மக்களிடத்து ஆசாரம் இயல்பாகவில்லை என்பது. (௬)

சு. அறைபறை யன்னர் கயவர்தாங் கேட்ட
மறைபிறர்க் குய்த்துரைக்க லான.

பரி —(இ - ள்) தாங்கேட்டமறைகளை இடந்தோறுந் தாங்கிக்கொண்டு சென்று பிறர்க்குச்சொல்லுதலான, கயவர் அறையப்படும் [6] பறையினையொப்பர், எ - று.

மறை - வெளிப்படிற் குற்றம் விளையுமென்று பிறரை மறைத்து ஒருவன் சொல்லிய சொல். பிறர் - அம்மறைதற்குரியார். 'உய்த்து' என்றார்,

---

1 அதனால் - அவ்வாசாரத்தால்
2 சிறிதுண்டாம் - கீழ்மக்களிடத்து ஆசாரம் சிறிதுண்டாயிருக்கும்
3 கீழ்மக்களது ஆசாரத்திற்குக்காரணமாகிய அச்சத்தை 'அச்சமேகீழ்களதாசாரம்'என்றெற்றுமைப்படுத்திக் கூறினமையினால் இது காரணம் காரியமாய உபசாரவழக்கு
4 அவா (விரும்புதல்) என்னுமுதனிலைத்தொழிற்பெயர் அதனையுடைய பொருளிற்காதலால் முதனிலைத்தொழிலாகுபெயர்.
5 எச்சம் என்பதனிறுதியில் கண் என்னும் ஏழனுருபு செய்யுள் விகாரத்தால் தொக்கு நின்றது. குறையில் என்றபொருள்படும்
6 பறை - பறையர்கொட்டும் ஒருவாத்திய விசேடம்.

1 அவர்க்கது பெரும்பாரமாதனோக்கி. பறை ஒருவன் கையாற்றன்னை ய றிந்தோனறனை இடந்தோறுங் கொண்டுசென்று யாவரையு மறிவிக்குமாக லான், 2 இது தொழிலுவமம் இதனால் அவரது 3 செறிவின்மை கூறப்பட்டது

தெளி — (இ - ள்) தாங்கேட்ட மறை - இரகசியங்களை, உய்த்து - (இடந் தோறும்) தாங்கிக்கொண்டுபோய், பிறர்க்கு — உரைக்கலான் - சொல்லுதலால், கயவர் - கீழ்மக்கள், அறைபறையன்னர் - அறையப்படும் பறையினையொப்பாவி ர், எ - று.

மறை - வெளிப்பட்டால குற்றம் விளையுமென்று பிறரைமறைத்து ஒருவன் சொல்லியசொல பிறர் - எவருக்கு மறைக்கவேண்டுமோ அவர். 'உய்த்து' என்றார், அவருக்கு அது பெரும்பாரமாதல நோக்கி, பறை ஒருவன்கையால் தன்னையறிவித்ததொன்றனை இடந்தோறுங் கொண்டுசென்று அறியாதவர் யாவரையும் அறிவிக்குமாதலால இது தொழிலுவமம் இதனால அவரது செறிவிலலாமை சொலலப்பட்டது.

(க - து.) கீழ்மக்களிடத்து ரகசியம் வெளிப்படாதிருத்தலில்லை எனபது (௬)

எ. 4 ஈர்ங்கை விதிரார் கயவர் கொடிறுடைக்குங்
கூனகைய ரல்லா தவர்க்கு

பரி.—(இ - ள்) கயவர்தங் 5 கதுப்பினை நெரிப்பதாக வளைந்த கையினையுடைய ரல்லாதார்க்குத் தாமுண்டு பூசியகையைத் தெறித்தல் வேண்டுமென்றிரந்தாலுந் தெறியார், எ - று.

---

1 அவர்க்கு (கீழ்மக்களுக்கு) அது (தாங்கேட்ட இரகசியம்) பெரும்பாரமாதல (பெரும்பளுவாயிருத்தலை) நோக்கி

2 பறை ஒருவன் கையால் தன்னையறிவித்ததொரு விஷயத்தை இடந்தோறுங்கொண்டு சென்று யாவருக்கும் அறிவித்தலபோன்று கீழ்மக்கள் தாங்கேட்ட இரகசியத்தை யுடகொண்டுசென்று பிறர்க்குச்சொல்லுதலாலே தொழிலுவமையாயிற்றென்க பறையறிவித்தல் - உவமானம், கீழ்மக்கள் சொலலுதல் உவமேயம்.

3 செறிவின்மை - அடக்கமிலலாமை

4 "தளிர்மேலே நிற்பினுந் தட்டாமற்செலலா, துளிநீரார்மாதோ கயவர் - அளிநீரார்க், கென்னானுஞ் செய்யா ரெனைத்தானுஞ் செய்பவே, இன்னாங்கு செய்வார்ப்பெறின்" என்று நாலடியார் கூறுவதும், "பெற்றாற் பிறந்தார் பெருநாட்டார் பேருலகில, உற்றா ருகந்தா ரெனவேண்டார் - மற்றோர்,இரணங்கொடுத்தா லிடுவ ரிடாரே,சரணங் கொடுத்தாலுந் தான்" என்று நலவழி கூறுவதுமிங்கறியத்தக்கனவாம்.

5 கதுப்பினை - கன்னத்தை.

பரி — (இ - ள்) பிறர் செலவத்தாற் படுந் துகிலு முடுத்தலையும் பாலோடடிசி லுண்டலையுங் கீழாயினான் காணுமாயின, 1 அவற்றைப் பொறாது 2 அவர்மாட்டு இல்லையாகவும் உண்டாகக வலலனாம், எ - று.

3 உடுப்பது, உணபதென்பன ஈண்டவவத் தொழின்மே னின்றன, 4 அவற்றால பூணடல ஊர்தனமுதலிய பிறதொழிலகளுங கொள்ளபபடும் 5 அவற்றைக கணடதுணையானே பொறாமைமெய்தலிற் ‘ காணின ’ என்றும், கேட்டார் இது கூடுமென நியையப்படைததல அரிதாகலின ‘வறறுகும’ என் றுங்கூறினார். இதனாற் பிறாசெல்வம பொறாமை கூறப்பட்டது.

தேனி — (இ - ள்) கிழ - கீழாயினோன், (பிறர்செலவத்தினால்) உடுப்ப தூஉம - (பட்டுகதகிலும்) உடுத்தலையும், உண்பதூஉம் - (பாலுடன்சோறு) உண்ணுதலையும், காணின் - கண்டானாயின, (அவைகளைபபொறாமல) பிறர்மேல்- அவரிடதது, (குற்றமில்லையாகவும்) வடுக்காண குற்றமுண்டாக்க, வற்றாகும்- வல்லவனாவன், எ-று.

உடுப்பது உண்பது என்பவை இங்கு அவ்வத்தொழிலின்மேல் நின்றன, அவைகளால ஆபரணம பூணுதல வாகனமேறல முதலாகிய பிறதொழிலகளு ம கொள்ளபபடும அவைகளைக கண்டமாததிரத்தே பொறாமைப்படுதலாலே ‘காணின்’ என்றும், கேட்டவர் இககுற்றம் அவரிடத் திருக்கலாமென்று உட னபடச்செய்தல அரிதாகலால் ‘வற்றாகும்’ என்றும் சொலலினார். இதனால் பிறர செலவம பொறாமை சொலலபபட்டது.

(க - து.) கீழ்மகனிடததுப பொறாமையே குடிகொணடிருக்கும் எனபது. (கூ)

கய0. எற்றிற் குரியர் கயவரொன் றுற்றக்கால்
விற்றற் குரியர் விரைந்து.

பரி — (இ - ள்.) கயவர் தம்மை யாதானுமொரு துன்ப முறறககால் அதுவே பற்றுக்கோடாக விரைந்து தம்மைப் பிறாககு விற்றற் குரியர், அது வன்றி வேறெதெதாழிறகுரியர், எ - று

---

1 அவற்றை - உடுத்தலையும் உணடலையும்

2 “உணடு குணமிங கொருவர்க் கெனினுங்கீழ், கொண்டு புகல்வதவர் குற்றமே” என்று நன்னெறி கூறுவதிங்கறியததககதாம.

3 உடுப்பது உண்பது என்னும் வினைமுற்றுக்கள் இங்கே உடுத்தல உணடல் என அந்தநதத் தொழிலின்மேல நினறன.

4 அவறறால - உடுத்தல உணபவைகளால்.

5 அவற்றை - உடுத்தல் முதலானவைகளை.

உணவின்மையாகப் பிறிதாக ஒன்றுவந் துற்றதுமையானென்பது தோன்ற 'ஒன்றுற்றக்கால்' என்றும், கொள்ளுகின்றாரது கயமையறிந்து வேண்டாவென்றற்குமுன்னே விற்று நிற்றலின் 'விரைந்து' என்றுங்கூறினார் ஒருதொழிற்கு முரியரல்லரென்பது குறிப்பெச்சம். இதனால் தம்மை பிறர்க்கடிமையாய் நிற்பரென்பது கூறப்பட்டது.

தெளி — (இ - ள்.) கயவர் - கீழோர், ஒன்று - (தம்மையாதாகிலும்) ஒருதுன்பம், உற்றக்கால் - அடைந்தவிடத்து, (அதுவேசார்பாக, விரைந்து விற்றற்குரியர் - (தம்மைப் பிறர்க்கு) விலைசெய்தற்கு உரியவராவர், (அதுவல்லாமல் வேறு எத்தொழிற்கு உரியவராவர், எ-று

உணவில்லாமையாகவாவது வேறாகவாவது ஒருதுன்பமவந்து உற்றமாத்திரத்தென்பது தோன்ற 'ஒன்றுற்றக்கால்' என்றும், கொள்கின்றார் தங்கீழ்மையை அறிந்து வேண்டாமென்றற்கு முன்னே விற்று நிற்றலால 'விரைந்து' என்றும் சொல்லினார். ஒருதொழிலுக்கும் உரியரல்லரென்பது குறிப்பெச்சம் இதனால் கயவர் தாம் பிறர்க்கு அடிமையாய் நிற்பரென்பது சொல்லப்பட்டது.

(க - து) கீழ்மக்கள் துன்பம் சேர்ந்தவிடத்துத தம்மைப் பிறர்க்கு விற்றற்குரியவராவரன்றி வேறெதற்கு முரியவராகார் என்பது. (ய)

ஒழிபியல் முற்றிற்று.

பொருட்பால் முற்றிறறு.



# காமத்துப்பால்.

## 1 களவியல்.

பரி — 2 இனி அப்பொருளைத் துணைக்காரணமாகவுடைத்தாய இம்மையே பயப்பதாய இன்பங் கூறுவா னெடுத்துக்கொண்டார் ஈண்டின்பமென்றது ஒருகாலத் தொருபொருளான ஐம்புலனு நுகர்தற் சிறப்புடைத்தாய காமவின்பத்தினை இச்சிறப்புப்பற்றி வடநூலுட் 3 போசராசனுஞ் 4 சுவைப

---

1 "களவு கொலை காமம் இணைவிழைச்சு என்பனவன்றே சமயத்தாரானும் உலகத்தாரானுங் கடியப்பட்டன? அவற்றுள் ஒன்றென்றாலோ இது எனின், அற்றன்று, களவெனுஞ் சொற்கேட்டுக்களவு தீதென்பதூஉங் காமமெனுஞ்சொற்கேட்டுக் காமந்தீதென்பதூஉமன்று, மற்றவை நல்லவாறு முண்டு, என்னை? ஒரு பெண்டாட்டி தமரொடு கலாய்த்து நஞ்சுண்டு சாவலென்னும் உள்ளத்தாளாய நஞ்சுகூட்டிவைத்து விலக்குவார் இல்லாதபொழுது உண்டலென்று நின்றவிடத்து அருளுடையான் ஒருவன் அதனைக்கண்டு இவள் இதனையுண்டு சாவாமைக்கொண்டுபோய் உகுத்தலென்று அவளைக்காணுமே கொண்டுபோய் உகுத்திட்டான், அவளுஞ் சனநீக்கத்துக்கண் நஞ்சுண்டு சாவான சென்றாள் அதுகாணாளாயச்சாக்காடு நீங்கினள். அவன் அக்களவினான் அவளை உய்யக்கொண்டமையான் நலனுழிச் செல்லுமென்பது. மற்றும் இதுபோல்வன களவாகா நன்மை பயக்குமென்பது" என்றார், 'சிறப்பின்றி பெயர்பெற்றது களவியலெனப்பது, என்னை? களவுகற்பு எனனும் கைக்கோள் (ஒழுக்கம்) இரண்டனுள் களவினைச்சிறப்புடைத்தெனல் வேண்டும் இவ்வாசிரியன், என்னை? 'முற்படப் புணர்ந்த சொல்லின்மையிற், கற்பெனப்படுவது களவின்வழித்தே' என்று வேண்டுதலின். கற்புக் களவுபோல ஒருதலையான அன்பிற்றன்று" என்றும இறையனாரகப் பொருளின் முதற்சூத்திரவுரையிற் கூறப்பட்டிருத்தலிற்குக் கவனிக்கத்தக்கது

2 இலக்கணவிளக்கநூலார் " இன்பமாவது பொருள் துணைக்காரணமாக ஒரு காலத்து ஒரு பொருளான் ஐம்புலன்களும நுகர்தற்சிறப்புடையதாம" என்றனர்

3 போஜராஜனென்பவன தாராநகரத்தை யாண்டவரசர்களுள் ஒருவன். இவ்வரசன் சிறுபிராயத்திலேயே தகப்பனையிழந்து, தனது சிற்றப்பனாகிய முஞ்சன செய்யவெண்ணிய கொலையினின்றுந் தப்பிச் சிமமாசனமேறி, காளிதாசன், வரருசி, பாணன், முதலிய பண்டித இரத்தினங்கள் சூழுமாறிருந்து, புலவர்களுக்கு வரையாதுகொடுத்து, பெரும்புகழ்பெற்று, வாழ்ந்து வந்தானெனபது கதை.

4 சுவையானது சிங்காரம், ஆசியம, கருணை, உருத்திரம, வீரம, பயானகம், குச்சை, அற்புதம, சாந்தம் என ஒனபது வகையாம இச்சுவைகள் மெய்ப்பாட்டினடியாகப் பிறக்கும். மெய்ப்பாடாவது புறத்துக்கண்டதோர் பொருள் காரணமாக நெஞ்சின்கட்டோன்றிய விகாரத்தின விளைவு

ட்டினர், இரசிகபட்டரறி வடநூலுள் போசராசனும் சுவைபலவென்று சொ
ல்லுவா சொல்லுமேயாம் சொல்லுவது இன்பச்சுவை யொன்றனையுமே வெ
ன்று இதனையே மிகுதியாகக் கூறினான் இவ்வின்பச்சுவை புணர்ச்சி பிரிவு
என இருவகைப்படும் மறைந்திருத்தல் இரங்கல் ஊடல் என்பனவோ வென்
றவை இவர் பொருட்பாகுபாட்டினை அறம்பொருளின்பமென வடநூல்வழக்குப்
பற்றிச் சொல்லுதலால், அப்படியே அவைகளைப்பிரிவினிடத்து அடக்கினாரெ
னறிக. இனி அவைகளையே தமிழ்நூல்களோடும் பொருந்தப் புணர்ச்சியைக்
களவென்றும் பிரிவைக் கற்பென்றும் பெரும்பான்மைபற்றி வகுத்து, அவைக்
கேற்ப சுவைமிகுதி தோன்ற உலகநடையோடு ஒத்ததும் ஒவ்வாமையு முடையன
வாகச்சொல்லுகின்றார். அக்கைகோளிரண்டனுள்ளும் களவாவது பிணி மூப்
பிறப்புகளில்லாமல் எக்காலும் ஒருதன்மையராய் உருவும், திருவும், பருவமும்

வகைப்பால் தாமே எதிர்ப்பட்டுப் புணர்ந்து வருவது. அதனை ஏழதிகாரத்தா
லே சொல்லத்தொடங்கி, முதலில் தகையணங்குறுத்தல் சொல்லுகின்றார்.

## க0கூ - ம். அதி.—தகையணங்குறுத்தல்.

பரி.—அஃதாவது, 1 பொழில்விளையாட்டு விருப்பான் ஆயம் நீங்க அதன்
கட்பிரிந்த தனியளாய நின்றாளை வேட்டவிருப்பான் இளையர் நீங்கத் தமியனாயவந்து

---

1 "ஒன்றேவேறே" என்னுஞ் சூத்திரத்தினுரையில் இலக்கண விளக்கநூ
லார் "அதுவே, தானே யவளே" எனனும இறையனாரகப்பொருட் சூத்
திரத்தினுரையை யனுசரித்து 'இக்களவொழுக்கங் கொடுப்போரும்
அடிப்போரும் இன்றித்தாமே தனியிடத்து எதிர்ப்பட்டுப் புணருங் கந்தரு
வத்தோடு ஒக்குமென்றலின் இவரும் அவ்வாறு ஓரிடத்தும் வேறிடத்துங்
காணப்புறிந்தனித்துக் காண்பரென்பதூஉம் பெற்றாம். பெறவே, இருவ
ரும் முட்டில் செல்வத்தராதலிற் றலைவனுங் கறங்குமன் கந்துகத்தேரேறிப்
போத்துங் கடுங்கணையானையுங் தறுகட் பன்றியுங் கருவரையும் இருங்கல
னும் பெருவிசும்பும் அனையார் ஆளிமொய்ம்பின் அரிமானனையபின்னர்,
பற்பன்னூறாயிரவர் கூர்வேலிளைஞர் தற்சூழவேட்டை விருப்பாற் செல
வானென்பது முடிந்தது. தலைவியும் உடன்பிறந்து உடன் வளர்ந்து நீர்
உடனாடிச் சீர் உடன்பெருகி ஓல உடனாட்டப் பால் உடனுண்டு பல உட
னெழுந்து சொல் உடன் கற்றுப் பழமையும் பயிற்சியும் பண்பும் நண
பும் விழுப்பமும் ஒழுக்கமும் மாட்சியும் உடையார் பற்பன்னூறாயிரவர்
கண்ணும் மனமுங் கவரும் ஒண்ணுதன் மகளிர் தற்சூழத்தாரகை நடுவ
ட் டண்மதிபோலப் பொழில் விளையாட்டு விருப்பாற் செல்வாளென்பது
முடிந்தது. முடியவே தனித்துக் காண்டல் முடியாதெனின் முடியும்;
என்னை? அவன் ஆயங்களும் பொழிலிடம் புகுதலும் விளையாட்டு விருப்
பினால் ஒவ்வொருவரின் முன்னந் தழைவிழைந்தன கொடுத்து மென்

தெளி.—அஃதாவது பொழிலவிளையாட்டு விருப்பால் மகளிர்கூட்டத்தை விட்டுத் தனித்து நின்றவளை வேட்டைவிருப்பால் இளையாரிங்கத் தனித்துவந்து கண்ட தலைவன் அவளழகு தனக்கு வருத்தமுண்டாக்குதலைச்சொல்லுதல் இது கண்டபொழுதே தோன்றுவதாகலால், முதலிலே சொல்லப்பட்டது.

௧. அணங்குகொ லாய்மயில் கொல்லோ கனங்குழை
மாதர்கொன் மாலுமென் னெஞ்சு.

[தலைமகளுருவு முதலியன முன்கண்டறிவனவன்றிச்சிறந்தமையின் அவளைத் தலைமகனையுறறது ]

பரி.—(இ-ள்) இக்கனவிய குழையையுடையாள் இப்பொழிற்கணுறைவாளோர் தெய்வமகளோ, அன்றி பொருமயில்விசேடமோ, அன்றியொருமானுடமாதரோ, இவளை யின்னளென்று துணியமாட்டாது என்னெஞ்சு மயங்காநின்றது, எ-று.

ஓ—அசை. ஆய்மயில—படைத்தோன விசேடமாக வாய்ந்து படைத்தமயில்; மயிறசாதியுட்டெரிந்தெடுத்த மயிலென்றுமாம் 1 கனங்குழை—ஆகுபெயர் 2 கணங்குழையென்று பாடமோதிப பலவாயத் திரண்ட குழையென்றிசிலர் எதிர்கணைஏந்தி வடிவுகொண்ட காமன்போலச் சென்று அவளநின்ற இருமபொழில்புகும், அஃது யாங்ஙனமோ வெனின், வடகடலிட்ட ஒருநுக ஒருதுளை தென்கடலிட்டஒருகழிசென்று கோத்தாறபோலவும், வெங்கதிர்க்கனலியுகதண்கதிர் மதியமுக தகைகதிவழுவித் தலைபபெய்தாறபோலவும புகுமென்க அதனால் ஒருவர் ஒருவரைத்தலைபபெய்து காண்பரென்பது 'அதுவே,தானே யவளே தமியா காணக், காமப்புணாச்சியிருவயி னொத்தல் என்றூர் ஆசிரியா இறையனுரு மெனககொள்க'' என்று கூறியதிஙகறியத்தககதாம்,

1 கனம் என்னும அடையடுத்த குழை யென்னுந தானியின் டெயர் அதறகுத் தானமாகிய பெண்ணிற் காதலால் அடையடுத்த தானியாகு பெயா குழையென்பதைப் புறத்துறுப்பாகக் கொண்டால அடையடுத்த சினையாகு பெயராம். கனங்குழையென்பது தொகைநோக்கததில் அன்மொழித்தொகையாயும் பெயாநோக்கத்தில் ஆகுபெயராயும் நின்றது, பரிமேலழகர் பெயர்நோககம்பற்றி ஆகுபெயரென்றூா. சிலப்பதிகாரம புறஞ்சேரியிறுத்தகாதையினுரையில் அடியார்க்கு நல்லார் "அருந்திறல்-இராமன் , அன்மொழித்தொகையாகுபெயர்" எனறு கூறியிருத்த லிங்கறியத்தக்கது இதுபற்றி விரிவாயறிய விரும்புவோர் "முதலிற்கூறும சினையறிகிளவியும்" எனனும தொல்காபபியச் சூததிரத்தின் சேனுவரையருரையிலும் "பொருள் முதலாறோ" என்னும இலக்கணவிளக்கச் சூத்திரத்தினுரையிலும கணடுகொள்க. இஃதறியாது பரிமேலழகரை வாளாபுறங் கூறுவாருமுண்டு,

2 கனங்குழை யென்பதனைக் கணங்குழை யென்று பாடங்கூறி, அதற்குப பலவாய்த்திரண்டகுழை யெனறு பொருள் கூறுவாருமுண்டு

றனைப்போரு முணர் எழுதவொண்ணா வருவுந் தன் வருத்தமும் பற்றி 'அணங்கு கொல்' என்றும், சாயலும் பொழிலிடை நிற்றலும் பற்றி 'ஆய்மயில்கொல்' என்றும், தன்னெஞ்சஞ் சென்றதையும் அவளெதிர்நோக்கியவாறும் பற்றி 'மாதர்கொல்' என்றுங் கூறினன்

**தெளி** — [தம்மகளது உருவமுதலானவை முனக்கண்டறிந்ததையவ ளாயல் சிறந்திருக்கையால் அடையாத் தலைவன் ஐயுற்றது] (இ - ள்) கனங்குழை - இக்கனமாகிய குழையையுடையவள், அணங்குகொல் - (இச்சோலையில வசிப்பவளாகிய) ஒரு தெய்வப்பெண்ணோ, (அல்லாமல்) ஆய்மயில்கொல் - ஒருமயில் விசேஷமோ, (அல்லாமல்) மாதர்கொல் - ஒருமானுடமாதரோ, என்னெஞ்சு - என்மனம், மாலும் - (இவள் இன்னளென்று துணியமாட்டாமல்) மயங்கா நின்றது, எ - று.

ஓ-அசை ஆய்மயில்-கடவுள் (பிரமன்) விசேஷமாக ஆராய்ந்துபடைத்த மயில, மயிற்சாதிகளுள ஆராய்ந்தெடுத்த மயிலெனினும் ஒக்கும். கனங்குழை-ஆகுபெயர், பண்புத்தொகைப்புறத்துப் பிறந்த அன்மொழித் தொகையுமாம். தெய்வப்பெண்போல எழுதலாகாத வுருவும் தன் வருத்தமும்பற்றி 'அணங்கு கொல' என்றும், மயில்போல சாயலும் பொழிலிடத்து நிற்றலும் பற்றி 'ஆய்மயில்கொல்' என்றும், தன்னெஞ்சு சென்றதையும் அவளெதிர்நோக்கிய விதமும்பற்றி 'மாதர்கொல' என்றும் சொல்லினன

(க - து.) தலைவியைத்தனித்துக் கண்ட தலைமகன் குறிப்பிட்டறியமாட்டாது மயங்கினன் என்பது. (க)

## ௨. நோக்கினா ளேக்கெதிர் நோக்குத லக்கணங்கு தானைக்கொண் டன்ன துடைத்து.

[மானுடமாதராதல் தெளிந்த தலைமகன் அவணோக்கினுடைய வருத்தங் கூறியது]

**பரி.**—(இ - ள்) இப்பெற்றித்தாய வனப்பினையுடையாள் என்னோக்கிற கெதிர்நோக்குதல் தானே தாக்கிவருத்துவதோரணங்கு தாக்குதற்குத் தானையுங் கொண்டுவந்தாற்போலுந் தன்மையையுடைத்து, எ - று.

மேலும் 'அணங்குகொ லாய்மயில்கொல்' என்றமையான், 1 இகரச்சுட்டு வருவிக்கப்பட்டது, 'எதிர்நோக்குதல்' என்றமையின, அது குறிப்பு நோக்காயிற்று. வனப்பால் வருத்துதன்மேலுங் குறிப்புநோக்கால் வருத்துதல் கூறியவாறு. நோக்கினா ளென்பதற்கு என்னை நோக்கப்பட்டாளென் றுரைப்பாருமுளர்.

**தெளி.**—[மானுடமாதராதலைத் தெளிந்தறிந்த தலைவன் அவள்பார்வையாலாகிய வருத்தஞ் சொல்லியது] (இ-ள்) நோக்கினாள்-(இப்படிப்பட்ட) அழகினை

1 இகரச்சுட்டுச் சமீபத்திலுள்ள பொருளைக் குறித்துக்காட்டும்.

மடவரல், நோக்கு - (என)பார்வைக்கு, எதிர் நோக்குதல் - எதிரே பார்த்தல், தாக்கணங்கு - (தானே)தாக்கி வருத்துவதோரு தெய்வப்பெண், தானைக்கொண்டன்னது - தாக்குதற்குச் சேனையையுங் கொண்டுவந்தாற்போலுந் தன்மையை, உடைத்து - உடையதா, எ - று

முன்பாட்டில் 'அணங்குகொல் ஆய்மயில்கொல்' என்றமையால் இக்குறட்பாவில் கூறவிக்கப்பட்டது 'எதிர்நோக்குதல்' என்றமையால் அது குறிப்பு நோக்காம்: இறு தலைக்கண் அழகால் வருத்துதலேயன்றிக் குறிப்புப்பார்வை, யால் வருத்துதல் சொல்லிவிட்டது. நோக்கினாள் என்பதற்கு என்னால் பார்க்கப் பட்டாள் என்றுரை கூறுவாரு முண்டு.

(க - து) காலநிலந்தோய்தல் கண்ணிமைத்தல் முதலிய குறிகளால் மானுடப்பெண்ணென்றறிந்த தலைமகன் அவளது குறிப்புப்பார்வையால் வருந்தினான் என்பது. (௨)

௩. பண்டறியேன் கூற்றென் பதனை யினியறிந்தேன்
பெண்டகையாற் பேரமர்க் கட்டு

[இதுவுமது.]

பரி —(இ - ள) கூற்றென்று நூலோர் சொல்வதனைப் பண்டுகேட்டறிவதல்லது கண்டறியேன், இப்பொழுது கண்டறிந்தேன், அது பெண்டகையுடனே பெரியவாய அமர்த்த கண்களை யுடைத்து, எ - று

பெண்டகை-1 நாணம், மடம், அச்சம், பயிர்ப்பென்னுங்குணங்கள் அவை அடைக்குறிகளா னறியப்பட்டன. அமர்த்தல் - அமர்செய்தல், 2 பெயரடியாப் பிறந்த வினை. பெண்டகையால் இன்பம் பயத்தலு முண்டேனும் துன்பம் பயத்தல் நோக்கிக் கூற்றாக்கிக் கூறினான்.

தெளி —[இதுவுமது] (இ - ள) கூற்றென்பதனை - கூற்றுவனென்று (நூலோர்)சொல்லுவதை, பண்டறியேன் - முன் (கேட்டறிவதல்லாமல்) கண்

1 இறையனாரகப்பொரு ளிரண்டாஞ்சூத்திரத்தி னுரையில் "தலைமகட்கு நாணம், மடம், அச்சம், பயிர்ப்பென்பனகுணம் அவற்றுள், நாணென்பது பெண்டிர்க்கு இயல்பாக வுளதோருதன்மை மடமென்பது கொளுத்தக்கொண்டு கொண்டது விடாமை அச்சமென்பது பெண்மையிற்றான் காணப்படாததோர் பொருள் கண்டவிடத்து அஞ்சுவது பயிர்ப்பென்பது பயிலாத பொருட்கண் அருவருத்து நிற்கும் நிலைமை" என்று கூறப்பட்டிருத்தல் இங்குக்கவனிக்கத்தக்கது.

2 அமர்த்தல் என்பது அமர் என்னும் பெயரடியாகப்பிறந்த செயற்கைவினை. வினையடியாகப்பிறந்த வினைச்சொல் இயற்கைவினையென்றும், பெயர், இடை, உரி அடியாகப்பிறந்த வினைச்சொல் செயற்கை வினையென்றும் சொல்லப்படும்.

இன்பமுந் துன்பமும் ஒருங்கு செய்யாநின்ற தென்பதாம் தொழில்ப ற்றிவந்த 1 ஐயநிலையுவமம்.

தேவி—(இதுவுமது) (இ - ள்.) கூற்றமோ - (என்னைவருத்துதலு டைமையால்) கூற்றமோ, கண்ணோ - (என்மேலோடுதலுடைமையால்) கண் ணோ, பிணையோ - (இயல்பாக அஞ்சுதலுடைமையால்) பெண்மானோ, (அறிகின்றிலேன்); மடவரனோக்கம் - இம்மாது (கண்களின்) பார்வையா னது, இம்மூன்றும் - இம்மூன்றன் தன்மைகளையும், உடைத்து - உடைத் தாயிருக்கின்றது, எ-று.

நோக்கம் இன்பமுந் துன்பமும் ஒருசேரச் செய்யாநின்ற தென்பதாம். வருத்தல் முதலியதொழில்பற்றிவந்த ஐயநிலையுவமம்.

(க - து) இன்பமுந் துன்பமுஞ் செய்தல்பற்றித் தலைவியின் கண்களைக் கூற்றமோ, கண்ணோ, பிணையோ வென்றையப்பட்டுக் கூறி னான் என்பது (௫)

௬. கொடும்புருவங் கோடா மறைப்பி னடுங்கஞர்
செய்யல மன்னிவள் கண்.

[இதுவுமது]

பரி—(இ - ள்) பிரியாநட்பாய கொடும்புருவங்கள் தாஞ்செப்பமுடைய வாய் விலக்கினவாயின் 2 அவற்றைக் கடந்து இவள் கண்கள் எனக்கு நடுங்கு ந்துயரைச் செய்யமாட்டா, எ-று.

நட்டாரைக் கழறுவார்க்குத் தாஞ் செம்மையுடையராதல் வேண்டலிற் 'கோடா' என்றும், செய்கின்ற அவற்றிற்கும் உறுகின்ற தனக்கும் இடை நின் று விலக்குங்காலுஞ் சிறிதிடைபெறின் 3 அதுவழியாக வந்து அஞர் செய்யுமா கலின் 'மறைப்பின' என்றுங் கூறினான். நடுங்கஞர் - நடுங்குதற்கேதுவாய 4 அ ஞர். 5 தாமியல்பாகக் கோடுதலுடைமையான 6 அவற்றை 7 மிகுதிக்கண் மேற்சென்றிடிக்கமாட்டாவாயின வென்பதுபட நின்றமையின், மன்ஒழியிசை வந்தது.

தேவி—(இ -ள்) கொடும்புருவம் - (பிரியா நட்பாகிய) கொடியபுருவங் கள், கோடாமறைப்பின் - (தாம்) செவ்வையாயிருந்து விலக்கினால், (அவைக

1 உவமானவுவமேயங்களை ஐயப்பட்டுரைப்பது ஐயநிலையுவமானம். (ஐயம் சந்தேகம்.)

2 அவற்றை - புருவங்களை. 3 அதுவழியாக - சிறிதிடைபெறுதல்வாயிலாக

4 அஞர் - துன்பம் 5 தாம் - புருவங்களாகியதாம்.

6 அவற்றை - கண்களை.

7 மிகுதிக்கண்மேற்சென்றிடித்தல் - தகாதசெய்கையுண்டான விடத்து முற் பட்டுக்கண்டித்துப் புத்திசொல்லுதல்

பெண்டன்மை- பெருமையுடைகண்டு இவளவு வலிமையுடையவை இனி எங்ஙனு முடையுமென்று நினைத்துப 'படாமுலை' என்றான் உவமானம் சிறிதும் சுரப்பாமலிடாது இடமுலைகள் கொல்லுமென்பதுதோன்ற நின்றது

(க - து) இவள் தனங்கள் ஆடையால் மறைக்கப்படாவிடத்து என்னை அவசியங்கொல்லுமென்று கூறினன் என்பது. (எ)

அ. 1 ஒண்ணுதற் கோஒ வுடைந்ததே ஞாட்பினு
ணண்ணாரு முட்குமென் பீடு.

[நுதலினுப வருத்தங் கூறியது]

பரி.—(இ - ள்) போர்க்களத்துவந்துநேராத பகைவரும், நேர்ந்தாரி யகுகேட்டஞ்சுதற் கேதுவாய எனவலி இம்மாதர தொள்ளிய நுதலொன் றற்குமே அழிந்துவிட்டது, எ-று

மாதரென்பது அதிகாரத்தான் வந்தது ஞாட்பினுள் என்றதனாற் பகை வராதல் பெற்றாம் பீடென்றபொதுமையான் மனவலியுங் காயவலியுங் கொள்க 2 ஓவென்னும் வியப்பினகட் குறிப்பு 3 அவ்வலிகளது பெருமையும் நுதலது சிறுமையுந் தோன்ற நின்றது. 4 கழிந்ததற் கிரங்கலிற் 5 றற்புகழ்ந் தன்றாயிற்று

தேளி —[நெற்றியாலாகிய வருத்தஞ்சொல்லியது] (இ - ள்.) ஞாட்பினுள்-போர்க்களத்து, நண்ணாரும்-(வந்து)எதிர்த்திலாதபகைவரும், உட்கும் - (எதிர்த்தவராயசெய்தியைக்கேட்டு) அஞ்சுதற்குக்காரணமாகிய, என்பீடு - எனவலி, ஒண்ணுதற்கே - (இம்மாதருடைய) ஒளிபொருந்திய நெற்றி யொன்றற்குமே, உடைந்தது- அழிந்துவிட்டது, எ-று

மாதரென்பது அதிகாரத்தால் வந்தது ஞாட்பினுள் என்பதனால நண்ணாரும் என்பது பகைவராதல் பெற்றாம் பீடென்ற பொதுமையால் மனவலியும் காயவலியும் கொள்க ஓ வென்னும் வியப்பினிடத்துக்குறிப்பு அவ்வலிகளின் பெருமையும் நெற்றியின்சிறுமையும் தோன்ற நின்றது. கழிந்ததற்கிரங்கலால் தற்புகழ்ச்சி யன்றாயிற்று

(க - து) எனனுடைய வலிமையானது இவளது நெற்றியொன்றற்குமே அழிந்துவிட்டதென்று கூறினன் என்பது (அ)

---

1 " கோம்பிறகொதுங்கியேயாமஞ்ஞைகுஞ்சரங்கோளிழைக்கும், பாம்பைப்பிடித்துப்படங்கிழித்தாங்கப்பணைமுலைக்கே, தேம்பற்றுடியிடைமானமடநோக்கிதில்லைச்சிவன்று, ளாம்பொற்றடமலர்சூடுமென்னாற்றலகற்றியதே" என்று திருக்கோவையார் கூறுவதிங்கறியத்தக்கதாம்.

2 ஓ என்பது வியப்புப் பொருளில்வந்த குறிப்பிடைச்சொல,

3 அவ்வலிகளது - மனவலி காயவலிகளது

4 கழிந்ததற்கிரங்கலில் - கழிந்தொழிந்த தனது வலியை யெண்ணிவருந்துதலால

5 தற்புகழ்தல - ஒருவன் தன்னைத்தானே மேம்படுத்திப் பேசுதல

௲. பிணையேர் மடநோக்கு நாணு முடையாட்
கணியெவனோ வேதில தந்து.

[அணிகலந்தாங்கிய வருந்தக் கூறியது.]

**பரி**—(இ - ள்.) புறத்தாற் பிணையொத்த மடநோக்கினையும் அகத்தால் நாணினையுமுடையளாய இவட்கு ஒப்புடைய இவ்வணிகளே யமைந்திருக்க வேற்றுமையுடைய அணிகளைப் படைத்தணிதல் என்னபயனுடைத்து, எ-று.

மடநோக்கு - 1 வெருவுதலுடையநோக்கு. இவட்குப் பாரமாதலும் எனக்கணங்காதலுங் கருதாமையின், அணிந்தார் அறிவிலரென்பதாம்.

**தெளி**—[அணிகலத்திருந்தாங்கிய வருந்தம் சொல்லியது] (இ - ள்.) பிணையேர்- (புறத்தில்) பெண்மானையொத்த, மடநோக்கும் - அஞ்சுதலுடைய பார்வையையும், நாணும் - (அகத்தில்) நாணினையும், உடையாட்கு - உடையவளாய இவளுக்கு, (ஒப்புடைய பார்வையும் நாணமும் ஆகிய இவ்வணிகளேபோதுமானவையாயிருக்க) ஏதிலதந்து - வேற்றுமையுடைய அணிகளையுண்டாக்கி, அணி - அணிதல், எவன - என்னபயனுடைத்து, எ - று.

ஓ - அசை. இவ்வேற்றுமையுடைய அணிகள் இவளுக்குப் பாரமாதலும் எனக்குவருத்தமாதலும் எண்ணாமையால், அவைகளை அணிந்தார் அறிவிலா ரென்பதாம்.

(க - து.) இவட்குப்பார்வையும் நாணமும் ஆபரணங்களாயிருக்க வேறு ஆபரணங்களை அணிவது அறியாமையாமென்று கூறினன் என்பது. (௯)

௲0 உண்டார்க ணல்ல தடுநறாக் காமம்போற்
கண்டார் மகிழ்செய்த லின்று.

[தலைமகள் குறிப்பறிதலுற்றான் சொல்லியது]

**பரி.**—(இ - ள்.) அடப்படும் 2 நறா தன்னையுண்டார்மாட்டு மகிழ்ச்சியைச் செய்வதல்லது காமம்போலக் கண்டாமாட்டு மகிழ்ச்சியைச்செய்தலுடைத் தன்று, எ - று.

3 அடுநறா-வெளிப்படை 4 காமமென்றது நாண்டு அது நுகர்தற்கிடனுமி யாரை 5 கண்டார்கணென்னு மேழாவது இறுதிக்கட்டொக்கது. மகிழ்

---

1 வெருவுதல் - அஞ்சுதல், 2 நறா - கள்.

3 அடுநறா - சாராயம்.

4 காமம் என்னும் தானியின் பெயர் அது நுகர்தற்குத் தானமாகிய மகளிர்க்காதலால் தானியாகு பெயர்.

5 கண்டார் என்பதன் இறுதியில் கண்ணென்னும் ஏழனுருபு தொக்கு நின்றது.

செய்தாக்கட் காமம் நறவினுஞ் சிறந்ததேயெனினும் இவள் குறிப்பாராய்ந்த றியாமையின் யா [1] னது பெறறிலேனெனக் குறிப்பெச்சம் வருவித்துரைக்க [2] "அரிமயிர்த்திரண்முனகை" என்னும் புறப்பாட்டிற் குறிப்புப்போல

தேவி —[தலைவியினது குறிப்பறியலுற்ற தலைவன் சொல்லியது] (இ-ள்.) அமிழ்து-காய்ச்சப்பட்ட மதுவானது, உண்டாரகணல்லது- (தன்னை) உண்டவ ரிடத்தே மகிழ்ச்சியைச் செய்வதல்லாமல், காமம்போல-காமத்தைப்போல, க ண்டார் - கண்டவரிடத்தே, மகிழ்செய்தல்- மகிழ்ச்சியைச்செய்தல், இன்று-உ டைத்தன்று, எ - று

காமமென்றது இதைக்குஅக்காமத்தை அனுபவித்தற்கு இடமாகியமகளி ரை. மகிழ்செய்தலிலே காமமானது மதுவினும் சிறந்ததேயெனினும் இவள் குறிப்பை ஆராய்ந்தறியாமையால் யான் அதுபெறறிலேனெனக் குறிப்பெச் சம் வருவித்துரைத்துக்கொள்க.

(க - து.) தலைமகள் குறிப்பறிந்த தலைமகன் மகிழ்ச்சிசெய்வதில் கள்ளினுங் காமஞ் சிறந்ததென்றான் என்பது (ம)

## கக0- - ம். அதி.—குறிப்பறிதல்.

பரி.— அஃதாவது தலைமகன் தலைமகள் [3] குறிப்பினை யறிதலும், தோழி குறிப்பினை யறிதலும், [4] அவடான் அவ்விருவர் குறிப்பினையு மறிதலுமா ம். தகையணங்குறுத்த தலைமகன் றலைமகளைக் கூடுங்கால் [5] இது வேண்டுமாக லின், தகையணங்குறுத்தலின்பின் வைக்கப்பட்டது.

தேவி,—அஃதாவது தலைவன் தலைவிகுறிப்பை அறிதலும், தோழிகுறி ப்பை அறிதலும், அத்தோழி அவ்விருவர் குறிப்பையும் அறிதலுமாம். தலை வியினழகைக் கண்டு வருந்திய தலைவன் தலைவியைக் கூடும்போது இது வே ண்டுதலால், தகையணங்குறுத்தலின்பின் வைக்கப்பட்டது.

1 அது - மகிழ்ச்சி,

2 புறநானூறு 11 இதன்பொருள் அழகியமயிரையுடைய திரண்டமுன்கை என்பது.'அரிமயிர்த்திரண்முன்கை' என்னும் பாட்டின் விசேடவுரையில் "பாடினிஇழைபெற்றாள், பாணன்பூப்பெற்றான், யான் அது பெறுகின் றிலேன்'' எனக்குறிப்பெச்சம் வருவித்துரைக்கப்பட்டிருக்கிறது.

3 குறிப்பு - கருத்து. 4 அவடான் - தோழி

5 இது - குறிப்பறிதல்,

(க - து.) தலைவியினகருத்தினையறிந்த தலைமகன இவள்பார் வையானது நோய்செய்தற்கும் அந்நோயைத் தீர்த்தற்கும் ஏதுவாயிருக் கின்றதென்றான் என்பது (க)

உ. கணைகளவு கொள்ளுஞ் சிறுநோக்கங் காமத்திற்
செம்பாக மன்று பெரிது.

[இதுவுமது]

பரி —(இ - ள) இவள்கண்கள் யான்காணாமல் என்மே னோக்குகின்ற அருகிய நோக்கம் 1 மெய்யுறு புணர்ச்சியின் ஒத்த பாதியளவன்று, 2 அதனி னும்மிகும், எ - று

தானோக்கியவழி நாணியிறைஞ்சியும் நோக்காவழி உற்றுநோக்கியும் வருத லான் 'களவுகொள்ளும்' என்றும், 3 அஃதுளதாகுங்காலஞ்சிறிதாகலிற் 'சிறு நோக்கம்' என்றும், அஃது உள்ளப்புணர்ச்சிவழி நிகழ்வதாகலின இனிப்புணர்தல் ஒருதலையென்டான 'செம்பாகமன்று பெரிது' என்றுங் கூறினான்.

தெளி —[இதுவுமது] (இ - ள்) கணை-(இவளது) கணகள், களவுகொ ள்ளுஞ்சிறுநோக்கம் - நானகாணாமல என்மேலநோக்குகின்ற சிறியபார்வை, காமத்தில் - மெய்யுறுபுணர்ச்சியில், செம்பாகமன்று - ஒத்தபாதியளவன்று, பெரிது - (அதனினும்) மிகும், எ-று

தான்பார்த்தபோது நாணித் தலைகுனிந்தும் பாராவிடத்தே உற்றுப்பார் த்தும் வருதலாலே 'களவு கொள்ளும' என்றும, அஃது உண்டாங்காலம் சிறிதாகலால 'சிறுநோக்கம்' என்றும, அப்பார்வை உட்கருத்து உள்ளவிட த்தே உண்டாவதாகலால இனி இவளைக்கூடுதல் நிச்சயமென்பான் 'செம்பாக மன்று பெரிது' என்றும சொல்லினன.

(க - து.) இவளது அருகிய நோக்கம அளவு கடந்த மகிழ்ச்சி யைச் செய்கிறதென்று கூறினன என்பது. (உ)

---

1 மெய்யுறுபுணர்ச்சி - மெய் (உடம்பு) தொட்டுப்புணரும்புணர்ச்சி உள்ளப் புணர்ச்சியென்றேன் நிருக்கையால் அதனினும வேறுமைதோன்ற புணர்ச்சி யென்றுகூறாமல் (மெய்யுறுஎன்னும்) விசேடணந்தந்து மெய் யுறுபுணர்ச்சி என்று கூறப்பட்டது. "உள்ளப் புணர்ச்சியு மெய்யுறு பு ணர்ச்சியுங், கள்ளப் புணர்ச்சியுட் காதலற் குரிய" என்று அகப்பொருள்வி ளக்கங் கூறுவதினகறியத்தக்கதாம்

2 அதனினும் - மெய்யுறுபுணர்ச்சியிலும்.

3 அஃது - களவு கொள்ளுதல்

மெல்ல—வெளிப்படாமல் மகிழ்ச்சியிற் புணர்ந்தகுறிப்பினிது விள ங்க - மெல்லநகு மென்பதற்கு [1] முறுவலிக்குமென வுரைப்பாருமுளர்.

தேவி —[மேலவன் தலைவியின்குறிப்பை நாணினாலும் மகிழ்ச்சியாலும் அறிந்தது] (இ - ள்) யானோக்குங்காலை - (நானவளை) நான் பார்க்கும்போது, நிலனோக்கும் - (நானெதிர்ப்பாராமல் நாணித் தலைகுனிந்து) நிலத்தைப்பார்க் கின்றாள், நோக்காக்கால் - (அதனையறிந்து நான்) பாராதபோது, தா னோக்கி - தான் (என்னைப்) பார்த்து, மெல்லநகும் - (தன்னுள்ளே) மகிழாநி ன்றாள், எ-று.

மெல்ல நகுதல் - வெளிப்படாமல் மகிழ்தல் அம்ம ணர்ந்த குறிப்பு இனிது விளங்கும்

(க - து.) இவளையான் பார்க்கும்போது நிலத்தைப்பார்த்தும் பாராதபோது என்னைப்பார்த்து மெல்லநகுதலுமானாளென்று கூறினான் என்பது. (௪)

௫. குறிக்கொண்டு நோக்காமை யல்லா லொருகண்
சிறக்கணித்தாள் போல நகும்.

[இதுவுமது]

பரி —(இ - ள்) நேரே குறிக்கொண்டு நோக்காத துணையல்லது ஒரு கண்ணைச் சிறக்கணித்தாள்போல என்னை நோக்கிப் பின் றன்னுள்ளே மகி ழா நிற்கும், எ-று.

சிறக்கணித்தா ளென்பது செய்யுள் விகாரம் சிறக்கணித்தல் - சுருங்கு தல் [2] அது தானும் வெளிப்பட நிகழாமையிற் 'போல' என்றான். நோக்கி யென்பது சொல்லெச்சம் இனி இவளை யெய்துதல் ஒருதலை யென்பது குறிப்பெச்சம்.

தேவி —[இதுவுமது] (இ - ள்) குறிக்கொண்டு - (நேரே) குறிக்கொ ண்டு, நோக்காமையல்லால் - பாராமைமாத்திரமேயல்லது, ஒருகண்-ஒருக ண்ணை, சிறக்கணித்தாள்போல-சுருங்கினவள்போல, நகும் - (என்னைப்பார்த் தபின் தன்னுள்ளே) மகிழாநின்றாள், எ-று

சிறக்கணித்தாளென்பது செய்யுள்விகாரத்தினால் சிறக்கணித்தாளென்றா யிற்று சிறக்கணித்தல் - சுருங்குதல் அதுவும் வெளிப்படத் தோன்றாமையால் 'போல' என்றான் பார்த்தென்பது சொல்லெச்சம், இனி இவளை அடைவது நிச்சயமென்பது குறிப்பெச்சம்

(க - து.) இவள் நேரே யென்னைப்பாராது கீழ்ப்பார்வையாற் பா ர்த்து மகிழ்கின்றாளென்று கூறினான் என்பது.

---

[1] முறுவலிக்கும் - புன்னகைசெய்வாள் [2] அதுதானும் - சுருங்குதலும்.

௬. உறாஅ தவர்போற் சொலினுஞ் செறாஅர்சொ
லொல்லை யுணரப் படும்.

[தோழி 1 சேட்படுத்தவழி அவள்குறிப்பறிந்த தலைமகன் தன்னுள்ளே சொல்லியது]

**பரி** —(இ - ள்) புறத்து நொதுமலர்போலக் கடுஞ்சொற் சொன்னாரேனும், அகத்துச் செறுதலிலாதார்சொற் பிற்பயத்தல் குறையுற்றாராற் கடிதினறியப்படும், எ-று.

கடுஞ்சொலென்றது இவ்விடக் காவன் மிகுதியுடைத்து வரற்பாலிரல்லிரெனறன் 2 முதலாயின. செறாரெனவே, அருளுடைமை பெறப்பட்டது. தனகுறை முடிக்கக் கருதியே சேட்படுத்தமை குறிப்பானறிந்து, உலகியன்மேல்வைத்துக் கூறியவாறு. இது வருகின்ற பாட்டிறகு மொக்கும்.

**தெளி** —[தோழி தூரப்படுத்தியவிடத்தே அவளது குறிப்பை அறிந்த தலைவன் தன்னுள்ளே சொல்லியது] (இ - ள்.) உறாதவர்போல் - (புறத்திலே) அயலார்போல, சொலினும் - (கடுஞ்சொல்) சொன்னாராலும், செறார் சொல் - (உள்ளே) பகையாதவர்சொல், (பின்பிரயோசனபடுதல்) ஒல்லையுணரப்படும் - (குறையிரந்தவராலே) கடிதில் அறியப்படும், எ-று

கடுஞ்சொலென்பது இவ்விடம் மிகுந்தகாவலையுடையது வாராதேயுமென்று சொல்லுதல முதலானவை. செறாரெனவே, அருளுடைமை பெறப்பட்டது. தனகுறைமுடிக்கவெண்ணியே தூரப்படுத்தலைக் குறிப்பால அறிந்து, உலகியலின்மேல்வைத்துச் சொல்லியபடி. இது வருகின்றபாட்டிறகும் ஒக்கும்.

(க - து.) தோழிசேட்படுத்திய விடத்துத் தலைமகன அன்புடையார் கடுஞ்சொறகூறினும் அச்சொல் நன்மையை யுண்டாக்குமென்று கூறினன் என்பது. (௬)

---

1 சேட்படுத்தலென்பது பாங்கியிற் கூட்டம் பன்னிரண்டனுள் ஒன்று திருக்கோவையாருரையில் "சேட்படை யென்பது தலைமகனைக்குறையயப்பித்துத் தன்னிலைய கூட்டங் கூடலுறாகதோழிதலைமகளது பெருமையையும் தனது முயற்சிப்பருமையும் தோன்றுதல் காரணமாகவும், இத்துணையருமையுடையாள் இனி எமக்கெய்துதற் கருமையுடையளென இதுவே புணர்ச்சியாக நீடியாது விரையவரைந்துகோடல் (கலியாணஞ் செய்துகொள்ளல்) காரணமாகவும், தலைமகனுக்கியைய மறுத்துக்கூறி நீற்றல்" என்று கூறப்பட்டிருக்கிறது

2 முதலாயின என்றதனால் பாங்கிகுலமுறைகிளத்தல் முதலாயினவெல்லாங் கொள்க. (பாங்கியிற் கூட்டத்தில் தலைமகன் சொல்லுவனயாவும் இரந்து பின்னிற்றற்கும் பாங்கிசொல்லுவனயாவும் சேட்படுத்தற்கும் உரியனவாமென்றுணர்க.)

எ. செறாஅச 1 சிறுசொல்லுஞ் செற்றார்போ னோக்கு
முறாஅர்போன றுற்றார் குறிப்பு.

[இதுவுமது]

பரி — (இ - ள்.) பின்னினிதாய் முன்னின்னாதாய சொல்லும் அகத்துச் செறாதிருந்தே புறத்துச செற்றார்போன்ற வெகுளிநோக்கும நொதுமலர் போன்று நட்பாயினார்க்கு ஒரு குறிப்புப்பற்றி வருவன, எ-று.

குறிப்பு 2 ஆகுபெயர் 3 இவை உள்ளே யொருபயன் குறித்துச்செய்கின்றன இடலடல்லவாகலான், இவற்றிற கஞ்சவேண்டா வெனபதாம்.

தேனி — [இதுவுமது] (இ - ள்) செறாச்சிறுசொலலும் - (பின் இனிதாவதாய முனனே) இன்னாதாகியசொல்லும், செற்றார்போனோக்கும - (உள்ளே பகைபடாதிருந்தே புறத்தே) பகைத்தவர்போனற கோபபபார்வையும், உறார் போன்றுற்றார் - அயலோர்போலிருந்து நட்பாயினவர்க்கு, குறிப்பு - ஒருகுறிப்பு ப்பற்றிவருவனவாம, எ-று.

குறிப்பு - ஆகுபெயர் இவை உள்ளே ஒருபயன குறித்துச்செய்கின்றவை இடல்பலலவாகலால, இவைகளுககு அஞ்சவேண்டா மென்பதாம்.

(க - து.) அன்புடையாரிடத்து ஒருகுறிப்புபபற்றிக் கடுஞ்சொல்லும் கோபபபார்வையுமுண்டாமென்று கூறினன் எனபது. (எ)

அ. அசையியற் குணடாண்டோ ரேஎர்யா னோக்கப்
பசையினள பைய நகும்.

[தன்னை நோக்கி மகிழ்ந்த தலைமகளைக்கண்டு தலைமகன் கூறியது.]

பரி — (இ - ள்) என்னையகற்றுகின்ற சொற்காற்றுதியானிரந்து நோக்கிடவழி 4 அஃதறிந்து நெகிழ்ந்து உளளே மெலல நகாநின்றாள், அதனால் நுடங்கிய வியலபினையுடையாட்கு அந்நகையின்கண்ணே தோனறுகின்ற தோர் நனமைக் குறிப்புண்டு, எ-று.

ஏர் - 5 ஆகுபெயர். 6 அககுறிப்பு இனிபபழுதாகா தென்பதாம்.

---

1 சிறுசொல - கடுஞ்சொல.

2 குறிப்புபபற்றி வருவனவற்றைக் குறிபபு என்றது கருவியாகுபெயர்.

3 இவை - செறாசசிறுசொலலும் செற்றாரபோல் நோககும

4 அஃது -

5 ஏர் (அழகு) என்னும் தானியின்பெயர் அதற்குத் தானமாகிய நனமைக்கு ப்பிறகாதலால தானியாகுபெயர்

6 அககுறிபபு - அந்நகையினிடததே தோன்றுகின்ற நன்மைக்குறிபபு.

தெளி.—(தன்னை நோக்கி மகிழ்ச்சியடைந்த தலைவியைக்கண்டு தலைவன் சொல்லியது.) (இ-ள்.) யானோக்க - (என்னை நோக்குகின்ற சொல்லுக்குப் பொருளுடன்) யான் (இரங்கி) நோக்கியவிடத்து, பசையினள் - (அதுகண்டு இரங்கினவளாகி, பையநகும் - (உள்ளே) மெல்ல நகாநின்றாள், (அதனால்) அசையியற்கு - அசைந்த சாயலையுடையவளுக்கு, ஆண்டு - அந்நகையினிடத்து, ஓர் ஏஎர் (தோன்றுகின்ற) ஒரு நன்மைக்குறிப்பு, உண்டு - உளது, எ-று.

ஏஎர் - ஆகுபெயர். *அக்குறிப்பு இனி முடிவாகுமென்பதாம்.

(க-து) தோழிசேட்படுத்துவதன்பொருட்டு வருந்துகின்ற வென்னைக்கண்டு அவள் நகைத்தலால் இதனைக்கண் ஓர் நன்மைக்குறிப்புண்டென்று கூறினன் என்பது. (அ)

௯. ஏதிலார் போலப் பொதுநோக்கு நோக்குதல்
காதலார் கண்ணே யுள.

[தோழி மதியுடம்படுவாள் தன்னுள்ளே சொல்லியது.]

**பரி.**—(இ-ள்) முன்னறியாதார்போல ஒருவரை யொருவர் பொது நோக்கத்தால் நோக்குதல் இக்காதலையுடையார்கண்ணே யுளவாகாநின்றன, எ-று.

பொதுநோக்கு-யாவர்மாட்டும் ஒரு தன்மைத்தாய நோக்கு. நோக்குதற்றொழில் ஒன்றேயாயினும் இருவர்கண்ணும் நிகழ்தலானும், ஒருவர்கட்டானுங் குறிப்பு வேறுபாட்டாற் பலவாகலானும் 'உள' எனப் பன்மையாற் கூறப்பட்டது. 1 இருவரும் மதுமறைந்துண்டோர் மகிழ்ச்சிபோல உள்ளத்துள்ளே மகிழ்தலின் அதுபற்றிக் 'காதலார்' என்றும், 2 அது புறத்து வெளிப்படாமையின் 'ஏதிலார்போல' என்றுங் கூறினான்.

**தெளி.**—[தோழிமதியுடன்படவுணர்ந்து தன்னுள்ளே சொல்லியது.] (இ-ள்.) ஏதிலார்போல - முன்னறியாதவர்போல, பொதுநோக்கு நோக்குதல் - (ஒருவரை ஒருவர்) பொதுப்பார்வையாற்பார்த்தல், காதலார்கண்ணே - இவ்வாசையையுடையவரிடத்தே, உள - உண்டாகாநின்றன, எ-று.

பொதுநோக்கு - யாவரிடத்தும் ஒருதன்மையதாகிய பார்வை. பார்த்தற்றொழில் ஒன்றேயாயினும் இருவரிடத்தும் உண்டாதலாலும், ஒருவரிடத்திலேயும் குறிப்புவேறுபாட்டாற் பலவாதலாலும் 'உள' என்பன்மையாலே சொல்லப்பட்டது. இருவரும் மதுமறைந்துண்டோர் மகிழ்ச்சிபோல் உள்ளத்துள்ளே மகிழ்தலால் அதுபற்றிக் 'காதலார்' என்றும், அதுபுறத்து வெளிப்படாமையால் 'ஏதிலார்போல' என்றுஞ் சொன்னான்.

---

1 இருவரும் - தலைவனும் தலைவியும்  2 அது - மகிழ்ச்சி

(க - து) தோழி இக்காதலையுடையவரிடத்துப் போதுநோக்குள வாகாநின்றனவென்று கூறினள் என்பது. (௯)

௧0 கண்ணொடு கண்ணிணை நோக்கொக்கின் வாய்ச்சொற்க ளென்ன பயனு மில.

புமது ]

பரி —(இ - ள்.) காமத்திறகுரிய விருவருள் ஒருவர் கண்களோடு ஒருவர் கண்கள் நோக்கா லொக்குமாயின், அவர் வாய்மைதோன்றச் சொல்லுகின்ற வாய்ச்சொற்கள் ஒருபயனு முடையவல்ல, எ-று.

நோக்காலொத்தல் - காதன்மிக்கனவாதல் வாய்ச்சொற்கள்—மனத்தின் கணின்றி வாயளவிற்றோன்றுகின்ற சொற்கள் இருவர் சொல்லுங் கேட்டு உலகியன்மேல் வைத்துக் கூறியவாறு இருவர்சொல்லுமாவன - அவள் புனங்காவன்மேலும் அவன் வேட்டத்தின்மேலுஞ் சொல்லுவன பயனில் சொற்களாகலின், இவை கொள்ளப்பட்டா வென்பதாம் இவை [1] புணர்தனிமித்தம்.

தெளி —(இதுவுமது) (இ - ள்) (காமத்திறகுரிய விருவருள்) கண்ணொடு - (ஒருவரது) கண்களோடு, கண்ணிணை-(ஒருவரது) கண்கள், நோக்கொக்கின் - பார்வையால் ஒக்குமாயின், வாய்ச்சொற்கள (உண்மைதோன்றச் சொல்லுகின்ற) வாய்ச்சொற்கள், என்னபயனும்-ஒருபயனும், இல - உடையனவல்ல, எ-று

பார்வையாலொத்தல - ஆசைப்பார்வை யுடையனவாதல வாய்ச்சொற்கள்-மனத்தினிடத்திலலாமல வாயளவிலே தோன்றுகின்ற சொற்கள் இருவர்சொல்லுங்கேட்டு உலகியலின்மேல்வைத்துச் சொல்லியபடி இருவர் சொல்லுமாவன - அவள் புனங்காவலின்மேலும் அவன வேட்டத்தின மேலும் சொல்லுவன, பயனில் சொற்களாகையால, இச்சொற்கள் கொள்ளப்பட்டா வென்பதாம் இவை புணர்தல நிமித்தம.

(க - து) தோழி நோக்கம் ஒத்தவிடத்துப் பேச்சாற்பயனில்லை யென்று கூறினள் என்பது. (௰)

1 "புணர்தல பிரிதல" என்னும (தொல்காப்பியச்) சூத்திரத்தின விசேடவுரையில நச்சினார்க்கினியார் "தலைவன்தோழியைக் குறையுறும்பகுதியும் ஆண்டுத்தோழி கூறுவனவும, குறை நேர்தலும, மறுத்தலு முதலியனபுணர்ச்சி நிமித்தம" என்றுகூறியதிறை கறியத்தக்கதாம்

## ௧௧௧.-ம். அதி.—புணர்ச்சிமகிழ்தல்.

பரி.—அஃதாவது அவனைக் குறிப்பறிந்து புணர்ந்த தலைமகன் அப்புணர்ச்சியினை மகிழ்ந்து கூறல். அதிகாரமுறைமையும் இதனானே விளங்கும்.

தெளி.—அஃதாவது அப்படிக் குறிப்பறிந்து புணர்ந்த தலைவன் அப்புணர்ச்சியை மகிழ்ந்து சொல்லுதல். அதிகாரமுறைமையும் இதனாலே விளங்கும்.

௧. 1 கண்டுகேட் டுண்டுயிர்த் துற்றறியு மைம்புலனும்
ஒண்டொடி கண்ணே யுள.

[2 இயற்கைப் புணர்ச்சி யிறுதிக்கட் சொல்லியது.]

பரி.—(இ-ள்.) கண்ணாற் கண்டும் செவியாற் கேட்டும் நாவாலுண்டும் மூக்கான் மோந்தும் மெய்யாற் றீண்டியும் அனுபவிக்கப்படும் 3 ஐம்புலனும் இவ்வொள்ளிய தொடியை யுடையாள்கண்ணே யுளவாயின, எ-று.

4 உம்மை முற்றும்மை. 5 தேற்றேகாரம் வேறிடத்தின்மை விளக்கிநின்றது. வேறுவேறு காலங்களில் வேறுவேறு பொருள்களா னனுபவிக்கப்படுவன ஒருகாலத்து இவள்கண்ணே யனுபவிக்கப்பட்டன வென்பதாம். வடநூலார் 6 இடக்கர்ப் பொருளவாகச் சொல்லிய 7 புணர்ச்சித் தொழில்களும் ஈண்டு அடக்கிக் கூறப்பட்டன.

---

1 "கண்டுகேட்டுற்றுமோந்துண்டுழலுமைங்கருவி, கண்டவின்பந்தெரிவரிய அளவில்லாச்சிற்றின்பம், ஒண்டொடியாடிருமகளுநீயுமே நிலாநிற்பக், கண்டசதிர்கண்டொழிந்தேனடைந்தேனுன்றிருவடியே" என்று திருவாய்மொழி கூறுகின்றது.

2 "இயற்கைப்புணர்ச்சியென்பது பொருளதிகாரத்திற் கூறப்பட்ட தலைமகனும் தலைமகளும் அவ்வொருவருடொழிலின்றித் தெய்வப்படுத்த தெய்வமிடைநிற்பப் பிறப்பட்டாண்மை (விதி) வழிபோய் ஓராவிற் (பசுவின்) இருகோடு (கொம்பு) தோன்றினாற்போலத் தம்முளொத்த அன்பினராய அவ்விருவரோ தாந்தம்முட்டாமே கூடுங் கூட்டம்" என்று திருக்கோவையாருரையிற் கூறப்பட்டுளது.

3 ஐம்புலனும் - சப்தாதி ஐந்துவிஷயங்களும்.

4 ஐம்புலனும் என்றவும்மை இனைத்தென்றறிபொருளில் வந்த முற்றும்மை.

5 ஒண்டொடிகண்ணே என்ற தேற்றேகாரம் ஐந்திந்திரியங்களாலும் ஐந்துவிஷயங்களை (வேறுவேறுகாலங்களிலல்லாமல்) ஒருகாலத்திலனுபவித்தல் இவளிடத்தன்றி வேறிடத்திலில்லை யென்பதை விளக்கிநின்றது.

6 இடக்கர்ப்பொருளவாக - மறைத்த சொல்லின் பொருளினவாக.

7 புணர்ச்சித்தொழில்கள் - பயோதரங்களை வருடல், ஆடையை நெகிழ்த்தெறிதல், இறுகத்தழுவல், இதழ் சுவைத்தல் முதலியவைகளாம். இவற்றின் பாகுபாட்டை மதனநூலிற்கண்டுகொள்க.

தெளி.—(தலைமகன் இயற்கைப்புணர்ச்சி முடிவிலே சொல்லியது (இ-ள்) கண்டு - (கண்ணாலே) கண்டும், கேட்டு - (செவியாலே) கேட்டும், உண்டு-(நாவாலே) உண்டும், உயிர்த்து - (மூக்காலே) மோந்தும், உற்று -(மெய்யாலே) தீண்டியும், அறியும - அனுபவிக்கப்படுகிற, ஐம்புலனும்-ஐந்துவிஷயங்களும், ஒண்டொடிகண்ணே - இவ்வொளி பொருந்திய வளையலை யுடையவளிடத்தே, உள - உளவாயின, எ-று.

உம்மை -முற்றும்மை தேற்றேகாரம் வேறிடத்தில்லாமையை விளக்கி னது வெவ்வேறு காலங்களிலே வெவ்வேறு பொருள்களாலே அனுபவிக் கப்படுகிற விஷயங்கள் ஒருகாலத்தே இவளிடத்தே என்றால் அனுபவிக்கப்ப ட்டன வென்பதாம் வடநூலார் இடக்கர்ப்பொருளினவாகக் கூறிய புணர்ச் சித்தொழில்களும் இவ்விடத்தடங்கிச் சொல்லப்பட்டன.

(க - து) தலைமகன புணர்ச்சிமுடிவில் இவள் பஞ்சேந்திரியங்க ளுக்கும விஷயமாயிருக்கிறாளென்று கூறினன என்பது. (க)

உ. பிணிக்கு மருந்து பிறம னணியிழை
தன்னோய்க்குத் தானே மருந்து.

(1 இடந்தலைப்பாட்டின்கட் சொல்லியது.)

பரி.—(இ - ள்.) வாத முதலிய பிணிகட்கு மருநதாவன அவற்றி றகு 2 நிதானமாயினவன்றி மாறாயவியல்பினை யுடையனவாம், அவ்வாறன்றி இவ்வணியிழையினையுடையாள் தன்னிலுயபிணிககு மருந்துந் தானேயாயினா ள், எ று

இயறகைப் புணர்ச்சியை நினைந்து முன்வருந்தினானாகலின் 'தன்னோய்' என்றும், அவவருத்தந் தமியாளை யிடத்தெதிரப்பட்டுத் தீர்ந்தானாகலின் 'தானே மருந்து' என்றுங் கூறினான் 3 இபபிணியும் எளியவாயவற்றாற நீரபபெற்றில வெனட துபட நினறமையின், மன ஒழியின ... ...

தெளி.—(தலைமகன் இடந்தலைப்பாட்டிலே சொலலியது) (இ - ள்) பிணிககு - (வாத முதலாகிய) பிணிகளுக்கு, மருந்து - மருநதாவன, பிற -(அவைகளுக்கு நிதானமானவையல்லாமல்) விரோதமாகிய குணத்தையுடைய வையாம, (அப்படி யல்லாமல்) அணியிழை - இவவணியிழையினையுடையவள், தன்னோய்க்கு - தன்னாலாகிய பிணிககு, மருந்து - மருந்தும், தானே - தானே யாயினாள், எ - று

1 இடந்தலைபபாடாவது இயற்கைப்புணர்ச்சி புணர்ந்ததலைமகன் மற்றைத் தினத்தில புணர்ந்தவவ்விடத்திலேவந்து தலைமகளைக் கூடுதல்.
2 நிதானம் - சமம்.
3 இடபிணியும் - தலைவியினாலாய நோயும்

இயற்கைப் புணர்ச்சியை நீங்கியது முன வருந்தினனாகலின் 'நனவினால்' என்றும், அவ்வருத்தம் தணிந்தமைந்து பின்னை தலைவியை முன் கூடிய இடத்தே சென்று எதிர்ப்பட்டு நிற்றற்கு ஏதுவாகிய 'நானே மருந்து' என்றும் சொல்லின் இடம்பெறாப் பொருள்களால் நீடு பெற்றில மென்று நின்றமையால், பன்னிரு ஒழிபியவிலை வந்தது

(க - து.) தானுற்ற காமநோய்க்குத் தானேமருந்துமாயிருக்கின்றாளென்று கூறினன் என்பது (உ)

௩. தாம்வீழ்வார் மென்றோட் டுயிலி னினிதுகொல்
றாமரைக் கண்ணா னுலகு

[பேரின்பத்திற்குரியர் இச்சிற்றின்பத்திற்கின்னையாதல் தகாதென்ற பாங்கற்குச் சொல்லியது.]

**பரி.**— (இ - ள்) ஐம்புலன்களையு நுகர்வார்க்குத் தாம விரும்பு மகளிர் மெல்லியதோள்களிடைத் துயிலுந் துயில்போல வருந்தாமையுடைத்தாமோ 1 அவற்றைத்துறந்த யோகிகளெய்துதற்குரிய 2 செங்கணமாலுலகம், எ-று.

3 ஐம்புலன்களையு நுகர்வோரென்னுஞ் செய்யா வாய்பாட்டான் வந்தது. இடம்பெறாத் துயிலொடு ஒத்த தவயோகங்களான் வருந்தவேண்டுதலின் அம்மையினாக காணாதென்னுங் கருத்தால் 'இனிதுகொல்' என்றான் 4 இந்திரனுலகென்றுரைப்பாருமுளர். தாமரைக்கண்ணானென்பது 5 அவனுக்குப் பொருந்தாமையின், அஃதுரையன்மை யறிக.

**தெளி** — (பேரின்பத்திற்குரியர் இச்சிற்றின்பத்துக்கு இடப்படுதல் தகாதென்ற பாங்கனுக்குத் தலைவன் சொல்லியது) (இ - ள்) (ஐம்புலன்களையும் அனுபவிப்பவர்க்கு) தாமவீழ்வார் - தாமவிரும்பு மகளிரது, மென்றோள் - மெல்லிய தோள்களிடத்து, துயிலின் - (துயிலுந்) துயில்போல, தா

---

1 அவற்றை - சத்தாதியைம்புலன்களையுமனுபவித்தலை

2 செங்கணமாலுலகம்-செந்தாமரைமலர்போலுங் கண்களையுடைய விஷ்ணுமூர்த்தியினது வைகுண்டம்.

"தூஉய்மையென்பது அவாவின்மை" என்னுங் குறளின் விசேடவுரையில் "வீடாவது உயிர் அவிச்சை முதலிய மாசு நீங்குதலாதலின்" என்று கூறியிருத்தலிங்குக் கவனிக்கத்தக்கதாம்.

3 துயிலின் என்பது வேண்டி நின்றவாலே ஐம்புலன்களையும் நுகர்வார்க்கு என்பது வருவிக்கப்பட்டது.

4 தாமரைக்கண்ணானுலகு என்பதற்கு இந்திரனுலகென்று பொருள் கூறுவாருமுண்டு.

5 அவனுக்கு - இந்திரனுக்கு

இ. 1 வேட்ட பொழுதி னவையவை போலுமே
தோட்டார் கதுப்பினா டோள.

(2 தோழியிற்கூட்டத் திறுதிக்கட் சொல்லியது)

பரி —(இ - ள்) மிகவினியவாய பொருள்களைப் பெறாது அவற்றின்மே ல் விருப்பமுற்ற பொழுதின்கண் அவையவை தாமேவந்து இன்பஞ்செய்யுமா றுபோல இன்பஞ்செய்யும், எப்பொழுதும் பெறாப் புணரினும் பூவிற்கணி ந்த தழைத்த கூந்தலினையுடையா டோள்கள், எ - று.

தோடு—ஆகுபெயர். இயற்கைப்புணர்ச்சி, இடந்தலைப்பாடு, பாங்கற் கூட்டத்துக்கண் முன்னரே நிகழ்ந்திருக்கப் பின்னரும் புதியவாய் நெஞ்சம் பிணித்தலின், அவ் 3 ஆரமைபற்றி இவ்வாறு கூறினான். 4 தொழிலுவமம்

தெளி —(தலைவன் பாங்கியிற் கூட்டமுடிவிலே சொல்லியது) (இ - ள்) (எப்பொழுதும் பெறாப்புணர்ந்தாலும்)தோடு-மலரினை,(யணிந்த) ஆர்-தழை ந்த,கதுப்பினாள்-கூந்தலையுடையவளது,தோள்-தோட்கள், வேட்டபொழுதின- (மிகவும் இனியவாட்பொருள்களைப்பெறாமல் அவைகளின்மேல்) விருப்பமிருந்த பொழுதில், அவையவைபோலுமே-அவ்வப்பொருள்கள் தாமேவந்து இன்பஞ் செய்யும்விதம்போல இன்பஞ்செய்யும், எ - று

தோடு (இதழ்) என்னுஞ் சினைப்பெயர் மலருக்கு ஆகுதலால் சினையா குபெயர். இயற்கைப்புணர்ச்சி, இடந்தலைப்பாடு, பாங்கற்கூட்டத்திற்கு மு ன்னமே அத்தோள்கள் அனுபவிக்கப்பட்டிருக்கப் பின்னும் புதியவையாயிரு ந்து நெஞ்சம் பிணித்தலால், அவ்வாரமைபற்றி இப்படி சொல்லினான். இது தொழிலுவமையணி.

(க-து.) இவள் தோள்கள் புணருந்தோறும் புதிதாயிருக்கின்றன ன் என்பது.

1 "உணர்ந்தார்க் குணர்வரியோன்றில்லைச் சிற்றம்பலத்தொருவன், குணந்தா ன் வெளிப்பட்ட கொவ்வைச் செவ்வாயிக் கொடியிடைதோள், புணர்ந் தாற் புணருந்தொறும் பெரும்போகம் பின்னும் புதிதாய், மணந்தாழ்புரி குழலாளல்குல்போல வளர்கின்றதே" என்று திருக்கோவையார் கூறுவ தின்கொப்பிட்டறியத்தக்கதாம்.

2 தோழியிற் கூட்டமாவது தலைமகளைத் தோழி (பாங்கி) கூட்டுவிக்கத் தலைமகன் கூடுங் கூட்டம்.

3 ஆராமை-திருப்திக் குணியாமை

4 வேட்டபொழுதின் அவையவைதாமே வந்து இன்பம்செய்யும்தொழிலைத் தோட்டார் கதுப்பினாள் தோள் இன்பஞ்செய்தலுக்கு உவமானமாகக்கூ றியதினாலே இது தொழிலுவமமாயிற்றென்க.

௬. உறுதோ றுயிர்தளிர்ப்பத் தீண்டலாற் பேதைக்
கமிழ்தி னியன்றன தோள்.

(இ-தவுரை)

பரி.—(இ-ள்) தன்னைப்பெறாது வாடிய என்னுயிர் பெற்றுறுந்தோறுந் தளிர்க்கும்வகை தீண்டுதலான், இப்பேதைக்குத்தோள்கள் தீண்டப்படுவதோரமிழ்தினாற் செய்யப்பட்டன, எ - று.

1 ஏதுவாகலாற் றீண்டல் அமிழ்திற்கு மெய்திற்று. வாடிய வுயிரைத் தளிர்ப்பித்தல்பற்றி, அவை 'அமிழ்தி னியன்றன' என்றான். தளிர்த்தல்-இன்பத்தாற் றழைத்தல்.

தெளி —(இதவுரை) (இ - ள்) உயிர் - (தன்னைப்பெறாதுவாடிய என்) னுயிர், உறுதோறு - (பெற்று) உறுந்தோறும், தளிர்ப்ப - தளிர்க்கும்படி, தீண்டலால்-தீண்டுதலால், பேதைக்கு - இம்மங்கைக்கு, தோள் - தோள்கள், அமிழ்தினியன்றன-(தீண்டப்படுவதோர்) அமிழ்தினாலே செய்யப்பட்டன, எ-று.

ஏதுவாகலால் தீண்டல் அமிழ்திற்கும் பொருந்தியது. வாடிய உயிரைத் தளிர்ப்பித்தல்பற்றி, அத்தோள்களை 'அமிழ்தினியன்றன' என்றான் தளிர்த்தல் - இன்பத்தாலே தழைத்தல்

(க - து) இவள்தோள்கள் புணருந்தோறும் என்னுயி ரின்பத்தாற் றழைக்குமாறு செய்கின்றன வென்றான் என்பது. (௬)

எ. தம்மி லிருந்து தமதுபாத் துண்டற்றா
லம்மா வரிவை முயக்கு.

(இவனை நீவரைந்துகொண்டு உலகோர் தம் 2 மிலிருந்து தமது 3 பாத்துண்ணு மில்லறத்தோடு படவேண்டுமென்ற தோழிக்குச் சொல்லியது)

பரி.—(இ - ள்) அழகிய மாமை நிறத்தையுடைய அரிவையது முயக்கம் இன்பம் பயத்தற்கட் டமக்குரிய வில்லின்கணிருந்து உலகோர்தந்தாளான் வந்

1 உயிர்தளிர்ப்பதற்குத் தீண்டுதல் ஏதுவா (காரணமா) யிருத்தலாலே அத்தீண்டுதல் அமிழ்திற்கும் பொருந்தியதெனக் தோள்கள் தீண்டும்போது அத்தோள்கள் செய்வதற்குக்காரணமா யிருந்த அமிழ்தமும் தீண்டப்படுதலாலே 'தோள்கள் தீண்டப்படுவதோரமிழ்தினாற் செய்யப்பட்டன' என்று கூறப்பட்டது.

2 இல் - வீடு.

3 பாத்து - ஆதிலொருபங்கு இதனைத் "தென்புலத்தார் தெய்வம" என்னும் குறளினுரையிற் காண்க

தேளி.—[இடைந்த அன்புடைய உயர்ந்த ஒருபோதும் விடாத புணர்ச்சியே இனிமைத்தென விவாகஞ்செய்துகொள்ளென்றுவிளங்கிய தோழிக்குத்தலைமகன் சொல்லியது] (இ-ள்) (ரீ செய்வதுகின்றது ஒக்குட) வளியிடை போழப்படா ஒருபோதும் நெகிழாமையால் காற்றால் இடையறுக்கப்படாத, முயக்கு-புணர்ச்சியானது, வீழுமிருவர்க்கு - ஒருவரை ஒருவர் விரும்புவாரிருவர்க்கும், இனிதே - இனிதேயாம்.

முற்றும்மை விகாரத்தாற்றொக்கது. ஏகாரம் தேற்றத்தின்கண் வந்தது இக்கு இருவரீயல்பு, இயல்லாமையால் இஃது ஒவ்வாதென்பது கருத்து களவுப் புணர்ச்சியை மகிழ்ந்து விவாகத்துக்கு உடன்படாதவன் சொல்லிப்படி.

(க - து) வேற்றுமையுடையவிருவர்க்கே வளியிடைபோழப்படாத புணர்ச்சியினிதாகு மென்றுரை என்பது. (அ)

௯ ஊடலுணர்தல் புணர்தல் இவைகாமங்
கூடியார் பெற்ற பயன்.

[காதல் வேண்டாமையின இடையறவில்லாக்கூட்டமே இன்பமுடைத்தென வரைவுகடாவியாட்குச் சொல்லியது]

பரி.—(இ - ள்.) புணர்ச்சி யினிதாதற்பொருட்டு வேண்டுவதாய ஊடலும் அதனையளவறிந்து நீக்குதலும் அதனால் நிகழ்வதாய உடபுணர்ச்சியுமென விவையன்றே வரைந்துகொண்டு காமத்தையிடைவிடாதெய்தியவர் பெற்ற பயன்கள், எ-று

ஊடவர்க்குப் பிரிவெனப்தொன் றுளதாதனரேதும் அதுதான் 1 பரத்தையாரட்டாதலும் அதனையறிந்து மகளிர் 2 ஊடிநிற்றலும் அவ்வூடலைத் தவறு செய்தவர் தாமே தந்தவறினைக்கூறி நீக்கலும் பின்னுமவ்விருவரும் ஒத்த வன்பினராய்க் கூடலுமன்றே முன்வரைந்தெய்தினர் பெற்றபயன், அப்பயன 3 இருதலைப்புள்ளி னொருயிராய 4 உழுவலன்புடைய வெமக்கு வேண்டாவென அவ்வரைந்தெய்தலை யிகழ்ந்து கூறியவாறு.

தேளி.—[மறைத்தல்வேண்டாமையால் நடுவே நீக்குதலில்லாத புணர்ச்சியே இன்பப்பயனுடையதென விவாகஞ்செய்துகொளவென்றுவிளங்கிய தோழிக்குத்தலைமகன சொல்லியது] (இ-ள்) ஊடல்-(புணர்ச்சி இனிதாதற்பொருட்டு வேண்டுவதாய) ஊடலும், உணர்தல்-(அதனை அளவறிந்து நீக்குதலும், புணர்தல்-(அதனபின உண்டாவதாய) அப்புணர்ச்சியும், (என) இவை-இவையவை, காமங்கூடியார் (விவாகஞ்செய்துகொண்டு) காமத்தை இடைவிடாதடைந்தவர், பெற்றபயன் - பெற்றபயனகள், எ று.

---

1 பரத்தையர் - பொதுமகளிர். 2 ஊடி- பிணங்கி
3 இருதலைப்புள் - இருதலைப்பட்சி 4 உழுவலன்பு - முழுவன்பு

ஆடவர்க்குப் பிரிவென்பதொன்று உண்டாதல்மேலும் அதுதான் பரத்தையரிடத்ததாதலும் அதனை அறிந்து மகளிர் ஊடிநிற்றலும் அவ்வூடலைத் தணிசெய்தவாறாமே நகுதலில்லாமையைச்சொல்லி நீக்கலும் பின்னும் அவ்விருவரும் ஒத்தவன்பினராய்க் கூடலுமல்லவா முன் விவாகஞ்செய்துகொண்டு அடைந்தவர் பெறற்பயன், அப்பயன் இருதலைப்புள்ளினோருயிராகிய மாறுவன்புடைய எமக்குவேண்டாவென அவ்விவாகஞ்செய்துகொண்டின்பமடைதலை இகழ்ந்துசொல்லியபடி

(க-து) விவாகஞ்செய்துகொண்டு காமத்தை யிடைவிடாதடைந்தவர் பெற்ற பிரயோஜனங்கள பிணங்கலும் அதுதீர்தலும் அப்பாற் புணர்தலுமாமென்று கூறினார் என்பது. (௯)

௧௦ அறிதோ றறியாமை கண்டற்றாற் காமஞ்
செறிதோறுஞ் சேயிழை மாட்டு.

[புணர்ந்[1]துடன்போகின்றான் றனதுள்ளே சொல்லியது]

**பரி.**—(இ-ள்.) நூல்களானும் நுண்ணுணர்வானும் பொருள்களை யறிய வறிய முன்னையறியாமை கண்டாற்போலக் காணப்படாநின்றது சிவந்த இழையினையுடையாளை இடைவிடாது செறியச்செறிய இவள்மாட்டுக் காதல், எ-று

களவொழுக்கத்திற் பல [2]இடையீடுகளா னெய்தப்பெறாது அவாவுற்றான் இதுபொழுது [3]நிரந்தரமாக வெய்தப்பெற்றமையின் 'செறிதோறும்' என்றான். அறிவிற் கெல்லையின்மையான் மேன்மேலறியவறிய முன்னையறிவு அறியாமையாய் முடியுமாறுபோலச் செறிவிற் கெல்லையின்றி மேன்மேற் செறியச்செறிய முன்னைச்செறிவு செறியாமையாய் முடியாநின்றதெனத் தன்னாராமை கூறியவாறு. இப்புணர்ச்சிமகிழ்தல் தலைமகட்கு முன்பேனும் அவண்மாட்டுக் குறிப்பானிகழ்வதல்லது கூற்றா னிகழாமையறிக.

**தெளி.**—[தலைவியைப்புணர்ந்து உடன்கொண்டுபோகின்ற தலைவன் தன்னுள்ளேசொல்லியது] சேயிழையாள்மாட்டு - சிவந்தவாபரணத்தையுடையாளை, (இடைவிடாமல்) செறிதோறும் - புணரப்புணர, (இவளிடத்து) காமம் - காதல், அறிதோறும் - (நூல்களாலும் நுட்பவறிவாலும் பொருள்களை) அறியவறிய, அறியாமை - (முன்னை)யறியாமை, கண்டற்று - கண்டாற்போலக் காணப்படாநின்றது, எ-று.

1 உடன்போக்காவது தலைமகன் தலைமகளைப்பாங்கியினுரைப்படி இரகசியமாயழைத்துக்கொண்டு தன்னூருக்குச்செல்லுதல்.

2 இடையீடுகள் - தடைகள்.

3 நிரந்தரமாக - எப்பொழுதுமாக

க0. அனிச்சமு மன்னத்தின் றூவியு மாத
ரடிக்கு நெருஞ்சிப் பழம்.

(1 உடன்போக்கு நேர்ந்த தோழிக்கு 2 அதனருமை கூறி மறுத்தது.)

பரி.—(இ-ள்) உலகத்தாரான் மென்மைக்கெடுக்கப்பட்ட அனிச்சப்பூவும் அன்னப்புள்ளின் சிறகுமாகிய விரண்டும் மாதரடிக்கு நெருஞ்சிப்பழம் போல வருத்தஞ்செய்யும், எ-று.

3 முள் வலிதாத லுடைமையிற் பழம் என்றான். இத்தனைத்தாயவடி 4 பாத்தியன்ன குடுமிக் கூர்ங்கற்களையுடைய வெஞ்சுரத்தை யாங்ஙனம் கடக்குமென்பது குறிப்பாற் பெறப்பட்டது. 5 செம்பொருளேயன்றிக் குறிப்புப் பொருளும் அடிகல னழிபாமையாகலின், 6 இதுவு மிவ்வதிகாரத்த தாயிற்று.

தெளி.—(உடன்போக்குச் சொன்ன தோழிக்குத் தலைவன் அதனது அருமையைச் சொல்லி மறுத்தது) இ-ள்) (உலகத்தாரால் மென்மைக்கு எடுக்கப்பட்ட) அனிச்சமும்-அனிச்சமலரும், அன்னத்தின்றூவியும் - அன்னப் பறவையின் சிறகும், (ஆகிய இரண்டும்) மாதரடிக்கு - மாதின் பாதத்திற்கு, நெருஞ்சிப்பழம் - நெருஞ்சிப்பழம்போல் வருத்தஞ்செய்யும், எ-று.

முள்வலிதாதலுடைமையால் பழம் என்றான். இப்படிப்பட்ட அடிகள் பாத்தியிட்டாற் போன்று முனைகூரிய கற்களையுடைய வெட்டமுள்ள பாலைநிலவழியை எப்படி கடப்பாளென்பது குறிப்பாலே பெறப்பட்டது. செம்பொருளேயன்றிக் குறிப்புப்பொருளும் அடிகல னழிபாமையாகலின், இதுவும் இவ்வதிகாரத்ததாயிற்று.

(க-து.) தலைவியின் பாதத்தின் மேன்மைச்சிறப்பை உவமான வாயிலாக வியந்துகூறினன் என்பது. (ம)

1 உடன்போக்கு - தலைவன் தன்னூர்க்குத் தலைவியையுடன் கொண்டுபோதல்.
2 அதனருமை - உடன்போக்கினருமை.
3 நெருஞ்சிப்பழத்தின்முள் வலிதாத (கடினமாத) லுடைமையால் நெருஞ்சிமுள் என்று கூறாது நெருஞ்சிப்பழம் என்று கூறப்பட்டது.
4 அகநானூறு, களிற்றியானைநிரை, ரு இதன்பொருள் பாத்தியிட்டாற்போன்ற உச்சியினையுடைய கூரியகல் என்பது.
5 "இத்தனைத்தாயவடி . யாங்ஙனம் கடக்கும்" என்பதுவரை குறிப்புப்பொருள். மற்றது செம்பொருள். குறிப்புப்பொருள் நேராற்றலாலன்றிக் குறிப்பாற் பெறப்படும் பொருள். நேராற்றல்-இச்சொல்லாலிப்பொருளையறிக என்னுஞ் சங்கேதம் (இச்சை). செம்பொருள் செஞ்சொல்லாற் பெறப்படும்பொருள். செஞ்சொல்-வெளிப்படைச்சொல்.
6 இதுவும் - இக்குறளும்.

## ௧௧௩-ம். அதி.—காதற்சிறப்புரைத்தல்.

பரி.—அஃதாவது தலைமகன் தன்காதன் மிகுதிகூறுதலும், தலைமகள் தன் காதன் மிகுதிகூறுதலுமாம். இது புணர்ச்சியுட் கலவியைப்பற்றி நிகழ்வதாகலின், புணர்ச்சி மகிழ்தல் நலம்புனைந்துரைத்தல்களின்பின் வைக்கப்பட்டது.

தேவி.—அஃதாவது தலைவன் தன்னாசைமிகுதியைச் சொல்லுதலும், தலைவி தன்னாசைமிகுதியைச் சொல்லுதலுமாம். இது புணர்ச்சியுட் கலவியைப்பற்றி நிகழ்கின்றதாகலால், புணர்ச்சிமகிழ்தல் நலம்புனைந்துரைத்தல்களின்பின் வைக்கப்பட்டது.

௧. பாலொடு தேன்கலந் தற்றே பணிமொழி
வாலெயி றூறிய நீர்.

[இயற்கைப்புணர்ச்சி யிறுதிக்கட் டலைமகன் றனையபுணர்ந்தியது.]

பரி.—(இ-ள்.) இம்மென்மொழியினையுடையாளது வாலிய வெயிறூறியநீர் பாலுடனே தேனைக்கலந்த கலவைபோலும், எ-று.

கலந்தற்றென்பது விகாரமாயிற்று, கலக்கப்பட்டதென்றவாறு. பாலொடு தேனென்றதனால் [1] அதன்சுவைபோலுஞ் சுவையினையுடைத்தென்பதாயிற்று. எயிறூறியவென [2] இடத்துநிகழ்பொருளின் றொழில் இடத்தின் மேனின்றது. வேறுவே றறியப்பட்ட சுவையவாய பாலுந்தேனுங்கலந்துழி அக்கலவை இன்னதென்றறியலாகாத இன்சுவைத்தாதலின், இது பொருளாகிய நீர்க்கு எய்துவிக்க.

தேவி.—[தலைவன் இயற்கைப்புணர்ச்சி முடிவிலே தலைமகன் தன் விருப்பத்தை யறிவித்தது] (இ-ள்) பணிமொழி-இம்மென்மையசொல்லையுடையவளது, வாலெயிறு - தூய்மையான பல்லில், ஊறிய நீர் - ஊறியநீரானது - பாலொடுதேன் கலந்தற்றே-பாலுடனே தேனைக்கலந்தகலவைபோலும்,எ-று.

கலந்தற்றென்பது கலந்ததென்னவிகாரமாயிற்று, கலக்கப்பட்டதென்றபடி. பாலொடுதேனென்றவதனால் அதன்சுவைபோலுஞ்சுவையினையுடையதென்பதாயிற்று. வேறு வேறறியப்பட்ட சுவையினையுடையவானபாலும் தேனும் கலந்தவிடத்து அக்கலவை இன்னதென்று அறியலாகாத இனியசுவையையுடையதாதலால், இஃது உவமேயமான நீர்க்கும் அடைவிக்க.

(க-து.) அதரபானஞ்செய்த தலைமகன் அதனது சிறப்பை வியந்துகூறினான் என்பது. (க)

---

1 அதன - பாலினது.

2 எயிறு (பல்) என்னும் இடத்துநிகழ்வதான நீரென்னும் பொருளினது ஊறுதல் (சுரத்தல்) என்னும் தொழில் இடத்தின் (பல்லின்) மேல் ஏறி 'எயிறூறிய' என்று கூறப்பட்டது. இஃது இடத்துநிகழ்பொருளின் தொழில் இடத்தின் மேலாய வுபசாரவழக்கு.

உ உடம்பொ டுயிரிடை யென்னமற் றன்ன
மடந்தையொ டெம்மிடை நட்பு.

[பிரிவச்சங் கூறியது]

பரி.—(இ - ள்) உடம்போடுயிரிடையுளவாய நட்புக்கள் எத்தன்மைய அத்தன்மைய இம்மடந்தையோடு எம்மிடையுளவாய நட்புக்கள், எ - று

'என்ன' என்ப தன்மையாற்கூறியது, இரண்டுந்தொன்று தொட்டு வேற்றுமையின்றிக் கலந்துவருதல், இன்பத்துன்பங்களொக்கவனுபவித்தல், இன்றியமையாமை யென்றிவற்றை நோக்கி 1 தெய்வப்புணர்ச்சியாகலான் அஞ்ஞான்றுது உணர்ச்சியிலளாகியாள் பின்னுடையளாமன்றே, ஆயவழி இவன் யாவனகொலெனவும், என்கண்ணன்புடையனகொலெனவும், இன்னுமிவனைத் தலைப்பெய்தல்கூடுங்கொலெனவும், அவள் மனத்திற்கணிகழும், அங்கிகழ்வன வற்றைக் குறிப்பானறிந்து அவை தீரக் கூறியவாறு. 2 என்னையென்று பாடஞ்சொல்லுவாருமுளர்

தெளி —(தலைவன் பிரிவினுண்டாகிய அச்சத்தைச்சொல்லியது )(இ-ள்) மடந்தையோடெம்மிடை - இம்மாதோடு எம்மிடத்து (உண்டாகிய), நட்பு - நட்புக்கள், உடம்போடுயிரிடை-உடம்போடு உயிரிடத்து, (உண்டாகியநட்புக்க ள)என்ன - எப்படிப்பட்டவை, அன்ன-அப்படிப்பட்டவையாகும், எ-று

'என்ன' என்ப பன்மையாற்சொல்லியது, உயிரும் உடம்புமாகிய இரண்டும் ஆதிதொடங்கி வேறுபாடில்லாமல் கலந்துவருதல், இன்பதுன்பங்களை ஒக்க அனுபவித்தல், ஒன்றுக்கொன்று அவசியமாதல் என்றிவைகளை நோக்கி ஊழினாலே கூட்டப்பட்ட புணர்ச்சியாகலால் அப்பொழுது உணர்ச்சியில்லாதிருந்தவள் பின்னே உடையவளாமன்றே, ஆகியவிடத்து இவன் எவனோ வென்றும், என்னிடத்தே அன்புடையவனோவென்றும், இன்னும் இவனைக்கலத்தல் கூடுமோவென்றும் அவளுள்ளத்தே தோன்றும், அவ்வாறுண்டானவைகளைக் குறிப்பால் அறிந்து அவை தீரச்சொல்லியபடி,

(க-து.) இவளுக்கும் எனக்கும் உள்ள நட்பு உயிருக்கும் உடலுக்கும் உள்ள நட்புப்போன்றதென்று கூறினன் என்பது. (உ)

---

1 இயற்கைப்புணர்ச்சி தெய்வத்தாற் புணரும் புணர்ச்சியும் தலைமகளாற்புணரும் புணர்ச்சியுமென்றிருவகையாம்- அவற்றுள், தெய்வப்புணர்ச்சி யாவது தெய்வம் (ஊழ்) கூட்டத்தன்னறிவுமாறுபட்டுத்தலைவன் தலைவியைப்புணருதலாம். "வேட்கை புணர்த்தல மறுத்த லுடன்படல், கூட்டமென் றிறைவியிற் கூட்டல் வகைத்தே" என்பது மற்றதாம்

2 என்ன என்பதற்குப் பிரதியாக என்னை யென்று பாடஞ்சொல்லுவாரு முண்டு

௩. கருமணியிற் பாவாய்நீ போதாயாம் வீழுந்
திருநுதற் கில்லை யிடம்.

[இடக்தலைப்பாட்டின்கட் டலைமகளைக் கண்டுச் சொல்லியது.]

பரி—(இ - ள்) என்கண்ணிற் கருமணியின்கணுறைபும் பாவாய், நீ யங்கு நின்றும் போதருவாயாக, போதாதிருந்தியாயின, எம்மால் விரும்பப்பட்ட திருநுதலை யுடையாட்கு இருக்க விடமில்லையாம், எ - று.

யான காணுந் தன்மையாமையின் இவள் புறத்துப்போகற்பாலளல்லள் என்கண்ணு ளிருக்கற்பாலள், இருக்குங்கால் நின்னோடொருங்கிருக்க இடம் போதாமையின், நின்னினுஞ் சிறந்த இவட்கு அவ்விடத்தைக்கொடுத்து நீ போதுவாயாக வென்றவாறு.

தெளி—[இடந்தலைப்பாட்டிலே தலைவி நீங்கும்போது தலைவன் சொல்லியது] (இ - ள்) கருமணியிற்பாவாய - (என் கண்ணிற்) கருமணியிலிருக்கும் பாவையே, நீ போதாய-நீ (அவ்விடத்தினின்றும்) போவாயாக, (போகாதிருப்பாயாகில) யாம்வீழும் - எம்மால்விரும்பப்பட்ட, திருநுதற்கு - அழகிய நெற்றியை யுடையவளுக்கு, இடம் - இருக்கவிடம், இல்லை - இல்லையாம், எ - று.

யான்காணும் இருக்காட்டாமையால இவள் புறத்துப் போகுந்தன்மையளல்லாள் என்கண்ணுள் இருக்குந்தன்மையள், இருக்கும்போது உன்னோடொருமித்திருக்க இடம்போதாமையால, உன்னினுஞ்சிறந்த இவளுக்கு அவ்விடத்தைக்கொடுத்து நீ போய்விடுவாயாக வென்பதாம.

(க - து.) அன்புமிகுதியால் தலைமகளை உறுப்பிற்சிறந்த கண்மணியின் பாவையினும சிறந்தவளாகக் கூறினன் என்பது. (௩)

௪ வாழ்த லுயிர்க்கன்ன ளாயிழை சாத
லதற்கன்ன ணீங்கு மிடத்து.

[பகற்குறிக்கட் புணர்ந்துநீங்குவான் சொல்லியது]

பரி—(இ - ள்) தெரிந்த விழையினை யுடையாள் எனக்குப் புணருமிடத்துஉயிர்க்குடம்போடுகூடிவாழ்தல்போலும, பிரியுமிடத்து அதற்கு அதனினீங்குதல்போலும எ-று

எனக்கென்பதும புணருமிடத்தென்பதும் அவாயநிலையான் வந்தன. 1 வாழுங்காலத்து வேறுதன்மையினதி 2 வழிநிற்றலானும்,சாங்காலத்து 3வரு

1 வாழுங்காலத்து - உயிர் உடம்போடு கூடிவாழுங்காலத்தில.

2 வழிநிற்றல் - ஒருசொல. அதன்பொருள் இருத்தல

3 வருத்தஞ்செய்தலானும் - உயிர்க்குஉடல துன்பத்தைச் செய்தலானும்.

த்தற் செய்தலானும், 1 அவற்றை அவள்புணர்வுபிரிவுகட் குவமையாக்கினான்.

தெளி.—[பகற்குறிக்கண் புணர்ந்து நீங்குக தலைவன் சொல்லியது] (இ-ள்) ஆயிழை - ஆராய்ந்தணிந்த ஆபரணத்தையுடையவள், (எனக்குப் புணரும்பொழுது) உயிர்க்கு - வாழ்தலன்னள் - (உடம்போடுகூடி வாழ்தல்போலாகின்றாள், நீங்குமிடத்து - பிரியுமிடத்து, அதற்கு - அவ்வுயிர்க்கு, சாதலன்னள் - அவ்வுடம்பினீங்கிப்போதல் போலாகின்றாள், எ-று

எனக்கென்பதும் புணருமிடத்தென்பதும் அவாய்நிலையால் வந்தன. ஒருகாலத்து வேறுபாடில்லாமல் வழிநிற்றலாலும், சாங்காலத்து வருத்தஞ்செய்தலாலும், அவைகளை அவள் புணர்வுபிரிவுகளுக்குவமையாக்கினான்.

(க-து) இவள் என்னோடு கூடுதலும் பிரிதலும் உடலோடு உயிர் கூடிவாழ்தலும் பிரிதலும் ஒக்கும் என்று கூறினன் என்பது. (௪)

௫. உள்ளுவன் மன்யான் மறப்பின் மறப்பறியே
னொள்ளமர்க் கண்ணாள் குணம்

[2 ஒருவழித்தணந்துவந்த தலைமகனை நீயிர் தணந்தஞான்று எம்மை யுள்ளியுமறிதிரோவென்ற தோழிக்குச் சொல்லியது]

பரி.—(இ-ள்) ஒளியவாய அமரைச்செய்யுங் கண்ணினையுடையாள் குணங்களை யான் மறந்தேனாயின், நினைப்பேன், ஒருபொழுதும் மறத்தலையறியேன், ஆகலான் நினைத்தலையுமறியேன், எ-று.

மன்—ஒழியிசைக்கண் வந்தது குணங்கள்—நாணம், மடம், அச்சம், பயிர்ப்பு முதலாயின. இத்துணையுந் தலைமகன்கூற்று, மேற்றலைமகள்கூற்று

தெளி.—[ஒருவழித்தணந்து வந்த தலைமகனை நீர் பிரிந்த காலத்தில் எம்மை நினைத்து மறிவீரோவென்ற தோழிக்குச் சொல்லியது.] (இ-ள்) யான் - ஒள்ளமர்க்கண்ணாள்குணம் - ஒளியினவாகிப்போரைச்செய்யுங் கண்களையுடையவளது குணங்களை, மறப்பின் - மறந்தேனாயின், உள்ளுவன் - நினைப்பேன், மறப்பறியேன் - (ஒருகாலத்தும்) மறத்தலையறியேன், (ஆகலான் நினைத்தலையு மறியேன்,) எ-று

நினைத்தலையுமறியேனென்னும் பொருள் கொள்ளநின்றமையால் மன் ஒழியிசையில் வந்தது குணங்கள்-நாணம், மடம், அச்சம், பயிர்ப்பு முதலானவை. இதுவரையும் தலைவன் சொல்லியது; பின் தலைவி சொல்வது.

---

1 அவற்றை - வாழ்தலையும் சாதலையும்.

2 ஒருவழித்தணத்தலாவது அலரடங்குமாறு சிலநாள் ஓரிடத்தில் தலைமகன் தலைமகளைப் பிரிந்துவசித்தல் அலராவது களவுப்புணர்ச்சியைப் பலரறிந்து பழித்துப்பேசுதல்.

1 இழிவுசிறப்பும்மை மாறறபபட்டது. 2 கரப்பாக்கென்பது வினைப்பெயர். வருகின்ற வேபாக்கென்பதுமது. யா 3 னிடையீடின்றிக் காண்கின்றவரைப் பிரிந்தாரென்று கருதுமாறென்னையென்பது குறிப்பெச்சம்.

தெளி — இதுவுமது) (இ-ள்) காதலவர் - தலைவர், (எப்பொழுதும்) கண்ணுள்ளாராக - (எமது) கண்ணினுள் இருக்கின்றாராகலால், கண்ணுமெழுதேம் - கண்ணினை (மையினால்) எழுதுவதுஞ்செய்யேம், கரப்பாக்கறிந்து - (அவ்வளவுகாலமும் அவர்) மறைதலை அறிந்து, எ-று.

யான் இடைவிடாமற் காண்கின்றவரைப் பிரிந்தாரென்று நினைக்கும்விதம் என்னவென்பது குறிப்பெச்சம்.

(க-து) எப்பொழுதுங் காதலர் எங்கண்ணினுள்ளாராதலால் மறைந்துபோவாரென்று கருதி மையிடுவதுஞ் செய்யேனென்றாள் என் -து (எ)

அ. நெஞ்சத்தார் காத லவராக வெய்துண்டல்
அஞ்சுதும் வேபாக் கறிந்து.

[இதுவுமது]

பரி —(இ-ள்) காதலர் எநெஞ்சினுள்ளாராகலான் உண்ணுங்கால் வெய்தாக உண்டலையஞ்சாநின்றேம், அவர் அதனான் வெய்துறலையறிந்து, எ-று.

எப்பொழுதும் எந்நெஞ்சினக ணிருக்கின்றவரைப் பிரிந்தாரென்று கருதுமாறென்னையென்பது குறிப்பெச்சம்.

தெளி.—[இதுவுமது] (இ-ள்) காதலவர் - நெஞ்சத்தாராக - (எமது) நெஞ்சினுளிருக்கின்றாராதலால், (உண்ணும்போது) வெய்துண்டல் - சூடுள்ளதாக உண்ணுதலை, அஞ்சுதும்-அஞ்சாநின்றேம், வேபாக்கறிந்து - (அவர் அதனாலே) சூடேறுதலை அறிந்து, எ-று.

எப்பொழுதும் எமது நெஞ்சிலிருக்கிறவரைப் பிரிந்தாரென்று நினைக்கும்விதம் என்னென்பது குறிப்பெச்சம்.

(க-து.) காதலர் எந் நெஞ்சின்கணிருத்தலால் சூடுறுவாரென்றஞ்சிச் சூடாக உண்பதுஞ் செய்யேமென்றாளென்பது. (அ)

---

1 கண்ணும் என்பதிலுள்ள இழிவுசிறப்பும்மை எழுது என்பதனோடு பிரித்துக் கூட்டப்பட்டது.
2 கரப்பாக்கு என்பது பாக்குவிகுதிபெற்ற தொழிற்பெயர். வருகிறபாட்டில் வேபாக்கு என்றுள்ளதும் அது (பாக்குவிகுதிபெற்ற தொழிற்பெயரே).
3 இடையீடின்றி - தடையில்லாமல்.

கூ. இமைப்பிற் கரப்பாக் கறிவ லனைத்திற்கே
ஏதிலர் என்னுமிவ் வூர்.

[1 வரைவிடைவைத்துப் பிரிவின்கட் டலைமகளாற்றற்பொருட்டுத் தோழி தலைமகனை யியற்பழித்தவழி அவள் 2இயற்பட மொழிந்தது]

பரி.—(இ-ள்) என்கண்ணிமைக்குமாயின் உள்ளிருக்கின்ற காதலர் மறைதலையறிந்து இமையேன், அவ்வளவிற்கு அவரைத் துயிலா நோய்செய்தார் அன்பிலரென்று சொல்லாநிற்கும் இவ்வூர், எ-று.

தன் கருத்தறியாமையுற்றிப் புலந்து சொல்லுகின்றாளாகலின், தோழியை வேறுபடுத்து 'இவ்வூர்' என்றாள். ஒருபொழுதும் பிரியாதவரைப் பிரிந்தாரென்று 3பழிக்கற்பாலையல்லையென்பதாம்.

தெளி.—[வரைவிடைவைத்துப் பொருள்வயிற் பிரிந்தவிடத்துத் தலைவியொடிருந்து தோழி தலைவனை இயற்பழித்தவிடத்தே அவள் இயற்படச் சொல்லியது] (இ-ள்) இமைப்பின் - (என்கண்) இமைக்குமாயின், கரப்பாக்கறிவல் - (உள்ளிருக்கிற காதலர்) மறைதலையறிந்து இமையேன், அனைத்திற்கு - அவ்வளவிற்கு, இவ்வூர் - ஏதிலரென்னும் - (அவரைத் தூங்காநோய்செய்தார்) அன்பிலரென்று சொல்லாநிற்கும், எ-று.

தன்கருத்தறியாமையுற்றிக் கோபித்துச் சொல்லுகின்றாளாதலால், தோழியைவேறுபடுத்தி 'இவ்வூர்' என்றாள். ஒருபோதும் பிரியாதவரைப் பிரிந்தாரென்று பழிக்குந் தன்மையையல்லையென்பதாம்.

(க-து.) தோழியைவெறுத்த தலைமகள் எங்கண்ணுள்ளிருக்கும் காதலர் மறைவாரென்று கருதி இமைத்தலுஞ் செய்யேனென்றாள் என்பது. (கூ)

---

1 வரைவிடைவைத்துப் பிரிதல் - கலியாணஞ் செய்துகொள்ளுதலை இடையில் வைத்து அது காரணமாகப்பொருள் சம்பாதிக்கப்பிரிதல். தஞ்சைவாணன் கோவையினுரையில் "வரைவிடைவைத்துப் பொருள்வயிற்பிரிதல். அஃதாவது வரைவையிடையிலேவைத்து வரைதற்கு வேண்டும் பொருள் காரணமாகப்பிரிதல். தலைவன் வரைதற்குப் பொருள் காரணமாகப்பிரிந்தானெனின், பொருளிலனாயிற்று. ஆகவே, பொருவிறந்தா (ஒப்பில்லாதவ)னென்பதனோடு மாறுகொள்ளுமெனின் மாறுகொள்ளாது பழங்கிடையாய்க்கிடக்கும் செம்பொருள் பலவுளவேனும் அதனையெடுத்து நுகர்வோன் சிறியனாதலானும், ஆள்வினை (முயற்சி) யுடையனல்லனெனப்படுதலானும், இவன் தன்னூக்கத்தால் (முயற்சியால்) ஈட்டிய (சம்பாதித்த) பொருளைப் பலவாற்றானும் நுகர்தல் (அநுபவித்தல்) உத்தமவிலக்கணமென்று கருதிப்பொருள்வயிற்பிரிந்தானென்றுணர்க" என்று கூறப்பட்டிருக்கிறது.

2 இயற்பட - ஒழுங்கமைய

3 பழிக்கற்பாலையல்லை - பழிக்கவேண்டாம்.

௩0 உவந்துறைவ ருள்ளத்து ளென்று மிகந்துறைவ
ரேதில ரென்னுமிவ் வூர்

[இதுவுமது]

பரி.—(இ-ள்) காதலர் எஞ்ஞான்றும் என்னுள்ளத்துள்ளே யுவந்து உறையாநிற்பர், அதனை யறியாது அவரைப் பிரிந்துறையாநின்றார் அன்பிலரென்று சொல்லாநிற்கும் இவ்வூர், எ-று.

'உவந்துறைவர்' என்றதனால் அன்புடைமைகூறினாள் பிரியாமையும் அன்புமுடையாரை இவ்விரண்டும் பழிக்கற்பாலையல்ல வென்பதாம்.

தெளி.—[இதுவுமது] (இ-ள்) (காதலர்) என்றும் - எப்போதும், உள்ளத்துள் - என் னுள்ளத்தினுள்ளே, உவந்து - மகிழ்ந்து, உறைவர் - வாசஞ்செய்வார், (அதனையறியாமல் அவரை) இவ்வூர் - இகந்துறைவர் - பிரிந்துவசிக்கின்றார், ஏதிலரென்னும் - அன்பிலரென்று சொல்லாநிற்கும், எ-று.

'உவந்துறைவர்' என்றதனால் அன்புடைமை கூறினாள் பிரியாமையும் அன்புமுடையவரை இலரென்று பழிக்குந்தன்மையையல்ல வென்பதாம்.

(க-து.) காதலர் என் மனதின்கண் உவந்து வசித்ததலை யறியாது பிரிந்துபோனாரென்று சொல்லுதல் தகாதென்றுளென்பது. (௰)

## ௧௧௪-ம். அதி.—நாணுத்துறவுரைத்தல்.

பரி.—அஃதாவது சேட்படுக்கப்பட்ட [1] ஆற்றானாய தலைமகன் தோழிக்குத் தன் [2] நாணுத்துறவுரைத்தலும், [3] அறத்தொடுநிற்பிக்கலுற்ற தலைமகள் அவ

---

[1] ஆற்றானாய - தலைமகளைப் பிரிந்திருக்கச் சகிக்காதவனான.

[2] நாண் - சால்பு பண்பு முதலாய குணங்களாலுயர்ந்தோர் தமக்கு ஒவ்வாதகருமங்களில் நாணுதல்.

[3] அறத்தொடு நிற்பிக்கலுற்ற -களவுப்புணர்ச்சியை முறையே வெளிப்படுத்தி நிற்கத்தொடங்கிய தஞ்சைவாணன் கோவையினுரையில் "அறத்தொடு நிற்றலென்பது களவை முறையே வெளிப்படுத்தி நிற்றல். முறையே வெளிப்படுத்தி நிற்றலாவது தலைவிபாங்கிக் கறத்தொடு நிற்கும், பாங்கி (பக்கத்திலிருப்பவள்) செவிலி (வளர்க்குந் தாய்) க்கறத்தொடு நிற்கும், செவிலி நற்றாய் (பெற்றதாய்)க்கறத்தொடு நிற்கும், நற்றாய் தந்தை தன்னையர் (தமையன்மார்) க்கறத்தொடு நிற்குமென்று கொள்க. அறத்தொடு நிற்றற்குப் பொருள் முறையேவெளிப்படுத்தி நிற்றலென்பது இப்பொருள் எவ்விடத்திற்குமாகாது, இவ்விடத்திற்குமாத்திர மென்று கொள்க" என்று கூறப்பட்டிருக்கிறது.

[illegible] துணையென்று நினைந்து [illegible]முயன்றேனான் இப
[illegible] துன்பமுடைமையை அறிந்தேனாகலான் இனியானும் அவ்வழியால் அத
[illegible] மடலேறுவேனென்பது கருத்து.

(க-து) தோழியால் தூரப்படுத்தப்பட்டு வருந்திய தலைமகன் மடலேறுவனென்று கூறினான் என்பது. (க)

உ நோனா வுடம்பு முயிரு மடலேறு
நாணினை நீக்கி நிறுத்து

[நாணுடைமைக்கு அது முடியாதென மடலவிலக்கத்தோழிக்குச் சொல்லியது]

பரி — இ-ள்) அவ்வருத்தத்தினைப் பொறாத வுடம்பு முயிரும் அதற்கேற்ற மடலூர்தலைத் துணிவாகக் கருதாநின்றன, 1 அதனை விலக்குவதாய நாணினை நீக்கி, எ-று.

2 வருந்தினார்க்கென மேலைக்குறளிற் செயப்படுபொருள் ஈண்டுக் கூறப்பட்டது. 3 மடல்—ஆகுபெயர். 4 நீக்கிநிறுத்தென்பது ஒருசொன் னீர்மைத்து. 5 அறிவு நிறை ஓர்ப்புக் கடைப்பிடிமுதலிய முன்னே நீங்கவும் நாணீங்காது நின்றது, அதுவும் இதுபொழுது நீங்குகின்றதென்பான 'உடம்பு'

---

1 அதனை - மடலேறுதலை.

2 வருந்தினார்க்கு என்று மேலுள்ள குறளில் வந்ததிலேயே அவ்வருத்தத்தினையுடைய செயப்படுபொருளை யிங்கே சொல்லாதுவிட்டார்.

3 மடல் (பனைமடல்) என்னும் முதற்கருவியின்பெயர் அதன் காரியமாகிய குதிரைக்காதலால் முதற்கருவியாகுபெயர்.

4 நீக்கிநிறுத்து என்பது தொடர்மொழியாகாது அகற்றி என்னும் பொருளைத்தந்து ஒருசொல்லின்தன்மையதாய் நின்றது.

5 இறையனாரகப்பொருளி னிரண்டாஞ்சூத்திரத்துரையில் "தலைமகற்கு அறிவு, நிறை, ஓர்ப்பு, கடைப்பிடி என்பன குணம். அறிவென்பது என்னையெனின், 'எப்பொருள் எத்தன்மைத் தாயினு மப்பொருள், மெய்ப்பொருள் காண்ப தறிவு' என்றாராகலின், எப்பொருளாயினும் அப்பொருட்கண்ணின்று அம்மெய்ம்மையை யுணர்வது அறிவு. நிறையென்பது என்னையெனின், காப்பன காத்துக் கடிவன கடிந்து ஒழுகும் ஒழுக்கம். ஓர்ப்பென்பது ஒருபொருளை ஆராய்ந்துணர்தல். கடைப்பிடியென்பது கொண்டபொருள் மறவாமை" என்று கூறப்பட்டிருக்கிறது.

முயிரும்' என்றான். 1 அவைதாம் தம்முள் நீங்காமைப்பொருட்டு 2 மடலேறுமென்றது அவள் தன்னாற்றாமையைப்பற்றித்து கடிதிற்குறைநேர்தல் நோக்கி.

தெளிவு — நாணமுடைய உமக்கு மடன்மாவேறுதல் முடியாதென்று தனை விலக்கலுற்ற தோழிக்குத் தலைவன் சொல்லியது. (இ - ள்.) நோனா - (அவ்வருத்தத்தினைப்) பொறாத, உடம்பும் உயிரும் - மடலேறும் - (அதற்குக் காரணமாகிய) மடன்மாவை ஏறாநின்றன, நாணினை - (அதனைவிலக்குவதாகிய) நாணத்தை, நீக்கிநிறுத்து - ஒழித்து, எ-று.

வருத்தினுக்கின்று முன்னை நிறுத்தலாலே செயப்படுபொருள் இங்கே சொல்லாயினர். மடல் - கருவியாகுபெயர். நீக்கிநிறுத்தலென்பது ஒருசொல்லின் தன்மைத்து. அறிவு, நிறை, ஓர்ப்பு, கடைப்பிடி முதலானவை முன்னே நீக்கவும் நாலைக்காது நின்றது, அதுவும் இப்பொழுது நீக்கினேனென 'உடம்பு முயிரும்' என்றான். அவைதாம் தம்முள் நீங்காமைப்பொருட்டு மடலேறுமென்றது அவள் தன்னாற்றாமையை (சகிக்கமுடியாமையை) யறிந்து விரைவில் உடன்படுதல் குறித்தது.

(க - து) வருத்தமிகுதியால் நாணத்தைவிட்டு மடன்மாவேறுவ னென்றான் என்பது (௨)

---

1 அவைதாம் - உடம்பும் உயிரும்.

2 "மடலேறலாவது தலைவன் ஒவ்வாக்காமத்தால் பனங்கருக்காற் குதிரைமா, பனந்தருவினுள்ளனவற்றால் மணிமுதலானவுஞ்செய்து அக்குதிரையின்மேலேறுவது. மடலேறுவான் திகம்பரனாய் உடம்பெங்கும் நீறுபூசிக் கிழி ஓவியர் கைப்படாது தானே தீட்டிக் கிழியின் தலைப்புறத்தில் அவள்பேரைவரைந்து கைப்பிடித்து, ஊர்நடுவே நாற்சந்தியில் ஆகாரமின்றி நித்திரையின்றி, அக்கிழிமேற் பார்வையுஞ் சிந்தையுமிருத்தி, வேட்கையைத் தனது வேறுணர்வின்றி, ஆதூரினும் அழல்மேற் படினும் அறிதலின்றி மழை வெயில் காற்றென்பவைகட்கிருப்புழி, அவ்வூரிலுள்ளார் பலருங் கூடிவந்து 'நீ மடலேறுதியோ? அவளைத்தருதும், சோதனைதருதியோ' எனுமிடத்து இசைந்தானாயின் அரசனுக்கறிவித்து, அவனேவலால் அவனிலைமையைத்தந்து மடலேறென்றவழி ஏறுமுறைமை - வெண்பூளைப்பூ, எருக்கம்பூ, எருக்கமுகை இவைகளாற் கட்டியமாலை யணிந்துகொண்டு அம்மாவிலேற, அவ்வடத்தை வீதியிலீர்த்தலும் அவ்வுருளையுருண்டபொழுது பனங்கருக்கு அறுத்தவிடமெல்லாம் இரத்தந்தோன்றாது வீரியந்தோன்றின், அப்போது அவளை யலங்கரித்துக்கொடுப்பது, இரத்தங்கண்டுழி அவனைக்கொலைசெய்துவிடுவது. இவை புலவரால் காட்டிய வழக்கென்றுணர்க" என்று தஞ்சைவாணன் கோவையினுரையிற் கூறப்பட்டிருக்கிறது. "கழிகின்ற என்னையுநின்ற நின்கார்மயிற்றன்னையுமியான், கிழியொன்றநாடி யெழுதிக்கைக்கொண்டென்பிறவிகெட்டின், றழிகின்றதாக்கியதாளம்பலவன் கயிலையந்தேனை, பொழிகின்றசாரனுஞ்சீறூர்த்தெருவிடைப்போதுவனே" என்று திருக்கோவையார் கூறுவது மிகவுங்கவனித்தறியத்தக்கதாம்.

௩. நாணொடு நல்லாண்மை பண்டுடையே னின்றுடையேன்
காமுற்றா ரேறு மடல்.

[நாணொடு நல்லாண்மை யுடைமையின் முடியாதென்றாட்குச்
சொல்லியது]

பரி.—(இ - ள்) நாணும் மிக்க ஆண்மையும் யான் பண்டுடையேன், அவை காமத்தா னீங்குதலான், அக்காமமிக்கா ரேறும்மடலினை யின்றுடையேன், எ - று.

நாண்-இழிவானவை செய்தற்கண் விலக்குவது. ஆண்மை - ஒன்றற்குந் தளராது நிற்றல். அவை பண்டுள்ளன, இன்றுள்ளது 1 இதுவேயாகலிற் கடி தின் முடியுமென்பதாம்.

தெளி.—[நாணொடு நல்லாண்மையும் உடைமையால் மடலேறுதல் முடியாதென்ற தோழிக்குத் தலைமகன் சொல்லியது] (இ - ள்) நாணொடு நல்லாண்மை - நாணமும் மிகுந்த ஆண்தன்மையும், (நான்) பண்டு - முன்னே, உடையேன் - உடைத்தாயிருந்தேன், (அவை காமத்தால் நீங்குதலால்) காமுற்றாரேறு மடல் - காமமிகுந்தவரேறு மடலை, இன்று - இப்போது, உடையேன் - உடையவனாயிருக்கின்றேன், எ - று.

நாண் - இழிவானவை செய்யுமிடத்து விலக்குவது - ஆண்மை - ஒன்றுக்குந் தளராது நிற்றல் அவை முன்னுள்ளன, இன்றுள்ளது இதுவேயாகலால் விரைவிலே முடியுமென்பதாம்.

(க. - து.) முன்பு நாணமும் நல்லாண்மையு முடைத்தாயிருந்தேன்; இப்போது மடன்மாவேறுதலை யுடைத்தாயிருக்கின்றேனென்றான் என்பது. (௩)

௪ காமக் கடும்புன லுய்க்குமே நாணொடு
நல்லாண்மை யென்னும் புணை.

[நாணு நல்லாண்மையுங் காமவெள்ளத்திற்குப் புணையாகலின் 2 அதனால்
3 அவைநீங்குவன வல்லவே யென்றாட்குச் சொல்லியது]

பரி.—(இ - ள்) யான் 4 றன்னைக் கடத்தற்குக் கொண்ட நாணும் நல்லாண்மையுமாகிய புணைகளை யென்னிற்பிரித்துக் காமமாகிய கடியபுனல் கொண்டுபோகாநின்றது, எ-று.

1 இதுவே - மடலேறுதலே 2 அதனால் - காமவெள்ளத்தினால்
3 அவை - நாணும் நல்லாண்மையும்
4 தன்னை - காமமாகிய கடிய (வேகமுள்ள) புனலை

பெட்ட விசேடத்தால அவ்வடக்கம் எனக்கு இலலையாகாநின்றது, நீ அ தை அறிகின்றிலை யென்றதாம். இவவளவுந் தலைவன் சொலலியது; பினனே நீ சொலவது.

(க-து) காமநோயினை மிகுதியாயனுபவித்தும் மடன்மாவேறு து பொறுத்திருக்கும் பெணபிறப்பே தகுதியையுடைய பிறபபாமென் றான எனபது. (எ)

அ. நிறைபரியர் மன்னளிய ரெனனாது காம
மறையிறந்து மனறு படும்.

[1 காப்புசசிறைமிககுக காமமபெருகியவழிச் சொலலியது]

பரி—(இ-ள்) இவர்நிறையால் காமீதூாதற கரியரென்றஞ்சுதல் செய்யாது மிகவுமளிக்கத்தககாரென் றிரங்குதல செயயாது மகளிர்காமமும அவர்மறைத்தலைககடந்து மனறினகணணே வெளிபடுவதாயிருநதது, எ-று

என்றுசொன்னது முன்னுங்கூட்டி மகளிரென்பது வருவிக்கபபட்டது. எச்சவுமமை விகாரத்தாற றொககது. மன்றென்பது தந்தை தனனையரை நோக்கி. உலகத்துப் பெண்பாலார காமத்தியல்பு கூறுவாள்போனறு, தன்கா மம் பெருகியவாறும் இனி யறததொடுநிறறல் வேணடுமென்பதும குறிபபாற் கூறியவாறாயிற்று.

தேவி—[காபபுசசிறை அதிகப்பட்டுக் காமம்பெருகியபோது தலைவிசொ லலியது] (இ-ள) (இவர) நிறையரிய (ரெனனாது)-நிறையால (காம மே றகொள்ளுதற்கு) அரியரென்று அஞ்சுதல் செய்யாமல, மனனளியரென்னாது-மிகவும அளிககததககவரெனறு இரஙகுல செயயாமல, காமம்-(மகளிரது) காமமும,மறையிறநது-(அவர)மறைத்தலைககடநது, மன்றுபடும-சபையிடத் தே வெளிபபடுவதாயிருந்தது,எ-று

என்றுசொனனது நிறையரியரென்பதனுடனும் கூட்டி மகளிரென்பது வருவிக்கபபட்டது காமமுமெனற இறந்தது தழுவிய எசசஉமமை விகார த்தினால் தொககுகின்றது மன்றென்பது தநதைதமையன்மாரகளைநோக்கி உலக த்துப்பெணகளது காமத்தியல்பு சொலலுவாள்போன்று, தன்காமமபெருகிய விதமும் இனி அறததொடுநிறறல் வேண்டுமென்பதும குறிபபாற்சொல்லியப டியாயிற்று.

(க-து.) தலைமகள தனகாமம் பெருகியவிதத்தைப படர்ககை வாயிலாகக கூறினளென்பது. (அ)

---

1 காபபுச்சிறை-காவலாகியசிறை. தானினைத்தவாறொழுகுதலினறிபபிறர் நினைததவாறே யொழுகும்படி காத்தல சிறையெனப்படும்.

பரி —(இ-ள்) யாங்கண்ணிற் காணுமாறு எம்மை அறிவில்லாதார் நகாநின்றார்; அவர்க்கு அங்ஙனஞ் செய்கின்றது யாமுற்ற நோய்கள் தாமுறாமையான், எ-று.

கண்ணினென்றது 1 முன்கண்டறியாமை யுணர்த்தின்றது. 2 அறத்தொடு நின்றமை யறியாது வரைவுமாட்சிமைப்படுகின்றிலளென்ப புலக்கின்றாளாகலின், ஏதிலாளாக்கிக் கூறினாள். 3 இது நகாநின்று சேட்டைக்குத் தோழிக்குத் தலைமகள் கூறியதாகலால், அதிகாரத்திற் கேலாமையறிக.

தேவ —[செவிலிக்கு அறத்தொடு நின்றுவைத்து நாணிறக்குமவிதம் என்னென்று கைசெய்து தோழியோடுபிணங்கி தலைவி தன்னுள்ளே சொல்லியது] (இ-ள்) யாம்-கண்ணிற்காண - (கேட்கும்படியுமன்றிக) கண்ணுறக்காணும்படி, (எ-டை) அறிவில்லார் நகுப - அறிவில்லாதவர் சிரிக்கின்றார். (அவர் அப்படிச்செய்கின்றது) யாம்பட்ட - யாம் அடைந்தநோய்களை, தாம்படாவாறு - தாம் அடையாமையால், எ-று.

கண்ணினென்றது முன்கண்டறியாமை யுணர்த்தின்றது. அறத்தொடு நின்றமை யறியாமல் மணஞ்செய்யுமாட்சிமையிற் பொருந்துகின்றிலளென்று பிணங்குகின்றாளாகலால் 'யாங்கண்ணிற் காண நகுபவறிவில்லார்' என்று அயலாளாக்கிச் சொல்லினாள்.

(க-து) தலைமகள் தோழியின்கருத்தறியாது அவளைத் தன்னுள்ளே வெறுத்துக் கூறினளென்பது. (௰)

## ககரு-ம். அதி—அலரறிவுறுத்தல்

பரி —அஃதாவது களவொழுக்கம் வேண்டிய தலைமகன் பிறர் கூறுகின்ற அலர் தனக்காகின்றவாற்றைத் தோழிக் கறிவுறுத்தலும், வரைவாக உடன்போக்காக ஒன்றுவேண்டிய தலைமகளுந் தோழியும் அவ்வலரை யவனறனக் கறிவுறுத்தலுமாம். இது நாணுத்துறந்தவழி நிகழ்வதாகலான், நாணுத்துறவுரைத்தலின்பின் வைக்கப்பட்டது.

---

1 கண்டறியாமை- முன்தோழியெதிரே நின்று சிரிப்பதைப் பார்த்தறியாமை
2 தான் காமத்தை வெளிப்படுத்தி நின்றதையறியாமல் மணஞ்செய்யும் மாட்சிமையில் பொருந்தாதிருக்கின்றாளென்று தலைமகள் பிணங்குகின்றாளாதலால் தோழியை அயலாளாக்கி'யாங்கண்ணிற்காண நகுப வறிவில்லார்'என்று கூறினாள் [அறத்தொடுநிற்றலை(காமத்தை வெளிப்படுத்தி நிற்றலை) யறிந்தால் தோழி மணஞ்செய்யும் மாட்சிமையில் பொருந்துவாள் என்பது பெறப்பட்டதென்க]
3 இக்குறள் சிரியாநின்று தூரப்படுத்துகின்ற தோழிக்குத் தலைமகள் கூறியதாயிட்டது, நாணுத்துறவுரைத்தல் என்னுமிவ்வதிகாரத்துடன் பொருந்தாமையையறிந்துகொள்க.

இரவுக்குறிதப்பித் தலைவியை அடையப்பெறாத வருத்தமெல்லாம் தோன்ற 'ஆருயிர்' என்றும், அப்படி அரியவளை எளியவளாக்கி எடுக்கின்றமையால் அவ்வலரை அவ்வாருயிர்க்குப் பற்றுக்கோடாய் நிற்கின்றதென்பான 'அலரெழ வாருயிர் நிற்கும்'என்றும், பற்றுக்கோடாதலை அவ்வயலார் அறிந்தால் தூற்றுதோழிவர் ஒழியவே ஆருயிர்போமாகலால் அவரறியாதிருக்கிறது 'பாக்கியத்தால்' என்றும் சொல்லினன். பலருமெனகிற முற்றும்மை விகாரத்தால் தொக்கு நின்றது.

(க - து) தோழியைநோக்கித் தலைமகன் அலர்காரணமாக என்னுயிர் நிற்கிறதென்றான் என்பது. (க)

உ. மலரன்ன கண்ணா ளருமை யறியா
தலரெமக் கீந்ததிவ் வூர்.

[இதுவுமது]

பரி —(இ - ள்.) மலர்போலுங் கண்ணையுடையாளது எய்தற்கருமை யறியாது இவ்வூர் அவளை யெளியளாக்கி அவளோடலர்கூறலை எமக்குபகரித்தது, எ-று.

அருமை-[1] அலர் குறிப்பாட்டானும் [2] இடையீடுகளானும் ஆயது. [3] 'ஈந்தது'என்றான், தனக்குப் பற்றுக்கோடாகலின் அலர் கூறுவாரை அவர்செய்த உதவிபற்றி 'இவ்வூர்' என்றான்.

தெளி,—[இதுவுமது] (இ - ள்) மலரன்னகண்ணாள் மலர்போலுங் கண்களையுடையவளது, அருமை-(அடைதற்) கருமையை, அறியாது அறியாமல், இவ்வூர் -(அவளை எளியவளாக்கி) அலர்-(அவளோடு)அலர்கூறலை, எமக்கு-ஈந்தது-உபகரித்தது, எ - று.

அருமை-குறிபிழைத்தலாலும் இடையீடுகளாலும் ஆகியது 'ஈந்தது' என்றான், தனக்குச் சார்பாகலால் அலர்தூற்றுவாரை அவர்செய்த உதவிபற்றி'இவ்வூர்' என்றான்.

(க - து.) இவ்வூரார் கூறிய அலர் எனக்கினிதாய் முடிந்ததென்றானென்பது. (உ)

௩. உறாஅதோ வூரறிந்த கௌவை யதனைப்
பெறாஅது பெற்றன்ன நீர்த்து.

[இதுவுமது]

---

1 "அலர் குறிவருந் தொழிற்கருமை யென்றுங்,கெல்லிக் குறையீ டிருவகைத் தாகும்" என்று அகப்பொருள் விளக்கங் கூறுகின்றது.

2 இடையீடு-தடை,

3 அலர்கூறல் (பலரறிந்துபேசுதல்) தலைமகளைத் தானடைதற்குப் பற்றுக் கோடாயிருத்தலினாலே 'ஈந்தது' என்றானென்க,

1 ஊரவரென்பது தொழிலான் ஆணொழித்து நின்றது 2 ஏகதேசவுருவகம் 3 சுருங்குதற்கு ஏதுவானவைதாமே விரிதற்கேதுவாகா நின்றனவென்பதாம். உரைகாணுதல் 4 பயன்

தெளி —[களவொழுக்கஞ்செய்துகொள்ளுதல் தாமதமாகப் பொறுக்கா நடையாய நிலைமையைத் தலைமகன் சிறைப்புறத்தானாதலறிந்த தோழி ஊரவர் கௌவையும் தாய்சொல்லையும் நோக்கி நீ பொறுத்தல் வேண்டுமெனச் சொல்லி முடிப்பவிடுத்து அத்தலைவி சொல்லியது ] (இ-ள்) இந்நோய் - இக்காமநோயாகிய பயிர், ஊரவர்கௌவை - இவ்வூரிலுள்ள மகளிர் எடுக்கின்ற அலரானது, எருவாக - அன்னைசொல் - (அதுகேட்டுக்கோபித்துத்) தாய்சொல்லுகின்ற கடுஞ்சொல்லானது, நீராக - நீளும் - வளராநின்றது, எ-று

ஊரவரென்பது கௌவையென்னுந் தொழிலால் ஆணையொழித்துப் பெண்ணைப் புணர்த்தி நின்றது. இஃது ஏகதேசவுருவகம். சுருங்குதற்குக்காரணமாகின்றவைதாமே விரிதற்குக்காரணமாகாநின்றன வென்பதாம் மணஞ்செய்வாருதல் பயன்.

(க - து) அலரால் எனது காமநோய் அதிகப்படுவதாயிற்றென்றேனபது (எ)

அ. நெய்யா லெரிநுதுப்பே மென்றற்றாற் கௌவையாற்
காம நுதுப்பே மெனல்.

பரி—(இ - ள்) ஏதிலாரெடுக்கின்ற அலரால் நாம் காமத்தை யவித்தும் என்று கருதுதல் நெய்யாலெரியை யவித்துமென்று கருதுதலோ டொக்கும், எ - று.

---

1 ஊரவா என்னும் (ஆணுக்கும் பெண்ணுக்கும் பொதுவாகிய) சொல் அலரெடுத்தலென்னுந் தொழிலால் ஆண்பாலையொழித்துப் பெண்பாலையுணர்த்திநின்றமையின், இஃது ஒன்றொழி பொதுச்சொல்.

2 ஊரவா கௌவையை யெருவாகவும் அன்னை சொல்லை நீராகவும் உருவகப்படுத்தினவர் அதற்கியைய காமநோயைப் பயிராக வுருவகஞ்செய்யாமையினாலே ஏகதேசவுருவகமாயிற்று.

3 தலைமகன் வரைந்துகொள்ளாமையினால் சுருங்குதற்குக் காரணமாகும் காமநோய் ஊரவர் கௌவையாலும் அன்னை சொல்லாலும் விரிதற்குக்காரணமாகாநின்றது என்பதாம்

4 இன்னது சொல்ல இன்னது பயக்குமென்றறிவது பயன் "இப்பொருள் பயக்குமிஃ தென்பது பயனே" என்று அகப்பொருள் விளக்கம் கூறுகின்றது.

1 மூன்றனுருபுகள் கருவிக்கண் வந்தன. வளர்தற் காரணமாய அலரால் அவித்தல் கூடாதென்பதாம்.

தெளி —[இதுவுமது] (இ - ள்) கௌவையால் - (அயலவர் பேசுகின்ற) அலரால், காமம்-(காம) காமத்தை, அதுபடுமெனல்-அவிப்போமென்று நினைத்தல், நெய்யால்—எரி - நெருப்பை, நுதுப்பேமென்றற்று - அவிப்பேமென்று நினைத்தலோடொக்கும், எ-று.

மூன்றனுருபுகள் கருவிப்பொருளில் வந்தன. காமம் வளர்தற்குக் காரணமாகிய அலரால் அக்காமத்தை அவித்தல் கூடாதென்பதாம்.

(க - து) காமத்தை யடக்கமுடியா தென்றாள் என்பது. (அ)

௯. அலர்நாண வொல்வதோ வஞ்சலோம் பென்றார்
பலர்நாண நீத்தக் கடை.

[வரைவிடைவைத்துப் பிரிவின்கணாற்றாளாய தலைமகள் அவன்
வந்து சிறைப்புறத்தானாதலறிந்து அலரஞ்சி யாற்றல்
வேண்டுமென்ற தோழிக்குச் சொல்லியது]

பரி.—(இ - ள்) தம்மை யெதிர்ப்பட்ட ஞான்று 2 நின்னிற்பிரியேன் அஞ்சலோம்பென்றவர் தாமே இன்று கண்டார் பலரும் நாணும்வகை நம்மைத் துறந்தபின் நாமேதிலார் கூறுமலருக்கு நாணக்கூடுமோ கூடாது, எ-று.

3 நாணவெனும் வினையெச்சம் ஒல்லுதென்னுந் தொழிற்பெயருள ஒல்லுதற் றொழிலோடு முடிந்தது கண்டார் நாணுநிலைமையராய யாம் நாணுதல் யாண்டைய தென்பதாம்.

தெளி —[மணஞ்செய்தலையிடையில் வைத்துப் பொருள் சம்பாதிக்கத் தலைவன் பிரிந்தபோது பொறுக்காதவளாகிய தலைவி அவன் வந்து சிறைப்புறத்தானாதலறிந்து அலரஞ்சிப் பொறுத்தல்வேண்டுமென்ற தோழிக்குச் சொல்லியது.](இ - ள்.) (தம்மையெதிர்ப்பட்டுக்கண்டநாளில்) அஞ்சலோம்பென்றார்-(உன்னைவிட்டுநீங்கேன்)அஞ்சுதலொழியென்றவர்தாமே, பலர்நாண - (இன்று கண்டவர்) பலரும் நாணும்வகை, நீத்தக்கடை - (நம்மைவிட்டு) நீங்கியபின், அலர் -(அயலவர்தூற்றுகிற) அலருக்கு, நாணவொல்வதோ - (நாம்) நாணக்கூடுமோ (கூடாது), எ - று.

---

1 நெய்யால் கௌவையால் என்பனவற்றிலுள்ள ஆல் என்னும் மூன்றனுருபுகள் துணைக்கருவிப்பொருளில் வந்தன.

2 "ஆவியன்னவ் வவலை வைகலுமென் றளித்தொளித்த ஆவியன்னனோ" என்று திருக்கோவையார் கூறுவதிங்கறியத்தக்கது.

3 நாண என்னும் (செயவென்னும் வாய்பாட்டு) வினையெச்சம் ஒல்வது என்னும் தொழிற்பெயரின் பகுதியதான ஒல்லுதற்றொழிலோடு முடிந்தது.

கண்டார் காணும் நிலைமையேயாகிய காமம் காணுதல் எவ்விடத்ததென்ப தாம்.

(க - து) எனக்குஇனிநாணமுண்டாகாதென்றாளெனபது. (௯)

௧௦. தாம்வேண்டி னல்குவர் காதலர் யாம்வேண்டுங்
கௌவை யெடுக்குமிவ் வூர்.

[தலைமகன் சிறைப்புறத்தானாகத் தோழி தலைமகட்குச்சொல்லுவாளாய் அலரறிவுறீஇ அவன உடன்போக்கு நயப்பச் சொல்லியது.]

பரி—(இ - ள்.) உடன்போகற் கேதுவாகனோக்கி யாம்பண்டே விரும்புவதாய வலரை இவ்வூரதானே யெடாநின்றது, இனிக் காதலர்தாமும் யாம் வேண்டியக்கால 1 அதனை யினிதினோவர், 2 அதனால் இவவலா நமக்கு நன்றாயவந்தது, எ - று

3 எச்சவும்மை விகாரத்தாற்றொக்கது. நங்கட்காதலுடைமையின் மறா ரென்பது தோன்றக் 'காதலர்' என்றாள், இவவிருபதுபாட்டும் புணாதனிமித்தம்

தெளி—[தலைவன் சிறைப்புறத்தானாகத் தோழி தலைவிக்குச்சொல்லுவாளாய அலரறிவித்து அவன் உடன்போகவிரும்பச் சொல்லியது.](இ-ள்.) யாம் வேண்டுங்கௌவை - (உடன்போதற்குக் காரணமாதல் நோக்கி) யாம் (முன்னமே) இச்சிப்பதாகிய அலரை, இவ்வூர் எடுக்கும் - இவவூர்தானே எடாநின்றது, காதலர்தாம் - (இனித்) தலைவர்தாமும், வேண்டின் - (நாம்) வேண்டினால், நல்குவா - அதற்கு உடன்படுவர், (ஆதலால் இவவலர் நமக்கு நன்றாய் வந்தது) எ - று.

தாமுமெனறஉம்மை விகாரத்தினால் தொக்குநின்றது. நம்மிடத்து ஆசையுடைமையால மறுக்காரெனபதுதோனறக் 'காதலா' என்றாள். "காமமுழந்து" என்னுங்குறள்முத லிவ்விருபதுபாட்டும் புணாதல்நிமித்தம்.

(க - து) தலைமகன் கேட்பத் தோழி ஊராரெடுக்கின்றஅலர் உ ?ள என்பது. (௰)

களவியல் முற்றிற்று.

1 அதனையினிதினோர்வர் - உடன்போதலை யினிதாக வுடன்படுவர்.
2 அதனால் - உடனபோதறகேதுவாயிருத்தலினால்.
3 தாம் என்பதனீற்றில் எதிரதுதழுவிய எச்சவும்மை செய்யுள்விகாரத்தால தொக்குநின்றது.

# 1 கற்பியல்.

பரி.—இனிக் கற்புக் காலத்துக் கூறுவான்றொடங்கி, முதற்கட் பிரிவாற்றாமை கூறுகின்றார்.

தெளி.—இனிக் கற்புக் காலத்தாலே சொல்லத்தொடங்கி, முதலிலே பிரிவாற்றாமை சொல்லுகின்றார்.

## ௧௧௬-ம் அதி.—பிரிவாற்றாமை.

பரி.—அஃதாவது வரைந்தெய்தியபின் தலைமகன் அறம் பொருளின்பங்களின் பொருட்டுச் சேயிடையினும் ஆயிடையினுந் தலைமகளைப் பிரிந்து செல்லும், செல்லுமென்று அப்பிரிவினை அவளாற்றாளாந்தன்மை. 2அஃது அவன் பிரிவுணர்த்திய தலைமகற்குத் தோழி கூறலும், அவடனக்குத் தலைமகடானே அவன் குறிப்பானுணர்ந்து கூறலும், பிரிவுணர்த்தியவழிக் கூறலும், தலைமகன் பிரிந்துழி ஆற்றுவிக்குந் தோழிக்குத் தலைமகள் மறுத்துக் கூறலுமென நால்வகையாற் கூறப்படும்.

தெளி.—அஃதாவது மணஞ்செய்துகொண்டபின் தலைவன் அறம்பொருளின்பங்களின் பொருட்டுத் தூரத்திலும் அவ்விடத்தி(சமீபத்தி)லும் தலைமகளைப் பிரிந்து செல்லும், செல்லுங்காலில் அப்பிரிவை அவள் பொறுக்கமாட்டாதவ

1 கற்பியல் - கற்பினது இலக்கணம்.

"பொற்புடைச் சிறப்பிற் கற்பெனப்படுவது" என்னும் இலக்கணவிளக்கச் சூத்திரத்துரையில் "அஃதாவது (கற்பாவது) கொண்டானிற் சிறந்த தெய்வமின்றெனவும் அவனையின்னவாறே வழிபடுகவெனவும் இருமுதுகுரவராலும் அந்தணர் திறத்துச் சான்றோர் தேத்தும் ஐயர்பாங்கினும் அமரர்ச்சுட்டியும் ஒழுகுமொழுக்கமும் தலைமகனும் கற்பித்தவாறொழுகுதலும், இனித் தலைமகளும் களவின்கண் ஐயையும் நாணும் நீத்தென்றதனைத் தான் தொழுதிறம் போல ஒழுகாது ஒத்தினுங் காரணத்தினும் யாத்த சிறப்பிலக்கணங்களைக் கற்பித்துக்கொண்டு துறவறத்திற் செல்லுதலொடு இயைந்தொழுகுதலுமாம்" என்று கூறப்பட்டிருக்கிறதும், "கற்பெனப் படுவது கரணமொடு புணரக், கொளற்குரி மரபிற் கிழவன் கிழத்தியைக் கொடைக்குரி மரபினோர் கொடுப்பக் கொள்வதுவே" என்று தொல்காப்பியங் கூறுவதும் இக்கற்பியற்கண்ணவாம். [கரணம் - வேள்விச்சடங்கு.]

2 அஃது - பிரிவாற்றாமை

ஊர். நள்ளையாம அஃது இங்கே பிரிவை அறிவித்த தலைவனுக்குத் தோழி சொல்லலும், அத்தோழிக்குத் தலைவி தானே அவன்குறிப்பால் அறிந்துசொல லும், பிரிவை அறிவித்துவிட்டதுச் சொல்லலும், தலைவன் பிரிந்துவிட்டது ஆற்றுவிக்குந் தோழிக்குத்தலைவிமறுத்துச்சொல்லலும் என நால்வகையாலே சொல்லப்பட்டும்.

க செல்லாமை யுண்டே லெனக்குரை மற்றுநின்
வல்வரவு வாழ்வார்க் குரை.

[பிரிந்து கடிதின வருவலென்ற தலைமகற்குத்
தோழி சொல்லியது]

பரி — (இ - ள்) நீ யெம்மைப பிரியாமை யுண்டாயின அதனை யெனக்குச் சொல், அஃதொழியப பிரிந்துபோய் நின்விரைந்துவருதல சொலவையாயின அதனை அப்பொழுது உயிர்வாழ்வார்க்குச சொல, எ-று.

தலைமகளையொழித்து 'எனக்கு' என்றாள், தானவளென்னும் வேற்றுமையின்மையின அக்காலமெல்லா மாற்றியிருந்து அவ்வரவு காணவல்லளல்லள்; பிரிந்தபொழுதே யிறந்துபடுமென்பதாம 1 அழுங்குவித்தல பயன 2 இதனைத் தலைமகன 3 கூற்றாக்கி யுரைப்பாருமுளர்

தேளி — [பிரிந்து விரைவில வருவேனென்ற தலைவனுக்குத்தோழி சொலலியது] (இ - ள) செல்லாமையுண்டேல் - (நீ எம்மைப்) பிரியாமை உண்டாயின, எனக்கு உரை - (அதனை) எனக்குச் சொலலு, மற்று- அதுநீங்க, நின வல்வரவு-(பிரிந்துபோய்) உன்விரைந்து வருதலை, (சொலவையானால் அதனை) வாழ்வாக்கு-(அப்பொழுது)உயிர்)வாழ்வாக்கு, உரை-சொலலு, எ-று.

தலைவியையொழித்து 'எனக்கு' என்றாள, தான அவள் எனகிற வேற்றுமையிலலாமையால், நீ பிரிந்திருக்குமக்காலமெல்லாம் பொறுத்திருந்து அவ வரவுகாண வலிமையுடையளலலள, நீ பிரிந்தபொழுதே இறந்து படுவளென்பதாம். அழுங்க

(க - து) தலைமகனை நோக்கித் தோழி நீபிரிந்துபோனால் தலைமகளுடனேஇறந்துவிடுவாளென்று கூறினள் எனபது. (க)

உ. இன்க ணுடைத்தவர் பார்வல பிரிவஞ்சும்
புனக ணுடைத்தாற் புணர்வு

---

1 அழுங்குவித்தல் - வருந்தச்செய்தல்

2 இதனை - இக்குறளை 3 கூற்றாக்கி - சொல்லாக்கி.

[பிரிவு நிகழ்வதனைக் குறிப்பானறிந்த தலைமகள் தோழிக்குச் சொல்லியது.]

பரி.—(இ - ள்) தழீஇக் கொண்ட பின்னின்றாளன்று அவர் நோக்கு மாத்திரமும் புணர்ச்சி குறித்தமையான இன்பமுடைத்தாயிருக்கும், இன்று அப்புணர்ச்சிதான் நிகழா நிற்கவும் அது பிரிவரென்றஞ்சும் அச்சத்தினையுடைத்தாயிற்று, அவரன்பின்மை இது, எ - று.

'பார்வல்' என்றதனாற் புணர்ச்சிபெறாத பின்னிலைக்காலம் பெறப்பட்டது 1 புன்கணென்னுங் காரியப்பெயர் காரணத்தின்மேலதாயிற்று அவ்வச்சத்தினையுடைத்தாதலாவது 2 "முன்னாறும் முனைபயிற் றமிழ்தூறுந் தீநீரைக், கள்ளினுமகிழ்செய்யுமெனவுரைத்தும் அமையாரென், ஒள்ளிழை திருத்துவ" 3 பண்டையிற் சிறப்பால அவன் பிரிதற்குறிப்புக்காட்டி அச்சஞ்செய்தலுடைமை அழுக்குவித்தல் பயன்

தெளி.—[தலைவனது பிரிவை அவன் குறிப்பாலறிந்ததலைவி தோழிக்குச்சொல்லியது.] (இ-ள்) (தழீஇமாலையுங்கொண்டபின்னின்றாளில) அவர் பார்வல்-அவரதுபார்வைமாத்திரமும், (புணர்ச்சிகுறித்தமையால்) இன்கணுடைத்து-(எமக்கு) இன்பமுடைத்தாயிருக்கும், (இன்று அப்புணர்ச்சிதான் நடந்துகொண்டிருக்கவும்)-புணர்வு-அப்புணர்ச்சி-பிரிவஞ்சும்- பிரிவரென்றஞ்சுகிற, புன்கண்-அச்சத்தினை, உடைத்து-உடைத்தாயிற்று, (அவரன்பின்மை இது) எ - று.

ஆல-அசை. 'பார்வல்' என்றதனாலே புணர்ச்சி பெறாமல் தலைவன் பின்னின்ற காலம் பெறப்பட்டது புன்கண் - துன்பம்-அது காரணத்தின் மேலாயிற்று அவ்வச்சத்தினையுடைத்தாதலாவது புணரும்போது தன்னை மிகப்புகழ்வதாலும், அணிதிருத்தலாலும தலைவன் பிரிதற் குறிப்புக் காட்டி அச்சஞ் செய்தலுடைமை. அழுக்குவித்தல பயன.

(க - து.) தலைவர்க்கு எம்மிடத்து அன்பில்லாமை அவரது பிரிவின் குறிப்பால தெரிகின்றதென்று தலைவி கூறினள் என்பது. (௨)

---

1 புன்கண்என்னும் காரியப்பெயர் புன்கண்ணுக்கு (துன்பத்திற்கு)க்காரணமான அச்சத்தின்மேலதாய் நின்றது.

2 கலித்தொகை பாலைக்கலி, ௬. இதன்பொருள் முன்னைமாறுபடுகின்ற முனையினையுடைய காணல்முனைபோலும் பல்லினிடத்து விடாமலூறும் அமிழ்துபோலும் இனியநீரைக் கள்ளினும காட்டில் மகிழ்ச்சியைத்தருமென்று கூறியும் வேட்கைதணியாராகி யென்னுடைய ஒள்ளிய பூண்கள் புணர்ச்சியால் நிலைகுலைந்தவற்றைப் பழைய நிலைகளிலே கிடக்கும்படி திருத்துகின்ற (தலைவன்) என்பது.

3 பண்டையின் - பழைமையின.

அறிதரோ தேற்ற மறிவுடையார் கண்ணும்
பிரிவோ ரிடத்துண்மை யான.

பரி.—(இ - ள்) பிரியேனென்ற தஞ்சொல்லும் நம்பிரிவாற்றாமையும் அறிதலுடையராய காதலர்கண்ணும், ஒரோவழிப பிரிவு நிகழ்தலான, அவர் சொலலும 1 தலையளியும பற்றி நம்மாட் டன்புடையரெனத் தேறுந்தேறறம் அரிதாயிருநதது, எ - று

அரோ—அசைநிலை உம்மை உயர்வுசிறபபினகண் வந்தது

தெளி — [இதுவுமது] (இ - ள்) அறிவுடையார் கண்ணும் -(பிரியேனென்ற தஞ்சொல்லையும் நமபிரிவு பொறுக்காமையையும்) அறிதலுடையவராகிய காதலரிடத்தும், ஓரிடதது - ஒரோவழி, பிரிவு உண்மையான-பிரிவுஉண்டாதலால, தேற்றம் - (அவாசொல்லும தலையளியும்பற்றி நம்மிடத்து அன்புடையரெனறுதெளியுந) தெளிவு, அரிது - அரிதாயிருந்தது, எ-று.

அரோ -அசைநிலை உம்மை உயர்வுசிறபபிலவந்தது

(க - து) தலைவரிடத்துப் பிரிவு நிகழ்தலால் அவரை நம்புதல கூடாதென்றாள் எனபது. (௩)

௪. அளித்தஞ்ச லென்றவர் நீப்பிற் றெளித்தசொற்
றேறியார்க் குண்டோ தவறு.

பரி —(இ - ள) எதிர்பபட்ட ஞான்றே தலையளிசெய்து நினனிற் பிரியேன அஞசலென்றவாதாமே பின பிரிவராயின், 2 அவாக்கன்றி அவா தெளிவித்த சொல்லை மெய்யெனத் தெளிநதார்க்குக் குற்றமுணடோ, எ-று.

3 தேறியாரெனபது தன்னைப் பிறாபோறகூறல. சொலலுஞ்செயலு மொவவாமைக குறறம அவாகணெய்தும, 4 அஃதெய்தாவகை 5 யழுங்குவி யென்பது கருத்து.

தெளி —[இதுவுமது] (இ ள்) அளித்து - (எதிர்பபட்டநாளே) தலையளிசெய்து, அஞ்சலெனறவர் - (உன்னைவிட்டுபபிரியேன்) அஞ்சாதிருவெனற

1 தலையளி - பூரணவிசுவாசம் 2 அவர்ககன்றி - தலைவர்க்கலலாமல்
3 தலைமகள் பாஙகியைநோக்கித 'தேறியார்க்கு' எனத்தனனைப பிறர்போல வைததுக்கூறினள் தன்னைப்பிறர்போலவைததுக்கூறலை நாநதி என்பா,
4 அஃதெயதாவகை - சொல்லும் செயலும் ஒத்திராமைக்குறறம தலைவாககு அடையாதபடி,
5 அழுங்குவி-தோழி! நீ தலைவர் பிரியாவாறு அவாபிரிவைத் தடைப்படுத்து.

[தலைமகன் 1 பிரிவுணர்த்திடவாறு வந்துசொல்லிய தோழிக்குச் சொல்லியது.]

பரி.—(இ - ள்) *நக்கவுக்கடுமையறிந்த தலைவர்தாமே நம்முனின்று பிரிவினை யுணர்த்தும் வன்கண்மை புடையராயின், அத்தன்மையார் பின்பு பேரருமை யறிந்துவந்து தலையளி செய்வரென்றிருக்குமாசை விடப்படும், எ - று.

2 அருமை—பயன்படுதலில்லாமை. கூடியிருந்தே அன்பின்றிப் பிரிவுணர்த்தும் வல்லராயினார் பிரிந்துபோய அன்புடையராய் நம்மை நினைத்துவந்து நலகுதல் யாண்டையதெனபதாம். அழுங்குவித்தல் பயன்.

தெளி.—[தலைவன் பிரிவை அறிவித்தவாறு வந்துசொல்லிய தோழிக்குத் தலைவிசொல்லியது] (இ - ள்) அவர் - (நமதுபிரிவுபொறுமையையறிந்த) அத்தலைவர்தாமே, நம்முனின்று) பிரிவுரைக்கும்-(தம)பிரிவை அறிவிக்கும், வன்கண்ணராயின் - அருளில்லாமையை யுடையராயின், (அத்தன்மையார் பின்பு) நல்குவரென்னுமாசை - (நமபொறுமையை அறிந்துவந்து) தலையளிசெய்வாரென்றிருக்குமாசை, அரிது - விடப்படும், எ - று.

அருமை - பயனடுதலில்லாமை. கூடியிருந்தே அன்பில்லாமற் பிரிவெண்ணுதலும் அறிவித்தலும் வல்லராயினார் பிரிந்துபோய அன்புடையராய நம்மை நினைத்துவந்து அளித்தல் எவ்விடத்ததென்பதாம். அழுங்குவித்தல் பயன்.

(க - து) நமதாற்றாமையையறிந்தும் தலைவர் பிரிவாராகில் அவர் பின்புவந்து கூடுவாரென்னு மாசையை விட்டுவிடல் வேண்டுமென்றாள் என்பது.

(சுரு)

எ. துறைவன் றுறந்தமை தூற்றாகொல் முன்கை
யிறையிறவா நின்ற வளை

பரி.—(இ - ள்) துறைவன் என்னைப் பிரியலுற்றமையை அவனுணர்த்தாமற்றுமே புணர்ந்து என முன்கையி 3 னிறையினின்றும் கழலாநின்ற வளைகள் எனக்கறிவியாவோ, அவனுணர்த்த வுணர்ந்துவந்து நீயறிவித்தல் வேண்டுமோ, எ - று.

1 "ஓதல் காவல் பகைதணி வினையே, வேந்தர்க் குற்றுழிப் பொருட்பிணி பரத்தையென, றாங்கவ் வாறே யவ்வயிற் பிரிவே" என்று இறையனாரகப் பொருள்கூறுகின்றது.

2 அருமை-அரிது என்னும் குறிப்பு வினைமுற்றின் பகுதியதான அருமை.

3 இறையினின்றும் - தங்குமிடத்திலிருந்து.

தலைவன் செலவுதலை அழுங்குவித்து வாராமல உடம்பட்டு வந்தமைபற்றி பிணங்குகின்றாளாகலால் 'இனனில்லூர்' என்றாள் உலகத்தியல்பு சொல்லுவாள்போன்று தனக்கு அவ்வாழ்வும பிரிவும் உண்டாயிருக்கை சொல்லியபடி

(க - து.) குறிப்பறியுந்தோழியில்லாத வூரில் வாழ்தலினும தமது காதலரைப் பிரிந்திருத்தல் மகளிர்க்குக் கொடியதென்றாளென்பது. (அ)

௯. தொடிற்சுடி னல்லது காமநோய் போல
விடிற்சுட லாற்றுமோ தீ.

[காமந்தியேபோன்று தானின்றவிடத்தைச் சுடுமாகலான நீயாற்றல் வேண்டுமென்ற தோழிக்குச் சொல்லியது]

பரி —(இ - ள்) தீத தன்னைத்தொட்டாற் சுடுமாயிற் சுடுதலல்லது காமமாகிய நோய்போலத் தன்னையகன்றாற் றப்பாது சுடுதலை வற்றோ, மாட்டாது எ - று.

சுடுமாயினென்பது மந்திரமருந்துகளாற் றம்பிக்கப்படாதாயி னென்றவாறு. காமத்திற் 2 கதுவுமிலலை யென்பாள் 3 வாளா 'சுடல்' என்றாள் அகறல - நுகராமை 4 சுடலெனபது முன்னுங்கூட்டப்பட்டது. 5 தீயினுங் கொடியதனை யானாற்றுமாறெனனை யென்பதாம்

தேவி —[காமம் தீயேபோன்று தான நின்றவிடத்தைச் சுடுமாதலால் நீ பொறுத்தல வேண்டுமென்ற தோழிக்குத் தலைவிசொல்லியது] (இ - ள்.) தீ-நெருப்பு, தொடின-(தன்னைத) தொட்டால, சுடிற(சுட) லல்லது-சுடுமானாற்சுடுதலல்லாமல, காமநோயபோல-காமமாகியநோயபோன்று, விடின்- (தன்னை) விட்டுநீங்கினால, சுடலாற்றுமோ-(தப்பாது) சுடலவல்லதோ,(சுடாது) எ - று.

சுடுமானாலென்பது மந்திரமருந்துகளால தம்பிக்கப்படாதாயி னென்றபடி காமத்திற்கு அதுவும இலலையெனபாள சும்மா 'சுடல்' என்றாள், நீங்கல்-அனுபவியாமை சுடலென்பது முன்னும கூட்டப்பட்டது. தீயினுங் கொடிய தனை நான பொறுக்குமவிதம் எப்படி யென்பதாம்

(க - து) காமந் தீயினுங் கொடியதென்றாளென்பது. (௯)

---

1 தம்பிக்கப்படாதாயின - தடுக்கப்படாதானால்

2 அதுவும - மந்திரமருந்துகளால் தம்பிக்கச்செய்தலும

3 வாளா - யாதொருவிசேடணமுந்தராது.

4 சுடல என்பது சுடினஎன்பதனோடும் சேர்க்கப்பட்டது

5 காமநோய் தீயினுங்கொடியதெனபது "ஊருளெழுந்த வுருகெழு செந்தீக்கு நீருட் குளித்து முயலாகு- நீருட், குளிப்பினுங் காமஞ் சுடுமேகுன் றேறி, யொளிப்பினுங் காமஞ் சுடும" என்பதனாலுமறிதற்பாற்றுமெனக.

றேனபன ஓசை வகையான அவவவறற தருமையுணர கினறன சிறப்புமமைவி காரததாற ரெககது யானுமிறநதுபடுவ லெனபது கருத்து

தெளி — [தலைவி யாபலரும பிரிவைபபொறுத்திருபபாா அது நீ செயகினறியெனற தோழிககுத் தலைவி சொலலியது.] (இ - ள) (நீசொலலுகினறது ஒககும) அறிதாறறி-பிரிவை அறிவித்தவிடத்து அதறகு உடமபடடு, அலலலோய-(பிரியமபோதுணடாகிற) துனபநோயினையும, நீககி-ஒழித்து, பிரிவாறறி -(பிரிந்தால) அபபிரிவையும பொறுத்து, பினனிருநது-பினபு இருநது, வாழவாா-உயிா வாழுமகளிர், பலா-(உலகததிற) பலா, எ-று.

முனனிருந்துசிறககத் தலையளிபெற்று இனபத்தை அனுபவிககிற சமயத்திலே அந்த இழநது துனபததை அனுபவிததறகு உடம்படுதல அரியதொனறாகலால 'அரிதாறறி' எனறும, செலலுநதேசத்திலே அவருககு யாதுசமபவிககுமோ வெனறும அவர் வருமளவும் நாம பொறுத்திருககும் விதம் எனனெனறும அவர் வரவுதான் மறுபடி எனறைககுவநது கிடைககுமோவென்றும இவவிதஙகளாலே தோனறுகின்ற மனததைவிடடு நீஙகாதாதலால் 'அலலோய நீககி' எனறும, பிரிநதால வருமளவும உளளேதோனறுகிறகாமவேதனையும புறததில வீணையிசை சநதிரன தெனறறகாறறு இவைமுதலாக வநது அந்த வளாபபவையும் பொறுத்தல அருமையாகலால 'பிரிவாறறி' எனறும, தமது காதலரைவிடடிருககமாடடாத மகளிருள இவையெலலாம் பொறுத்துப பினனும இருநது உயிாவாழவாாஒருவரும இலலையென்பது குறிபபினாலே தோனறப-'பினனிருநதுவாழவார் பலர்'எனறும சொலலினாள். அரிது எனபது குறிபபுவினையாலணையும பெயர் பிரிவிலே நிகழபவைகளைப'பிரிவு' எனறுள ஆறறி நீககி ஆறறி என்பவை ஓசைவகையால அவ்வவைகளின அருமை யுணாததுகினறன பிரிவையுமெனும் இழிவுசிறப்புமமை செயயுள் விகாரததாறறொக்குகின்றது. யானும இறநதுபடுவேனெனபது கருததுு.

(க - து) பிரிவையும் அதனாலுண்டாகும நோயையும் பொறுத்து வாழும மகளிரும உண்டென்றுளெனபது. (ம)

## ககள - ம். அதி —படர்மெலிநதிரங்கல்

பரி —அது 1 படரான மெலிநதிரஙகலென விரியும் அஃதாவது பிரிவாறறுளாய தலைமகள் தானுறுகினற துனபததினை எபபொழுதும நினைத்தலின் அநநினைவான மெலிந்திரஙகுதல அதிகாரமுறைமையும இதனானேவிளஙகும

தெளி —அது படரால மெலிநது இரஙகலெனறு விரியும் அஃதாவது பிரிவு பொறுககமாட்டாதவளாகிய தலைவி தான் உறுகினறதுனபததினை எப

---

1 படரான்-துன்பததினை நினைததலால், மெலிநது- இளைதது, இரஙகல்-வருந்துதல.

பரி—(இ-ள்) இந்நோயை ஏனையோர் அறியாமல் மறைத்தலும் உடையேனாகின்றிலேன், ஆகாக்கால், நோய் செய்தவர்க்கு உரைக்கவெனின், அது உடனெனக்கு நாணினைத் தாராநின்றது, இனியென் செய்கோ, எ-று

ஒருகாலைக்கொருகால் மிகுதலின் 'காத்தலு மாற்றேன்' என்றும், சேய்மைக்கண்ணராகக்கு இது சொல்லித் தூது விட்டால் இன்னு மிருக்கேனென்பது படக்குமென்னும் கருத்தால் 'நாணுத்தரும்' என்றுங் கூறினாள்.

தேவி—[இவ்விடத்தோர் அறியாமல் மறைத்தல் அவ்விடத்தோர் அறிடத் தூதுவிடுதல் என்னும் இரண்டனுள் ஒன்று செயலவேண்டுமென்ற தோழிக்குத் தலைவிசொல்லியது] (இ-ள்) இந்நோயை - இக்காமநோயை, காத்தலுமாற்றேன - (இவ்விடத்தோர் அறியாமல்) மறைத்தலும வல்லேனாகின்றிலேன், (ஆகாக்கால்) நோய்செய்தாரக்கு நோயைச்செய்தவாக்கு, (சொல்லவென்றால்) உரைத்தலும - சொல்லலும், நாணுத்தரும் (எனக்கு) நாணத்தைத் தாராநின்றது, (இனி என்செய்வேன்), எ-று

ஒருவேளைக்கு ஒருவேளை மிகுதலால 'காத்தலுமாற்றேன்' என்றும், தூர தேசத்திலே போயிருப்பவாக்கு இதுசொல்லித் தூது விட்டால் இன்னும் சாகாதிருக்கிறேனென்பது தோன்றுமென்னும் கருத்தால் 'நாணுத்தரும்' என்றுமசொல்லினாள்

(க-து) காமநோயை மறைத்தலும் அதனைச் செய்தார்க்குரைத்தலும் என்னாலாகாவென்றுளென்பது. (உ)

௩. காமமு நாணு முயிர்காவாத் தூங்குமென்
னோனா வுடம்பி னகத்து

[இதுவுமது.]

பரி—(இ-ள்) காமநோயும் 1 அதனைச் செய்தவர்க்கு உரைக்கலொல்லாத நாணும் 2 தம்மைப் பொறாத என்னுடம்பின்கண்ணே உயிர் காத்தண்டாக 3 அதனிருத்தலையினுங் தூங்காநின்றன எ-று

பொறுமை-மெலிவாலாயது 4 தூங்குமென்பது ஒன்றி னொன்று மிகாது 5 இரண்டும் 6 ஒத்தசீர வென்பது தோன்ற நின்றது தூது விடவும ஒழியவும பண்ணுவனவாய காம நாண்கள் தம்முளொத்து உயிரினை 7 யிறுவி

---

தது வாங்குந் தொடை" என்று இரத்தினச் சுருக்கங்கூறுவ தினகறியத்தக்கது [எகினம்-அன்னம் கிளளை-கிளி பூவை-நாகணவாய் பிரமரம்-வண்டு]

1 அதனை-காமநோயை 2 தம்மை-காமநோய நாண என்னுந்தம்மை
3 அதன-உயிரின.
4 தூங்குதல-தொங்குதல 5 இரணடும்-காமநோயும நாணும
6 ஒத்தசீர-தம்முள் ஒத்திருக்குந் தன்மையன
7 இறுவியாநின்றன-வருத்தாநின்றன.

ரு. துப்பி னெவனாவர் மற்கொ றுயர்வரவு
நட்பினு ளாற்று பவர்.

[துதுவிடாமைநோக்கித் தோழியொடு புலந்து சொல்லியது]

பரி.—(இ - ள்.) இன்பஞ் செய்தற்குரிய நட்பின்கண்ணே துன்பவரவி னைச் செய்ய வல்லவர் துன்பஞ் செய்தற்குரிய பகைமைக்கண் என்செய்வர் கொல்லோ, எ-று

நட்பு பகையுமாதல் 1 "நட்பெதிர் நோக்கே யுள்ளாச் சேய்மைய, விட்டெதிர் நோக்கே யங்கை யணைமையன" என்பதனானு மறிக. அப்பகை மை ஈண்டுக் காணாமையின் 2 அவர் செய்வது மறியப்பெறறிலேமென்பது பட நின்றமையின், மன் ஒழியிசைக்கண் வந்தது, துயர்வருதலை விலக்கலாயி ருக்க அது செய்கின்றிலையென்பப் புலக்கின்றமையின், துயர்வரவு செய்தாளாக கியும் பிறளாக்கியுங் கூறினாள்.

தெளி.—[தூதுவிடாமைநோக்கித் தோழியோடு தலைவி பிணங்கிச் சொல்லியது.] (இ-ள்.) நட்பினுள்- இன்பஞ்செய்தற்கு உரிய) நட்பினிடத்து, துயர்வரவு-துன்பத்தின்வரவினை, ஆற்றுபவர்-செய்யவல்லவர், துப்பின்-(துன்பஞ்செய்தற்கு உரிய) பகைமையிடத்து, எவனாவர்கொல்—என்னசெய்வரோ, எ-று.

துப்பு என்பது இங்குப் பகையென்னும் பொருளில் வந்தது. அப்பகை இங்கே காணாமையால் அவர்செய்வதும் அறியப்பெறறிலேமென்பதுபடநிற் கையால், மன் ஒழியிசைப்பொருளில்வந்தது துயர்வருதலை விலக்கலாயிருக்க அது செய்கின்றிலையென்று பிணங்குகின்றமையால், தோழியைத் துயரவரவு செய்தவளாக்கியும் பிறளாக்கியும் சொல்லினாள்

(க - து.) நட்பாயுள்ளபோதே துன்பஞ் செய்பவர் பகை நேர்ந் தவிடத்துத் துன்பஞ் செய்யா தொழிவரோ என்றாளென்பது. (ரு)

சா. இன்பங் கடன்மற்றுக் காம மஃதடுங்காற்
றுன்ப மதனிற் பெரிது

[காமத்தாலின்பமுற்றார்க்கு 3 அதனினுய துன்பமும் வருமென்ற தோழிக்குச் சொல்லியது]

---

1 புறநானூறு கஅ0, இதன்பொருள் பகையாய் எதிர்த்தோர்களுக்குக் கரு துதற்கியலாத சேணமை (தூரம்) யுடையன, நட்பாய் எதிர்த்துவந்தவர்க ளுக்கு அகங்கை (நெல்லிக்கனிபோன்று) அண்மையா(சமீபமா) யிருப்பவ ன என்பது போரிலன்றி மற்றவிடத்துப் பகைவர்காணற்கரியனும் நண்பினர்காணற்கெளியனும் இருப்பன என்பது கருத்து இங்கே துப்பென்பது பகையென்னும் பொருளை யுணர்த்தியவாறறிக

2 அவர் - பகைவர். 3 அதனின் - காமத்தினால

துய் அரைமிருளாயிற்று, அவ்வரை யிருட்கண்ணும் 1 அதற்கொரு துணையின்றியானே யாயினேன், ஆயும் 2 இறந்துபட்டுய்ந்து போகாதுளேனாகாநின்றே ன, ஈதொரு தீவினைப்பயனிருந்தவாறென, எ-று

3 கடுமை ஈண்டு மிகுதிக்கணின்றது 4உம்மை முன்னும கூட்டப்பட்டது யானேயாயினேனென்பது நீதுணையாயிற்றிலை யென்னும குறிப பிற்று.

தெளி—[காமககடலை நிறைபுணையாக நீநதலாமென்ற தோழிக்குத் தலைவி சொலலியது] (இ-ள்) காமக்கடும்புனல்-காமமாகிய மிகுந்த கடலை, நீந்தினேன)நீநதி(யும)-கரைகாணேன்-(அதற்குக) கரைகாணகினறிலேன், (அககாலைககாலநதான எலலாரும் நித்திரைசெய்யும் பாதியிரவாயிற்று) யாமத்தும்-அபபாதியிரவிலும், யானே-(அதறகு ஒரு துணையிலலாமல்) யானேயாயினேன், (ஆகியும) உளேன-இறவாதிருககிறேன, (ஈதொரு தீவினைப் பயன இருந்தவிதம என,) எ - று

கடுமை யென்பது இஙகு மிகுதிபபொருளில் வந்தது உம்மை முன்னுங் கூட்டப்பட்டது. யானேயாயினேனென்பது நீ துணையாயினாயிலலையென்னுங் குறிட பிறறு

(க - து.) காமககடலை நீந்தமுடியாது உறக்கமறறிருக்கிறேனெனறாள எனபது. (எ)

அ மன்னுயி ரெலலாந துயிற்றி யளித்திரா
 வென்னல்ல திலலை துணை

[இரவின் கொடுமைசொலலி யிரங்கியது-]

பரி—(இ - ள்.) இவ்விரா அளித்தாயிருந்தது; உலகத்து நிலைபெறுகின்ற உயிர்களை யெல்லாந் தானே துயிலப்பண்ணுதலான் என்னையல்லது வேறு உடைத்தாயிற்றிலலை,எ - று

1 அதறகு - காமககடலுக்கு.

2 இறந்துபட்டு - மடிந்து, உயநதுபோகாது -அக்காமககடலினின்று (துன்பத்திலிருநது) தப்பிபபோகாது, உளேனாகாநின்றேன் - உயிரோடிருக்கிறேன்.

3 காமக்கடும்புனல என்பதிலுள்ள கடுமை (கடும) என்பது இஙகே காமககடலின் மிகுதியைககாட்டி நின்றது.

4 யாமத்துமஎன்ற வும்மை நீநதியென்பதனோடுமு கூடடபபடடது.

...காகு கண்ணோடாமைமேலும் பனைமையி னெடியவாயக கொடியவாகா நின்றன வெனபடா

தேளி —[இதுவுமது] (இ - ள்) (காதலரோடு நாம இன்புறறமுன்னு ...கூடியிருந்து) இநநாள - (அவாபிரிவைப பொறுககமாட்டே ...ரிஙைறு இநநாளகளிலே, நெடிய - நெடியவையாய், கழியும - செலகின்ற, இரா - இரவுகள், கொடியார— அக்கொடியவரது, கொடுமையின - கொடுமைக் ...மேலே, தாம கொடிய - தாம கொடுமைசெய்யாநின்றன, எ - று

...பொறுமை நினையாது பிரிதலால 'கொடியார்' என்றுள கொடுமை ...லமாட்டாமல நீடித்தல அவாபிரிவாலும் நீட்டிப்பாலும உண்டாகி ... ...ளைககு முகஙகோடாமைமேலும முன்னையி னெடியவாய்க கொடிய ...ன்றனவெனபதாம

(க - து) தலைவர் கொடுமையிலும் இரவின கொடுமை பெரி தென்றுசொன்னது. (கூ)

கo உள்ளமபோனறு ளவழிச செலகற்பின வெள்ளநீர் நீநதல மனறோவென கண

[நினகணகள் பேரழ கழிகினறனவாகலின அழறபாலை யலலை யென்ற தோழிக்குச சொலலியது]

பரி—(இ - ள) மனமபோலக காதலருள்ள தேயததுக் கடிதிற்செலல வலலவாயின, என் கணகள் இஙஙனம வெள்ளமாகிய தந்நீரை நீந்தா எ - று

1 அது மாட்டாமையின இனி 2 அவறறிறகு நீந்துதலே யுள்ளதென்பது படகின்றமையின, மன ஒழியிசைககண வநதது 3 மனத்திற்குச செலவாவது நினைவே யாகலின 'உளளம் போன்று' என்றும, மெயககு நடநது செலலவே ணடுதலிற கணகள் அதனொடுசென்று காதலரைக் காண்டல் கூடாதென்னுங் கருததால 'செலகறபின' என்றுங் கூறினார், இதனை வருகின்ற வதிகார முக தோறறுவாய செய்யபபட்டது

தேளி —[நின் கண்கள்பேரழகு அழிகின்றன ஆதலால் அழாதிருவென் ற தோழிககுத் தலைவிசொலலியது] (இ - ள்)உள்ளம்போனறு - மனம்போ

1 அது - மனமபோலக காதலருள்ள தேயததிறகுகண்கள் விரைவிறசெல்லு தல.

2 அவறறிற்கு - கணகளுககு.

3 "சென்றதுகொலபோந்ததுகொலசெவவிபெருநதுனையு, நின்றதுகொனே ரமருஙகிற கையூன்றி - முன்றின், முழஙகுஙகாடாயானை மொய்மமலர்த் தாரானறற், குழநதுபின்சென்றவெனனெஞ்சு" என்றுஞ்செயயுளு மி

னறு, உளவழி - (காதலர்) இருக்கிற நாட்டிற்கு, செலகற்பின - (கடிதிலே) செல்லவல்லனவாயின, எனகண - எனதுகண்கள், (இட்டு)வெள்ளநீர் - வெள்ளமாகிய்க கண்ணீரை, நீந்தல - நீந்தா, எ - று.

அது மாட்டாமையால இனி அவைகளுக்கு நீந்துதலே உள்ளதென்பது பட நின்றமையால, மா ஒழிபிசைபடபொருள்ல்வந்து ஓ அசைமாத்திரைக்கு செலவு நினைவேடாதலால 'உள்ளம்போன்று' என்றும், மெய்க்கு நடந்து செல வேண்டுதலால கண்கள் அந்நெஞ்சுபோயக காதலரைக்காணல கூடாதென னுங் கருத்தால 'செலகற்பின' என்றும் சொல்லினள் இதனால வருகிற அதிகாரமும் தோற்றுவாய் செய்யப்பட்டது

(க - து.) மனம்போலக் கண்கள் தலைவருள்ள விடத்துக்குப் போக முடியாமையால் அவை ஓயாதழுகின்றன வென்றாளென்பது.(ம)

## ககஅ - ம் அதி,—கண்விதுப்பழிதல்.

பரி.—அஃதாவது கண்கள் தங்காட்சி விதுப்பான் வருந்துதல. காட்சி விதுப்பத் தலைமகனைக் காண்டற்கு விரைதல இது படரான் மெலிந்தவழி நிகழ்வதாகலின், படர்மெலிந்திரங்கலின்பின வைக்கப்பட்டது

தெளி —அஃதாவது கண்கள் தமதுகாட்சி விதுப்பினால வருந்துதல.காட்சிவிதுப்புத் தலைமகனைக்காணுதற்கு விரைதல், இது படராலே மெலிந்தவிடத்து நிகழ்வதாகலால, அதனபின வைக்கப்பட்டது

க. கண்டாங் கலுழ்வ தெவன்கொலோ தண்டாநோய்
தாங்காட்ட யாங்கண் டது.

[நின்கண்கள கலுழ்ந்து தமமழ கிழவாநின்றன நீயாற்றல்
வேண்டுமென்ற தோழிக்குத் தலைமகள்
சொல்லியது.]

பரி.—(இ - ள்) இத்தணியா நோயை யாமறிந்தது 1 தாமெமக்குக் காதலரைக் காட்டலா னன்றோ 2 அன்று 3 அத்தொழிலவாய கண்கள் இன்று எம்மைக்காட்டச்சொல்லி யழுகின்றது என்கருதி' எ - று.

காட்டவென்பதற் கேற்ற செயப்படுபொருள் வருவிக்கப்பட்டது. 4 இன்றுந்தாமே காட்டுதலல்லது யாங்காட்டுதல் யாண்டையதென்பதாம்.

1 தாம் - கண்கள். 2 அன்று - காதலர் எதிர்ப்பட்ட
3 அத்தொழிலவாய - காணுதற்றொழிலையுடையனவாய.
4 இப்பொழுதும் கண்கள் தாமே எமக்குக் காதலரைக்காட்டுவதல்லாமல் யாம் அக்கண்களுக்கு அவரைக்காட்டுவது எவ்வாறுமென்பது.

**தெளி.**—[நினைக்கின்ற அழுது நமது அழகை இழக்கின்றன நீ பொறுத்தல் வேண்டுமென்ற தோழிக்குத் தலைவி சொல்லியது] (இ - ள்) தண்டா நோய் - இத்தீராத (காம)நோயை, யாம் கண்டது - யாம் அறிந்தது, தாம்-(எமக்கு)காட்ட-(க்காதலரை) காட்டலாலன்றே, கண்தாம் - (அன்று அதனைக் காட்டிய) கண்கள், கலுழ்வது-(இன்று எம்மைக்காட்டச்சொல்லி)அழுகிறது, என்கொல் - யாதுநினைத்து, எ - று

காட்டவென்பதற்கேற்ற காதலரை யென்னும் செயப்படுபொருள் வருவிக்கப்பட்டது. இன்றுந் தாமே காட்டுதலல்லது யாம்காட்டுதல் எவ்விடத்ததெ

(க - து.) தாம் காட்ட யாங்கண்ட தலைவரைத் கண்கள் எம்மைக் காட்டச்சொல்லி யழுகின்றன வென்றுளெனபது. (க)

௨. தெரிந்துணரா நோக்கிய வுண்கண் பரிந்துணராப்
பைத லுழப்ப தெவன்

[இதுவுமது]

பரி —(இ - ள.) மேல் விளைவதனை யாராய்ந்தறியாது அன்றுகாதலரை நோக்கின்ற உண்கண்கள் இன்று 1 இது 2 நம்மால்வந்ததாகலிற் பொறுத்தல் வேண்டுமெனக் கூறுபடுத் துணராது துன்பமுழப்பது என்கருதி? எ - று.

விளைவது—பிரிந்துபோயவர் வாராமையிற் காண்டற்கரியராய் வருத்துதல். முன்னே வருவதறிந்து அது காவாதார்க்கு 3 அது வந்தவழிப் பொறுத்தலன்றே யுள்ளது, 4 அதுவுஞ்செய்யாது வருந்துதல் கழிமடச்செய்கையெனபதாம்

**தெளி.**—[இதுவுமது.] (இ - ள்) தெரிந்துணரா - (மேல்விளைவதனை) ஆராய்ந்தறியாமல், நோக்கிய - (அன்று தலைவரைப்) நோக்கின்ற, உண்கண் - (மை) யுண்டகண்கள், (இன்று இது நம்மால் வந்ததாதலால் பொறுத்தல் வேண்டுமென்று) பரிந்துணரா - கூறுபடுத்தி அறியாமல், பைதலுழப்பது - துன்பத்தையனுபவிப்பது, எவன - யாதுநினைத்து, எ - று

விளைவது - பிரிந்துபோயதலைவர் வாராமையால் காணுதற்கரியராக வருந்துதல். முன்னே வருவதை அறிந்து அது காவாதார்க்கு அது வந்தவிடத்து பொறுத்தலன்றே உள்ளது, அதுவுஞ்செய்யாது வருந்துதல மிகுந்த அறியாமையாலாகிய செயலெனபதாம

1 இது - இவ்வருத்தம் 2 நம்மால - கண்களாகியநம்மால
3 அது - மேல்விளையும் வருத்தம் 4 அதுவும - பொறுத்தலும

நிறுத்தல—பிரிதலும பினகூடாமையு முடையாரைக காட்டி 1 அதனால் நிலைபெறசசெய்தல முன எனககினனாதன செய்தலாற பின 2 தமககினனா தன தாமே வந்தன வெனபதாம

தெளி —[இதுவுமது] (இ - ள.) உணகண (மை) யுணடகணகள், (அன்று) உயலாற்று - (நான) பிழைககமாட்டாமைககுக்காரணமாகிய, உயவினை ய-ஒழிவிலலாத நோயை, என்கண - எனனிடததே, நிறுதது- நிறுததி, பெய வாறறு-(தாமும்)அழுதலைமாட்டாவண்ணம, நீருலநத-நீரவறறிவிட்டன, எ-று.

நிறுத்தல் - பிரிதலும பினகூடாமையுமுடையாரை எனக்குககாட்டி அதனால நோயை நிலைபெறசசெயதல் முன எனக்குத துன்பஙகள்செயதலால பின தமககுத துனபஙகள தாமே வந்தனவெனபதாம்.

(க - து.) கண்கள எனனையும் வருத்துவதன்றித் தாமும நீர்வற்றி வருநதுகினறன வென்றுளெனபது (ச)

௫. படலாறறு பைத லுழக்குங் கடலாற்றுக்
காமநோய் செய்தவென் கண.

(இதுவுமது.)

பரி —(இ - ள்) எனக்குக் கடலுஞ் சிறிதாம வணணம் பெரிதாய காம நோயைச செய்த என்கணகள 3 அத்தீவினையாற 4 றாமுந துயில்இலவாயத்து னபததைப் முழவா நினறன, எ - று.

காமநோய 5 காட்சியான் வநததாகலின, 6 அதனைககணகளே செயததாககிக கூறினா. துன்பம - அழுதலாயது

தெளி —(இதுவுமது) (இ - ள்.) (எனக்கு) கடலாறறு-கடலுஞ் சிறிதாம் வணணம், (பெரிதாகிய) காமநோய-காமநோயை, செயத - எனகண்- என துகணகள, (அததீவினையாலே) படலாற்று-(தாமும) தூஙகுதிலவாய, பைதலுழக்கும-துன்பத்தையும் அனுபவிக்கினறன, எ-று

காமநோய காட்சியால் வந்ததாகலால,அதனைக் கணகளே செய்ததாககிச சொலலினா. துன்பம-அழுதலாகியது

(க - து) எனக்குக் காமநோயைச் செயத கண்கள் அததீவினையால் தாமுநதுயிலாது வருநதுகினறனவெனறுளெனபது (௫)

1 அதனால - காட்டுதலால
2 தமககு - கண்களுக்கு.
3 அததீவினையால - காமநோயைச்செயததீவினையினால.
4 தாமும் - கண்களும் 5 காட்சியான் - தலைமகனைககாணுதலால்
6 அதனை -காமநோயை

௬. ஓஒ இனிதே எமக்கிந்நோய் செய்தகண்
டாஅம் இதற்பட் டது

[இதுவுமது]

பரி.—(இ - ள்) எமக்கிக்காமநோயினைச் செய்த கண்கடாமும் இத்துயி லாதழுதற்கண்ணே பட்டது மிகவுமினிதாயிற்று, எ-று.

ஓவென்பது மிகுதிப்பொருட்கண் வந்த குறிப்புச்சொல். [1] தம்மால் வருத்தமுற்றமை யெமக்கு அது தீர்ந்தாற்போன்றதென்பதாம்

தெளி.—[இதுவுமது] (இ - ள், எமக்கு - இந்நோய் - இக்காமநோயினை, செய்தகண் - செய்தகண்கள், தாம் - தாமும், இதற்பட்டது - இதுதூங்காமல் அழுதலிலே பட்டது, ஓஒஇனிதே - மிகவும் இனிதாயிற்று, எ-று.

ஓவென்பது- மிகுதிப்பொருளில்வந்த குறிப்பிடைச்சொல். தம்மால வருந்தமடைந்த எமக்கு அவ்வருத்தம் தீர்ந்தாற்போன்றதென்பதாம்.

(க - து) எனக்குக் காமநோயைச் செய்தகண்கள் துயிலாது வருந்துதல் எனக்கினிதாயிற்றென்றாளென்பது (௬)

௭. உழந்துழந் துண்ணீர் அறுக விழைந்திழைந்து
வேண்டி அவர்க்கண்ட கண்.

[இதுவுமது.]

பரி.—(இ - ள்.) விழைந்து உண்ணெகிழ்ந்து விடாதே அன்று அவரைக் கண்ட கண்கள் இன்று இத்துயிலாதழுகலாய துன்பத்தினை யுழந்துழந்து தமக்குள்ளநீர் அற்றே போக, எ-று.

அடுக்கு இடைவிடாமைக்கண் வந்தது. அறுதலாகிய இடத்து நிகழ் பொருளின்றொழில் இடத்தின்மே னின்றது.

தெளி.—[இதுவுமது] (இ-ள்) விழைந்து - விரும்பி, இழைந்து - உட குழைந்து, வேண்டி - விடாதே, அவர்க்கண்டகண்கள் - (அன்று) அந்தலைவரை கண்டார்ந்தகண்கள், உழந்துழந்து - (இன்றிந்த தூங்காமல் அழுதலாகியது ன்பத்தினை) அனுபவித்து அனுபவித்து, உண்ணீர் - (தம்) முள்ளிருக்கிற நீர், அறுக - அற்றேபோகுக, எ - று.

உழந்துழந்து என்னும் அடுக்கு இடைவிடாமைக்கண் வந்தது. இடைவிடாமை - நீங்காமை அறுதலாகிய இடத்து (கண்களில்) நிகழ்பொ ருளின் (நீரின்) தொழிலை இடத்தின (கண்களின) மேலேற்றிக்கண் நீரறுக

1 தம்மால் - கண்களால்.

என்று கூறினமையின்' இஃது இடத்து நிகழ்பொருளின் தொழில் இடத்தின் மேலாய உபசாரவழக்கு.

(௧ - து.) தலைவரை ஆசையாயக்கண்ட கண்கள் மிகவும் வருந்தி தீர்ந்துபோகுக வென்றுரென்பது (௭)

அ. பேணாது பெட்டா ருளர்மன்னோ மற்றவர்க்
காணா தமைவில கண்.

[காதலர் பிரிந்துபோயினாரல்லர் அவரிணுள்ளர் அவரைக் காணுமளவும நீயாற்றலவேண்டு மென்ற தோழிக்குச் சொல்லியது]

பரி —(இ - ள்) நெஞ்சால விழையாதுவைத்துச சொன்மாத்திரத்தால் விழைந்தவர் இவவிடத்தேயுளர், அவ்வுண்மையாற் பயன் யாது, அவரைக கண்கள் காணா தமைகின்றனவில்லையாயின, எ - று

செயலாற்பிரிந்து நின்றமையிற் 'பேணாது' என்றும, 1 முன னலம்பாராட்டிய 2 பிரிவச்சமும 3 வன்புறையுங் கூறினாராகலிற 'பெட்டார்' என்றுங கூறினாள். 4 மன் ஒழியிசைக்கண் வந்தது. 5 மற்று வினைமாற்றினகண வ

1 நலம்பாராட்டல - தலைமகளைப புணராதமுன்பு நின்றவேட்கை புணர்ந்தபின்பும அதிகரித்தலால அப்புணர்ச்சி நலத்தைத்தலைமகன புகழ்ந்து சொல்லுதல

"உணர்ந்தார்க குணர்வரி யோனதில்லைச் சிற்றம் பலத்தொருவன், குனித்தான் வெளிப்பட்ட கொவ்வைச்செவ் வாயிக் கொடியிடைதோள், புணர்ந்தாற புணருந் தொறும்பெரும் போகம்பின் னும்புதிதாய, மணந்தாழ புரிகுழலா ளல்குல போல வளர்கின்றதே." என்று திருக்கோவையார் கூறுவதிக்கறியத்தக்கது

2 பிரிவச்சம - பிரிதற்கு அஞ்சுதல் "பிரிவச்சமென்பது தான்பிரிய அஞ்சிற்றும பிரிவச்சம்; அவளைபபிரியவஞ்சுவித்ததும்பிரிவச்சம், ஆகலிற் பிரிவச்சமெனப்பட்டது. அது யாஙஙனம்சொல்லுமோஎனின், நினனிற் பிரியேன், பிரியின் ஆற்றேன்எனனும்" என்றுஇறையனாரகப்பொருளிரண்டாஞ் சூத்திரத்தினுரையிற் கூறப்பட்டிருக்கிறது

3 வன்புறை - தலைமகள் ஐயுற்றவிடத்துத தலைமகன் ஐயந்தீரவற்புறுத்திக் கூறுதல (கைவிடேனென்று பலவுறுதிமொழிகளைககூறல்) "ஐயந் தீர்த்தல பிரிவறி வுறுத்தலென்,றெய்திய வன்புறை யிருவகைத் தாகும"என்று அகப்பொருள்விளக்கம் கூறுகின்றது

4 அவவுண்மையாற்பயன்யாது என்னும் ஒழிந்தசொற்பொருளைத்தந்து நின்றமையினாலே மன் ஒழியிசைககண் வந்ததாயிற்று

5 மற்று என்னும் இடைச்சொல் உளர் என்னும் வினையைமாற்றி யிலர் என்னும வினையைத்தந்து நின்றதினாலே வினைமாற்றாயிற்று

ந்தது ஓகாரம் அசைநிலை. யானுற்றவுங் கண்கள் அவரைக் காணாது வி ரும்பாநின்றன வென்பதாம். 1 இனிக் கொண்கனையென்று பாடமாயின், என்கண்கள் தம்மைக் காணாதமைகின்ற கொண்கனைத் தாங்காணாதமைகின்றன வில்லை, இவ்வாறே தம்மை யொருவர் விழையாதிருக்கத் தாமவரை விழைந்தார் உலகத்துளரோ வென்றுரைக்க. இதற்கு மன் அசைநிலை.

தெளி.—[காதலர் பிரிந்து போகவில்லை அவர் இங்கே இருக்கிறார் அவரைப் பார்க்குமளவும் நீ பொறுத்தல் வேண்டுமென்ற தோழிக்குத் தலைவி சொல்லியது]; (இ-ள்.) பேணாது - (மனத்தால்) விரும்பாதிருந்தும், பெட்டார் - (சொல்மாத்திரத்தால்) விரும்பியவர், உளர் மன - (இங்கே) இருக்கின்றார், 'அவரிருந்ததனாலே பயனென்னாது' கண - கண்கள், மற்று அவர்க்காணாது - அவரைக் காணாமல், அமைவில - பொறுக்கின்றன இல்லையாயின, எ - று.

செயலாற் பிரிந்து நின்றமையால் 'பேணாது' என்றும், முன்னே கலந்த காலத்துப் பிரிவச்சமும், அன்புரையும் சொல்லினாராதலால் 'பெட்டார்' என்றும் சொல்லினள். மன - ஒழியிசை. மற்று - வினைமாற்று. ஓ-அசைநிலை. யான் பொறுக்கவும் கண்கள் அவரைக்காணுதற்கு விரும்புகின்றன வென்பதாம்.

(க - து) மனத்தால் விரும்பாத தலைவரை என்கண்கள் காணவிரைகின்றன வென்றாள் என்பது. (அ)

௯. வாராக்கா றுஞ்சா வரிற்றுஞ்சா வாயிடை
யாரஞ ருற்றன கண்.

[நீயுமாற்றி நின்கண்களுந் துயிலுவனவாதல் வேண்டு
மென்ற தோழிக்குச் சொல்லியது]

பரி.—(இ - ள்) காதலர் வாராதஞான்று அவர் வரவு பார்த்துத் துயிலா; வந்தஞான்று அவர் பிரிவஞ்சித் துயிலா; ஆகலான் 2 அவ்விருவழியும் என்கண்கள் பொறுத்தற்கரிய துன்பத்தினையுடைய, எ - று.

3 ஆயிடையெனச் சுட்டு நீண்டது. இனி அவற்றிற்குத் துயில் ஒருஞான்று மில்லை யென்பதாம்.

---

1 பேணாது பெட்டா ருளர்மன்னோ கொண்கனைக், காணா தமைவில கண் என்றுபாடமானால் அதற்குக் கண - என்கண்கள், கொண்கனை-(தம்மைக்காணாமற்பொருந்தியிருக்கின்ற) தலைவனை, காணாது-(தாம்) காணாமல், அமைவில-பொருந்துகின்றன வில்லை, பேணாது-(இவ்வாறேயொருவர் தம்மை) விழையாதிருக்க, பெட்டார் - (தாமவரை) விரும்பினார், உளரோ (உலகத்தில்) இருக்கின்றாரோ, என்பதுரை இவ்வுரைக்கு மன் அசைநிலை.

2 அவ்விருவழியும் - வாராதகாள் வந்தகாள் என்னும் இரண்டிடத்தும்

3 "சுட்டிற்சுட்டு, நீளின் யகரமுந் தோன்றுத னெறியே" என்று நன்னூல் கூறுவ திங்கறியத்தக்கது.

**தெளி.**—[நீயுடபொறுத்து உன்கண்களும் துயில்வனவாதலவேண்டுமெ ன்ற தோழிக்குத்தலைவி சொல்லியது.] (இ-ள்) வாராக்கால-(காதலா) வாராத நாளகளிலே, துஞ்சா - (அவாவரவுபாாததுச) தூஙகாவாம, வரின் - வந்த நாளகளிலே, துஞ்சா - (அவர் பிரிவரென்று அஞ்சித) தூஙகாவாம, (ஆகலால்) ஆயிடை - அவவிருவழியும, கண - (எனது) கணகள், ஆரஞருற்றன - பொறுததறகரிய துனபததைபுடையனவாம, எ - று.

ஆயிடை யென்பதில அ என்னும் சுட்டு ஆ என நீணடு நின்றது. இனி அககணகளுககுத் தூககம் ஒருநாளும இலலையென்பதாம •

(க - து) தலைவர் வராதபோதும வந்தபோதும என்கண்கள் தூஙகாது வருந்துகினறன வென்றுளெனபது (சூ)

கo **மறை**பெற லூரார்க் கரிதன்று லெமபோ
 லறைபறை கணணா ரகதது.

[காதலரை இவவூர் இயறபழியாமல அவர் கொடுமையை மறைகக வேணடுமென்ற தோழிக்குச சொலலியது ]

**பரி.**—(இ - ள்) எமமைபபோலும 1 அறைபறையாகிய கண்ணினையுடையா நதநெஞ்சினக ணடககிய மறையை யறிதல இவவூரினக ணுளளாாக்கு எளிது, எ - று

மறையெனறது ஈணடு மறைக்கப்படுவதனை அகததுநிகழ்வதனைபபுறத்துளளாாககறிவிததலாகிய தொழிலான் ஒறறுமை யுணமையின், அறைபறையாகிய கண என்றாள் இஙஙனஞ் 2 செயயுள் விகார மாககாது அறைபறைக கண்ணாரெனறு பாட மோதுவாரு முளர். யான மறைககவும 3 இவை வெளிபபடுததாநின்றன வென்பதாம

**தெளி**—[காதலரை இவவூரார் இயற்பழியாமல அவா கொடுமையை மறைகக வேண்டுமெனற தோழிககுத்தலைவி சொலலியது ](இ - ள) எமபோல-எம்மைபபோலும், அறைபறைகணணார்-அறைபறையாகிய கணணினையுடையவா, அகத்து-(தமது)நெஞ்சிலடக்கிய, மறைபெறல- இரகசியததை அறிதல, ஊராாககு - இவவூரிலுள்ளவர்க்கு, அரிதன்று - எளிது, எ - று

ஆல - அசை, மறையென்றது இஙகே மறைககபபடுவதனை. உள்ளே நிகழ்வதைப புறததிலுள்ளார்க்கு அறிவிததலாகிய தொழிலாலே பறையோடு

1 அறைபறை - அறையபபடுமபறை பறை-ஒருவாததியவிசேடம. 'அறைபறை" எனனுஙகுறளின் விசேடவுரையில "பறை ஒருவன கையாற்றன் னையறிவிந்த தொனறனை யிடந்தோறுங கொணடுசெனறு யாவரையுமறிவிககுமாகவான" எனறு கூறியிருததலு மிஙகறியத்தக்கதாம்.

2 பறைக்கண் எனனுமபண்புததொகை ஒறறுமிகாது 'பறைகண' என்றாயது செயயுள்விகாரமெனறு கொள்ளாது அறைபறைக கணணா என்று பாடங கூறுவாருமுணடு

3 இவை - கணகள

அறைபறையுடைமையால் 'அறைபறையாகிய கண்' என்றான். [illegible] இவை வெளிப்படுத்தினவா என்பதாம்.

(க-து) என்னுடைய இரகசியத்தை என்கண்கள் வெளிப்படுத்துகின்றன வென்று சொன்னது. (௰)

## ௧௧௯-ம். அதி.—பசப்புறுபருவரல்.

பரி.—அது பசப்புறு பருவரலென விரியும். அஃதாவது பசப்புறுதலோடு உறுந் துன்பம். இதனை 1 பகச்செறிந்த வயாவென்பதுபோலக் கொள்க. 2 பசப்பாவது, பிரிவாற்றாமையான் உருவேறுபாடு. இது தலைமகனைக் காணப்பெறாதவழி நிகழ்வதாகலின், கண்விதுப்பழிதலின்பின் வைக்கப்பட்டது.

தெளி.—பசப்புறுபருவரல் என்பது பசப்புற்றபருவரல் என்று விரியும். அஃதாவது பசப்புறுதலாலாகிய வருத்தம். இதனைப் பகச்செறிந்த அயர்வு என்பது போலக்கொள்க. பசப்பாவது பிரிவுபொறாமையால் உருவேறுபாடாம். இது தலைவனைக்காணப்பெறாத விடத்து நிகழ்வதாகலால், கண்விதுப்பழிதலின்பின் வைக்கப்பட்டது.

க நயந்தவர்க்கு நல்காமை நேர்ந்தேன் பசந்தவென்
பண்பியார்க் குரைக்கோ பிற

[முன் பிரிவுடம்பட்ட தலைமகள் 3 அஃதாற்றாது பசந்தவழித்
தனதுள்ளே சொல்லியது]

பரி.—(இ-ள்) என்னை நயந்தவர்க்கு அப்பொழுது பிரிவையுடம்பட்ட நான் அதனையாற்றாது இப்பொழுது பசந்தவென்னியல்பினை யார்க்குச் சொல்வேன், எ-று.

---

1 பகச்செறிந்தவயர்வு என்பது பகச்செறிந்ததாலுண்டாகிய அயர்வு (சோர்வு) என்று பொருள்படுதல்போன்று பசப்புறு பருவரல் என்பது பசப்புறுதலாலுண்டாகிய பருவரல் (வருத்தம்) என்று பொருள் பட்டதென்க. இங்கே உறு என்னும் வினைத்தொகை காரணப்பொருளில் வந்தது. உண்டியின்பு என்பதும் இதுபோன்றதேயாம்.

2 "தெங்கங்காய்போலத் திரண்டுருண்ட பைங்கூந்தல், வெண்கோழிமுட்டை யுடைத்தன்ன மாமேனி, அஞ்சனத்தன்ன பசலைதணிவாமே, வங்கத்துச் சென்றார்வரின்' எனவரும் இதனுள் வங்கத்துச்சென்றாவரின் அஞ்சனத்தன்ன பைங்கூந்தலையுடையாள் மாமேனிமேல் தெங்கங்காய்போலத் திரண்டுருண்ட கோழிவெண்முட்டையுடைத்தன்ன பசலைதணிவாம் எனக் கொண்டு கூட்டுக" என்று நன்னூல்விருத்தியுரையில் கூறியுள்ளது இங் கேகவனிக்கத்தக்கதாமென்க.

3 அஃதாற்றாது - பிரிவைப் பொறுக்காமல்.

பிறவென்பது அசைநிலை. உடம்பட்டாவழி ஒழிதல்குறித்துப் பிரிவுணர்த்தினாராகலின் அவரன்புடையரென்னுங்கருத்தால் 'நயந்தவர்' என்றும், இதுவே உடம்பாடாக மேலும் பிரிவுநிகழுமாகலின் இனி அவரைக் கூடுதலரிதென்னுங்கருத்தால் 'நல்காமை' என்றும், முன்னருடம்படுதலும் பின்னராற்றுதலாகாமையும் பிறர்செய்தனவல்லவென்பாள் 'பசந்தவென்பண்பு' என்றும், யான் செய்துகொண்ட துன்பத்தினை இனிப்பொருவர்க்குச் சொல்லலும் பழியாமென்னுங் கருத்தால் 'யார்க்குரைக்கோ' என்றுங் கூறினாள்.

தெளி —[முன்பிரிவிற்கு உடன்பட்ட தலைவி அதுபொறாமல் பசப்புநிறமடைந்துவிடத்துத் தன்னுள்ளேசொல்லியது ] (இ - ள் )நயந்தவர்க்கு-(என்னை) விரும்பிய தலைவர்க்கு, நல்காமை-பிரிவை, நேர்ந்தேன்-(அப்போது) உடன்பட்டேன், பசந்த-(அதனைப்பொறாமல் இப்பொழுது) பசப்புநிறமடைந்த, என் பண்பு-என்னியல்பை, யார்க்கு-உரைக்கோ-சொல்வேன், எ-று.

பிறவென்பது-அசைநிலை. தான் உடம்படாதவிடத்து ஒழிதல்குறித்துப் பிரிவைத்தனக்கு அறிவித்தாராகலால் அவரன்புடையரென்னுங்கருத்தால் 'நயந்தவர்' என்றும், இதுவே உடம்பாடாக மேலும் பிரிவு நிகழுமாகலால் இனி அவரைக்கூடுதல் அரிதென்னுங்கருத்தால் 'நல்காமை' என்றும், முன்பு உடம்படுதலும் பின்னே பொறாமல் நிறவேறுபாடடைதலும் பிறர்செய்ததையல்லவென்பாள் 'பசந்தவென் பண்பு' என்றும், யான் செய்துகொண்ட துன்பத்தை இனி ஒருவர்க்குச் சொல்லுதலும் பழியாமென்னுங்கருத்தால் 'யார்க்குரைக்கோ' என்றும் சொல்லினள்.

(க - து.) தலைவர் பிரிவுக்குடன்பட்ட யான் அதனாலுண்டான பசப்பினையார்க் குரைப்பேனென்றாளென்பது.        (க)

௨. அவர்தந்தா ரென்னுந் தகையா லிவர்தந்தென்
மேனிமே லூரும் பசப்பு.

[ஆற்றாளெனக் கவன்ற தோழிக்கு ஆற்றுவலென்பது படச் சொல்லியது ]

பரி —(இ - ள் ) யானாற்றியுளேனாகவும்- இப்பசப்புத்தான், என்னையுண்டாக்கினார் [1] அவரென்னும் [2] பெருமிதத்தான், என்மேனியை மேல்கொண்டு செலுத்தாநின்றது, எ - று.

---

1 அவர் - தலைவர்,    2 பெருமிதம் - தருக்கு

தேவி.—[அழகும் நாணமும் அழியாமல் நீ பொறுத்தல்வேண்டுமென்ற தோழிக்குத் தலைவிசொல்லியது] (இ - ள) (பிரிகின்றபொழுதே)கைம்மாறு-(அவர்விரண்டாகுல்) தலைமாறாக, நோயும்பசலையும்-இககாமநோயையும் பசலையையும், தந்து-(எனக்குத்) தந்து, சாயலுநாணும-(என்மேனி) யழகையும் நாணத்தையும், அவர் கொண்டார்-அவர் கொண்டுபோயினர், எ-று.

நோயக்கு நாணும் பசலைக்குச்சாயலும் ஆகமாறி நிற்றலால் இஃதெதிர் நிரனிறை அடக்குந்தோறு மிகுதலால் நோய நாணுக்குத் தலைமாறாயிற்று. இனி அவரதருதலல்லது அவை உண்டாதலும் இவைஇலவாதலும கூடாவென்பதாம்.

(க து) காமநோயினையும் பசபபினையும் எனக்குத்தந்து என் மேனி அழகினையும நாணினையும தலைவா கொண்டுபோயினரென்றாளென்பது. (அ)

ச. உள்ளுவன் மன்யா னுரைபப தவர்திறமாற்
கள்ளம் பிறவோ பசப்பு

[பிரிகின்றவா தெளிவித்த சொற்களையும் அவர் நற்றிறங்களையு மறிதியாகலின் நீட்டியாது வருவரென்றவழிச் சொல்லியது]

பரி—(இ-ள்.) அவர் சொற்களை யான் மனத்தா னினையாநிற்பேன், வாக்காலுரைப்பதும அவா நற்றிறங்களையே, அங்ஙனஞ் செய்யாநிற்கவும், பசபபு வந்து நின்றது, இது வஞ்சனையா யிருந்தது, எ-று

பிறவும் ஓவும அசைநிலை. மெய் மற்றை மனவாக்குகளின் வழித்தாகலின் [1] அதன் கண்ணும் வரப்பாற றன்றாயிருக்க [2] வந்தமையின், [3] இதனசெயல கள்ளமா யிருந்ததெனத் தானாற்றுகின்றமை கூறியவாறாயிற்று.

தேவி —[பிரிகின்றவர் தெளிவித்த சொற்களையும் அவர் நற்குணங்களையும அறிவாயாகையால அவர் தாமதியாதுவருவாரென்ற தோழிக்குத் தலைவி சொலலியது] (இ-ள்.)யான உள்ளுவன்-நான் (அவர்சொற்களை மனத்தால) நினைக்கின்றேன, உரைபபது-(வாயால்) சொல்வதும், அவர்திறமு-அவர்நற்றிறங்களையே,(அப்படிசெய்யாநிற்கவும்)பசபபு-பசலைநிறம, (வந்து நின்றது) கள்ளம-(இது) வஞ்சனையாயிருந்தது, எ - று

பிறவும் ஓவும அசைநிலைகள். மெய் மற்றை மனவாக்குகளின வழியாயுளதாகலால் அதனிடத்தும் வருந்தன்மைய தன்றாயிருக்க வந்தபடியால், இத

1 அதன்கண்ணும் - உடமபினிடத்தும
2 வந்தமையின - பசபபுவந்ததினால்.
3 இதனசெயல - பசப்பின்செய்கை.

சு. விளக்கற்றம் பார்க்கு மிருளேபோற் கொண்கன்
முயக்கற்றம் பார்க்கும் பசப்பு

[இதுவுமது]

பரி —(இ - ள்) விளக்கினது மெலிவுபார்த்து நெருங்கிவரு மிருளே போல கொண்கன முயக்கினது மெலிவுபார்த்து நெருங்கிவரும் இப்பசப்பு, எ-று

1 பார்க்குமென்பன இலக்கணைச்சொல். முன் பிரியாதிருக்கவுந் தனக் குக் காலம் பார்த்துவரும் பசப்பு பிரிவுபெறறால என்செய்யா தெனபதாம்.

தேவி —[இதுவுமது] (இ - ள) விளக்கு-விளக்கினது, அற்றம் பார்க் கும் - சோர்வுபார்த்து நெருங்கிவருகிற, இருளேபோல்-இருளேபோனறு, ப சப்பு- இடைசசப்புநிறமானது, கொணகன - தலைவனது, முயக்கு- புணாச்சியி னது, அற்றம்பார்க்கும் - சோர்வுபார்த்துநெருங்கிவரும், எ-று

பார்க்குமென்னு மிரண்டும் இலக்கணைச்சொல - முன்பிரியாதிருக்கவும தனக்குச் சமயம்பார்த்து வரும் பசப்புப் பிரிவுபெறறால என்ன செய்யாதெ னபதாம

(க - து) தலைவர் பிரிவில் யான பசப்பின்றியிருத்தல முடியா தென்று சொன்பது. (சு)

எ புலலிக் கிடந்தேன் புடைபெயர்ந்தே னவ்வளவி
லள்ளிக்கொள் வற்றே பசப்பு.

பரி —(இ - ள்) முன்னொருஞான்று காதலரைப புலலிக்கிடந்த யான் அறியாது புடைபெயர்நதேன, அப்புடைபெயர்ந்தவளவிலே பசப்பு அள்ளிக் கொளவதுபோல வந்து செறிநதது, எ-று

கொளவென்பது குறைந்துநின்றது. அள்ளிக்கொள்வது - அளளிக்கொ ள்ளப்படும்பொருள் அப்புடைபெயர்ச்சிமாததிரததிற்கு அவவாறாயது இப பிரிவின்கணுமாறு சொல்லவேணடுமோ வெனபதாம.

தேவி —[இதுவுமது.] (இ - ள்) புலலிக்கிடநதேன் - (முன்னொருநாளி லே காதலரைத்) தழுவிக்கிடந்த நான, புடைபெயர்ந்தேன- (அறியாது) சற்று

1 நெருங்கிவருதலைப் பார்க்கும் என்று கூறினதினலே இலக்கணைச்சொல்லாயிற் று பார்க்குந்தன்மையில்லாத இருளிறகும பசபபிறகும் பார்க்குந்தனமை யுளதாகக் கூறினதினலே இது பாராதது பார்ப்பது போறகூறிய இலக்க ணை. இலக்கணையாவது ஒருபொருளினிலக்கணத்தை மற்றொருபொரு டகுத் தச்துரைப்பது

விலகினேன், அவவளவில் - அவ்விலகியவளவிலே, பசப்பு - பசலைநிறமானது, அள்ளிக்கொள்வற்றே - அள்ளிக்கொள்ளப்படும் பொருள்போல வந்தது, எ - று.

கொளவென்பது அகரங்குறைந்து கொள் என நின்றது அப்புடைபெயர்ச்சி மாத்திரத்திற்கு அபடியாகியது இபபிரிவிடத்தது ஆகுமிகுஞ் சொல்லவேண்டுமோ வெனபதாம.

(க - து.) யான் தலைவரைத் தழுவிக்கிடந்த காலத்திற் சிறிது விலகிய விடத்து எனக்குப் பசப்புணடாயிற்றென்று தனது அனுபவங் கூறினா ளென்பது. (எ)

அ. பசந்தா ளிவளென்ப தல்லா லிவளைத்
துறந்தா ரவரென்பா ரில்.

[நீ யிங்ஙனம் பசக்கற்பாலையல்லையென்ற தோழியொடு புலந்துசொல்லியது]

பரி.—(இ - ள்) இவள் ஆற்றியிராது பசந்தாளென்று என்னைப் பழிகூறுவதல்லது இவளையவர் துறந்துபோயினாரென்று அவரைக் கூறுவாரொருவருமிலலை, எ - று.

என்பாரென வேறுபடுத்துக்கூறினாள், தன்னையே 1 நெருங்குதல்பற்றிப் புலக்கின்றமையின்.

தெளி.—[நீ இப்படி பசப்புநிறமடைவது தகாதென்ற தோழியோடு பிணக்கித்தலைவி சொலலியது.] (இ - ள்) இவள் - பசந்தாளென்பதலலால - (பொறுத்திராமல்) பசலைநிறமடைந்தாளென்று (என்னைப்) பழிசொல்லுவதலலாமல், இவளை - அவர் - துறந்தாரென்பார் - துறந்துபோயினாரென்று (அவரைச்) சொல்லுவார், இல் - (ஒருவரும்) இலலை, எ - று.

என்பாரென்று தோழியை வேறுபடுத்திச் சொல்லினாள், அவள் தன்னையேநெருங்குதல்பற்றிப் பிணக்குகின்றமையால

(க - து.) யான் பசத்தலின் காரணமறியாது எனனைப்பழித்தல தகாதென்று ளென்பது. (அ)

௬. பசக்கமற் பட்டாங்கென் மேனி நயப்பித்தார்
நன்னிலைய ராவ ரெனின்.

1 நெருங்குதல் - பொறுத்திருக்கவேண்டுமென்று பலமுறையும் கூறுதல.

[இதுவுமது]

பரி —(இ - ள்) இப்பிரிவை யானே யுடம்படுவித்தவகை சொல்லியவர் இன்று நின்கருத்தால் நிலைநின்லயின ராவராயின, எனமேனி பட்டதுபடப பசப்பதாக, எ - று.

நன்னிலையராதல் நன்மைக்கண்ணே நிற்றலையுடையராதல பட்டாங்காகவென ஆக்கம் வருவித்துரைக்க, முன் இப்பிரிவின கொடுமையறியாத வென்னை 1 இதற்குடம்படுத்திப பிரிந்தவர் தவறிலராகவேவேண்டுவது, என்மேனியும் பசப்பும் யாதுசெய்யினென்னென்பதுபட நின்றமையின், மன ஒழியிசைக்கண வந்தது.

தெளி —[இதுவுமது] (இ - ள்) நயப்பித்தார் - (இப்பிரிவை யானே) உடம்படுவகை சொல்லியவர், நன்னிலையராவரெனின் - (இன்று உன் கருத்தால்) நலைநிலையினராவராயின்,என்மேனி -பட்டாங் (காக)- பட்டதுபட, பசக்கட்சலை நிறமடையக்கடவது, எ - று

நன்னிலையராதல-நன்மைக்கண்ணே நிற்றலையுடையராதல. பட்டாங்கு என்பதனிறுதில் ஆகவென்னும ஆக்கச்சொல் வருவித்துப் பட்டாங்காக எனச் சொல்லப்பட்டது முன் இப்பிரிவின் கொடுமையறியாத என்னை இதற்கு உடம்படுத்திப் பிரிந்தவர் தவறிலராகவே வேண்டுவது, என்மேனியும பசப்பும் யாதுசெய்யின என் என்பதுபட நிற்கையால், மன் ஒழியிசைப்பொருளில வந்தது.

(க - து.) தலைவர் நன்னிலையுடையராயின் என்மேனி பசத்தல் எனக்கினிதே என்றுரைப்பது. (௯)

௧0. பசப்பெனப பேர்பெறுத லன்றே நயப்பித்தார்
நல்காமை தூற்று ரெனின்.

[தலைமகளாற்றுதற்பொருட்டுத் தோழி தலைமகனை யியற்பழித்தவழி அவள் இயற்படமொழிந்தது.]

பரி —(இ - ள்) அன்று தாம் 2குறை நயப்பித்துக் கூடினவர்க்கு இன்று நல்காமையை நட்டோர் தூற்றுராயின், பசப்புற்றுளென வேறுறுமையான்றிப் பசப்புத்தானுயினுளென ஒற்றுமையாற் றுஞ்சொல்ல அப்பெயரைப் பெறுதல எனக்கு நன்று, எ - று

---

1 இதற்கு - பிரிவிற்கு.

2 குறைநயப்பித்து - தமது குறைகளை விரும்பியேற்குமாறுசொல்லி.

றப்படுதலிற 'காழில்கனி' என்றும் கூறினன் தங்காதலர் பிரிதலேயன்றிப் பி ன் வாராமையுமுடைமையின், 1 அக்கனி பாம் பெறறிலே மென்பதாயிறறு

தெளி —[காதலரும் உள்ளினும் பொறுக்கொணவரோய்க் கழுதிலே வருவ தேவரோடு பெரின்பத்தை அனுபவிப்பாயென்ற தோழிக்குத்தலைவிசொல்லிய து ] இ-ள ) தாமவீழ்வார-தம்மாலே விரும்பப்படும கணவர், தம்வீழ-தம்மை விரும்ப, பெற்றவர்-பெற்றமகளிர், காமத்து-காமானுபவமென்னும, காழில்-வித்தில்லாத, கனி-பழத்தை, பெற்றாரே - பெற்றாரன்றே, எ - று

காமம்-ஆகுபெயர். காமத்து எனபதில அத்து அலவழிக்கணவந்த சாரி யை. முன்னை நல்வினையில்லாதவிடத்துப் பெறக்கூடாமையால 'பெற்றா' என றும், அவரோடே நடையிலைாமல் அனுபவிக்கப்படுதலால் 'காழில கனி' எ ன்றும சொல்லினன் தங்காதலர்பிரிதலேயல்லாமல பின்வாராமையுமுடை மையால, அக்கனிபாம்பெறறிலே மென்பதாயிறறு.

(க - து ) கணவரால்விரும்பப்பட்டமகளிரே காமநுகர்ச்சியைப பெற்றாராவர் என்றாள் என்பது. (க)

உ. வாழ்வார்க்கு வானம் பயந்தற்றால் வீழ்வார்க்கு
வீழ்வா ரளிக்கு மளி

[இதவுமது ]

பரி —(இ - ள் ) அறமும் பொருளுநோக்கிப பிரிந்தாற் றமமையினறிய மையா மகளிர்க்கு அவரையின்றியமையாக் கணவர் அளவறிந்து வந்து செய யுந்தலையளி தன்னையே நோக்கி உயிர்வாழ்வார்க்கு வானம் அளவறிந்து பெய தாறபோலும், எ - று.

தங்காதலர் தம்மை விழையாமையின் அத்தலையளி யிலலையாகலான், ம ழை வறந்துழி 2 அதனன 3 வாழாதார்போல இறந்துபடுதலே நமக்குள்ள தெனபதாம

தெளி —[இதவுமது ] (இ - ள் ) (அறமும் பொருளும் நோக்கிப்பி ரிந்தால்) வீழ்வார்க்கு - (தம்மை) விட்டிருக்கமாட்டாத மகளிர்க்கு, வீ ழ்வார- (அவரை) விட்டிருக்கமாட்டாத கணவா, அளிக்கும-அளவறிந்து வந்து செய்யும், அளி- தலையளி, வாழ்வார்க்கு - (தன்னையேநோக்கி) உயிர்வாழ்வா க்கு, வானம்-மேகம், பயந்தற்று - அளவறிந்து வந்து மழை பெய்தாறபோ லும், எ - று

1 அக்கனி - காமத்துக்காழில்கனி. காமநுகர்ச்சியைக் காமத்துக்காழில்கனி யென்று உருவகஞ்செய்துரைக்கப்பட்டது.

2 அதனல் - மழையிலலாமையினால்.

3 வாழ்வர்போல என்றும் பாடமுண்டு.

மெகாதலர் நம்மை விரும்பாமையால் அந்நிலையினி யில்லையாகலால், ம ழைவறந்தவிடத்து அந்நிலை வாழாதாரைப்போல இறந்ததலே நமக்கு உள்ளதெ ன்பதாம்

(க - து) கணவரருள்பெற்ற மகளிரே உயிர் வாழ்வாரென்றுள் ளது. (உ)

௩. வீழுநர் வீழப் படுவார்க் கமையுமே
வாழுநம் மென்னுஞ் செருக்கு.

[இதுவுமது]

பரி —(இ - ள்) தாம் விழையுங்கணவரான் விழைய்ப்படு மகளிர்க்கு ஏற் புடைத்து, காதலர் பிரிந்தாராயினும் நம்மை நினைந்து கடிதின்வருவர், வந்தா ல் நாமின்புற்று வாழ்துமென்றிருக்குந் தருக்கு, எ - று.

நாமவரான் வீழப்படாமையின், நமக்கையுது இறந்துபாடென்பதாம்

தெளி —[இதுவுமது] (இ - ள்.) வீழுநர் - (தாம்) விரும்புங்கணவரா ல், வீழப்படுவார்க்கு-விரும்பப்படுகிற மகளிர்க்கு, (காதலர்பிரிந்தாலும் நம் மைநினைந்து கடிதில்வருவார்) வாழுநமென்னும் - (வந்தால்நாம் இன்புற்று) வாழ்வோமென்றிருக்கும், செருக்கு - தருக்கு, அமையுமே - ஏற்புடைத்தாம், எ-று

நாம அவரால் விரும்பப்படாமையால், நமக்குப்பொருந்துவது இறந்துப டுதலே யென்பதாம்

(க-து.) கணவரால் விரும்பப்படுமகளிர்க்கு அவர் பிரிவினிடத்தும் நாம் உயிர் வாழ்வே மென்னுஞ் செருக்குண்டாமென்றுள்ளனபது. (௩)

௪. வீழப் படுவார் கெழீஇயிலர் தாம்வீழ்வார்
வீழப் படாஅ ரெனின்.

[காதலரை யியற்பழித்தலையஞ்சி அவரருளின்மை மறைத்த நீ கடவுட் கற்பினையாகலிற் கற்புடைமகளிரால் நன்குமதிக்கப்படுதி யென்ற தோழிக்குச்சொல்லியது]

பரி —(இ - ள்) கற்புடைமகளிரால் நன்குமதிக்கப்படுவாரும் தாம் விரு ம்புங் கணவரான் விரும்பப்படாராயிற் றீவினையாட்டியா, எ - று

சிறப்புமை விகாரத்தாற் றொக்கது கெழீஇயின்மை-நல்வினையின்மை அஃது 1 அருத்தாபத்தியாற்றீவினையுடைமையாயிற்று தீவினையுடையேற்கு அந் 2 நன்குமதிப்பாற் பயனில்லை யென்பதாம்.

1 …வது அருத்தாபத்தியாம்.
2 நன்குமதித்தல் - கௌரவித்துப்பேசுதல்.

பரி.—(இ-ள்) மகளிர் ஆடவரென்னுமிருதலையினும் வேட்கை ஒரு தலைக்கணேயாயின் அஃதின்னாது, காவினது பாரம்போல இருதலைக்கணுமொப்பின், அஃதினிது, எ-று.

1 மூன்றனுருபுகள் ஏழன்பொருண்மைக்கண் வந்தன. 2 கா—ஆகுபெயர். என்னிடத்துண்டாய வேட்கை அவரிடத்துமுண்டாயின், யானிவ்வாறு துன்பமுழத்தல் கூடுமோ வென்பதாம்.

தெளி—[இதுவுமது] (இ-ள்) (மகளிர் ஆடவர் எனப்படுகிற இரண்டிடங்களிலும்) காமம் - ஆசையானது, ஒருதலையான் - ஓரிடத்தில், (உண்டாயின் இன்னாது-(அவ்வாசை) துன்பஞ்செய்வதாம். காப்போல - காவடியின் பாரம்போல, இருதலையானும் - இரண்டிடங்களிலும், (ஒத்திருக்குமாயின்) (அவ்வாசை) இனிது-இன்பஞ்செய்வதாம். எ-று.

ஆனுருபுகள் கண்ணுருபின் பொருளில் வந்தன. கா அதன்பாரத்துக்காதலால் ஆகுபெயர். என்னிடத்து உண்டாகிய ஆசை அவரிடத்தும் உண்டாயின், நான் இப்படி துன்பமனுபவித்தல் கூடுமோவென்பதாம்.

(க-து.) மகளிர் ஆடவரென்னுமிருவரிடத்தும் ஒத்தவிடத்தே காமம் இனிதாம் என்றுளென்பது. (கூ)

எ. பருவரலும் பைதலுங் காணான்கொல் காமன்
ஒருவர்க ணின்றொழுகு வான்.

[இதுவுமது]

பரி.—(இ-ள்) காமநுகர்தற்குரிய விருவரிடத்தும் ஒப்பநிற்ற லொழிந்து ஒருவரிடத்தே நின்று பொருகின்ற காமக்கடவுள் அவ்விடத்துப் பசப்பானுப் பருவரலும் படர்மிகுதியும் அறியான்கொலோ, எ-று.

விழைவும் வெறுப்புமின்றி எல்லார்கண்ணு நிகழ்தனவறிதற்குரிய கடவுளும் என்கண் வேறுபட்டான், இனி யானுய்யுமாறென்னை யென்பதாம்.

தெளி—[இதுவுமது] (இ-ள்) (காமத்தை அனுபவித்தற்குரிய இருவரிடத்தும் ஒத்துநிற்றலொழிந்து) ஒருவர்கணின்று-ஒருவரிடத்தேநின்று, ஒழுகுவான்-போர்செய்கின்றவனாகிய, காமன் - காமக்கடவுளென்னும் மன்மதன், (அவ்விடத்துப் பசப்பாலாகிய) பருவரலும் - நோயையும், பைதலும் - துன்பமிகுதியையும், காணான்கொல் - அறியானோ, எ-று.

---

1 ஒருதலையான் இருதலையான் எனபவற்றிலுள்ள ஆன் என்னும் மூன்றனுருபுகள் தமக்குரிய பொருளைவிட்டு ஏழனுருபினிடப்பொருளில் வந்தன. இவ்வாறு வருதல் உருபுமயக்கமெனப்படும்.

2 கா (காவடி) என்னுமிடப்பெயர் அதன்கணுள்ள பாரத்திற்காதலால் இடவாகுபெயர்.

இழிவுசிறப்புடைமை, அவா வாரலரெனனுஞ் சொலலாயினும அமையுமெ னபதுபட நினறது அதவும பெற்றிலேனெனபதாம்

தெளி —[இதவுமது] (இ - ள்) நசைஇயார் - 'என்னால் விரும்பப்பட டதலைவர், நலகாரெனினும - (என்னிடத்து) அன்பிலலாதவரேயானாலும், அ வரமாட்டு - அவர்திறதது, இசையும-யாதானுமோர்சொலலும, செவிககு-என காதுககு, இனிய-இனபஞ்செயவனவாம, எ - று

நலகாரெனினும என்ற இழிவு சிறப்பும்மை, அவாவாராரெனனுஞ் சொ லலாயினும இனிதாயமையுமெனபது தோன்ற நின்றது அசசொலலும பெற றிலேனெனபதாம்

(க - து.) தலைவர் என்மேலனபிலராயினும அவரிடததிலிருந்து வரும எசசொற்களும எனககினிதாமெனறாளெனபது (கூ)

கO உறுஅர்க குறுநோ யுரைப்பாய கடலைச
செறுஅஅய் வாழிய நெஞ்சு.

[தலைமகனறாதுவரபபெறாது தான றாதுவிடக்கருதியாள்
நெஞ்சொடு சொலலியது]

பரி —(இ - ள) நினனோடுறாதாக்கு நின்னுறுநோயை யுரைக்கலுற்ற நெஞ்சே நீயாற்றாயாயினும அரிதாய 1 அதனையொழிநது, நினககுத துபரஞ செயகினற கடலைத் தூர்க்க முயல்வாயாக, 2 அஃதெளிது, எ - று

உரைக்கலுறறது அளவிறநதநோயாகலானுங் கேடபார உறவிலராகலா னும அது முடிவதொனறன்று, முடிந்தாலும பயனிலலையெனபது கருதாது முயலாநினறயென்னும 3 குறிப்பான 'வாழிய' என்றாள்.

தெளி.—[தலைவனது தூதுவரபபெறாமல்தான் தூதுவிட நினைத்த தலைம கள் நெஞ்சொடு சொலலியது ](இ - ள் )உறாக்கு - (உன்னோடு) உறாதவாககு, உறுநோய - (உனது) மிகுந்தநோயை, உரைபபாய் - சொலலலுறற, நெஞ்சு- நெஞ்சே, (நீ பொறாயாயினும அரிதாகிய அதனையொழிநது)கடலை - (உனககுத் துயரஞ்செய்கின்ற) கடலை, செறாய் - தூரகக முயற்சிசெயவாயாக, (அஃது - ‸ ) எ-று

சொல்லலுற்றது அளவிறந்த நோயாகலாலும் கேட்போர் உறவிலராக லாலும அது முடியாது, முடிநதாலும பயன் இலலை யென்பது கருதாமல மு யலகின்றாய என்னும குறிபபால்'வாழிய' என்றாள்.

---

1 அதனை - உன்னுடன் பொருநதாதவர்கது உனது மிகுநத காமநோயைசசொ ல்லதகொடாமையைகை.

2 அஃது - கடலைத தூாததல்

3 குறிபபான - இகழ்சசிக குறிப்பால.

வெகுளாமை - அதற்கு உடம்பட்டு நெஞ்சின்கண் நிற்றல் தனக்கு அவ்வினைத்திறம் சிறந்த தின்மையின், அதனைச் 'சிறப்பு' என்றாள். 1 காதலர் நம் மாட்டருள் என்றும், செய்யுங் குணமென்றும் பாடம் ஓதுவாரும் உளர். தோழி கூறியவதனைக் குறிப்பால் இகழ்ந்து கூறியவாறு.

தெளி.—[இத்தனை மறந்துவந்த தலைவர் உனக்கு இன்பஞ் செய்வாரென்ற தோழிக்குத் தலைவி சொல்லியது] (இ-ள்) - எனைத்து நினைப்பினும் - (யான் தம்மை) எவ்வளவுமிக நினைந்தாலும், காயார் - (அதற்குக்) கோபியார், காதலர் - தலைவர், செய்யுஞ்சிறப்பு - (எனக்குச்) செய்யுமின்பமாவது, அனைத்தன்றோ - அவ்வளவன்றோ? எ-று.

கோபியாமை-அந்நினைத்தற்கு உடம்பட்டு நெஞ்சினிற்றல் தனக்கு அவ்வினைத்திறம் சிறந்தது இல்லாமையால், அதனைச் 'சிறப்பு' என்றாள். தோழி சொல்லியவதனைக் குறிப்பால் இகழ்ந்து சொல்லியபடி.

(க - து.) தலைவர் யான் எவ்வளவு நினைந்தாலும் கோபியாது அதற்குடன்பட்டு என்னெஞ்சின்கணின்று இன்பஞ் செய்கின்றாரென்றாள் என்பது. (அ)

௯ விளியுமென் னின்னுயிர் வேறல்ல மென்பா
ரளியின்மை யாற்ற நினைந்து.

[தலைமகனாற்றுவரக் காணாது வருந்துகின்றாள் வற்புறுத்துந் தோழிக்குச் சொல்லியது.]

பரி.—(இ - ள்) முன்பெல்லாம் நாமிருவரும் வேறல்லமென்று சொல்லுவார் தளியின்மையை மிகவுநினைந்து என்னினியவுயிர் கழியாநின்றது, எ-று.

அளியின்மை- பின்வருவராகலுமாய்ப்பிரிதலும், பிரிந்து வாராமையும், ஆண்டுநின்றுழித் தூதுவிடாமையும் முதலாயின பிரிவாற்றல் வேண்டுமென வற்புறுத்தாட்கு என்னுயிர் கழிகின்றது பிரிவிற்கன்று அவரன்பின்மைக்கென 2 எதிரழிந்து கூறியவாறு.

தெளி.—[தலைவன் தூதுவரக்காணாது வருந்துகின்ற தலைவி திடஞ்சொல்லுகிற தோழிக்குச் சொல்லியது] (இ-ள்.) வேறல்லமென்பார் - (முன்பெல்லாம் நாமிருவரும்) வேறல்லேமென்று சொல்லுவாரது, அளியின்மை- அருளில்லாமையை, ஆற்றநினைந்து- மிகவும்நினைந்து, என்னின்னுயிர் - எனது இனிதாகியவுயிர், விளியும்-கழிகின்றது, எ - று.

---

1 காதலர் செய்யுஞ் சிறப்பு என்பதற்குப் பிரதியாகக் காதலர் நம்மாட்டருள் என்றும், காதலர் செய்யுங் குணம் என்றும் பாடங் கூறுவாருமுண்டு

2 எதிரழிந்து - (தோழிக்கு) எதிரே வருந்தி.

அளியின்மை - பின்வருவராகவுமாட்டப் பிரிதலும், பிரிந்துவாராமையும், அங்கேயிருந்துவிட்டுத் தூதுவிடாமையும் முதலாயின. பிரிவுபொறுத்தல் வேண்டுமென்று இடித்துச்சொன்னவளுக்கு என்னுடைய பிரிவைக்குறித்தலை அவரன்பிலாமையைக் குறித்துக் கூடினரென்று எதிரழிந்து சொல்லியது.

(க - து) தலைவரது அருளிலாமையை நினைந்து என்னுயிர் வருந்துகின்றதென்று என்பது. (௯)

௧௦. விடாஅது சென்றாரைக் கண்ணினாற் காணப்
படாஅதி வாழி மதி.

[வன்புறை யெதிரழிந்தாள் காட்சிக்கட் கழிபடராற் சொல்லியது.]

பரி.—(இ-ள்.) மதியே என்னெஞ்சின் இடைவிடாதிருக்கவே விட்டுப் போயினாரை யானென் கண்ணளவானாயினும் எதிர்ப்படுமளவும் நீ படாதொழிவாயாக, எ-று.

கண்ணளவா னெதிர்ப்படுதலாவது மதி [1] இருவரானும் நோக்கப்படுதலின் இருவர்கண்ணும் [2] அதன்கண்ணே சேறல். [3] முதலொடு சினைக்கொற்றுமையுண்மையின் 'சென்றாரைக்காண' என்றும், [4] குறையுறுகின்றாளாதலின் 'வாழி' என்றும் கூறினாள். இனிப் 'படாஅதி' என்பது பாடமாயின், கனவிடைக் கண்ணினாற் காணுமாறு மதி படுகின்றதில்லையென அதனொடு புலந்து வருந்துகின்றாள் கூற்றாக்குக. இப்பொருட்கு வாழியென்பது அசை.

தெளி.—[அத்திடஞ்சொல்லிய தோழிக்கு எதிரழிந்த தலைவி காமமிக்க அதிகத்துக்கத்தினாலே சொல்லியது.] (இ-ள்.) மதி - சந்திரனே, விடாது - (என்னெஞ்சினிடத்து) இடை விடாதிருக்கவே, சென்றாரை - (விட்டுப்) போயினாரை, (யானென்) கண்ணினால் - கண்ணளவாலாயினும், காண - எதிர்ப்படுமளவும், படாதி - (நீ) மறையாதிருப்பாயாக, எ-று.

கண்ணளவா லெதிர்ப்படுதலாவது மதியிருவராலும் பார்க்கப்படுதலால் இருவர்கண்களும் அதனிடத்தே சேர்தல். தலைவனென்னும் முதலுடன் கண்ணென்னும் உறுப்பிற்கு ஒற்றுமையிருக்கிறபடியால 'சென்றாரைக்காண' என்றும், குறையுறுகின்றாளாதலால் 'வாழி' என்றும் சொல்லினாள். இனிப்படாஅதி

1 இருவராலும் - தலைமகன் தலைமகளென்னு மிருவராலும்.

2 அதன்கண்ணே - சந்திரனிடத்தே

3 சந்திரனைக்காணும் தலைமகனோடு அவனது கண்ணுக்கு உறுப்புத்தற்கிழமைச்சம்பந்தமிருத்தல் பற்றிச 'சென்றாரைக்காண' என்று கூறப்பட்டது. தலைமகனது கண் சம்பந்தப்பட்டுள்ள சந்திரனிடத்துத் தனனுடைய கண் சம்பந்தப்பட்டிருத்தலையே தலைமகள் அவனைக்காண்டலாகக் கருதினாளென்க

4 குறையுறுகின்றாள் - தன்னுடையகுறைகளைச சொல்லுகின்றாள்.

யென்பதற்குப் பிரதிபாகப் படாது எனபது பாடமானல், கனவினிடத்துத் தலைமகனைக் கண்ணிறற காணும்படி சந்திரனமறைகின்றனில்லை யென்று அச்சந்திரன் மறையாமையினுல நித்திரையடையாமல் வருந்துகின்றவளது சொல்லாகுக. இவ்வர்த்தத்திற்கு வாழியென்பது அசைநிலை

(க-து.) சந்திரனே யான் தலைவரை யுனனிடத்துக்காண நீமறை யாதிருப்பாயாக என்று ளென்பது. (ய)

## கஉஉ-ம். அதி.—1கனவுநிலையுரைத்தல்.

பரி —அஃதாவது தலைமகள் தானகண்ட கனவினது நிலைமையைத் தோழிக்குச்சொல்லுதல அக்கனவு 2 நனவினக ணினைவுமிகுதியாற கண்டதாகலின, இது நினைந்தவர் புலமபலினபின் வைககப்பட்டது

தேவி —அஃதாவது தலைவி தான் கண்ட கனவினது நிலைமையைத் தோழிக்குச்சொலலுதல அககனவு நனவினிடத்து நினைவுமிகுதியாலே கண்டதாகலால, இது நினைநதவாபுலமபலினபின் வைககப்பட்டது.

க. காதலா தூதொடு வந்த கனவினுக்
கியாதுசெய் வேன்கொல் விருந்து.

[தலைமகன் தூது வரக்கண்டாள் சொலலியது ]

பரி.—(இ-ள்) யான் வருந்துகின்றதறிநது அதுதீரக் காதலா விடுதத தூதினைக்கொண்டு என்மாட்டுவநத கனவினுக்கு யான் விருநதாக யாதனைச செயவேன், எ-று

---

1 கனவு-சொபபனம எநதஅவஸ்தையி (காலததி)ல் இந்திரியஙகளின் சகாயமில்லாமல் ஹிதாஎனனும் நாடியிலதஙகியிருககினற ஜாககிரததின (நனவின்) சம்ஸ்கார (வாசனை) ததினுல் விஷயஙகள் அறியபபடுகினறனவோ அது சொபபனுவஸதையெனபடும சொபபனுவஸதையில் சீவனுக்குஸ்தானம-கண்டம, சகதி-ஞானம், மததிமை-வாக்கு, போகம்-சூட்சுமம, குணம-ராசதம, பெயர்-தைசதனும.

2 சொபபனசுழுத்தியவஸதைகளுககு வேறாயும் இந்திரியஙகளாலுண்டாகும் ஞானததிற்கும் அதன்சம்ஸ்காரத்திற்கும ஆதாரமாயிருககும காலம் ஜாககிராவஸ்தை (நனவு) எனபபடும். இவ்வவஸ்தையில சீவனுக்கு நேத்திரம-ஸ்தானம், கிரியை-சக்தி, வைகிரி-வாக்கு, போகம-ஸதூலம், குணம்-சத்துவம், பெயர்-விசுவனும்.

பரி.—(இ - ள்) நனவின்கண்வந்து தலையளி செய்யாதாரை அவர் சென்றுழி நாடிக்கொணர்ந்து கனவு தருதலான் அக்கனவின்கண்ணே எனக்கின்பமுண்டாகாநின்றது, எ-று

காமம் - 1 ஆகுபெயர். 2 நான்காவது மூன்றாம் பொருண்மைக்கண் வந்தது. இயல்பான நல்காதவரை அவர் சென்ற தேயமறிந்து சென்று கொண்டுவந்து தந்து கலக்குவித்த கனவால் யானுற்றுவ லென்பதாம்.

தெளி — [இதுவுமது] (இ - ள) நனவினான் - நனவில், (வந்து) நல்காரை - அருள்செய்யாதவரை, நாடித்தரற்கு - (அவர்போனவிடம்) தேடிக்கொணர்ந்து (கனவு) தருதலால், கனவினான் - அக்கனவினிடத்து, காமம் - (எனக்கு) இன்பமானது, உண்டாகும் - உண்டாகின்றது, எ - று.

காமம் - ஆகுபெயர். குவ்வுருபு ஆனுருபின் பொருளில்வந்தது. இயல்பாக அருள்செய்யாதவரை அவர்போனதேயம் அறிந்துபோய்க்கொணர்ந்துகொடுத்து அருள்செய்வித்த கனவால் யான் பொறுப்பேனென்பதாம்,

(க - து) தலைவரைக் கனவினிடத்துக் காண்டலால் எனக்கின்பமுண்டாகின்றதென்று சொன்னது. (௪)

௫ நனவினாற் கண்டதூஉ மாங்கே கனவுந்தான்
கண்ட பொழுதே யினிது.

[இதுவுமது]

பரி —(இ - ள்) முன்னனவின்கண் அவரைக்கண்டு நுகர்ந்த வின்பந் தானு மினிதாயிற்று அப்பொழுதே, இன்று கனவின்கட்கண்டு நுகர்ந்த வின்பமும் அக்கண்டபொழுதே யினிதாயிற்று, அதனான் எனக்கு 3 இரண்டு மொத்தன, எ-று

4 இனிதென்பது முன்னுங்கூட்டப்பட்டது 5 கனவு—ஆகுபெயர். 6 முன்னும் யான் பெற்ற 7 திவ்வளவே, இன்னும் 8 அது கொண்டாற்றுவலென்பதாம்,

---

1 காமத்தானுண்டாகும் இன்பத்தைக் காமமென்றலால் கருவியாகுபெயர்

2 தரற்கு என்பதிலுள்ள குவ்வுருபு தனக்குரிய பொருளைவிட்டு மூன்றனுருபின் கருவிப்பொருளில் வந்தது

3 இரண்டும் - காதலரை நனவின்கண் கண்டனுபவித்த இன்பமும் கனவின்கண் கண்டனுபவித்த இன்பமும்

4 இனிது என்பது கண்டதூஉம் என்பதனோடும் கூட்டப்பட்டது

5 கனவு என்னும் இடப்பெயர் அங்கு அனுபவித்த இன்பத்திற்காதலால் இடவாகுபெயர்

6 முன்னும் - காதலர் பிரியாததன் முன்னும்

7 இவ்வளவே - இவ்வளவின்பமே

8 அதுகொண்டு - அவ்வளவுகொண்டு

**தெளி.**—[இதுவுமது] (இ-ள) நனவினுன -(முன்னே)நனவினிடத்து, கணடதூஉம - (அததலைவரைக) கணடு அனுபவிததவின்பமும், ஆஙகே - அக கணடபொழுதே, இனிது - இனிதாயிறறு, கனவுநதான் - (இனறு) கனவினிடததுக (கணடு அனுபவிததவினபமும்), கணடபொழுதே - அககணடபொழுதே, இனிது - இனிதாயிறறு, (அதனுல எனககு இரணடுமே ஒததன,) எ - று.

இனிதெனடது முனனுஙகூடடபபடடது கனவு -ஆகுபெயர் முன்னும யானபெற்றது இவவளவே, இனனும் அதுகொணடு பொறுபபேனெனபதாம.

(க - து) தலைவரை முன நனவிற்கணடனுபவிதத இனபமும் இபபோது கனவிற் கண்டனுபவிததவினபமும எனக்கொததிருக்கின்றன வென்றுளெனபது. (ரு)

௬. நனவென வொனறிலலை யாயிற் கனவினாற்
காதலர் நீஙகலர் மன்

(இதுவுமது)

**பரி**—(இ - ள்) நனவென்று[1] சொலலபபடுகினற ஒருபாவி இலலையாயின, கனவின்கணவநது கூடியகாதலா எனனைபபிரியாா, எ - று

ஒனறெனபது[2] அதனகொடுமைவிளககி நினறது [3]அஃது இடையே புகுநது கனவைபபோககி அவரைப பிரிவிததுதென்பது பட நினறமையின், மன ஒழியிசைககண வந்தது. கனவிறபெற ஞறறுகினறமை கூறியவாறு

**தெளி**—(இதுவுமது) (இ - ள்) நனவெனவொன்று- நனவென்று சொலலபபடுகினற ஒருபாவி, இலலையாயின்-இலலையானுல, கனவினுன- கனவினிடதது, (வநது கூடிய)காதலா - தலைவா, நீஙகலர் -(எனனைப்) பிரியாா, எ-று.

ஒனறெனபது அதன் கொடுமை விளககிநின்றது. அது நடுவேபுகுநது கனவைபபோககி அவரைபபிரிவித்த தெனபது தோனற நினறமையால, மன ஒழியிசைபபொருளில வநதது கனவிலேபெறறுப பொறுககினறமை சொலலியபடி

(க - து) நனவில்லையாயின தலைவரைக் கனவின்கண விடாது கூடியிருபபே னென்று ளென்பது (௬)

---

1 "அழுககாறென வொருபாவி" என்னுஙகுறளும, "இன்மையென வொருபாவி" என்னுங்குறளும இங்கறியத்தககனவாம்.

2 அதன் - நனவின. 3 அஃது - நனவு

௭. நனவினா னல்காக் கொடியார் கனவினா
னென்னெம்மைப் பீழிப் பது.

[விழித்துழிக் காணாமையின் கனவிற்கூட்டம் நினைந்து
ஆற்றாளாய்ச் சொல்லியது]

பரி.—(இ - ள்) ஒரு ஞான்றும் நனவின்கண் வந்து தலையளிசெய்யாத கொடியவர் நாடோறுங் கனவின்கண் வந்து நம்மைவருத்துவது எவ்வியைபு பற்றி, எ - று.

பிரிதலுடன் நினைந்து வாராமையுநோக்கிக் 'கொடியார்' என்றும், கனவிற்றோண்மேலராய் விழித்துழிக்கரத்தலின் அதனானுந் துன்பமாகாநின்றதென்பாள் 'பீழிப்பது' என்றுங்கூறினாள். நனவிலில்லது கனவினுமில்லை யென்பார், அது கண்டிலமென்பதாம்.

தெளி.—[விழித்தவிடத்துத் தலைவனைக்காணாத தலைவி கனவிற் புணர்ச்சியைநினைந்து சொல்லியது] (இ-ள்) நனவினால்-(ஒருதினமாயினும்) நனவில் வந்து, நல்கா-அருள்செய்யாத, கொடியார்-கொடியவர், கனவினால்-(தினந்தோறும்) கனவில் (வந்து), எம்மை-பீழிப்பது-வருத்துவது, என்-என்னசம்பந்தம்பற்றி, எ-று.

தன்னைத் தனியேவிட்டுப்பிரிதலும் பின்னினைந்து வாராமையும் நோக்கிக் 'கொடியார்' என்றும், கனவிலே தோளின்மேலராய் விழித்தபோது மறைதலால் அதனாலும் துன்பமாகின்றதென்பாள் 'பீழிப்பது' என்றுஞ் சொல்லினாள். உலகத்தார் நனவிலே இல்லாதது கனவிலும் இல்லையென்பார், யாம் அதுகண்டிலமென்பதாம்.

(க - து) நனவின்கண் வந்து அருள்செய்யாத தலைவர் கனவின்கண் வந்து வருத்துதல் தகுதியுடையதாகாதென்றாள் என்பது. (௭)

௮. துஞ்சுங்காற் றோண்மேல ராகி விழிக்குங்கா
னெஞ்சத்த ராவர் விரைந்து.

[தானுற்றதற்பொருட்டுத் தலைமகனை 1 இயற்பழித்தாட்கு
இயற்படமொழிந்தது.]

பரி.—(இ - ள்) என்னெஞ்சை விடாதுறைகின்ற காதலர் யான் துஞ்சும்பொழுது வந்து என்றோண்மேலராய்ப் பின் விழிக்கும்பொழுது விரைந்து பழைய நெஞ்சின்கண்ணராவர், எ - று.

கலவிவிட்டேகாமையுங் கடுமைபற்றி 'விரைந்து' என்றாள். ஒருகாலும் என்னின்நீங்கி யறியாதாரை நீ கோவற்பாலையல்லை யென்பதாம்.

---

1 இயற்பழித்தல்-காதலர் அன்பிலரென்று பாங்கிபழித்துப் பேசுதல்.

தெளி —[தான் பொறுத்தற்பொருட்டுத் தலைவனை இயற்பழித்த தோழி கருத்தினைவி இயற்படச்சொல்லியது] (இ - ள்) (என்னெஞ்சுவிடாமல உறைகின்றகாதலர்) துஞ்சுங்கால-(யான்) தூங்கும்போது, (வந்துஎனது) தோண்மேலராகி-தோளின்மேலுள்ளவராகி விழிக்குங்கால-(பின்)விழிக்கும்போது, விரைந்து - நெஞ்சத்தராவர்-(பழைய) நெஞ்சினுள்ளவராவா, எ - று.

புணர்ச்சிவிட்டு மறையுங்கொடுமைபற்றி 'விரைந்து' என்றாள் ஒருகாலும் என்னைவிட்டு நீங்கியறியாதவரை நீ நோவது தகாதென்பதாம்.

(க - து) தூங்கும்போது தோளின மேலிருக்குந தலைவர் விழிக்கும் போது மனததிலிருககின்றா ரென்றாள்என்பது. (அ)

கூ. நனவினா னல்காரை நோவர் கனவினாற்
காதலர்க் காணா தவர்

பரி —(இ - ள்) தமக்கொருகாதலரின்மையின் அவரைக் கனவிற்கண்டறியாத மகளிர் தாமறிய நனவினகண் வந்து நல்காத நங்காதலரை அன்பிலரென நோவா நிற்பர், எ - று.

இயறபழித்ததுபொறாது புலக்கின்றாளாகலின், 1 நன்மைதோன்றக் கூறினாள். தமக்கும காதலருளராய அவரைக் கனவிற் கண்டறிவாராயின் நங்காதலர் கனவின்கணுற்றி நல்குதலறிந்து நோவாரெனபதாம்.

தெளி —[இதுவுமது] (இ-ள) (தமக்கு ஒருகாதலர் இல்லாமையாலே) கனவினான்-கனவிலே, காதலர்க்காணாதவா - அககாதலரைககண்டறியாதமகளிர், நனவினால்-(தாம் அறிய) நனவில்,(வந்து) நல்காரை-அருள்செய்யாத (எமது) காதலரை, நோவர் - (அன்பிலரென்று) நோவாநிற்பர், எ - று.

இயற்பழித்தது பொறாது பிணங்குகின்றாளாகலால், நன்மைதோன்றச் சொல்லினாள் தமககும தலைவருளராய் அவரைக கனவிலேகண்டு அறிவாராயின் நமதுதலைவர் கனவிடத்து நாம் அறியவந்து பொறுத்திருக்குமவகை செய்து அருளசெய்தலறிந்து நோகாரெனபதாம்

(க - து.) கனவிலவந்து அருளசெய்கின்ற தலைவரை நனவிற்காணாதமகளிர் அன்பிலரென்று பழிப்பரென்றாள் என்பது. (கூ)

கo நனவினா னங்கீத்தா ரென்பர் கனவினாற்
காணார்கொ லிவ்வூ ரவர்.

---

1 துஞ்சுங்காற் றோண்மேலராவர், விழிக்குங்கால நெஞ்சத்தராவர், கனவினான் நல்குவரென்று தலைமகனது நன்மைதோன்றக் கூறினாள்

தெளி —அஃதாவது மாலைப்பொழுது வந்தவிடத்து அதனைக்கண்டு தலைவி இரங்குதல். கனவுமுந்துறுத வினையில்லையென்பதுபற்றிப் பகற்பொழுது பொறுத்திருந்த தலைவிக்கு உரியதாகலால், இது கனவுநிலையுரைத்தலின்பின் வைக்கப்பட்டது.

௧ மாலையோ வல்லை மணந்தா ருயிருண்ணும்
வேலைநீ வாழி பொழுது

[பொழுதொடு புலந்துசொல்லியது.]

பரி —(இ - ள்) பொழுதே, நீ முன்னாள்களின் வந்த மாலையோவென்னின், அல்லை, இருந்தவாற்றான் அந்நாட்காதலரை மணந்த மகளிருயிரை யுண்ணும் இறுதிக்காலமாயிருந்தாய், எ-று.

முன்னாள் - 1 கூடியிருந்த நாள். 2 அந்நாண் மணந்தாரெனவே, பின்பிரிந்தாராதல் பெறுதும். 3 வாழியென்பது குறிப்புச்சொல். 4 "வாலிழை மகளிருயிர்ப்பொதியவிழ்க்கும் காலை" என்றாற்போல ஈண்டுப் பொதுமையாற் கூறப்பட்டது. வேலையென்பது ஆகுபெயர். வேலையென்பதற்கு வேலாயிருந்தா யென்பாருமுளர்.

தெளி —[தலைவிபொழுதொடுபிணங்கிச் சொல்லியது] (இ - ள்) பொழுது-பொழுதே, நீ-மாலையோவல்லை-(முன்னாள்களின்வந்த) மாலையோ என்றால் அல்லை, மணந்தார்-(இருந்தவிதத்தால் அந்நாள்களிலே காதலரைக்கூடிய) மகளிரது, உயிருண்ணும்-உயிரையுண்ணுகிற, வேலை - முடிவுக்காலமாயிருந்தாய், ஏ-று.

முன்னாள்-கூடியிருந்தநாள். அந்நாள் மணந்தாரெனவே, பின்பிரிந்தாராதல் பெறப்பட்டது. வாழியென்பது குறிப்புச்சொல். இங்கு மாலைக்காலத்தின்தன்மைபொதுவகையாற் சொல்லப்பட்டது. முடிவு என்னும் பொருளதான வேலையென்னுங்காரியப்பெயர் அதற்குக்காரணமான காலத்திற்காகுதலால் காரியவாகுபெயர். வேலையென்பதனை முன்னிலையொருமைக் குறிப்பு வினைமுற்றாக்கி அதற்கு வேற்படையாயிருந்தாய் என்று பொருள் கூறுவாருமுண்டு.

---

1 கூடியிருந்தநாள்-தலைமகனைத் தலைமகள்கூடியிருந்தநாள்.

2 அந்நாள் முன்னாள்.

3 வாழியென்பது மாலைப்பொழுதே நீ வாழமாட்டாய் என்பது தோன்ற நின்ற இகழ்ச்சிக் குறிப்புச்சொல்.

4 கலித்தொகை நெய்தற்கலி 2. பரிசுத்தமான ஆபரணங்களையுடைய மகளிரது உயிரை (அவ்வுயிரை) பொதிந்து (மறைத்து) நின்ற உடலினின்றும் போக்கும் (மாலைக்) காலம் என்பது.

(க-து) கணவரைப் பிரிந்தார்க்கு இறுதிக்காலமாயிருந்தாயென்று மாலைப்பொழுதை வெறுத்துக் கூறினாளென்பது. (க)

உ. [1] புன்கண்ணை வாழி [2] மருண்மாலை யெங்கேள்போல்
வன்கண்ண தோநின் றுணை

[தன்னுடைய ஆற்றாமை அதன்மேலிட்டுச் சொல்லியது.]

பரி — (இ-ள்) மயங்கிய மாலாய், நீயும் எம்மைப்போலப் புன்கணுடையை யாயிருந்தாய், நின்றுணையும் எந்துணைபோல வன்கண்ணையுடையதோ, கூறுவாயாக. எ-று

மயங்குதல் - பகலுமிரவுந் தம்முள்ளே விரவுதல், [3] கலங்குதலுந் தோன்றநின்றது. புன்கண் - ஒளியிழத்தல், அதுபற்றித் துணையுமுண்டாக்கிக் கூறினாள். எச்சவும்மை விகாரத்தாற் றொக்கது. எமக்குத்துன்பஞ் செய்தாய், நீயுமின்பமுற்றிலை யென்னுங்குறிப்பால 'வாழி' என்றாள்

தெளி — தலைவி தன்றுயரை மாலைப்பொழுதின்மேல்வைத்துச் சொல்லியது. இ-ள் : மருண்ட - மயங்கிய மாலையே, (நீயும்) புன்கணை - (எம்மைப்போல்) ஒளியிழந்தவையாயிருந்தாய், நின்றுணை - உனது துணையும், எங்கேள் போல - எமது துணைபோல, வன்கண்ணதோ - இரக்கமில்லாமையுடையதோ, (சொல்லுவாயாக) எ - று

மயங்குதல் - பகலும் இரவும் தம்முள்ளேகலத்தல் அம்மயங்குதலென்பது கலங்குதலுந்தோன்ற நின்றது புன்கண் - ஒளியிழத்தல் அவ்வொளியிழத்தல்பற்றித் துணையும் உண்டாக்கிச்சொல்லினாள் துணையுமென்னும் இறந்ததுதழுவிய வெச்சவும்மை செய்யுள் விகாரத்தால் தொக்குநின்றது எமக்குத்துன்பஞ் செய்தாய், நீயும் இன்பமுற்றிலையென்று இகழ்ச்சிக் குறிப்பால 'வாழி' என்றாள்

(க-து.) மாலைப்பொழுதே யுனது துணையும் எமது துணைபோன்று கொடுமையுடையதோ என்றாள் என்பது. (உ)

ங. பனியரும்பிப் பைதல்கொள் மாலை துனியரும்பித்
துன்பம் வளர வரும்.

---

1 "புன்கண்கூர் மாலைப் புலம்புமென் கண்ணேபோற், றுன்ப முளவாய்த் துயிலப் பெறுதியால்" என்பது மிகவுங் கவனிக்கத்தக்கதாம்.

2 பகற்காலமென்றாவது இராக்காலமென்றாவது குறிப்பிட்டறியக் கூடாதது பற்றி 'மருண்மாலை' என்று கூறப்பட்டது.

3 கலங்குதல் - தெளிவின்றியிருத்தல்.

[ஆற்றலவேணடுமெனற தோழிககுசசொலலியது ]

பரி —(இ-ள் ) காதலர்கூடிய நாளெலலாம எனமுன் நடுககமெய்திப] ப சந்துவநத மாலை இந்நாள எனக கிறநதுபாடு வநதுதோனறி அதறகுள் நாநது யைய ஒருகாலைககொருகால மிகவாராகினறது, எ- று

2 குளிர்ச்சிதோனற மயஙகிவரு மாலையெனனுஞ செம்பொருள் இககுறி ப புணராநின்றது துனி - உயிர்வாழ்தறகண வெறுப்பு 3 அதனால யானு றறுமாறெனனையெனபது குறிப்பெசசம்.

தெளி —[பொறுத்தல்வேணடுமெனற தோழிக்குத தலைவி சொலலிய து] (இ - ள் ) (தலைவா கூடியநாளெலலாம) பனியரும்பி - (எனமுனனே)ந டுககமடைநது, பைதலகொளமாலை -பசநதுவநதமாலைபபொழுதானது, துனி யரும்பி-(இதுபொழுது எனககு) இறநதுபடுதல வநதுதோனறி, துன்பம்-(அத றகு உணடாகிற, துனபம, வளர - (ஒருகாலைககொருகால) மிக, வரும வருகி னறது, எ - று.

குளிர்சசிதோன்ற மயங்கிவரு மாலையெனனுஞ் செம்பொருள இககுறிப பு அறியநினறது துனி-உயிர்வாழ்தலில வெறுப்பு அதனால யானபொறுக் கும விதம் எனனெனபது குறிப்பெசசம.

(க - து.) தலைவருளளபோது நடுஙகிவநத மாலை இபபோதெனக கு மிகுநதவருத்ததததைச செயகினறதெனறாள என்பது. (௩)

௪. காதல ரிலவழி மாலை கொலைக்களத
 ஏதிலர் போல வரும்

[இதுவுமது ]

பரி —(இ-ள் ) காதலருள்ள பொழுதெலலாம் எனனுயிர தளிர்பபவந்த மாலை, அவரிலலாத இபபொழுது அஃதொழிநது கிறநலேயன்றிக் கொலலுங களரியிற கொலைஞர் வருமாறுபோல அவவுயிரைகோடறகு வாராநினறது, எ - று.

ஏதிலர்-அருள்யாதுமிலலார் முனனெலலாம் எனககு நடபாய இன்ப ஞ்செய்துவநதபொழுதும இனறு என்மேறபகையாயத துனபஞ் செய்துவா ராநினறது, இனி யானுற்றுமா றென்னை யெனபதாம்

1

2 பனியரும்பி - குளிர்சசிதோனற, பைதல்கொளமாலை - மயஙகிவரும மாலை க்காலம என்னும் செம்பொருள (செஞ்சொலவாயிலாகப்பெறுமபொரு ள்) (காதலாகூடியநாளெல்லாம என்முன) நடுககமெய்திப பசநது வநத மாலை எனனுமிக்குறிப்புத தோனறநினறது

3 அதனால் - உயிர்வாழ்தறகண வெறுபபுணடாக வரும மாலைககாலத்தினால்.

(க - து) யான் காலைப்பொழுதிற்குச் செய்த வுபகாரமும் மாலைப் பொழுதிற்குச் செய்த அபகாரமும் என்னையென்றாள் என்பது. (௫)

௬ மாலைநோய் செய்தல் மணந்தா ரகலாத
காலை யறிந்த திலேன்.

[இன்று இனையாகின்ற நீ அன்று அவர்பிரிவிற்குடம்பட்ட தென்னையென்றாட்குச் சொல்லியது.]

**பரி** —(இ - ள்) முன்னெல்லாம் எனக்குநட்பாய் இன்பஞ்செய்துபோந்த மாலை இன்று பகையாய்த் துன்பஞ்செய்தலைக் காதலர் பிரிதற்குமுன்னே அறியப்பெற்றிலேன், எ - று.

இங்ஙனம் [1] வேறுபடுத லறிந்திலேன், அறிந்தேனாயின் அவர்பிரிவிற் குடம்படேனென்பதாம்.

**தெளி** —(இன்று இப்படிப்படுவளாகின்ற நீ அன்று அவர் பிரிவிற்கு உடம்பட்டதெப்படியென்ற தோழிக்குத் தலைவி சொல்லியது) (இ - ள்) மாலை-(முன்னெல்லாம் எனக்குநட்பாய் இன்பஞ்செய்துவந்த) மாலை, நோய்செய்தல்-(இன்று பகையாய்த்) துன்பஞ்செய்தலை, மணந்தார்-தலைவர், அகலாத காலை-பிரிதற்குமுன்னே, அறிந்ததிலேன்-அறியப்பெற்றிலேன், எ - று.

இப்படி வேறுபடுதல் அறிந்திலேன், அறிந்தேனாயின் அவர்பிரிவிற்கு உடம்படேனென்பதாம்.

(க - து) மாலைப்பொழுது துன்பஞ்செய்தலைத் தலைவர் பிரிதற்கு முன்பு அறிந்திலேனென்றாள் என்பது. (௬)

௭ காலை யரும்பிப் பகலெல்லாம் போதாகி
மாலை மலருமிந் நோய்.

(மாலைப்பொழுதின்கண் இனையாதற்குக் காரணமென்னையென்றாட்குச் சொல்லியது)

**பரி** —(இ - ள்) இக்காமநோயாகிய பூ காலைப்பொழுதின்கணரும்பிப் பகற்பொழுதெல்லாம் பேரரும்பாய் முதிர்ந்து மாலைப்பொழுதின்கண் மலரா நிற்கும், எ-று.

துயிலெழுந்தபொழுதாகலிற் கனவின்கட்கூட்ட நினைந்தாற்றுதல்பற்றிக் 'காலையரும்பி' என்றும், பின் பொழுது செலச்செல அதுமறந்து பிரிவுள்ளியாற்றாளாதல்பற்றிப் 'பகலெல்லாம் போதாகி' என்றும், தத்தந்துணையை யுள்

1 வேறுபடுதல் - முன்னெல்லாம் நட்பா யின்பஞ்செய்துவந்த மாலைக்காலம் இப்போது வேறுபட்டுப் பகையாய்த் துன்பஞ்செய்தல்.

நினைந்து சேரும் விலங்குகளையும் பக்கலிருந்து கண்டு தான் அக்காலத்தில் நுகர்ந்த இன்பத்தினை நினைந்ததாற் றுயரை மிகுதிப்படுத்தி 'மாலைமலரும்' என்றுங் கூறினாள். பூப்போல இந்நோய் காலவயத்த தாகா நின்றதென்பது உருவகத்தாற் பெறப்பட்டது. 1 ஏகதேச வுருவகம்.

தெளி — மாலைப்பொழுதில் இப்படித் துன்பப்படுவதற்குக் காரணம் யா தென்ற தோழிக்குத் தலைவி சொல்லியது. (இ-ள்) இந்நோய் - இக்காமநோய் ஆகிய (பூ), காலையரும்பி - காலைப்பொழுதில் அரும்பி, பகலெல்லாம்போதாகி - பகற்பொழுதெல்லாம் பெரிய அரும்பாய் முதிர்ந்து, மாலைமலரும் - மாலைப் பொழுதில் மலரா நிற்கும் எ-று.

தூங்கியெழுந்த பொழுதாகலால் கனவிலே தலைவனுடன் புணர்ந்ததை நினைந்து பொறுத்தலாற்றிக் 'காலையரும்பி' என்றும், பின்பு பொழுது செல்லச் செல்ல அதுமுற்றுப் பிரிவை நினைந்துப் பொறுக்காதல் பற்றிப் 'பகலெல்லாம் போதாகி' என்றும், தமது தமது துணைகளை நினைந்து வந்து சேரும் விலங்கு களையும் பக்கலிருந்து கண்டு தான் அக்காலத்தில் அனுபவித்த இன்பத்தை நினைந் து பொறுமை மிகுதிப்படுத்தி 'மாலைமலரும்' என்றும் சொல்லினாள், பூவினைப்போ லன்று இக்காமநோய் அரும்புதல் முதலிய தொழிலால் காலத்தின் வசத்ததாகா நின்றதென்பது உருவகத்தாற் பெறப்பட்டது. இஃது ஏகதேச வுருவகவணி.

(க-து.) காமநோய் காலைப்பொழுதிலும் பகற்பொழுதிலும் போ லல்லாமல் மாலைப்பொழுதிலே அதிகரிக்கின்றதென்றாளென்பது. (எ)

௮. அழல்போலு மாலைக்குத் தூதாகி யாயன்
குழல்போலுங் கொல்லும் படை.

[இதுவுமது]

பரி.—(இ-ள்) முன்னெல்லாம் இனிதாய்ப் போந்த ஆயன்குழல் இது பொழுது அழல்போலச் சுடுவதாய மாலைக்குத் தூதுமாய் அதுவந்தென்னைக் கொல்வுழிக் கொல்லும் படையுமாயிற்று, எ-று.

பின்னின்ற போலுமென்பது 2 உரையசை. முன்னரே 3 வரவுணர்த்த லிற் றூதாயிற்று, 4 கோறற்கருவியாகலிற் படையாயிற்று. தானே சுடவல் லமாலை 5 இத்துணையும் பெற்றால் என்செய்யாதென்பதாம்.

1 ஆற்றுதல் முதலிய செயல்களை யரும்புதல் முதலிய செயலாக வுருவகப்படு த்தினதன்றிக் காமநோயைப் பூவாக வுருவகப்படுத்தாமையினாலே ஏக தேசவுருவகமாயிற்று.

2 சிறிதுபொருளுணர்த்து மிடைச்சொல் உரையசையாம்.

3 வரவுணர்த்தலிற் றூதாயிற்று-மாலைக்காலத்தின் வரவை யறிவித்தலால் அம் மாலைக்காலத்திற்குத் தூதாயிற்று.

4 கோறற்கருவியாகலின் - அம்மாலைக்காலம் வந்தென்னைக் கொல்லுதற்குச் சாதனமாயிருத்தலால்.

5 இத்துணையும் - வேய்ங்குழலோசையாகிய துணை (உதவி) யும்.

தேளி —[இதுவுமது] (இ - ள) ஆயன்குழல - (முன்னெலலாம இனப ஞ்செயவதாய்வநத) இடையனது வேணுநாதம, அழலபோலும் -(இபபோது) நெருப்புபபோலச் சுடுவதாகிய, மாலைககுததூதாகி - மாலைககுததூதுமாய, (அ பமாலைவநது எனனைக்கொல்லுமிடதது) கொலலும்படை-கொலைசெயயும் ப டையாயிறறு, எ று

பினவநதபோதுமெனபது உரையசை முன்னரே வரவை அறிவித்த லால தூதாயிறறு, கொலலுதறகுக கருவியாகலால படையாயிறறு தானே சு டவலலமாலைபபொழுது இநததுணையையும் பெறறால் எனனசெயயாதென்ப தாம

(க - து) வேயஙகுழலோசை மாலைக காலத ்துணையாகி யென்னை வருத்துகினற தெனறு ளென்பது (அ)

கூ- பதிமருணடு பைத லுழக்கு ம, மாலை படர்தரும

பரி —(இ - ள்) இதறகு முனனெல்லாம யானே மயங்கி நோயுழநதே ன் இனிக கணடாரும மதிமருளுமவகை மாலை வரும்பொழுது இப்பதியெல லாம மயஙகி நோயுழககும், எ - று.

மதிமருளவென்பது மதிமருணடெனத திரிநதுநினறது. கூற்றமாகக் க ருதிக கூறினளாகலின 'மாலைபடாதரும்போழது' என்றாள் யான 1 இறநது படுவ லெனபதாம. மாலை மயஙகிவரும போழதென மதிநிலைகலஙகி நோயுழ மென றுரைபபாருமுளர்,

தேளி.—[இதுவுமது] (இ - ள்) (இதறகுமுன்னெல்லாம யானேமயங் கி நோயாலவருந்தினேன) மதிமருணடு - (இனிககணடாரும்) மதிமயஙகும் வகை, மாலை-மாலைக்காலம், படாதருமபோழ்து-வருமபொழுது, பதி-இவவூரா ரெலலாம, மருணடு-மயங்கி, பைதலுழக்கும-நோயை அனுபவிபபர், எ-று

மதிமருள என்னும் செயவெனெசசம் மதிமருணடு எனச்செயதெனெச்ச மாகத்திரிநதுநினறது. யமனுகவெண்ணிக்கூறினளாதலால் 'மாலை படாதரும் போழ்து' எனறாள் யான் இறநதுபடுவேன் என்பதாம.மாலை மருண்டு படர் தரும்போழ்து பதி மதிமருணடு பைத லுழக்கும் என்றநவயபபடுததி, அத றகு மாலை மயஙகிவருமபொழுது பதி (இவவூரிலுள்ளாரியாவரும) மதி (அறி வு) நிலைகலஙகி நோயை யனுபவிககும என்று பொருள் கூறுவாருமுண்டு.

1 இறநதுபடுவல - செததுபபோவேன்

க. சிறுமை நமக்கொழியச் சேட்சென்றார் உள்ளி
நறுமலர் நாணின கண்.

[ஆற்றாமைமிகுதியான் வேறுபட்ட தலைமகட்குத்
தோழி சொல்லியது ]

பரி.—(இ - ள்) இவ்வாற்றாமை நங்கண்ணே நிற்கத் தாஞ் சேணிடைச் சென்ற காதலரை நினைந்தழுதலால் நின்கண்கள் ஒளியிழந்து முன்றமக்கு நாணிய நறுமலர்கட்கு இன்று தாம் நாணிவிட்டன, எ - று

நமக்கென்பது 1 வேற்றுமை மயக்கம் 2 உள்ளவென்பது உள்ளியென்றுதிரிந்து நின்றது உள்ளுதலென்பது காரணப் பெயர் காரியத்திற்காயவாகுபெயர் 3 இவை கண்டார் அவரைக் 4 கொடுமை கூறுவர், நீயாற்றல் வேண்டுமென்பது கருத்து

தெளி —[பொறுமை மிகுதியால் வேறுபட்ட தலைவிக்குத் தோழிசொல்லியது ](இ-ள்) சிறுமை- இப்பொறுமை, நமக்கொழிய - நம்மிடத்துநிற்க, சேட்சென்றார்-(தாம்) நெடுந்தூரத்திலேசென்ற தலைவரை, உள்ளி (நீ)நினைந்தழுதலால், கண்-(உன்) கண்கள்,(ஒளியிழந்து) நறுமலர்- (முன்னே தமக்குநாணின) நல்லமலர்களுக்கு, நாணின-(இன்றுதாம்) நாணிவிட்டன, எ - று

நமக்கு என்பதின்கணுள்ள நான்கனுருபு தனக்குரிய பொருளைவிட்டுநீங்கி நிற்றது என ஏழனுருபின் இடப்பொருளில்வந்தது உள்ள என்னும் செயவெனெச்சம் உள்ளியெனத் திரிந்து நின்றது உள்ளுதல் என்னும் காரணப்பெயர் அதன்காரியமாகிய அழுதலுக்காதலால் காரணவாகுபெயர் இவற்றைக்கண்டார் அவரைக் கொடியவரென்று சொல்லுவர், நீ பொறுத்தல்வேண்டுமென்பது கருத்து

(க - து) தோழி தலைவியே நீ தலைவரை நினைந்தழுதலால் உன்கண்கள் ஒளியிழந்து வாட்டமடைந்தன என்றாளென்பது. (க)

உ. நயந்தவர் நல்காமை சொல்லுவ போலும்
பசந்து பனிவாருங் கண்

[இதுவுமது ]

---

1 வேற்றுமை மயக்கமெனினும் உருபுமயக்கமெனினு மொக்கும் "உருபின் மயக்கமோ ருருபின் பொருளொடு, தன்பொருள் விடுத்துத் தலைமயங்குதலே" என்று இலக்கணவிளக்கம் கூறுகின்றது

2 உள்ளவென்பது காரணப்பொருளில் வந்த (இறந்தகால) செயவெனெச்சம் [செய்தென்னும்வாய்பாட்டெச்சம் காரணப்பொருளில் வாராமையினாலே உள்ளவென்பது உள்ளியெனத்திரிந்து நின்றது என்று கூறப்பட்டது ]

3 இவை-நின்கண்கள் ஒளியிழந்து விட்டனவற்றை

4 கொடுமை கூறுதல்-(தலைவனைத்) தகுதியில்லாதவனென்று சொல்லுதல்.

**பரி** — (இ-ள்) பசப்புற்றுப் பனிவாராநின்ற நின் கண்கள் நம்மால் நயக்கப்பட்டவரது நல்காமையைப் பிறர்க்குச் சொல்லுவபோலாநின்றன; இனி நீ ஆற்றல் வேண்டும், எ-று.

சொல்லுவபோறல்-1 அதனை 2 பிறருணர்தற்கு 3 அனுமானமாதல். நயந்தவர்க்கென்று பாடமோதுவாருமுளர்.

**தெளி** — [இதுவுமது.] (இ-ள்) பசந்து - நிறம்வேறுபட்டுத் தோன்றி, பனிவாருங்கண் - நீர்வாராநின்ற (உனது) கண்கள், நயந்தவர் - (நம்மால்) விரும்பப்பட்டவரது, நல்காமை - அருள்செய்யாமையை, சொல்லுவபோலும் - (பிறர்க்குச்) சொல்லுவபோலாநின்றன, (இனி நீ பொறுத்தல் வேண்டும்) எ-று.

சொல்லுவபோறல் அதனை அவர் அறிதற்கு அனுமானமாதல். நயந்தவர் என்பதற்குப் பிரதியாக நயந்தவர்க்கு என்று பாடங்கூறுவாருமுண்டு.

(க-து.) அழாநின்ற உன்கண்கள் தலைவரது அருளின்மையைப் பிறர்க்குச் சொல்லுவ போலாகின்றனவென்று சொன்னது. (உ)

௩. **தணந்தமை சால வறிவிப்ப போலு**
மணந்தநாள் வீங்கிய தோள்.

[இதுவுமது]

**பரி** — (இ-ள்) காதலர் மணந்த ஞான்று இன்பமிகுதியாற் பூரித்த நின் தோள்கள் இன்று அவர் பிரிந்தமையை விளங்க உணர்த்துவபோல மெலியாநின்றன, இது தகாது, எ-று.

4 அன்று அவ்வாறு பூரித்து 5 இன்று இவ்வாறு மெலிந்தால் 6 இரண்டுங் கண்டவர் கழிதினறிந்து அவரைத் தகவின்மை கூறுவரென்பதாம்.

---

1 அதனை - அருள்செய்யாமையை.

2 அவர் — பிறர்.

3 புகை முதலிய குறிகளால் மலை முதலிய இடங்களில் நெருப்பு முதலியவை உண்டென்றாராய்ந்தறிவது அனுமானமாம். இவ்வனுமானமாமாறு - தலைமகன் தலைமகளுக்கு அருள்செய்யவில்லை என்பது பிரதிஞ்ஞை, தலைமகளது கண்களினின்று நீரொழுகுதலால் என்பது ஏது; கணவரது அருள்பெறாத பிறமாதர்கள்போல என்பது உதாரணம்.

[தலைவி தலைமகனது அருள்பெறாமையைப் பிறருணர்தற்கு அவளது நீர்வாராநின்ற கண்கள் சாதனமாயிருக்கின்றன வென்பது திரண்டபொருள்.]

4 அன்றும் - கூடிய நாளில். 5 இன்றும் - பிரிந்தநாளில்.

6 இரண்டும் - பூரித்தலும் மெலிதலும்.

தேளி —[இதுவுமது ] (இ-ள ) மணந்தநாள் - (தலைவர்) கூடியநாளில், வீங்கிய - (இளைப்பின்றி) பூரித்த, தோள - (உனது) தோள்கள், தணந்தமை - (இன்று அவர்) பிரிந்ததனை, சாலவறிவிப்பபோலும் - விளங்க அறிவிப்பனபோன்று இளைக்கின்றன, (இது நகாது), எ-று

அன்றும் அப்படி பூரித்து இன்றும் இப்படி இளைத்தால் இரண்டும் கண்டு கண்டவர் விரைவில் அறிந்து அவரை அயோக்கிய ரென்பா ரென்

(க -து.) தலைவரைக் கூடிய நாளில் பூரித்த உன தோள்கள் அவர் பிரிந்தமையைப் பிறர்க்கு அறிவித்தல்போல இளைக்கின்றன வென்றவாறு (௩)

ச. பணைநீங்கிப் பைந்தொடி சோரும் துணைநீங்கித்
தொல்கவின் வாடிய தோள்.

[இதுவுமது ]

பரி.—(இ — ள் ) அன்றும் நந்துணைவர் நீங்குதலான் அவராற்பெற்ற செயற்கை யழகே யன்றிப் பழைய வியற்கை யழகுமிழந்த இத்தோள்கள் இன் 1 றதற்குமேலே தம்பெருமை யிழந்து வளை கழலாநின்றன, 2 இவை இங்ஙனஞ் செயற்பாலவல்ல, எ - று.

பெருமையிழத்தல்- மெலிதல் பைந்தொடி-பசிய பொன்னாற் செய்த தொடி, சோருமெனனும் வளைத்தொழில் தோண்மேனின்றது அன்றும் பிரிந்தாரென்று அவரன் பின்மை யுணர்த்தி இன்றும் குறித்த பருவத்து வந்திலரென்று அவர் பொய்ம்மை யுணர்த்தாநின்றன, இனி 3 அவற்றைக் கூறுகின்றாமேற் குறையுண்டோ வென்பதாம்

தேளி —[இதுவுமது ] (இ-ள ) துணைநீங்கி - (அன்றும்நமது) துணைவர்நீங்குதலால், (அவராலே பெற்ற செயற்கை யழகேயல்லாமல்) தொல்கவின் - பழைய இயற்கை யழகும், வாடியதோள - இழந்த இத்தோள்கள், (இன்று அதற்குமேல) பணை நீங்கி - (தமது) பெருமையிழந்து, பைந்தொடி - வளையல்கள், சோரும்-கழலுகின்றன, (இவை இப்படிச்செய்யுந் தன்மையனவல்ல) எ-று.

பெருமையிழத்தல - தோள்களிளைத்தல. பைந்தொடி-பசியபொன்னாற் செய்தவளையல வளையலதுதொழிலான சோருதலைத் தோளமேலேற்றித்

---

1 அதற்குமேலே - செயற்கை யழகே யன்றிப் பழைய வியற்கையழகு மிழந்ததற்குமேலே.

3 அவற்றை - தலைவரது அன்பிலலாமையையும் பொய்ம்மையையும்.

ரது, கோமைை - பொலலாமைக, உரைககும் - (தாமே) சொலலுகினறன், தொடுயோடு - வளைகளுமகழன்று, தொலகவினவாடியதோள-பழைய (இபற நகழகுபிழந்த இந்தோளகள, (இனி அதனை யாம மறைககும விதமயாது) எ-று

உரைககுமஎனபது அபபொருள தோனறனற குறிபபுசசொல. ஓடுருபு வேறுவினையில வநதது அவரோடுகலநத தோளகளே சொலலுவனவானுல அடகா சொலலுதல சொலலவேணடுமோ வென்பதாம

(க - து) வளையலகளுடன தமதழகையுமிழந்த உனதோளகள் வாராது தாமதிததிருக்கும தலைவரது அனபிலலாமையைப பிறர்ககுத தெரிவிககினறன வென்று சொன்பது. (ரு)

சு. தொடியொடு தோணெகிழ நோவ லவரைக
கொடிய ரெனககூற ஞெந்து.

[தாஞெறுததபொருட்டியறபழிதத தோழிககுத
தலைமகள சொலலியது]

பரி —(இ - ள) யாஞெறறவும் எனவயத்த வனறித் தொடிகள் கழலு டாறு தோளகண மெலிய, அவறறைக கணடு, நீ யவரைக கொடியரெனக் கூறுதலைபபொருது யானெனனுள்ளே நோவாநினறேன, எ - று.

ஓடு மேலவநத பொருணமைதது யாஞெறறே ஞெகின்றது அவா வரா ததற கனறு நீ கூறுகின்றதற கெனபதாம.

தெளி,—(தான் பொறுத்தற பொருட்டுத் தலைவனை இயற்பழிதத தோழிககுத தலைவி சொலலியது) (இ - ள,)(யான பொறுககவும் என் வசபபடாமல) தொடியொடு-வளையலகள் கழலுமபடி, தோணெகிழ- தோள்கள்மெலிய, (அவறறைககணடு) அவரை கொடியரெனக் கூறல - (நீ) அத்தலைவரைக கொடியவரெனறு சொல்லுதலை, நொந்து - பொறுமல, நோவல- (யான் என் னுளளே) நோகினறேன, எ-று.

தொடியொடு எனபதின ஓடுஉருபு மேலுள்ள குறளிறபோல வேறு வினையில வநதது யான பொறுதவளாகினறது அவா வாராதிருததற்கலல

(க - து) தோழியே! நீ தலைவரைப பழிததுக் கூறுதலபறறி வளையலகள கழலும்படி தோள்களிளைக்க வருந்துதல மேலும மிகவும வருநெனபது (சு)

எ பாடு பெறுதியோ நெஞ்சே கொடியார்க்கென்
வாடுதோட் பூச லுரைத்து

[அவ்வியற் பழிப்புப் பொறாது தன் னெஞ்சிற்குச்
சொல்லியது.]

**பரி.**—(இ - ள்.) நெஞ்சே இவள் கொடியா ரெனகின்றவர்க்கு நீ சென்று என் மெலிகின்ற தோளினால் விளைகின்ற ஆரவாரத்தைச் சொல்லி ஒரு மேம்பாடெய்த வல்லையோ, வல்லையாயின் அதனை யொப்பதில்லை, எ - று

'கொடியார்க்கு' என்பது கொடியரல்ல ரென்பது தோன்ற நின்ற குறிப்புச்சொல், 'வாடுதோள்' என்பதும் 1 அவைதாமே வாடா நின்றன வென்பது தோன்ற நின்றது பூசல் ஆகுபெயர். அஃது அவள் தோளைநோக்கி யியற்பழித்தன்மேலும் அதனாற் றனக்காற்றாமை மிகன்மேலும் நின்றது நின்னுரை கேட்டலும் அவர் வருவர், வந்தால் 2 இவையெல்லா நீங்கும், நீங்க 3 அஃதெனக்குக் 4 காலத்தினாற் செய்த நன்றி யாமாகலின், 5 அதன்பய னெல்லா மெய்துதி யென்னுங் கருத்தாற் 'பாடு பெறுதியோ' என்றாள்

**தெளி** —(அவ்வியற்பழித்தல் பொறாது தலைவி தன்னெஞ்சிற்குச் சொல்லியது ) (இ-ள், நெஞ்சே-கொடியார்க்கு - (இத்தோழியாலே) கொடியவரென்று சொல்லப்பட்டவர்க்கு, (நீசென்று) என் வாடுதோள் - எனது வாடுகின்ற தோளினால், (விளைகிற) பூசல் - ஆரவாரத்தை, உரைத்து- சொல்லி, பாடு - ஒருமேம்பாட்டை, பெறுதியோ - அடையவல்லையோ, (வல்லையாயின் அதனை யொப்பது இல்லை) எ-று

கொடியார்க்கென்பது கொடியவரல்லரென்பது தோன்றநின்ற குறிப்புச்சொல் வாடுதோளென்பதும் அவைதாமே வாடாநின்றன வென்பது தோன்றநின்றது பூசல்'சண்டை)என்பது அதனாலுண்டாகின்ற ஆரவாரத்திற் காதலால் கருவியாகு பெயர் அவ்வாரவாரம் அத்தோழி தோளைப்பார்த்துத் தலைவனை யியற்பழித்தல் மேலும் அவ்வியற் பழித்ததால் தனக்குப்பொறாமை மிகுதல்மேலும் நின்றது. உன் சொல்லைக் கேட்டவுடன் அவர்வருவார், வந்தால் இவையெல்லாம் நீங்கும், நீங்கவே அஃது எனக்குக் காலத்தினாற் செய்த நன்றியா மாகையால், அதன் பயனெல்லாம் அடைவாயென்னுங் கருத்தால் 'பாடுபெறுதியோ' என்றாள்.

---

1 அவை- தோள்கள்

2 இவையெல்லாம் - தோழிதலைமகனது நடத்தையைப் பழித்தலும், கண்கள் காணுதலும், அழுதலும், தோள்கள் மெலிதலுமாகிய இவையாவும்

3 அஃது - நின்னுரை

4 திருக்குறள் செய்ந்நன்றி யறிதல், உ. இதன்பொருள் ஒருவனுக்கு முடிவு வந்தவிடத்து ஒருவன செய்த வுபகாரம என்பது

5 அதன் பயனெல்லாம் - உபகாரத்தின் பிரயோஜனமியாவும்.

(க - து.) எனது தோள் மெலிவைத் தலைவர்க்குரைத்து எனக்கு நன்மையுண்டாகக வேண்டுமென்று நெஞ்சை வேண்டிக்கொண்டனள் தலைவி என்பது (எ)

அ. முயங்கிய கைகளை யூக்கப பசநதது
பைநதொடிப பேதை நுதல்.

[வினைமுடிதது மீட்லுற்ற தலைமகன் முன்னிகழ்நதது நினைநது தனனுளளே சொலலியது]

பரி.—(இ - ள்) தன்னையிறுக முயங்கிய கைகளை இவட்குநோ மென்று கருதி ஒருஞான் றியா னெகிழநதேனுக, அத்துணையும் பொறுது பைநதொடி களை யணிநத பேதையது நுதல பசந்தது, அபபெறறித்தாய நுதல இப்பிரி விறகியாது செய்யுமோ, எ - று.

இனிக கடிதிற் செலலவேண்டு மென்பது கருத்து.

தேளி.—[மேற்கொணட காரியததை முடித்துத் திரும்பிவருதலுற்ற தலைவன் முனனடநததை நினைநது தன்னுள்ளே சொல்லியது] (இ - ள்) முயங்கியகைகளை - (தனனையிறுகத) தழுவியகைகளை, (இவளுக்கு நோகுமெனறுநினைந்து) ஊககு - (ஒருநாள் யான) தளர்ததினேனுக, (அம்மாததிரமும் பொறுககாமல)பைநதொடிப்பேதை - பசும்பொன்னுறசெய்த வளையலகளை யணிந்தபேதையினது, நுதல் - நெற்றியானது, பசந்தது - நிறம்வேறுபட்டது, (அபபடிப்பட்டநெறறி இப்பிரிவிறகுயாதுசெய்யுமோ) எ-று

இனிவிரைவிறசெல்லவேணடுமென்டது கருத்து.

(க - து) தலைவன் தனது சிறிது பிரிவினுலுண்டாகிய தலைவியின் நுதற்பசப்பைக் கருதி விரைநது செல்லவெண்ணினனெனபது.(அ)

கூ முயககிடைத தண்வளி போழ்ப பசப்புற்ற
பேதை பெருமழைக் கண.

(இதுவுமது)

பரி —(இ- ள்) அஙஙனங கைகளை யூககுதலான அம்முயககிடையே சிறு காற்று நுழைந்ததாக அத்துணை யிடையீடும பொறுது, பேதையுடைய பெரியமழைக கண்கள் பசபபுறறன, அததன்மையவானகண்கள மலைகளும் காடுமநாடுமாய 1 இவவிடையீடுகளை யெலலாம் யாஙஙனம பொறுத்தன, எ - று

1 இவவிடையீடுகளை - இததடைகளை

று தனவனமையும அதன மெனமையும கருதிக கண வெள்கிறறென்பதாம். ஆ
கடூவ அவருறுபபுகள ஒனறினென்று முறபட்டு நலனழியும, யாம கடிதி
ற் செலவேோமெனபது கருத்தாயிறறு

(க - து) தனது சிறிதுபிரிவினுல தலைவியின உறுபபுகள ஒன
றினைறு முற்பட்டுஅழகழிந்ததை யெணணி வருநதினனென்பது (ம)

## கஉ௫ - ம் அதி.—நெஞ்சொடுகிளத்தல.

பரி —அஃதாவது ஆறறுமை மீதூரத தனககோர பறறுக்கோடு காணுந
தலைமகன தன்னெஞ்சொடு செயதிறனறியாது சொலலுதல 1 இஃது உ
றுபபுகள் தநநலனழிநதவழி நிகழ்வதாகலின, உறுபபு நலனழிதலினபின
வைககபபட்டது

தெளி —அஃதாவது பிரிவுபொறுமை மேறபட்ட தனககு ஓாபறறுக்
கோடுகாணுத தலைவி தனனெஞ்சொடு செயதிறன அறியாதுசொலலுதல. இஃ
து உறுபபுகள தமதுநலனழிநதபோது நிகழவதாகலால, அதனபின வைகக
பபட்டது

> க. நினைததொனறு சொலலாயோ நெஞ்சே யெனைததொனறு
> மெவவநோய தீர்ககு மருநது.

[தனனுறறுமை தீருந்திறனுடியது]

பரி —(இ - ள) நெஞ்சே! இவவெவ்வ நோயினைத் தீாககு மருநதாவ
தொனறனை, யானறியு மாறறலிலன, எததனமைய தியாதொன்றுயினும நீய
றிநதெனககுச சொல், எ-று.

எவவம - ஒனறுனும தீராமை. 2 உயிரினுஞ் சிறநத நாணினை விட்டுச
செய்வதியாதொனறுயினு மென்டாள் 'எனைததொனறும' எனருள்.

1 இஃது - நெஞ்சொடு கிளததல்

2 "தாயிறசிறந்தனறு நாணடையலாருககநநாணடைகைசால், வேயிறசிறநத
மென்றேளிதிணகறபினவிழுமிதனறு" என்று திருககோவையார் கூ
றுதலும, "வெளிபபட்டபினறையுறு்ரிய கிளவி" என்னு மிறையனூரகப்
பொருட் சூததிரததினுரையில் "நாணுககறபென்னும் இரண்டலலவே
அவள கணணுள்ள, அவற்றுள் நாணிறகற்புவலியுடைதது, எனனை ? வ
லியுடையவாறெனின'உயிரினுஞ் சிறநதன்று நாணேநாணினும்,செயிாதீர
காட்சிககறபுச சிறநதனறு' எனபதாகலான, நாண அழியினும கற்பழி
யாமைநினைககும." என்று கூறியிருததலு மிககறியததக்கனவாம்.

தெளி—[தன்பொருமை தீருந்திறனுடியது] (இ-ள்.) நெஞ்சே-என் நோய் ஒன்றாலுந் தீராத இந்நோயை, தீர்க்கும் மருந்து ஒன்று- தீக்கு மருந்தாவதொன்றை, நான் அறியுடவமையுடையவளல்லன் எனைத்தொன்றும்- எப்படிப்பட்டது யாதொன்றாயினும், நினைந்து- அறிந்து, சொல்லாயோ.- (எனக்குச்) சொல்லாயோ, எ-று.

எவ்வம்-ஒருவகையாலுந் தீராமை உயிருஞ் சிறந்தாணினைவிடச் செய்வது யாதொன்றாயினு மெனடாள் 'எனைத்தொன்றும்' என்றாள்.

(க-து) தலைவி எனது காமநோய் தீருதற்குரிய மருந்தொன்றை நீ யோசித்துச் சொல்லவேண்டுமென்று மனத்தை வேண்டிக்கொண்டனளென்பது.

(க)

௨. காதல ரவரில ராகநீ நோவது
பேதைமை வாழியென் னெஞ்சு

[தலைமகனைக் காணடற்கண் வேட்கை மிகுதியாற் சொல்லியது.]

பரி—(இ-ள்) என்னெஞ்சே! வாழ்வாயாக, அவர் நமக்கட காதலிலராகவும் நீயவர் வரவுநோக்கி வருந்துதற்கேது நின்பேதைமையே, பிறிதில்லை, எ-று.

நம்மை நினையாமையின் நமகட காதலிலரெனபது அறியலாம், 1 அஃதறியாமை மேலும் அவர்பாற்செல்லக் கருதாது அவர்வரவு பார்த்து வருந்தாநின்றாய், இது நீ செய்துகொள்கின்றதென்னுங்கருத்தாற 'பேதைமை' என்றாள் வாழி- இகழ்ச்சிக்குறிப்பு யாமவர்பாற்சேறலே அறிவாவதென்பதாம்

தெளி—(தலைவி தலைவனைக் காணுதலிலே ஆசைமிகுதியால சொல்லியது.) (இ-ள்) என்னெஞ்சு - எனது நெஞ்சே, வாழி - வாழ்வாயாக, அவர் - காதலிலராக - (நம்மேல்] ஆசையிலராகவும், நீ நோவது - நீ (அவர் வரவுபார்த்து) வருந்துதற்குக் காரணம், பேதைமை - (உன்) னறியாமையேயாம்,(வேறொன்று இல்லை) எ-று.

நம்மை நினையாமையால நம்மிடத்து ஆசையிலரென்பதறியலாம், அதனையறியாமை மேலும் அவரிடத்துப்போக நினையாது அவர் வரவுபார்த்து வருந்துகின்றாய், இது நீசெய்துகொள்ளுகின்றதென்னுங் கருத்தால் 'பேதைமை' என்றாள். வாழி-இகழ்ச்சிக்குறிப்புச்சொல் யாம் அவரிடத்துச்செல்லுதலே அறிவாவதென்பதாம்.

---

1 அஃதறியாமை - தலைவர் நம்மிடத்திலாசையில்லாதவரென்பதறியாமல்

(க - து.) நெஞ்சே ! நீ நம்மிடத்திலாசையில்லாத தலைவரது வீரவை நோக்கி வருந்துதல தகாதென்றுரைன்பது. (உ)

ந. இருந்துள்ளி யெனபரித னெஞ்சே பரிந்துள்ளல
பைதனோய் செயதார்க ணில

[இதுவுவது]

**பரி** —(இ - ள்) நெஞ்சே! அவர்பாற செலவதுஞ் செய்யாது ஏண்டிற்றுப்படுவதுஞ் செய்யாதிருந்து அவரவரவு நினைந்து நீவருந்துகினறதென்னை? இடைபிணிய செயதாரமாட்டு நமக்கிரங்கிவரக கருதுதல உண்டாகாது, எ - று.

நம்மாட்டருளுடைய ரன்மையிற றமாக வாரார, நாஞ்சேறலே இனித்தகுவ தெனபதாம

**தெளி** —[இதுவமது] (இ - ள) நெஞ்சே - இருந்து - (அவரிடத்துப் போவதுஞ்செயயாது இங்கே இறந்துபடுவதும் செய்யாமல) இருந்து, உள்ளி- (அவரவரவை) நினைந்து, பரிதல - (நீ) வருந்துகின்றது, என் - என்னை, பைதனோய செயதாரகண - இத்துன்பநோய செயதவரிடத்து, பரிந்து - (நமக்கு) இரங்கி, உளளல-(வர) நினைத்தல, இல-உண்டாகாது, எ-று

நமமிடத்து அருளுடையவரலலாமையால தாமாகவாரார, நாம் அவரிடத்துக்குச செலலுதலே இனித்தகுவதெனபதாம

(க - து.) நெஞ்சே!நீ தலைவரிடத்துச் செல்லாது அவரது வரவை நோக்கிவருந்துதல தகுதியுடைய தாகாதென்று ளெனபது (ந)

ச. கண்ணுங் கொளச்சேறி நெஞ்சே யிவையென்னைத
தின்னு மவர்க்காண லுற்று.

**பரி** —(இ - ள்) நெஞ்சே! நீயவர்பாற சேறலுற்றாயின இக்கண்களையும உடனகொணடு செலவாயாக, அன்றி நீயே சேறியாயின், இவைதாம காட்சி விதுப்பினால் அவரைக காண்டலவேண்டி நீ காட்டென்று என்னைத் தினபனபோன்று நலியா நிற்கும, எ-று

கொணடென்பது கொளவெனத் திரிந்து நின்றது. 1 தினனுமென்பது இலக்கணைககுறிப்பு. 2 அந்நலிவு தீர்க்கவேணடுமென்பதாம் என்றது தான் சேறல குறித்து

1 நன்னூல விருத்தியுரை "வடநூலார சொறபொருளை வாசசியம, வெங்கியம, இலக்கணையென மூனறெனவும, இலக்கணையை வெங்கியத்து (குறிப்புசசொல்லு) ளடக்கி யிரண்டெனவுங்கூறுப" என்று கூறுவதிங்கறிய

2 அந்நலிவு தீரக்கவேண்டும்—கணகள் தின்பனபோன்று வருத்துதலையொழித்தல் வேண்டும்.

பரி.—(இ-ள்.) என்னெஞ்சே! யானதம்மொடு புலந்தால அப்புலவியைக் கலவிதனனுனே நீககவலல காதலரைக் கணடாற் பொயயேயாயினும ஒருகாற புலககது பின்னதனை நீங்கமாட்டாய, 1 அதுவுமாட்டாத நீ இபபொழுது அவரகொடியரெனப பொயக்காயவு காயாநின்றாய, இனி 2 யிதனையொழிந்து அவர்பாற செலலதத துணிவாயாக, எ - று.

கலததலா னென்னும பொருட்டாய கலக்கவென்பது திரிநது நின்றது. அதனை யுணாததலாவது கலவியினபத்தைக காட்டி அதனுன மயக்கிய புலவிக் குறிப்பினை யொழித்தல பொயககாயவு-நிலையில வெறுபபு கணடான மாட்டாத நீ காணுதவழி வெறுக்கின்றதனுற பயனிலலை யெனபதாம.

தெளி.—[தலைவன் கொடுமையை நினைநதுசெல்லுதறகு உடன்படாத நெஞ்சினைககோபித்துச் சொலலியது] (இ - ள்) என்னெஞ்சு - எனதுநெஞ்சே, (யான் நமமோடு பிணங்கினு லபபிணக்கை) கலந்து - புணர்சசியதனாலே, உணாததுங்காதலர் - நீககவலலதலைவரை, கண்டால பாரத்தால, புலந்து-(பொயயாகவாயினும ஒருநரம) பிணஙகி, உணராய்-(பின) அதனைநீஙகமாட்டாய, (அதுவுமாட்டாத நீ இபபோது) பொயககாய்வுகாயதி (அவரைககொடியவரெனறு) பொயக காயவு காயாநின்றாய், (இனியிதனையொழிந்து அவரிடத்துச்செ ... எ - று.

கலததலால எனனும பொருளினதாய கலக்கவென்பது கலந்து எனததிரிநது நின்றது கலத்தலா லுணர்த்தலாவது கலவியினபததைக காட்டி அவ்வினபத்தினால மயககிய பிணககின்குறிப்பினை நீககுதல பொயக்காய்வு - நிலையிலலாத வெறுபபு தலைவரைககணடால வெறுககமாட்டாத நீ காணுதவிடதது வெறுககின்றதனால பயனில்லையெனபதாம.

(க - து) தலைவரைக் கணடவிடதது வெறுககாத நெஞ்சே! நீ இப்போது அவரை வெறுத்தல் தகுதியாகாமையின அவரிடததுபபோ என்று ளெனபது. (௬)

எ. காமம விடுவொன்றோ நாணவிடு நன்னெஞ்சே
யானோ பொறேனிவ் விரணடு.

[நாண்டடுத்தலின் அச்செலவொழிவாள் சொலலியது]

பரி.—(இ - ள்) நல்ல நெஞ்சே ஒன்றி னுண்விடமாட்டாயாயிற காம வேட்கையை விடு, ஒன்றி 3னது விடமாட்டாயாயின் நாணினைவிடு, அன்றியே 4 இரணடும விடாமை நின் கருத்தாயின, ஒனறறகொன்று மறுதலையாய 5 இவவிரணடனையும் 6 உடன்றாஙகுமதுகை யானிலன், எ - று.

---

1 அதுவும - பொய்யாகவானுலும ஒருதரம பிணஙகுதலும்
2 இதனை-பொய்ககாய்வுகாயதலை
3 அது - காமவேட்கையை. 4 இரண்டும - காமமும் நாணும
5 இவவிரணடனையும் - காமம நாண் என்னும இரண்டனையும
6 உடனறாஙகுமதுகை - ஒருமிததுத்தாஙகும சாமர்த்தியம்.

யானோவென்னும் பிரிநிலை 1 நீ பொறுப்பினு மென்பதுபட நின்றது. நன்னெஞ்சே யென்றது 2 இரண்டையும் விடாது பெண்மையை நிலைபெறுத் தலின், நலமிலையென்னுங் குறிப்பிற்று. 3 அது நன்றே யெனினும் என்னுயிருண்டாதல் 4 சாலாமையின், 5 அதற்காகின்றிலே னென்பதாம். முற்றும்மை விகாரத்தாற் றொ

தெளி.—[நாணம் தடுத்தலாலே அச்செல்லுதலொழியுந்தலைவி சொல்லியது.] (இ - ள்.) நன்னெஞ்சே - நல்லமனமே, ஒன்று காமம்விடு - ஒன்றில் (நாணத்தை விடமாட்டாயாகில்) காமவிருப்பத்தை விடு, (ஒன்று) நாணவிடு - ஒன்றில் (காமவிருப்பத்தை விடமாட்டாயாகில்) நாணத்தைவிடு, (அல்லாமலே இரண்டையும் விடாமை உன்கருத்தாகில்) இவ்விரண்டும் - (ஒன்றற்கொன்று பகையாகிய) இவ்விரண்டையும், யானோ—பொறேன் - (ஒருசேரத்) தாங்கும் வலிமையுடையேனல்லேன், எ - று.

யானோவென்னும் பிரிநிலையோகாரம் நீ பொறுப்பினுமென்பது தோன்ற நின்றது. நன்னெஞ்சேயென்றது இரண்டையும் விடாமல் பெண்மையை நிலைபெறச்செய்தலால், நலமிலையென்னுங்குறிப்பின்கண் வந்தது. அது நன்றேயெனினும் என்னுயிருண்டாதல் போதாமையால், அதற்கு ஆகின்றிலேனென்பதாம். இரண்டுமென்பதன் முற்றும்மை செய்யுள்விகாரத்தால்தொக்குநின்றது.

(க - து) யான் காமம் நாண் என்னு மிரண்டனையுந் தாங்கும் வலியின்றியவளாயிருத்தலால் இவ்விரண்டனுள் யாதாயினு மொன்றை நெஞ்சமே விட்டுவிடு என்றாள் என்பது. (எ)

அ பரிந்தவர் நல்காரென் றேங்கிப் பிரிந்தவர்
பின்செல்வாய் பேதையென் னெஞ்சு

பரி.—(இ - ள்) என்னெஞ்சே அவர் இவ்வாற்றாமையையறியாமையின் கொண்டுவந்து தலையளி செய்யாராயினாரென்று கருதி 6 அஃதறிவித்தற்பொருட்டு நம்மைப்பிரிந்துபோயவர்பின் ஏங்கிச்செல்லுற்றநீ யாதுமறியாய், எ - று.

ஆற்றாமை கண்டுவைத்தும் நல்காது போயினாரைக் காணுதவழிச்சென்றறிவித்த துணையானே நல்கவருவரென்று கருதினமையிற் 'பேதை' என்றாள்.

---

1 நீ என்றது மனத்தை.

2 இரண்டையும் - காமம் நாண் எனனுமிரண்டையும்.

3 அது - பெண்மையை நிலைபெறச்செய்தல்.

4 சாலாமையின் - அமையாமையால்.

5 அதற்கு - அமையாமைக்கு.

6 அஃது - ஆற்றாமையை.

தேவி —[இதுவுமது] (இ-ள்) என்னெஞ்சு - எனதுநெஞ்சே, அவர்- அத்தலைவர், (இப்பொறுக்காமையை அறியாமையால) பரிந்து- நொந்துவந்து, நல்கார்என்று - அருளசெய்யாராயினுரென்று நினைந்து, (அதனை அறிவித்தற் பொருட்டு) பிரிந்தவர்பின்- (நம்மைப) பிரிந்துபோய தலைவர்பின்னே, ஏங்கிச் செல்வாய - இரங்கிப்போகலுற்றநீ, பேதை - ஒன்றுமறியாய, எ - று.

பொறுக்காமை யறிந்திருந்தும அருள்செயயாமல் போயினுரைக் காணுத விடத்தே போய அறிவித்த அளவாலே அருள்செய்யவருவாரென்று நினைத்த மையால 'பேதை' என்றுள்

(க - து) நம்மிடத்து அருள்செயயாத தலைவரிடத்துச செல்லலு ற்றநெஞ்சே! நீ யாது மறியாயென றிகழ்ந்து கூறிறு ளெனபது. (அ)

௯. உள்ளத்தார் காத லவராக வுள்ளிநீ
யாருழைச் சேறியென னெஞ்சு.

[இதுவுமது.]

பரி —(இ - ள்) என்னெஞ்சே காதலர் நின்னகத்தாராக, முன்பெல லாங் கண்டு வைத்து இப்பொழுது நீ புறத்துத் தேடிச்செலகின்றது யாரிடத் து, எ - று

உள்ளமெனபுழி அம்முப் பகுதிப்பொருள் விகுதி. நின்னகத்திருக்கின் றவரை அஃதறியாது புறத்துததேடிச் சேறல் நகையுடைத்து, அதனை யொழி யெனபதாம

தேவி —[இதுவுமது] (இ - ள்.) என்னெஞ்சு - எனதுநெஞ்சே, காத லவா- அனடர், உள்ளத்தாராக - (உன) னுள்ளிருப்பவராக, (முனபெல்லாங் கண்டிருந்தும) நீ-உள்ளி -(இப்பொழுது புறத்தே) தேடி, சேறி - செலலுகின் து, யாருழை - யாரிடத்து, எ-று,

உள்ளம எனறவிடத்து அம் பகுதிப்பொருளை யுணாத்திய விகுதி. தலை வர் உனனுளிருக்கிறவராக, நீ அதனையறியாமல புறத்துத்தேடிச்செல்லுதல் நகையுடைத்து, அதனையொழியென்பதாம்.

(க - து) நெஞ்சே! தலைவர் உன்னுள இருக்க நீ யவரைததேடிச் செலலுதல் தகா தெனறு ளெனபது. (௯)

௧0. துன்னுத துறந்தாரை நெஞ்சத் துடையேமா

[அவரை மறந்தாறறலவேண்டுமென்பதுபடச் சொல்லியது]

பரி —(இ-ள்.) நம்மைக் கூடாவண்ணம் துறந்துபோயினுரை நாம நம மகத்துடையேமாக, முன்னிழந்த புறக்கவினே யனறி நின்ற அகக்கவினு மிழ பபேம், எ - று.

பரி.—(இ - ள) நாணுகிய 1 தாழினைக் கோத்த நிறையென்னுங் கதவினை காமவேட்கை யாகிய கணிச்சி முறியா நின்றது, இனி அவைநிற்றலுமில்லை, யானாற்றலு மில்லை, எ-று.

கணிச்சி - 2 குந்தாலி. நாணுள்ள துணையும் நிறையழியா தாகலின் 3 அதனைத் தாழாக்கியும், அகத்துக்கிடந்தன பிறர் கொள்ளாமற் காத்தலின் நிறையைக் கதவாக்கியும், வலியவாயத் தாமாக நீங்காத 4 அவ்விரண்டனையும் ஒருங்கு நீக்கலிற் றன் காமவேட்கையைக் கணிச்சியாக்கியுங் கூறினாள்

தெளி —[நாணும் நிறையும அழியாமல நீ பொறுத்தல் வேண்டுமென்ற தோழிக்குத்தலைவி சொல்லியது ] (இ - ள ) நாணுத்தாழ்வீழ்த்த-நாணுகிய தாழினைக்கோத்த, நிறையென்னுங்கதவு - நிறையென்னுங் கதவினை, காமக் கணிச்சி - காமவேட்கையாகிய குந்தாலி, உடைக்கும் - முறிக்கின்றது, (இனி அந்நிறை நிற்றலும் இல்லை, யான் பொறுத்தலும இல்லை), எ று

நாணுள்ளவளவும நிறை அழியாதாகலால அதனைத்தாழாக்கியும், உள்ளிருப்பவைகளைப் பிறர்கொள்ளாமற் காத்தலால் நிறையைக்கதவாக்கியும், வலியவையாய்த் தாமாக நீங்காத அவ்விரண்டினையும் ஒருசேர நீக்கலால தன் காமவேட்கையைக் கணிச்சியாக்கியும் சொல்லினாள்.

(க - து ) நிறையென்னுங் கதவைக் காமமெனனுங் கணிச்சி முறித்தலால யான பொறுத்தல முடியா தென்று ளென்பது (க)

உ. காம மெனவொன்றோ கண்ணின்றென் னெஞ்சத்தை
யாமத்து மாளுந் தொழில்

[நெஞ்சினகட்டோன்றிய காமம் நெஞ்சாலடக்கப்படு
மென்றாட்குச் சொல்லியது ]

பரி —(இ - ள் ) எல்லாருந் தொழிலொழியு மிடையாமத்தும் என்னெஞ்சத்தை யொறுத்துத் தொழில கொள்ளா நின்றது ஆகலாற் காமமென்று சொல்லப்பட்ட வொன்று 5 கண்ணோட்ட மின்றி யிருந்தது, எ-று.

ஓவெனபது இரக்கக்குறிப்பு. தொழிலின் கண்ணே யாடல்-தலைமகன் பாற் செலவிடுத்தல். 6 தாயைப்பணிகோடல உவகியலன்மையிற 'காமமெனவொன்று' என்றும், 7 அது தனனைக் கொள்ளுகின்றது அளவறியாது கோடலிற 'கண்ணின்று' என்றுங் கூறினாள் அடக்கப்படாமை கூறியவாறு

---

1 தாழ - தாழக்கோல (தாழ்ப்பாள்).
2 குந்தாலி - கோடரி (கோடாலி). 3 அதனை - நாணை
4 அவ்விரண்டனையும் - நாணநிறையெனனு மவ்விரணடனையும்
5 கண்ணோட்டம - தாட்சணணியம்
6 தாயையென்றது காமமுண்டாதற்கு முதற்காரணமாய மனத்தினை.
7 அது - காமம்.

தெளி.—[நெஞ்சினிடத்துத் தோன்றியகாமம் நெஞ்சால் அடக்கபடும் மென்றதோழிக்குத் தலைவி சொல்லியது] (இ-ள்.) யாமத்தும் - (எல்லாருந் தொழிலொழிகிற) நடுராத்திரியிலும், என்னெஞ்சத்தை- (தணடித்து) தொழிலாரும் தொழில்கொள்ளாகின்றது, (ஆதலால்) காமமென வொன்று-காமமென்று சொல்லப்பட்ட ஒன்று, ஓ - ஐயோ, கண்ணின்று - கண்ணோட்டமில்லாததாயிருந்தது, எ - று.

ஓ என்பது இரக்க குறிப்பிடைச்சொல் தொழிலிலே ஆளுதல்-தலைவனிடத்துச் செலலவிடுத்தல். தாயைத்தொழில கொள்ளுதல உலகாடையமையால 'காமமெனவொன்று' என்றும், அது தன்னைக கொள்ளுகின்றது அளவறியாது கொள்ளுதலால் 'கண்ணின்று' என்றும் சொலலினாள். காமம் தன்னாலே அடக்கப்படாமை சொலலியபடி.

(க - து) காமமானது தாட்சண்ணியமின்றி நடுராத்திரியிலும் என்னை வருத்துகிறதென்றுளென்பது. (உ)

௩. மறைப்பேனமற் காமத்தை யானோ குறிப்பின்றித் தும்மல்போற் றோன்றி விடும்.

[மகளிர்காமம் மறைக்கப்படுமென்றாட்குச் சொலலியது]

பரி.—(இ - ள்) இககாமத்தை யானெனனுள்ளே மறைகக் கருதுவேன், அதனுன் இஃதென கருத்தின வாராது தும்மல்போல வெளிப்பட்டே விடாநின்றது, எ-று

1 மன் - ஒழியிசைககண்வந்தது 2 ஓகாரம - பிரிநிலைககணவந்தது. தும்மலடங்காதாறபோல அடங்குகின்றதிலலை யென்பதாம்

... தலைவிசொலலியது] (இ-ள்) காமத்தை-இககாமததை, யான-நான, மறைபபேன்-(என்னுள்ளே) மறைக்கநினைபபேன், (அதனை) குறிபபின்றி-(இது) எனகருத்தினவழிவாராமல, தும்மலபோல் - தும்மலபோன்று, தோன்றிவிடும் - வெளிபபட்டேவிடுகின்றது, எ-று

மன-ஒழியிசையில்வந்தது ஓகாரம் - பிரிநிலையிலவந்தது எப்படி தும்மல் அடங்குகின்றதில்லையோ அப்படியே காமம அடங்குகின்றதிலலை யென்பதாம்.

(க - து) எனக்கடங்காது என் காமம் வெளிப்படுகிறதென்றுளென்பது. (௩)

---

1 மறைபபேனமன என்றவிடத்து மன் என்னுமிடைச்சொல மறைத்தலால் என்னும் ஒழிந்தசொறபொருளைத் ... தின்றதிறலே ஒழியிசைககணவந்ததாயிற்று.

2 யானோ என்றவிடத்து ஓகாரவிடைச்சொல் தோழிமுதலியோரினின்றும் தலைமகளைப் பிரித்துக்காட்டி நின்றதினால பிரிநிலைப்பொருளதாயிற்று.

௪. நிறையுடையே னென்பேன்மன் யானோவென் காம
மறைபிறந்து மன்று படும்.

பரி —(இ - ள) இன்றினுங்கெல்லாம யானென்னை நிறையுடையேனெ னறு கருதி யிருநதேன், அதனன் இன்றென காமம் மறைத்தலைக் கடந்து ம னறினகண வெளிபடா நினறது, எ - று

1 மனனும ஓவும்-மேலவற்றின்கண வநதன. மன்றுபடுதல் - பலருமறி தல. இனி எனவரைததன் றெனபதாம

தெளி —[இதுவுமது ] (இ-ள ) யான நிறையுடையேனெனபேன்- (இது வரைகெல்லாம) யான் (எனனை) நிறையுடையேனென்று நினைததிருநதேன, (அதனாலினறு) எனகாமம - எனதுகாமம், மறைபிறநது - மறைத்தலைகக டநது, மனறுபடும - மன்றினகண் வெளிப்படாநினறது, எ-று

மனனும ஓகாரமும் மேறகுறளிறபோன்று ஒழியிசையிலும் பிரிநிலையினு ம வநதன. மனறுபடுதல - பலரும் அறிதல இனியிககாமம் எனனளவிலதல ல எனபதாம.

(க - து.) யானடகக அடங்காது என காமம் பலருமறிய வெளிப் படுகிறதெனறு ளென்பது. (௪)

௫. செற்றார்பின செல்லாப பெருந்தகைமை காமநோ
யுற்றா ரறிவதொன றன்று.

[நம்மை மறந்தாரை நாமுமறக்கற்பால மென்றாட்குச்
சொலலியது.]

பரி.—(இ - ள ) தமமையகன்று சென்றார்பின செல்லாது தாமும் அக ன்றிற்கு 2 நிறையுடைமை காமநோயினையுறாதார் அறிவதொன்றனறிஉறறார் அறிவதொன்றன்று, எ-று

இன்பத்தொடுகெழியுங் காலத்தைத் துன்பத்தொடுகெழியுமாறு செய்தலிற் 'செறறார்' என்றாள் பின்சேறல் - மனத்தால் இடைவிடாது நினைத்தல 3 பெ

1 மன் என்னு மிடைசசொல அவவாறுகருதி இருநததனால் என்னும ஒழிந்த சொற்பொருளைத் தந்து நின்றது.

2 நிறையுடைமையானது காமநோயை யுடையாதவர்களால அறியபபடுமே யலலாமல் காமநோயையடைந்தவர்களால் அறியபபடுவதல்ல வெனப தாம்

3 பெருந்தகைமையென்னும் பண்புப்பெயர் அதனையுடைய நிறையுடைமைக் காதலால் பண்பாகுபெயர். நிறையுடைமை யிங்கே பொருளாகக கருத ப்பட்டது.

ருந்தகைமை-ஈனாகுபெயர். காமநோயுறுதார் - மானமுடையார். ஈன்றெனவுணரார் பாடுஞ் சென்றேநிற்கும் யானறிவதொன்றன்றென்பதாம்.

தெளி — [நடைமறந்தவரை நாமும் மறந்துவிடுவோமென்ற தோழிக்குத் தலைவி சொல்லியது.] (இ - ள்) செற்றாரபின் - தம்மைநீக்கிப் போனவர்பின், செல்லா-செல்லாமல், (நாமும் நீக்கியிருக்கிற) பெருந்தகைமை - நிறையுடைமையானது, காமநோயுற்றார் - (காமநோயினையடையாதவர் அறிவதொன்றல்லாமல்) காமநோயையடைந்தவர், அறிவதொன்றன்று - அறியப்படுவதொன்றன்று, எ - று.

இன்பத்தோடு கழியுங்காலத்தைத் துன்பத்தோடு கழியும்படி செய்தலாலே 'செற்றார்' என்றாள். பின்செல்லுதல்- மனத்தால் இடைவிடாது நினைத்தல். பெருந்தகைமை-இருகுஆகுபெயர். காமநோயுறுதார்-மானமுடையார், ஈன்றெனவறியாரிடத்தும் சென்றே நிற்கும் யான் நிறையுடைமை அறிவதொன்றன்றென்பதாம்.

(க - து) நிறை காமநோயுற்றவரிடத்திராதென்றுளெனபது (டு)

சு செற்றவர் பின்சேறல் வேண்டி யளித்தரோ
எற்றென்னை யுற்ற துயர்.

பரி.—(இ - ள்.) என்னையகன்று சென்றாரபின்னே யான் சேறலை வேண்டுதலான என்னையுற்றதுயர் எத்தன்மையது? சாலநன்று, எ - று.

செற்றவரென்றது ஈண்டும் 1 அப்பொருட்டு. வேண்டவென்பது வேண்டியென்று திரிந்துநின்றது. அளித்தென்றது இகழ்ச்சிக்குறிப்பு. இக்காமநோய் யான்சொல்லவுங் கேட்கவுமாவதொன்றன்று, சாலக்கொடிதென்பதாம்.

தெளி — [இதுவுமது] (இ - ள) செற்றவர்பின் - (என்னைநீக்கிச்) சென்றவர்பின்னே, சேறல்வேண்டி (யான்) செல்லுதலைவேண்டுதலால், என்னையுற்றதுயர் - என்னையடைந்த துன்பமானது, எற்று - எத்தன்மையது, அளித்து-மிகநன்று, எ-று.

அரோ - அசை. செற்றவர் என்றது இங்கும் மேற்குறளின் பொருளதாயினது. வேண்டஎன்பது வேண்டியெனத்திரிந்து நின்றது. அளித்தென்பது இகழ்ச்சிக்குறிப்புச்சொல். இக்காமநோயானது நான்சொல்லவும் கேட்கவும் ஆவதொன்றன்று, மிகக்கொடியதென்பதாம்

(க - து.) துன்பம் அதிகரித்தால என்னை விட்டுச்சென்ற தலைவர் பின்னே செல்ல யான் விரும்புகின்றேனென்று ளெனபது (சு)

1 அப்பொருட்டு என்றது இன்பத்தொடு கழியுங்காலத்தைத் துன்பத்தொடு கழியுமாறு செய்தலின் என்றதை

எ நாணென வொன்றோ வறியலம் காமத்தாற்
பேணியார் பெட்ப செயின்.

(1 பரத்தையிற்பிரிந்துவந்த தலைமகனோடு நிறையழிவாற்கூடிய
தலைமகள் நீ புலவாமைக்குக் காரணம் யாதென்ற
தோழிக்குச்சொல்லியது)

பரி—(இ - ள்) நம்மால் விரும்பப்பட்டவர் வந்து காமத்தால் நாம்விரு
ம்பியவற்றைச் செய்யுமளவின் நாணென்றொன்றனையும் அறியமாட்டேமாயிரு
ந்தேம், எ - று

2 பேணியாரெனச் செயப்படுபொருள் வினைமுதல்போலக் கூறப்பட்ட
து. விரும்பியன-வேட்கைமிகவின்றி கருதியிருந்த 3 கலவிகள். நாண-4 பர

---

1 பரத்தையிற்பிரிவு-தலைவன் பரத்தைமேற்காதலாய்த் தலைவியைப்பிரிந்து ப
ரத்தையர் சேரியிற்போதல். "'பரத்தையிற் பிரிவெனப்படுவது 'பொ
துமகளிரான புன்னலந்தோயார், மதிநலத்தின் மாண்டவறிவி னவர்'
எனப்பொற்றலைமகனறிவிலனும், தலைவியிடத்துண்பும் இலனும், பெருமையுமி
லனும், படிவுமாமெனின், அற்றன்று, அரசுரிமையனுதலின் அரசுரிமை
க்குப் பரத்தையரினும் வரைத்தற்குரியராயத் தொன்றுதொட்டு நடக்குமு
றைமையராயும், வரையாதவுரிமையாயச் சேரியினகனுறைவாருமாய இ
வரும் பிறந்தருளனறு தொட்டு இவர்க்கென விதித்திருக்கப்படுதலானும்,
அவரை நீக்குதல் தகுதியன்மையானும்,பரத்தையிற்பிரிதல் குற்றமன்றோ
னக அனறியும் காலைக்கடனகழித்தலும், உலகத்திருந்து நாடுகாவற்றொ
ழிற்செய்தலும்,விருந்துடனடிசில் கைதொடலும், நாவலரோடுகலவி பயி
ற்றலும், ஆடல்பாடல்களிற் களித்தலும், மடவாரோடுகூடலும், துயிற
லும்,துயிலுணர்ந்துதேவாப்பராவலுமாகிய காலவரையறை யெட்டினுள்
ஆடல்பாடல் ஒன்றுதலானும், அதற்குரியர்பரத்தையராதலானும், அதற
குரியகாலத்தில் அவரிடத்தில் மனம்செலலுதலியல்பாதலானும், பரத
தையிற்பிரிதலாற் குற்றமின்றென்க ஆயின், பரத்தையர்சேரியில் செ
லலுமாறென்னையெனின், அவர்பலரோடும் விளையாடற்பொருட்டும், அ
வருடன் புணர்தற் குரியரைப்புணர்தற் பொருட்டும் பரத்தையர் சேரியி
ற் செலலுமென்றுணர்க" என்று தஞ்சைவாணன் கோவையினுரையி
ற் கூறப்பட்டிருக்கிறது

2 மூன்றும் வேற்றுமைக்கருத்தாவின் செயப்படுபொருள் வினைமுதல்போலி
ருப்பதுபற்றிப் 'பேணியாரெனச் செயப்படுபொருள் வினைமுதலபோலக்
கூறப்பட்டது' என்று கூறப்பட்டது

3 கலவிகள்—கொடிபோலச்சுற்றித்தழுவுதல், மரத்தைப்போலேறித்தழுவுத
ல், எள்ளுமரிசியும்போலக்கலந்துகலந்து தழுவுதல், பாலும் நீரும்போல
ஒன்றுபட்டத் தழுவுதல், தொடையால் நெருக்கித்தழுவுதல் குறிகள்சேரத்
தழுவுதல், கொங்கையழுத்தத் தழுவுதல், நெற்றிபொருத்தத் தழுவுதல்
களாம்.

4 "காதற்பரத்தையா காமக்கிழத்தியா,பின்முறை வதுவைப் பெருங்குலக் கி
ழத்தியென், றன்னவ ருரிய ரவையிரண் டிற்கும்" "அவருட்,காதற் பரத்
தையர் களவிற் குறியர்" என்று அகப்பொருள் விளக்கங் கூறுவதிங்கறி
யத்தக்கதாம்

த்தைட தோய்ந்த மாலைத் தோய்தற்கு நாணுதல். ஒன்றென்பது ஈண்டுச் சிறிதெனனும்பொருட்டு இழிவுசிறப்புமமை விகாரத்தாற்றொக்கது நிறையழிவான் அறிமாட்டாது கூடிய தனகுற்றநோக்கி, அவளையுமுளபபடுத்தாள்

தெளி —[பரத்தைபினினறும் பிரிந்துவந்த தலைவனோடு நிறையழிவினாலே கூடியதலைவி நீ பிணங்காமைக்குக் காரணம் யாதெனறதோழிக்குச் சொல்லியது] (இ - ள) பேணியார் - (நம்மால) விரும்பப்பட்டதலைவா, (வந்து) காமத்தால-காமததினால், பெட்ப-(நாம) விரும்பியவைகளை, செயின செய்யுமளவில, நாணென்வொன்றோ—நாணென்று சொலலபபட்ட ஒனறையும், அறியலம்-அறியமாட்டோமாயிருந்தோம், எ - று.

பேணியாரையெனனும் செயபடுபொருள் பேணியாரென எழுவாயபோலச் சொல்லபபட்டது விருமபியவை-ஆசைமிகுதியினால நினைந்திருந்த புணாச்சிகள். நாண-பொழுதுமகளிர புணாந்தமாலைப் புணாதற்கு நாணுதல் ஒன்றென்பது இங்குச்சிறிதெனனும் பொருளது ஒனறுஎனபதனீற்றில் இழிவு சிறப்புமமை செய்யுள்விகாரத்தால தொக்குநின்றது. நிறையழிவாலறியாமல கூடிய தனது குற்றத்தை நோக்கி, தோழியையும தன்னோடுளபடுத்தி 'அறியலம' என்றுகூறினள்.

(க - து) நமமாலவிரும்பபபட்டவர் வந்து நாம்விருமபியவற்றைச் செய்யும்போது நாணத்தை யறியாது விட்டோமென்றாளெனபது (எ)

**அ. பனமாயக களவன் பணிமொழி யன்றோநம**
**பெண்மை யுடைககும படை.**

[இதுவுமது]

**பரி.—**(இ - ள்.) நநிறையாகிய வரணையழிககுந தானை பலபொய கலைவல்ல கள்வனுடைய தாழநதசொறக ளனறோ? ஆனபின அது நிறகுமாறென்னை, எ - று.

பெண்மை-ஈண்டுத தலைமைபற்றி நிறைமேனினறது வந்தாற புலககக்கடவேமெனறும், புலநதால் அவன சொற்களானுஞ் செயலகளானும நீஙகேமென்றும், இவைமுதலாகவெண்ணிககொணடிருநதனயாவுங்காணாது கலவிககட்டனனின முறபடுமவகை வந்துதோன்றின னெனபாள் 'பன்மாயககளவன்' என்றாள். பணிமொழி - நமமினுநதானனபு மிகுதியுடையனாகச் சொல்லுஞ்சொற்கள்' அவன் 1 அத்தனமையனாக, சொற்கள 2 அவையாக, நநிறை யழியாதொழியுமோ வென்பதாம

தெளி —[இதுவுமது.] (இ - ள்,) நமபெணமை - நமதுநிறையாகிய அரணை, உடைக்குமு-அழிககும, படை-ஆயுதம், பனமாயக்கள்வன-பலபொயகளைப

---

1 அத்தன்மையனாக-பன்மாயக்களவனாக
2 அவையாக - பணிமொழியாக

டேசவலலகள்வனுடைய, பணிமொழியன்றோ - தாழ்ந்தசொறகளனறோ,•(ஆ னபின அநநிறை நிறகும விதம்யாது), எ - று

பெண்மை - இநகுத் தலைமைபறறி நிறைமேல்நின்றது வநதால் பிண ககககடவேமெனறும, பிணஙகினல அவன் சொறகளாலும் செயலகளாலும் நீஙகேமெனறும, இவைமுதலாக எண்ணிககொண்டிருநதவையாவும் காணும ல கலவியிலே தனனிலும முறபடுமபடி வநது தோனறினுனெனபாள் 'பன மாயககள்வன' எனருள். பணிமொழி - நமமிலுந்தான அன்புமிகுதியுடையவ னுககசொலலுஞ்சொற்கள அவன அபபடிபபடடவனுக, சொறகள் அவையா க, நமதுநிறை அழியாதொழியுமோ வெனபதாம

(க - து.) நமது நிறையானது தலைவனது பணிவான சொற்களால நிலலாதொழிகினறது எனறு ளென்பது. (அ)

> க௯. புலபப லெனசசென்றேன புலலினே னெஞ்சங
> கலதத லுறுவது கணடு.

[இதுவுமது]

பரி.—(இ - ள.) அவர் வநதபொழுது புலக்ககடவேனெனறு கருதி முனனிலலாது பிறிதோரிடத்துப் போயினேன, போயும், என்னெஞ்சம் நி றையினிலலாது அறைபோய் அவரோடு கலத்தறொடங்குதலை யறிந்து, இனி வாயாதெனறு புல்லினேன், எ - று.

வாயாமை-புலததற கருவியாய நெஞ்சுதானே கலத்தற் கருவியாய் நிற் அது முடியாமை,

தெளி,—[இதுவுமது] (இ - ள்) (அவாவந்தபொழுது) புலப்பலென - பிணஙகக்கடவேனென்று நினைதது,சென்றேன-(அவாமுன்னேநில்லாமல வே ரோரிடத்திலே) போயினேன், (போயும்) நெஞ்சம- (என்) னெஞ்சமானது, (நிறையினில்லாமல் கீழறுத்துககொணடுபோய்க) கலததலுறுவது - (அவரோ டு) கலத்தலைத்தொடங்குதலை, கணடு - அறிநது, புலலினேன - (இனி அது வாயாதென்று) தழுவினேன, எ - று .

வாயாமை - பிணங்குதற்குக காரணமாகிய நெஞ்சுதானே கலததற்குக் காரணமாய நிற்றலால அநநினைபபுமுடியாமை

(க - து.) தலைவர் வநதபோது யான பிணஙகி யிருககவேணடுமெ னறு சென்றேன; பொறுக்க முடியாமையினுல் அவரோடி கூடிவிட் டேன என்று ளென்பது. (௯)

> க0 நிணநதீயி விட்டனன நெஞ்சினர்க குணடோ
> புணர்நதூடி நிறபே மெனல்.

(இதுவுமது,)

பரி —(இ - ள்) 1 நிணத்தைத் தீயின்கண்ணே யிட்டால் 2 அஃதுருகுமாறுபோலத் தங்காதலரைக் கண்டால் நிறையழிந்துருகு நெஞ்சினையுடைய மகளிர்க்கு, அவர் புணர யாமூடிப் பின்பு உணராது 3 அந்நிலையே நிற்கக்கடவேமென்று கருதுதலுண்டாகுமோ, ஆகாது, எ-று.

புணர்தல் - [illegible], எதிர்ப்படலுமாம். புணரவென்பது புணர்ந்தெனத் திரிந்துநின்றது. யா 4 னத்தன்மையே னாகலின் எனக்கு 5 அஃதில்லையாயிற்றென்பதாம்.

தெளி —(இதுவுமது) (இ - ள்) நிணந்தீயிலிட்டன்ன-நிணத்தைத் தீயிலேயிட்டால் அஃது உருகுமாறுபோல தமது காதலரைக்கண்டால் நிறையழிந்துருகும், நெஞ்சினார்க்கு - நெஞ்சினையுடைய மகளிர்க்கு, புணர்ந்து-(அவர்) புணர, (யாம் ஊடி-பிணங்கி, பின்புணராது) நிற்பேமெனல் - (அந்நிலையிலே) நிற்கக்கடவேமென்று நினைத்தல், உண்டோ- உண்டாகுமோ, (ஆகாது), எ-று.

புணர்தல் - இக்குமிக்கக்கிடத்தல், எதிர்ப்படலுமாகும். புணரவென்னும் செயவெனெச்சப் புணர்ந்தென்னும் செய்தெனெச்சமாகத் திரிந்துநின்றது. யானத்தன்மையே னாகலால் எனக்கு அஃதில்லையாயிற்றென்பதாம்.

(க - து.) காதலரைக்கண்டால் மனமுருகு மகளிர்க்குப் பிணங்கியிருத்தல் முடியாதென்று சொன்னது (ஙு)

## கஉள - ம். அதி.—அவர்வயின்விதும்பல்.

பரி,—அஃதாவது பிரிவின்கண் தலைமகனும் தலைமகளும் வேட்கைமிகவின் ஒருவரையொருவர் காண்டற்கு விரைதல். தலைமகன் பிரிவும் தலைமகளாற்றாமையும் 6 அதிகாரப்பட்டு வருகின்றமையின், இருவரையுஞ் சுட்டிப் பொதுவாகிய பன்மைப்பாலாற் கூறினார். பிறரெல்லாம் இதனைத் 7 தலைமகனை நினைந்து தலைமகள் விதுப்புற்றலென்றார். 8 சுட்டுப்பெயர் சொல்லு

---

1 நிணம் - கொழுப்பு 2 அஃது - நிணம்

3 அந்நிலையே - பிணங்கிய நிலையிலேயே

4 அத்தன்மையேனாகலின் - நிணந்தீயிலிட்டன்ன நெஞ்சினளாகலின்.

5 அஃது - ஊடி நிற்பேமெனல்

6 அதிகாரப்பட்டு - அதிகாரங்களில் தொடர்ச்சியாய்ச் சொல்லப்பட்டு.

7 தலைமகனையென்றது பாடம்:-தலைவன் கிளவித்தலைவனென்னு மிருவரில் கிளவித்தலைவனை

8 சுட்டுப்பெயர் - அவன் அவள் அவர் அது அவைஎன்னும் சுட்டுப்பெயர்கள். 'இயற்பெயர் கிளவியும் சுட்டுப்பெயர் கிளவியும், வினைக்கொருங் கியலுங் காலந்தோன்றிற்-சுட்டுப்பெயர்க் கிளவி முற்படக் கிளவா, இயற்பெயர் வழிய வென்மனார் புலவர்" என்னும் தொல்காப்பியச் சூத்திரமிங்கறியத்தக்

ளா குறிப்பொடு கூடிய பொருளுணர்த்துவதலலது 1 தானொன்றறகுப் பெயராகாமையானும, கவிகூறறுய அதிகாரத்துத தலைமகன உயாததற 2 பன்மையாற கூறபபடாமையானும 3 அஃதுரை யனமையறிக இதனுடடலைமகள கூறறு நிறையழிவினிகழநததாகலின், அவ்வியைபு பறறி நிறையழிதலின பின வைககபபட்டது

தேளி—அஃதாவது தூரதேசபபிரிவிலே தலைவனும் தலைவியும ஆசைமிகுதியால ஒருவரையொருவா காணுதறகு விரைதல. தலைமகன் பிரிவும தலைமகள் பொறுக்காமையும் அதிகாரபபடடு வருகினறமையினால, தலைமகன தலைமகள் எனனுமிருவரையுஞ் சுட்டி (குறிதது ப பொதுவாகியபன்மைப (பலா) பாலால் 'அவர்' எனறு சொலலினுர் பிறரெலலாமிவவதிகாரததினைத் தலைமகனினைநது தலைமகள் காணுதறகு விரைதல் என்று கூறினா சுட்டுப பெயா சொலலுவார் குறிபபோடு கூடியபொருளை யறிவிபபதல்லாமல் தான ஒனறனுககுப பெயராகாமையாலும, கவிஞனது சொலலான அதிகாரததில தலைமகன் உயாததுதறபொருட்டுப் பனமையா (பலாபாலா)ற சொலலபபடாமையாலும் அஃது உரையாகாதெனக இதனுள தலைவிசொல் நிறையழிவால உணடானதாதலால், அசசமபந்தமபறறி அதன்பின வைககபபட்டது

க. வாளறறுப் புறகென்ற கண்ணு மவர்சென்ற
*நாளொறறித தேய்நத விரல

[தலைமகள் காணடல விதுமபினுற சொலலியது ]

பரி—(இ-ள்) அவா நம்மைப் பிரிநதுபோய நாள்கள் சுவரின்கணிழைததவறறைததொட்டு எண்ணுதலான என விரலகடேயநதன, அதுவேயன்றி அவா வரும் வழிபார்த்து என் கணகளும் ஒளியிழநது புலலியவாயின, இவவாறுயும அவா வரவுண்டாயிற்றிலலை, எ-று

4 நாள்—ஆகுபெயா. புலலியவாதல-நுண்ணிய காணமாட்டாமை. ஒறறவெனபது ஒறறியெனத திரிநது நினறது. இனி யான காணுமாறென்

1 தான் - சுட்டுபபெயா.

2 "தலைவனைவியநதுரைததல்" "அவன்குறிபபறிதல" என்றறொடககத்தனவாய் ஒருமைபபாலாற சொலலபபடுவதனறிப பன்மைப்பாலாற றலைவரைவியததல அவர்குறிப்பறிதல எனறறொடக்கத்தவாய்ச் சொலலபபடாமையாலும்.

3 அஃது - பிறரெலலாங் கூறியவுரை

* "தெணணீரணிசிவனசிறறம்பலஞ்சிநதியாதவரிற, பணணீர்மொழியிவளைபபையுளெயதபபணித்தடமக, ணுண்ணீருகவொளிவாடிட நீடுசென்றுர் சென்றநா, ளெணணீாமையினிலனுக்குழியுவிரலிட்டறவே" எனறுதிருக்கோவையார் கூறுவது மிககறியததக்கதாம

4 நாள் என்னும காலபபெயா அககாளகளிற் சுவரிற்செய்த குறிகளுககாதலால காலவாகுபெயா.

லை யென்பதாம் நாளெண்ணலும் வழிபார்த்தலும் ஒருகாற் செய்தொழியாது இடையின்றிச் செய்தலான், 1 விதுப்பாயிற்று.

தெளி —[தலைவி தலைவனைக்காணற்கு விரைதலாற் சொல்லியது] (இ-ள்.) விரல்-(என்) விரல்கள், அவர்சென்ற நாள்-அவர் (நம்மைப்பிரிந்து) போன நாட்களை (சுவரிலே குறிவைத்து அவைகளை), ஒற்றி - தொட்டெண்ணுதலால், தேய்ந்த - தேய்ந்தன, (அதுவேயன்றி) கண்ணும் - (என்) கண்களும், வாளற்று - (அவர்வரும்வழிபார்த்து) ஒளியிழந்து, புற்கென்ற - புல்லியவாயின, (இவ்வாறாயும் அவர்வரவு உண்டாயிற்றில்லை), எ - று.

நாள் - ஆகுபெயர். புல்லியவாதல் - நுட்பமானவைகளைக் காணமாட்டாமை. ஒற்றவென்னுஞ் செயவெனெச்சம் ஒற்றியெனச் செய்தெனெச்சமாகத் திரிந்து நின்றது. இனி யாண்டாளுட்வீதம் யாதென்பதாம் நாளெண்ணலும், வழிபார்த்தலும், ஒருகாற்செய்தொழியாமல் எப்போதுஞ்செய்தலால் விதுப்பாயிற்று.

(க-து) தலைவர் பிரிந்து சென்றநாள்களைச் சுவரினகண் குறிவைத்தெண்ணுதலால் எனது விரல்கள் தேய்ந்துபோயின; அவர் வரும் வழியைப் பார்த்தலால் எனது கண்கள் ஒளியிழந்து போயின என்று சொன்னபது.

(க)

உ. இலங்கிழாய் இன்று மறப்பின்என் றோண்மேற்
கலங்கழியுங் காரிகை நீத்து.

[2 ஆற்றாமை மிகுதலின் இடையின்றி நினைக்கற்பாலையல்லை சிறிது மறக்கல்வேண்டுமென்ற தோழிக்குச் சொல்லியது]

பரி —(இ-ள்) விளங்கா நின்ற இழையினையுடையாய காதலரை இன்று யான் மறப்பேனாயின், மேலும் காரிகை யென்னை நீப்ப என்றோள்கள் வளைகழல்வனவாம், எ-று.

இலங்கிழா யென்பது 3 இதற்கு நீ யாதும் பரியலை யென்னுங் குறிப்பிற்று. இன்று-யானிறந்து படுகின்ற வன்று 4 மேலும்-மறுபிறப்பினும் எச்சவும்மை விகாரத்தாற் றொக்கது. நீப்ப வென்பது நீத்தெனத் திரிந்து நி

1 விதுப்பாயிற்று - காண்டற்கு விரைதலாயிற்று.

2 "காமக்கைமிகுதக்காமம்பெருகினும" என்னும் இறையனாரகப்பொருட் சூத்திரத்தினுரையில் "ஆற்றாமையாவது பிறிதெவ்வுணர்வுமின்றி ஆற்றாமைதானேயாவது" என்று கூறப்பட்டிருக்கிறது.

3 இதற்கு - அழகு நீங்கத் தோள்வளை கழலுதற்கு

4 மேலும் என்பது இன்று என்பதைத் தழுவிநின்றது.

ன்றது கழியுமென்னும் இடத்து நிகழ்பொருளின்றொழில் இடத்தின்மே லின்றது 1 இவ்வெல்லைக்கணினைந்தால் மறுமைக்கண் அவரையெய்தி னபுறலாம், அதனான் மறக்கற்பாலேனல்லேனென்பதாம்.

தெளி — (பொறுமைமிகுதலால் எப்பொழுதும் நினையாதே சிறிது மறத்த ல்வேண்டுமென்ற தோழிக்குத் தலைவி சொல்லியது) (இ-ள்) இலங்கிழாய்-விளங்குகின்ற ஆபரணத்தையுமுடையாய், (காதலவரை) இன்று-(இறந்துபடுகின்ற) இந்நாளில், மறப்பின்-(யான்) மறப்பேனாயின், மேல்-மறுபிறப்பிலும், வா ரிகை-அழகானது, நீத்து-(என்னைவிட்டு நீங்க, என்றோள் என்துதோள்கள், க லங்கழியும்-வளையல்கள் கழலப்பெறுவனவாம், எ - று.

இலங்கிழாயென்பது இதற்கு நீயாதும் பரிகின்றாயில்லையென்னுங் குறிப் பின்கண்வந்தது. மேல என்பதனீறறில் இறந்தது தழுவிய வெச்சவும்மை செய்யுள்விகாரத்தால் தொக்குநின்றது. நீப்ப என்னும் செயவெனெச்சம் நீத்தெனச்செய்தெனெச்சமாகத்திரிந்து நின்றது. கழியும் என்னும் இடத்து (தோள்களில்) நிகழ (இருக்கும் பொருளின (வளையல்களின) தொழில் 'தோள் கலங்கழியும்' என இடத்தின் (தோள்களின) மேல்நின்றமையினால் இஃது இடத்து நிகழ்பொருளின் தொழில் இடத்தின்மேலாய வுபசாரவழக்கு. இச்சம யத்திலே அவரை நினைந்தால் மறுமையிலே அவரை அடைந்து இன்பமடைய லாம், அதனால் மறக்குந்தன்மையுடையே னல்லேனென்பதாம்.

(க-து) தலைவரை யான் இன்று மறப்பேனாயின் மேலும் என்தழ் குஒழிவதுடன் என்தோள்களும் மெலிவடையும் என்றாளென்பது. (உ)

ங. உரனசைஇ யுள்ளந் துணையாகச் சென்றார்
வரனசைஇ யின்னு முளேன்.

(இதுவுமது)

பரி — (இ-ள்) இன்பநுகர்தலை நச்சாது 2 வேறலை நச்சி நாந்துணையாத லை யிகழ்ந்து தம்முள்ளக்கந் துணையாகப் போயினார் 3 அவற்றை யிகழ்ந்து ஈண்டு வருதலை நச்சுதலான், யானிவ்வெல்லையினும் முளேனாயினேன், எ - று.

4 உரனென்பது ஆகுபெயர். அந்நசையா னுயிர்வாழா நின்றேன், அஃ தில்லையாயின் இறந்துபடுவ லென்பதாம்.

---

1 "குறப்பாவைநின்குழல்வேங்கையம்போதொடுகோங்கமவிராய, நறப்பாட லம்புனைவாநினைவார்தம்பிரானபுலியூர், மறப்பானடுப்பதோர்தீவினை வந்திடிற்சென்றுசென்று, பிறப்பானடுப்பினும்பின்னுந்துன்னத்தகும் பெற்றியரே' என்று திருக்கோவையார் கூறுவதிங்கறியத்தக்கதாம்.

2 வேறலை-வெல்லுதலை. 3 அவற்றை-வேறலையும் ஊக்கத்தையும்.

4 உரன் (வலி) என்னும் கருவியின்பெயர் அதன்காரியமாகிய வெல்லுதலுக் காதலால் கருவியாகுபெயர்.

தெளி —(இதுவுமது)(இ-ள்) உரனசைஇ -(இன்னும் உடனிருத்தலை விரும்பாமல்) வெற்றியைவிரும்பி, உள்ளந்துணையாக-(நாம் துணையாதலை விரும்பாது) மனவெழுச்சிதுணையாக, சென்றார்-போயினவர், வரனசைஇ-(அவைகளை இகழ்ந்து இங்கு) வருதலைவிரும்புதலால், இன்னும் -(யான்) இவ்வுலகிலிருந்தும், உளேன்-உள்ளேனாயினேன், எ-று

உரன்-ஆகுபெயர் அவர்வரவையால் உயிர்வாழ்கிறேன், அவ்வாசை இல்லையாயின் இறந்துபடுவேனென்பதாம்

(க - து) வெற்றியை விரும்பிச்சென்ற தலைவர் வருதலை விரும்பியாலின்னும் உயிரோடிருக்கின்றேனென்றாளென்பது. (௬)

ச, கூடிய காமம் பிரிந்தார் வரவுள்ளிக்
கோடுகொ டேறுமென் னெஞ்சு.

(இதுவுமது)

பரி —(இ - ள்) நீங்கிய காமத்தராய் நம்மைப் பிரிந்துபோயவர் மேற்கூடிய காமத்துடனே நம்கண் வருதலை நினைந்து,என்னெஞ்சு வருத்தமொழிந்து மேன்மேற் பணைத்தெழாநின்றது, எ - று

வினைவயிற் பிரிவுழிக் காமவின்பநோக்காமையும் அதுமுடிந்துழி 1 அதுவே நோக்கலுந் தலைமகற்கியல்பாகலின், கூடிய காமமோ டென்றாள். 2 ஒடுருபு விகாரத்தாற் றொக்கது. 3 கோடுகொண்டேறலாகிய மரத்ததுதொழில் நெஞ்சின்மேலேற்றப்பட்டது கொண்டென்பது குறைந்து நின்றது அஃதுள்ளிற்றிலேனாயின் இறந்துபடுவேனென்பதாம்

தெளி —[இதுவுமது](இ- ள்.)பிரிந்தார்-(நீங்கியகாமத்தராய் நம்மைப்) பிரிந்துபோனதலைவர், கூடியகாமம் - (மேற்) கூடியகாமத்துடனே, வரவுள்ளி- (நம்மிடத்து)வருதலை நினைந்து, என்னெஞ்சு -என்துநெஞ்சு,(வருத்தமொழிந்து) கோடுகொடேறும் - மேன்மேலும் கிளைத்தெழுகின்றது, எ-று

போர்க்குப்பிரியும்போது காமவின்ப நோக்காமையும் அது முடிந்தவிடத்து அதுவேநோக்கலும், தலைவனுக்கு இயல்பாதலால், கூடியகாமமோடென்றாள். ஒடுருபு விகாரத்தினால் தொக்குநின்றது கிளைத்துக்கொண்டெழுதலாகிய மரத்தினதுதொழில் நெஞ்சின்மேல் ஏற்றப்பட்டது கோடுகொண்டு

1 அதுவே - காமவின்பத்தையே.

2 காமமென்பதனீற்றில் உடனிகழ்ச்சிப்பொருளாகிய ஒடுருபு செய்யுள்விகாரத்தாற் றொக்குநின்றது

3 கோடுகொண்டேறலாகிய மரத்ததுதொழிலை நெஞ்சின்மேலேற்றிக் 'கோடுகொடேறுமென் னெஞ்சு' என்று கூறினமையினால் இஃது ஒருபொருளின்வினை மற்றொருபொருளின்வினையானவுபசாரவழக்கு.

எனபது கோடுகோடு என ணகரவொற்றுக்குறைந்துநின்றது. அவ்வுரலுவ நினையாமற்போவேனுயின் இறநது படுவேனென்பதாம்.

(க - து) தலைவர் நம்மிடத்தாசை யுடையவராய் வருவாரெனறெ ணணி யென்மனம் வருத்தமொழிந்து இனிதமெழாநின்றது என்றாள் எனபது. (௪)

௫. காண்கமற்

 றீங்குமென் மென்றோட் பசபபு.

[தலைமகன் வரவுகூறி ஆற்றுயாயப பசக்கறபாலை யலலை யென்ற தோழிக்குச் சொலலியது.)

பரி.—(இ - ள்) என்கண்களாரும்வகை என் கொண்கனை யான் காண பேனுக, அங்ஙனங் கண்டபின், என் மெல்லியதோளின்கட் பசபபுத் தானே நீ க்கும், எ - று.

காண்கவென்பது ஈண்டு வேண்டிககோடற பொருட்டு 1 அது வேண் டு மென்பதுபட நின்றமையின, மன் ஒழியிசைக்கண் வகதது 2 கேட்ட து ணையா 3 னீங்காதெனபதாம்.

தெளி —(தலைவனதுவருகையைச சொலலிப் பொறுதவளாய் நிறம்வே றுபடாதே எனறதோழிகருத்தலைவிசொல்லியது.) (இ - ள்.)கணணுர-(என்)க ண்களாரும்வகை கொண்கனை- (என்) கணவனை,காண்க-(யான்)காண்பேனுக, கணடபின்-(அப்படி)கண்டபின்பு, என்மென்றோள் -எனது மெலலியதோளில, பசபபு - நிறவேறுபாடு, நீக்கும் - (தானே) நீக்கும், எ-று

காண்க வெனனும் வியஙகோள்வினைமுற்று இங்குவேணடிக்கொளளுதற் பொருளிலேவந்தது. அதுவேண்டுமென்பது தோன்றநின்றமையால், மன ஒ ழியிசைப்பொருளில் வந்தது கேடடவளவால் நீங்காதென்பதாம்.

(க - து.) தலைவனைக் கண்டபிறகே என்தோளகளினகண் பசபபு ஒழியுமென்று ளெனபது. (௫)

௬. வருகமற் கொண்க னொருநாட் பருகுவன

 பைதனோ யெல்லாங் கெட.

[இதவுமது]

1 அதுவேண்டும் - தலைவனைக்காண்டல் வேண்டும்.

2 கேட்ட - தலைமகன் வரவைக்கேட்ட

3 நீங்காது - பசப்பு நீங்காது.

பரி—(இ-ள்) இத்துணை நாளும் வாராக்கொண்கன் ஒருநாள் என்க ண வருவானாக, வந்தாற் பையுளைச் செய்கின்ற 1 இந்நோயெல்லாங் கெட 2 அவ்வமிழ்தத்தை 3 வாயில்களைந்தாலும் பருகக்கடவேன், எ-று

வருகவென்பதற்கும் மன்னென்பதற்கும் 4 மேலுரைத்தவாறே கொள்க 5 அக்குறிப்பு அவ்வொருநாளைக்குள்ளே இனி வரக்கடவநோய்களும் கெடு பனென்பதாம்

தெளி.—[இதுவுமது] (இ-ள்) கொண்கன்-(இவ்வளவு நாளும் வாரா ற)தலைவன், ஒருநாள் வருக - ஒருநாள் (என்னிடத்து) வருவானாக, (வந்தால) பைதனோயெலலாம் - துன்பத்தைச்செய்கின்ற இந்நோயெல்லாம், கெட - நீங்க, (அவ்வமிர்தத்தை) படுருவன் - (இந்திரியங்களைந்தாலும) நுகரக்கடவே ன, எ-று

வருகவென்றதற்கும் மன்னென்றதற்கும் முன்சொல்லப்பட்டபடியே கொள்க அக்குறிப்பு அவ்வொருநாளைக்குள்ளே இனிவரக்கடவநோய்களு ம் கெடுப்பனென்பதாம்.

(க-து.) தலைவன் என்னிடத்து ஒருநாள் வருக; வந்தால் அவ னைக் கூடி என் காமநோயெல்லாவற்றையும் கெடுப்பேனென்றாள் என் பது. (௬)

எ புலப்பேன்கொல் புல்லுவேன் கொல்லோ கலப்பேன்கொல்
கண்ணன்ன கேளிர் வரின்.

பரி.—(இ-ள்) கண்போற் சிறந்த கேளிர் வருவராயின், அவர்வரவு நீட்டித்தமைநோக்கி யான் புலக்கக்கடவேனோ, அன்றி என்னாற்றாமை நோக் கிப் புல்லக்கடவேனோ, அவ்விரண்டும் வேண்டுதலான 6 அவ்விருசெயல்களை யும் விரவக்கடவேனோ, யாது செய்யக்கடவேன்? எ-று

1 இந்நோயெல்லாம் - இக்காமவியாதியாவும்.
2 அவ்வமிழ்தத்தை - தலைவனுடையமருந்தினை.
3 வாயில்களைந்தாலும் - மெய், வாய், கண், மூக்கு, செவியென்னு மைந்திந் திரியங்களாலும் "கண்டுகேட் டுண்டுயிர்த் துற்றறியு மைம்புலனு, மொண்டொடி கண்ணே யுள" என்னுங்குறளுமிங்குக் கவனிக்கத்தக்கது.
4 மேல் - இவ்வதிகாரத்தின் ஐந்தாவது குறளின் விசேடவுரையில்.
5 அக்குறிப்பு - ஒருநாள்வருக என்னும் குறிப்பு
6 அவ்விருசெயல்களையும்- பிணங்குதல் தழுவுதல் என்னு மிருசெயல்களையும்.

புலவியும் புல்லலும் ஓர் பொழுதின்கண் விரவாமையிற் 'கலப்பேன்கொல்' என்றாள் 1 மூன்றனையுஞ் செய்தல் கருத்தாகலின், விதுப்பாயிற்று இனிக்கலப்பேன்கொ லென்பதற்கு ஒரு 2 புதுமை செய்யாது பிரியாத நாட் போலக் கலந்தொழுகுவேனோ வென்றுரைப்பாரு முளர்.

தேவி —(இ - ள்) [இதுவுமது.] கண்ணன்னகேளிர்- கண்போற் சிறந்த தலைவர், வரின் - வருவராகுல், புலப்பேன் கொல் - (அவர் வரவு தாமதித்தமையைக் குறித்து யான்) பிணங்கக்கடவேனோ, புல்லுவேன்கொல் -(அல்லாமல் எனது ஆற்றாமையைக் குறித்து) தழுவக்கடவேனோ, கலப்பேன்கொல் - (புலத்தலும் புல்லுதலுமாகிய அவ்விரண்டும் வேண்டுதலால் அவ்விருசெயல்களையும்) கலக்கக்கடவேனோ, (யாது செய்யக்கடவேன்) எ-று.

ஓ - அசை பிணங்குதலும் தழுவுதலும் ஓர் பொழுதிலே கலத்தல்கூடாமையால் 'கலப்பேன் கொல்' என்றாள். மூன்றனையும் செய்தல் கருத்தாகலால், காணடற்கு விரைதலாயிற்று இனிக்கலப்பேன்கொல் என்பதற்கு ஒரு புதுமை செய்யாமல் பிரியாதநாள்போலக் கூடி யொழுகுவேனோ என்றுரை கூறுவாருமுண்டு

(க - து) தலைவர் வந்தால் யான் புலத்தல், புல்லல், கலத்தலென்பவைகளுள் யாது செய்யக்கடவேன் என்றாள் என்பது. (௭)

அ வினைகலந்து வென்றீக வேந்தன் மனைகலந்து
மாலை யயர்கம் விருந்து.

[ 3 வேந்தற்குற்றுழிப்பிரிந்த தலைமகன் வினைமுடிவு நீட்டித்துழித் தலைமகளை நினைந்து தன்னுள்ளே
சொல்லியது ]

பரி —(இ - ள்) வேந்தன் வினைசெய்தலைப் புரிந்து வெல்வானாக; யாமும் மனைவியைச் சென்று கூடி ஆண்டை மாலைப்பொழுதிற்கு விருந்தயாவேமாக, எ-று

1 மூன்றனையும் = புலத்தல், புல்லல், கலத்தல் என்னு மூன்று தொழிலையும்.
2 புதுமை - ஊடலுடையவள்போன்று நடித்தல்.
3 "வேந்தற்குற்றுழிப் பிரிவென்பது ஒருவேந்தனுக் கொருவேந்தன் றுணைந்து வந்தடைந்தால் அவனுக்குதவிசெய்யப் பிரியாநிற்றல்" என்று திருக்கோவையா ருரையிற் கூறப்பட்டிருக்கிறது.

1 மனையெனபது ஈண்டாகுபெயர், 2 "மங்கல மென்ப மனைமாட்சி" எ ன புழிப்போல. வினைசெய்தற்கண்வந்த மாலைபொழுதிற்கு எதிர்கோடல் அலங்கரித்தல முதலிய வின்மையின், மனைகலந்து மாலைக்கு விருந்தயர்கம் என்றான். நானகனுருபு விகாரத்தாற றொக்கது. இது வினைமுடியாமுன் கூறலான் விதுப்பாயிற்று பிறரெல்லாம இதனைத் தலைமகள் கூற்றாகவு ரைத்தார். தலைமகனைக் கூறாது வேநதன் வெலக எனறும், மனைகலந்து என றும்,மாலைப்பொழுதின்கண் விருந்தயாகம் எனறும் வநத அவவுரைதானே 3 அது கூடாமைக்குக் கரியாயிற்று.

தெளி.—[அரசனுக்குப பகையுற்றவிடத்து உதவிசெய்யத் துணையாகப் பிரிந்த தலைமகன் தொழிலமுடிவு நாமதித்த விடத்துத் தலைவியை நினைந்து தனனுள்ளே சொலலியது.] (இ-ள்) வேநதன் - அரசன், வினைகலந்து - போ ர்செயதலைச்செய்து, வென்றீக - வெலவானாக, (யாமும்) மனைகலநது - மனை வியைச சென்றுகூடி, மாலை - (அவவிடதது) மாலைப்பொழுதிற்கு, விருந்து அயர்கம் - விருந்தினைச செய்யக்கடவோமாக, எ-று

மனையெனபது இடவாகுபெயர். போர்செய்தற்கண்வநதமாலைப்பொ ழுதிற்கு எதிர்கொள்ளுதல அலங்கரித்தல் முதலியவை இலலாமையால், ம னைகலநது மாலைக்கு விருந்தயர்கம் என்றான். இது தொழின்முடியாதமுன் சொல்லலால் காணடற்கு விரைதலாயிற்று மாலையென்பத னீற்றில் நான் கனுருபு செய்யுள்விகாரததால தொக்கு நினறது பிறரெல்லாம் இககுறளைத் தலைமகள வார்த்தையாக்கி கூறினார்: தலைமகனைக்கூறாமல் வேநதன் வெலக எனறும், மனைகலந்தென்றும், மாலைப்பொழுதினிடதது விருநதுசெய்வோம என்றும் வந்த அவவுரையே அது கூடாதென்பதற்குச் சாட்சியாயிற்று

(க - து.) தலைவன் அரசன் பகைவரைப்போர்செய்து வெல்வா னாக; யான் மனைவியைச் சென்று கூடி மாலைப்பொழுதிற்கு விருந்து செய்வேனாக என்றான் என்பது. (அ)

௯. ஒருநா ளெழுநாளபோற் செல்லுஞ்சேட் சென்றார்
வருநாளவைத் தேங்கு பவர்க்கு.

பரி—(இ - ள்.) சேணிடைச்சென்ற தங்காதலர் மீணடுவரக் குறித்த யுட்கொணடு 4 அதுவருந் துணையும் உயிர்தாங்கி வருநது மகளிர்ககு ஒரு நாள பலநாள்போல நெடிதாகக் காட்டும, எ-று.

---

1 மனையெனறுமிடபபெயர் அம்மனையிலிருபபாளுக்காதலால் இடவாகு பெயர

2 திருக்குறள் வாழ்க்கைத துணைநலம், ௬0. இதனபொருள் (ஒருவனுககு) நனமையென்று சொல்லுவர் (அறிந்தோர்) மனையாளது நற்குணநற் செய்கைகளை என்பது.

3 அது - தலைமகள் கூறறென்பது.

4 அது - மீண்டுவரககுறித்தநாள்

ஏழென்பது அதற்குமேலாய மிக்கபன்மை குறித்து நின்றது, "1 ஒருவர் கூறை யெழுவ ருடுத்து" என்றாற்போல. தலைமகள் வருத்தம் 2 பிறர்மேலிட்டுக் கூறியவாறு. இதனான் இதுவுந் தலைமகள் கூற்றாகாமையறிக. இருநாளென்று பாடமோதுவாரு முளர்.

தேவி —[இதுவுமது.] (இ - ள்.) சேட்சென்றார்-தூரதேசத்திற் சென்ற(தமது)காதலர், வருநாள்வைத்து (திரும்பி)வரக்குறித்தநாளை உட்கொண்டு, ஏங்குபவர்க்கு-(அதுவருமளவும் உயிரைத்தாங்கி) வருந்துமகளிர்க்கு, ஒருநாள் எழுநாள்போல்-ஒருநாள்பலநாள்போல, செல்லும்-நெடிதாகக்காட்டும், எ-று.

ஏழென்பது அதற்குமேலாய மிக்கபன்மை குறித்து நின்றது தலைவியின் வருத்தத்தைப்பிறர்மேலிட்டுச் சொல்லியபடி இதனால் இக்குறளும் தலைமகள் வார்த்தையாகாமையையறிந்துகொள்க. எழுநாள் என்பதை இருநாள் என்று பாடங் கூறுவாருமுண்டு.

(க - து.) காதலரைப் பிரிந்த மகளிர்க்கு ஒருநாள் பலநாள் போன்று நெடிதாகக் காட்டும் என்றான் என்பது. (கூ)

க0 பெறினென்னாம் பெற்றக்கா லென்னா முறினென்னா
முள்ள முடைந்துக்கக் கால்.

[illegible]

பரி.—(இ - ள்) காதலி நம்பிரிவினை யாற்றாது உள்ளமுடைந்திறந்து பட்டவழி, நம்மைப் பெறக்கடவளானாலென், அதுவன்றியே பெற்றாலென், அதுவன்றியே மெய்யுறக்கலந்தாற்றினென், இவை யொன்றானும் பயனில்லை, எ-று.

3 இம்மூன்றும் 4 உடம்பொடு புணர்த்திக் கூறப்பட்டன; 5 அதன்மேலும் 6 முன்னை வழக்குண்மையின். 7 அதற்கு முன்னே யான் செல்லவே

1 இதன்பொருள் ஒருவரது ஆடையைப்பலருடுத்தி என்பது

2 பிறர்மேலிட்டு - கணவரைப்பிரிந்துள்ள பிறமகளிர்மேல் வைத்து.

3 இம்மூன்றும் - பெறின், பெற்றக்கால், உறின் என்னு மிம்மூன்றும்.

4 உடம்பொடு புணர்த்தல் என்பது யுக்தி வகையினுள் ஒன்று கூறவேண்டிய அருத்தத்தை வெளிப்படையாகக்கூறாது தான்கூறுவதன்குறிப்பினால் விளங்கச்செய்தல் உடம்பொடு புணர்த்தலாம். ஓர் நிமித்தம்பற்றிக் காலம் நீட்டிக்கப் பிரிந்துசென்ற தலைமகன் வருதற்கு முன்னரே தலைமகள் இறந்துபடும் வழக்குண்மையை வெளிப்படையாகக் கூறாமல் பெறினென், பெற்றக்காலென், உறினென் என்றுதான் கூறுவதன் குறிப்பினால் விளங்கச்செய்தமையைக் கண்டுணர்க.

5 அதன்மேலும் - ஆற்றாமைமேலும்

6 முன்னைவழக்கு - தலைமகன்வருவதற்குமுன்னே தலைமகள் இறந்துபடும் வழக்கம்.

7 அதற்குமுன்னே - காதலி இறந்துபடுவதற்கு முன்பே

ணடுமென்பது கருத்தாகலின, விதுப்பாயிறறு. இது தலைமகள் கூற்றுயவழி இரங்கலாவதலலது விதுபபாகாமை யறிக

தேளி —[இதுவுமது.](இ-ள்)(காதலி, உள்ளமுடைந்து (எமபிரிவினை பொறுககாமல) மனமுடைநது, உககககால - இறநதவிடததது, பெறினென- (நமமைப)பெறககடவளானல் எனனபயன,பெறறக்காலென-(அதுவன்றியே) பெறறுலெனனபயன், உறினென் - (அதுவன்றியே) மெயயுறககலநதாறறுன என்னபயன், (இவையொன்றுலும்பயனிலலை) எ-று

இம்மூன்றும உடம்போடுபுணாத்திச சொலலபபடடன, அதனமேலும முன்னை வழக்கமிருததலால அதற்குமுனனே யான்செலலவேண்டுமெனபது கருததாகலால,காணடற்கு விரைதலாயிறறு இக்குறள் தலைமகள் வார்த்தை யாயவிடத்து இரங்கலாவ(வருந்துத)லாவதலலாமல விதுபபாகாமையை யறிநது கொள்க.

(க-து) காதலி எனது பிரிவினைப பொறுககாம லிறநதுபடு தற்குமுனனரே யான் விரைநதுசெல்லவேண்டுமெனறுன எனபது. (ம)

## கஉஅ-ம். அதி.—குறிப்பறிவுறுத்தல்.

பரி —அஃதாவது தலைமகன், தலைமகள், தோழியென்றிவா ஒருவர் குறிப்பினையொருவாக கறிவுறுத்தல 1 இது பிரிந்துபோய தலைமகன்வநது கூடியவழி நிகழ்வதாகலின், அவாவயினவிதும்பலின்பின வைக்கப்பட்டது

தேளி —அஃதாவது தலைவன், தலைவி தோழி என்றஇவர்கள் ஒருவாகுறிப்பினை ஒருவர்க்கு அறிவுறுததல இது பிரிநதுபோய தலைவன வநது கூடியவிடத்து உண்டாவதாகலால், அவர்வயின்விதுமபலினபின வைக்கபபடடது,

க. கரப்பினுங் கையிகந் தொல்லாநின் னுண்க
ணுரைகக லுறுவதொன் றுண்டு.

[பிரிந்துகூடிய தலைமகன் வேட்கை மிகவினை புதுவது பனனுளும்பாராட டத் தலைமகள் இது வொனறுடைத்தென வஞ்சியவழி அதனையவள் குறிப்பானறிந்து அவனவடகுச சொலலியது.]

பரி.—(இ-ள்) நீ சொல்லாது மறைததாயாயினும், அதற்குடம்படாதே நின்னைக் கைகடந்து நின்னுண் கண்களே எனக்குச் சொல்லலுறுவதொரு காரிய முண்டாயிராநினறது, இனியதனை நீயே தெளியச்சொலவாயாக, எ-று.

கரத்தல - நாணுனடககுதல தன்கட்பிரிதற் குறிப்புளதாகக் கருதி வே றுபட்டாளது வேறுபாடு குறிபபானறிநது அவட்குத தனபிரியாமைக் குறிப பறிவுறுததவாறு.

தேளி —[பிரிநது கூடியதலைவன ஆசைமிகுதியினுலே புணர்சசித தொழி லைப் புதிதுபுதிதாகப பலநாளும் பாராட்டல்கண்டு தலைவி இதுவொரு கருத்து டையதெனறு அஞ்சியவிடத்து அவவஞ்சியதை அவள குறிப்பால அறிந்துஅ வன அவளுக்குச சொலலியது ] (இ - ள ) கரபபினும - (நீ சொலலாது) ம றைததாயாயினும், ஒலலா - அதறகு உடமபடாமலே, கையிகந்து - (உன்னைக) கைகடநது, நினனுண்கண் - உன் (மை) யுண்டகணகளே, உரைக்கலுறுவதொ னறு-(எனக்குச)சொல்லலுறுவதொரு காரியம், உணடு-உண்டாயிராநினறது, (இனிஅதனை நீயேதெளியசசொலவாயாக) எ - று.

கரத்தல் - நாணுல் அடககுதல் தன்னிடத்துப் பிரிதறகுறிப்பு இருக்கி றதாக நினைநது வேறுபட்டவளது வேறுபாட்டைக் குறிப்பால் அறிந்து அவ ளுககுத்தனபிரியாமைககுறிபபை அறிவுறுததபடி.

(க - து) தலைவியே! நீ மறைத்தாலும் சொல்லவேணடுவ தொனறனை யுனகணகளே யெனக்குச் சொல்லுங் குறிபபை யுடைத் தாயிருககினறனவென்றான் என்பது. (க)

உ கண்ணிறைந்த காரிகைக் காம்பேர்தோட் பேதைக்குப்
பெணணிறைந்த நீர்மை பெரிது.

[நாணுல அவள் அது சொல்லாளாயவழி
அவன றோழிக்குச் சொல்லியது ]

பரி.—(இ - ள்.) என கண்ணிறைந்த வழகினையும் வேயையொத்த தோ ளயு முடைய நின்பேதைக்குப் 1 பெண்பாலாரிடத்து நிறைந்த மடமை அ வ்வளவன்றி மிகுந்தது, எ - று

இலதாய பிரிவினைத் தன்கணேற்றி அதற்கஞ்சுதலான், இவ்வாறு கூ.

தேளி.—[நாணத்தால அவள் அதுசொல்லாதவளானவிடத்துஅவன் தோ ழிக்குச் சொல்லியது ](இ - ள்.)கண்ணிறைநத காரிகை-(என்) கண்ணிறைந்த அழகையும், காம்பேர்தோள் - மூங்கிலையொத்த தோள்களையும், (உடைய) பேதைக்கு-(உன்னுடைய) மாதுக்கு, பெண்ணிறைந்த நீர்மை - பெண்பாலாரி டத்து நிறைந்த அறியாமை, பெரிது - (அவ்வளவன்றி) மிகுநதது, எ-று

---

1 "நுண்ணுணர் வுடையோர் நூலொடு பழகினும், பெண்ணறி வென்பது பெரும்பே தைமைத்தே" என்பதிங்கறியத்தக்கது.

தன்னிடத்து இல்லாதபிரிவினைத் தன்னிடதது ஏற்றி அபபிரிவிற்கு அஞ்சுதலால் இப்படிசொல்லினன்

(க - து) தோழியை நோககித் தலைவன் உன் மாதிறகு மடமை அளவுகடந்திருககின்றதெனறான் என்பது. (௨)

௩. மணியிற் றிகழ்தரு நூல்போன மடநதை
யணியிற் றிகழ்வதொன் றுண்டு.

பரி.—(இ - ள்) கோக்கப்பட்ட பளிக்குமணியகத்துக் கிடநது புறத்துப புலனாநூல்போல இம்மடநதைய தணியகத்துக் கிடநது புறத்துப புலனாகின்றதொரு குறிபபுண்டு, எ - று.

அணி—புணாச்சியானாய வழகு. அதனகத்துக் கிடத்தலாவது அதனோடு உடனிகழுதறபாலதன்றிவைத்து உடனிகழுதல. 1 அதனை யானறிகின்றிலேன், நீ யறிந்து கூறல்வேண்டுமென்பது கருதது

தெளி —[இதுவுமது] (இ - ள்) மணியில - (கோக்கபபட்ட) படிகமணிக்குளிருநது, திகழ்தரும் - (புறததே) காணபபடுகிற நூல்போல்- நூலைப்போல், மடநதை- இம்மடநதையினது, அணியில- அழகுக்குளிருநது, திகழ்வதொன்று-(புறத்தே) காணப்படுவதாகியஒருகுறிப்பு-உணடு - எ-று.

அணி-புணாசசியாலாகிய அழகு குறிப்பு அவவழகிற்கு ளிருத்தலா அவ்வழகோடு உடனிகழ்வதல்லாதிருக்குமம உடனிகழ்தல். அதனை யான் அறிகின்றிலேன், நீ அறிந்துசொலலல வேண்டுமென்பது கருத்து.

(க - து.) தலைவியினதழகிற்குள் ஓர் குறிபபு விளங்குகினறதெனறான் எனபது. (௩)

௪. முகைமொக்கு ளுளளது நாற்றமபோற் பேதை
நகைமொககு ளுள்ளதொன் றுண்டு.

[இதுவுமது.]

பரி.—(இ - ள்.) முகையது முகிழப்பினுளதாயப் புறத்துப் புலனாகாத நாற்றம்போல இன்பேதை என்னொடு நகக்கருது நகையது முகிழ்பபினுளதாய்ப் புறத்துப் புலனாகாததோர் குறிப்புண்டு, எ - று

முகிழ்பபு - முதிரச்சியாற் 2 புடைபடுதல். நகை - புணர்சசி யின்பத்தானிகழ்வது.

1 அதனை - அககுறிப்பினை. 2 புடைபடுதல் - உப்புதல.

தேளி —[இதுவுமது] (இ-ள்) முகைமொக்குள் - அரும்பினது முகிழ்ப்பினுள், உள்ளது-உளதாய (புறத்திலதோன்றாத), நாற்றம்போல - வாசனையைப்போல, பேதை - (உன்) மாது, நகைமொக்குள் - (என்னோடு நகைக்கவெண்ணுகிற) நகையது முகிழ்ப்பினுள், உள்ளது - உளதாய (புறத்தில் தோன்றாதாகிய), ஒன்று- ஒருகுறிப்பு, உண்டு - எ-று

முகிழ்ப்பு-முதிர்ச்சியாற்புடைப்படுதல். நகை புணர்ச்சியின்பத்தாலுண்டாவது

(க - து.) தலைவியின் புன்சிரிப்பினுள் வெளியாகாததோர் குறிப்புண்டென்றான் என்பது. (சு)

டு செறிதொடி செய்திறந்த கள்ள முறுதுயர்
தீர்க்கு மருந்தொன் றுடைத்து.

[இதுவுமது.]

பரி —(இ-ள்) நெருங்கிய வளைகளை யுடையாள் என்கணில்லாத தொன்றனை யுட்கொண்டு 1 அது காரணமாக என்னை மறைத்துப்போன குறிப்பு என் மிக்க துயரைத் தீர்க்கு மருந்தாவதொன்றனை யுடைத்து, எ - று

உட்கொண்டது - பிரிவு 2 கள்ளம் - ஆகுபெயர். மறைத்தற்குறிப்பு - தானுமுடன்போகக்கொண்டது. உறுதுயர் - நன்று செய்யத்தீங்குவிளைதலானும் 3 அதுதான் தீர்திறம் பெருமையானும் உளதாயது. மருந்து- அப்பிரிவின்மை தோழியாற்றெளிவித்தல்.4 நீயதுசெய்தல் வேண்டுமென்பதாம்.

தேளி —[இதுவுமது](இ - ள்) செறிதொடி-நெருங்கிய வளையல்களையுடையவள், செய்து - (என்னிடத்து இல்லாததோர்பிரிவை) நினைந்து, இறந்த கள்ளம்-(அதுகாரணமாக என்னைமறைத்துப்) போன்குறிப்பு, உறுதுயர் - (என்னது) மிக்கதுயரை, தீர்க்குமருந்தொன்று - ஒழிக்கும் மருந்தாவதொன்றனை உடைத்து- உடையது, எ-று

கள்ளம் - ஆகுபெயர். மறைத்தற்குறிப்பு - தலைவி தலைவனுடன் தானும் உடன்போதற்கு உட்கொண்டது. உறுதுயர்-நன்றுசெய்யத் தீங்குவிளைதலாலும் அதுதான் தீர்க்குந்திறம்பெருமையாலும்உளதாயது. மருந்து - பிரிதலில்லாமையைத் தோழியால்தெளிவித்தல் நீ அது செய்தல்வேண்டுமென்பதாம்.

---

1 அது - பிரிவு.

2 கள்ளம் (கபடம்) என்னுமிடப்பெயர் அங்குநிகழும் குறிப்பிற்காதலால் இடவாகுபெயர்.

3 அது - அக்குறிப்பு.

4 நீயது செய்தல்வேண்டும் - தோழியே! நீ யான் பிரியாமையைத் தலைவிக்குச்சொல்லித்தெளியச் செய்தல் வேண்டும்

(க-து.) தலைவியின் குறிப்பு என் நோயைத் தீர்க்கு மருந்தாயிருக கின்றதென்றான் எனபது. (௫)

௬. பெரிதாற்றிப் பெட்பக் கலத்த லரிதாற்றி
யன்பின்மை சூழ்வ துடைத்து.

[தலைமகன் குறிபபறிந்த தலைமகள் 1 அதனை அது தெளிவிக்கச்சென்ற தோழிக் கறிவுறுத்தது.]

பரி.—(இ - ள்) காதலர் வந்து தம்பிரிவினுளுய துன்பத்தினை மிகவுமா ற்றி நாமகிழும் வண்ணங் கலககின்ற கலவி இருந்தவாற்றான் மேலு 2 மத்து ன்பத்தினை அரிதாக வாற்றியிருநது அவரன்பின்மையை நினையுநதனமையுடை எ - று.

பிரிதற் குறிபபினாற் செயகின்ற தாகலான், முடிவில் இன்னாதாகா நின் றதென்பதாம்.

தெளி.—[தலைமகனது குறிபபினையறிநத தலைமகள் அதனை அது தெளிவி க்கச்சென்றதோழிக்கு அறிவிததது.](இ-ள்)பெரிதாற்றி (தலைவர்வந்து தமது பிரிவினாலாகிய துன்பத்தை)மிகவுமாற்றி,பெடபக்கலததல-(நாம்)மகிழும்வண் ணம்கூடுகின்ற புணாசசியானது, அரிதாறறி-(இருந்தவிதததால் மேலும் அத் துன்பத்தினை) அரிதாகப்பொறுத்திருந்து, அன்பின்மை-(அவரது) அன்பில்லா மையை, சூழவது -நினையுநதன்மையை, உடைத்து-உடையது, எ- று.

பிரிதற்குறிபபினாலே செய்கின்றதாகலால், முடிவிலே துன்பஞ்செய்வ தாகின்றதென்பதாம்.

(க - து.) தலைவர்வந்து தம்பிரிவினாலுண்டாகிய துன்பத்தை யொழித்து நாமிகவும் மகிழும்படி புணரும் புணர்ச்சியானது இருந்த விதத்தால மேலும் அவரது அன்பில்லாமையை நினையும் தன்மையதா யிருக்கிறதென்று தலைவி கூறினளென்பது. (௬)

௭. தண்ணந் துறைவன் றணந்தமை நம்மினு
முன்ன முணர்ந்த வளை.

பரி.—(இ - ள்) குளிர்ந்த துறையை யுடையவன் நம்மை மெய்யாற் கூடியிருந்தே மனத்தாற் பிரிந்தமையை அவன் குறிப்பானறிதற்குரிய நம்மி னும் இவ்வளைகள் முன்னே யறிந்தன, எ-று.

---

1 அதனை - தலைமகனது குறிப்பினை.

2 அத்துன்பத்தை - பிரிவினாலாகிய துன்பததினை.

1 கருத்து நிகழ்ந்ததாகலின் 'தணந்தமை' என்றும், யான் றெளிய வுணாதறகு முன்னே தோள்கண மெலிநதன வெனபாள் 2 அதனை வளைமே லேறறி 3 அதுதன்னை யுணர்வுடைத்தாககியும கூறினாள்.

தேளி —[இதுவுமது.] (இ - ள்) தண்ணந்துறைவன்-குளிர்ந்த துறை யையுடையதலைவன், தணநதமை-(நம்மை மெயயினாலே கூடியிருந்தே மனததி னாலே) பிரிந்தமையை, நமமினும்-(அவனகுறிபபால் அறிதற்குரிய) நமமைப்பா ர, முனனமுணாநத-முன்னேஅறிநதன, எ-று.

கருத்துநிகழநததாகலால் 'தணந்தமை' என்றும, யானதெளிய அறிதற் குமுன்னே தோளகள் மெலிந்தனவெனபாள் அதனை வளையலமேலேற்றி'முன் னமுணாநத' என்று அதனை அறிவுடையத

(க - து.) தலைவன பிரிதலை நாம் அறிதற்குமுனனரே வளையலகள அறிநதுவிட்டன வெனறுளென்பது. (எ)

அ. நெருநற்றுச் சென்றாரெங் காதலர் யாமு
மெழுநாளே மேனி பசந்து.

பரி —(இ - ள்) எங்காதலர் பிரிந்துபோயினர் நெருநற்றே, அப்பிரி வகு யாமும் மேனிபசநது ஏழுநாளுடைய மாயினேம், எ - று.

நெருநற்றுச்செய்த தலையளியாற் பிரிவு துணியப்பட்டதென்பாள் 'நெரு நறுச் சென்றார்' என்றும, 4 அதனை யையுறறுச செல்கின்றது ஏழுநாளு ண்டாகலின் 5 அனறே மேனி பசந்ததென்பாள் மேனிபசந்தெழுநாளேம என் றுங் கூறினாள். இவ்வாற்றாற் றலைமகனது பிரிதற்குறிபபினை யுணர்த்தி நின் றது.

தேளி.—[இதுவுமது.] (இ-ள்.) எங்காதலர் -எமது தலைவர், நெருநற்று- நேற்றே, சென்றார்-(பிரிந்து)போயினர், யாமும்-மேனிபசந்து-(அபபிரிவிற்கு) உடம்புநிறவேறுபாடடைந்து,எழுநாளேம்-ஏழுநாளுடையே மாயினேம்,எ-று.

நேற்றுச்செய்த அருளினால் பிரிவு நிச்சயிக்கப்பட்டதென்பாள் 'நெருநற் றுச்சென்றார்'என்றும், அதனைச் சந்தேகித்துச்செலகின்றது ஏழுநாள் உண்டா

1 கருத்து நிகழ்ந்ததாகலின் - பிரியுமெண்ண முணடாயிருத்தலினால்.

2 அதனை - தோள்களின்மெலிவை.

3 அதுதன்னை - வளையலை.

4 அதனை - அப்பிரிவை.

5 அன்றே - அப்பொழுதே. அஃதாவது பிரிவுண்டாவதற்கு ஏழாம்நாளே.

